# ஸம்க்ஷேப சாரீரகம்

## இரண்டாம் பாகம்



ௐ



V. S. கமலாம்பாள் அம்மாள்

இயற்றிய

தமிழ் வ்யாக்யானமும் மூலத்தின் உரையும்

# ஸ்ரீ ஸர்வஜ்ஞாத்ம மஹாமுனிவர்
அருளிய
# ஸம்க்ஷேப சாரீரகம்
## (இரண்டாம் பாகம்)

ஸ்ரீ அக்னிசித்புருஷோத்தம மிச்ரர் என்பவரின்
ஸுபோதினி என்ற வ்யாக்யானத்தையும் ஸ்ரீ ராமதீர்த்தர் என்பவரின்
அன்வயார்த்த ப்ரகாசிகா என்ற வ்யாக்யானத்தையும்
அனுசரித்து தமிழில் இயற்றப்பட்ட வ்யாக்யானமும்
மூலத்தின் உரையும்

**V.S. கமலாம்பாள் அம்மாள்.**

21, நாலாவது தெரு
ரட்லண்ட் கேட்
சென்னை - 600 006

1995

உ\-\

# ஸமர்ப்பணம்

ச்ருதி ஸ்ம்ருதி புராணங்களுக்கு இருப்பிடமாகவும் கருணையே உருவமாகவும், வேண்டுபவர் வேண்டுகின்றதையெல்லாம் விருப்பமுடன் ஈந்தருளும் கொடை வள்ளலாய் திகழ்கின்ற அருட்பெருங்கருணைக்கடலாய் அனைவருக்கும் அருள்புரிகின்ற எனது குருநாதர் (ஸ்ரீ தயானந்த சரஸ்வதி) அவர்களின் பாதபத்மங்களில் நமஸ்கரித்து, அந்த அருட்திரு பாததூளிகளை சிரமேற் கொண்டதனால் நான் அடைந்திருக்கும் பாக்யத்திற்கு அளவேயில்லை. முதன்முதலாக அவருடைய திருவாக்கினால் வேதாந்த சாஸ்திரத்தை உபதேசிக்கப்பெற்ற மஹத்தான பாக்யத்தை பெற்ற காரணத்தினாலேயே இன்றுவரை தொடர்ந்து ச்ரவணம் செய்வதற்கும், அதன்பலனாக ஸம்க்ஷேப சாரீரகமென்ற இந்த மஹத்தான க்ரந்தத்தை நான் ச்ரவணம் செய்வதற்குரிய ஈடுஇணையற்ற ஆசார்யரை அடைந்து அவரால் உபதேசிக்கப்பட்ட இந்த க்ரந்தம் வெளியிடப்படுவதற்கான பாக்யத்தை அனுக்ரஹித்தருளிய என் குருநாதர் பாதபத்மங்களில் அனந்தங்கோடி நமஸ்காரங்கள் செய்து என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

எண்ணிலடங்காத எத்தனையோ ஜன்மாக்களில் செய்த புண்யத்தின் பலனாக இந்த ஜன்மாவில் எனக்கு ஆசார்யராக கிடைத்திருக்கின்ற அந்த அஹேதுக தயாசிந்துவான மஹத்தானச்ரேஷ்ட்ட புருஷரான ஸ்ரீ சாஸ்திரி அவர்களுக்கு என்ன கைம்மாறு செய்வதென்றே தெரியவில்லை. பெயருக்கேற்ற பெருமை வாய்ந்த ஸகல கல்யாண குணஸம்பன்னரான பாஷ்ய பாஞ்ஞ வரகூர் ஸ்ரீ கல்யாண சுந்தர சாஸ்திரிகள் அவர்களால் உபதேசிக்கப்பெறும் பாக்யத்தை பெற்று அதனால் நான் அடைந்த பேற்றை ஒவ்வொரு க்ஷணமும் நினைந்து போற்றுகின்றேன். ஸதா ஸர்வகாலமும்

சாஸ்திரத்திலேயே நிஷ்ட்டையுடையவராக இருந்து தன்னை நாடிவருகின்ற அனைவருக்கும் தான் அறிந்தவை அனைத்தையும் அன்புடன் வாரி வழங்கும் வள்ளல் என்றே சொல்லவேண்டும் ப்ரதி உபகாரம் எதையும் விரும்பாமல், விரும்புவதை போதிக்கவேண்டுமென்ற அவாமிகுதியினால் தன்சிரமத்தைப் பொருட்படுத்தாமல் போதித்தருளும் அவருடைய கருணையை வாக்கினால் வர்ணிக்க இயலாது. தன்னைப்போலவே, பிறரையும் எண்ணி, வேண்டுபவரின் விருப்பத்தை பூர்த்திசெய்து அனுக்ரஹிப்பதுடன், சாஸ்திரத்தை போதிக்கின்றபோது, அதனை தானும் ரஸித்து கேட்ப்பவர்களையும் ரஸிக்கும்படி செய்வதால் அந்த விஷயங்கள் மனதில் நன்குபதிகின்றது. அதனால் அவைகளை ஒரு போதும் மறக்க இயலாது. ஏதாவது சில ஸமயங்களில் வேலை இருந்து அதனால் இன்று Class வைத்துக் கொள்ள முடியாமல் இருக்குமானால், இதை எப்படி அவரிடம் தெரிவிப்பது என்று யோசிக்கவேண்டிவரும். ஏனெனில் எவ்வளவு சிரமம் அவருக்கு இருந்தாலும் ஒரு நாள் கூட பாடம் சொல்வதை நிறுத்துவதே இல்லை. Car அனுப்பியவுடன் சற்று கூட மதிக்காமல் வீட்டிற்கே வந்து பாடம் நடத்திய அந்த கருணாமூர்த்திக்கு எந்தவிதம் கைம்மாறு செய்யமுடியும். இவ்வளவு ஆர்வத்துடன் எனக்கு போதித் தருளியதை நினைக்க நினைக்க என் உள்ளம் நெகிழ்கின்றது. என் ச்ரத்தை ஒன்றையே பெரிதாக கருதி எனக்காக அவர் செய்திருக்கின்ற பேருதவியை ஒருக்ஷணமும் மறக்கவில்லை. சில ஸமயங்களில் நடத்திய பாடங்களையே மறுபடிகேட்டு நன்கு அறியவேண்டுமென்று விரும்புகிறேன் என்று சொல்வேன் அதைக்கேட்டு ஒருநாளும் அவர் முகம் சுளித்ததுமில்லை. அதுமட்டுமல்ல அதைமிக்க மகிழ்ச்சியுடன் ஏற்று அலுக்காமல் போதிக்கின்றதை நினைக்குந்தோறும் அவருக்கு ஈடு அவரேயன்றி வேறு யாரும் இருக்க முடியாது என்று சொன்னால் மிகையாகாது. இந்த

ஸம்க்ஷேப சாரீரகம் முற்றிலும் அவரிடம் ஒரு தரம் ச்ரவணம் செய்தும்கூட முதல்பாகம் மட்டும் இரண்டுமுறைபாடம் கேட்டபிறகே என்னால் க்ரஹித்து ஒரளவு எழுத முடிந்தது என்பதற்கு இதுவே சான்றாகும். இப்பேர்ப்பட்ட மஹத்துவம் வாய்ந்த மஹாபுருஷரை 'ஆசார்யவான் புருஷோவேத' என்ற ச்ருதிவாக்யத்தின்படி குருவாக பெற்றதன்பலனாகவே இந்த க்ரந்தம் வெளிவந்திருக்கின்றது என்பதை எல்லோரும் அறிந்து அவருடைய பாண்டித்யத்தையும் குணாதிசயங்களையும் போற்றி புகழ வேண்டும் என்பதுடன் அவரால் அனுக்ரஹிக்கப்பட்ட இந்த க்ரந்தத்தை அனைவரும் படித்து ஆனந்தம் அடைய வேண்டும் என்பதே எனது விருப்பம். இந்த தள்ளாதவயதிலும் (84) இன்னும் பூரண ஞாபகசக்தியுடன் இருந்து பாடங்கள் நடத்தி வருவதை காண்கின்ற போது, இதே போல் இறைவன் அருளால் பூர்ண ஆயுளுடன் த்ருட காத்ரமாக இருந்து எல்லோருக்கும் அனுக்ரஹித்தருள வேண்டுமென்று ப்ராத்தித்து அவர் பாதபத்மங்களில் அனவரதம் நமஸ்காரம் செய்கின்றேன் வேறு எவ்விதகைம்மாறும் அவர் செய்தபேருதவிக்கு ஈடுஇணையாகாது. 'ஆசார்யவான் புருஷோவேத' என்ற ச்ருதி வாக்யம் பொய்க்கவில்லை.

சாஸ்திரி அவர்களிடம் படித்த பல க்ரந்தங்களில் இந்தக்ரந்தம் ப்ரஹ்ம சூத்ர பாஷ்யத்திற்கு வ்யாக்யானமாக அமைந்திருக்கின்றது. நான்கு அத்யாயங்களில் சொல்லப்பட்ட விஷயங்கள் மட்டுமின்றி அதிலுள்ள முக்யமான பல விஷயங்கள் பற்றி அந்தந்த ஸந்தர்ப்பத்தை பயன்படுத்தி அவைகளுக்கு ஸாதகமாக இருக்கின்ற பூர்வமீமாம்ஸாவாக்யங்களை கொண்டும், அதேபோல் இலக்கணரீதியாகவும், ந்யாயம், தர்க்கம், முதலானவைகளைக் கொண்டும் விசாரித்து தாத்பர்யநிர்ணயம் செய்யப்பட்டிருக்கின்றதால், இதுவே சகலசாஸ்திரவிசாரத்தின்சாரம்

என்றும் இதற்கு மேல் விசாரிப்பதற்குரிய விஷயம் எதுவுமே இருக்க முடியாது என்றும் ஒரு நிறைவு ஏற்படுகிறது. இந்த க்ரந்தம் மிகமிக அற்புதம் என்று சொல்வதைத்தவிர வேறெதுவும் வர்ணிக்க இயலவில்லை. ஆகவே இப்பேர்ப்பட்ட பாக்யத்தை எனக்கு அருளிச்செய்த எனது குருநாதருக்கும், எனது ஆசார்யருக்கும் இந்த க்ரந்தத்தை பூர்த்திசெய்து அவர்களுடைய பாதபத்மங்களில் ஸமர்ப்பிக்கின்றேறன். உலகத்தில் எவ்வளவோ அதிசயங்கள் நடப்பதாக கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் எழுத்தறிவற்ற படிப்பற்ற பாமரர்களுக்குள் கடைசீ தரமாக இருந்த என்னை தடுத்தாட்க்கொண்டு இந்த மஹத்தான க்ரந்தத்தை தமிழில் இயற்றச் செய்த அந்த மஹாத்மாவின் அருள்சக்தியை மஹிமையை என்னவென்று எடுத்துரைப்பேன்! ஸத்ஸம்ப்ரதாயத்தை லோகத்திற்கு அருளிச்செய்த பாஷ்யகாரரான ஸ்ரீ சங்கரபகவத்பாதரை நமஸ்கரித்து இந்தக்ரந்தக்காரரான ஸர்வஞ்ஞாத்ம முனியானவர் மங்களச்லோகம் செய்திருக்கின்றார். அதாவது,

“வக்தாரமாஸாத்ய யமேவ நித்யாசரஸ்வதி ஸ்வார்த்த ஸமன்விதாSSஸீத்! நிரஸ்த்த துஸ்த்தர்க்க களங்க பங்காநமாமி தம்சங்கரம் அர்ச்சிதாங்கிரிம் என்று ஸ்துதி செய்திருக்கிறார். இதன் கருத்து என்னவென்றால், சப்த நித்யசக்தி ஸ்வரூபமாக இருக்கின்ற நித்யா சரஸ்வதி என்ற வேதஸ்வரூபமானவாக்தேவதையானவள் எவரை வ்யாக்யாதாவாக அடைந்ததால் துஸ்தர்க்கம் என்ற சேற்றிலிருந்து விடுபட்டு தன் அர்த்தத்தை தெரிவிப்பதில் பூர்ணத்வத்தை அடைந்தாளோ அப்பேர்ப்பட்ட பகவத்பாதரை நான் நமஸ்கரிக்கின்றேன் என்று தெரிவிக்கின்றார்.

இந்த ச்லோகத்தினால் தெரிவிக்கப்பட்ட உட்கருத்துக்கள் அனைத்தும் என் குருநாதரான ஸ்ரீ ஸ்வாமி ஜீ அவர்களிடம் பூரணமாக இருக்கின்ற-

தென்பதை ப்ரத்யக்ஷமாக காண்கின்றேன். ச்ருதியுக்தி அனுபவம் என்றப்ரமாணங்களைக் கொண்டு அத்வைதமே பரமார்த்த தத்வம் என்று போதிக்கின்ற சப்தப்ரமாணம் என்ற சாஸ்திரத்தை, அதுப்ரமாணந்தான் என்று (ப்ரமாணமே என்று) நிரூபிக்கின்ற அவருடைய ஸாமர்த்யத்தை (திறமையை) அந்த மஹாத்மாவின் உபதேசங்களை கேட்க பாக்யம் பெற்றவர்களால்தான் அறியமுடியும். ச்ருதி வாக்யங்களுக்கு விரோதமில்லாததும், எல்லோராலும்மிக எளிதாக புரிந்து கொள்ளக்கூடிய முறையிலும் ஸம்ப்ரதாயத்தை விடாமலேயே, காலத்திற்கு ஏற்றவாறு பற்பல உதாகரணங்களைக் கொண்டு விளக்குகின்ற முறையும், துஸ்த்தர்க்கம் செய்கின்ற ஸாங்க்யர் நையாயிகர், பௌத்தர் போன்ற புராதனமான பல மதஸ்த்தர்களின் கொள்கைகளையும் நூதன முறையில் வேதாந்த சாஸ்திரங்களுக்கு விளக்கம் அளிக்கின்ற நவீன மதஸ்த்தர்களின் கருத்துக்களையும் வேடிக்கையாகவே தெரிவித்து உண்மையான தத்வம் என்ன என்பதை பல விதமாக எடுத்து போதிக்கின்ற திறமையை காண்கின்றபோது இந்தச்லோகம் ஸ்ரீ ஸ்வாமிஜீ அவர்களுக்கே முற்றிலும் பொருந்துகின்றது என்பதால் ஸ்ரீ சங்கரபகவத்பாதரே என் குருநாதராக அவதரித்து அனைவரையும் ஆட்க்கொண்டு அருள்புரிகின்றார் என்பதில் ஸந்தேகத்திற்கே இடமில்லை. ஸமதமாதி ஸாதனங்கள் அனைத்தும் பூஷணமாகக் கொண்டு ஞானிகளின் லக்ஷணம் பூர்ணமாக பொலிகின்ற ப்ரத்யக்ஷ தெய்வமாய் கடாக்ஷித்து அருள்கின்ற என்குருநாதரின் மஹிமையை எவ்விதம் எடுத்துரைப்பேன்! படிப்பற்ற பேதையாய் பரிதவித்து நின்ற என்னையும் ஒரு பொருளாக ஏற்று தடுத்தாட்கொண்டு தன் தவத்தின் மஹிமையினால் இந்த க்ரந்தத்தை இயற்றியருளிய விந்தையே விந்தை! இதைவிட அதிசயம் என்ன இருக்கமுடியும்! இதுவரை சாஸ்திரிகளிடம் படித்த க்ரந்தங்கள் எல்லாமே ஸ்ரீ ஸ்வாமிஜீ அவர்களினால் தேர்ந்தெடுக்கப்பட்டது தான் என்றாலும், கடைசியாக

இந்த ஸம்க்ஷேப சாரீரகமென்றக்ரந்தத்திலுள்ள விசேஷங்களையெல்லாம் எனக்கு எடுத்துச் சொல்லி, இது மிகவும் சிறந்தது என்று தெரிவித்ததுடன் அதை அவஸ்யம் படிக்கவேண்டுமென்று ஆஞ்ஞாபித்து, அதை அனுபவிக்கும்படி செய்த அந்த கருணாமூர்த்திக்கு என்னகைம்மாறு செய்வேன். அதுமட்டுமல்ல ஸ்ரீ ஸ்வாமிஜீ அவர்கள் ஆச்ரமத்தில் நடத்தும் பாடங்களுக்கிடையில் இந்த க்ரந்தத்திலுள்ள முக்யமான அம்ஸங்களை அவ்வப்போது உபதேசித்தருளிய காரணத்தினாலும், அவருடைய ஸத்யஸங்கல்பத்தினாலும் இந்த க்ரந்தம் பூர்த்தி அடைந்திருக்கின்றது. பெறுதற்கரிய பேற்றை அளித்த என் குருநாதருக்கு என் நன்றியைத்தெரிவிக்க வார்த்தைகள் இல்லை. 'மூகம் கரோதி வாசாலம்' என்றபடி ஊமையையும் பேசவைக்கின்ற அவருடைய அருளை வர்ணிக்கமுடியாது. என் சிந்தனைக்கெட்டாத அவருடைய மஹிமை அபாரம். எல்லையற்றது என்பதை தெரிவித்து இப்பேர்ப்பட்ட எனது குருநாதரின் பாதபத்மங்களிலும், ஸர்வகல்யாண குணங்களும் பொருந்திய எனது ஆசார்யரான ஸ்ரீ சாஸ்திரிகளின் பாதபத்மங்களிலும் பக்தியுடன் என் நன்றி கலந்த நமஸ்காரத்தை தெரிவித்து இதைஸமர்ப்பிக்கின்றேன்.

V.S. கமலாம்பாள்.

ॐ

ओं श्री गणेशाय नमः

ओं श्री सद्गुरुभूर्तये नमः

सदाशिवसमारम्भां शङ्कराचार्यमध्यमाम्

अस्मदाचार्यपर्यन्तां वन्दे गुरु परम्परामे ॥

ईश्वरो गुरुरात्मेति मूर्तिभेदविभागिने

व्योमवद्व्याप्तदेहाय दक्षिणाभूर्तये नमः ॥

## ஸம்க்ஷேப சாரீரகம் — இரண்டாவது அத்யாயம்

1. அவதாரிகை :

முதல் அத்யாயத்தில் ஸமன்வய விசாரம் செய்யப்பட்டதன் மூலம் அதன் அர்த்தம் நிரூபணம் செய்யப்பட்டது. இவ்விதம் நிரூபணம் செய்யப்பட்டதன் மூலமாக அத்விதீயமான ப்ர்ஹ்மவஸ்து ஒன்று இருக்கிறது என்று சொல்வதற்குரிய ப்ரமாணம் எதுவுமே இல்லையென்ற அஸம்பாவனை நீக்கப்பட்டதாக ஒப்புக் கொள்வதற்கு முடியாது. ஏனெனில், சொல்லப்பட்ட விஷயம் ப்ரத்யக்ஷம் முதலான மற்ற ப்ரமாணங்களுக்கு விரோதமாக இருக்கிறது. எப்படியெனில், ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்கள் த்வைதத்தையே தெரிவிக்கின்றது. அதனுல் அத்வைதமாக ஒருவஸ்து இருக்கிற தென்று சொல்வதற்கே முடியாது என்று ப்ரமேய அஸம்பாவனை ஏற்படுகிறது. அதனுல் ஸமன்வயம் என்பது சரியல்ல என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது.

ச்லோகம் :

एवं समन्वयनिरूपणयाऽवबोधो जातोऽप्यखण्डविषयो ननु वाक्यजन्यः ।

मानान्तरेण परिपीडित एव जातो भेदप्रकाशनकृताऽक्षनिबन्धनेन

ச்லோகார்த்தம் : இந்த விதம் ஸமன்வயம் செய்யப்பட்ட காரணத்தினால் வாக்யத் திலிருந்து அகண்டார்த்த போதம் ஏற்படுகிறது. ஆனுல் இவ்விதம் ஏற்படும் ஞானம், இந்த்ரியப்ரத்யக்ஷம் என்ற மற்ற ப்ரமாணங்களினால் பாதிக்கப்படுவதாகவே இருக்கின்றது.

வ்யாக்யானம் : ஸமன்வய வாக்யத்திலுள்ள பதங்கள் எல்லாவற்றிர்க்கும், யுக்திகளைக் கொண்டு நன்கு விசாரிக்கப்பட்டு இந்த வாக்யங்கள் அகண்டமான ப்ரஹ்மதத்வத்தையே போதிக்கின்றது என்று நிரூபணம் செய்யப்பட்டது. ஆனாலும், இவ்விதம் நிரூபணம் செய்யப்பட்டதை 'கேட்கின்ற சிஷ்யனுக்கு ஸந்தேகம் ஏற்படுகிறது. ஏனெனில், ஸர்வ வேதாந்த சாஸ்திரங்களும் அகண்டமான ப்ரஹ்மதத்வத்தையே போதிக்கின்றது என்றும் அதுவே ச்ருதிக்கு தாத்பர்ய விஷயம் என்றும் ந்யாயத்தை (யுக்தியை)க் கொண்டு நிரூபணம் செய்யப்படுவதால் அவை எல்லாமே பொருத்தமாகவே

இருக்கிறது. ஆனாலும் ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களுக்கு விரோதமாக இருக்கின்றது. அதனால் சிஷ்யனுக்கு ஸந்தேகம் ஏற்படுகிறது. அதனால் முன்னால் சொல்லப்பட்ட ஸமன்வயத்தைப் பற்றி மேலும் ஆக்ஷேபிக்கப்படுகிறது. உபநிஷத்துக்கள் எல்லாமே அபேதம்தான் தத்வம் என்று போதிக்கின்றது என்றாலும், ப்ரத்யக்ஷம் அனுமானம் முதலான ப்ரமாணங்கள் அதற்கு விருத்தமாக பேதம் என்பதையே தெரிவிக்கின்றது. அதனால் ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களுக்கும், சப்தம் என்ற சாஸ்திர ப்ரமாணத்திற்கும் விரோதம் ஏற்படுகிறது.

**2. அவதாரிகை :**

எவ்விதம் கர்மகாண்டத்தில் தெரிவிக்கப்படும் விஷயம் ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களுக்கு விரோதமாக இல்லையோ, அதுபோல் ஞான காண்டமான உபநிஷத் வாக்யங்களால் தெரிவிக்கப்படும் விஷயமும் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் பாதிக்கப்படாமல் இருக்கலாமே ? அவ்விதமின்றி உபநிஷத் வாக்யங்கள் அத்வைதமே தத்வம் என்று போதிக்கின்றதால் ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களுக்கு விரோதம் என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

मज्जत्यलाबु सहसाऽप्सु शिलाः प्लवन्त इत्यादिकादभिहितादिव वाक्यजातात् ।
जाताऽपि बुद्धिरपबाधितगोचरैव - मद्वैतबुद्धिरपि भेदधियाऽऽत्मनि स्यात्

**ச்லோகார்த்தம் :** உலர்ந்த சுரைக்காய் ஜலத்தில் மூழ்கிவிட்டது என்றும் பாறாங்கல் மிதக்கின்றது என்றும் சொல்லப்படும் வாக்யங்களிலிருந்து ஞானம் ஏற்படுகிறது. ஆனால் அந்த ஞானம் பாதிக்கப்படுகிறது. அதேபோல் அத்வைதம் என்ற ஞானம், பேத ஞானத்தினால் பாதிக்கப்படுகிறது.

**வ்யாக்யானம் (சித்தா) :** கர்மகாண்டம், ஞான காண்டம் என்ற இரண்டிற்கும் விஷயம் வெவ்வேறாக இருக்கின்றது. அதனால் கர்மகாண்டம் போல் ஞான காண்டம் என்பது ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கு விரோதமில்லாமல் இருக்கவேண்டுமே என்ற ஆக்ஷேபம் சரியல்ல.

பூர்வ : ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் அறியமுடியாத அத்ருஷ்ட்டமான பலன்களை தெரிவிக்கின்றதனால்தான் வேதவாக்யங்கள் ப்ரமாணம் என்று ஒத்துக் கொள்ளப்படுகின்றது. அத்வைதமே தத்வம் என்று தெரிவிக்கின்ற வாக்யத்தின் பலம் த்ருஷ்ட்ட பலமாக இருக்கின்றது. இவ்விதம் த்ருஷ்டபலத்தை தெரிவிக்கின்ற காரணத்தினால், அந்த வாக்யம் ப்ரத்யக்ஷாதிகளுக்கு விரோதமாக இருக்கின்றதால் அந்த வாக்யம் பாதிக்கப்படவேண்டும்.

சித்தா : ச்ருதி வாக்யமும் ப்ரமாணம், ப்ரத்யக்ஷாதிகளும் ப்ரமாணம் என்று சொல்லப்படுமானால், ப்ரத்யக்ஷாதி ப்ரமாணத்தினால் ச்ருதிவாக்யம் ஏன் பாதிக்கப்படவேண்டும் ? ச்ருதிவாக்யத்திற்கு ப்ரத்யக்ஷாதிகள் விரோதமாக இருக்கின்றதால், ச்ருதியினால் ப்ரத்யாக்ஷாதிகள் பாதிக்கப்படலாமே ?

பூர்வ : அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் காய்ந்த சுரைக்காய் ஜலத்தில் மூழ்கிவிட்டது, பாருங்கல் ஜலத்தில் மிதக்கிறது என்ற வாக்யங்களை கேட்கின்றபோது அந்த விஷயத்தைப் பற்றிய ஞானம் ஏற்பட்டபோதிலும், அப்பேர்ப்பட்ட ச்ருதிவாக்யங்கள் ப்ரமாணமில்லையென்று எவ்விதம் ப்ரத்யக்ஷாதிப் ப்ரமாணங்களால் பாதிக்கப்படுகிறதோ அதுபோல் அத்வைதமே தத்வம் என்று ச்ருதி வாக்யம் போதிக்கின்றது என்றாலும் அந்த விஷய ஞானம், ப்ரத்யக்ஷாதிகளால் பாதிக்கப்படுகிறது என்றே சொல்ல வேண்டும்.

3. அவதாரிகை :

அத்வைத ஆத்ம தத்வம் என்பது, ஸ்வர்க்கம் முதலான விஷயங்களைப் போன்றே ச்ருதி என்ற ப்ரமாணத்தைக் கொண்டே அறியப்படவேண்டும். ச்ருதி என்ற ப்ரமாணத்தையன்றி வேறு ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கு ஆத்மா விஷயமல்ல. ஆகையால் ப்ரத்யக்ஷாதிகளால் ச்ருதிப்ரமாணம் பாதிக்கப்படுவதாக எப்படிச் செல்லமுடியும் ?

ச்லோகம் :

अध्यक्षगोचरमनर्थमवैमि वाक्यं निर्मुक्तमाह मम रूपमनर्थहेतोः ।
एवं च वेदशिरसोऽक्षनिबन्धनेन ज्ञानेन बाधनमतीव हि दुर्निवारम्

ச்லோகார்த்தம் : துக்கம் என்பது என்னால் ப்ரத்யக்ஷயமாக அனுபவிக்கப்படுகின்ற விஷயமாக இருக்கின்றது. ஆனால் என்னுடைய ஸ்வரூபம் துக்க ஹேதுவே இல்லாதது என்று ச்ருதிவாக்யங்கள் தெரிவிக்கின்றது. அதனால் ப்ரத்யக்ஷத்தினால் ஏற்படும் ஞானத்தினால் வேதாந்தம் பாதிக்கப்படுகிறது என்ற தோஷத்திற்கு பரிகாரமே கிடையாது.

வ்யாக்யானம் (பூர்வ) : ஜீவஸ்வரூபம், அஹம் கர்த்தா அஹம்போக்தா என்று ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களைக் கொண்டு அறியப்படுகின்றதால், ஸ்வர்க்காதிகளைப் போல் ப்ரமாணாந்தர கோசரமில்லை என்று சொல்லமுடியாது. மேலும் அஹம் துக்கி என்றும், ஸர்வ அனர்த்தத்திற்கும் காரணமான தர்மங்கள் உடையது என்றும், ப்ரமாத்ருத்வம் முதலானவைகளுடன் கூடினதாகவும் அறியப்படுகிறது. ஆனால் ச்ருதிவாக்யம் 'அத்வைதம் ப்ரஹ்ம' என்றும் 'அதுவே நீ' என்றும் ஆத்மா அஸம்ஸாரி என்றும், பசி, தாகம், துக்கம் முதலான எவ்வித தர்மங்களும் அற்ற அஸங்கஸ்வரூபம் என்றும், அவித்யையோ அதன் கார்யமான அனர்த்தம் என்பதோ எதுவும் இல்லையென்று தெரிவிக்கின்றது. இப்பேர்ப்பட்ட நிர்மல ஸ்வரூபமான ப்ரஹ்மமே நீ என்றும், இந்த ஆத்ம தத்வம் ச்ருதியினால்தான் அறியப்படவேண்டும் என்றும் ச்ருதி தெரிவிக்கின்ற விஷயத்தை ஆக்ஷேபிக்கவில்லை. ஆனால் அத்வைதமே தத்வம் என்று தெரிவிக்கின்ற வாக்யங்கள், ப்ரத்யக்ஷத்திற்கு விருத்தமாக இருக்கின்றதால் அதை ஒத்துக்கொள்ளமுடியாது.

**4.** அவதாரிகை :

வேதத்தில் இருக்கின்ற கர்ம காண்டம், ஞான காண்டம் (வேதாந்த பாகம்) என்ற இரண்டிற்கும் ப்ராமாண்யம் உண்டு. ஆகவே, வேதாந்த பாகத்திற்கு எப்படி ப்ராமாண்யம் சொல்லப்படுகிறதோ அதுபோல ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமாக இல்லாத த்வைதத்தை தெரிவிக்கின்ற கர்ம காண்டத்திற்கும் ப்ராமாண்யம் உண்டு என்றே சொல்லப்படவேண்டும். ஆகையால் கர்ம காண்ட ப்ராமாண்யம், - ப்ரத்யக்ஷப்ராமாண்யம் என்ற இரண்டு ப்ரமாணங்களினுலும் அத்வைதம் தத்வம் என்று தெரிவிக்கின்ற வேதாந்த பாகம் பாதிக்கப்படுகிறது என்றே சொல்ல வேண்டும்.

ச்லோகம் :

कर्तृत्वमाह मम कर्मविधिर्नियोगः संबन्धपूर्वकमपास्तसमस्तभेदम् ।
मामाह वेदशिरसो वचनं तथा च सत्यस्य दुःस्थितमिवाऽऽपतति प्रमात्वम्

**ச்லோகார்த்தம் :** கர்மவிதி வாக்யங்கள் நியோகத்துடன் (ஏவலுடன்) கூடிய ஸம்பந்தத்தை தெரிவிப்பதன் மூலம் என்னிடம் கர்த்ருத்வம் இருப்பதாகத் தெரிவிக் கின்றது. வேதாந்த வாக்யங்கள் ஸர்வவிதி நிவேஷதங்கள் அற்றவன் என்று என்னை தெரிவிக்கின்றது. அதனால் அத்வைதமே தத்வம், அதுவே ஸத்யம் என்று தெரிவிக்கின்ற விஷயத்தில் ப்ராமாண்யம் துர்பலம் என்றே சொல்ல வேண்டும்.

**வ்யாக்யானம் :** ஒரே வேதத்திலுள்ள கர்ம காண்டம் ஞான காண்டம் என்ற இரண்டிற்கும் ஸமமான ப்ராமாண்யம் உண்டு. ஆனால் அத்வைதமே தத்வம் என்று தெரிவிக்கின்ற உபநிஷத் வாக்யங்கள், கர்ம காண்டவாக்யம், ப்ரத்யக்ஷம் என்ற இரண்டு ப்ரமாணங்களுக்கும் விரோதமாக இருக்கின்றது. எப்படியெனில் 'ஸ்வர்க்க காமோ யஜேத' என்றும் 'யாவஜ் ஜீவம் அக்னிஹோத்ரம் ஜுஹோதி' என்றும் தெரிவிகின்ற வாக்யங்கள், கர்மாவை செய் என்று ஏவுகின்றது. அதனுல் ஜீவன் கர்மாவுடனும், அதன் பலத்துடனும் ஸம்பந்தமுடையவனுகவும், கர்த்ருத்வ போக்த்ருத்வம் உடையவனுகவும் தெரிவிக்கின்றது. இதற்கு நேர்விபரீதமாக கர்த்ருத்வ, போக்த்ருத்வங்கள் அற்ற நிர்விசேஷ ஸ்வரூபம் என்று ஞானகாண்டம் போதிக்கின்றது என்ருல், அது கர்ம காண்டத்திற்கு விரோதம் என்றே சொல்லவேண்டும்.

சித்தா : எந்த ந்யாயத்தையும், எந்த கர்ம காண்ட வாக்யத்தையும் கொண்டு உபநிஷத் பாகம் பாதிக்கப்படுகிறது என்று சொல்லப்படுகிறதோ அதே ந்யாயத்தையும் ஞான காண்ட வாக்யங்களையும் கொண்டு கர்ம காண்டம் பாதிக்கப்படலாமே ?

பூர்வ : அவ்விதம் சொல்லமுடியாது -ஏனெனில் கர்ம காண்டத்திற்கு ஸஹாயமாக ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்கள் இருக்கின்றது. 'ஆத்மாகர்த்தா, நியோஜ்யத்வாத்' என்று அனுமானத்தினுலும் ப்ரத்யக்ஷத்தினுலும் கர்த்ருத்வம் இருப்பதாக சித்தம் செய்யமுடியும். ஆகவே, ஸத்ப்ரதிபக்ஷ அனுமானத்தினுல் அத்வைத சித்தாந்தம் பாதிக்கப்படுகிறது. அதனுல் உபநிஷத் வாக்யங்கள் ப்ரமாணம் என்று நிரூபணம் செய்வது மிகவும் துர்லபம்.

5. அவதாரிகை :

மேலும், கர்மகாண்டம், ஞானகாண்டம் என்ற இரண்டும் ஒரே வேதத்தினுல்தான் போதிக்கப்படுகிறது. இரண்டுமே ச்ருதிவாக்யங்களாக இருக்கின்றதால், அதில் ஒன்றுக்கொன்று விருத்தமான விஷயங்கள் தெரிவிக்கப்படுமானுல், அதில் ஏதாவது ஒன்றை பாதித்தே ஆகவேண்டும் என்ற நிர்பந்தம் ஏற்படுகிறது. இரண்டிற்கும் ப்ராமாண்யம் ஸமமாக இருக்கின்றதால் இதில் எதை பாதிப்பது என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. ஆனுல் கர்மகாண்ட விஷயத்திற்கு அனுகூலமாக ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்கள் இருக்கின்றதால் வேதாந்த பாகமே பாதிக்கப்பட வேண்டும் என்று சொல்வதே பொருத்தமாகும்.

ச்லோகம் :

प्रत्यक्षकर्मवचसोरुभयोः समूहः सामर्थ्यवानुपनिषद्विषयापहारे ।
एकैकमेव तु न पारयतेऽपहर्तुं स्वार्थप्रकाशनविधावुभयोः समत्वम्

ச்லோகார்த்தம் : ப்ரத்யக்ஷ ப்ரமாணமும், கர்மவிதிவாக்யங்களும் சேர்ந்து உபநிஷத் விஷயத்தை நிஷேதம் செய்யக் கூடிய சக்தி உடையதாக இருக்கிறது. தன்னுடைய விஷயத்தை ப்ரகாசப்படுத்துகின்ற விஷயத்தில் இந்த ப்ரமாணங்கள் இரண்டும் ஸமமாகவே இருக்கின்றது. அதனுல் இந்த ப்ரமாணங்கள் தனித்தனியே, உபநிஷத் விஷயத்தை பாதிக்கமுடியாது.

சித்தா : வ்யாக்யானம் : வேதத்திலுள்ள இரண்டு காண்டங்களும் அந்தந்த காண்டங்களுக்கு எதுவிஷயமோ அதை மட்டுமே தெரிவிக்கின்றது. அதனுல் ஒன்றுக்கொன்று விரோதம் என்று எப்படிச் சொல்லமுடியும்?

பூர்வ : அந்தந்த ப்ரமாணம் அதனுடைய விஷயத்தையே தெரிவிக்கின்றது என்ற விஷயத்தில் விரோதம் ஏதுமில்லே. ஆனுல் கர்மகாண்டத்தில் தெரிவிக்கப்படும் விஷயங்களுக்கு ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்கள் அனுகூலமாக இருக்கின்றது என்ற காரணத்தினுல் கர்ம காண்டம் ப்ரபலம் என்று சொல்லவேண்டும். ஆகவே, ப்ரபலமான கர்ம காண்டத்தினுல் துர்பலமான ஞானகாண்டம் பாதிக்கப்படுகிறது என்றே சொல்லவேண்டும்.

6. அவதாரிகை :

ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களும் கர்மகாண்டமும் சேர்ந்து ஞான காண்டத்தை பாதிக்கின்றது என்று சொல்வதற்கு முடியாது. ஏனெனில் சேர்க்கை என்பது ஒரு ப்ரமாணமில்லே என்பதால், ப்ரமாணங்களின் சேர்க்கையினுலோ அல்லது தனித் தனியாகவோ, உபநிஷத் என்ற ப்ரமாணத்தை பாதிக்க முடியாது. அதனுல் உபநிஷத் என்ற ப்ரமாணமே மற்ற ப்ரமாணங்களே பாதிக்கின்றது என்று சொல்லப்படுமானுல், வேறு ஒரு முறையில் உபநிஷத் பாதிக்கப்படுகிறது என்றே சொல்லலாம். எப்படியெனில்:

ச்லோகம் :

ज्येष्ठचात्समर्थमथ वाऽक्षजमेकमेव तस्यैव कर्मविधिरस्तु सहायभूतः ।
प्रत्यक्षमेव विधिवाक्यसहायमेव ब्रह्मात्मवस्त्वपहरिष्यति को विरोधः

ச்லோகார்த்தம் : ப்ரத்யக்ஷம் என்பதே ஜ்யேஷ்ட்டம் என்பதால் அது ஒன்றே போதுமானது. ஆனுல் கர்மவிதி என்பது அதற்கு ஸஹாயமாகவே இருக்கின்றது என்பதால் கர்மவிதி ஸஹாயத்துடன் ப்ரத்யக்ஷம் ப்ரஹ்மாத்ம விஷயம் என்பதை நிஷேதம் செய்கின்றது என்று சொல்லப்படுவதில் விரோதம் என்ன இருக்கின்றது.

வ்யாக்யானம் : சப்தப்ரமாணம் என்ற சாஸ்திரம் இருக்கின்றது என்று அறிவதற்கே ப்ரத்யக்ஷம்தான் தேவைப்படுகிறது. அதனுல் சாஸ்திரம் என்ற ப்ரமாணம் சித்திப்பதற்கு முன் ப்ரத்யக்ஷமே சித்திக்கின்றது. மேலும் மற்ற ப்ரமாணங்கள் எல்லாமே ப்ரத்யக்ஷத்தை அபேக்ஷித்தே சித்திக்கின்றது. சாஸ்திரம் என்பதும் ச்ரவணேந்த்ரியத்தினுல் தான் க்ரஹிக்கப்படவேண்டி இருக்கிறது என்பதால் தன் ஸ்வரூபம் சித்திப்பதற்கு ப்ரத்யக்ஷத்தை அபேக்ஷிக்கின்றது. ஆகவே, உபஜீவ்யமான ப்ரத்யக்ஷத்திஞல் உபஜீவகமான சாஸ்திரம் பாதிக்கப்படுவதாகச் சொல்லலாமே ?

சித்தா : ஜ்யேஷ்ட்டம், கனிஷ்ட்டம் என்பவைகளைக் கொண்டு எது ப்ரமாணம், எது அப்ரமாணம் என்று தீர்மானிக்கமுடியாது. கயிற்றில், ஸர்ப்பம் என்ற ஞானம் முதலில் ஏற்படுகிறது. அதன் பிறகு அந்த ஞானம் பாதிக்கப்படுகிறது. ஆகையால் கேவலம் ஜ்யேஷ்ட்டம் என்பதைக் கொண்டு அதுவே ப்ரபலம் என்று தீர்மானிக்க முடியாது.

பூர்வ : ப்ரத்யக்ஷம் என்பதும் ப்ரமாணமாக இருக்கின்றதாலும் அதுவே ஜ்யேஷ்ட்டம் என்ற காரணத்திஞலும், கர்ம காண்ட வாக்யங்கள் ஸஹாயமாக இருப்பதாலும் ப்ரத்யக்ஷமே ப்ரபலம் என்று சொல்லலாமே? சுக்தி ரஜதஞானம், ரஜ்ஜுவில் ஸர்ப்ப ஞானம் என்பதெல்லாம் ப்ரமாணமில்லையென்பதால் அந்த த்ருஷ்ட்டாந்தம் பொருந்தாது. ஆகவே, ப்ரத்யக்ஷத்தினால் உபநிஷத் ப்ரமாணம் பாதிக்கப்படுகிறது என்றே சொல்ல வேண்டும்.

7. அவதாரிகை :

இதுவரை செய்யப்பட்ட ஆக்ஷேபங்களுக்கு பதில் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

अत्रोच्यते न खलु वेदशिरांसि मुक्त्वा किंचित्प्रमाणमिह तत्त्वनिवेदनाय ।
शक्नोति येन भवतीह विरोधशङ्का वेदान्तवाक्यमुखतोऽवगते प्रतीचि

ச்லோகார்த்தம் : இதற்கு பதில் சொல்லப்படுகிறது. 'தத்வம்' என்ன என்று தெரிவிப்பதற்கு வேதாந்தம் என்ற ப்ரமாணத்தையன்றி வேறு ப்ரமாணம் கிடையாது. வேறு ப்ரமாணம் இருக்குமானுல்தான் வேதாந்த வாக்யத்திலிருந்து ஏற்படும் ப்ரத்யகாத்மவிஷயத்தில் விரோத சங்கை ஏற்படமுடியும்.

வ்யாக்யானம் : சாஸ்திரம் என்ற உபநிஷத் ப்ரமாணத்திற்கும், ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களுக்கும் ஒன்றுக்கொன்று விரோதம் என்று சொல்வதற்கு முடியாது. ஏனெனில் சாஸ்திரம் என்பது ப்ரபஞ்சத்தின் உண்மையான தத்வம் என்ன என்பதை தெரிவிக்கின்ற ப்ரமாணமாக இருக்கின்றது. । ப்ரத்யக்ஷம் முதலான। ப்ரமாணங்கள் அஞ்ஞான சித்தமான (ஆத்யாஸிக) கர்த்ருத்வாதிகளை தெரிவிக்கின்றது. ஆகவே ஒன்று பாரமார்த்திக விஷயமான தத்வத்தை போதிக்கின்றது. மற்ற ப்ரமாணங்கள் வ்யாவஹாரிக விஷயமாக தத்வமாக இல்லாததான விஷயங்களை தெரிவிக்கின்றதால் ப்ரத்யக்ஷாதிகளுக்கு தாத்விகப்ரமாண்யத்வம் கிடையாது. சப்தார்த்தம் கிரஹிக்கப் படுவதற்கு ப்ரத்யக்ஷம் தேவைப்படுகிறது என்றுலும் தத்வத்தை போதிக்கின்ற விஷயத்தில் ப்ரத்யக்ஷாதிகளுக்கு ப்ராமாண்யமில்லை. கர்த்ருத்வாதிகள் என்ற த்வைத விஷய வ்யவஹாரங்கள் எல்லாம் வ்யவஹார காலபர்யந்தம் இருக்கக்கூடியது. பாரமார்த்திக தத்வத்தை சாஸ்திரம் தெரிவிக்கின்றதால் இரண்டிற்கும் விஷயம் வேறு. அதனுல் இரண்டிற்கும் விரோதம் என்பதே கிடையாது. ஒன்று விவஹார சித்தம், ஒன்று தத்வம் என்பதால் ப்ரத்யக்ஷாதிகளுக்கே சாஸ்திர ப்ரமாணத்தினால் பாதம் ஏற்படுவதாகச் சொல்லாமேயன்றி ப்ரத்யக்ஷாதிகளால் சாஸ்திரம் பாதிக்கப்படுவதாகச்சொல்ல முடியாது. மேலும் ப்ரத்யக்ஷ விஷயம் சாஸ்திரத்தினுல் பாதிக்கப்பட்ட போதிலும் உபஜீவ்யமாக இருக்கின்றதால் அதனுடைய வ்யவஹாரிகத்வ தன்மைக்கு பாதகம் ஏற்படாது.

**8.** அவதாரிகை :

ப்ரத்யக்ஷாதிகளுக்கு தத்வத்தை தெரிவிக்கின்ற ஸாமர்த்யம் கிடையாது.

ச்லோகம் :

अज्ञातमर्थमवबोधयदेव मानं तच्च प्रकाशकरणक्षममित्याभिज्ञाः ।
न प्रत्यगात्मविषयादपरस्य तच्च मानस्य संभवति कस्यचिदत्र युक्त्या

ச்லோகார்த்தம் : அஞ்ஞாதமான விஷயத்தை அறிவிப்பது எதுவோ அதுவே ப்ரமாணம் என்றுகும். அந்த ப்ரமாணமே வஸ்துவை ப்ரகாசப்படுத்துகின்ற சக்தி உடையதாக இருக்கின்றது. இவ்வித ப்ரமாணலக்ஷணம், ப்ரத்யகாத்மாவைத் தெரிவிக்கின்ற சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தையன்றி வேறு எந்த ப்ரமாணத்திற்கும் பொருந்தாது.

வ்யாக்யானம் : ஏனெனில், ப்ரமாணம் என்றுல், அஞ்ஞாதமான அர்த்தத்தை போதிப்பது எதுவோ அதுவே ப்ரமாணம்.அஞ்ஞாதமாக இருக்கின்ற விஷயம் எதுவோ அதிலுள்ள அஞ்ஞானத்தை விலக்கி அந்த விஷயம் ப்ரகாசிக்கும்படி செய்கின்றதால்தான் உபநிஷத் என்பது ப்ரமாணமாகிறது. அஞ்ஞாதார்த்த விஷயத்வம் (ப்ரகாசகத்வம்) என்பது ப்ரத்யகாத்மஸ்வரூபத்தை ப்ரகாசப்படுத்துகின்ற உபநிஷத் என்ற ப்ரமாணத்திற்கு மட்டுமே இருக்கின்றது. மற்ற ப்ரமாணங்களுக்கு இந்த லக்ஷணம் சொல்ல முடியாது. ஏனெனில், ஸ்வயம் ஜடமான வஸ்துக்களுக்கு அஞ்ஞாதத்வம் என்பதே இருக்கமுடியாது.

'ஜடே ஆவரணக்ருத்யபாவாத்' என்று ஜடவஸ்துக்களுக்கு அறியப்படாத தன்மை என்பதே இருக்கமுடியாது. அஞ்ஞானத்திற்கு எதுவிஷயமோ அதுவே அறியப்படாத தன்மை என்பதற்கு உரியதாக ஆகும். எது ப்ரகாசிக்கக் கூடியதோ அதுவே அஞ்ஞாதமாக இருக்கின்றது என்றும், ப்ரமாணப்ரவர்த்தியினுல் அஞ்ஞானம் நிவர்த்திப்பதால் வஸ்து ப்ரகாசிக்கின்றது என்றும் சொல்ல முடியும் ஆகவே எதை அஞ்ஞானம் மறைக்கின்றதோ அதுவே அஞ்ஞானத்திற்கு விஷயம் என்று சொல்லப்படுவதால், ஜடவஸ்துகளுக்கு அஞ்ஞாதத்வம் என்பதே ஸம்பவிக்கமுடியாது.

ஜைமினி முதலான மஹரிஷிகளின் அபிப்ருயப்படி அறியப்படவேண்டிய விஷயத்தில் ஸம்சயமோ விபர்யயமோ இருக்குமானுல், அவைகளை விலக்கக்கூடிய ப்ரமாணம் இல்லாமல் அவைகளை நிவர்த்திக்க முடியாது. அதனுல் அஞ்ஞாதமான விஷயத்தை எது அறிவிக்கின்றதோ அதையே ப்ரமாணமென்று சொல்லவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. மேயம் (அறியப்படவேண்டிய விஷயம்) என்பது மானத்தினுல் தான் சித்திக்க வேண்டும். ஆகையால் அஞ்ஞாத விஷய போதகம் மானம் என்ற தன்மை ப்ரத்யக்ஸ்வரூபத்தை போதிக்கின்ற உபநிஷத் ஒன்றுக்கே இருக்கின்றது.

ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களினுல் தெரிவிக்கக்கூடிய ஏதோ ஒரு சில விஷயங்கள் இருக்கின்றதென்று அறியப்படுகிறது என்பதற்காக ப்ரத்யக்ஷாதிகளை ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறதா? அல்லது ஸத்ரூபமானபரமாத்ம ஸ்வரூபத்தை போதிக்கின்றது என்பதால் ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறதா?

ப்ரத்யக்ஷாதிகள் ப்ரகாசப்படுத்தக்கூடிய சில விஷயங்கள் இருக்கின்றதால் அவைகள் ப்ரமாணம் என்று சொல்லப்படுமானுல் அது சரி என்று ஒத்துக் கொள்ள முடியாது. ஏனெனில் கிளிஞ்சல் என்பது வெள்ளியென்று ப்ரத்யக்ஷமாக சக்ஷுஸ்ஸினுல் அறியப்படுகிறது. இந்த இடத்தில் தத்கால உற்பன்னமான அநிர்வசனீயமான வெள்ளி என்ற விஷயம் இருக்கின்றது. இந்த வெள்ளி ப்ரத்யக்ஷத்திற்கு விஷயமாக இருந்த போதிலும் அதை வாஸ்தவமான ஞானம் என்று சொல்ல முடியாது. ப்ராந்தி விஷயம் என்றே சொல்லவேண்டும்.

இரண்டாவது பக்ஷமான ஸத்விஷயம் என்பதே ப்ரத்யஷத்தினுல் ப்ரகாசப்படுத்தப் படுகின்றது என்று சொல்லப்படுமானுல், அவ்விதம் சொல்வதற்கும் முடியாது. ஏனெனில், ஸத்விஷயம் என்ருல் என்ன? அர்த்தக்ரியா கார்யத்வமுடையது எதுவோ அது ஸத்வஸ்துவா? அல்லது எந்த வஸ்துவிற்கு பாதமே ஏற்படமுடியாதோ அதை ஸத்வஸ்து என்று சொல்லப்படுகிறதா? அர்த்தக்ரியா கார்யத்வம் (வ்யாகாரயோக்யத்வம்) யோக்யத்வம்) உள்ளது ஸத்வஸ்து என்று சொல்லப்படுமானுல் ஸ்வப்னபதார்த்தங்களுக்கும் அந்த தன்மை இருப்பதால் அவைகளையும் ஸத்வஸ்து என்று சொல்ல நேரிடும். அதனுல் அர்த்தக்ரியா கார்யத்வமுள்ள வஸ்துக்களைப் ப்ரகாசப்படுத்துவதால் ப்ரத்யக்ஷாதிகள் ப்ரமாணம் என்று சொல்ல முடியாது. அபாத்யத்வரூபமான விஷயத்தை ப்ரகாசப் படுத்துகின்றது என்று சொல்லப்படுமானால் தத்கால அபாத்யத்வ விஷயமா?

அல்லது த்ரிகாலஅபாத்யத்விஷயமா என்று விசாரிக்கப்படுமானுல்,

தத்கால அபாத்யத்வ விஷயம் என்பது ஸ்வப்ன காலத்தில் இருக்கிறத அவைகள் பாதிக்கப்படுவதில்லை. அதனால் தத்கால அபாத்யத்வ விஷயங்களை ப்ரத்யாக்ஷாதிகள் க்ரஹிப்பதால் ப்ரமாணம் என்று சொல்ல முடியாது.

த்ரிகால அபாத்யத்வரூபமான வஸ்துவை க்ரஹிப்பதற்கு ப்ரத்யக்ஷாதிகளுக்கு சக்தி கிடையாது. பார்க்கின்ற ஸமயத்தில் எந்த வஸ்து இருக்கின்றதோ அதைத்தான் ப்ரத்யக்ஷாதிகள் க்ரஹிக்க முடியும். இவ்விதம் க்ரஹிக்கப்படும் வஸ்துவிற்கு அதன்பிறகு நாசமே ஏற்படாது என்ருே அல்லது இதற்கு முன் நாசமே ஏற்படவில்லை யென்ருே தெரிவிப்பதற்கு ப்ரத்யக்ஷத்திற்கு சக்தி கிடையாது. ஆகவே வர்த்தமான அர்த்தக்ராஹி ப்ரத்யக்ஷம் என்றே அறியவேண்டும்.

இந்த விதம் விசாரிக்கப்பட்டதன் மூலம் த்ரிகால அபாத்யத்வ வஸ்துவிஷயகம் ப்ராமாண்யம் என்ற தன்மை உபநிஷத் வாக்யங்களுக்கு மட்டுமே சொல்ல முடியும் அஞ்ஞான நிவர்த்தி என்பதே ப்ராமாணத்திற்கு பலம். இந்த விதம் அஞ்ஞான நாசகம் எதுவோ அதுவே ப்ரமாணம் என்றலக்ஷணம் அனுத்ம விஷயமான கடபடாதிகளைப் ப்ரகாசப்படுத்துகின்ற பரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கு கிடையாது. ஆகவே எந்த காரணத்தைக்கொண்டும் ப்ரத்யக்ஷாதிகளுக்கு தாத்விக ப்ராமாண்யம் கிடையாது. அஞ்ஞானத்தை நிவர்த்தித்து வஸ்துவை ப்ராகாசப்படுத்தக் கூடிய தன்மை எந்த ப்ரமாணத்திற்கு இருக்கின்றதோ அதையே ப்ரமாணம் என்று சொல்லவேண்டும் என்று ப்ரமாண லக்ஷணத்தை அறிந்த பெரியோர்களால் சொல்லப்படுகிறது. இந்தலக்ஷணம் உபநிஷத் ஒன்றுக்குத்தான் பொருந்தும். ஸ்வயம் ப்ரகாச சைதன்யம் ஒன்றே அஞ்ஞானத்திற்கு விஷயமாக இருக்கின்றதால் ஆத்ம வஸ்துவே அஞ்ஞாதம் என்று சொல்லமுடியும். ஸ்வயம் ஜடமான வஸ்துவிற்கு அஞ்ஞாதத்வமேஸம்பவிக்காது;.

**9. அவதாரிகை :**

அப்படியானுல் கர்த்ருத்வ, போக்த்ருத்வாதி விசிஷ்ட்ட ஆத்மாவே சேதனன் என்பதால், அஞ்ஞானம் சேதனனே மறைப்பதாகச் சொல்லலாமே ? அதனுல் ப்ரத்யக்ஷாதி கள் ஜீவனேகர்த்ருத்வமுடையவனுகவே தெரிவிக்கின்றதால் ப்ரத்யக்ஷாதிகளால் அத்வைதம் என்று போதிக்கின்ற சாஸ்திரம் பாதிக்கப்படுகிறது என்று சொல்லலாமே ?

ச்லோகம் :

सर्वं पराग्विषयमेव हि मानजातं वेदावसानवचनानि तु वर्जयित्वा ।
यद्भौतिकं किमपि भौतिकगोचरं तद्रूपप्रदीपकनिदर्शनतः प्रसिद्धम्

ச்லோகார்த்தம் : வேதாந்த வாக்யங்களேத் தவிர மற்றுமுள்ள ப்ரமாணங்கள் அனேத்தும்பாஹ்யவிஷயங்களேயே தெரிவிக்கின்றது. எது பௌதிக ப்ரமாணமோ அது பௌதிக விஷயமாகவே இருக்கின்றது என்பது ரூபத்தை தெரிவிக்கின்ற தீப த்ருஷ்டாந்தத்தைக் கொண்டே இந்தவிஷயம் சித்திக்கின்றது.

வ்யாக்யானம் : ஸர்வ கர்த்ருத்வ, போக்த்ருத்வ விஷயங்கள் எல்லாம் பராக் விஷயமாக இருக்கின்றதால் ப்ரத்யக்ஷாதிகளால் க்ரஹிக்கப்படுகிறது. எப்படி கடபடாதி விஷயங்கள் வேதாந்த ப்ரமாணமாக இல்லாத மற்ற ப்ரமாணங்களால் அறியப்படுகிறதோ அதுபோல் கர்த்ருத்வாதிகளும் அறியப்படுகிறது. இந்த விஷயம் அனுமானத்தினுலும் சித்திக்கின்றது. "கர்த்ருத்வாதிகள் பராக் விஷயம், ஏனெனில் வேதாந்தத்தையன்றி வேறு ப்ராமணத்தினுல் க்ரஹிக்கப்படுகின்றதால், எப்படி கடபடாதி பதார்த்தங்கள் வேதாந்த ப்ரமாணமாக இல்லாத சக்ஷுராதி ப்ரமாணங்களால் க்ரஹிக்கப்படுகிறதோ அதுபோல் (என்று த்ருஷ்டாந்தம்) என்று அனுமானத்தினுலும் சாதிக்கப்படுகிறது.

மேலும், எப்படிபௌதிகமாக இருக்கின்ற தீபமானது பௌதிகமான விஷயங்களே மட்டுமே ப்ரகாசப்படுத்துகின்றதோ அதுபோல் ப்ரத்யக்ஷாதிகளும் பௌதிக விஷயங்களைத்தான் ப்ரகாசப்படுத்துகின்றது என்பதால், அவைகளுக்கு பௌதிக விஷயத்வம்தான் சொல்லமுடியும் என்று மற்றுமொரு அனுமானத்தினுலும் அறியலாம்.

**10. அவதாரிகை :**

எது பௌதிகமோ அது பௌதிக விஷயமாகத்தான் இருக்கவேண்டுமென்று வ்யாப்தி சொல்வது சரியல்ல. அப்ரயோஜகத்வாத். அதாவது பௌதிகமான ப்ரத்ய க்ஷாதிகள் பௌதிகமான ஜட வஸ்துக்களைத்தான் ப்ராகசப்படுத்த முடியும் என்று பௌதிகம் என்பதை வ்யாப்தியாகக் கொண்டு அனுமானம் செய்வது பொருந்தாது. ஏனெனில் பௌதிகமானதீபம்; பௌதிகமான ரூபமுள்ள வஸ்துக்களை ப்ரகாசப்படுத்துகின்றது. ஆனுல் பௌதிகமான ரூபம் என்பதுபௌதிகமான தீபத்தைப் ப்ரகாசப்படுத்துவதில்லேயே? என்ருல், வேறுவிதமான வ்யாப்தியைக் கொண்டு இந்த விஷயம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

यद्व्यञ्जकं किमपि लौकिकमीक्षितं त द्व्यङ्ग्येन तुल्यमवलोकितमत्र जात्या ।
दीपः प्रकाशकतया विदितो हि लोके रूपेण तैजसतया सदृशः प्रसिद्धिः

ச்லோகார்த்தம் : லோகத்தில் ப்ரகாசப்படுத்தப்படுகின்ற பொருள்கள்எல்லாம், ப்ரகாசப்படுத்துகின்ற பொருளுக்கு ஸஜாதீயமாகவே இருக்கின்றது. லோகத்தில் ப்ரகாசப்படுத்துகின்ற தீபம் தைஜஸம். தைஜஸமான இந்த தீபம், தைஜஸமான ரூபம் என்பதற்கு ஸஜாதீயமாகவே இருக்கின்றதென்பது ப்ரசித்தம்.

வ்யாக்யானம் : எந்த வஸ்து பௌதிகமாகவும் ப்ரகசாப்படுத்தக்கூடிய தன்மையுடையதாகவும் இருக்கின்றதோ அது பௌதிக விஷயத்தையே ப்ரகாசப்படுத்தும் என்று சொல்லலாம். ரூபம் என்பது பௌதிகமாகவும் வ்யஞ்சகமாகவும் இருக்கின்றதால் பௌதிகமான வஸ்துவை ப்ரகாசப்படுத்துகின்றது. தீபம் என்பதும் தைஜஸம்; ரூபம் என்பதும் தைஜஸம். இரண்டும் தைஜஸம் என்பதில் ஸமானமாகவே இருக்கின்றது என்பது லோகப்ரசித்தம். சாங்க்யர்களாலும் வேதாந்திகளாலும் ரூபம் என்பது தைஜஸம் என்றே ஒப்புக்கொள்ளப்படுகிறது இரண்டும் ஸஜாதீயம் என்பதில் ஸந்தேகத்திற்கே இடமில்லே. வேதாந்த சித்தாந்தத்தில் வ்யபிசாரத்திற்கே இடமில்லே.

**11.** அவதாரிகை :

எப்படி இருந்தபோதிலும் ஸஜாதீயமான வஸ்துவைத்தான் ப்ரதயக்ஷாதிகள் ப்ரகாசப்படுத்தமுடியும் என்று ஸஜாதீயத்தை காரணமாகச்சொல்லப்படுவதை ஒப்புக்கொள்ளமுடியாது. ஏனெனில் 'மனஸைவ அனுத்ரஷ்ட்டவ்ய:' என்று மனஸினுல் தான் ஆத்மா அறியப்படவேண்டும் என்று சாஸ்திரம் தெரிவிக்கின்றது. ஆத்மா த்ரவ்யம் என்று நையாயிகனுல் சொல்லப்படுகிறது. அதனுல் வ்யஞ்சகமான மனஸ் என்பதும் வ்யங்க்யமான ஆத்மா என்பதும் விஜாதீயமாக இருக்கின்றதால் மனஸினுல் ஆத்மா ப்ராகசப்படுத்தப்படுவதாக எப்படிச் சொல்லமுடியும்?

ச்லோகம் :

बुद्धिः समस्तविषयावगमे प्रवृत्ता साऽपि प्रकाश्यविषयेण समानजातिः ।
बुद्धिश्च भौतिकतया श्रुतिषु प्रसिद्धा तेनास्तु साऽपि खलु भौतिकगोचरैव

ச்லோகார்த்தம் : புத்தி என்பதால் ஸர்வ விஷயங்களும் அறியப்படுகிறது. இந்த புத்தி என்பது பௌதிகமானதால், அதனுல் ப்ரகாசப்படுத்தப்படும் பௌதிக விஷயங்களுக்கு ஸமானமாகவே இருக்கின்றது. புத்தி என்பது பௌதிகம் என்ற விஷயம் ச்ருதிவாக்யத்திலுல் ப்ரசித்தமாகவே இருக்கிறது.

வ்யாக்யானம் (பூர்வ) : ஸஜாதீயமான விஷயத்தையே ப்ரதயக்ஷாதிகள் ப்ரகாசப்படுத்த முடியும் என்ற வ்யாப்திக்கு வ்யபிசாரம் ஸம்பவிக்கின்றது. அதனுல் இந்த விஷயம் ஒத்துக்கொள்ளக் கூடியதல்ல.

சித்தா : சொல்லப்பட்ட விஷயத்தில் வ்யபிசாரம் ஏதும் ஸம்பவிக்க முடியாது. புத்தி என்ருலே அந்த:கரணம் என்றுதான் அர்த்தம். இந்த புத்தியானது ரூபாதிகளை க்ரஹிக்கின்றபோது சக்ஷுஸ் முதலான கரணங்களைக் கொண்டே க்ரஹிக்கின்றது. ஆகவே பாஹ்ய விஷயங்கள் எல்லாமே, அந்தந்த கரணங்களை ஸஹகாரியாகக் கொண்டே புத்தியானது விஷயங்களை ப்ரகாசப்படுத்துகின்றது இவ்விதம் எந்த விஷயத்தை புத்தி ப்ரகாசப்படுத்துகின்றதோ அதற்கு ஸமான ஜாதீயமாகவே புத்தி இருக்கின்றது என்பதை ச்ருதிவாக்யமும் தெரிவிக்கின்றது. அதாவது "அன்னமய ஸௌம்யமன;, ஆபோமய; ப்ராண; தேஜோமயீவாக்" என்று ச்ருதி வாக்யமே தெரிவிக்கின்றது. அன்னம் என்பது ப்ருதிவிகார்யம். அந்த ப்ருதிவிகார்யமே புத்தி என்று இந்த வாக்யம் தெரிவிக்கின்றது. ஆகையால் பௌதிக விஷயங்களைத்தான்புத்தி ப்ரகாசப்படுத்துகின்றதேயன்றி ஸ்வப்ரகாசமான ஆத்மாவையோ சுகத்தையோ புத்தி ப்ரகாசப்படுத்துவதில்லை. எது பௌதிகமோ, ப்ரகாச்யமோ அதுவே புத்தியினுல் ப்ரகாசப் படுத்தப்படுகிறது. ஆத்மா என்பது பௌதிகமாக இல்லை, ப்ரகாச்யமாகவும் இல்லை. ஸர்வத்திற்கும் ப்ரகாசகம் ஆத்மா. ஸ்வப்ரகாசஸ்வரூபமான ஆத்மாவை, (ஜடமான) புத்தி ப்ரகாசப்படுத்துவதாகச் சொல்வது சரியல்ல. ஆகவே புத்தி என்பதும் ப்ரகாச்யம். எதுப்ரகாச்யமோ அதுவே பௌதிகம் இதனுல் பௌதிகமான புத்தியினுல் ப்ரகாசப் படுத்தப்படுவதும் பௌதிகம் என்றே சித்திக்கின்றது. இதில் வ்யபிசாரம் ஏதுமில்லை.

**12. அவதாரிகை :**

ஜட வஸ்துவில் அஞ்ஞாதத்வம் என்பது ஸம்பவிக்க முடியாது. ப்ரத்யக்ஷாதிகளும் ஸவிஸேஷமான அனுத்ம வஸ்துவைத்தான் க்ரஹிக்குமேயன்றி நிர்விசேஷமான ஆத்மவஸ்துவை க்ரஹிக்காது என்று தெரிவித்து இந்த விஷயம் ஒரு முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

एवं प्रमाणमखिलं बहिरर्थनिष्ठं वेदान्तवाक्यमपहाय यथोक्तहेतोः ।
न प्रत्यगात्मविषयं श्रुतिरप्युवाच स्पष्टं पराञ्चिवचसाऽर्थमिमं यथोक्तम्

**ச்லோகார்த்தம் :** முன்னுல் சொல்லப்பட்ட காரணங்களினுல் வேதாந்த வாக்யங்களைத் தவிர, மற்றுமுள்ள எல்லா ப்ரமாணங்களும் பாஹ்ய விஷயங்களை ப்ரகாசப்படுத்தக் கூடியதாகவே இருக்கின்றதேயன்றி ப்ரத்யகாத்ம விஷயமாகஇல்லை. இந்த விஷயம் பற்றி 'பராஞ்சிகானி' என்ற ச்ருதிவாக்யம் ஸ்பஷ்ட்டமாகவே தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** வேதாந்தம் என்ற ப்ரமாணத்தையன்றி மற்ற எல்லா ப்ரமாணங்களும் பராக் விஷயந்தான் என்று 'பராஞ்சிகானி' என்ற ச்ருதி வாக்யமேதெரிவிக்கின்றது. அதனுல் பௌதிகமான ப்ரத்யக்ஷாதிகள் அபௌதிகமான ஆத்ம வஸ்துவில் ப்ரவ்ருத்திக்கமுடியாது. வேதாந்தம் ஒன்றே அபௌதிகமான ஆத்ம வஸ்துவை தெரிவிப்பதில் ப்ரமாணமாகின்றது என்பதால் ப்ரத்யக்ஷாதிகளால் வேதாந்த விஷயம் பாதிக்கப்படமுடியாது.

**13. அவதாரிகை :**

'பராஞ்சிகானி' என்றச்ருதிவாக்யம் என்ன தெரிவிக்கின்றது என்ருல்,

**ச்லோகம் :**

पराञ्चि खानि व्यतृणत्स्वयंभू स्तस्मात्पराङ्पश्यति नान्तरात्मन् ।
कश्चिद्धीरः प्रत्यगात्मानमैक्षदावृत्तचक्षुरमृतत्वमिच्छन्

**ச்லோகார்த்தம் :** ஈச்வரன், இந்த்ரியங்களை பஹிர்முகமாக சிருஷ்டித்திருக்கின்றதால் அவைகள் ஹிம்ஸைக்குகாரணமான (துக்கம்) பாஹ்ய விஷயங்களையே க்ரஹிக்கின்றது அவைகள் ப்ரத்யகாத்மாவை க்ரஹிப்பதில்லை. மோக்ஷத்தை விரும்புகின்ற எவனே ஒருதீரன் (விவேகி) இந்த்ரிய நிக்ரஹம் செய்து ப்ரத்யகாத்மாவை அறிந்து அம்ருதத்வத்தை அடைகின்ருன்.

**வ்யாக்யானம் :** 'பராஞ்சிகானி' என்ற ச்ருதிவாக்யம், ப்ரஹ்மா என்பவர், இந்த்ரியங்களை பராக்விஷயங்களை ப்ரகாசப்படுத்துவதற்காகவே சிருஷ்டித்திருக்கின்ருர். இவ்விதம் சிருஷ்டித்திருக்கிருர் என்று சொல்வதற்கு பதிலாக 'வ்யதிரிணத் - ஸ்வயம் பூ:' என்று, ச்ருதி வாக்யம் ஹிம்ஸிக்கிறார் என்று தெரிவிக்கின்றது. இதன்மூலம் இந்த்ரிய விஷயங்கள் அனர்த்தகரம் என்பதை தெரிவிக்கப்படுகிறது. ஆகவே, ப்ரத்யக்ஷாதிகளால் அனுத்மாவான பராக் விஷயங்களையே எல்லோரும் அறிகின்றார்களே யன்றி ப்ரத்யகாத்மாவை அறியவில்லை. இந்த்ரியங்களுடன் மனஸ் என்பதும் பராக்

விஷயமாகவே இருக்கின்றது. மனுஷ்யர்களில் ஆயிரத்தில் ஒருவன் மோக்ஷத்தை அடைய விரும்பி, இந்த்ரியங்களைக்கட்டுப்படுத்தி ப்ரத்யகாத்மாவை அறிந்து அம்ருதத்வத்தை அடைகின்ருன். ஆகையால் அதீந்த்ரிய விஷயமான ஆத்மாவை இந்த்ரியங்களால் க்ரஹிக்கமுடியாது என்பதால் எந்தவ்யாப்தியைக்கொண்டும் ப்ரத்யக்ஷாதிகள் ஆத்மாவை அறிகிறது என்று சொல்வதற்கேமுடியாது.

**14.** அவதாரிகை :

ப்ரத்யக்ஷாதிகள் என்பதெல்லாம் எவ்விதம் பௌதிகமோ அதுபோல் மஹாவாக்யம் என்பதும் சப்த ப்ரமாணமாக இருப்பதால் அதுவும் பௌதிகம் என்றுதானே சொல்ல வேண்டும்? அதனுல் அதுவும் அனுத்ம விஷயகம் என்றே சொல்லவேண்டும்.

ச்லோகம் :

यत्कर्मभावमनपास्य निजप्रमेये संवित्तिसाधनतया जगति प्रसिद्धम् ।
मानं जडार्थविषयं तदिहाभ्युपेयं न प्रत्यगात्मविषयं कथितोपपत्तेः

ச்லோகார்த்தம் : சைதன்யத்திற்கு விஷயமாக இருக்கின்ற தன்மை என்பதை விடாமல், எந்த ப்ரமாணம் தன் விஷயத்தின் (ப்ரமேயமான) ஞானம் ஏற்பட ஸாதகமாக இருக்கின்றதோ அந்த ப்ரமாணம் ஜட விஷயகம் என்றே ஒத்துக்கொள்ளப்பட வேண்டும். முன்னுல் சொல்லப்பட்ட யுத்திகளினுலேயே அந்த ப்ரமாணம் ப்ரத்யகாத்ம விஷயமாக இருக்கமுடியாது.

வ்யாக்யானம் : லோகத்திலுள்ள ஜடவஸ்துக்களை ப்ரகாசப்படுத்துகின்ற ப்ரமாணங்கள் எல்லாமே, அதன் விஷயங்களுக்கு ப்ரகாசத்தைக் கொடுத்து அவைகளை ப்ரகாசப்படுத்துகின்றது. இப்பேர்பட்ட ப்ரமாணங்கள்தான் வ்யங்க்யமான வஸ்துவிற்கு ஸஜாதீயமாக இருக்கின்றது. ஒன்றுக்கொன்று உபகாரக உபகார்யமாக இருக்கின்றது என்பதாலேயே ஸஜாதீயம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம்ஜடவிஷயகமான ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் போல ஆத்மவிஷயகமான ப்ரமாணம் என்பது ஆத்மாவிற்கு (சைதன்ய) ப்ரகாசத்தைக் கொடுத்து ப்ரகாசிக்கச் செய்யவில்லை.

பூர்வ : வேதாந்த ப்ரமாணம் என்பதும் அனுத்ம விஷயத்தையே ப்ரகாசப்படுத்துகின்றது. ஏனெனில் அதுவும் பௌதிகமாக இருப்பதால், சக்ஷுராதிகள் போல என்று அனுமானத்தினுல் சாதிக்கின்றேன்.

சித்தா : இந்த அனுமானத்தில் ஸ்வவிஷயக ப்ரகாசத்வம் என்ற உபாதி இருக்கின்றதால், அனுமானம் தோஷம் உள்ளதாக இருக்கின்றது. அதாவது, எந்த ப்ரமாணங்கள் அனுத்ம விஷயகமாக இருக்கின்றதோ அந்த ப்ரமாணங்கள் எல்லாம் (பௌதிகமான) அதன் விஷயத்தை ப்ரகாசப்படுத்துகின்றது. (ஸாத்யவ்யாபகத்வம்) ஆனுல் வேதாந்தம் என்ற ப்ரமாணம் பௌதிகமாக இருந்தபோதிலும், அதன் விஷயமான ஆத்மாவை (அந்த ப்ரமாணம்) ப்ரகாசப்படுத்துவதில்லை. (ஸாதன அவ்யாபகத்வம்) ஏனெனில் ஆத்மா ஸ்வயம்ப்ரகாசமாக இருக்கின்றதால், வேதாந்தம் என்ற ப்ரமாணம் ஆத்ம ஆவாரகமான அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்றதேயன்றி ஆத்மாவை ப்ரகாசப்படுத்தவில்லை. இந்தவிதம், சொல்லப்பட்ட அனுமானத்தில்,

ஹேதுவில் ஸோபாதிகத்வ்ம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது. மேலும் வேதாந்தம் என்ற ப்ரமாணம் சித்விவர்த்தம் (சித் ஸ்வரூபத்தில் தோன்றுகிறது) என்று சொல்லப்படுவதால் வேதாந்தம் என்பது பௌதிகம் என்று சொல்லமுடியாது.

ஆகவே, இவ்விதம் செய்யப்படும் அனுமானத்தின் ஹேதுவில் ஸ்வரூபாசித்தி (ஸ்வரூப அசித்தி) என்ற மற்றுமொரு தோஷமும் ஸம்பவிக்கின்றது. ஆகவே, ப்ரத்யக்ஷாதிகள் அனுத்ம விஷயமேயன்றி ஆத்ம விஷயகம் அல்ல என்று சொல்லப்படுவதில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை.

**15.** அவதாரிகை :

ஆத்மஸ்வரூபம் 'தத்வமஸி' முதலான மஹாவாக்யங்களினுல் ப்ரகாசப்படுத்தப் படவில்லே என்ருல் வாக்யம் ப்ரமாணம் என்று எப்படிச் சொல்ல முடியும்? எது அதன் விஷயத்தை ப்ரகாசப்படுத்துகின்றதோ அதைத்தானே அந்த விஷயத்தில் ப்ரமாணம் என்று சொல்லலாம்?

ச்லோகம் :

यत्तु प्रमाणमवधीर्य निजप्रमेये कर्मत्वमर्थमवबोधयितुं प्रवृत्तम् ।
तत्प्रत्यगात्मविषयं भवितुं क्षमेत तत्त्वमादिवचनं न ततोऽन्यदस्ति

ச்லோகார்த்தம் : எந்த ப்ரமாணம் தனக்கு ப்ரமேய விஷயமாக இருக்கின்ற ஆத்மாவை (தனக்கு விஷயமாக ஆகாமல்) அவிஷயமாகவே தெரிவிக்கின்றதோ அந்த ப்ரமாணமே ப்ரத்யகாத்ம விஷயமாக இருக்கமுடியும். இப்பேர்ப்பட்ட ப்ராமாண்யம் தத்வமஸிமுதலான வாக்யங்களுக்கே சொல்லமுடியும். வேறு எந்த ப்ராமாணத்திற்கும் இந்த ஸாமர்த்யம் கிடையாது.

வ்யாக்யானம் : விஷயத்தை ப்ரகாசப்படுத்தக் கூடிய தன்மை இல்லாமலேயே (கர்மத்வம் என்பதே இல்லாமல்) விஷயத்தை ப்ரகாசிக்கச் செய்யக்கூடிய தன்மை, மஹாவாக்யங்களுக்கே இருக்கின்றது. ப்ரத்யக்ஷாதிகளுக்கு இந்த தன்மை கிடையாது என்பதால் ப்ரத்யக்ஷாதிகள் ஆத்மவிஷயத்தில் ப்ரமாணமாக ஆகமுடியாது.

பூர்வ : விஷயத்தை ப்ரகாசப்படுத்துவது எதுவோ அதையே ப்ரமாணம் என்று சொல்லவேண்டும். அதனுல் ஆத்ம வஸ்துவை ப்ரகாசப்படுத்துகின்ற தத்வம ஸ்யாதிவாக்யங்களும், ப்ரத்யக்ஷாதிகளைப்போலவே விஷயங்களை ப்ரகாசப்படுத்து கின்றதால் ப்ரமாணம் என்றே சொல்லவேண்டும். அதைத் தவிர, ப்ரமாணமாக இருக்கின்ற ப்ரத்யக்ஷாதிகள் எப்படி ஜடவஸ்துக்களை மட்டும் ப்ரகாசிக்கச் செய்கின்றதோ அதுபோல் வேதாந்த வாக்யங்களும் ப்ரமாணமாக இருக்கின்றதால் அவைகளும் ஜடவஸ்துக்களை ப்ரகாசப்படுத்துகின்றது என்று சொல்லவேண்டுமேயன்றி ஆத்மாவை ப்ரகாசப்படுத்துவதாகச் சொல்லமுடியாது.

சித்தா : எந்த ப்ரமாணம் வஸ்துக்களை ப்ரகாசிக்கச் செய்து அதன்பிறகு வஸ்து விஷயமான ஞானத்தை உண்டு பண்ணுகின்றதோ அந்த ப்ரமாணமே ஜடவஸ்து விஷயகமான ப்ரமாணம் என்று சொல்லவேண்டும். எந்த ப்ரமாணம் விஷய ஞானத்தை மட்டும் உண்டு பண்ணுகின்றதோ அந்த ப்ரமாணம் ஜட வஸ்து விஷயம் என்று

சொல்லமுடியாது. ஜடவஸ்துக்களில் ஸ்வயமே ப்ரகாசிக்கக் கூடிய தன்மை என்பது ஸ்வரூபத: கிடையாது. அதனுல் அந்த வஸ்துவிற்குத்தான் ப்ரமாண மூலமாக ப்ரகாசம் ஏற்படுகிறது என்ற விஷயம், இங்கு சூசகமாக தெரிவிக்கப்படுகிறது.

வஸ்து ஸ்வரூபத்தில் இல்லாமல், வேருென்றின் மூலமாக ப்ரகாசம் ஏற்படக் கூடியதன்மையில் இல்லாமல் எந்த ப்ரமாணம் அதன் விஷய ஞானத்தை உண்டு பண்ணுகின்றதோ அதுவே ஆத்ம விஷயத்தில் ப்ரமாணமாக ஆகிறது அதுமட்டுமல்ல, அவித்யா நிவர்த்திக்கு காரணமாக இருக்கின்றது எதுவோ அதுவே ப்ரமாணம் என்று சொல்லவேண்டும்.

ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் விஷயத்தை ப்ரகாசிக்கும்படிச்செய்து, அத்துடன் ஜட விஷயகமான அஞ்ஞானத்தையும் நிவர்த்திக்கின்றது. ஸ்வயம் ப்ரகாசமான ஆத்மாவிற்கு ப்ரமாணத்தினுல் ப்ரகாசம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. ஸ்வயம் ப்ரகாச ஸ்வரூபமானதால் ப்ரமாணத்தினுல் ப்ரகாசப்படுத்தவேண்டிய அவச்யமும் இல்லை. அதனுல் வாக்யம் அஞ்ஞான நிவர்த்தகம் என்பதால் ஆத்ம விஷயத்தில் வாக்யம் ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது.

பூர்வ : அவித்யா நிவர்த்தி என்பதனுலேயே வாக்யம் ப்ரமாணம் என்று சொல்லப்படுமானுல், ப்ரதயக்ஷாதிகளையும் ஆத்ம விஷயத்தில் ப்ரமாணம் என்று சொல்லலாமே ?

சித்தா : ஆத்மா என்பது, சக்ஷுஸ் முதலான இந்த்ரியங்களினுலோ, மனஸ் என்பதனுலோ அறியக்கூடியதல்லவென்றும், வேதம் ஒன்றே ஆத்ம விஷயத்தில் ப்ரமாணமாக ஆகமுடியும் என்றும் வேதமே தெரிவிக்கின்றது. அதுமட்டுமல்ல. அஞ்ஞாதார்த்த போதகத்வம் என்ற ப்ரமாண லக்ஷணம் உபநிஷத் என்ற ப்ரமாணம் ஒன்றுக்கேஸம்பவிக்க முடியும் என்ற விசேஷணமும் இருக்கின்றதால் ப்ரத்யக்ஷாதிகளுக்கு ஆத்ம விஷயக ப்ரமாண்யம் சொல்லமுடியாது.

**16.** அவதாரிகை :

ப்ரதயக்ஷாதிகள் ஜடவஸ்துக்களை மட்டுமே ப்ரகாசப்படுத்தமுடியும். அதுமட்டுமல்ல. ஜடவஸ்துக்களை அஞ்ஞாதார்த்தம் என்றும் சொல்லமுடியாது. ஏனெனில்,

ச்லோகம் :

नाज्ञातताक्गतिरस्ति जडेषु पूर्वं मेयेषु तत्स्फुरणकारणवर्जितत्वात् ।
मानोदयात्र हि पुरा किमपीह मानं नापि प्रमेयबलतो जडता हि तस्य

ச்லோகார்த்தம் : ஜடவஸ்து ப்ரமேயம் என்று சொல்லப்படுமானுல் அதில் அஞ்ஞாததை என்பது இருப்பதாகச் சொல்லமுடியாது. (ஏனெனில் அஞ்ஞாததை என்பதை தெரிவிக்கக் கூடிய காரணம் ஏதுமில்லை) ஏனெனில் அந்த வஸ்துவில், ப்ரமாண வ்யாபாரத்திற்கு முன் அஞ்ஞாததை இருக்கிறது என்று தெரிவிக்கக் கூடிய ப்ரமாணமும் இல்லை, ஜடவஸ்துவாக இருப்பதால் தன்ஸாமர்த்யத்தினுல் தெரிவிக்கின்றது என்றும் சொல்லமுடியாது.

வ்யாக்யானம் : முன்னுல் சொல்லப்பட்டபடி ஆத்ம விஷயத்தில் ப்ரத்யக்ஷாதிகள் ப்ரமாணமாக ஆகமுடியாது என்பது சித்தம் செய்யப்பட்டது. ஆனுல் அஞ்ஞாதமான அர்த்தத்தை எது போதிக்கின்றதோ அதுவே ப்ரமாணம் என்று சொல்வதற்கு என்ன காரணம்? ப்ரத்யக்ஷாதிகளுக்கு அஞ்ஞாதார்த்த போதகத்வம் ஸம்பவிக்கமுடியாது என்றும் எப்படிச் சொல்லப்படுகிறது? என்ருல், அஞ்ஞாதத்வம் என்பது ப்ரத்யகாத் மாவிற்குத்தான் ஸம்பவிக்குமேயன்றி ஜடத்திற்கு ஸம்பவிக்க முடியாது. ஜடவஸ்துவில் அஞ்ஞாதத்வம் இருக்கின்றதென்று தெரிவிக்கக்கூடிய ப்ரமாணம் ஏதுமில்லை.

ஜடவஸ்துவில் அஞ்ஞாததை இருக்கின்றதென்று ப்ரமாணத்தினுல் அறியப்படுகிறதா? அல்லது ஸ்வயமே அறியப்படுகிறதா?

ஜடமான ஒரு வஸ்து, ஒரு ப்ரமாணத்தினுல் அறியப்படுவதற்கு முன்பு வேறு ஒருப்ரமாணத்தினுல் அதில் அஞ்ஞாததை இருப்பதாக அறியப்படுகிறதா? அல்லது ஒரு ப்ரமாணத்தினுல் அந்த வஸ்து அறியப்பட்டபிறகு அதில் அஞ்ஞாததை இருப்பதாக அறியப்படுகிறதா?

இந்தவிதம் விசாரிக்கப்படுமானுல், எந்த விதமாகவும் அஞ்ஞாததை என்பது அந்த வஸ்துவில் இருக்கிறது என்று அறியப்படுவதாக சொல்லமுடியாது. ஏனெனில் ஒரு ப்ரமாணத்தினுல் அந்த வஸ்து இருக்கிறது என்று அறியப்படுவதற்கு முன் வேறு ஒரு ப்ரமாணத்தினுல் அஞ்ஞாததை இருக்கிறதென்று அறியப்படுவதாக தெரிவிக்கக் கூடிய ப்ரமாணம் எதுவுமே கிடையாது.

அதற்காக, ப்ரமாண ப்ரவர்த்தியினுல் வஸ்து அறியப்படுவதால்அதில் அஞ்ஞாததை இருக்கிறதென்று சொல்வதற்கே முடியாது. ஏனெனில் அஞ்ஞாதத்வம் என்பதுப்ரமாண விரோதி, அதனுல் ப்ரமாணத்தினுலோ, ப்ரமாணப்ரவர்த்திக்கு பின்னாலோ, அஞ்ஞாததை இருப்பதாக அறியப்படமுடியாது. ப்ரமாண ப்ரவர்த்திக்குமுன் வஸ்துவே அறியப்பட முடியாதாகையால் அதிலுள்ள அஞ்ஞாததை அறியப்படுவதாகச் சொல்வது பொருந்தாது. அதற்காக அஞ்ஞாதத்வம் ஸ்வயமே ப்ரகாசிக்கிறது என்று சொல்லலாமே என்ருல், ஜட வஸ்துவில் ஸ்வயம் ப்ரகாசத்வம் என்பது ஸம்பவிக்க முடியாது.

**17.** அவதாரிகை :

வஸ்து ஜடமாக இருந்தபோதிலும், அஞ்ஞாதத்வம் என்பது ஸ்வயமே அறியப்படுகிறது என்று சொல்லலாமே? என்ருல்,

ச்லோகம் :

नाज्ञाततावगतये स्वयमेव बाह्यं मेयं समर्थमवबोधविलक्षणत्वात् ।
नापि प्रमाणमवबोधकमस्ति किंचिन्मानोदयात्पुर इति स्फुटमभ्युपेयम्

ச்லோகார்த்தம் : பாஹ்யவஸ்து என்ற ப்ரமேயம் ஜடமானதால் தன்னிடம் அஞ்ஞாததை இருக்கின்றதென்பதை ஸ்வயமாகவும் தெரிவிக்கமுடியாது. ப்ரமாணவ்யாபாரத்திற்கு முன்பு இது அஞ்ஞாதம் என்று தெரிவிக்கக் கூடிய ப்ரமாணம் என்பதும் ஏதுமில்லை என்ற விஷயமும் அறிந்து கொள்ளவேண்டும்.

வ்யாக்யானம் : அறியப்படும் வஸ்துக்கள் எல்லாமே ஜடமாக இருக்கின்றது. அதனுல் அவைகள் எதையும் அறிவிக்க முடியாது. ப்ரமாணம் அந்த வஸ்துவைப் ப்ரகாசப்படுத்த ப்ரவர்த்திக்கின்றபோது அதில் அஞ்ஞாததை இருக்கமுடியாது. அதனுல் ப்ரமாணத்தினுலும் ஜடவஸ்துவில் அஞ்ஞாததை இருக்கின்றதென்று சித்திக்கமுடியாது. அதேபோல் ப்ரதயக்ஷப்ரமாணம் என்ற சக்ஷுராதி கரணங்களினுலும், மனஸ் என்ற அந்த:கரணத்தினுலும் அஞ்ஞாததை என்பது அறியப்படுவதாகச் சொல்லமுடியாது. ஏனெனில், சுஷுப்தியில்மனஸ் முதலானவைகள் ஒடுங்கி இருக்கின்றபோதும் அஞ்ஞானம் இருக்கின்றதென்பது அறியப்படுகிறது. இவ்விதம் ப்ரத்யக்ஷத்தினுல் அறியப்படவில்லையென்றாலும் அனுமானத்தினுல் அறியப்படலாமே என்ருல், அனுமானம் என்பது பரோக்ஷவஸ்து ஞானத்தைத்தான் உண்டுபண்ணுகின்றதேயன்றி அபரோக்ஷ ஞானத்தை உண்டு பண்ணமுடியாது.

ஆகையால், கடபடாதி ஜடவஸ்து விஷய அவச்சின்ன சைதன்யம்தான் ஆவ்ருதம் என்று சொல்லப்படவேண்டுமேயன்றி ஜடவஸ்துக்கள் அஞ்ஞாதமாக இருக்கிறது என்று சொல்வதற்கு எந்தவிதமான ப்ரமாணமும் கிடையாது.

**18.** அவதாரிகை :

எந்த வஸ்து ஒரு ப்ரமாணத்தினுல் முன்னுல் அறியப்படவில்லையோ, அந்த வஸ்து ஒரு ப்ரமாணத்தினுல் அறியப்படுகின்றபோது, இவ்விதம் அறியப்படுவதற்கு முன்பு அந்த வஸ்து அஞ்ஞாதமாக இருந்தது என்பதை அன்யதா அனுபத்தியினுல் (அர்த்தாபத்தியினுல்) அறிந்து கொள்ளலாமே? அதனுல் அஞ்ஞாதத்வம் என்பது அறியப்படுகிறது என்றே சொல்லலாமே?

ச்லோகம் :

नाज्ञातताम‌नवगम्य पुरा प्रवेशा न्मानस्य किंचिदपि मानबलेन बोद्धुम् ।
शक्नोति कश्चिदपि मानबलेन बुद्धं किं वा स्वभाव इति निश्चयहेत्वभावात्

ச்லோகார்த்தம் : ப்ரமாண வ்யாபாரத்திற்கு முன்பு 'இது அஞ்ஞாதமாக இருக்கின்றது' என்று அறியாமல் 'ப்ரமாணத்தினுல் அறியப்பட்டது' என்று எவராலும் அறிந்து கொள்ளமுடியாது. ஏனெனில் ப்ரமாண வ்யாபாரத்தினுல் அறியப்படுகிறதா? அல்லது ஸ்வயமாகவே அறியப்படுகிறதா? என்று நிர்ணயம் செய்யமுடியாது.

வ்யாக்யானம் : எந்த விஷயமானுலும் அதை அறிவிக்கக்கூடிய ப்ரமாணம் அதில் ப்ரவர்த்திப்பதற்கு முன்பு இந்த வஸ்து அஞ்ஞாதமாக இருக்கிறது என்பதை அறியாமல், இதை அறியவேண்டுமென்ற ப்ரவர்த்தியே ஏற்படாது. அதனுல் ப்ரமாண ப்ரவர்த்திக்கு முன்பு அஞ்ஞாதத்வம் இருக்கின்றது என்று கல்ப்பிப்பது சரியல்ல.

**19.** அவதாரிகை :

இநத் விஷயம் ஒரு த்ருஷ்ட்டாந்தத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் : प्रक्षालनेन धवलं किमिदं बभूव किं वा पुराऽपि धवलं स्वयमेव वस्त्रम् ।
इत्येवमेव न विवेक्तुमलं कदाऽपि यो दृष्टवान्न मलिनं वसनं पुरस्तात्

ச்லோகார்த்தம் : முன்னால் ஒரு வஸ்திரம் (அழுக்காக) அசுத்தமாக இருந்தது என்று துவைப்பதற்குமுன் அறியப்படவில்லையென்றால், ஸ்வயமே அந்த வஸ்திரம் வெளுப்பாக இருந்ததா? அல்லது துவைக்கப்பட்டதால் வெளுப்பாக இருக்கிறதா? என்று ஒருபோதும் விவேசனம் செய்யமுடியாது.

வ்யாக்யானம் : வஸ்திரமானது துவைப்பதற்கு முன்பு வெளுப்பாக இருந்ததா? அல்லது அழுக்காக இருந்ததா? என்று அறியப்படவில்லையென்றால், அந்த வஸ்து ஸ்வயமே வெளுப்பாக இருக்கிறதா? அல்லது துவைத்த பிறகு வெளுப்பாக இருக்கிறதா? என்று எப்படி விவேசனம் செய்து சொல்லமுடியும்? ஆகவே அஞ்ஞாததை என்பது ப்ரமாணத்தினால் அறியப்பட்டாலும் சரி, அல்லது ஸ்வயமே அறியப்பட்டாலும்சரி, இப்போது அறியப்படுவதனாலேயே, முன்னால் அறியப்படவில்லையென்பது கல்பிக்கப்படலாமே என்று சொல்வது பொருந்தாது.

**20.** அவதாரிகை :

இதேபோல் தார்ஷ்ட்டாந்தத்திலும்,

ச்லோகம் :

एवं पुराऽनधिगतं यदि नानुभूतं मानेन बोधितमिदं प्रतिभाति मेयम् ।
न स्वप्रकाशमिति शक्यमिदं विवेक्तुं केनापि नैव तदवस्थतयैव दृष्टेः

ச்லோகார்த்தம் : இதேபோல் அஞ்ஞாததை என்பது முன்னால் இருக்கிறது என்று அறியப்படவில்லையென்றால், ப்ரமேயமான ஒரு வஸ்துப்ரமாணத்தினால் அறியப்படுகிறதா? அல்லது ஸ்வயம் ப்ரகாசமாகவே இருக்கிறதா என்று எவராலும் விவேசனம் செய்ய முடியாது. ஏனெனில் அந்த வஸ்துஞாத ரூபமாகவே அறியப்படுகிறது.

வ்யாக்யானம் : ஒரு வஸ்து ப்ரமாணத்தினால்அறியப்படுமானால் இந்த வஸ்துஸ்வயமே ப்ரகாசகமா? அல்லது ப்ரமாணத்தினால் தான் ப்ரகாசிக்கின்றதா? என்று எப்படி அறிந்து கொள்ளமுடியும்? அந்த வஸ்து இப்போது ப்ரகாசிக்கிறது என்று சொல்லலாமேயன்றி இதற்கு முன் எப்படி இருந்தது என்று சொல்வதற்கு முடியாது. முன்னால் அறியப்படாமல் இருந்தது என்று தெரிந்திருந்தால்தான் அதில் அஞ்ஞாததை இருந்தது என்றும், இப்போது அஞ்ஞாததை நிவர்த்திக்கப்பட்டது என்றும் சொல்லலாம். அதனால் இப்போது ஏற்படும் ப்ரமாணப்ராப்தியைக் கொண்டு இது ஸ்வப்ரகாசமல்ல என்று தீர்மானிக்கமுடியாது.

**21.** அவதாரிகை :

மற்ற மதஸ்த்தர்களின் அபிப்ருயத்தின்படி கடம் முதலான ஜடவஸ்துக்களுக்கு அஞ்ஞாதத்வம் இருக்கின்றதாக அறியப்படுவதாகச் சொல்லமுடியாது என்றாலும் எங்களுடைய கொள்கையை அனுசரித்து, அஞ்ஞாததை என்பது சாக்ஷியினால் அறியப்படுவதாகச் சொல்லலாம். அதனால் சக்ஷுராதிகளும் ஜடவஸ்துக்களை ப்ரகாசப் படுத்துகின்ற விஷயத்தில் ப்ரமாணம் என்று சொல்லலாமே?

ச்லோகம் :

अज्ञातमर्थमवबोधयितुं न शक्त मेवं प्रमाणमखिलं जडवस्तुनिष्ठम् ।
किं त्वप्रबुद्धपुरुषं व्यवहारकाले संश्रित्य संजनयति व्यवहारमात्रम्

ச்லோகார்த்தம் : ஆகவே, இவ்விதம் ஜடவஸ்து விஷயகமான ஸர்வப்ரமாணங்களும் அஞ்ஞாதமான வஸ்துவை தெரிவிப்பதற்கு முடியாது. ஆனுல் இந்த ப்ரமாணங்கள் அஞ்ஞானியை ஆச்ரயித்து வ்யவஹாரகாலத்தில், வ்யவஹாரங்களை உண்டுபண்ணுகின்றது.

வ்யாக்யானம் (பூர்வ) : கடபடாதி ஜடவஸ்துக்கள் ப்ரத்யக்ஷாதிப்ரமாணங்களினுல் ப்ரகாசப்படுத்தப்படுகிறது என்பதை ஒத்துக்கொள்ளாவிடில் அவைகளை ப்ராந்தி ஞானமென்று சொல்ல நேரிடுமே?

சித்தா : ப்ரத்யக்ஷாதிகளால் ஜடமான வஸ்துக்கள் ப்ரகாசப்படுத்தப்படவில்லை யென்றாலும், அவைகளை ப்ரகாசப்படுத்துகின்றதாக ஞானம் ஏற்படுகின்றது. இந்த ஞானம் ப்ராந்தி ஞானம் என்றே சொல்லவேண்டும். இவ்விதம் ஞானம் ஏற்படகாரணம் என்னவென்ருல், புருஷனிடம் இருக்கின்ற அஞ்ஞானம் என்ற தோஷமே காரணம். கடாதி விஷயங்களில் உள்ள கடாதி அவச்சின்ன சைதன்யம் ஆவரணத்துடன் இருக்கின்றதால் ப்ரமாணம் அந்த ஆவரணத்தை நீக்குகின்றபோது சைதன்யம் ப்ரகாசிக்கின்றது. இவ்விதம் ஏற்படும் சைதன்யப்ரகாசத்தையே, நாமரூபத்துடன் கூடிய கட படாதி ஜடவஸ்துக்கள் ப்ரகாசிக்கின்றதாக விவகாரம் செய்யப்படுகிறது. அதனுல் சைதன்யமே அஞ்ஞாதமாக இருக்கின்றது என்றும், ப்ரமாணத்தினுல் அஞ்ஞாததை நிவர்த்திக்கின்றதால் சைதன்யம் ஸ்வயமே ப்ரகாசிக்கின்றது என்றும் அதனுடன் கூட நாம ரூபாத்மகமான ஜடவஸ்துக்களும் ப்ரகாசிக்கின்றது என்றும் அறியவேண்டும். இவ்விதம் அஞ்ஞாதமான அர்த்தத்தைப்ரகாசப்படுத்துவது எதுவோ அதையே ப்ரமாணம் என்று சொல்ல வேண்டும். ப்ரத்யக்ஷாதிகளை ப்ரமாணம் என்றே சொல்லமுடியாது.

பூர்வ : கிளிஞ்சலில், வெள்ளி என்ற ப்ராந்திஞானம் ஏற்படுகிறது. ஆனுல் அதைகூர்ந்து கவனிக்கின்றபோது (விசாரிக்கின்றபோது) அது வெள்ளியாக இல்லாமல் கிளிஞ்சலாக மாறுகிறது. (விஸம்வாதம்) அதுபோல் கடபடாதி ஞானம் மாறுபடாததால் விஸம்வாதமில்லையென்றே சொல்லவேண்டும். அதனுல் அவைகளை ப்ரமாண ஜன்யஞானமென்றே சொல்ல வேண்டும். ப்ராந்தி ஞானம், ப்ரமாண ஜன்யஞானமில்லை. ஆகவே கடபடாதி ஞானம் என்பது ப்ராந்தி ஞானம் என்று எப்படிச் சொல்லமுடியும்?

சித்தா : கடபடாதி வஸ்து ஞானம் விஸம்வாதமா? இல்லையா? என்பதைக் கொண்டு அந்த வஸ்து மித்யையா? இல்லையா? என்று தீர்மானிக்கமுடியாது. ஒன்று விஸம்வாதம், மற்றொன்று விஸம்வாதமில்லை என்பதே இரண்டிற்கும் உள்ள வித்யாஸம். ஆனுல் இரண்டும் மித்யை என்பதில் வித்யாஸம் ஏதுமில்லை.

**22. அவதாரிகை :**

ப்ரபஞ்சத்திலுள்ள ஸர்வ வஸ்துக்களும் மித்யை என்று சொல்லப்படுமானல், லோகத்தில், கடம் என்று ஏற்படும் ஞானம் ப்ரமாணஜன்யமென்றும், கடம் ஸத்யமென்றும், கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி மித்யை என்றும், வெள்ளி என்பது ப்ராந்தி ஞானம் என்றும் விபாகம் செய்யப்படுகிறதே ? அதாவது ஸத்யத்வம், மித்யாத்வம், ப்ராந்தித்வம், ப்ரமாத்வம், பாத்யத்வம், பாதகத்வம் என்று எப்படி விபாகம் செய்து விவகாரம் செய்யப்படுகிறது ?

**ச்லோகம் :**

आबोधतः सकलमेव हि सत्यमिथ्या भ्रान्तिप्रमाणविनिवर्त्यनिवर्तकत्वम् ।
स्वप्नेपि दृष्टमिदमेवमिहापि जाग्रत्काले भवत्वखिलमापरमात्मबोधात्

**ச்லோகார்த்தம் :** ஸத்யம், மித்யை, ப்ரமை, ப்ரமம், லாகவம், தாட்யம் முதலான ஸர்வ விபாகங்களும் ஜாக்ரத் என்ற விழிப்புநிலே ஏற்படும் பர்யந்தம் ஸ்வப்னத்திலும் காணப்படுகிறது. அதேபோல் ஜாக்ரத் அவஸ்த்தையிலும் ப்ரஹ்மஞானம் ஏற்படும் பர்யந்தம் இந்த விபாகங்கள் இருக்கின்றதென்றே ஒத்துக்கொள்ளலாமே ?

**(பூர்வ) வ்யாக்யானம் :** ஜாக்ரத் அவஸ்தையில் ப்ரமாண ஜன்யமாக ஏற்படும் ஞானமும், தத்வத்தை அறிவிக்கவில்லே என்று சொல்லப்படுமானல் லோகத்தில் ஸம்யக்ஞானம் என்பதே இருக்கமுடியாது. ஆகவே, கடபடாதி ஞானமும் மித்யாஞானமென்று சொல்லப்படுமானல் லோக விவகாரம் என்பதே இன்னதென்று விபாகம் செய்யமுடியாது.

**சித்தா :** ஸ்வப்னகாலத்தில் சிலபதார்த்தங்கள் ஸத்யமென்றும் சில பதார்த்தங்கள்மித்யை என்றும் விவகாரம் செய்யப்படுகிறது. ஆனல் ஸத்யமென்று அறியப்பட்ட வஸ்துவும் விழித்தவுடன் இருப்பதில்லே. ஆகவே, ஸ்வப்னபதார்த்தங்கள் நித்ரை என்ற அஞ்ஞானத்தினல் தோற்றுவிக்கப்படுகிறது என்பதுபோல்ஜாக்ரத் பதார்த்தங்களிலும் இது ஸத்யம், இது மித்யை என்று விபாகம் செய்து விவகாரம் செய்வதற்கு அஞ்ஞானமே காரணம். அதனல் ப்ரஹ்மபோதம் ஏற்படும்போது ஸ்ர்வ ப்ரபஞ்சமும் மித்யை என்றே அறியப்படுகிறது. ஆகவே, எல்லோருக்கும் அனுபவ சித்தமாக இருக்கின்ற ஸ்வப்ன விவகாரத்தைக் கொண்டே ஜாக்ரத் விவகாரத்திலும் ஸத்யம், மித்யை என்ற அவாந்தர பேதம் இருக்கின்றதால் விபாகம் செய்து விவகாரம் செய்யப்படுகிறது என்று அறிய வேண்டும். இவ்விதம் விசாரிக்கப்பட்டதிலிருந்து ப்ரபஞ்சம் மித்யை என்பது சித்தம்.

**23. அவதாரிகை :**

இதே விஷயம் மேலும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

स्वप्ने तप्तशिलाधिरोहणगता निःश्रेयसोपायता मिथ्या ब्राह्मणतर्पणादिनिलया सत्या तथा लौकिकी ।
स्रक्सत्या तदहिर्मृषैव विदितो निद्रानिवृत्तौ पुनः स्वप्ने दृष्टमशेषमेव वितथं ग्राह्यं तथा जागरे ॥ २३ ॥

ச்லோகார்த்தம் : தப்தசிலாரோஹணம் மோக்ஷஸாதனம் என்பது மித்யை என்றும் ப்ராஹ்மணதர்ப்பணம் என்பது ஸத்யம் என்றும், லௌகிகமானகயிறு ஸத்யம் அதில் தோன்றும் ஸர்ப்பம் மித்யை என்றும் இதேபோல் ஸ்வப்னத்தில் அறியப்படுவது எல்லாம் அந்த நிலையில் ஸத்யம் என்றும், விழித்தவுடன் மித்யை என்றும் சித்திக்கின்றது. அதுபோல் ஜாக்ரத் என்பதும் மித்யை என்றே அறியவேண்டும்.

வ்யாக்யானம் : தப்த சிலாதி ரோஹணம் மோக்ஷத்திற்கு உபாயம் என்று பௌத்தர்களால் சொல்லப்படுகிறது. அதாவது சுட்டெரிக்கின்ற வெய்யலில் உட்க்காரவைத்த போதிலும் அதனுல் சிறிதும் தாபத்தை அடையாமல் எவன் ஸந்தோஷத்தை அடைகின்ருனே அவனேஸாதனஸம்பத்தியுடையவன் என்றும் இதுவே மோக்ஷ உபாயம் என்றும் சொல்கிருர்கள். இவ்விதம் அவர்களால் சொல்லப்படும் மோக்ஷஉபாயம் மித்யை என்றும், நம்முடைய சாஸ்திரம் எதை மோக்ஷஉபாயம் என்று தெரிவிக்கின்றதோ அதுவே ஸத்யம் என்றும் (அத்வைதிகள்) நம்மால் சொல்லப்படுகிறது. இவ்விதம் மோக்ஷ உபாயமாக நம்மால் சொல்லப்படுவதும் ப்ரஹ்ம போதம் ஏற்படுகின்றபோது ஸர்வமும் மித்யை என்றே சொல்லப்படுகிறது.

பூர்வ : ஸ்வப்னம் மித்யை என்றும் ஜாக்ரத்ஸத்யம் என்றும் சொல்லப்பட வேண்டும் என்பதற்கு என்ன காரணம் ? ஜாக்ரத் என்பதைப் போல் ஸ்வப்னம் என்பதும் ஸத்யமென்றே சொல்லலாமே ?

சித்தா : அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் ஸ்வப்னப்ரபஞ்சம் என்பது ஜாக்ரத் காலத்தில் பாதிக்கப்படுகிறது. அதேபோல் ஜாக்ரத் ப்ரபஞ்சம் என்பதும் ப்ரஹ்ம போதம் ஏற்படுகின்றபோது பாதிக்கப்படுகிறது. ஆனுல் ப்ரஹ்மபோதம் ஏற்படுகின்ற பர்யந்தம் நாஸ்திக சாஸ்திரம் அப்ரமாணம், வேத வேதாந்த சாஸ்திரமே ப்ரமாணம் என்று விவகாரம் செய்யப்படுவது போல், ஜாக்ரத் ஸ்வப்ன அவஸ்த்தா விவகாரங்களும் ஸத்யம், மித்யை என்ற விபாகத்தைக் கொண்டு விவகாரம் செய்யப்படுகிறது. ஆனுல் ஸர்வமும்மித்யை என்பதே உண்மை.

**24.** அவதாரிகை :

இதே விஷயம் பற்றி மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

श्रेयः साधनताऽग्निहोत्रनिलया सत्येति संगृह्यते मिथ्या तप्तशिलाधिरोहणगता शिष्टैः परित्यज्यते ।
रज्जुः सत्यतया स्थितैव तदहिर्मिथ्यैव तावद्भवे यावन्मूलतमोविदारणपटुर्विद्योदयो नाऽऽगमात् ।। २४ ।।

ச்லோகார்த்தம் : அக்னிஹோத்ரம் என்ற கர்மா ச்ரேயஸ்ஸாதனம் என்பது ஸத்யம். தப்த சிலாதி ரோஹணம் ச்ரேயஸ்ஸாதனம் என்பது மித்யை என்பதால் சிஷ்ட்டர்களால்அவைகள் விடப்படுகின்றது. கயிறுஸத்யம், அதில் தோன்றும் ஸர்ப்பம் மித்யை என்ற விபாகங்கள், ஆகமத்திலிருந்து, அவித்யையைநாசம் செய்கின்ற ஞானம் ஏற்படும் பர்யந்தமே இருக்கின்றது.

வ்யாக்யானம் : அக்னிஹோத்ரம் முதலான கர்மாக்கள்தான் ச்ரேயஸ் ஸாதனம் என்றும், அவைகளை தெரிவிக்கின்ற சாஸ்திரமே ஸத்யமென்றும் தப்த சிலாதி ரோஹணம் என்பது ச்ரேயஸ் ஸாதனம் என்று சொல்வது ஸத்யமல்ல, மித்யைதான்என்று சாஸ்திர விஷயத்தில்சிஷ்ட்டர்களால் விவகாரம் செய்யப்படுகிறது. அதேபோல் லோகவ்யவகாரத்திலும், கயிற்றில் தோன்றும் ஸர்ப்பம் மித்யை, கயிறு என்பதே ஸத்யம் என்றும் விவகாரம் செய்யப்படுகிறது. இதேபோல் ஜாக்ரத், ஸ்வப்னவிவகாரங்களும் செய்யப்படுகிறது. இவை அனைத்தும் மூலாஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட விவகாரம். அதனுல்இந்த மூலாஞ்ஞானம் வித்யையினுல் நாசமாகின்ற பர்யந்தம் இவ்வித விவகாரங்கள் இருக்கின்றது. இந்தவிதம் ஸம்ஸாரத்திற்கு காரணமான மூலாஞ்ஞானம், தத்வமஸ்யாதி மஹாவாக்யங்களால் ஏற்படும் ஞானத்தினுல்நாசமாகின்ற போதுதான் இந்த விவகாரங்களும் இல்லாமற்போகும். அதுவரை, ஸத்யம், மித்யை என்ற விபாகங்கள் இருந்தபோதிலும், அவையெல்லாமே ஞானத்தினுல் பாதிக்கப்படுகின்றதால் மித்யை என்றே அறியவேண்டும்.

**25. அவதாரிகை :**

ஸர்வமும் ஸ்வப்னத்திற்கு ஸமம் என்று சொல்லப்படுமானுல் விஞ்ஞானவாதிகளின் சித்தாந்தத்திற்கும் அத்வைதிகளான உங்கள் சித்தாந்தத்திற்கும் வித்யாஸம் ஏதுமில்லை என்றாகிறதே ?

ச்லோகம் :

ननु शाक्यभिक्षुसमयेन समः प्रतिभात्ययं च भगवत्समयः ।
यदि बाह्यवस्तु वितथं तु कथं समयाविमौ न सदृशौ भवतः

ச்லோகார்த்தம் : இவ்விதம் சொல்லப்படுமானுல், பகவத்பாதரின் சித்தாந்தமும், பௌத்தசித்தாந்தம்போல் காணப்படுகின்றதே ? பாஹ்ய வஸ்துக்கள் எல்லாமே மித்யை என்று சொல்லப்படுமானுல் இந்த இரண்டு சித்தாந்தங்களும் எப்படிவேருக இருக்க முடியும்.

வ்யாக்யானம் : பாஹ்யபதார்த்தங்கள் ஸ்வப்னத்தைப் போல் மித்யை என்று சொல்லப்படுமானுல் அத்வைத மதமும் பௌத்த மதமும் ஒன்று என்று ஆகிறது என்பதாக பூர்வபக்ஷியின் ஆக்ஷேபம். பௌத்த மதத்தில் வேதம் ப்ரமாணமென்று ஒத்துக்கொள்ளப்படவில்லை. ஆனுல் அத்வைத சித்தாந்தத்தில் வேதத்தை ப்ரமாணமென்று ஒத்துக்கொள்கிறோம். அதனுல் அத்வைத மதமும் பௌத்த மதமும் எவ்விதம் ஒன்று என்று சொல்லமுடியும் ? என்ற சங்கைக்கு பூர்வபக்ஷியினுல் ச்லோகத்தின் இரண்டாவது பகுதியில் பதில் சொல்லப்படுகிறது. அதாவது விஞ்ஞானத்திலிருந்து வேருக எந்த ஒரு வஸ்துவும் இல்லையென்ற விஷயத்தில் அத்வைத மதத்திற்கும் பௌத்த மதத்திற்கும் ஸாம்யம் இருக்கின்றது.

**26. அவதாரிகை :**

அன்வயமுகமாகவும் இரண்டிற்கும் ஸாம்யம் இருக்கின்றதென்பதை விளக்கப்படுகிறது.

ச்லோகம் : 

यदि बोध एव परमार्थवपुर्नतु बोध्यमित्यभिमतं भवति ।
ननु चाऽऽश्रितं भवति बुद्धमुने र्मतमेव कृत्स्नमिह मस्करिभि:

ச்லோகார்த்தம் : ஞானம் ஒன்றே ஸத்யம், ஜ்ஞேயம் என்பது ஸத்யமல்ல என்று ஒப்புக்கொள்ளப்படுமானுல் வைதிகஸன்யாஸிகளும் புத்தமதத்தை பூர்ணமாக ஆச்ரயிக்கின்றதாகவே ஆகும்.

(பூர்வ) வ்யாக்யானம் : பௌத்த சித்தாந்தத்தில் ஞானத்திற்கு வேருக ஜ்ஞேயம் என்பது ஏதுமில்லை என்று சொல்லப்படுகிறது. அதாவது ஞானம் இருந்தால்தான் ஜ்ஞேயம் என்று ஒன்று இருப்பதாகவே அறியமுடியும். ஞானம் என்பது இல்லையென்றால் ஜ்ஞேயமென்று ஒன்று இருப்பதாகவே அறியமுடியாது. மேலும், ஞான அபின்னம் ஜ்ஞேயம் என்று சொல்லாவிடில் ஞானத்திற்கும் ஜ்ஞேயத்திற்கும் ஸம்பந்தமே இருக்கமுடியாது. ஸம்பந்தமே இல்லையென்றால், ஞானத்தினுல் ஜ்ஞேயம் ப்ரகாசிக்கின்றது என்பது ஸம்பவிக்கவே முடியாது. அதனுல்ஞான அபின்னம் ஜ்ஞேயம் என்றும், ஆனுல் அதில் ஞானம் என்பது ஒன்றே ஸத்யம், ஜ்ஞேயம் என்பது மித்யை என்றும் சொல்கிருர்கள். அனுதிவாஸனுவஸாத் ஜ்ஞேயங்கள் இருப்பதாக ஞானத்தில் தோன்றுகிறது என்றும் விஞ்ஞானவாதிகளால் சொல்லப்படுகிறது.

இதேபோல் வேதாந்த சித்தாந்தத்திலும் ஞானஸ்வரூபமான ஆத்மாவில் ஸர்வஜ்ஞேயங்களும் அத்யஸ்த்தம் என்றும், அதிஷ்ட்டானஸ்வரூபத்தையன்றி வேருக அத்யஸ்த்தனமான வஸ்துக்கள் எதுவுமில்லையென்றும் சொல்லப்படுகிறது. எப்படி ஸ்வப்னபதார்த்தங்கள் ஞானத்தையன்றி வேருக (எந்த வஸ்துவும்) இல்லையோ அதுபோல் என்று த்ருஷ்ட்டாந்தத்தினுலும் விளக்கப்படுகிறது. இந்த விதம் பௌத்த சித்தாந்தத்திற்கும் வேதாந்த சித்தாந்தத்திற்கும் வித்யாஸம் ஏதுமில்லை. ஆகையால் தண்டத்துடன் கூடிய ஸன்யாஸிகளானுலும் சரி, புத்த ஸன்யாஸிகளாக இருந்தாலும் சரிவிஞ்ஞான வாதியான பௌத்த சித்தாந்தத்தை ஆச்ரயிக்கின்றதாகவே சொல்லப்பட வேண்டும்.

**27.** அவதாரிகை :

சித்தா : பௌத்த சித்தாந்தமும், வேதாந்த சித்தாந்தமும் ஒன்று என்று சொல்வதற்கு காரணம் என்ன ? ஏதோ ஓர் அம்ஸத்தில்ஸாம்யம் இருக்கிறது என்பதால் ஒன்று என்று சொல்லப்படுகிறதா ? அல்லது ஸர்வ அம்ஸங்களிலும் ஸாம்யம் இருக்கின்றதால் இரண்டும் ஒன்று என்று சொல்லப்படுகிறதா ? ஏதோ ஒரு அம்ஸத்தில் ஸாம்யம் இருக்கிறதென்பதற்காக இரண்டும் ஒன்றே என்று சொல்லப்படுமானுல் நையாயிகமதத்திலும் ஞானம், ஜ்ஞேயம் என்ற இரண்டும் ஒன்றுக்கொன்று வேறுபட்டது என்றும் இரண்டும் ஸத்யம் என்றும் சொல்கிருர்கள். இதேபோல் பௌத்தமதஸ்த்தர்களில் ஸௌத்ராந்திகன், வைபாஷிகன், என்பவர்களும் விஞ்ஞானத்தைக் காட்டிலும் விஞ்ஜேயம் வேறு என்றும் சொல்கிருர்கள். அதற்காக ஸௌத்ராந்திகனும் நையாயிகனும் ஒன்று என்று சொல்லமுடியுமா ? ஆகவேஏதோ ஓர் அம்ஸத்தில் ஸாம்யம் என்பது எல்லா மதத்திலும் இருக்கலாம் அதற்காக எல்லாம் ஒன்று என்று சொல்லமுடியாது.

ச்லோகம் :

ननु मातृमानविषयावगती-रपरस्परं प्रति विभागवती: ।
उपयन्भदन्तमुनिना सदृशः कथमेष वैदिकमुनिर्भवति

ச்லோகார்த்தம் : ப்ரமாதா, ப்ரமாணம், ப்ரமேயம், ப்ரமை இவையெல்லாமே பரஸ்பரம் பின்னமாக இருக்கிறது என்று ஒத்துக்கொள்கின்ற வைதிக முனியானவர், புத்தமுனிக்கு நிகரானவர் என்று எப்படிச்சொல்லமுடியும் ?

வ்யாக்யானம் : ஸர்வஸாம்யம் இருப்பதாக யாராலும் சொல்லமுடியாது. ஏனெனில் கர்த்தா, கரணம், கர்மா என்பதெல்லாம் விவகார தசையில் வெவ்வேருக இருக்கின்றதென்ற பேதத்தை ஒப்புக்கொண்டு விவகாரம் செய்யப்படுகின்றது. இந்த விஷயத்தை பௌத்தர்கள் ஒப்புக்கொள்வதில்லை. எது க்ராஹ்யமோ அதுவே க்ராஹகம் என்றும், எது க்ராஹகமோ அதுவேக்ராஹ்யம் என்றும் சொல்கிறார்கள். இவையெல்லாம் வ்யவகார தசையில் யுக்திக்கு பொருந்தாது. ப்ரகாசம், ப்ரகாச்யம், ப்ரகாசகம் என்ற எல்லாம் ஒன்று என்று சொல்கிருர்கள். கர்த்தா, கரணம், கர்மா என்பதெல்லாம் ஒன்றுக்கொன்று வேறுபட்டு இருக்கின்றதால்தான் 'நான் கண்ணிஞல் இந்த கடத்தை பார்க்கிறேன்' என்று விவகாரம் செய்யப்படுகிறது. ஆகவே மாதா, மானம், மேயம் என்பவைகளுக்கு ஸமஸத்தை இருப்பதாக எங்களால் சொல்லப்படுகிறது. அதைபௌத்தர்கள் ஒத்துக் கொள்வதில்லே. இவ்விதம்வ்யாகவாரிக ஸத்தையை ஒத்துக்கொள்ளாத பௌத்தர்களுக்கும் வ்யாவகாரிகஸத்தையை ஒத்துக்கொள்கின்ற வேதாந்திகளுக்கும் எப்படி ஒற்றுமை இருக்கமுடியும். அதனால் இரண்டு சித்தாந்தமும் ஒன்று என்று சொல்வதற்கு முடியாது.

விஞ்ஞானம் ஒன்றே இருக்கிறதென்றும் அதுவே விஞ்ஞேயமாக தோன்றுகிறது என்றும் அந்த விஞ்ஞானமும் க்ஷணிகம் என்றே விஞ்ஞானவாதிகளால் சொல்லப்படுகிறது. அதுபோல் வேதாந்திகளால் சொல்லப்படவில்லே. மாதா, மானம், மேயம், ஞானம் என்பதெல்லாம் நித்யசைதன்யஸ்வரூபத்தில் அஞ்ஞானத்திஞல் அத்யஸ்த்தமாக இருக்கின்றது என்றும், இவையெல்லாமே அநிர்வசனீயம் என்றும் வ்யவகாரகாலபர்யந்தம் ஸ்திரம் என்றும் வைதிக முனிகளால் சொல்லப்படுகிறது. ஆகையால் இதற்கு நேர்விருத்தமாகத் தெரிவிக்கின்ற பௌத்தமுனியும், வேதாந்த சித்தாந்தியான வைதிகஸன்யாஸியும் ஒன்று என்று எப்படிச்சொல்லமுடியும் ? ஆகவே மற்ற மதங்களின் சித்தாந்தத்திற்கும் வேதாந்த சித்தாந்தத்திற்கும் ஸாம்யம் என்பதே இருக்கமுடியாது.

**28.** அவதாரிகை :

ப்ரமாதா, ப்ரமாணம், ப்ரமேயம் முதலான பேதங்கள் இருப்பதாகச் சொல்லப்படுமாஞல், நிஷ்ப்ரபஞ்சம் அத்வைதம் தத்வம் என்று சொல்வது எப்படிப்பொருந்தும் ?

ச்லோகம் :

परमात्मसंश्रयतमोजनितं प्रविभक्तमेव तु परस्परतः ।
स्थिरमभ्युपेतमिह नः समये ननु मातृमानविषयप्रभृति






ச்லோகார்த்தம் : எங்களுடைய சித்தாந்தத்தில் ப்ரமாதா, ப்ரமாணம், ப்ரமேயம், ப்ரமை என்ற இவையெல்லாமே பரமாத்மாவையே ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்ட, அவித்யாஜன்யமாகவும், பரஸ்பரம் பின்னமாகவும், ஸ்திரமாகவும் ஒத்துக் கொள்ளப்படுகிறது.

வ்யாக்யானம் : ஆத்மஸ்வரூபத்தையே ஆச்ரயமாகவும், விஷயமாகவும் கொண்ட அஞ்ஞானத்தினாலுல் கல்பிக்கப்பட்ட பேதத்தினுல் அத்வைத தத்வத்திற்கு எவ்வித விரோதமும் கிடையாது. அதுமட்டுமல்ல இது விஞ்ஞானவாதியின் சித்தாந்தம் என்று சொல்வதற்கு முடியாது.

பூர்வ : த்ருச்யம் எல்லாம் அஞ்ஞான கல்பிதம் என்று சொல்லப்படுமானுல், அவைகள் ஒன்றுக்கொன்று விபக்தம் என்றும் ஸ்திரம் என்றும் எப்படிச் சொல்வது ?

சித்தா : 1. மாத்ருமான மேயங்கள் என்பதெல்லாமே பரமாத்ம ஸ்வரூபத்தில் அத்யஸ்த்தமாக இருக்கின்ற அஞ்ஞானத்திலிருந்தே உண்டாகிறது என்று சொல்லப்படுவதால், ப்ரமாத்ராதிகள் ஞானஸ்வரூபமில்லையென்றும், ஞானஸ்வரூபமான ஆத்மாவில் இவைகள் அத்யஸ்த்தம் என்றும் சொல்கிறோம்.

2. க்ராஹ்யம் என்பதும் க்ராஹகம் என்பதும் ஒன்றல்ல. எல்லாம் ஒன்றுக்கொன்று வேறுபட்டது (விபக்தம்) என்று சொல்கிறோம்.

3. ஞானம் க்ஷணிகம் என்பதை நிராகரித்து ஞானம் ஸ்திரம் என்று சொல்கிறோம். இந்தவிதம் ஸர்வமும் ஆரோபிதம் என்று சொல்லப்படுவதால் அத்வைதத்திற்கு ஹானி ஏதுமில்லை. ஆகவே விஞ்ஞானவாதமும், வேதாந்த சித்தாந்தமும் ஸமம் என்று சொல்லப்படுவது சரியல்ல என்று இதன் மூலம் விளக்கப்பட்டது.

**29.** அவதாரிகை :

ப்ரமாதா, ப்ரமாணம், ப்ரமேயம், ப்ரமை என்ற நான்கும் லோக வ்யவகாரத்திற்காக ஒத்துக்கொள்ளப்படுமானுல் இது மானம், இது மேயம் என்று ப்ரமாத்ராதிகளை அறிய வேறு பல மாத்ராதிகள் தேவையா இல்லையா? தேவை என்ருல் அனவஸ்த்தாதி தோஷங்கள் ஸம்பவிக்குமே ? என்ருல்,

ச்லோகம் :

तमसा विनिर्मितमिदं सकलं चतुरः स पश्यति परः पुरुषः ।
अविकारिबोधवपुरद्वयकः करणैर्विना सकलसाक्षितया

ச்லோகார்த்தம் : அவித்யாஜன்யமான ப்ரமாதா முதலான இந்த நான்கையும் அத்வைதசைதன்யமான கூடஸ்த்தரூபமாக இருக்கின்ற பரமாத்மா ஸர்வத்திற்கும் சாக்ஷியாக இருந்து கொண்டு கரணங்கள் முதலான எவ்வித ஸஹாயமும் இல்லாமல் ப்ரகாசிக்கச் செய்கின்றது.

வ்யாக்யானம் : ப்ரமாதா என்பவனே ஸர்வத்தையும் அறிகின்றவன். அதனுல் வேறு ப்ரமாதா தேவை இல்லை என்பதால் அனவஸ்த்தாதி தோஷங்கள் ஸம்பவிக்காது. ப்ரமாதா என்பவன் வேறு ஒரு ப்ரமாணத்தினுல் சித்திக்கவேண்டியதாக இருந்தால்தான் வேறு ப்ரமாத்ராதிகளின் அபேக்ஷை ஏற்படும். ஆனுல் ப்ரமாத்ராதிகள் எல்லாமே

சுகாதிகள் போல சாக்ஷிபாஸ்யமாக இருக்கின்றதால் வேறு எதனுடைய அபேக்ஷையும் கிடையாது. ப்ரமாதா சாக்ஷியினுல் சித்திக்கின்றது. சாக்ஷி என்பது ஸ்வயமேசித்தம். சாக்ஷி என்பது எதனுடனும் ஸம்பந்தப்படுவதில்லை. ஸர்வதாஸ்வயம் ப்ரகாச ஸ்வரூபம் என்பதால் இவ்வித ஆக்ஷேபங்களுக்கு இடமே கிடையாது.

பாஹ்யபதார்த்தங்களெல்லாம் மித்யை என்று சொல்லப்படுவதால் அத்யந்த அஸத் என்று சொல்லப்படவில்லை. ஸர்வ ப்ரபஞ்சமும் தமஸ் என்ற அஞ்ஞானத்தினுல் தோற்றுவிக்கப்படுகிறது. அஞ்ஞானத்தினுல் தோற்றுவிக்கப்படும் ப்ரமாத்ராதி விஷயங்கள் எல்லாமே, ப்ரமாத்ராதிகளைக்காட்டிலும் வேறுபட்டதான சாக்ஷி சைதன்யத்தினுல் ப்ரகாசப்படுத்தப்படுகிறது. ப்ரகாசப்படுத்தப்படும் விஷயங்கள் எல்லாமே நம்மால் அறியப்படுகின்றதால், ஸர்வமும் தமஸ் என்பதால் தோற்றுவிக்கப்படுவதாக சொல்கிருேம். ரஜ்ஜுவில் தோன்றும் ஸர்ப்பம் எப்படிசாக்ஷியினுல் ப்ரகாசப்படுத்தப்படுகிறதோ அதுபோல் சாக்ஷியினுல் ப்ரகாசப்படுத்தப்படுவதெல்லாம் அஞ்ஞானகார்யம் என்றே அறியவேண்டும். “யத் த்ருச்யம் தந்மித்யா” என்று அறியப்படும் வஸ்து ஸர்வமும் மித்யை என்றே அறியவேண்டும். இந்த விதம் சித்வஸ்து நிஷ்ட்டமான அஞ்ஞானத் திலிருந்தே ஸர்வ ப்ரபஞ்சமும் தோற்றுவிக்கப்படுகிறது என்ற விஷயத்தை பௌத்த மதஸ்த்தர்கள் ஒத்துக்கொள்வதில்லை.

ஆரோபிதமான இந்த ப்ரபஞ்சம், அதற்கு அதிஷ்ட்டானமான சைத்ன்யத்தினுல் தான் ப்ரகாசிக்கின்றது என்றும், ஞான ஸ்வரூபமான ஆத்மா ஷட்பாவங்கள் அற்ற ஸ்வரூபம் என்றும் வேதாந்திகளால் சொல்லப்படுகிறது. ஆனுல் பௌத்தமதத்தில் ஞானம் க்ஷிணிகம் என்றும், உற்பத்தி விநாசமுடையது என்றும் சொல்லப்படுகிறது. அகண்ட நித்யஞான ஆனந்தஸ்வரூபம் ஆத்மா என்பதும் ஞானம் ஏகஸ்வரூபம் என்பதும் வேதாந்த சித்தாந்தம். சாக்ஷி என்பது அவிகாரி போதஸ்வரூபம் என்பது வேதாந்த சித்தாந்தம். ஞானம் அனேகம் என்றும் க்ஷணிகம் என்றும் அநித்யம் என்றும் நேர்விபரீதமாக பௌத்த சித்தாந்தம் தெரிவிக்கின்றது. சாக்ஷியினுல் ஸர்வமும் அறியப்படுகிறது என்ருல் சாக்ஷிவிகாரி என்ருகுமே? ஏன்ருல், எப்படி ப்ரதீபம் ஆதித்யன் என்பதெல்லாம் ஸர்வத்தையும் ப்ரகாசப்படுத்துகின்றதோ அதுபோல் சாக்ஷிசைதன்யத்தின் ஸன்னிதி மாத்ரேண ஸர்வமும் ப்ரகாசிக்கின்றது. அதனுல் சாக்ஷி ஸ்வரூபத்தில் எவ்விதக்ரியையும் ஏற்படுவதில்லை. த்ருக் ஸ்வரூபமான ஆத்மாவிற்கும் த்ருச்யமான அனுத்மவஸ்துக்களுக்கும் ஒன்றுக்கொன்று பேதம் இருக்கின்றது. த்ருக் ஸ்வரூபமான ஆத்மாநித்யம் - த்ருச்யமான ஸர்வமும் அஸ்திரம். த்ருக் என்பதே ஸ்வரூபத: சித்தம் - த்ருச்யமென்பதெல்லாம் அவித்யாநிர்மிதம். ஆத்மாத்ருக்ஸ்வரூபம். அனுத்மாக்கள் எல்லாம் த்ருச்யம். ஆகவே அத்வயமான ஆத்மஸ்வரூபம் கூடஸ்த்த நித்யம் ஏகம் என்பது வேதாந்த சித்தாந்தம். அதனுல் சாங்க்யமதம் என்பதும் வேதாந்த மதம் என்பதும் ஒன்று என்று சொல்லமுடியாது.

**30. அவதாரிகை :**

சாக்ஷித்வம் என்பது ப்ரமாதாவினிடம்தான் அறியப்படுகிறது. ப்ரமாதாவிற்கு ப்ரமாணவ்யாபாரம் அபேக்ஷிக்கப்படுகின்றது, அதனுல் கரணங்கள் இல்லாமல் சாக்ஷித்வம் எப்படி ஸம்பவிக்க முடியும்?

ச்லோகம் :

निजमायया परिगतः पुरुषः परतन्त्रया तु निजया प्रभया ।
परिकल्पितं सकलमाकलय न्स हि साक्षितामुपगतो भवति

ச்லோகார்த்தம் : தன்னிடம் பரதந்த்ரமாக இருக்கின்ற மாயையுடன் ஸம்பந்தமுடைய ஆத்மஸ்வரூபம், தன்னிடம் கல்பிதமான எல்லாவற்றையும், தன்னுடைய ப்ரகாசத்தினுல் ப்ரகாசிக்கச்செய்து சாக்ஷிபாவத்தை அடைகின்றது.

வ்யாக்யானம் : லோகத்தில் வ்யாபாரமுடையவனே விவகாரத்திற்கு கர்த்தாவாக இருக்கின்ருன் என்ற காரணத்தினுல் கர்த்தாவாக இருப்பவன் எவனே அவனை சாக்ஷி என்று சொல்லமுடியாது என்பது ப்ரசித்தம். அதேபோல் வ்யாபாரமின்றி அஸங்கமாக இருக்கின்ற ஸ்வரூப சைதன்யத்திற்கே சாக்ஷித்வம் சொல்லப்படுகிறது. அதனுல் ஸாபேக்ஷ சைதன்யத்திற்கு சாக்ஷித்வம் ஸம்பவிக்கமுடியாது.

பூர்வ : வேதாந்த சித்தாந்தத்தில் அஸங்கம் சைதன்யம் என்று சொல்லப்படுமானுல் 'பச்யதி' என்று பார்க்கின்றது என்ற க்ரியை எப்படி ஸம்பவிக்க முடியும் ?

சித்தா : மாயாவஸாத் ஸர்வமும் ஸம்பவிக்கலாம். அதாவது ஸ்வரூப சைதன்யம் தன்னிடம் அத்யஸ்த்தமான மாயையினுல் கல்பிக்கப்பட்ட ப்ரபஞ்சம் என்பது, ப்ரபஞ்சாகாரமாக பரிணமிக்கின்ற மாயா உபாதியில் ப்ரதிபலிக்கின்ற தன்னுடைய ப்ரதிபிம்பத்வாரா ஸ்ர்வத்தையும் ப்ரகாசப்படுத்துகின்றது. அவ்விதம் ப்ரகாசப் படுத்துகின்றபோது அந்த சைதன்யத்திற்கு சாக்ஷித்வம் ஸம்பவிக்கின்றது. இதையே ஈச்வரனுடைய ஸர்வசாக்ஷித்வம் என்று சொல்லப்படுகிறது.

இதேபோல் ஜீவ சாக்ஷித்வம் என்பது, அவித்யையுடன் கூடிய புத்திவ்ருத்தியில் ஏற்படும் ப்ரதிபிம்பமான சிதாபாஸன் மூலமாக ஜீவ சாக்ஷித்வம் ஸம்பவிக்கின்றது.

காரண சரீரத்தில் ஏற்படும் சைதன்ய ப்ரதிபிம்பத்தின் மூலமாக ஆத்மா காரணசரீர சாக்ஷியாக ஆகின்றது. அதையே ஈச்வரன் என்று சொல்கிருேம். காரணசரீர விசிஷ்ட்ட சைதன்யம் (ஜீவன்) ப்ராஞ்ஞன். அந்த:கரணத்தில் ஏற்படும் ப்ரதிபிம்பத்தின் மூலமாக அந்த : கரணத்திற்கு சாக்ஷியாக ஆகிறது. (துரீயன் ப்ராஞ்ஞனுக்கு சாக்ஷி - ப்ராஞ்ஞன்தைஜஸனுக்கு சாக்ஷி (ஜீவசாக்ஷி)

இந்தவிதம் தன்னுடைய ஸ்வரூபத்தில் அத்யஸ்த்தமான மாயை என்பது தன்னையே ஆச்ரயித்து அதையே விஷயமாகக் கொண்டது என்பதை ச்லோகத்தில் 'நிஜமாயா' என்ற சப்தத்தினுல் சொல்லப்படுகிறது என்று சொல்லலாம். அல்லது அஸாதாரண சக்தியுடையது என்பதை 'நிஜமாயா' என்ற சப்தம் தெரிவிக்கின்றதாகச் சொல்லலாம். மாயை என்பது ப்ரஹ்மமாத்ரசக்தி என்பதால் அஸாதாரண சக்தி என்று சொல்லப்படுகிறது. இவ்வித மாயா சக்தியினுல் எதுவும் ஸம்பவிக்கலாம்.

**31.** அவதாரிகை :

ப்ரமாத்ராதிகளுக்கு ஸ்திரத்வம் என்ற தன்மை இருப்பதாக ப்ரத்யக்ஷாதிகளால் அறியப்படுவதாக சொல்லமுடியாது. அதனுல் ப்ரமாத்ராதிகளுக்கு ஸ்திரத்வம் என்ற

தன்மை சொல்வது பொருந்தாது. ஏனெனில் ப்ரத்யக்ஷாதிகள், வர்த்தமான காலத்தில் இருக்கின்ற வஸ்துக்களைத்தான் இந்த வஸ்து இருக்கிறது என்று க்ரஹிக்க முடியும். வ்யாப்திக்ரஹிக்கப்படாமல் அனுமானத்தினுல் ஸ்திரத்தன்மை க்ரஹிக்கப்படுவதாக சொல்லமுடியாது. அதேபோல் ப்ரத்யபிஞ்ஞையென்பதால் ஸ்திரத்தன்மை க்ரஹிக்கமுடியாது. ஏனெனில் இவ்விதம் சொல்லப்படுமாஞல், தீபஜ்வாலே என்பதில் வ்யபிசாரம் ஏற்படுகிறது. ஆகவே, ப்ரமாத்ராதி விஷயங்களில் ஸ்திரத்வம் என்பது எப்படி எதனுல் சித்திக்கின்றது ?

ச்லோகம் :

ग्राह्यग्राहकयोः स्थिरत्वगमनी तत्प्रत्यभिज्ञाप्रमा नोपापत्स्यत चेदसेत्स्यदपि नौ सिद्धान्तयोस्तुल्यता ।
सा निर्वक्ष्यति सिध्यतीति न यतः स्थैर्यं स्वरूपात्मकं चैतन्यस्य च भङ्गुरत्वमिव मे सर्वस्य ते दर्शने

ச்லோகார்த்தம் : க்ராஹ்யமும் க்ராஹகமும் ஸ்திரமாக இருக்கின்றதென்ற ப்ரமையானது, ப்ரத்ய பிஞ்ஞை என்பதால் ஏற்படாதுஎன்ருல்தான் நம்முடைய சித்தாந்தம் இரண்டும் ஸமமாக இருக்க முடியும். அந்த ப்ரத்ய பிஞ்ஞை என்பது ப்ரமையை உண்டு பண்ணுகிறது. ஆகையால் சைதன்யத்திலும் ஜகத்திலும் ஸ்வரூபமாக இருக்கின்ற ஸ்திரத்வம் சித்திக்கின்றது. உன்னுடைய சித்தாந்தத்தில் ஸர்வபதார்த்தங்களும் க்ஷணிகம் என்று சொல்லப்படுவதுபோல் என் சித்தாந்தத்தில் ஸ்திரத்வம் சித்திக்கின்றது.

வ்யாக்யானம் : சைதன்யம் ஒன்றே நித்யம் என்றும் கூடஸ்த்தம் என்றும் சொல்கிருேம். சைதன்யமேத்ரிகால அபாத்யம் ஸ்திரம் என்று சொல்லப்படும். மற்றவைகள் எல்லாமே ஸ்திரம் என்று சொல்லப்படவில்லே. க்ஷணிகமில்லே. அக்ஷணிகத்வம் இருப்பதாக சொல்கிருேம். க்ஷண காலத்திற்குமேல் இருப்பது எதுவோ அதுவே ஸ்திரம் என்று சொல்லப்படுகிறது. ப்ரளயகாலபர்யந்தம் ஸ்திரமாக இருக்கின்றதால் க்ஷணிகத்வம் இல்லேயென்றும் ஸ்திரத்வம் இருப்பதாகவும் சாதிக்கின்ருேம். க்ராஹ்யம், க்ராஹகம் என்ற இரண்டுமே க்ஷணிகம் என்பதுபௌத்த சித்தாந்தம். ஆனுல் ப்ரத்யபிஞ்ஞை என்பது ப்ரமாணமாக இருக்கின்றதால் அவர்களால் சொல்லப்படும் விஷயம் சித்திக்க முடியாது. ஆகவே, ப்ரத்ய பிஞ்ஞை என்பதைக் கொண்டு விஷயம், விஷயீ என்ற இரண்டும் க்ஷணிகமில்லே, ஸ்திரம் என்பதை சாதிக்கின்ருேம். மேலும், கயிறு என்பதை ஸர்ப்பம் என்று ப்ரத்யக்ஷம் தெரிவிக்குமாஞல், அதுவே ப்ரமம் என்று சொல்லப்படும். தோஷமில்லாத ப்ரத்யக்ஷமே 'ப்ரமை' என்று சொல்லப்படும். இதேபோல் ப்ரத்ய பிஞ்ஞை என்பதும் தன் விஷயத்தை சாதித்துக்கொடுக்கமுடியும்.

பூர்வ : ஸ்தைர்யம் (ஸ்திரத்தன்மை) என்பது ப்ரஹ்ம சைதன்யத்திலும் இருக்கின்றதென்று ப்ரத்ய பிஞ்ஞையினுல் சாதிக்கப்படுமாஞல் ஸ்தைர்யம் என்பது ப்ரஹ்ம தர்மமென்று சொல்ல நேரிடும் அவ்விதம் சொல்லப்படுமாஞல் நிர்தர்மகம் ப்ரஹ்மமென்று எப்படிச் சொல்வது ?

சித்தா : ஸத்யம் ஞானம் அனந்தம் என்பது எப்படி ப்ரஹ்ம ஸ்வரூபம் என்று சொல்லப்படுகிறதோ அதுபோல் ஸ்திரத்வம் என்பதும் ப்ரஹ்மஸ்வரூபம் என்றே

சொல்ல வேண்டும். அதேபோல் ப்ரபஞ்ச வஸ்துக்களுக்கும்ஸ்தைர்யம் என்பது ஸ்வரூபம் என்றே சொல்கிறோம். க்ஷணிகத்வம் என்பது எப்படி வஸ்துஸ்வரூபம் என்று உங்களால் சொல்லப்படுகிறதோ அதுபோல் ஸ்திரத்வம் வஸ்துஸ்வரூபம் என்று எங்களால் சொல்லப்படுகிறது. முன் ச்லோகத்தில் க்ராஹகமான சைதன்யம் ஸ்திரம் என்று சொல்லப்பட்டது. இப்போது க்ராஹ்யமான வஸ்துக்களும் ஸ்திரம் என்பதை ப்ரத்ய பிஞ்ஞையைக் கொண்டுசாதிக்கின்றோம்.

ப்ரத்யபிஞ்ஞை என்பது ப்ரமமாகவும் இருக்கலாம். ப்ரமையாகவும் இருக்கலாம். தீபஜ்வாலையை பார்க்கின்றபோது அதே ஜ்வாலை என்று ப்ரத்யபிஞ்ஞை ஏற்படுகிறது. ஆனால் அது தோஷ ஜன்யமாக இருக்கின்றதால் ப்ரமம் என்று சொல்கிறோம். அதனால் தீபஜ்வாலையில் ஏற்படும் அதுவே இது என்ற ப்ரத்ய பிஞ்ஞை ஐக்யஞானமல்ல. ஒருமுறை பார்க்கப்பட்ட வஸ்துவே மறுமுறை பார்க்கப்படுமானால் ப்ரத்ய பிஞ்ஞை என்று சொல்லலாம். அவ்விதமில்லையென்றால் அது ப்ரமத்தினால் ஏற்பட்ட ப்ரத்யபிஞ்ஞை என்றே அறியவேண்டும். கடாதி வஸ்துக்களில் ஸ்திரத்வம் என்பது ப்ரத்யபிஞ்ஞையினால் ஏற்படுகிறது. அதனால் அது ப்ரமை என்றே சொல்லவேண்டும்.

**32.** அவதாரிகை :

ஜாக்ரத்பதார்த்தங்களும், ஸ்வப்னபதார்த்தம் போல் மித்யை என்று சொல்லப்படுமானால், ஜாக்ரத், ஸ்வப்னம் என்ற இரண்டிற்கும் எவ்விதம் வித்யாஸம் சொல்லமுடியும்? வித்யாஸமே இல்லையென்று சொல்லப்படுமானால் "வைதர்ம்யாச்சந ஸ்வப்னாதிவத்" என்று தெரிவிக்கின்ற வ்யாஸ சூத்திரத்திற்கு முரண்பாடாக எவ்விதம் அர்த்தம் செய்யமுடியும்?

ச்லோகம் :

ननु कल्पितं यदिह जागरितं वद कीदृशी खलु विलक्षणता ।
स्वपनादमुष्य भवतोऽभिमता परिकल्पितत्वमुभयोस्तु समम्

ச்லோகார்த்தம் : ஜாகரிதம் என்பதும் கல்ப்பிதம் என்று சொல்லப்படுமானால், ஸ்வப்னத்திற்கும், ஜாக்ரத்திற்கும் என்ன பேதம் இருக்கின்றது என்று சொல்லப்படவேண்டும். ஏனெனில் கல்ப்பிதம் என்ற விஷயத்தில் இரண்டும் ஸமானமாகவே இருக்கின்றது.

வ்யாக்யானம் : பௌத்தசித்தாந்தம், வேதாந்த சித்தாந்தம் என்ற இரண்டும் ஒன்றல்ல என்பதை இதுவரை விளக்கப்பட்டது. இப்போது ஜாக்ரத் என்பதும் ஸ்வப்னம்போல் கல்பிதம்தான் என்று சொல்லப்படும் விஷயத்தில் ஆக்ஷேபிக்கப்படுகிறது. ஜாக்ரத், ஸ்வப்னங்களுக்கு வித்யாஸம் இருக்கின்றதென்பது அனுபவசித்தம் லோகப்ரசித்தமாகவும் இருக்கிறது. வ்யாஸ சூத்ரத்திற்கும்விரோதமாக இருக்கிறது என்று ஆக்ஷேபம் செய்யப்படுகிறது.

**33.** அவதாரிகை :

ஜாக்ரத் என்பதும் ஸ்வப்னம்போல் மித்யை என்று சொல்லப்படுமானால் ஜாக்ரத் ஸ்வப்னம் என்று வித்யாஸம் சொல்லப்படுவதற்கு காரணம் என்ன?

ச்லோகம் :

न प्रमातरि सति प्रबाध्यते जागरः स्वपनदृष्टवस्तुवत् ।
मातृमानविषयोपलब्धिभिः साकमेव तमसो निराकृतेः

ச்லோகார்த்தம் : ஸ்வப்ன பதார்த்தங்களைப் போல் ஜாக்ரத் பதார்த்தங்கள் ப்ரமாதா இருக்கின்றபோது பாதிக்கப்படுவதில்லை. ப்ரமாதா ப்ரமாணம் ப்ரமேயம் ப்ரமை என்பதெல்லாம் (அதன் காரணமான) அவித்யை நீங்குகின்றபோதே ஜாக்ரத் என்பதும் பாதிக்கப்படுகிறது.

வ்யாக்யானம் : அவித்யை என்ற ஒரே தோஷத்தினுல் ஜாக்ரத் ப்ரபஞ்சம் தோற்றுவிக்கப்படுகிறது. அவித்யை என்பதுடன் நித்ரை என்ற தோஷமும் சேர்ந்து ஸ்வப்ன ப்ரபஞ்சம் தோற்றுவிக்கப்படுகிறது. இந்தவிதமான வித்யாஸத்தினுல் ஜாக்ரத் வ்யாவகாரிகமென்றும், ஸ்வப்னம் ப்ராதிபாஸிகமென்றும் சொல்லப்படுகிறது. வ்யாஹாரிகம் என்பதற்கு வ்யவஹார யோக்யத்வம் என்று அர்த்தம் செய்வது சரியல்ல. ஏனெனில் ஸ்வப்ன ப்ரபஞ்சமும் வ்யவஹாரயோக்யத்வம் உள்ளதாகவே இருக்கிறது. ஆகையால் வ்யவஹார யோக்யத்வம் வ்யாவஹாரிகமல்ல. எது ப்ரமாதா இருக்கின்ற பர்யந்தம் பாதிக்கப்படுவதில்லையோ அதுவே வ்யாவஹாரிகம் என்றும், எது ப்ரமாதா இருக்கின்றபோதே பாதிக்கப்படுகிறதோ அது ப்ராதிபாஸிகமென்றும் சொல்லப்படுகிறது. இந்தவிதம் இரண்டிற்கும் வித்யாஸம் சொல்லப்படுகிறது. ஆனுல் இரண்டும் மித்யை என்பதில் ஸந்தேகத்திற்கே இடமில்லை. ஸ்வப்ன ப்ரபஞ்ச வ்யவகாரம், ஜாக்ரத் ப்ரபஞ்ச வ்யவகாரம் என்ற இரண்டையும் அறிகின்ற ப்ரமாதா ஒருவன்தான். அதனுல்தான் ஸ்வப்னத்திலிருந்து விழித்தவுடன் நான் ஸ்வப்னங்கண்டேன் என்று ஜாக்ரத் காலத்தில் தெரிவிக்கின்றுன். அதனுல் நான்தான் ஸ்வப்னத்தைப் பார்த்தேன் என்ற ப்ரத்யபிஞ்ஞை ஏற்படுகிறது. இதிலிருந்தே இரண்டு அவஸ்த்தைகளிலும் ப்ரமாதா என்பவன் ஒருவனே என்பது சித்தமாகின்றது. ஆனுல் ஸ்வப்னத்திலிருந்து விழித்தவுடன் ப்ரமாதா இருந்தபோதிலும் அவனுல் பார்க்கப்பட்ட வஸ்துக்கள் இருப்பதில்லை. அதேபோல்எந்த தேசத்தில் தோன்றியதோ எந்த காலத்தில் தோன்றியதோ அந்த தேச காலாதிகளுடன் கூடிய வஸ்துக்களும் அதே இடத்தில் இல்லையென்று ஜாக்ரத்காலத்தில் பாதிக்கப்படுகிறது.

இதேபோல் ஜாக்ரத் ப்ரபஞ்சம், ஜாக்ரத் காலத்தில் ப்ரமாதா இருக்கின்றபோது பாதிக்கப்படுவதில்லை. ஆனுல் 'தத்வமஸி' மஹாவாக்ய ஜன்யஞானம் ஏற்படுகின்றபோது 'கேனகம்பச்யேத் கேனகம் விஜானீயாத்' என்று ச்ருதி வாக்யம் தெரிவிக்கின்றது போல் ஆத்ம ஸ்வரூப அபரோக்ஷ ஞானம் ஏற்படுகின்றபோது மூலாஞ்ஞானமே பாதிக்கப் படுகின்றதால் ப்ரமாதா ப்ரமாணம் முதலான எல்லாமே பாதிக்கப்படுகிறது. ப்ரமாத்ராதிகள் இல்லையென்றால் வ்யவகாரம் என்பதே இருக்கமுடியாது. ஆகையால்ஜாக்ரத் ஸத்யமா ? மித்யையா ? என்ற வ்யவகாரத்திற்கேஇடமில்லை.

**34.** அவதாரிகை :

ஜாக்ரத் ப்ரபஞ்சம் விவகார காலபர்யந்தம் பாதிக்கப்படவில்லை என்றுல் அதை ஸத்யமென்றே சொல்லலாமே ? மித்யை என்றுஏன் சொல்லவேண்டும் ?

ச்லோகம் :

देशकालपुरुषैरवस्थया जागरस्य खलु कारणं तमः ।
साकमेव सहसा निरस्यते वेदवाक्यजनितात्मसंविदा

ச்லோகார்த்தம் : தேசம், காலம், ப்ரமாதா, அவஸ்த்தைகள் என்ற இவைகளெல்லாவற்றுடன், ஜாகரிதம் என்பதற்கு காரணமான அஞ்ஞானம் என்பது வேதாந்த வாக்யஜன்யஞானத்தினுல்தான் பாதிக்கப்படுகிறது.

வ்யாக்யானம் : ஜாக்ரத், ஸ்வப்னம் என்ற இரண்டுமே பாதிக்கப்படுகின்றதால் இரண்டும் மித்யை என்றே சொல்லவேண்டும். ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தில் ஆரோபிதமான மூலாஞ்ஞானம் தேச காலாதிகளையும், ப்ரமாத்ராதிகளையும் சிருஷ்டிக்கின்றது. இதுவே ஜாக்ரத் ப்ரபஞ்சம். இந்த ஜாக்ரத் ப்ரபஞ்சம் அதற்கு காரணமான மூலாஞ்ஞானம் இருக்கின்ற பர்யந்தம் இருக்கிறது. வேதாந்த ஜன்யமான ஆத்மஞானம் ஏற்படுகின்றபோது, ஆரோபிதமான மூலாஞ்ஞானம், அதனுல் ஏற்பட்ட ப்ரமாத்ராதிகளுடன், தேச காலாதிகளுடன் பாதிக்கப்படுகிறது.

இவ்விதம் தேசகாலாதிகளுடன் கூடிய அஞ்ஞானம் இருக்கின்றபோது நித்ரை என்ற தோஷமும் சேருமானுல் ஸ்வப்ன ப்ரபஞ்சம் தோன்றுகிறது. இந்த ஸ்வப்ன ப்ரபஞ்சம்நித்ரை என்றே தோஷம் நிவர்த்தியாகின்றபோது, தேசகாலாதிகள், ப்ரமாத் ராதிகள் இருக்கின்றபோதே நிவர்த்திக்கின்றது. தேசம், காலம், ப்ரமாத்ராதிகள் இருக்கின்றபோதே எப்படி சுக்தியில் தோன்றும் ரஜதம் நிவர்த்திக்கின்றதோ அதுபோல் ஸ்வப்ன ப்ரபஞ்சமும் நிவர்த்திக்கின்றது. ஆகவே அஞ்ஞானத்தினுல் கல்பிக்கப்படும் ஜாக்ரத், ஸ்வப்னம் என்ற எல்லாமே ஆத்மஞானம் ஏற்படுகின்றபோது பாதிக்கப்படுகின்றதால் இரண்டும் மித்யை என்றே சித்திக்கின்றது. இதில் வித்யாஸம் ஏதுமில்லே.

**35.** அவதாரிகை :

இந்த விஷயம் ஸ்வப்னம் முதலான வைதர்ம்யத்ருஷ்டாந்தம் மூலம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

स्वप्नदृष्टिमिह रज्जुसर्पवद्देशकालपुरुषेषु बाध्यते ।
जागरः पुनरयं तथाविधं बाधकं न लभतेऽसमीक्षणात्

ச்லோகார்த்தம் : ரஜ்ஜு ஸர்ப்பம்போல் ஸ்வப்ன பதார்த்தங்கள் தேசம் காலம் ப்ரமாதா இவைகள் இருக்கின்றபோதே பாதிக்கப்படுகிறது. ஆனால் ஜாகரிதம் என்பது இதுபோல் பாதிக்கப்படுவதில்லே

வ்யாக்யானம் (பூர்வ) : ஸ்வப்னபதார்த்தங்கள் தேச காலாதிகள் இருக்கின்றபோதே தோன்றுகிறது. அதுபோல் ஜாக்ரத் காலத்தில் அவ்விதமில்லே என்று எந்த ப்ரமாணத்தைக் கொண்டுசொல்லப்படுகிறது ?

சித்தா : ஸ்வப்னபதார்த்தங்கள் நித்ரையிலிருந்து விழித்தவுடன், ஸ்வப்ன போகங்களை அனுபவித்த நாம் இருக்கின்றபோதே பாதிக்கப்படுகிறது என்பது அனுபவசித்தம். ஆகவே இதைவிட வேறுஎன்ன ப்ரமாணம் வேண்டும்? தேச காலாதிகள் இருக்கின்றபோதே எது கல்பிக்கப்பட்டதோ அதெல்லாம் தேசகாலதிகள் இருக்கின்றபோதே பாதிக்கப்படுகிறது. தேச காலாதிகளுடன் கூட எது கல்பிக்கப்ப டுகிறதோ அது தேச காலதிகளுடன்தான்பாதிக்கப்படும். ஆகையால் ப்ரமாத்ராதிகள், தேசகாலாதிகள் இருக்கின்ற போதேபாதிக்கப்படுவதாக அனுபவமும் கிடையாது. அஞ்ஞானகல்பிதமான ஸர்வமும் அஞ்ஞானத்துடனேயே நிவர்த்திக்கப்படுகிறது.

**36. அவதாரிகை :**

இவ்விதம் முன்னால் சொல்லப்பட்ட வித்யாஸத்தினால் இரண்டும் மித்யை என்று சொல்லப்பட்ட போதிலும், விவகாரகாலத்தில்ஒன்றை ஸத்யம் என்றும் ஒன்றை மித்யை என்றும் விவகாரம் செய்கின்றோம். அதற்காக, ஜாக்ரத் ப்ரபஞ்சம், ப்ரஹ்மத்தைப்போல் ஸத்யமென்று ஒத்துக்கொள்ளவேண்டிய அவஸ்யம் இல்லை.

**ச்லோகம் :**

तेन सत्यमिह जागरं विदुः स्वप्नविभ्रमविरुद्धधर्मकम् ।
आपरात्मपरमार्थदर्शनात्तेन बाधितवपुर्न सत्क्वचित्

**ச்லோகாரத்தம் :** ஸ்வப்னப்ரமத்திற்கு விபரீதமான தர்மத்துடன் கூடி இருக்கின்ற ஜாகரிதம் என்பது பரமார்த்த ஞானம் ஏற்படும் பர்யந்தம் ஸத்யமென்று சொல்லலாம். ஆனால் (பின்னால் ஏற்படும்) ஞானத்தினால் பாதிக்கப்படுவதால் அதை ஸத்யமென்று சொல்லமுடியாது.

**வ்யாக்யானம் :** ப்ரமாதா இருக்கின்ற காலத்தில் ஜாக்ரத் பாதிக்கப்படுவதில்லை, அதனால் ஸ்வப்னத்தைப் போல் உடனே மித்யை என்று அறியப்படாமல் ஸத்யமென்றே மாறுபட்ட முறையில் தோன்றுகிறது. ஸ்வப்னம் பாதிக்கப்படுகிறதுஎன்பது ப்ரமாதாவினால் அறியப்படுகிறது. ஆனால் ஜாக்ரத் என்பது ப்ரஹ்மஞானம் ஏற்படும் பர்யந்தம் பாதிக்கப்படுவதில்லையென்பதால் மித்யை என்று ப்ரமாதாவினால் அறியப்படவில்லை. ஜாக்ரத் என்பது பாதிக்கப்படுமானால் அதன்பிறகு ப்ரமாதாவும் இருக்க முடியாது என்பதால் ஸத்யம் மித்யை என்ற விவகாரத்திற்கே இடமில்லை என்று இந்த விஷயம் முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது.

**37. அவதாரிகை :**

இவ்விதம் தோற்றுவிக்கப்படுவதற்கு காரணம் என்ன?

**ச்லோகம் :**

तत्र सत्यमनृतं च भेदतः प्रत्यगात्मतमसा विकल्पितम् ।
प्रक्षिणोति परमात्मवस्तुगा बुद्धिवृत्तिरविचालिनी सती

ச்லோகார்த்தம் : ப்ரத்யகாத்மாவில் அஞ்ஞானத்தினால் ஸத்யமென்றும் மித்யை என்றும்பேதமுள்ளதாக கல்ப்பிக்கப்பட்ட ஜாக்ரத்-ஸ்வப்னம் என்ற இரண்டையும், ப்ரத்யகாத்ம விஷயமான (ஞானம்) புத்தி வ்ருத்தியானது வேறென்றையும்அபேக்ஷிக்காமல் நாசம் செய்கின்றது.

வ்யாக்யானம் : ப்ரத்யக்ஸ்வரூப அஞ்ஞானம் உள்ளவரை ஜாக்ரத்விவகாரம் பாதிக்கப்படுவதில்லை. நித்ரை என்றதோஷம் நீங்கினவுடன் ஸ்வப்னம் பாதிக்கப்படுகிறது. ஆத்மாகாரமான புத்தி வ்ருத்தி ஏற்படுகின்றபோது ஸத்யமென்றும் மித்யை என்றும் செய்யப்படும் லோகவ்யாகாரங்கள் வேறுடன் நாசத்தை அடைகின்றது. ஏனெனில் மூலாஞ்ஞானமே, ஞானுக்னியினுல் எரிக்கப்படுகின்றதால் ஜாக்ரத் ஸ்வப்னம் என்ற எந்த விவகாரத்திற்கும் இடமில்லை.

பூர்வ : ஸ்வப்னம் என்பது பாதிக்கப்பட்ட போதிலும், மறுபடி ஸ்வப்னம் ஏற்படுகிறதே ? அதுபோல் ஜாக்ரத் என்புதும் ஞானத்தினால் பாதிக்கப்பட்ட போதிலும் மறுபடி ஜாக்ரத் என்பதும் வரலாமே ?

சித்தா : ஸத்ய ஞானுனந்த லக்ஷணமான, சின்மாத்ர ஸ்வரூபத்தை ஆச்ரயமாகவும், விஷயமாகவும் கொண்ட அஞ்ஞானம் என்பது தனக்கு அதிஷ்ட்டானமான ஸ்வரூபத்தையே மறைக்கின்ற காரணத்தினுல் ஸத்யமென்றும் மித்யை என்றும் விபாகமுள்ள த்வைதம், அஞ்ஞான கல்பிதமாக இருக்கின்றது. ஆத்ம ஸ்வரூப ஞானம் என்ற அகண்டாகார வ்ருத்தி ஏற்படுகின்றபோது, அஞ்ஞானம் அதன் கார்யமான ஸர்வவிவகாரங்களும் நாசத்தை அடைகின்றது.

அஞ்ஞானம் என்பது நித்ரை என்ற தோஷத்துடன் கூடி ஸ்வப்னத்திற்கு காரணமாகிறது. அதனால் நித்ரை நீங்கினவுடன் ஸ்வப்னம்தான் நிவர்த்திக்கின்றதேயன்றி அஞ்ஞானம் என்பது நிவர்த்திக்கப்படவில்லை. ஆகவே, தூலாஞ்ஞானத்திற்கு நிவர்த்தி இருந்தாலும் ஸர்வ அனர்த்தத்திற்கும் காரணமான மூலாஞ்ஞான நிவர்த்தி ஏற்படுவதில்லை. ஆகையால் விக்ஷேபத்திற்கும் நிவர்த்திஇல்லை. அதனுல்தான் மறுபடியும் ஸ்வப்ன ப்ரபஞ்சம் தோற்றுவிக்கப்படுகிறது. அதுபோல் ஜாக்ரத் ப்ரபஞ்சமும் மறுபடி தோன்றலாமே என்று சொல்வதற்கு முடியாது. ஏனெனில் மூலாஞ்ஞானத்துடன் கூடவே அதன் கார்யமான ஜகத் என்ற கல்பித வஸ்துவிற்கும் நாசம் ஏற்படுகின்றதால், மறுபடி உண்டாவதற்குரிய காரணம் ஏதுமில்லை. அதனுல் ஸ்வப்னம்போல் ஜாக்ரத் ப்ரபஞ்சமும் உண்டாகலாமே என்ற கேள்விக்கே இடமில்லை.

**38.** அவதாரிகை :

அவித்யை என்பது அனுதிசித்தமாக இருக்கிறதென்பதால் அது மிகவும் த்ருடமாகவே இருக்கவேண்டும். [illegible] இருக்கின்ற அவித்யை என்பதையும், அதன் கார்யமான இந்த ஜகத்தையும், அவித்யாகார்யமான புத்தி வ்ருத்தியென்பது எப்படி நாசமாக்கமுடியும் ?

ச்லோகம் : नित्यबोधपरिपीडितं जगद्विभ्रमं नुदति वाक्यजा मतिः ।
वासुदेवनिहतं धनंजयो हन्ति कौरवकुलं यथा पुनः

ச்லோகார்த்தம் : எவ்விதம் வாசுதேவனுல் தாக்கப்பட்ட கௌரவ குலத்தினை அர்ஜுனன் வதம் செய்தானோ அதேபோல் வாக்யத்திலிருந்து ஏற்பட்ட ஞானம், நித்யசைதன்யத்தினால் தாக்கப்பட்ட ஜகத் ப்ரமம் பாதிக்கப்படுகின்றது.

வ்யாக்யானம் : நித்ய போதஸ்வரூபமான அத்வயசைதன்ய ஸ்வரூப போதம் ஏற்படுகின்றபோது, அவித்யை, அதன் கார்யமான ஸர்வமும் நாசத்தை அடைகின்றது. எப்படியெனில், வாக்ய ச்ரவணுதிகளினுல் ஏற்படும் அகண்டாகாரவ்ருத்தி என்ற புத்தி வ்ருத்தியில் ப்ரதிபலிக்கின்ற சைதன்யத்தின் பலத்தினுலேயே ஸர்வஸம்சய விபர்யயங்களும் அற்ற ஆத்மஞானம் ஏற்படுகின்றது. இவ்விதம் அஞ்ஞானம் அதன் கார்யமான ஸர்வத்தையும் நாசமாக்கக் கூடிய சக்தி (பலம்) புத்தி வ்ருத்தியில் ப்ரதிபலிக்கின்ற. சைதன்யத்தினுல்தான், ஏற்படுகிறது. ஆகையால் மூலாஞ்ஞானம் அனுதியாக த்ருடமாக இருந்த போதிலும், அதை நாசமாக்கக் கூடிய பலம், வ்ருத்தி ப்ரதிபல சைதன்யத்தினுல் ஏற்படுகின்றதால் எவ்வித சிரமமும் கிடையாது. உதாரணமாக குருவம்சத்திலிருந்து உண்டான அர்ஜுனன் எப்படி குருவம்ஸத்தினரான துர்யோதனுதிகளை நாசம் செய்வதற்கு 'பகவான் காலரூபாத்மனு ஸர்வத்தையும் முன்பே நாசமடையச் செய்தேன்' என்று பகவானுலேயே விச்வரூபதர்சனத்தின் போது சொல்லப்படுகிறதோ. அதுபோல் நடுவில் ஏற்பட்ட அகண்டாகாரபுத்திவ்ருத்தி என்பது அஞ்ஞானகார்யமாக இருந்த போதிலும், அதனுல் ஏற்பட்ட ஆத்மஞான அபிவ்யக்தி என்பது அந்த க்ஷணமே ஏற்பட்ட போதிலும், அந்த சைதன்ய பலத்தினுலேயே அனுதி மூலாஞ்ஞானம் அதை நாசம் அடையச் செய்கிறது என்பதில் எவ்வித ஸந்தேகத்திற்கும் இடமில்லை. அவித்யை அதன் கார்யம் என்பதெல்லாமே விவர்த்தமாக தோன்றுகிறது என்பதால் வாக்ய ஜன்யமான வ்ருத்தியினுல் நாசமடைகின்றது. ஜாக்ரத் ப்ரமம் என்பதற்கு உண்மையில் ஸத்தை என்பதோ ஸ்புரணம் என்பதோ ஸ்வயமே கிடையாது. ப்ரமம் ஏற்படுகின்ற காலத்தில் மட்டுமே இருக்கின்றதென்றும் ப்ரகாசிக்கின்றதென்றும் அறியப்படுகிறது. ஆகவே, வஸ்து ஸ்வரூபஞானம் ஏற்படுகின்றபோது நித்ய ஸ்வப்ரகாச சைதன்யத்தினுல் அஞ்ஞானம் விழுங்கப்படுகிறது. அதன் கார்யமான ஜகத் என்பது காரணத்துடன் நாசமாகின்றது. ஸ்வயம் ஜடமான புத்தி வ்ருத்தியாக இருந்தாலும் கூட, ப்ரமாண ஜன்யமான வ்ருத்தியாக இருக்கின்றதால் அனுதி அவித்யையும் நாசமடையச்செய்கிறது.

**39.** அவதாரிகை :

இந்த விதம் ஜாக்ரத், ஸ்வப்னம் என்பவைகளில் ஸத்யம் மித்யை என்ற விபாகங்கள் இருக்கிறதென்றும் இவை எல்லாவற்றிர்க்கும் ஆத்ம ஞானம் ஏற்பட்ட பிறகு பாதம் ஏற்படுகிறது என்பதை அத்வைத சித்தாந்தத்தினால் சாதிக்கப்பட்டது. ஆனுல் மற்ற மதஸ்த்தர்களால் இவ்வித விபாகம் செய்வதற்கு முடியாது.

ச்லோகம் :

सत्यमेवमनृतं च दुर्लभं ब्रह्मवादिसमयाद्बहिः पुनः ।
सत्यतो यदि पृथङ् मृषा भवे त्सत्यमेव तदपि प्रसज्यते

ச்லோகார்த்தம் : இவ்விதம், ஸத்யம் அந்ருதம் என்ற பின்னமான இவை இரண்டும் அத்வைதம் என்பதை ஒத்துக்கொள்ளாத பக்ஷத்தில் சித்திக்காது. அந்ருதவஸ்துவானது ஸத்யவஸ்துவிலிருந்து வேறுபட்டதாக இருக்கின்றது என்று சொன்னால், அதுவும் ஸத்யமாகவே ஆகும்.

வ்யாக்யானம் : அத்வைத சித்தாந்தத்தையன்றி வேறு எந்த சித்தாந்தத்தைக் கொண்டும் இவ்விதம் விபாகம் செய்து தத்வத்தை நிர்ணயம் செய்ய முடியாது. ஏனெனில் இந்த ஜகத் என்பது ப்ரஹ்மத்தைக் காட்டிலும் பின்னமா? அபின்னமா? என்று அவர்களிடம் கேட்க்கப்படுமானால் அதற்கு அவர்களால் பதில் சொல்வதற்கு முடியாது. ப்ரஹமத்திற்கு அன்யமாக உண்மையில் வேறு ஒரு வஸ்து இருந்தால்தான் பின்னம் என்று சொல்லமுடியும். இருக்கின்ற இரண்டு வஸ்துவிற்கே பேதம் (பின்னம்) சொல்லலாம். ஸத்யமான வஸ்துவிற்கும் அஸத்யமான வஸ்துவிற்கும் உண்மையில் பேதம் இருப்பதாக சொல்ல முடியாது. ஸர்வத்வைதமும்மித்யை என்று சொல்லப்படுவதால், விவகார காலத்தில் ஜாக்ரத் என்பது ஸத் என்றும் ஸ்வப்னம் என்பது ஸத் அல்ல என்றும் விபாகம் செய்து அத்வைதிகளான எங்களால் தான் சொல்லமுடியும். அபின்னம் ஜகத் என்று சொல்லப்படுமானால் ப்ரஹமத்தைக் காட்டிலும் வேறல்ல என்றாகிறது. அதனாலேயே ஜகத்மித்யை என்று சித்திக்கின்றது.

பூர்வ : அகண்டாகார வ்ருத்தியென்பது ஸத்யமா? மித்யையா? ஸத்யம் என்றால் அத்வைத ஹானி, மித்யை என்றால், மித்யா வ்ருத்தியினால் அவித்யை என்பது எப்படி நாசமாக முடியும்?

சித்தா : அகண்டகார வ்ருத்தி என்பது ஸத்யமான ப்ரஹ்ம சைதன்யாகார வ்ருத்தியாக இருக்கின்றதால்சைதன்ய பலத்தினால் மித்யா பூதமான வ்ருத்தியும் ஸர்வத்வைதத்தையும் நாசமாகக்கூடிய சக்தி உடையதாக இருக்கின்றது என்று எங்களால் சொல்லப்படும் விஷயம் மிக்க பொருத்தமுடையதாக இருக்கிறது. ஆனால் ஸர்வமும்ஸத்யம் என்று சொல்லப்படும் த்வைதமதத்தை அனுசரிக்கின்றவர்களுக்கு இது ஸத்யம், இது அந்ருதம் என்ற விபாகமே ஸம்பவிக்க முடியாது. ஏனெனில் ஸத்யமென்று சொல்லப்படும். ஜகத் ஸத்யமான ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறு என்று சொல்லப்படுமானால் ஜகத் ஸத்யம் என்றே சொல்லமுடியாது. மித்யை என்று சொல்லப்படுமானால், ஸத்ய வஸ்துவைக் காட்டிலும் வேறா? அல்லது ஒன்றா? என்று (பின்னமா? அபின்னமா?) சொல்லமுடியாது. துச்சம் என்று சொல்லப்படுமானால் முயல்கொம்பு கடத்தைக் காட்டிலும் வேறா? ஒன்றா? என்ற கேள்விக்கே இடமில்லை. துச்சமானாலும் ஸத்ய வஸ்து பேதம் இருப்பதாகச் சொல்லப்படுமானால் அதை துச்சம் என்றே சொல்லமுடியாது. இரண்டும் விருத்தம். ஆகவே ஸதஸத் விலக்ஷணம் என்று அத்வைத சித்தாந்தத்தில்தான் சித்திக்க முடியுமேயன்றி வேறு எந்த மதத்தினராலும் சித்தம் செய்வதற்கு முடியாது.

**40.** அவதாரிகை :

முன் ச்லோகத்தின் வ்யாக்யானத்தில் செய்யப்பட்ட இரண்டாவது விகல்பத்திற்கு பதில் சொல்லப்படுகிறது. ஸத்ய வஸ்துவைக் காட்டிலும் மித்யையான ஜகத் என்பது வேறல்ல என்றும் அபின்னம் என்று சொல்லப்படுமானால், அதுவும் சொல்லமுடியாது.

ச்லோகம் :

सत्यतो यदि मृषा न भिद्यते सत्यमेव सुतरां तदिष्यताम् ।
न द्वयात्मकतयाऽनृतं मतं पक्षयोः कथितदूषणद्वयात्

ச்லோகார்த்தம் : அந்ருத வஸ்து, ஸத்ய வஸ்துவிலிருந்து வேறுபட்டது அல்ல என்று சொல்லப்படுமானால் அதுவும் ஸத்யமென்றே சொல்ல நேரிடும். அந்ருத வஸ்துஸத்ய வஸ்துவிலிருந்து பின்னமென்றோ, அபின்னமென்றோ சொல்லமுடியாது. ஏனெனில் முன்னால் சொல்லப்பட்ட தோஷங்கள் இரண்டும் ஸம்பவிக்கும்.

வ்யாக்யானம் : ஸத்ய வஸ்துவைக் காட்டிலும் ஜகத் வேறல்ல என்றும் ஆனால் ஜகத் மித்யை என்றும் சொல்லப்படுமானால், ம்ருஷா வஸ்துவுடன் அபின்னமான ஸத்ய வஸ்துவிற்கும் ம்ருஷாத்வம் ஸம்பவிக்கும் ஸத்யவஸ்துவின் தாதாத்ம்யம் ம்ருஷாவஸ்துவிற்கு இருக்கிறது என்று சொல்லப்படுமானால் இரண்டும் விரோதமானதால் விரோத தன்மையுடைய இரண்டும் சேர்ந்து ஒரு வஸ்துவாக இருக்கமுடியாது என்பதால் பின்னாபின்னம் என்றும் சொல்லமுடியாது.

41. அவதாரிகை :

ப்ரபஞ்சம் ஸத்யமென்றோ அல்லது அந்ருதமென்றோ விபாகமே செய்யப்படாவிடில் ஏற்படும் நஷ்டம் என்ன ?

ச்லோகம் :

वेदवाक्यविषयस्य सत्यता बुद्धवाक्यविषयो मृषा भवेत् ।
इत्यदः कथयितुं न शक्नुया-द्ब्रह्मवादिसमयाद्बहिर्मुखः

ச்லோகார்த்தம் : வேத வாக்யவிஷயம் ஸத்யம், புத்த வாக்யவிஷயம் அந்ருதம் என்று, அத்வைதம் தத்வம் என்பதை ஒத்துக்கொள்ளாதவர்கள் சொல்வதற்கு முடியாது.

வ்யாக்யானம் : அத்வைதமேதத்வம், ஜகத் என்பது மித்யை என்று ஒத்துக் கொள்ளாமல், வேறுபட்டமுறையில் ஏதாவதொன்றை கல்பிக்கப்படுமானால் லோகத்தில் ஜாக்ரத் ஸத்யம், ஸ்வப்னம் மித்யை என்று விபாகம் செய்வதற்கே முடியாது. அது மட்டுமல்ல. வேதோக்தமான கர்மாக்கள் ஸ்வர்க்காதிகளுக்கு ஸாதனம் என்று சொல்லப்படுவதெல்லாம் ஸத்யமென்றும், பௌத்த சித்தாந்தத்தில் சொல்லப்படும் சைத்ய வந்தனாதிகள் மித்யை என்றும் விபாகம் செய்வதற்கே முடியாது. ஆகவே அத்வைதிகளான எங்களால், ஜாக்ரத் என்றும், ஸ்வப்னம் என்றும் ஸர்வ விவகாரங்களும் அநிர்வசனீயமாக அஞ்ஞானத்தினால் கல்பிக்கப்படுகிறது என்று சொல்லப்படுவதால் எங்கள் சித்தாந்தத்திற்கு ஹானி ஏதுமில்லை. ஆனால் பூர்வ மீமாம் ஸகர்களான உங்கள் சித்தாந்தத்தில் இது ஸத்யம், இது மித்யை என்ற விபாகமே செய்யமுடியாதகையால் உங்கள் சித்தாந்தத்திற்கே ஹானி ஏற்படும்.

**42.** அவதாரிகை :

ப்ரஹ்மவாதியான எங்களுக்கு பொருந்தாத விஷயம் என்பது ஏதுமில்லே.

ச்லோகம் :

सत्यमेवमनृतं च भेदतः कल्पितं भवतु वर्णितान्वयात् ।
तत्र तद्घटयितुं हि शक्यते नेतरत्र कथितोपपत्तिभिः

ச்லோகார்த்தம் : முன்னால் சொல்லப்பட்ட முறையில் ஸத்யம் அந்ருதம் என்ற இரண்டும் வேருக கல்ப்பிக்கப்படுகிறது என்று ஒத்துக்கொள்ள வேண்டும். அத்வைதத்தில் இவை இரண்டும் வேறு என்று நிரூபிக்கமுடியும். மற்ற மதங்களில் அவ்விதம் நிரூபணம் செய்யமுடியாது.

வ்யாக்யானம் : ஸத்யம் என்றும் மித்யை என்றும் விபாகம் செய்யப்படும் விஷயம், இப்போது ஒரு முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது. அதாவது அவித்யை என்ற ஒரே தோஷத்திஞல் ஜாக்ரத் ப்ரபஞ்சமும், அவித்யையுடன் நித்ரை என்ற தோஷம் சேர்ந்து ஸ்வப்னப்ரபஞ்சமும் தோற்றுவிக்கப்படுகிறது என்றும், அதஞல் ஜாக்ரத் ஸத்யம், ஸ்வப்னம் மித்யை என்று அத்வைதிகளான நாங்கள் விபாகம் செய்து சொல்கிரேும். ஸர்வமும்மாயாகல்பிதம் என்று சொல்லப்படும் எங்கள் சித்தாந்தத்தில் இப்போ்ப்பட்ட விபாகங்கள் இருப்பதாகச் சொல்லப்படுவதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லே. ஆஞல் ப்ரபஞ்சம் ஸத்யம் என்று சொல்கின்ற மற்றமதஸ்த்தர்களின் சித்தாந்தத்தின்படி இவ்வித விபாகங்கள் எதுவும் பொருந்தாது என்பதை முன்பே தூஷிக்கப்பட்டிருக்கிறது.

**43.** அவதாரிகை :

ஆகவே, ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் அஞத்ம வஸ்துக்களான வ்யாவஹாரிக வஸ்துக்களை போதிக்கக்கூடிய ஸாமர்த்யம் உடையதாகவே இருக்கிறது. ஆஞல் வேதாந்த வாக்யம்போல் அனதிகத அபாதித பலவதர்த்தமான தத்வத்தை ப்ரத்யக்ஷாதிகள் போதிக்க முடியாது. ப்ரத்யக்ஷாதிகளால்எந்த விஷயம் போதிக்கப்படுகிறதோ அவைகள் அஞ்ஞாதார்த்தமில்லே, அனதிகதமுமில்லே அபாதிதமுமில்லே. ஆகவே இவைகள் எதுவுமே உண்மையில் இல்லேயென்றே 'நே ஹ நாஞஸ்திகிஞ்சன' என்ற வாக்யங்களால் ப்ரத்யக்ஷாதி விஷயங்கள் பாதிக்கப்படுகிறது.

'ஜடே ஆவரண க்ருத்யபாவாத்' என்று ஜடத்திற்கு அஞ்ஞாதத்வமே ஸம்பவிக்க முடியாது என்று சொல்லப்பட்ட விஷயம் இப்போது முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

ச்லோகம் :

व्यावहारिकमतोऽवगम्यतां मानजातमखिलं न तात्त्विकम् ।
बाह्यवस्तुविषयं विरोधतोऽबुद्धबोधविधिशक्यसंभवात्

ச்லோகார்த்தம் : ஆகையால் ச்ருதிவிருத்தமாக இருக்கின்றதஞல் பாஹ்ய வஸ்துவை தெரிவிக்கின்ற ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் எல்லாம் வ்யாவஹாரிக ப்ரமாணம்தான் தாத்வீக ப்ரமாணமில்லே என்று அறிந்து கொள்ளவேண்டும். ஏனெனில் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் அனதிகதார்த்த போதகமாக இருக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** இதுவரை சொல்லப்பட்ட முறையில் ப்ரத்யக்ஷாதிகளால் அறியப்படும் வஸ்துக்களுக்கு பாரமார்த்திகஸத்யத்வம் சொல்ல முடியாது. வ்யாவகாரிக ஸத்யத்வம்தான் சொல்லமுடியும். இந்தவிதம் பேதவிவகாரங்கள் ஏற்படுவதற்கு காரணம் என்ன என்பதை அத்வைத சித்தாந்தத்தில்தான் சொல்லமுடியும். மற்றமதஸ்த்தர்களால் காரணம் ஏதும் சொல்லமுடியாது. ஆகவே ப்ரத்யக்ஷாதிகளால் அறியப்படும் விஷயங்கள் எல்லாமே லௌகிகம், வைதிகம் என்ற இரண்டு விவகாரங்களுக்கும் விரோதமாக இல்லாததால் அவைகளுக்கு வ்யாவகாரிக ப்ராமாண்யம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆனுல் வேதாந்த வாக்யம்போல் தத்வத்தை தெரிவிக்கக் கூடிய ப்ராமாண்யம் சொல்லமுடியாது. ஏனெனில் ப்ரத்யக்ஷாதிகளுக்கு அஞ்ஞாத ஞாபகம் என்ற லக்ஷணமோ அல்லது அபாதிதம் என்ற லக்ஷணமோகிடையாது. அதனுல் ப்ரத்யக்ஷாதிகளை ப்ரமாணம் என்றே சொல்லமுடியாது. என்பதால், ப்ரத்யக்ஷாதிகளால் சாஸ்திரம் என்ற ப்ரமாணம் பாதிக்கப்படுவதாக எந்த விதத்திலும் சொல்வதற்குமுடியாது.

**44. அவதாரிகை :**

ப்ரத்யக்ஷாதிகள் தத்வத்தை தெரிவிக்கமுடியாது என்ற காரணத்திஞல் வேதாந்த ப்ரமாணம் என்பது பாதிக்கப்பட முடியாது என்ற விஷயம் இப்போது உபஸம்ஹாரம் செய்யப்படுகிறது.

**ச்லோகம் :**

एवं न तत्त्वविनिवेदनशक्तियोगः संभाव्यतेऽनधिगताधिगतेरयोगात् ।
मानान्तरस्य सकलस्य ततश्च तेन बाधस्त्रयीशिरसि वर्णयितुं न शक्यः

**ச்லோகார்த்தம் :** இவ்விதம் அனதிகதவிஷயத்தை அறியமுடியாததால்தான் தத்வத்தை தெரிவிக்கின்ற சக்தி, ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்குக்கிடையாது. ஆகையால் வேதாந்தமானது ப்ரமாணுந்தரங்களிஞல் பாதிக்கப்படுகிறது என்று சொல்வதற்கு முடியாது.

**வ்யாக்யானம் :** அதத்வ விஷயகமான ப்ரமாணங்களிஞல், தத்வ விஷயகமான ப்ரமாணம் பாதிக்கப்படமுடியாது. அதனுல் வேதாந்த ப்ரமாணத்திற்கு, மற்றஎந்த ப்ரமாணத்துடன்விரோதம் என்பதே கிடையாது. சுக்தி என்ற அதிஷ்ட்டான ஞானம், ரஜதம் என்ற ஆரோபித ஞானத்திஞல் எப்படி பாதிக்கபடமுடியாதோ அதுபோல் தத்வத்தை தெரிவிக்கக்கூடிய ஸாமர்த்யம் இல்லாத ப்ரத்யக்ஷாதிகளால் தத்வத்தை போதிக்கின்ற சப்த ப்ரமாணம் என்பது பாதிக்கப்பட முடியாது. வேதாந்தம் என்ற சப்த ப்ரமாணம்தான் மற்ற ப்ரமாணங்களை பாதிக்கின்றது.

**45. அவதாரிகை :**

ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களை ப்ரமாணமே இல்லையென்று தள்ளமுடியாது என்றும் அவைகளுக்கும் ப்ராமாண்யம் உண்டு என்றும் 'பாவேச உபலப்தே': என்ற சூத்ரத்தில் வ்யாஸரால் சொல்லப்பட்டிருக்கின்றது. அதாவது, ஸவிகல்ப

கப்ரத்யக்ஷமென்றும், நிர்விகல்பகப்ரத்யக்ஷம் என்றும் இரண்டுவிதமான ப்ரத்யக்ஷங்களில், ஸவிகல்ப கப்ரதயக்ஷமே அப்ரமாணம் என்றும், நிர்விகல்ப கப்ரத்யக்ஷம் ப்ரமாணம்என்றும் சூத்ரகாரரால் தெரிவிக்கப்பட்டிருக்கின்றது. அதனுல்ப்ரத்யக்ஷம் எல்லாமே அப்ரமாணம் என்று எப்படிச் சொல்லமுடியும் ?

ச்லோகம் :

आरम्भणादिवचसा खलु निर्विकल्प प्रत्यक्षबुद्धिमनुसृत्य विकल्पबुद्धेः ।
आभासतां मुनिरुवाच तदाऽस्य भावो विज्ञायते स्फुटतरो गुडजिह्विकायाम्

ச்லோகார்த்தம் : ஆரம்பண சூத்ரத்திஞல் நிர்விகல்பகப்ரமாணத்தை ஒத்துக்கொண்டு விகல்ப ஞானம் என்பது மித்யை என்ற விஷயத்தை வ்யாஸபகவான் தெரிவிக்கின்றார். இவ்விதம் தெரிவிக்கின்றபோது அவருடைய மனதில் இருப்பது குடஜிஹ்விகாந்யாயம் என்பது ஸ்புடமாகவே அறியப்படுகின்றது.

வ்யாக்யானம் : அத்வைதம் தத்வம் என்று தெரிவிப்பதில் வேதாந்தம் ஒன்றே ப்ரமாணம் என்றும், மற்ற எல்லாமே அப்ரமாணம் என்றும் விசாரிக்கப்பட்ட முறையில் யுக்திக்கு பொருத்தமாக இருக்கிறது என்பதற்காக ஒப்புக்கொள்ளலாம். ஆனுல் 'பாவேச உபலப்தே': என்ற வ்யாஸ சூத்ரமானது ஸவிகல்பகப்ரத்யக்ஷத்தைக் காட்டிலும் நிர்விகல்பகப்ரத்யக்ஷம் ஸத்யம் என்று தெரிவிக்கின்றது. அதனுல் ப்ரத்யக்ஷம் எல்லாமே அப்ரமாணம் என்று எப்படிச் சொல்வது ?

சித்தா : 'பாவேச உபலப்தே': என்ற சூத்ரத்தின் மூலம் சூத்ரகாரர் ஸவிகல்பகத்தை காட்டிலும் நிர்விகல்பகப்ரத்யக்ஷம் ஸத்யம் என்று தெரிவிக்கின்ருரேயன்றி நிர்விகல்பகப்ரத்யக்ஷமேஸத்யம் என்று தெரிவிக்கவில்லே. கடம் ஸத்யம், படம் ஸத்யம் என்று எல்லோருக்கும் கடபடாதிகளில் உள்ள ஸத்யத்வ புத்தியை விலக்கி, அந்த வஸ்துக்களில் உள்ள விசேஷங்கள் ஸத்யமல்ல, வஸ்து ஸாமான்யமே ஸத்யம் என்று முதலில் ஸாதாரணமாக சூத்ரார்த்தம் போதிக்கப்படுகிறது. ஏனெனில் அறியப்படும் ஸர்வ ப்ரபஞ்சமும் மித்யை என்றும், அவைகளே தெரிவிக்கின்ற ப்ரமாணங்களும் ப்ரமாணமில்லேயென்றும் முதலிலேயே போதிக்கப்படுமானுல் அவைகளே க்ரஹித்து அறியக்கூடிய ஸாமர்த்யம் புத்திக்குக் கிடையாது. ஆகையால் குழந்தைகளுக்கு ஔஷதத்தில் வெல்லத்தைச் சேர்த்து கொடுப்பதுபோல் உண்மையான தத்வத்தை சிறிது சிறிதாக போதிக்கப்படுகிறது. ஆகவே, கடம் என்ற ஆகாரத்துடன் சேர்த்து ம்ருத்க்ரஹிக்கப்படுகின்றபோது அது ஸவிகல்பக ப்ரத்யக்ஷமென்றும், அந்தப்ரத்யக்ஷம் அப்ரமாணம் என்றும் முதலில் தெரிவிக்கப்படுகிறது. அதன்பிறகு கடம், ஸராவம், என்ற ஆகாரவிசேஷங்களையெல்லாம் விட்டும்ருத் என்ற ஸாமான்ய அம்ஸம் க்ரஹிக்கப்படுகின்றபோது அது நிர்விகல்பகப்ரத்யக்ஷம் என்றும் போதிக்கப்படுகிறது. இதில் கடம் ஸராவம் என்ற விசேஷங்கள் மித்யை என்றும், அவையெல்லாவற்றிலும் தொடர்ந்து அறியப்படும் ஸாமான்யாம்ஸமே ஸத்யம் என்றும் சொல்லப்படுகிறது. ஆகவே, வ்யாஸசூத்ரம், இந்த முறையில்தான் நிர்விகல்பக ப்ரத்யக்ஷம்மேப்ரமாணம் என்று தெரிவிக்கின்றது. இதேபோல் 'வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகா இத்யேவஸத்யம்' என்ற சாந்தோக்ய உபநிஷத்வாக்யமும்,

விகாரம், நாமதேயம் என்பதெல்லாம் அஸத்யமென்றும் ம்ருத் ஒன்றே ஸத்யம் என்றும் தெரிவிக்கின்றது. இதேபோல் ஆபரணம் என்பதில் ஸ்வர்ணம் ஒன்றேஸத்யம், நாம ரூபம் மித்யை என்று தெரிவிக்கின்றது. ஆகவே, கடபடாதிகளில் ஸாமான்யம், விசேஷம் என்ற அம்ஸங்களில் ஸாமான்ய அம்ஸமே ஸத்யமென்று முதலில் தெரிவிக்கின்றது. அதன்பிறகு ஸாமன்யமென்றும் விசேஷம் என்றும் சொல்லப்படும் ஸர்வமும் ஸத்யமல்ல என்று தெரிவித்து, எதுஸாமான்ய விசேஷங்கள் அற்ற ஸ்வரூபமோ அதுவே ஸத்யம் என்று அஸ்தூலம், அனனு, அஹ்ரஸ்வம் அதீர்க்கம் என்ற ஸர்வ விசேஷங்களும் அற்றதான கேவல ஸ்வரூபம் போதிக்கப்படுகிறது. அது ஒன்றே ஸத்யம், மற்ற ஸர்வமும் மித்யை என்று க்ரமமாக தத்வம் உபதேசிக்கப்படுகிறது. அதனுல் 'பாவேச உபலப்தே': என்ற சூத்ரத்தில் நிர்விகல்பக ப்ரத்யக்ஷம் ப்ரமாணம் என்று அங்கீகரிக்கப்பட்டிருந்த போதிலும், தத்வத்தை போதிக்கின்ற உபநிஷத் வாக்யங்களுக்கு விரோதமாக சூத்ரத்தில் ஏதும் சொல்லப்படவில்லை. ஆகவே, ஸவிகல்பகப்ரத்யக்ஷம் போலவே நிர்விகல்பக ப்ரத்யக்ஷம் என்பதும் அப்ரமாணம் என்பதே சூத்ரகாரர் அபிப்ருயம். அதனுல் அத்வைதம் தத்வம் என்று போதிக்கின்ற ப்ரமாணமே ப்ரமாணம், மற்றவையெல்லாம் அப்ரமாணம் என்றே சித்திக்கின்றது.

**46.** அவதாரிகை :

"ஸத்ஸம்ப்ரயோகே புருஷஸ்ய இந்த்ரியாணும் புத்தி ஜன்ம தத்ப்ரத்யக்ஷம் அநிமித்தம், வித்யமான உபலம்பனத்வாத்" என்று ஜைமினி சூத்ரம் தெரிவிக்கின்றது. அதாவது, இந்த்ரியங்களுக்கு, இருக்கின்ற வஸ்துக்களுடன் ஸம்பந்தம் ஏற்பட்டு அந்த விஷயம் க்ரஹிக்கப்படுகின்றபோது ப்ரத்யக்ஷம் என்று சொல்லப்படுகிறது என்று ப்ரத்யக்ஷத்திற்கு லக்ஷணம் சொல்லப்படுகிறது. ஸவிகல்பகமோ அல்லது நிர்விகல்பகமோ இரண்டுமே ப்ரத்யக்ஷத்திற்கு விஷயமாகின்றதால் ப்ரத்யக்ஷாதிகள் ப்ரமம் என்று ஜைமினி சூத்ரம் தெரிவிக்கின்றது. ஆகவே ப்ரத்யக்ஷமென்பது இருக்கின்ற வஸ்துவையே தெரிவிக்கின்றதால் அவைகளையும் ப்ரமாணம்என்றே ஒத்துக்கொள்ளப்படவேண்டும்.

ச்லோகம் :

सत्संप्रयोग इति जैमिनिरप्युवाच यल्लक्षणं तदुभयोः समभेव विद्यात् ।
आपाततस्तदथ युक्ति निपीडितं सत्सन्मात्रसंविदि निषीदति निर्विशङ्कम्

ச்லோகார்த்தம் : 'ஸத் ஸம்ப்ரயோகே' என்று தொடங்கப்படுகின்ற சூத்ரத்தினுல் ஜைமினிஎன்பவரும் ப்ரத்ய க்ஷலக்ஷணத்தை தெரிவிக்கின்ருர். இந்த லக்ஷணம் என்பது (ஸவிகல்பகம் நிர்விகல்பகம் என்ற) இரண்டு ப்ரத்யக்ஷத்திற்கும் பொதுவானதாகவே தோன்றுகிறது. ஆனுல் விசாரிக்கின்றபோது இது ஸன்மாத்ர நிர்விகல்பக வஸ்துவின் ஞானத்தினுல்தான் என்பது ஸந்தேஹமின்றி பொருந்துகிறது.

வ்யாக்யானம் : லோகத்தில் ம்ருத் என்பதும் கடஸராவாதிகள் என்பதும் இருக்கிறது என்று விவகாரம் செய்யப்படுகிறது என்று லோக வ்யவகாரத்தைக் கொண்டு ஸவிகல்பகம் நிர்விகல்பகம் என்ற இரண்டுமே ப்ரமாணந்தான் என்று இந்த சூத்ரம் தெரிவிக்கின்றது. ஆனுல் தத்வத்தை விசாரிக்கின்றபோது ஸவிகல்பகம் அப்ரமாணம் என்றும் நிர்விகல்பகமே ப்ரமாணம் என்றும் சொல்லவேண்டும். கடம், படம்

என்பவைகள் தொடர்ந்து இல்லாமல் வ்யபிசரிக்கின்றது என்பதால் அவைகளை ஸத் என்று சொல்லமுடியாது. அதனுல் நிர்விகல்பகத்தில்தான் ஸத்ஸம்பத்தி என்பது பர்யவஸானத்தை அடைகின்றது. ஆகவே ஜைமினிசூத்ரம் எங்களுடைய சித்தாந்தத்திற்கு அனுகூலமேயன்றி ப்ரதிகூலமாக இல்லை. இருக்கின்ற வஸ்துவுடன் இந்த்ரிய ஸம்பந்தம் ஏற்படுமானுல் அதுவே ப்ரத்யக்ஷம் என்று ப்ரத்யக்ஷத்திற்கு லக்ஷணம் சொல்லப்படுகிறது. ஸத்ஸம்ப்ரயோகத்தில் நிர்விகல்பகமாக எந்த ஞானம் ஏற்படுகிறதோ அது ப்ரதயக்ஷம் என்று அந்த சூத்ரத்தில் சொல்லப்படவில்லை. லோக வ்யவகாரத்தில் ம்ருத், கடம் என்ற இரண்டுமே 'ஸத்' என்று சொல்லப்படுவதால் ஸாமான்யம், விசேஷம் என்று வ்யவகாரம் செய்யப்படுவதில்லை.

'பாவேச உபலப்தே:' என்ற வ்யாஸ சூத்ரத்தில் மறைமுகமாகச் சொல்லப்பட்ட விஷயம், யுக்தியினுல் பாதிக்கப்பட்டு கேவல நிர்விகல்பக வஸ்து விஷயமாகவே ஸத்ஸம்பத்தி ஏற்படுகிறது என்ற அர்த்தத்தில்தான் பர்யவஸானத்தை அடைகின்றது. இந்தவிதம் விசாரிக்கப்படாத முறையில் ஸவிகல்பக ப்ரத்யக்ஷம் என்று சொல்லப்பட்டிருந்தாலும் கூட வ்யாஸசூத்ரம் என்பதைக் கொண்டு ப்ரயக்ஷம் என்பது நிர்விகல்ப விஷயந்தான் என்று எப்படி முடிவை அடைகிறதோ அதுபோல் ஜைமினியின் சூத்ரமும் இந்த கருத்தையே தெரிவிக்கின்றது என்று அறியவேண்டும். இந்த்ரியங்களுடன் ஸம்பந்தப்படும் அர்த்தங்களுக்கு 'ஸத்ஸம் ப்ரயோகே' என்று 'ஸத்' என்ற விசேஷணம் சொல்லப்படுகிறது. ப்ரஹ்ம மென்பது ஒன்றே ஸத் என்று நிச்சயிக்கப்பட்டிருப்பதாலும், அஞ்ஞாதத்வம் என்பதே ஸத்வஸ்துவிற்குத்தான் ஸம்பவிக்கும் என்பதாலும் ப்ரத்யக்ஷம் என்பது ஸத்வஸ்து விஷயமாகவே ப்ரமாணமாகின்றது என்றே சொல்லவேண்டும். கடம் ஸத், படம் ஸத் என்று வ்யவகார நிலையில் வ்யவகாரம் செய்யப்பட்ட போதிலும் அவை எல்லாமே வ்யபிசரிக்கின்றதால் உண்மையில் அவைகள் ஸத் என்று சொல்லமுடியாது. ஆகவே, ப்ரத்யக்ஷாதிகள் எல்லாவற்றிற்கும் வ்யாவகாரிக ப்ராமண்யம்தான் உண்டு. பாரமார்த்திக ப்ராமாண்யம் கிடையாது என்பதே ஜைமினியின் அபிப்ருயம் என்று சொல்லவேண்டும்.

**47.** அவதாரிகை :

நிர்விகல்பக ப்ரத்யக்ஷம் ப்ரமாணம் என்று ஜைமினியினுல் சொல்லப்படுகின்றதால், ப்ரத்யக்ஷம் என்பதும் ப்ரமாணம் என்று ஒத்துக் கொள்ளலாமே?

ச்லோகம் :

तत्रापि दुर्घटमवैति यदा तु तत्त्व बोधं विवक्षति विसृज्य विकल्पजालम् ।
किं कारणं वदति येन स तत्त्वगामि विज्ञानमर्थमवबोधयदप्रबुद्धम्

ச்லோகார்த்தம் : அந்த நிர்விகல்ப விஷயத்திலும் ப்ராமண்யம் பொருந்தாது என்று ஏற்படுகின்றபோது எல்லாவிதமான அனுத்மப்ரத்யக்ஷங்களையும் விட்டுவிட்டு, தாத்விக போதத்தையே ஜைமினி தெரிவிக்க விரும்புகிருர் என்பதை எப்படி அறிந்துகொள்ளமுடியும்? என்ருல், தாத்விக ஞானம் என்பது அறியாத விஷயத்தை போதிக்கின்றது என்றே ஜைமினி மஹரிஷியினுல் சொல்லப்படுகிறது.

(சித்தா) வ்யாக்யானம் : வ்யாவகாரிக நிலையில் நிர்விகல்பக ப்ரத்யக்ஷம்என்பது ப்ரமாணம் என்று சொல்லப்பட்டபோதிலும், உண்மையில் அஞ்ஞாத ஞாபகம் எதுவோ அதுவே ப்ரமாணம். ஜடமான ம்ருத் முதலானவைகளுக்கு அஞ்ஞாதத்வம் என்பது ஸம்பவிக்கமுடியாது. ப்ரஹ்மவிஷயகமான ஞானம் ஒன்றே தத்வத்தை தெரிவிக்கின்ற ப்ரமாணம். நிர்விகல்பக ப்ரத்யக்ஷம் என்பது தத்வம் என்ன என்று அறிவதற்குத்வாரமாக இருக்கிறது. அதுவே தத்வம் என்பதை தெரிவிக்கக் கூடிய ப்ரமாணமில்லை. அதனுல் அவைகளுக்கு வ்யாவகாரிகப்ராமாண்யமே சொல்லமுடியும். அஞ்ஞானத்திற்கு எது விஷயமோ அந்த விஷயம் எந்தப் ப்ரமாணத்தினுல் தெரிவிக்கப்படுகிறதோ அதுவே தத்வபோதக ப்ரமாணம் என்று ஜைமினியினுலேயே சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது (அப்ரபுத்தமர்த்தம் போதயதேவ விஞ்ஞானம் தத்வாவேதகம்) "அப்ரபுத்தமர்த்தம் அவபோதயத் விஞ்ஞானம் தத்வகாமி" என்று ஜைமினியின் வாக்யமே இருக்கின்றதால் அவருடைய அபிப்ருயமும் இதுவே என்பது ஸ்பஷ்ட்டமாக அறியப்படுகிறது. அனதிகதார்த்த போதகத்வம் என்பதே ப்ரமாணஸ்வரூபம் என்பதால் அனதிகதார்த்தத்வம் என்பது ப்ரத்யக்ஸ்வரூபத்திற்கே ஸம்பவிக்கமுடியும். மற்ற எந்த வஸ்துக்களுக்கும் அனதிகதத்வம் இருப்பதாக நிரூபணம் செய்யமுடியாது.

**48.** அவதாரிகை :

எந்த இடத்தில் இந்த வாக்யம் ஜைமினியினுல் சொல்லப்பட்டிருக்கிறது?

ச்லோகம் :

औत्पत्तिके हि भगवानयमप्रबुद्ध मर्थं प्रमाणविषयं कथयांबभूव ।
अत्राऽऽह तत्र ननु धर्मगतं प्रमाणं तत्त्वार्थगामि कथितं न परात्मगामि

ச்லோகார்த்தம் : அனதிகத விஷயமே ப்ரமாணத்திற்கு விஷயம் என்ற விஷயத்தையே ஜைமினி மஹரிஷி 'ஔத்பத்திக' சூத்ரத்தில் தெரிவிக்கின்ருர் (என்று சொல்லப்படுவதில் பூர்வபக்ஷியின் ஆக்ஷேபம்) தர்ம விஷயத்தை தெரிவிக்கின்ற ப்ரமாணத்தையே தாத்விகப்ரமாணம் என்று ஜைமினி தெரிவிக்கின்ருரேயன்றி பரமாத்மவிஷயத்தை தெரிவிக்கின்ற ப்ரமாணவிஷயத்தை இவ்வாறு தெரிவிக்கவில்லை.

வ்யாக்யானம் : 'ஔத்பத்திகஸ்து சப்தேன அர்த்த ஸம்பந்த': என்ற சூத்ரத்தில் ஜைமினியானவர், "அனுபலப்தே:அர்த்தேப்ரமாணம்" என்று அஞ்ஞாதார்த்தத்தை தெரிவிப்பது எதுவோ அதுவே ப்ரமாணம் என்று தெரிவிக்கின்ருர். அதனுல் ஜைமினியின் அபிப்ருயமும் இதுவே என்று சொல்லப்பட்டது.

பூர்வ : ஜைமினி என்பவருக்கு கர்ம காண்ட விஷயங்கள் மட்டுமே தெரியும். அதனுல் தர்மாதர்மங்களைப் பற்றியும் ஸ்வர்க்காதிகளைப் பற்றியும் எவரும் அறிந்து கொள்ள முடியாது என்பதால் அனதிகதம் என்றும் அவைகளே அஞ்ஞாதார்த்தம் என்றும் தெரிவிக்கின்ருரேயன்றி ப்ரஹ்ம ஞானம் என்பதைப்பற்றி அவரால் எதுவும் விசாரிக்கப்படாததால் அந்த விஷயம் பற்றி ஜைமினியினுல் சொல்லப்படவில்லை. முதலில் தர்மத்தைப் பற்றியே விசாரிக்கப்படுகிறது. தர்மம், ஸ்வர்க்கம் என்பதெல்லாம்

ப்ரத்யக்ஷாதிகளுக்கு விஷயமில்லை என்பதையே 'அப்ரபுத்தம்' என்று தெரிவிக்கின்றார். அதனுல் தர்மம் ஸ்வர்க்கம் முதலான விஷயங்களை தெரிவிக்கின்ற சாஸ்திரமே ப்ரமாணம் என்று அந்த சூத்ரத்தின் மூலம் தெரிவிக்கின்றார். பரமார்த்த தத்வத்தை போதிக்கின்ற வேதாந்தமே ப்ரமாணம் என்று அவரால் சொல்லப்படவில்லை.

**49.** அவதாரிகை :

முன்னுல் செய்யப்பட்ட ஆக்ஷேபத்திற்கு பரிகாரம் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

सत्यं यदाह पितृमान्व्यवहारदृष्टि माश्रित्य तत्कथितवान्प्रकृतोपयोगात् ।
दूरप्रसारितनिसृष्टनिगूढभाव स्तद्बादरायणमतानयनात्प्रतीमः

ச்லோகார்த்தம் : பிதா முதலானோர்களை குருவாக அடைந்த நீ சொல்வது உண்மைதான். ஜைமினியானவர் வ்யவஹார த்ருஷ்ட்டியை ஆச்ரயித்து ப்ரக்ருத விஷயத்திற்கு உபயோகமாக இருக்கிறது என்ற காரணத்திற்காக இவ்விதம் தெரிவிக்கின்றார். ஆனால் வேதாந்த விஷயம் என்பதை கருத்தில் கொண்டு இவ்விதம் சொல்கிறார் என்று, வ்யாஸாசார்யரின் மதத்தைக் கொண்டு வருவதின் மூலம் அறியப்படுகிறது.

வ்யாக்யானம் : மாதா, பிதா, ஆசார்யன் முதலானவர்களின் சிக்ஷையினுல் ஏற்பட்ட ஸம்ஸ்க்காரமுடைய புத்தியுடையவனாக இருக்கின்ற உன்னுல் சொல்லப்பட்ட விஷயம் முற்றிலும் உண்மையே அதாவது - ஜைமினி என்பவர் வ்யவகார த்ருஷ்டியை அனுசரித்து நிர்விகல்பகப்ரத்யக்ஷம் ப்ரமாணம் என்று ஒத்துக்கொள்ள வேண்டும் என்று தெரிவிக்கின்றார். ஆனால் ஜடமான தர்மத்திற்கு அஞ்ஞாதத்வம் ஸம்பவிக்கமுடியாது என்ற விஷயம்ஜைமினிக்கும் தெரியும். ஜைமினி மஹரிஷிகர்ம காண்டம் மட்டுமின்றி சாரீரகமீமாம்ஸா சாஸ்திரத்தையும் நன்கு அறிந்தவர்தான். அதனுல்தான் 'அர்த்தே ;அனுபலப்தே தத்ப்ரமாணம்' என்று, அறியப்படாத விஷயத்தில் சாஸ்திரமே ப்ரமாணம் என்று தெரிவிக்கின்றார். ஆகையால் ப்ரஹ்ம விஷயத்தில் வேதாந்தம் ஒன்றே ப்ரமாணம் என்பதை அறிந்தே அதற்கு விரோதமில்லாத முறையில் கர்ம காண்டத்திற்கு அவஸ்யமான விஷயம் எதுவோ அதை மட்டுமே தெரிவிக்கின்றார். அதனுல் முக்ய ப்ராமாண்யம் வேதாந்தம் ஒன்றுக்கே உண்டு என்பது ஜைமினியும் நன்கு அறிவார்.

**50.** அவதாரிகை :

கர்ம காண்டம் போலவேவேதாந்த பாகத்திலும் 'த்ரஷ்ட்டவ்யம்' முதலான தவ்யப்ரத்யயங்கள் இருக்கின்றதால் அந்த வாக்யங்களும் விதி வாக்யம்என்றே சொல்லப்படவேண்டும். ஆகையால் விதிவாக்யங்களாக இருந்தாலும் தத்வம் என்பதை போதிக்கின்ற ப்ரமாணம் என்றே சொல்லலாம் என்று வ்யாஸராலும் ஒத்துக் கொள்ளப்படுகிறது என்று சொல்லவேண்டும். அவ்விதம் சொல்லப்படவில்லை யென்றால், வேதாந்த வாக்யங்களிலுள்ள விதி வாக்யங்கள் ப்ரமாணமில்லை என்று சொல்ல நேரிடும்.

ச்லோகம் :

द्रष्टव्य इत्यपि विधिर्न विधिप्रमेय मात्मानमेव विनियच्छति तत्कुतश्चेत् ।
अज्ञातता च परमात्मन एव यस्माद्यस्माच्च कर्तृवशवर्ति न दर्शनं तत्

ச்லோகார்த்தம் : த்ரஷ்ட்டவ்ய: என்ற ச்ருதி (வாக்யமும்) விதி என்று சொல்லமுடியாது. அந்த ச்ருதி, ப்ரமாண விஷயமாக ஆத்மாவை தெரிவிக்கின்றது. எப்படியெனில், அஞ்ஞாததை என்பது பரமாத்மாவில் மட்டுமே இருக்கின்றது. ஞானம் என்பது கர்த்ருதந்த்ரமாகவும் இல்லே.

வ்யர்க்யானம் : 'த்ரஷ்ட்டவ்ய' : என்ற வாக்யத்தில்தவ்யப்ரத்யயம் இருந்தபோதிலும், அந்த தவ்யப்ரத்யயத்தில் நியோகம் (ஏவல்) என்றவிதி ஸம்பவிக்க முடியாது. 'ஆத்மா அறியப்பட வேண்டிய விஷயம்' என்பதைத்தான் அந்த வாக்யம் தெரிவிக்கின்றது. 'அஞ்ஞாத ஞாபகம் விதி:' என்று சொல்லப்படுவதால் ஆத்மாவைத் தவிர வேறு எதற்கும் அஞ்ஞாதத்வம் ஸம்பவிக்கமுடியாது. அதனால் ஆத்மா ஒன்றே அறியப்படவேண்டிய தத்வம் என்பதால், அந்த ஞானத்திற்கு ஆத்மா விசேஷணமாக இருக்கின்றது. அதனுல் ஆத்ம தத்வம் உபதேசிக்கப்படுகிறது என்றே சொல்லவேண்டும்.

அல்லது அந்த வாக்யம் விதிவாக்யமென்றே ஒத்துக்கொண்டபோதிலும், அந்த விதிக்கு விஷயமாக இருக்கின்ற ஆத்மாவை விடாமல் ஆத்மஸ்வரூபபோதம் ஏற்படும் பர்யந்தம் அந்த வாக்யம் ப்ரவர்த்திக்கின்றது என்று சொல்லலாம்.

பூர்வ : தவ்யப்ரத்யயம் இருக்கின்றபோது அந்த வாக்யம் விதிஇல்லேயென்று எப்படிச்சொல்வது ?

சித்தா : க்ரியைக்கு விஷயமாக இருந்தால்தான்விதேயம் என்று சொல்லலாம். ஆத்மாவிலோ, அல்லது ஆத்ம ஞானத்திலோ விதி என்பதே ஸம்பவிக்க முடியாது. அஞ்ஞாதமாக இருக்கின்ற வஸ்துவை ஞாபனம் செய்யவேண்டும் என்பதைத் தவிர விதியினுல் விதிக்கப்படவேண்டிய க்ரியை ஏதுமில்லே. அதனுல் நியோகமும் இல்லே. ஆத்மஸ்வரூபம் உபதேசிக்கப்படவேண்டும். அஞ்ஞாத ஞாபனம் என்பது ஜடவஸ்துக்களில் ஸம்பவிக்காது ஆத்மாவில் நியோக விதி ஸம்பவிக்காது ஆத்மதர்சனம் என்ற ஆத்ம ஞானம் விதியோக்யமல்ல. ஞானம் என்பதில் புருஷதந்தரம் ஏதுமில்லாததால் விதி ஸம்பிவிக்க முடியாது.

**51.** அவதாரிகை :

('க்ருத்யாச்ச' என்ற) க்ருத்யப்ரத்யயங்களில் தவ்யப்ரத்யயம் என்பதும் ஒன்று. லிங், லோட், தவ்ய ப்ரதய்யங்கள் எல்லாமே ஸாதாரணமாக புருஷதந்த்ரமான க்ரியையில்தான் உபயோகமாகும் என்ற ந்யாயத்தை அனுசரித்து இந்த இடத்திலும் கர்த்தவ்யமான விஷயமே, க்ருத்யார்த்தமான தவ்யப்ரத்யயம் தெரிவிக்கின்றது என்றே சொல்லவேண்டும். அதனால் விதி என்பதற்கு நியோகம் என்ற அர்த்தம் சொல்லாமல் வேறு அர்த்தம் எப்படிச் சொல்லமுடியும் ?

ச்லோகம் :

अर्हे कृत्यतृचश्च पाणिनिवचः स्पष्टं विधत्ते यतस्तस्माद्दर्शनयोग्यतां वदति नस्तव्यो न तत्त्वान्तरम् ।
तस्मादात्मपदार्थमात्रनियतं मेयत्वमेकान्ततो द्रष्टव्यादिवचो वदत्यनुभवादज्ञात आत्मा यतः

ச்லோகார்த்தம் : 'அர்ஹேக்ருத்யத்ருச்ச' என்ற பாணினியின் சூத்ரம் தவ்ய ப்ரத்யயத்திற்கு யோக்யதை என்ற அர்த்தத்தை ஸ்பஷ்ட்டமாக தெரிவிக்கின்றது. ஆகையால் தவ்யப்ரத்யயம் ஆத்மாதர்சனயோக்யம் என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றதேயன்றிவேறு அர்த்தத்தை தெரிவிக்கவில்லே. ஆகையால் த்ரஷ்ட்டவ்ய: என்பதுமுதலான பதங்கள் ஆத்மாவில் மட்டும் இருக்கின்ற ஞானயோக்யதையைத் தெரிவிக்கின்றது. ஏனெனில் அனுபவத்திஞல் ஆத்மா ஒன்றே அஞ்ஞாத (விஷய)மாக இருக்கின்றது.

வ்யாக்யானம் : 'அர்ஹேக்ருத்யத்ருசச்ச' என்ற பாணினி சூத்ரம் அர்ஹார்த்தத்திலும் க்ருத்ய ப்ரத்யயமான தவ்யப்ரத்யயமென்பதை உபயோகிக்கலாம் என்று போதிக்கின்றது. அதஞல் ஆத்மாதர்சனயோக்யம் என்பதையே இந்த தவ்யப்ரத்யயம் தெரிவிக்கின்றது. ப்ரமாணத்திஞல் சைதன்யமே ப்ரமேயமாகிறது என்று சொல்லலாமேயன்றி ஜடவஸ்துக்கள் என்பது ப்ரமேயமாக ஆக முடியாது என்று முன்பே சொல்லப்பட்ட விஷயமும் பொருந்துகின்றது. அஞ்ஞாதத்வ லக்ஷணமுடையது எதுவோ அதுவே ப்ராமணத்திஞல் அறியப்படவேண்டிய தத்வம் என்பதால், 'ஆத்மா ஒன்றே அறியத்தகுந்தது' என்றும் வேறு எதுவும் தர்சன அர்ஹம் இல்லை என்றும் இந்த வாக்யம் போதிக்கின்றது.

**52.** அவதாரிகை :

ஆத்மா ஒன்றே அறியப்படவேண்டிய தத்வம் என்றும், ஜைமினியின் அபிப்ருயமும் அதுவே என்றும் சொல்லப்படுமாஞல் 'ஸத்ஸம் ப்ரயோகே இந்திரியாணும் புருஷாணும் ப்ரத்யக்ஷம்' என்ற ஜைமினியிஞல் சொல்லப்படும் விஷயத்திற்கு விரோதமாக இருக்கிறதே ? அதாவது ஆத்மா ஒன்றே ப்ரமேயம் என்று சொல்லப்படுமாஞல், 'சோதஞ லக்ஷணேர்த்தோதர்ம: என்ற வாக்யம் அப்ரமாணம் என்று சொல்ல நேரிடுமே ?

ச்லோகம் :

रूप्यादिविभ्रममपेक्ष्य हि शुक्तिकादौ सत्संप्रयोगजनितैव तु बुद्धिवृत्तिः ।
तामप्यपेक्ष्य सति संहृतसर्वभेदे सत्संप्रयोगजनिता मतिरभ्युपेया

ச்லோகார்த்தம் : வெள்ளி என்ற த்ருஷ்டியில் பார்க்கின்றபோதும் கிளிஞ்சல் என்ற ஞானம் ஸத்ஸம்ப்ரயோகத்திஞல் ஏற்படுகின்றது என்றே ஒத்துக்கொள்ள வேண்டும். கிளிஞ்சல் என்ற த்ருஷ்டியில் பார்கின்றபோதுஸர்வபேதங்களும் அற்ற ஸத்விஷயகமான ஞானம் ஸத்ஸம் ப்ரயோகத்திஞல் ஏற்படுகிறது என்றே ஒத்துக்கொள்ள வேண்டும்.

(சித்தா) வ்யாக்யானம் : ச்ருதியானது ஆத்மா ஒன்றே அறியப்படவேண்டிய தத்வம் என்று (ப்ரமேயம்) தெரிவிக்கின்றது. அதனுல் ச்ருதிக்கு விரோதமாக ஜைமினியின் சூத்ரம் தெரிவிப்பதாகச் சொல்ல முடியாது. தத்வார்த்தம் என்ன என்பதை விசாரிக்கப்படாத நிலேயில் சொல்லப்படும் விஷயமாக இருக்கின்றதால், ஜைமினி ச்ருதிக்கு விரோதமாக சொல்லியிருப்பதாகச் சொல்லமுடியாது.

பூர்வ : ஆத்மா ஒன்றே ப்ரமேயம் என்று சொல்லப்படுமானுல், ப்ரத்யக்ஷாதிகளால் அறியப்படும் கடபடாதிகள், கர்மகாண்டத்திஞல் அறியப்படும் தர்மம் முதலானவைகள் எல்லாம் ப்ரமேயம் இல்லேயென்று சொல்ல நேரிடும். அதனுல் விதிவாக்யங்களுக்கும் தர்ம விஷயத்தில் ப்ரமாண லக்ஷணம் இல்லேயென்பதால் அப்ரமாணம் என்ருகுமே ?

சித்தா : தத்வம் என்னவென்று விசாரிக்காத வரையில் சுக்தி முதலானவைகளுக்கும், கடபடாதிகளுக்கும், தர்மம் முதலானவைகளுக்கும் வ்யாவகாரிக ப்ராமாண்யம் உண்டு என்று சொல்லப்படுகிறது. அதனுல் ப்ரத்யக்ஷாதிகளுக்கு லக்ஷண அவ்யாப்தி கிடையாது. சுக்தி என்பதில், இது சுக்தி என்று புத்தி வ்ருத்திஏற்படுமானுல், அந்த ஞானம் சுக்திகாஸம்ப்ரயோகஜனிதஞானம் என்று வெள்ளி என்ற ப்ரமஞானம் (மித்யாஞானம்) என்பதை அபேக்ஷித்து சொல்லப்படுகிறது. ஆகையால் ப்ரத்யக்ஷப்ரமாண லக்ஷணத்திற்கு அவ்யாப்தி சொல்லமுடியாது. ஆனுல் நிர்விகல்பக ஸன்மாத்ர ஸ்வரூப ஞானம் என்பது சுக்தி முதலான விகல்பங்கள் அற்ற ஸர்வபேதரஹிதமாக எந்த ஞானம் ஏற்படுகிறதோ, அந்த ஸத்ஸம்ப்ரயோக ஜனித புத்தி வ்ருத்தியே ப்ரமை (யதார்த்தஞானம்) என்று அறியப்பட்டால்தான்சுக்தி முதலான விஷய ஞானம் யதார்த்த ஞானமில்லே (ப்ரமையல்ல) என்றும் இது அனதிகதார்த்த விஷயமில்லே என்பதும் அறியப்படும்.

53. அவதாரிகை :

ச்ருதிக்கு விஷயமான தத்வம் ஒன்றே ஸன்மாத்ரம் என்றும், வேறு எந்த ப்ரமாணத்திஞல் ஏற்படும் புத்திவ்ருத்தி ஸத்விஷயமில்லே என்பதால், ச்ருதி ஒன்றே ப்ரமாணம் என்றும் சொல்லப்படுகிறது. இவ்விதம் புத்திவிருத்திஸன்மாத்ரத்தை க்ரஹிக்கின்றது என்பதில் எவ்வித வ்யபிசாரமும் கிடையாது. ஆகையால் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் ஸன்கட: ஸன்பட: என்றுதான் புத்தி வ்ருத்தி தொடர்ந்துஏற்படுகிறது. அதனுல் அந்த புத்திவ்ருத்திகளேயும் ஸத்விஷயம் என்றே சொல்லலாமே ?

ச்லோகம் :

वेदान्तवाक्यजनितां परमात्मबुद्धिवृत्तिं व्यपेक्ष्य पुनरत्र न काचिदस्ति ।
सत्संप्रयोगजनिता भुवनत्रयेऽपि बुद्धिस्तमोविरचितं हि जगत्समस्तम्

ச்லோகார்த்தம் : இந்த மூன்று லோகங்களிலும் வேதாந்தத்திஞல் ஏற்படும் பரமாத்ம ஞானத்தையன்றி ஸத்ஸம்ப்ரயோகத்திஞல் ஏற்படுகின்ற ஞானம் என்பது வேறு எதுவுமேஇல்லே.

வ்யாக்யானம் : அவ்விதம் சொல்லமுடியாது. ச்ருதிவாக்யத்திஞல் போதிக்கப்படும் வஸ்து ஒன்றே பரமார்த்தமான ஸத்வஸ்து. இந்த ஸத்வமே கடாதிகளுடன் சேர்ந்து

அறியப்படுகிறது. ஆனல் இவ்விதம் அறியப்படும்ஸத்வம் உபாதி ஸம்பந்தத்துடன் அறியப்படுகிறது. அதனல் உபாதியின் உற்பத்தி, விநாசம் என்பதை அபேக்ஷித்து ஸத்வம் என்பதும் உற்பத்தி விநாசம் உடையதாக அறியப்படுகிறது. ஆகவே, ப்ரத்யக்ஷாதிகளுக்கு விஷயமாகின்ற ஸத்வம் என்பது அஞ்ஞானத்தினல் ஏற்பட்டது. (தமோவிரசிதம்) ப்ரஹ்மத்தின் சக்தி என்று சொல்லப்படும் மாயையினல் தோற்றுவிக்கப்பட்ட மூன்று லோகங்களுக்கும் அதிஷ்ட்டானமான ப்ரஹ்மஸ்வரூபத்தின் ஸத்வம் என்பதை அன்றி வேருக ஸ்வயம் ஸத்வம் என்தே கிடையாது. ஆகவே ஸவிகல்பகப்ரத்யக்ஷமோ, நிர்விகல்பகப்ரத்யக்ஷமோ எதுவாக இருந்தாலும் அவைகளுக்கு விஷயமாகின்ற ஸர்வமும் அஸத். அவைகளில் அறியப்படும் ஸத்வம் ஒன்றே பரமார்த்தம். அதனல் உபாதியுடன் அறியப்படும் ஸத்வம் என்பது அவ்யபிசாரி (தொடர்ந்து இருக்கிறது) என்று சொல்லமுடியாது. அதனல் ப்ரத்யக்ஷாதிகளால் அறியப்படும் ஸத்வம் உபாதிவிசிஷ்ட்டமாக இருப்பதால் (வ்யபிசரிதம்) அந்தஸத்வம் தொடர்ந்து இருக்கமுடியாது. அதனல் ப்ரத்யக்ஷாதிகளுக்கு விஷயம் எதுவோ அவை அனைத்தும்அஸத் என்றும் ச்ருதி ப்ரமாணத்தினல் எந்த ஸத்வம் போதிக்கப்படுகிறதோ அதுவே ப்ரத்யக்ஷாதி விஷயங்களுடன் சேர்ந்து அறியப்படுகிறது என்றும் அறிந்து கொள்ளவேண்டும். ச்ருதியினல் போதிக்கப்படும் ஸத்வமே அவ்யபிசாரி. ஆகவே தத்வாவேதக ப்ராமாண்யம் என்பது ப்ரத்யக்ஷாதிகளுக்கு கிடையாது.

**54.** அவதாரிகை :

இந்த விதமே தர்ம விஷயமான விதி வாக்யங்களுக்கும் ஆபேக்ஷிக ப்ராமாண்யம்தான் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

धर्मेऽपि तत्त्वमतिरेव तु नोदनायाः सत्त्वादिवस्तुनि यथाऽक्षनिबन्धना धीः ।
अज्ञातताऽपि सदृशी व्यवहारकाले तत्त्वावबोधसमये न तु तत्त्वबुद्धिः

**ச்லோகார்த்தம் :** ப்ரத்யக்ஷப்ரமாணத்தினல் ஏற்படும் வ்யாவஹாரிக ஸத்ய விஷயத்தில், வ்யாவஹாரிக ஸத்ய ஞானம் ஏற்படுகிறது. அதேபோல் வேத வாக்யங் களினல் தர்ம விஷயங்களிலும், வ்யாவஹாரிகஸத்ய ஞானம் ஏற்படுகின்றது. வ்யவஹாரகாலத்தில் (தர்மாதி விஷயங்களில்) அஞ்ஞாததை என்பது அவ்விதமே (வ்யாவஹாரிகஸத்யமாகவே) இருக்கின்றது. பாரமார்த்திக ஸத்ய ஞானம் ஏற்படுகின்ற போது (தர்மாதிகளில்) ஸத்யத்வபுத்தி இருப்தில்லை.

**வ்யாக்யானம் :** இந்த்ரியங்களுக்கும், விஷயங்களுக்கும் ஏற்படும் ஸம்பந்தத்தினல் ஏற்படும் ஞானமே ப்ரத்யக்ஷம். இவ்விதம் ப்ரத்யக்ஷாதிகளால் ஏற்படும் விஷயஞானம் என்பது, அனதிகத அபாதிதபலவத் அர்த்தபோதகம் என்ற ப்ரமாண லக்ஷணமுடையது அல்ல. அதனல்அவைகளுக்கு முக்ய ப்ராமாண்யம் சொல்லமுடியாது என்ருலும் உபசாராத் (வ்யாவஹாரிக) ப்ராமாண்யம் இருக்கின்றதால் அவ்யாப்தி இல்லையென்று சொல்லப்பட்டது. இதேபோல் கர்மகாண்டத்திற்கும் வ்யாவஹாரிக ப்ராமாண்யம் ஒப்புக்கொள்ளப்படுவதால் அவ்யாப்தி இல்லை. அதனல் விதிவாக்யங்களிலிருந்து தர்ம

விஷயகமான எந்தபுத்தி ஏற்படுகிறதோ அதுவும் வ்யாவகாரிக தசையில் தத்வபுத்தி என்றே சொல்லப்படுகிறது.

பூர்வ : வேத வாக்யங்களாக இருக்கின்றதால் மித்யா ஞானம் போல் அப்ரமாணம் என்று சொல்லமுடியாதே ?

சித்தா : ப்ரத்யக்ஷம் முதலான ப்ராமாணங்களால் ஸவிகல்பக ஞானமோநிர்விகல் பகஞானமோ ஏற்படுகின்றதுபோல், தர்ம விஷயத்திலும் ஞானம் ஏற்படுகிறது. ஆனாலும் அவைகளுக்கு அஞ்ஞாதத்வம் என்பது கிடையாது. அதனால்தான் ப்ரத்யக் ஸ்வரூப யதார்த்த ஞானம் (உண்மை) ஏற்படுகின்றபோது, விதிவாக்யஜனித ஞானமோ அல்லது ப்ரத்யக்ஷாதி ஜனித ஞானமோ, தத்வஞானம் என்று சொல்வதற்கு முடியாது. தத்வத்தை விசாரிப்பதற்கு முன் அவிசாரரமணீயமானதத்வமாக இருந்தபோதிலும் பரமார்த்த ஞானம் என்று சொல்ல முடியாது. வ்யாவஹாரிக ப்ராமாண்யத்தை ஆச்ரயித்து விதிவாக்யங்களும் ப்ரமாணம் என்று சொல்லப்பட்டபோதிலும், தத்வ போதகமான சாஸ்திரம் ஒன்றே ப்ரமாணம் என்றும், ப்ரஹ்மமென்பதே ப்யமேயம் என்றும் பாதராயணமதத்தை அனுசரித்து சொல்லப்படும் விஷயத்தில் விரோதம் ஏதுமில்லை.

**55. அவதாரிகை :**

'ஸச்சத்யச்சாபவத்' என்ற ச்ருதிவாக்யத்தினுல் ஜகத்காரணமான ப்ரஹ்மமென்பது பரிணாமி உபாதானம் என்றே அறியப்படுகிறது. அதனுல் காரணத்தைப் போலவே கார்யம் இருக்க வேண்டும் என்ற ந்யாயத்தின்படி ப்ரஹ்மமென்பதும் ஜகத் என்பதும் ஸமஸத்தாகமாகவே இருக்க வேண்டும். அதனுல் ப்ரஹ்ம பரிணாமமான ஜகத் என்பது அதத்வம் (தத்வமில்லை) அப்ரமாணம் என்று எப்படி சொல்வது ?

ச்லோகம் :

आरम्भणादिवचनं सकलं प्रवृत्तं प्रत्यक्षबुद्धिविषयादपहर्तुमुच्चैः ।
तत्त्वं यथोदितनयेन विवर्तवाद माश्रित्य सत्यपरिणामनिवारणेन

ச்லோகார்த்தம் : 'வாசாரம்பணம் விகாரோநாமதேயம்' முதலான வாக்யங்கள் ப்ரஹ்ம பரிணாம வாதத்தை நிஷேதம் செய்து விவர்த்த வாதத்தை ஆச்ரயித்து முன்பு சொல்லப்பட்ட முறையில் ப்ரத்யக்ஷ விஷயங்களில் ஸத்யத்வபுத்தியை நிவர்த்திப்பதற் காகவே ப்ரவர்த்திக்கின்றது.

வ்யாக்யானம் : 'வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவஸத்யம்' என்ற ச்ருதிவாக்யத்தினுலேயே ஜகத் என்பது ப்ரஹ்ம பரிணாமமில்லை என்று சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் 'ததைக்ஷத பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி' என்ற வாக்யம் ப்ரஹ்மமென்பது அனேகமாக ஆகவேண்டும் என்று ஆலோசித்து தேஜஸ் முதலான ஸர்வமாகவும் தானுகவே ஆயிற்று என்று தெரிவிக்கின்றது போல் தோன்றுகிறது. இவ்விதம் ஜகத் என்பது ப்ரஹ்மபரிணாமமாக இருக்குமானுல் அதுவும் ஸத்யம் என்று சொல்லாம். ஆனுல் 'ஸதேவஸௌம்ய' இதமக்ரே ஆஸீத் ஏகமேவ அத்விதீயம் தத்ஸத்யம்' என்பது போன்ற (சாந்தோக்ய) வாக்யங்களின் உபக்ரம உபஸம்ஹாராதி

களினுல் ப்ரஹ்ம ஒன்றே ஸத்யம், வேறு எதுவும் ஸத்யமில்லே என்று அறியப்படுகிறது. அதனுல் ப்ரஹ்மமென்பது ஜகத்திற்கு பரிணுமி உபாதானமில்லை, விவர்த்தோ பாதானம் என்றே அறிய வேண்டும்.

**56.** அவதாரிகை :

'ததனன்யத்வம் ஆரம்பண சப்தாத்' என்ற சூத்ரத்தில், 'அனன்யத்வம்' என்பதால் காரணத்தைக் காட்டிலும் கார்யம் என்பது வேறல்ல என்று அபதேம் சொல்லப்படுகிறது. காரணம் ஸத்யமென்ருல் அதையன்றி வேருக இல்லாத கார்யம் என்பதும் ஸத்யமென்று தானே சொல்ல வேண்டும்? அவ்விதமின்றி கார்யம் மித்யை என்று எப்படிச் சொல்லமுடியும்? என்ருல்,

ச்லோகம் :

वाक्यप्रवृत्तिमनुसृत्य च सूत्रकारः सिद्धान्ततामनयदत्र विवर्तवादम् ।
तत्त्वप्रकाशनविधावपहृत्य शक्तिमारम्भणादिवचनादपरप्रमायाः

ச்லோகார்த்தம் : ப்ரக்ருத வாக்யங்களே அனுசரித்து வாசாரம் பணம் முதலான வாக்யங்களினுல் சூத்ரகாரரானவ்யாஸர் அன்யப்ப்ரமாணங்களில் தத்வாவேதக சக்தியை நீக்கிவிட்டு விவர்த்த வாதத்தையே சித்தாந்தமாக ஸ்தாபிக்கின்ருர்.

வ்யாக்யானம் : 'யேனாச்ருதம் ச்ருதம்' என்ற வாக்யம் 'ஏகவிஞ்ஞானேன ஸர்வம் விஞ்ஞான ரூபம்' என்ற உபக்ரம வாக்யங்களேயும் அனுசரித்து கார்யம் என்பதெல்லாம் மித்யை என்று போதிக்கப்படுகிறது. அதனுல் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் அனுத்மாவையே தெரிவிக்கின்றது. ஆகையால் அவைகளுக்கு தத்வத்தை தெரிவிக்கக்கூடிய ஸாமர்த்யம் இல்லே. ஆகவே 'ததனன்யத்வ ஆரம்பண சப்தாதிப்ய:' என்ற சூத்ரத்திற்கு 'வாசாரம் பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகா இத்யேவஸத்யம்' என்ற வாக்யத்தை உதாரணமாக தெரிவிக்கப்படுகிறது. இதனுல் விவர்த்தவாதமே வ்யாஸருடைய அபிப்ருயம் என்றும் பரிணுமவாதத்தை ஒத்துக்கொள்ளவில்லே என்றும் அறியப்படுகிறது. மேலும் 'த்ரீணிரூபாணித்யேவஸத்யம்' ஸன்மூலா: ஸௌம்யேமா: ஸர்வா: ப்ரஜா: ஸதாயதனு: ஸத்ப்ரதிஷ்ட்டா :' என்பது போன்ற வாக்யங்களும் தத்வப்பரதிபாதனத்திற்காக ப்ரவர்த்திக்கின்றது என்பதால் சூத்ரகாரரின் அபிப்ருயம் நன்கு அறியப்படுகிறது. ஆகையால் சாஸ்திரத்தையன்றி மற்ற எந்த ப்ரமாணங்களும் தத்வம் என்ன என்று அறிவிப்பதில் ஸாமர்த்யம் உடையதாக ஆகாது.

**57.** அவதாரிகை :

'ததனன்யத்வம்' என்ற அதிகரணத்திற்கு முன்பு 'போக்த்ராபத்தேரவிபாகச்ச' என்று ஒரு சூத்ரம் வ்யாஸரால் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த சூத்ரத்தில், போக்தாவென்றும் போக்யம் என்றும் விபாகம் செய்யப்படுகிறது. இவ்விதம் விபாகம் செய்யப்படுவதால் அத்வைதம் எப்படி சித்திக்கமுடியும் ? என்ருல், 'ச்யால்லோகவத்' என்ற சூத்ரத்தினுல் ஸமுத்ரம் ஏகம் என்ருலும் அதிலுள்ள அலேகள், நுரைகள் முதலான அனேக விதமான பேதங்கள் இருக்கின்றது. அதுபோல் ப்ரஹ்மமென்பது ஏகம் என்ருலும், சேதனம் அசேதனம் என்ற ப்ரபஞ்சாத்மனு அனகே ரஸம் என்று

சொல்லலாம் என்று பதில் சொல்லப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படுவது பரிணும வாதம் என்பதால் விவர்த்தவாதம்தான் வ்யாஸருடைய அபிப்ருயம் என்று எப்படிச் சொல்ல முடியும் ?

ச்லோகம் :

आरम्भसंहतिविकारविवर्तवादा- नाश्रित्य वादिजनता खलु वावदीति ।
आरम्भसंहतिमते परिहृत्य वादौ द्वावत्र संग्रहपदं नयते मुनीन्द्रः

ச்லோகார்த்தம் : ஆரம்பவாதம், ஸங்காதவாதம், பரிணுமவாதம் விவர்த்தவாதம் முதலானவைகளை ஆச்ரயித்து வாதிகள் விவாதம் செய்கின்ருர்கள். இவைகளில் ஆரம்பவாதம் ஸங்காதவாதம் என்ற இரண்டையும் தள்ளிவிட்டு மற்ற இரண்டு வாதங்களை வ்யாஸாசார்யர் அங்கீகரிக்கின்ருர்.

வ்யாக்யானம் : ஜகத் உற்பத்தியைப் பற்றி விசாரிக்கின்ற விஷயத்தில், பலர் பலவிதமாக அவரவர் புத்தி, சக்திக்கு ஏற்றவாறு விசாரித்து அவரவர்க்கு இஷ்டமான வாதங்களைக் கொண்டு ஒருவர்க்கொருவர் கோலாகமாக சப்தம் போடுகின்ருர்கள். இவ்வித வாதங்களில், உபநிஷத் தெரிவிக்கின்ற ஜீவபரமாத்ம ஐக்யம் என்ற சித்தாந்தத்திற்கு ஹானி ஏற்படாமல் இருக்க வேண்டும் என்ற காரணத்திஞல் வ்யாஸர் இந்த முறையில் விசாரிக்கின்ருர். அதாவது, கார்யம் காரணம் என்ற இரண்டிற்கும் அத்யந்த பேதம் இருப்பதாக சொல்லப்படுகின்ற ஆரம்பவாதம், ஸம்ஹதிவாதம் என்ற இரண்டும், சித்தாந்தத்திற்கு விரோதமாக இருக்கின்றது. அதஞல் அவ்வகள் இரண்டும் சரியல்ல என்று விட்டுவிட்டு சூக்ஷ்மமான தத்வத்தை அறிந்து கொள்ள முடியாதவர்களுக்காக, முதலில் பேதாபேதம் என்ற சிறிதளவு பேதம் இருப்பதாக தெரிவிக்கின்ருர். இந்தவிதம் அத்வைத சித்தாந்தத்திற்கு விவர்த்தவாதமே அனுகூலமாக இருக்கிறது என்ற போதிலும் முதலில் விர்த்தவாதம் என்பது கிரஹிப்பதற்கு முடியாது. அதஞல் பரிணுமவாதம் என்பதை தெரிவித்து அதன் பிறகு விவர்த்தவாதம் என்பதை சித்தம் செய்கிருர். விவர்த்தவாதம் என்பதே ஸாத்யம். அதஞல் இரண்டிற்கும் விரோதம் ஏதும் கிடையாது. ஸாத்யம் அறியப்படுமாஞல் அதன்பிறகு ஸாதனம் தேவையில்லை. விவர்த்தவாதத்திஞல் ஆத்ம ஞானம் சித்திக்குமாஞல் அதன் பிறகு விவர்த்தவாதம் என்பதும் தேவையில்லை.

58. அவதாரிகை :

பரிணும வாதம் விவர்த்த வாதம் என்ற இரண்டும் சித்தாந்தம் என்று சொல்லப்படுமாஞல் இரண்டும் ஒன்றுக்கொன்று விரோதமாக இருக்கிறதே ? என்ருல், பரிணும வாதம் என்பதை ஒத்துக் கொண்டபோதிலும் பாதகமில்லை என்ற முறையில் அப்யுபேத்யவாதமாகவே சொல்லப்படுகிறது. அதஞல் விவர்த்த வாதமே சித்தாந்தம் என்றே சித்திக்கின்றது என்பதால் விரோதம் ஏதுமில்லை.

ச்லோகம் :

तत्रापि पूर्वमुपगम्य विकारवादं भोक्त्रादिसूत्रमवतार्य विरोधनुत्त्यै ।
प्रावर्तत व्यवहृतेः परिरक्षणाय कर्मादिगोचरविधावुपायोगहेतोः

ச்லோகார்த்தம் : விரோத பரிகாரத்திற்காக கர்மோபாஸனு விதிகளின், உபயோகத்தை அறிந்து கொண்டும், வ்யாவஹாரிகத்தை காப்பாற்றுவதற்காகவும் முதலில் பரிணும வாதத்தை ஒத்துக்கொண்டு முதலில் "போக்த்ராபத்தே:" என்று ஆரம்பிக்கின்ற சூத்ரத்தை தெரிவிக்கின்ருர்.

வ்யாக்யானம் : விவர்த்தம், பரிணுமம், என்ற இரண்டு வாதங்களில் முதலில் பரிணும வாதம் என்பதை ஒத்துக் கொள்ளவேண்டிய அவஸ்யம் இருக்கின்றது. ஏனெனில், போக்தா, போஜ்யம், என்ற விபாகங்களை ஒத்துக்கொண்டு அவைகளுக்கு வ்யாவகாரிகப் ப்ராமாண்யம் சொல்லப்பட்டால்தான் கர்மகாண்ட விதிகள் உபயோகமாக ஆகும். அதனுல் இந்த காரணத்தை உத்தேசித்து முதலில் பரிணுமவாதம் என்பதை ஒத்துக்கொண்டு அவைகளை விசாரிக்கப்படுகிறது. அவ்விதமின்றி முதலிலேயே விவர்த்தவாதம் என்பது சித்தம் செய்யப்படுமானுல் கர்த்தாக்ரியா, காரகம், பலம் என்ற பேதங்கள் இல்லையென்று சொல்ல நேரிடும். அதனுல் கர்த்தாவான அதிகாரி என்பதே சித்திக்கவில்லையென்ருல், கர்மா, உபாஸனம், அதன் பலம் என்பது எல்லாமே சித்திக்க முடியாது. இவ்விதம் ஏற்படுமானுல் வேதத்தின் ஒரு பாகமாக கர்ம காண்டத்திற்கு ப்ரமாண்யம் சித்திக்காது. அதுமட்டுமல்ல, கர்ம காண்டத்தலுள்ள கர்மவிதி, உபாஸனு விதி என்பதெல்லாம் வேதாந்த விசாரத்திற்கு உபயோகமாக இருக்கின்றது என்பதால் பரிணும வாதத்தைப் பற்றி விசாரிக்கப்படுகிறது. கர்மகாண்ட வாக்யம் அப்ரமாணம் என்று சொல்லப்படுவதால் என்ன நஷ்டம் ஏற்படும்? என்ருல், வேதம் வேதாந்தம் என்ற இரண்டும் இங்கு விசாரிக்கப்படுகின்றதால், அவைகளுக்கு எந்தவிதமான ப்ராமாண்யம் இருக்கின்றது என்பதை விசாரித்து தெரிவிக்கவேண்டிய அவஸ்யம் இந்த வேதாந்த பாகத்திற்கு இருக்கின்றது. ஆகையால் போக்தா, போஜ்யம் என்ற விபாகமில்லாமல் விவர்த்தவாதம் என்பதை சொல்லப்படுமானுல் ஸர்வ ஸாங்கர்யம் ஏற்படும். ஆதனுல் "போக்த்ராபத்தே: அவிபாகச்சேத்" என்ற சூத்ரத்தின் மூலமாக ஸந்தேகத்தை தெரிவித்து அதன் பிறகு ஸர்வமும் ப்ரஹ்மத்திலிருந்தே உண்டாகிறது என்று சொல்லப்படுகிறது. அதனுல் போக்தா போஜ்யம் இவைகளுக்கு ஸாங்கர்யம் ஏற்படாது என்று ஸமுத்ர ஜலமே அலையாகவும் நுரையாகவும் இருக்கிறது என்று தெரிவிக்கின்ருர். அதன் பிறகு அலை, நுரை என்ற பேதம் போல் பேதமும் இருக்கலாம் என்று ஸமாதானம் தெரிவித்து வ்யாவகாரிக ப்ராமாண்யம் என்பதை காப்பாற்றுவதற்காக, ஸாங்க்யபக்ஷமாக இருந்தபோதிலும் பரிணும வாதம் என்பதை ஒப்புக்கொண்டு, அந்த பக்ஷத்தை இங்கு விசாரிக்கப்படுகிறது.

**59.** அவதாரிகை :

முதலில் பரிணும வாதம் பற்றி விசாரிக்கப்படுவதால் அதுவே சித்தாந்தம் என்று சொல்லலாமே? ஏனெனில் இரண்டும் அத்வைத சித்தாந்தத்திற்கு விரோதமில்லை என்று தானே சொல்லப்படுகிறது?

ச்லோகம் :

साक्षादिहाभिमतमेव विवर्तवाद- माहत्य सूचयति पूर्वमपेक्षमाणः ।
आरम्भणादिवचनेन विवर्तवादं शक्नोति वक्तुमुदिते परिणामवादे

ச்லோகார்த்தம் : முதலில் பரிணாம வாதத்தை ஆச்ரயித்து முடிவில் சிந்தாந்தமான விவர்த்த வாதத்தையே நேரிடையாக வ்யாஸாசார்யர் அறிவிக்கின்றார். பரிணாம வாதத்தை முதலில் தெரிவித்தவுடன் 'வாசாரம்-பணம்' முதலான வாக்யங்களின் ஸஹாயத்தினால் விவர்த்தவாதத்தை தெரிவிக்கமுடிகின்றது.

வ்யாக்யானம் : வேதாந்த சாஸ்திரம் ஜீவபரமாத்ம ஐக்யத்தை போதிப்பதில்தான் தாத்பர்யமுடையதாக இருக்கின்றது. அதனால் அந்த விஷயத்தினை போதிப்பதற்கு மிகவும் ஸமீபமாக சிறந்த உபகாரகமாக இருப்பது விவர்த்தவாதம்தான். பரிணாம வாதத்தினால் அத்யந்த அபேதம் என்பது போதிக்க முடியாது. ஆகவே விவர்த்த வாதம் என்பதை புரிந்து கொள்வதற்கு உபாயமாக இருக்கிறது என்பதற்காகவே, முதலில் பரிணாம வாதம் பற்றி தெரிவிக்கப்படுகிறது. 'நிர்விசேஷம் ப்ரஹ்ம' என்று அறியப்படுவதற்கு விவர்த்தவாதம் என்பதே சாக்ஷாத் உபயோகமாக ஆகிறது. அதனால்தான் சூத்ரகாரர், விவர்த்தவாதம் என்பதை முக்யமாக ஒப்புக்கொள்ளவேண்டும் என்பதற்குரிய யுக்திகளைக் கொண்டு விளக்குகின்றார். ஆகவே, காரணம், கார்யம் என்று தெரிவிக்கின்ற பரிணாம வாதம் என்பது அறியப்பட்டால்தான், அதன்பிறகு கார்யம் என்பதெல்லாம் மித்யை காரணம் ஒன்றே ஸத்யம் என்பது ஸ்பஷ்ட்டமாக அறிவிக்க முடியும். இந்தவிதம் ஜகத் என்பது ப்ரஹ்மத்திலிருந்து உண்டாயிற்று என்று ப்ரஹ்மகார்யம் ஜகத் என்று தெரிவித்தால்தான் கார்யமான ஜகத் என்பது மித்யை என்று போதிக்க முடியும். அதனால் அடுத்த சூத்ரத்தின் மூலமாக விவர்த்தவாதம் என்பது போதிக்கப்படுகிறது. அதன் மூலம் பரிணாம வாதம் விலக்கப்படுகிறது.

**60.** அவதாரிகை :

இந்த விஷயம் லௌகிக த்ருஷ்ட்டாந்தத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

आरुह्य भूमिमधरामितराऽधिरोढुं शक्येति शास्त्रमपि कारणकार्यभावम् ।
उक्त्वा पुरा परिणतिप्रतिपादनेन संप्रत्यपोहति विकारमृषात्वसिद्ध्यै

ச்லோகார்த்தம் : கீழ்படியில் ஏறுவதன் மூலமாகவே மேலே இருக்கின்ற படியை அடைய முடியும். இந்த விதமே சாஸ்திரம் என்பதும் முதலில் பரிணாம வாதத்தை தெரிவிப்பதன் மூலம் கார்ய காரண வாதத்தை தெரிவித்து அதன் பிறகு மித்யாத்வம் சித்திப்பதற்காக கார்யத்தை நிஷேதம் செய்கின்றது.

வ்யாக்யானம் : முதலில் கீழே இருக்கின்ற படியில் காலை வைத்தால்தான், அதற்கு மேலே உள்ள படியில் சுலபமாக ஏறமுடியும். அதேபோல், சாஸ்திரம் என்பது, ப்ரஹ்மத்திற்கும் ஜகத்திற்கும் காரண, கார்யபாவம் இருக்கின்றது என்று முதல்படியாக தெரிவிக்கின்றது.

அதாவது பரிணாம வாத்தின் மூலம் கடம் என்பதற்கு ம்ருதாத்மனா அபேதம் இருந்தபோதிலும், கடாத்மனா சிறிது பேதம் அறியப்படுகிறது. ஆனால் அத்யந்தம் பேதம் என்பது இல்லையென்று சொல்வதற்காக, முதலில் பரிணாம வாதமே ஒத்துக் கொள்ளப்படுகிறது. இதையே ச்ருதி வாக்யமும் 'ஸச்சத்யச்சாபவத்' என்று கார்ய

காரணபாவம் என்பதை போதிக்கின்றது. அதன் பிறகே, பரிணாம வாதத்திலுள்ள சிறிது பேதம் என்பதும் ஒத்துக் கொள்ள முடியாது என்ற காரணத்தினால், "போக்த்ராபத்தே:" என்ற சூத்ரத்திற்கு பிறகு "ஆரம்பண சப்தாத்திப்ய:" என்ற அதிகரணத்தில் இந்த விஷயம் விசாரிக்கப்படுகிறது. அதன் மூலம் விவர்த்தவாதம் என்பதே முக்யம் என்று "வாசாரம் பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகா இத்யேவஸத்யம்" என்றும் "ஐததாத்ம்யம் இதம்ஸர்வம் தத்ஸத்யம் ஸஆத்மா" என்றும் "த்ரீணி ரூபாணி இத்யேவ ஸத்யம்" என்பது போன்ற பலவாக்யங்கள் காரணமான ப்ரஹ்மம் ஒன்றே ஸத்யம், அதைத் தவிர வேறான மற்ற ஸர்வமும் மித்யை என்று தெரிவிக்கின்றது. ஆகவே கார்யமென்பதெல்லாம் மித்யை என்றும் காரணம் ஒன்றே ஸத்யம் என்றும் தெரிவிக்கக்கூடிய விவர்த்தவாதம் என்பதே சிறந்தது என்று சித்திக்கின்றது.

**61.** அவதாரிகை :

உப்பரிக்கையில் ஏற வேண்டுமானால் அதற்கு உபாயமாக் இருக்கின்ற முதல் படியில் ஏறிய பிறகே, மற்றபடிகளில் ஏறமுடியும். அதுபோல் பரிணாம வாதம் என்ற முதல் படியைக் கொண்டே இரண்டாவது படியான விவர்த்தவாதம் அறியப்படவேண்டும். அதன் மூலமே தத்வம் என்பதை அறிய வேண்டும் என்று மேலும் இந்த விஷயம் பற்றி விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

विवर्तवादस्य हि पूर्वभूमि-र्वेदान्तवादे परिणामवादः ।
व्यवस्थितेऽस्मिन्परिणामवादे स्वयं समायाति विवर्तवादः

ச்லோகார்த்தம் : வேதாந்த முறைப்படி பரிணாம வாதமே விவர்த்தவாதத்திற்கு பூர்வாங்கமாக இருக்கின்றது. பரிணாம வாதம் சித்திக்குமானால் ஸ்வயமே விவர்த்தவாதம் ஏற்படுகின்றது.

வ்யாக்யானம் : வேதாந்தம், எவ்வித பேதமும் அற்றதாக அத்வைதமே தத்வம் என்று போதிக்கின்றது. அத்யந்தம் அபேதமான தத்வம் என்பது, சிறிதளவு பேதமிருப்பதாகத் தெரிவிக்கின்ற பரிணாம வாதத்தைக் கொண்டு எப்படி நிரூபிக்கமுடியும்? அதனால் முதலில் சுலபமாக அறிந்து கொள்வதற்கு உபாயமாகவே பரிணாம வாதம் சொல்லப்படுகிறது.

ப்ரஹ்மமென்று ஒரு தத்வம் இருக்கின்றதா? இல்லையா? என்பதிலேயே எல்லோருக்கும் ஸந்தேஹம் இருக்கின்றது. அதனால் அறியப்படும். இந்த ஜகத் கார்யமாக இருக்கின்றதால் அதற்கு ஒரு காரணம் இருக்க வேண்டும் என்று பரிணாம வாதத்தைக் கொண்டு விளக்கப்படுகிறது. முதலில், கார்யமாக இந்த ஜகத் ப்ரஹ்ம பரிணாமம் என்று தெரிவித்து, அதன் பிறகு கார்யம் காரணம் என்பதில் கார்யம் மித்யை, காரணம் ஸத்யம் என்று ம்ருத், கடம் என்பதைக் கொண்டு விவர்த்தவாதம் என்பதைக் கொண்டு விளக்கப்படுகிறது. இந்த விவர்த்தவாதம் என்பதே கார்ய காரணபாவ மற்ற ப்ஹ்மவஸ்து ஒன்றே ஸத்யம் என்று போதிப்பதற்கு முக்ய காரணமாக இருக்கின்றது. (இவ்விதம் ப்ரஹ்ம தத்வம் கார்ய காரண பாவத்தைக் கொண்டே விளக்கப்பட வேண்டிய நிர்பந்தம் இருக்கின்றது.) அதன் பிறகு நிஷ்க்ரிய நிஷ்களமான ப்ரஹ்மமென்பது

கூடஸ்த்தம் என்பதால், அந்த ஸ்வரூபம் அவிகாரி என்பதால் இந்த ஜகத்திற்கு பரிணாமி உபாதானமாக இருக்கமுடியாது என்று தெரிவித்து, அதனால் ப்ரஹ்மமென்பது ஜகத்திற்கு விவர்த்தோபாதான காரணம் என்று நிரூபணம் செய்யப்படுகிறது. இந்த விதம் வஸ்துவின் ஸ்வரூபபோதம் ஏற்படுவதற்காக, கார்ய காரண பாவம் என்பது ஆரோபிதமாகச் சொல்லப்படுகிறது. அதிஷ்ட்டானஸ்வரூப ஞானம் ஏற்படுகின்ற போது ஆரோபிதமான இந்த ஜகத் உண்மையில் இல்லையென்றும், இது ப்ராந்தி ஞானம் என்றும் நிச்சயிக்கப்படுகிறது.

**62. அவதாரிகை :**

முதலில் சொல்லப்படும் ச்ருதிவாக்யத்தை அனுசரித்தே பின்னால் சொல்லப்படும் ச்ருதிக்கு அர்த்தம் செய்யப்படவேண்டும் என்ற ந்யாயத்தைக் கொண்டு “ஏகேன ம்ருத் பிண்டேன ஸர்வம் ம்ருண்மயம்” என்று (சாந்தோக்யம் 6-1-4) சொல்லப்படும் பரிணாம வாதயுக்தியை அனுசரித்து அதற்கு விரோதமின்றி பின்னால் சொல்லப்படும் ‘வாசாரம் பணம்’ என்ற ச்ருதிக்கு அர்த்தம் செய்யவேண்டும்.

ச்லோகம் :

उपायमातिष्ठति पूर्वमुच्चै रुपेयमाप्तुं जनता यथैव ।
श्रुतिर्मुनीन्द्रश्च विवर्तसिद्ध्यै विकारवादं वदतस्तथैव

ச்லோகார்த்தம் : உபேயத்தை அடைவதற்காகவே ஜனங்கள் உபாயத்தை கடைப்பிடிக்கின்றார்கள். அதே போல் ச்ருதியும் வ்யாஸாசார்யரும் விவர்த்த வாதத்தை அடைவதற்காக, பரிணாம வாதத்தைக் கடைப்பிடிக்கின்றார்கள்.

வ்யாக்யானம் : லோகத்தில் உபேயமான பலனை அடைவதற்குரிய காரணமான உபாயத்தை அறிந்து, அதன் மூலமே உபேயத்தை அடைகின்றார்கள் அதேபோல் சூத்ரகாரரும், ச்ருதியும் உபாயத்தையே முன்னால் தெரிவிக்கின்றதாகச் சொல்லப்பட வேண்டும் ஏனெனில் ச்ருதியானது ‘ஏக விஞ்ஞானேன ஸர்வம் விஞ்ஞாதம்’ என்று ஒன்றை அறிந்தால் மற்ற எல்லாமே (அறிந்ததாக) அறியப்பட்டதாக ஆகும் என்று ப்ரதிஞ்ஞை செய்திருக்கின்றது. அதற்கு ஸாதனமாகவே பரிணாம ச்ருதி வாக்யம் தெரிவிக்கின்றது. ஆனால் அதே சாந்தோக்ய உபநிஷத்தின் மற்றொரு வாக்யம் “வாசாரம் பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகா இத்யேவ ஸத்யம்” என்று விகாரங்கள் எல்லாம் மித்யை என்று வர்ணித்து ம்ருத் ஒன்றே ஸத்யம் என்று தெரிவிக்கின்றது. அதனால் பரிணாம வாதம் என்பது உபாயமாக முதலில் சொல்லப்படுகிறதேயன்றி அதுவே தத்வம் என்று தாத்பர்யமாகச் சொல்லப்படவில்லை.

**63. அவதாரிகை :**

பரிணாம வாதம் யாரால் சொல்லப்படுகிறது ? விவர்த்தவாதம் என்பது யாருடைய பக்ஷம் என்று விசாரிக்கின்றதன் மூலமாக மற்ற எல்லா வாதங்களைப் பற்றியும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

आरम्भवादः कणभक्षपक्षः संघातवादस्तु भदन्तपक्षः ।
सांख्यादिपक्षः परिणामवादो वेदान्तपक्षस्तु विवर्तवादः

ச்லோகார்த்தம் : ஆரம்பவாதம், என்பது கணுதரின் பக்ஷம், ஸங்காதவாதம் என்பது பௌத்த பக்ஷம், பரிணும வாதம் ஸாங்கய பக்ஷம், விவர்த்த வாதம் என்பது வேதாந்தபக்ஷம்.

வ்யாக்யானம் : 1. பரமாணுவாதிகளால் சொல்லப்படும் ஆரம்ப வாதம் என்பது, இந்த ஜகத்திற்கு பரமாணுவே காரணம் என்று சொல்கிருர்கள். அதாவது, கடம் என்ற கார்யத்திற்கு பரமாணுக்கள்காரணம். அந்த பரமாணுக்களைக் காட்டிலும் கடம் என்ற கார்யம் வேறு என்றும், இவ்விதம் வேருக இருக்கின்ற கடத்திற்கு பரமாணு என்பது ஸமவாயி காரணம் என்று சொல்கிருர்கள். அந்த பரமாணுவின் ஸம்யோகம் என்பது அஸமவாயி காரணம் என்றும், காலம், அத்ருஷ்ட்டம் முதலானவைகள் நிமித்த காரணம் என்றும் சொல்கிருர்கள். இந்த விதம் கார்யம் வேறு, காரணம் வேறு என்று சொல்லப்படும் பக்ஷம் ஆரம்ப வாதம் என்று சொல்லப்படுகிறது.

2. பரமாணுக்கள் எல்லாம் ஒன்ருக சேர்ந்துதான் ஜகத்தாக ஆகின்றது என்பதால் கார்யம் காரணம் என்ற இரண்டும் வேறல்ல ஒன்றே என்று அத்யந்த அபேதம் சொல்லப்படும் பக்ஷமே ஸங்காதவாதம். இதுவே பௌத்த சித்தாந்தம்.

3. ம்ருத் என்ற காரணம் கடரூபமாக பரிணுமத்தை அடைகிறது என்ற பரிணும வாதம் ஸாங்க்ய பக்ஷம்.

4. காரணம் என்பது உண்மையில் கார்யமாக மாறுதலை அடையவில்லையென்றும், கார்யமாக தோன்றுவதெல்லாம் உண்மையில் தத்வமில்லை என்ற விவர்த்தவாதம் வேதாந்த பக்ஷம்.

**64.** அவதாரிகை :

காரணம் கார்யமாக மாறுபடுகிறது என்ற பரிணும வாதம் (விகார வாதம்) தேவை இல்லையென்ருல், அதைப் பற்றி ஏன் விசாரிக்க வேண்டும்? பரிணுமவாதம், விவர்த்தவாதம் என்பதை விளக்குவதற்கு உபயோகமாகிறது என்றால், இரண்டு வாதமும் வேதாந்தத்திற்கு (ப்ரயோஜனமாகின்றதால்) இரண்டுமே உபாயம் என்று சொல்லாமே?

ச்லோகம் :

विकारवादं कपिलादिपक्ष मुपेत्यवादेन तु सूत्रकारः ।
श्रुतिश्च संजल्पति पूर्वभूमौ स्थित्वा विवर्तप्रतिपादनाय

ச்லோகார்த்தம் : முதல் படியில் இருந்துகொண்டு, விவர்த்த வாதம் என்பதை போதிப்பதற்காக, கபிலர் முதலானவர்களின் பக்ஷமான பரிணும வாதம் என்பதை அப்யுபேத்யவாதமாக (ஒத்துக்கொண்டு) சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** அவ்விதம் ஒத்துக்கொள்ள முடியாது. ஏனெனில், கபில பக்ஷமான விகாரவாதம் என்பது அப்யுபேத்யவாதமாக ஒப்புக்கொண்டே அந்தபக்ஷம் விசாரிக்கப்பட்டது. மேலும் விவர்த்தவாதம் என்பதை பின்னுல் தெரிவிக்க வேண்டுமென்ற கருத்தினைக் கொண்டு அதற்கு உபாயமாக பரிணும வாதம் என்பதை உபாயமாகவே தெரிவிக்கின்றது. அதனுல் உபயோகமான விவர்த்தவாதம் சித்தித்த பிறகு உபாயம் என்பது தேவை இல்லை. ஆகவே, விவர்த்தவாதம் போல் பரிணும வாதம் என்பது சித்தாந்தம் என்று சொல்வதற்கே முடியாது.

**65. அவதாரிகை :**

எந்த ஒரு வஸ்து காரணமாக இருக்கிறதோ அந்த வஸ்து இருக்கின்றபடி அறியப்படாமல் வேருெரு ரூபத்தில் தோன்றுமானுல் அது விவர்த்தமாகத் தோன்றுகிறது என்பதால் விவர்த்தவாதம் என்று சொல்லப்படுகிறது. அதேபோல் எந்த ஒரு காரண வஸ்து வேருெரு வஸ்துவாக மாறுதலே அடைகின்றதால் வேறு ரூபமாக தோன்றுகிறதோ அதுவே பரிணும வாதம் என்று சொல்லப்படுகிறது. அதனுல் இரண்டிற்கும் வித்யாஸம் ஏதுமில்லையென்பதால் இரண்டும் ஒன்று என்றே சொல்லலாமே ?

**ச்லோகம் :**

अभेदिनः सावयवस्य सत्य विचित्ररूपान्तरदर्शकत्वम् ।
वदन्ति धीराः परिणाममस्या वसुंधराया इव सस्यसृष्टिम्

**ச்லோகார்த்தம் :** ஒன்ருகவும், ஸாவயவமாகவும் இருக்கின்ற வஸ்துவானது ஸத்யமாகவும், விசித்ரமாகவும் இருக்கின்ற அனேக ரூபங்களாக மாறுதல் அடைகின்றது என்பதே பரிணுமவாதம் என்று வித்வான்களால் சொல்லப்படுகின்றது. இந்த வாதம் பூமியிலிருந்து உண்டாகின்ற செடிகளின் உற்பத்தி போலாகும்.

**வ்யாக்யானம் :** அவ்விதம் சொல்ல முடியாது. ஏனெனில் இரண்டிற்கும் லக்ஷணம் வேருக இருக்கின்றதால் இரண்டும் ஒன்று என்று சொல்ல முடியாது. கார்யத்திலிருந்து வேருக இல்லாததும், ஸாவயமாக இருக்கின்றதான ஒரு பதார்த்தமானது அதற்கு ஸமான ஸத்தையுடைய வேறு பல பதார்த்தங்களை, தோற்றுவிக்கின்றது. உதாரணமாக, பூமியிலிருந்து வ்ருக்ஷங்களின் உற்பத்தி என்பது பரிணும மூலமாகத்தான் ஏற்படுகிறது. இதுவே பரிணுமலக்ஷணம். ஆரம்பவாதம் என்பதில், கார்யம் என்பது காரணத்தில் முதலில் இல்லாமல் இருந்து புதிதாக உண்டாகிறது என்று சொல்லப்படுகிறது. அதனுல் கார்யம், காரணத்திலிருந்து வேறுபட்டது என்று சொல்லப்படுகிறது. அதனுல் கார்யம், காரணத்தைக் காட்டிலும் பேதம் என்று ஆரம்ப வாத பக்ஷத்தில் சொல்லப்படுகிறது. அதனுல் ச்லோகத்தில் 'அபேதின:' என்ற பதம் விசேஷணமாக சேர்க்கப்பட்டிருக்கின்றது. இதனுல் ஆரம்பவாதம் நிவர்த்திக்கப்படுகிறது. மேலும், ஸாவயவ வஸ்துதான் பரிணும முடையதாக இருக்கமுடியும் 'ஸாவய வச்ச' என்ற பத விசேஷணத்தினுல் பதார்த்தத்தின் பரிணும ஸ்வரூபம் தெரிவிக்கப்படுகிறது. (ப்ரஹ்மமென்பது நிரவயவமானதால் பரிணும வாதம் ஸம்பவிக்கமுடியாது)

'ஸத்ய' என்ற விசேஷணத்தினுல் பரிணும வாதம் விவர்த்த வாதத்திலிருந்து வேறுபட்டது என்று தெரிவிக்கின்றது. விவர்த்தவாத்தில் கார்யம் அஸத்யம் என்பதால், 'ஸத்ய' என்ற பதம் விவர்த்தவாதத்திலிருந்து வேறுபட்ட தன்மையை தெரிவிக்கின்றது.

'ரூபாந்தரம்' என்ற விசேஷணத்தின் மூலமாக ஸங்காத வாதத்தை நிவர்த்திக்கின்றது. ஸங்காதவாதம் என்பது பல பொருள்கள் சேர்க்கப்படுவதையே ஸங்காதம் என்று சொல்லப்படும். சேர்க்கப்பட்ட பொருள்களின் ரூபங்களையன்றி ஸங்காதம் என்பதற்கு வேறு ஒரு ரூபம் இருப்பதாகச் சொல்ல முடியாது. ஆகையால் 'ரூபாந்தரம்' என்ற விசேஷணத்தினுல் ஸங்காத வாதம் நிவர்த்திக்கப்படுகிறது.

இந்தவிதம் பரிணுமவாதலக்ஷணம் சொல்லப்பட்டது.

66. அவதாரிகை :

பரிணும வாதம் விகாரமுடையது என்பதால், அதைக் காட்டிலும் வேறுபட்டது விவர்த்த வாதம் என்று விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

अभेदिनो निर्विकृतेरनेक मृषास्वरूपान्तरदर्शकत्वम् ।
विवर्तशब्दार्थ इह प्रसिद्ध स्तरङ्गभेदादिव चन्द्रभेदः

ச்லோகார்த்தம் : ஒன்ருகவும், நிர்விகாரமாகவும் இருக்கின்ற வஸ்துவானது மித்தையாகவும், விசித்ரமாகவும் இருக்கின்ற அனேக ரூபங்களாக மாறுதல் அடைகின்றது என்பதே விவர்த்த வாதம் என்ற சப்தத்தின் அர்த்தமாகும். இது, ஸமுத்ரத்தில் இருக்கின்ற தரங்க பேதம் போலவும், அனேக சந்திரன் போலவும் தோற்றமேயாகும்.

வ்யாக்யானம் : விவர்த்தவாதம் என்பது பரிணும வாதத்தைக்காட்டிலும் வேறுபட்டது. கயிறு என்பது ஸர்ப்பமாகவோ, தண்டமாகவோ, மாலையாகவோ தோன்றும் ப்ராந்திஸ்தலத்தில், கயிருனது தன் பூர்வ ரூபத்தை விடாமலேயே, ஸர்ப்பம் முதலான அனேக ரூபமாக தோன்றுகிறது. ஆகையால் ஏகமாக இருக்கின்ற வஸ்து அனேகமாக ஆகமுடியாது. ஆனுல் அனேகமாக தோன்ற முடியும். அதனுல் கயிறு ஸ்வஸ்வரூபத்தை விடாமலேயே வேருெரு ரூபமாக தோன்றுமானுல் அதுவே விவர்த்தம் என்று சொல்லப்படும். எந்த வஸ்து ஸ்வஸ்வரூபமான பூர்வரூபத்தை விட்டு வேறு ரூபத்தை அடைகின்றதோ அதுவே பரிணுமம் என்று சொல்லப்படும். பரிணும வாதத்தில் ஒன்றே அனேகமாக மாறுதலை அடையலாம். ஸமுத்ரத்தில் உள்ள அலை, நுரை என்பதெல்லாம் ஜலம் என்ற தன்மையை விடாமல் பல்வேறு ரூபத்தில் எப்படி தோன்றுகிறதோ அதுபோலவும், ஒரே சந்திரன் அநேக ரூபமாக தோன்றுவது போல் தோன்றுவது எதுவோ அதுவே விவர்த்தவாதம் என்பதற்கு உதாரணம்.

கார்யம் என்பது எல்லாம் மித்யை என்றும் காரணம் ஒன்றே ஸத்யம் என்று சொல்லப்படுவது விவர்த்தவாதம். பரிணுமவாதம் என்பதில் கார்யம் என்பதும் ஸத்யம் என்று சொல்லப்படுவதால் பரிணுமவாதம் என்பதும் விவர்த்தவாதம் என்பதும் ஒன்றல்ல. இரண்டிற்கும் லக்ஷணம் வேறு என்று அறிய வேண்டும்.

**67. அவதாரிகை :**

'ஸச்சத்யச்சாபவத்' என்ற ச்ருதிவாக்யத்திலிருந்து ஜகத் என்பது ப்ரஹ்ம பரிணமம் என்று அறியப்படுகிறது. 'வாசாரம்பணம்' என்ற ச்ருதி வாக்யத்திலிருந்து ஜகத் என்பது ப்ரஹ்ம விவர்த்தம் என்று அறியப்படுகிறது. இரண்டுமே ச்ருதி வாக்யமாக இருக்கின்றதால் விவர்த்த வாதமே ச்ருதியின் அபிப்ருயம் என்று எப்படிச் சொல்வது ?

**ச்லோகம் :**

अहं प्रजायेय बहु स्वयं स्यामित्यादिनाऽऽदौ परिणामुक्त्वा ।
विकारमिथ्यात्वमथ ब्रुवाणा विवर्तवादं श्रुतिराननाय

**ச்லோகார்த்தம் :** 'நான் ஜன்மாவை அடைந்து பலவாருக ஆகிறேன்' என்பது முதலான வாக்யங்களினுல் முதலில் பரிணும வாதத்தை தெரிவித்து அதன் பிறகு கார்ய மித்யாத்வத்தை தெரிவிப்பதன் மூலம் விவர்த்தவாதம் என்பது அறிமுகப் படுத்தப்படுகிறது.

**வ்யாக்யானம் :** 'ஸதேவஸௌம்ய' என்ற வாக்யம், 'ஸத்' என்பதே மூலகாரணம் என்று தெரிவிக்கின்றது. 'பஹுஸ்யாம் ப்ரஜாயேயேதி' என்ற வாக்யத்தினுல் அந்த ஸத்ஸ்வரூபமே தன்னுடைய விசித்ர சக்தியினுல் ஜகத் ரூபமாக பரிணமிக்கின்றது என்று தெரிவிக்கின்றது. அதன்பின், 'யதக்னே ரோஹிதம் ரூபம்' என்றெல்லாம் தெரிவித்து 'த்ரீணி ரூபாணி இத்யேவ ஸத்யம்' என்று 'ரூபமே' ஸத்யம் என்றும், அக்னி யென்பது மித்யை என்றும் தெரிவிக்கின்றது. மேலும், எந்த மாயா சக்தியினுல் ப்ரஹ்ம என்பது விசித்ர ப்ரபஞ்சமாக தோன்றுகிறதோ, அந்த ப்ரபஞ்சத்துடன் கூடிய மாயையும் சேர்ந்து மித்யை என்று, 'தத்ஸத்யம், அதோ அன்யதார்த்தம்' என்று தெரிவிக்கின்றது. ஆகவே, நிரவயமான ப்ரஹ்மத்தில் ஆரோபிதமான விசித்ர சக்தி என்பதே விசித்ர ப்ரபஞ்சாகாரமாக தோன்றுகிறது. ஆகையால் ஸாவயத்தில் தான் பரிணமம் என்பது ஸம்பவிக்க முடியும். அதனுல் ப்ரஹ்மமென்பது ப்ரபஞ்சத்திற்கு விவர்த்தோபாதான காரணம் என்றே சொல்லவேண்டும். பரிணமி உபாதானம் என்று சொல்லமுடியாது.

**68. அவதாரிகை :**

இதுவரை விசாரிக்கப்பட்டதிலிருந்தும், ச்ருதி ஸம்ருதி வாக்யங்களிலிருந்தும் விவர்த்தவாதம் என்பதே சாஸ்திரத்தின் தாத்பர்யம் என்று அறியப்படுகிறது.

**ச்லோகம் :**

मायाश्रुतिस्मृतिवचः सकलं तथा च वस्तुत्वमर्दनपरं घटते विवर्ते ।
सर्वस्य कारणविकारविभागभाजः प्रागादृतस्य परमार्थतया प्रतीतेः

**ச்லோகார்த்தம் :** எந்த ப்ரபஞ்சமானது கார்ய, காரண விபாகத்துடன் இருக்கின்றதோ, அது அனுபவ விஷயமாக இருக்கின்றதால் அஞ்ஞான அவஸ்தையில் ஸத்யமாக தோன்றுகிறதோ, அப்பேர்பட்ட பர்பஞ்சத்தினுடைய ஸத்யத்வத்தை நிஷேதம் செய்கின்றதும், மாயையை காரணமாக தெரிவிக்கின்றதுமான ச்ருதிஸ்ம்ருதி வாக்யங்கள் விவர்த்தவாதத்தில் தான் பொருந்துகின்றது.

வ்யாக்யானம் : ச்ருதி - ஸ்ம்ருதி வாக்யங்கள் எல்லாமே விவரித்தவாதத்தில் தாத்பர்யமுடையது என்று சொன்னுல் தான் சிருஷ்டி என்பதெல்லாம் மித்யை என்று நிரூபணம் செய்யமுடியும். ஏனெனில் நிரவயமான ப்ரஹ்மத்திற்கு பரிணுமலக்ஷணம் சொல்லமுடியாது. 'இந்த்ரோமாயாபி புருரூபஈயதே' என்ற ச்ருதிவாக்யமும், 'அஞ்ஞானேன் ஆவ்ருதம் ஞானம் ப்ரக்ருதிம் ஸ்வாமதிஷ்ட்டாயஸம்பவாம்யாத்மமாயயா' என்ற ஸ்ம்ருதி வாக்யங்களும் இன்னும் இதுபோன்ற பலவாக்யங்கள் சிருஷ்டி முதலானவைகள் மித்யை என்றே தெரிவிக்கின்றது. கார்யகாரணபாவமாக அறியப்படும் வஸ்துக்கள் எல்லாம் பரமார்த்தமில்லை என்பதால் விவர்த்த வாதம் தான் சித்தாந்தம் என்று தீர்மானம் செய்யப்பட்டிருக்கிறது. இந்த விவர்த்த வாதத்திற்கு உபாயமாகவே பரமத அபிப்ருயமான பரிணும வாதம் என்பதை முதலில் அப்யுபேத்யமாக ஒப்புக் கொண்டு அதன் பிறகு விவர்த்த வாதமே சரி என்று சிந்தாந்தம் செய்யப்படுகிறது.

**69.** அவதாரிகை :

இவ்விதம் பரிணும வாதத்தைக் கொண்டு சிறிது பேதம் கூட ஒத்துக் கொள்ளப்படுமானுல், ச்ருதி, ஸ்ம்ருதி ந்யாயங்களுக்கு அனுகூலமாக இருக்க முடியாது என்றும் அதனுல் பரிணும வாதம் என்பதை விட்டு விட வேண்டும் என்றும் சொல்லப்படுமானுல், அந்த பரிணும வாதம் என்பதைப் பற்றி விசாரிக்கப்படவேண்டிய அவஸ்யம் என்ன? அதேபோல் ஆரம்பவாதம், ஸங்காதவாதம் என்பதைப் பற்றி விசாரிக்கப்படாததற்கு காரணம் என்ன?

ச்லோகம் :

संघातवादमुपगम्य तु तत्र पक्षे संहन्त्रभाव इति सूत्रकृदाह दोषम् ।
स्थायी भदन्तसमये न हि कश्चिदत्र संघातसंजननशक्तिसमन्वितोऽस्ति

ச்லோகார்த்தம் : ஸங்காத வாதத்தை அனுவாதம் செய்து, அந்த பக்ஷத்தில் ஸங்காதகர்த்தா ஒருவர் இல்லை என்ற தோஷத்தை சூத்ரகாரர் தெரிவிக்கின்ருர். ஸங்காதத்தை உண்டு பண்ணக் கூடிய சக்தி உடைய ஒருவர் நித்யமாக இருப்பதாக பௌத்த மதத்தில் (சொல்ல முடியாது) கிடையாது.

வ்யாக்யானம் : பரிணும வாதம் என்பது, விவர்த்த வாதம் என்பதை போதிப்பதற்கு உபகாரமாக இருக்கிறது என்ற காரணத்திஞல்தான் அதை ஓரளவிற்கு ஒத்துக் கொண்டு விசாரிக்கப்பட்டது. மற்ற இரண்டு வாதங்களும் அத்யந்தம் பேதத்தை தெரிவிக்கின்றது என்பதாலும், சேதனன் என்ற ஒருவனே ஸ்தாயியாக ஒத்துக் கொள்ளாத காரணத்திஞலும், பரமாணுவின் ஸங்காதமே சிருஷ்டி என்று சொல்லப்படுவதாலும் அவைகளை ஒத்துக் கொள்ளப்படவில்லை. ஏனெனில் இவையெல்லாம் அத்வைத சித்தாந்தத்திற்கு உபகாரமாகவும் இல்லை, விரோதமாகவும் இருக்கின்றது என்ற காரணத்தைக் கொண்டே அவைகளை முக்யமாக விசாரிக்கப்படவில்லை.

பௌத்த சித்தாந்ததில் பரமாணு ஸங்காதமே சிருஷ்டி என்று சொல்லப்படுகிறது. ஆனுல் அவைகளை ஒன்று சேர்த்து வைப்பதற்கு சேதனனுன ஒருவன் ஸ்தாயியாக இருக்கவேண்டுமென்பதை அவர்கள் ஒத்துக் கொள்ளவதில்லை. அதனுல் ஸங்காதம் என்பதே ஸம்பவிக்க முடியாது என்று சூத்ரகாரர், அந்த வாதத்தை அனுவாதம் செய்து

கண்டனம் செய்கின்றுர். ஆகவே, அந்த வாதம் உபகாரம் என்பதற்காக விசாரிக்கப்படவில்லே.

அதாவது பௌத்த சித்தாந்தத்தில் என்ன தெரிவிக்கிறுர்கள் என்றுல், ஸௌத்ராந்திகன் வைபாஷிகன் என்பவர்கள், பாஹ்யஸங்காதம் ஆந்த்ரஸங்காதம் என்று ஸங்காதம் இரண்டு விதம் என்றும் அவைகள் க்ஷணிகம் என்றும் தெரிவிக்கின்றுர்கள். இதில் பாஹ்யஸங்காதம் என்பது என்னவென்றுல், பூதங்கள் என்பது நான்கு தான் என்றும் அந்த நான்கு பூதங்களின் கார்யமான சக்ஷுஸ் முதலான இந்த்ரியங்களும் ரூபம் முதலான விஷயங்களும் பௌதிகம் என்று சொல்கிறுர்கள். இவையெல்லாமே க்ஷணிகமான நான்கு விதபரமாணுக்களின் கூட்டமென்றும், இதுவே பாஹ்ய ஸங்காதம் என்றும் சொல்கின்றுர்கள். இதேபோல் ரூபம், விஞ்ஞானம், வேதனம், ஸம்ஞானம், ஸம்ஸ்காரம் என்ற பஞ்ச ஸ்கந்தங்கள் ஆதி ஆத்மிக ஸங்காதம் என்று சொல்கிறுர்கள். பரமாணுக்கள் என்பது அசேதனமாக இருக்கின்றதால் அவைகள் தாளுக கூட்டமாக சேர முடியாது. ஆனுல் வேதனுஸ்கந்தம் என்பது சைதன்ய ரூபம் என்றும் அது சித்தம் என்றும் சொல்கிறுர்கள். இந்த வேதனுஸ் கந்தம் ஏற்பட்ட பிறகே ஞாத்ருத்வம் உண்டாகிறது என்றும், ஸங்காதத்திற்கு முன் ஞாத்ருத்வம் என்பதே ஸம்பவிக்காது என்றும் சொல்கிறுர்கள். விஷய விஞ்ஞானம் என்பது இல்லாமல் ஆலய விஞ்ஞானம் என்பதும் ஏற்பட முடியாது என்றும் ஆலய விஞ்ஞானம் என்பதும் ஸங்காதம் ஏற்பட்ட பிறகே ஏற்படும் என்றும், ஸர்வமும் க்ஷணிகம் என்றும் சொல்கின்றுர்கள். அதனுல் ஆலய விஞ்ஞானத்தினுலும் ஸங்காதம் என்பது சேர்த்து வைக்கப்படுவதாகச்சொல்ல முடியாது. எந்தஒருகார்யமாக இருந்தபோதிலும் ஞானம், இச்சை, ப்ரயத்னம் என்பவைகள் இல்லாமல் அந்தக் கார்யம் செய்வதற்கு முடியாது.

இச்சை, ஞானம், ப்ரயத்னம் என்பதெல்லாம் கார்யகாரண பாவத்தில் இருக்கின்றதால், அவைகளே ஆலோசித்து, அவைகளே சேர்த்து வைக்கக்கூடிய சேதனனுன ஆத்மா நித்யமாக இருப்பதாக ஒப்புக் கொள்ளப்பட வேண்டும். ஆகவே, "ஸமுதாய உபயஹேதுகேऽபிததப்ராப்தி:" என்ற (ப்ரஹ 2.2.18) வாக்யத்தைக் கொண்டு சூத்ரகாரரும், ஞானம் இச்சை, ப்ரயத்னம் எல்லாம் இருப்பவனே ஸ்தாயி என்று தெரிவிக்கின்றுர். ஆகவே - ஸங்காதவாதம் சித்தாந்தத்திற்கு உபாயமாக இல்லேயென்பது மட்டுமல்ல, விரோதமாகவும் இருக்கின்றது. ஆகவே இந்த வாதம் சரியல்லவென்று நிராகரிக்கப்படுகிறது.

**70.** அவதாரிகை :

ப்ரஹ்மமே ஜகத் காரணம் என்று சொல்லப்படுமானுல், காரணத்தின் ஸஜாதீயமானகுணம் கார்யத்திலும் இருக்க வேண்டும் என்ற நியமத்தின்படி இருக்க வேண்டும். ஆனுல் இந்த ப்ரபஞ்சம் பரிச்சின்னமாகவும், ஜடமாகவும் எப்படி உண்டாக முடியும்? என்று வைசேஷிகனுல் (தார்க்கிகன்) ஆக்ஷேபம் செய்யப்படுகிறது.

இந்த தோஷம் தார்க்கிகர்களான உங்களால் சொல்ல முடியாது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

ச்லோகம் :



आरम्भवादमुपगम्य तदीययुक्ते स्तत्प्रक्रियामनुसरन्व्यभिचारमाह ।
वैशिषिकं प्रति महद्वदिदं हि योज्यं यद्वाऽपि दीर्घवादिदं जडमित्यनेन

ச்லோகார்த்தம் : ஆரம்ப வாதத்தை அனுவாதம் செய்து, அந்த ப்ரக்ரியையை அனுசரித்து, அந்த யுக்தியினுலேயே அதில் இருக்கின்ற வ்யபிசார தோஷத்தை வைசேஷிகர்களிடம் சூத்ரகாரர் தெரிவிக்கின்ருர். மஹத்தீர்க்கம், என்ற பரிணுமங்களை யுடைய இந்த ப்ரபஞ்சம் எவ்விதம் அணுவாகவும் ஹ்ரஸ்வமாகவும் இருக்கின்ற பரமாணுக்களில் இருந்து உண்டாகின்றதோ அவ்விதமே சேதன ப்ரஹ்மத்திலிருந்து அசேதன ப்ரபஞ்சம் உண்டாகின்றது. "மஹத் தீர்க்கவத்வா ஹ்ரஸ்வ பரிமண்டலாப்யாம்" என்ற சூத்ரத்திஞல் சூத்ரகாரர் இவ்விதம் தெரிவிக்கின்ருர்.

வ்யாக்யானம் : காரண குணம் கார்யத்தில் இருக்கவேண்டுமென்பது நியாயம்தான். ஆனுல் பரமாணுக்கள் த்வ்யணுகாதி ரூபமாக க்ரமேண கார்யத்ரவ்யமாக உண்டாகிறது என்று சொல்லப்படும் ஆரம்ப வாதத்தில் இந்த ஞ்யாயம் எப்படி பொருந்தும்? ஜகத் காரணமாக பாமாணு என்ன பரிமாணமோ அதே பரிமாணம் தானே த்வயணுகத்திலும் இருக்கவேண்டும்? அவ்விதமின்றி காரணத்திலுள்ள பரிமாணம் த்விணுகத்தில் ஆரம்பிக்கப்படுவதில்லை என்பதும் த்விணுகத்திலுள்ள பரிமாணம் த்வித்வம் என்ற ஸங்க்யையினுல் ஏற்படுகிறது என்று வேறு காரணத்தினுல் உண்டாகிறதாகச் சொல்லப்படுகிறது. அதனுல் பரமாணுவிலிருந்து உண்டான போதிலும், த்விணுகத்தில் காரணமானபரமாணு பரிமாணம் இல்லையென்று சொல்லப்படுகின்றதால், காரண குணம் கார்யத்தில் இல்லையென்று சொல்லப்பட்டதாகவே ஆகிறது. அதுபோல் ஜகத் என்ற கார்யத்தில், காரணமான ப்ரஹ்மத்தின் வ்யாபகத்வம், சேதனத்வம், என்பதெல்லாம் இல்லையென்று சொல்லாமே?

மேலும் - த்விணுகம் மூன்று சேர்ந்து த்ரயணுகமாக ஆகின்றபோது அது மஹத் என்ற பரிமாணமாக ஆகிறது என்று சொல்லப்படுகிறது. த்விணுகத்தில், அணு, ஹ்ரஸ்வம் என்ற பரிமாணமும், த்ரயணுகத்தில் மஹத், தீர்க்கம் என்ற பரிமாணமும் உண்டாகிறது என்றும் சொல்லப்படுகிறது. அவ்விதமிருந்தும், அணு, ஹ்ரஸ்வம் என்ற காரண குணம் கார்யமானத்ருணுகத்தில் ஏற்படவில்லையென்ருலும் த்விணுகம் என்ற காரணத்திலிருந்தே கார்யமான த்ரயணுகம் உண்டாகிறதாக சொல்லப்படுகிறதே?

த்விணுகம் எப்படி இரண்டு என்ற ஸங்க்யையினுல் அணு, ஹ்ரஸ்வம் என்ற பரிமாணமுடையதாக ஆகிறதோ அதுபோலவே த்ருணுகம் என்பது மூன்றுத்விணுகம் என்ற ஸங்க்யையைக் கொண்டு பஹுத்வம் என்ற ஸங்கையினுல் மஹத் என்ற பரிமாணம் உடையதாக ஆகிறது. ஆகையால், காரண குணம் கார்யத்தில் இருக்க வேண்டும் என்று சொல்லப்படும் ந்யாயம் உன் பக்ஷத்திலேயே வ்யபிசரிதமாக இருக்கின்றது என்பதை சூத்ரகாரர் தெரிவித்து வைசேஷிகமத கண்டனம் செய்கின்ருர்.

**71.** அவதாரிகை :

பரமாணுவிலிருந்து த்வித்வம், மஹத்வம் என்ற பரிமாணங்கள் உண்டாகிறது என்ற விஷயம் பற்றி மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

ह्रस्वारब्धं व्यणुकमणुभिस्तद्वदारब्धमत ह्रस्वं नो तत्र च तदणुवत्संमतं तद्वदेतत्।
सर्वं कार्यं गगनधरणीमध्यगं चेतनोत्थं निश्चित्कं नो जडिमघटितं युक्तमित्याचचक्षे

ச்லோகார்த்தம் : ஹ்ரஸ்வ பரிமாணமும், அணுபரிமாணமும் உடைய த்வயணுகங்களினுல் ஏற்படுகின்ற த்ரயணுகமானது ஹ்ரஸ்வமாகவும் அணுவாகவும் இல்லை என்பது உங்களுக்கும் ஸம்மதமே. அதேபோல் ஆகாசத்திற்கும் பூமிக்கும் இடையே இருக்கின்ற எல்லா கார்யங்களும் சேதனத்திலிருந்து உண்டாகி இருக்கிறது. ஆனுல் அவைகள் அசேதனமாகவும், ஜடத்தன்மை உடையதாகவும் இருக்கின்றதென்பது எங்களுக்கும் ஸம்மதமே.

வ்யாக்யானம் : அணு பரிமாணமுள்ள பரமாணுக்களால் ஆரம்பிக்கப்படும் த்வியணுகம் என்பதில் அணு பரிமாணம் இல்லையென்று சொல்லப்படுகிறது. அதேபோல் த்வியணுகத்திலுள்ள அணு, ஹ்ரஸ்வம் என்ற பரிமாணம் த்ரியணுகத்தில் இல்லை. இதே போல் மஹத் என்றும் தீர்க்கமென்றும் சொல்லப்படும் பரிமாணம் அதன் காரணம் என்று சொல்லப்படும் த்வியணுகத்தில் இல்லையென்றும், த்வியணுகத்திலுள்ள அணு, ஹ்ரஸ்வம் என்ற பரிமாணம் அதன் காரணமான பரமாணுவில் இல்லையென்றும் சொல்லப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படுமானுல் காரண குணம் கார்யத்தில் அனுவ்ருத்திக்க வேண்டுமென்ற நியமம் எப்படி உங்கள் சித்தாந்தத்திற்கு பொருந்தும்? ஆகவே சேதனமான ப்ரஹ்மத்தினிடமிருந்து அசேதனமான இந்த ப்ரபஞ்சம் உண்டாகிறது என்று சொல்லப்படுவதில் விரோதம் ஏதுமில்லை.

72. அவதாரிகை :

மேலும் பரமாணு பக்ஷத்திலுள்ள தோஷங்கள் பற்றி தெரிவிக்கப்படுகிறது.

ச்லோகம் :

ह्रस्वाणुत्वे कारणद्वित्वहेतो जाते नैते पारिमाण्डल्यहेतोः ।
दीर्घत्वं यच्च दीर्घे महत्त्वं द्रव्ये ते द्वे कारणत्रित्वहेतोः

ச்லோகார்த்தம் : த்வயணுகத்தில் தோன்றுகின்ற ஹ்ரஸ்வத்வமும், அணுத்வமும், பரமாணுவில் இருக்கின்ற பாரிமாண்டல்யத்திலிருந்து ஏற்படவில்லை. பரமாணுவில் இருக்கின்ற த்வித்வத்திலிருந்தே இவை ஏற்படுகிறது. அதுபோல் த்ரியணுகத்தில் தோன்றுகின்ற தீர்க்கத்வமும் மஹத்வமும் த்வயணுகத்தில் இருக்கின்ற த்ரித்வத்திலிருந்தே ஏற்படுகின்றது.

வ்யாக்யானம் : பரமாணுவிலிருந்து த்வியணுகம் உண்டாகிறது என்றும் ஆனுல் த்வியணுகத்திற்கு பரமாணு காரணமில்லையென்றும், பரமாணுவில் உள்ள த்வித்வம் என்ற ஸங்க்யை (எண்ணிக்கை) என்பதே த்வியணுகத்திற்கு காரணம் என்றும் சொல்லப்படுகிறது. எனெனில் பரமாணு காரணம் என்ருல் பரமாணுவை விடத் த்வியணுகம் என்பது சிறியது என்று சொல்ல நேரிடும். அதனுல் த்வியணுகத்திலுள்ள ஹ்ரஸ்வபரிமாணத்திற்கு இரண்டு பரமாணுக்கள் என்ற எண்ணிக்கையே காரணம்

என்றும் பரமாணு காரணமில்லை என்றும் சொல்லப்படுகிறது. இதேபோல் த்ரியணு கத்திலும் த்வித்வம் என்ற பரிமாணம் காரணமில்லையென்றும் ஸங்க்யை என்பதே காரணம் என்று சொல்லப்படுகிறது.

**73. அவதாரிகை :**

ப்ரமாணுக்கள் இரண்டு சேர்ந்து த்வியணுகம் ஆகிறது என்றும், த்வியணுகம் இரண்டு சேர்ந்து த்ரயணுகம் ஆகிறது என்றும் இவ்விதம் மேன்மேலும் அதிகரிப்பதால் அதிக பரிமாணம் உடையதாக ஆகிறது என்று சொல்லப்படாமல், எண்ணிக்கையே காரணம் என்று சொல்லப்படுகிறது. த்வியணுகம் மூன்று சேர்ந்து த்ரயணுகம் ஆகிறது என்பதற்கு அதற்கு காரணமான பரமாணுவிலிருந்தே உண்டாகிறது என்று சொல்லப்படாததற்கு காரணம் என்ன ? இவ்விதம் பொருந்தாத விஷயங்கள் சொல்வதில் என்ன நியமம் இருக்கிறது ?

**ச்லோகம் :**

द्व्यणुकस्य जन्म परमाणुयुगात्परिमण्डलादिति कणादमतम् ।
द्व्यणुकत्रयात्र्यणुकजन्म पुनर्नियमं न कश्यपसुतो वदति

ச்லோகார்த்தம் : பாரிமாண்டல்யம் என்ற பரிமாணத்தையுடைய இரண்டு பரமாணுக்களிலிருந்து த்வயணுகத்தின் உற்பத்தி ஏற்படுகிறது. மூன்று த்வயணுகத்திலிருந்து ஒரு த்ரயணுகம் ஏற்படுகிறது. இது கணாத மதம். ஆனால் இதற்குப் பிறகு கணாதர் இந்த நியமத்தை சொல்லவில்லை.

வ்யாக்யானம் : பரமாணுவில் உள்ள பரிமாணம் என்பது பரிமண்டலம் என்றும், இந்த பாரிமாண்டல்யம் என்ற பரிமாணத்தைவிட அதிகபரிமாணம் த்வியணுகத்தில் உண்டாகிறது என்றும் சொல்லப்படுமானால், காரண பரிமாணத்தைக் காட்டிலும் கார்ய பரிமாணம் என்பது வேறு என்று முன்பின் முரணாகச் சொல்லப்படுகிறது. இந்தவிதம் கஸ்யபர் புத்ரரான கணாதர் என்பவரால் சொல்லப்படுகின்ற மதத்தில் காரணம் என்பது கார்யத்தில் அனுவ்ருத்திக்க வேண்டுமென்ற நியமம் இல்லையென்று அறியப்படுகிறது. அதனால் அத்வைத சித்தாந்தத்தில் அவர்களால் எவ்வித தோஷமும் சொல்லமுடியாது.

**74. அவதாரிகை :**

கணாதர் மதத்தில் இவ்வித தோஷம் இருக்கின்றதென்பது சரியே. ஆனால் உங்களிடம் கேட்கப்பட்ட கேள்விக்கு அவர்கள் மதத்திலுள்ள தோஷம் என்பதை சொல்லப்படுவதனால் நீங்கள் ஜெயம் அடைந்ததாகச் சொல்லமுடியாது. ஏனெனில் காரணத்திலுள்ள ஸஜாதீயமான குணம் கார்யத்தில் ஆரம்பிக்கப்படவில்லை என்ற தோஷத்திற்கு எவ்வித பரிகாரமும் உங்களால் சொல்லப்படவில்லை.

**ச்லோகம் :**

द्व्यणुकत्र्यणुकव्यपाश्रयं परिमाणं प्रति कारणाश्रयः ।
न तु कारणमिष्यते गुणस्तदवष्टभ्य वयं जिगीषवः

ச்லோகார்த்தம் : த்வயணுகம், த்ரயணுகம், இவைகளில் உள்ள பரிமாணத்திற்கு, காரணத்தில் இருக்கின்ற குணம் என்பது காரணமாக ஒத்துக்கொள்ளப்படுவதில்லை. இந்த கருத்தைக்கொண்டு உங்களை நாங்கள் வெல்லப்போகின்ரும் (ஜயிக்கப்போகின்ரும்)

வ்யாக்யானம் : காரணகுணம் கார்யத்தில் இருக்கவேண்டும் என்ற நியமம் சொல்லப்படுவதில் வ்யபிசாரம் இருக்கின்றது என்று தெரிவிக்கப்பட்டது. மேலும் கணுத மதத்தினரால் சொல்லப்பட்ட நியமத்திற்கு வ்யபிசாரம் இருக்கிறது என்று நிரூபணம் செய்யப்பட்டதால், எல்லா இடத்திலும் இவ்வித நியமம் இருக்கின்றதென்று சாதிக்கமுடியவில்லை. அதனுல் எங்களுடைய மதத்தில் தோஷம் ஏதுமில்லை என்ற விஷயம் கணுத மதத்தில் உள்ள தோஷம் என்னவென்று தெரிவித்ததன் மூலமாக சித்தம் செய்யப்பட்டது. அதுவே எங்களுக்கு ஜெயம்.

**75.** அவதாரிகை :

காரண பரிமாணத்தினுலேயே த்வயணுக, த்ரயணுக பரிமாணம் ஆரம்பமாகிறது என்று சொல்கிறேன். இதனுல் என்ன வ்யபிசாரம் ஏற்படுகிறது ?

ச்லோகம் :

यदि कारणसंश्रयाद्गुणाद्द्व्यणुकादेः परिमाणमिच्छति ।
द्व्यणुकादिसमाश्रये तदा परिमाणेऽतिशयो विरुध्यते

ச்லோகார்த்தம் : காரணத்தில் இருக்கின்ற குணத்திலிருந்து த்வ்யணுகம் முதலானவைகளில் பரிமாணம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுமானுல் த்வ்யணுகாதிகளில் இருக்கின்ற 'அதிக பரிமாணம்' என்ற தன்மைக்கு முரண்பாடு உடையதாக இருக்கின்றது.

வ்யாக்யானம் : காரணமான பரமாணுவின் பரிமாணம், கார்யமான த்வியணுகம் என்பதிலும் த்வயணுகம் என்பதிலும் உண்டாகிறது என்று சொல்லப்படுமானுல், பரமாணுவென்பது என்ன பரிமாணமோ அதைவிட அதன் கார்யமான த்வியணுகம் என்பது சிறியதாக இருக்கவேண்டும். அதனுல் த்வியணுகம் என்பது அணுதர பரிமாணம் என்றும், அதேபோல் த்வயணுகம் என்பது த்வயணுகத்திலிருந்து உண்டாகின்றதால், அதைவிட அணுதமமாக இருக்கவேண்டும். அவ்விதமின்றி ஒன்றுக்கொன்று மேன்மேலும் மஹத் பரிமாணமாக இருக்கின்றது. இவ்விதம் காரணம் அணுவாகவும், கார்யம் மஹத்தாகவும் எப்படி இருக்கமுடியும் ? மேன்மேலும் சிறியதாகத்தானே இருக்கவேண்டும் ? அவ்விதம் கார்யம் என்பது மிகமிகச் சிறியதாக இருக்குமோனுல் ப்ரத்யக்ஷத்தினுல் அவைகள் அறியப்படமுடியாது. அதனுல் த்வியணுகம், த்ரயணுகம் முதலானவைகளில் இப்போது அறியப்படும் பரிமாண அதிசயம் என்பதும் இருக்கமுடியாது.

மேலும், நித்ய வஸ்துவிலுள்ள பரிமாணம் வேருென்றுக்கு ஆரம்பமாக ஆகாது என்று வேருெரு இடத்தில் உங்களால் சொல்லப்படுகிறது. அவ்விதம் சொல்லப்படுமானுல்,

பரமாணு நித்யமென்றும், நித்யமான ப்ரமாணுவினுல் வேறு ஒன்று ஆரம்பிக்கப்படுகிறது என்றும் சொல்வதற்குமுடியாது. ஆகவே, காரணபரிமாணம் கார்யத்திலும் உண்டாகிறது என்று சொல்லப்படுவது உன் சித்தாந்தத்திற்கே ஹானியாகும். ஆகவே, காரணகுணம் கார்யத்தில் இருக்கவேண்டுமென்ற நியமம் சொல்லப்படுவது ஒருதோஷம், உன் சித்தாந்தத்திற்கு பங்கம் ஏற்படுகிறது என்பது மற்றுமொரு தோஷமும் ஸம்பவிக்கின்றது.

**76.** அவதாரிகை :

இவ்விதம் ஆரம்பவாதம், ஸங்காதவாதம் என்ற இரண்டு வாதங்களும் சரியல்ல என்று சொல்லப்பட்டது. ஆகவே அத்யந்த பேதமென்பதோ, அத்யந்த அபேதம் என்பதோ இல்லாத காரணத்திஞல் ஸாமாஞதிகரண்யம் சொல்வதற்கு முடியாது. ஆகையால் ஒரு அம்ஸத்தில் பேதமும், மற்ருெரு அம்ஸத்தில் அபேதமும் இருக்கின்றதால் பரிணுமவாதம் என்பதில் ஸாமஞதிகரண்யம் பொருந்தும். இவ்விதம் கார்யம் காரணம் என்பதில் பேதாபேதம் இருக்கின்றதால் பரிணுமவாதம் என்பதே சித்தாந்தம் என்று ஒப்புக்கொள்ளலாமே ?

ச்லோகம் :

परिणामवादमुपगम्य तथा रचनाद्यसंभवमुवाच मुनिः ।
परमेश्वरं न हि बिना घटते जडरूपवस्तुपरिणाम इति

ச்லோகார்த்தம் : அதேபோல் பரிணுமவாதத்தை ஆச்ரயித்து ஜகத்தின் சிருஷ்டியை சொல்லமுடியாது என்று வ்யாஸாசார்யர் விளக்குகின்ருர். பரமேச்வரனின் ஸஹாயம் இல்லாமல் ஜடவஸ்துவின் பரிணுமம் என்பது பொருந்தாது.

வ்யாக்யானம் : ஆரம்பவாதம், ஸங்காதவாதம் என்ற இரண்டும் அனுவாதம் செய்து எப்படி கண்டிக்கப்பட்டதோ அதேபோல் பரிணுமவாதம் என்பதும் சரியல்ல என்பதைகண்டனம் செய்வதற்காகவே அனுவாதம் செய்யப்படுகிறது. ஒரு வஸ்து பலவிதமாக விசித்ரமாக அமைக்கப்படுமாஞல் அதுவே ரசனை என்று சொல்லப்படும் எந்த கார்யமாக இருந்தாலும் அதன் அவயவத்தில் மாறுதலேச் செய்து வேறுவிதமாக அமைக்கவேண்டுமென்ருல், அதற்கு அவஸ்யம் சேதனனுடைய ஸஹாயம் வேண்டும். ஸாங்க்யமதத்தில் ஈச்வரனே ஒத்துக்கொள்வதில்லே. 'நப்ரக்ருதி : நவிக்ருதி : புருஷ :' என்று புருஷன் எதனுடனும் ஸம்பந்தப்படுவதில்லே என்று சொலகிருர்கள். ப்ரதானம் என்பது ஜடமானதால், மஹத் அஹங்காரம் முதலான எவ்வித பரிணுமமும் அதிலிருந்து ஏற்படமுடியாது. ம்ருத் என்பது கடமாக ஆகவேண்டுமாஞல் சேதனனுடைய ஸஹாயம் வேண்டும். அதுபோல் ப்ரமேச்வரஞன சைதன்யஸம்பந்தமின்றி ப்ரதானத்திலிருந்து ஜகத்உற்பத்தி என்பதே ஸம்பவிக்கமுடியாது. இந்த விஷயமே, 'ரசனுனுபத்தேச்ச நஅனுமானம்' என்ற சூத்ரத்தில் ஜடமான ப்ரதானத்திற்கு சைதன்ய அபேக்ஷயின்றி ச்ருஷ்டிக்கக் கூடிய ஸாமர்த்யம் இருப்பதாகச் சொல்லப்படுவது அபத்தம் (பொருந்தாது) என்று சூத்ரகாரர் நிராகரணம் செய்திருக்கின்ருர்.

**77.** அவதாரிகை :

இந்தவிதம் ஆரம்பவாதம், ஸங்காதவாதம், பரிணுமவாதம் என்ற வாதங்கள் எல்லாம் சூத்ரகாரரால் நிராகரணம் செய்யப்பட்டிருக்கின்றதால், சூத்ரகாரரின் அபிப்ருயம் என்ன என்ற இச்சை ஏற்படுகின்றது. அதுபற்றி மேலே விசாரிக்கப்படுகிறது.

ச்லோகம் :

क्वचिदभ्युपेत्य कथनं कुरुते परपक्षदूषणकथावसरे ।
निजपक्षदोषपरिहारपरः क्वचिदभ्युपेत्य वदतीह मुनिः

ச்லோகார்த்தம் : பரமதங்களை கண்டனம் செய்கின்ற இடங்களில் அந்த மதங்களை தாற்காலிகமாக ஒத்துக்கொண்டு வ்யாஸாசார்யார் தெரிவிக்கின்ருர், வேறு சில இடங்களில் ஸ்வமதத்தில் சொல்லப்படும் தோஷங்களே நிராகரிக்கும் பொருட்டு பரமதங்களே அனுவாதம் செய்து தெரிகின்ருர்.

வ்யாக்யானம் : வேதாந்த சித்தாந்தம் என்பது விவர்த்த பக்ஷத்தையன்றி மற்ற எந்த பக்ஷத்திலுைம் போதிக்கமுடியாது என்பதே சூத்ரகாரரால் தெரிவிக்கப்படுகிறது. (சூத்ர பாஷ்யத்தில் இரண்டாவது அத்யாயம் இரண்டாவது பாதம்) தர்க்க பாதம் என்பதில் நையாயிக ப்ரக்ரியை என்பதை அனுசரித்து மஹத், தீர்க்கம், பரிமண்டலம் என்று சொல்லப்படுபவைகள் எல்லாமே சரியல்ல என்று அதிலுள்ள தோஷங்களே தெரிவித்து அவைகளே நிராகரணம் செய்யப்பட்டிருக்கிறது. அதேபோல் ஸாங்க்யாதி மதங்களேயும் அனுவாதம் செய்து அவைகளும் சரியல்ல என்று நிருபணம் செய்யப்பட்டிருக்கிறது. இதன்மூலம் தன் பக்ஷமான வேதாந்த சித்தாந்தத்தில் எவ்விததோஷமும் இல்லே என்று தெரிவிக்கவேண்டுமென்பதே அவருடைய அபிப்ருயம். நையாயிகர்களால் சொல்லப்படும் ந்யாயம் அவர்களுடைய பக்ஷத்திலேயே இல்லே என்று தோஷம் சொல்லப்பட்டது. அதுபோல் ஸாங்க்ய பக்ஷத்தில் தோஷம் சொல்லப்படவில்லேயென்ருலும், அவர்களுடைய பக்ஷமும் சரியல்ல என்று நிராக்ரணம் செய்யப்படுகிறது.

**78.** அவதாரிகை :

இதே விஷயம் பற்றி மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

परपक्षनिषेधमाचरन्क्वचिदङ्गीकरणं करोति सः ।
परदर्शितदोषनुत्तये क्वचिदित्येष विशेष ईरितः

ச்லோகார்த்தம் : (அதாவது) சில இடங்களில் பரமதங்களே நிஷேதம் செய்வதற்காக அவைகளே அனுவாதம் செய்து தெரிவிக்கின்ருேம். வேறுசில இடங்களில் அன்யர்களால் ஆரோபம் செய்யப்படும் தோஷங்களே நிஷேதம் செய்வதற்காக பரமதங்களே அனுவாதம் செய்து தெரிவிக்கின்ருேம். இதுவே இரண்டிற்கும் உள்ள விசேஷம்.

வ்யாக்யானம் : ஸங்காதபக்ஷம், பரிணமபக்ஷம்என்பவைகள் சரியல்ல என்று நிராகரணம் செய்யும் பொருட்டு அவைகளை அனுவாதம் செய்து விசாரிக்கப்பட்டதேயன்றி, பரபக்ஷம் என்பதை அங்கீகாரம் செய்வதற்காக அனுவாதம் செய்யப்படவில்லை.

**79.** அவதாரிகை :

இவ்விதம் ஸங்காதவாதம் முதலான வாதங்கள் போலவே பரிணம வாதம் என்பதும் நிராகரணம் செய்யப்பட வேண்டியதுதான். ஆனல் (அத்வைத சித்தாந்தம் என்னவென்று அறியாமல்) போக்தாவென்றும் போக்யமென்றும் எவ்வித விவாதமும் இன்றி ஸாங்கர்யம் ஏற்படுமே என்ற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்வதற்காக, பேதாபேதம் என்ற பரிணமவாதம் என்பதை அனுவாதம் செய்து 'ச்யால் லோகவத்' என்ற சூத்ரம்மூலம் இந்த விஷயம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

भोक्त्रादिसूत्रे परिणामवादमाश्रित्य तद्वादिभिरुक्तदोषम् ।
समादधानो मुनिराह तस्मात्सिद्धान्तसिद्धिः पुनरुत्तरत्र

ச்லோகார்த்தம் : 'போக்த்ராபத்தே:' என்ற சூத்ரத்தில் பரிணமவாதம் என்பதை ஆச்ரயித்து வாதிகளால் சொல்லப்பட்ட தோஷத்திற்கு வ்யாஸாசார்யர் பதில் தெரிவிக்கின்ருர். தன்னுடைய சித்தாந்தம் என்னவென்பதை அடுத்த சூத்ரத்தில்தான் தெரிவிக்கின்ருர்.

வ்க்யாக்யானம் : ஒரு விஷயம் பற்றி விசாரிக்கின்றபோது, சந்தர்ப்பத்தை முன்னிட்டு பாஷ்யம் முதலானவைகளில் சொல்லப்படாத வேறு சில விஷயங்கள் பற்றி இங்கு விசாரிக்கப்படுகின்றது. அதனுல் (அனுக்த்தார்த்தம்) இந்த க்ரந்தம் வார்த்திகம் என்றே சொல்லலாம். பரமதஸ்த்தர்களின் ஆக்ஷேபங்களை பரிகாரம் செய்வதற்காக 'போக்த்ராபத்தே:' என்ற சூத்ரத்தினுல்பரிணம வாதம் என்பது அனுவாதம் செய்யப்பட்டு ச்யால்லோகவத் என்ற சூத்ரத்தினுல் பேதாபேதம் என்ற பக்ஷம் ஒத்துக்கொள்ளப்படுவது போல் சொல்லப்படுகிறது. ஆனுல் அதுவே சித்தாந்தமில்லை. ஏனெனில் அடுத்த அதிகரணத்தில் 'ததனன்யத்வம் ஆரம்பண சப்தாதிப்ய:' என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**80.** அவதாரிகை :

பரிணமவாதம் என்பது நிராகரணம் செய்யப்பட்டபோதிலும், அந்தவாதம் சித்தாந்தத்திற்கு உபயோகமாக இருக்கிறது என்பதற்காக அப்யுபேத்யவாதமாக ஒப்புக்கொண்டு விசாரிக்கப்பட்டதுபோல், ஆரம்பவாதம், ஸங்காதவாதம் என்ற இரண்டு வாதங்களையும் அப்யுபேத்யவாதமாக ஒப்புக்கொள்ளலாமே? எப்படியெனில், இந்த ப்ரபஞ்சம் இயற்கையாகவே உண்டாயிற்று என்று தெரிவிக்கும் ஸ்வபாவ வாதிகளை கண்டனம் செய்வதற்கு சிருஷ்டிக்கு ஒரு காரணம் வேண்டும் என்று ஆபேக்ஷிகமான காரண கார்யபாவத்தைக் கொண்டு தெரிவித்து சித்தாந்தத்திற்கு இவையெல்லாமே ஸாதகம் என்று சொல்லலாமே?

ச்லோகம் : 

प्रत्यासन्ना परिणतिरियं विप्रकृष्टस्तु पूर्वः संघातादिः सकल उदितो वेदसिद्धान्तसिद्धेः ।
एतावत्त्वादियमभिमता सूत्रकारस्य भाति भ्रान्तिभ्रष्टस्फुटनयमनः कौशलानां नराणाम्

**ச்லோகார்த்தம்** : பரிணாமவாதம், வேதாந்த சித்தாந்தத்திற்கு ஸமீபத்தில் இருக்கின்றது. முன்னால் சொல்லப்பட்ட ஸங்காதவாதம் முதலான ஸர்வவாதங்களும் வேதாந்த சித்தாந்தத்திற்கு தூரத்தில் இருக்கிறது. இந்த காரணத்தைக் கொண்டே, ப்ராந்தி (ஞானத்தினால்)யினால் நஷ்ட்டமான புத்தியை உடையவர்களுக்கு இந்த பரிணாமவாதம் என்பதே சித்தாந்தம் என்று தோன்றுகிறது.

**வ்யாக்யானம்** : ஸங்காதவாதம் முதலானவைகள் சித்தாந்தத்திற்கு அனுகூலமாக இல்லையென்பது மட்டுமின்றி ப்ரதிகூலமாகவும் இருக்கின்றது. எப்படியெனில் சேதனனான ஆத்மாவே தேவைஇல்லை என்று ஸங்காத பக்ஷத்தில் சொல்லப்படுகிறது. அதனால் முதலுக்கே ஆபத்தாக இருக்கிறது. கார்யம் வேறு காரணம் வேறு என்று ஆரம்பவாதம் என்ற நையாயிகர் பக்ஷத்தில் சொல்லப்படுகின்றது. அதனால் இந்த இரண்டு பக்ஷமும் உபகாரகமாக இல்லை. அதுமட்டுமல்ல அபகாரமே அதிகமாக இருக்கிறது. ஆகையால் பரிணாம பக்ஷத்தில் வ்யாவகாரிக தசையில் அறியப்படும் பேதத்தை ஒத்துக்கொண்டு, அபேத அம்ஸத்தையும் ஒத்துக்கொள்ளப்படுமானால், ப்ரத்யக்ஷம் முதலானவைகளுக்கு ஓரளவிற்கு ப்ராமாண்யம் இருப்பதாகச் சொல்லலாம். இதனால் வ்யவகாரதசையில் பாதகம் ஏதுமில்லை. அதனால்பாரமார்த்திகமான அத்வைத சித்தாந்தத்திற்கு விரோதம் இல்லையென்று தெரிவிக்கமுடியும். இந்த காரணத்தைக் கொண்டே பரிணாமவாதம் என்பது அப்யுபேத்யவாதமாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. இவ்விதம் அறிந்து கொள்ளக்கூடிய திறமையற்ற அஞ்ஞானிகள் பரிணாமவாதமே சித்தாந்தம் என்று ப்ராந்தியினால் தெரிவிக்கின்றார்கள்.

**81. அவதாரிகை :**

சுத்த அத்வைத தத்வம் என்பதை ஸூக்ஷ்மமாக அறிந்து கொள்ளமுடியாமல் இருக்கின்ற சிஷ்யனுக்கு முதலில் பரிணாமவாதத்தின் மூலமாக விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

आरोपदृष्टिरपवादकदृष्टिरेवं व्यामिश्रदृष्टिरिति दृष्टिविभागमेतम् ।
संगृह्य सूत्रकृदयं पुरुषं मुमुक्षुं सम्यक्प्रबोधयितुमुत्सहते क्रमेण

**ச்லோகார்த்தம்** : முன்னால் ஏற்படும் த்ருஷ்டியை ஆச்ரயித்து முமூக்ஷுவிற்கு நன்றாகவும் க்ரமமாகவும் போதம் ஏற்படுவதற்காக ஸூத்ரகாரர் முயற்சிக்கின்றார். அதாவது ஆரோபத்ருஷ்டி, அபவாதத்ருஷ்டிவ்யாமிச்ரத்ருஷ்டி என்று (மூன்றுவித த்ருஷ்டிகளை) விளக்குகின்றார்.

**வ்யாக்யானம்** : முதலில் ப்ரபஞ்சம் என்பது ப்ரஹ்மகார்யம் என்று தெரிவிப்பதின்மூலம், ப்ரபஞ்சம் என்பதை பரிணாமவாதத்தினால் ப்ரஹ்மத்தில் ஆரோபம் செய்யப்படுகிறது. இதன்மூலம் ப்ரபஞ்சம், ப்ரஹ்மத்தைக்காட்டிலும் வேறாக இல்லை என்று அறியப்படுகிறது. ஜகத் என்பது ப்ரஹ்மத்தில் ஆரோபிதம் என்று சொல்லாவிடில்

ஜகத் என்றும் ப்ரஹ்மமென்றும் இரண்டு தத்வம் இருப்பதாக அறியப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படுமானுல் 'அத்வைதம் தத்வம்' என்று அறிந்து கொள்ளமுடியாது. ஆகவே, 'யதோவா இமானி பூதானி' என்பது போன்ற வாக்யங்கள் ஜகத் என்பது ப்ரஹ்ம கார்யம் என்று, ம்ருத்திலிருந்து கடஸாரவாதிகள் உண்டாவது போல் என்ற உதாகரணத்தைக் கொண்டு முதலில் பரிணுமவாதத்தை அனுசரித்து போதிக்கப்படுகிறது. இதுவே ஆரோப த்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது. அதன்பிறகு 'நேஹ நானுஸ்திகிஞ்சன' என்ற வாக்யத்தைக் கொண்டு, உண்மையில் ப்ரஹமத்தில் எதுவுமே இல்லையென்று ஆரோபிதமான ப்ரபஞ்சம் என்பதை (நிஷ்ப்ரபஞ்சம் என்று) அபவாதம் செய்கின்றது.

இதுவே அபவாத த்ருஷ்டி என்று சொல்லப்படுகின்றது. இவ்விதம் ப்ரஹ்மமென்பது நிஷ்ப்ரபஞ்சமாக இருந்தபோதிலும் மாயை என்பதால்ஸப்ரபஞ்சமாக தோன்றுகிறது என்று விவர்த்தவாதத்தைக் கொண்டு போதிக்கப்படுகிறது. இதுவே வ்யாமிச்ரத்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது. மாயையினுல் தோற்றுவிக்கப்படும் இந்த ஜகத் உண்மையில் இல்லை என்று தெரிவிப்பதற்காகவே, கார்யம் என்பது காரணத்தைக்காட்டிலும் வேறல்ல என்று 'வாசாரம்பணம் விகாரோ நாமதேயம்' என்ற ச்ருதி வாக்யத்தினுலும், 'ததனன்யத்வம் ஆரம்பண சப்தாதிப்ய: என்ற ஸூத்ரத்தினுலும் விவர்த்த வாதம் என்பதைக் கொண்டு ஜகத்மித்யாத்வம் நிரூபணம் செய்யப்படுகிறது. இந்தவிதம், ஆரோபிதத்ருஷ்டி, அபவாதத்ருஷ்டி, வ்யாமிச்ரத்ருஷ்டி என்ற மூன்று விதமானத்ருஷ்டிகளைக் கொண்டு மோக்ஷ பலனைவிரும்புகின்ற சிஷ்யனுக்கு க்ரமமாக தத்வம் போதிக்கப்படுகிறது.

**82.** அவதாரிகை :

இவ்விதம் சொல்லப்பட்ட மூன்று த்ருஷ்டிகளைப் பற்றி மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

आरोपदृष्टिरुदिता परिणामदृष्टिर्द्वैतोपशान्तिरपवादकदृष्टिरन्त्या ।
मध्ये विवर्तविषया द्वयमिश्रदृष्टि र्व्यामिश्रदृष्टिरधरोत्तरभूमिभावात्

ச்லோகார்த்தம் : முன்னால் சொல்லப்பட்ட பரிணுமத்ருஷ்ட்டி என்பதே ஆரோப த்ருஷ்டி த்வைதம் என்பதை நிஷேதம் செய்கின்ற அத்வைத த்ருஷ்டி என்பதேஅபவாதத்ருஷ்டி. இந்த இரண்டிற்கும் மத்தியில் விவர்த்தவாதம் என்ற த்ருஷ்டியே வ்யாமிச்ர த்ருஷ்டி என்று சொல்லப்படும். ஏனெனில்வ்யாமிச்ர த்ருஷ்டி என்பதில் முதலாவதாகவும், இரண்டாவதாகவும் சொல்லப்படும் இரண்டு த்ருஷ்டிகளும் இருக்கின்றது.

வ்யாக்யானம் : மூன்று விதத்ருஷ்டிகளின் ஸ்வரூபம் என்ன என்பதும், க்ரமம் என்ன என்பது பற்றியும் மேலே தெரிவிக்கப்படுகிறது. முதலில் பரிணுமவாதம் என்பதைக் கொண்டு ஜகத் என்பதுப்ரஹ்மகார்யம் என்று தெரிவிப்பதன் மூலமாக ஸர்வம் ப்ரஹ்மாத்மகம் என்று தெரிவிக்கின்றது. இதில் ஜகத், ப்ரஹ்மத்தில் ஆரோபிதம் என்று சொல்லப்படுகிறது.

மூன்றுவதாக அபவாத த்ருஷ்டி என்பது சொல்லப்படுகிறது. அதாவது கார்யமான ப்ரபஞ்சத்துடன் கூடிய அவித்யா நிவர்த்தி என்பதால்தான் அத்வைத சாக்ஷாத்காரம் ஏற்படுகிறது. இவ்விதம் த்வைத உபசாந்தி மூலமாக அத்வய ஆனந்த ப்ரஹ்மத்ருஷ்டி என்பதே அபவாதத்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது.

இந்த இரண்டிற்கும் மத்தியில்தான் வ்யாமிச்ரம் என்ற த்ருஷ்டி சொல்லப்படுகிறது. அதாவது, தத்வமாக இல்லாத ஒன்றை தத்வம்போல் தோற்றுவிக்கின்றது எதுவோ அதுவே வ்யாமிச்ர த்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது. நிஷ்ப்ரபஞ்சமான ப்ரஹ்மத்தினிடம் உண்மையில் இல்லாத ப்ரபஞ்சமென்பது மாயையில் தோற்றுவிக்கப்படுவதால் ஸப்ரபஞ்சமாக ப்ரஹ்மம் தோன்றுகிறது. அதில் ப்ரபஞ்சம் மித்யை என்று தெரிவிப்பதே விவர்த்தவாதம். இவ்விதம் ஆரோபம், அபவாதம், என்ற இரண்டிற்கும் மத்தியில் இருக்கின்றதாலும், இரண்டும் கலந்திருப்பதாலும் வ்யாமிச்ரத்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது. ஆகவே, முதலில் பரிணமவாதம், இரண்டாவது விவர்த்தவாதம், மூன்றுவது தத்வபோதம் என்ற முறையில்க்ரமமாக போதிக்கப்படுகிறது.

**83. அவதாரிகை :**

இந்த மூன்று த்ருஷ்டிகளையும் க்ரமமாக சொல்லப்படுவதற்கு என்ன காரணமென்றுல்,

ச்லோகம் :

तत्त्वावेदकमानदृष्टिरधमा तत्त्वक्षतिर्मध्यमा
तत्त्वप्रच्युतविभ्रमक्षयकरी तत्रान्त्यदृष्टिर्मता ।
जीवैकत्वमुमुक्षुभेदगतितो व्यामिश्रदृष्टिर्द्विधा
भिन्ना तत्र च पूर्वपूर्वविलयादूर्ध्वोर्ध्वलब्धिर्भवेत्

**ச்லோகார்த்தம் :** ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் தத்வத்தை தெரிவிக்கின்றது என்ற த்ருஷ்டியானது அதமத்ருஷ்டி ப்ரபஞ்சத்தில் ஆரோபம் செய்யப்பட்ட தத்வபுத்தியை நாசம் செய்கின்ற விவர்த்த த்ருஷ்டி மத்யமமாகும். தத்வத்திலிருந்து நழுவச்செய்கின்ற மித்யாப்ரபஞ்ச த்ருஷ்டியைநாசம் செய்கின்ற த்ருஷ்டி கடைசீயாகும். ஜீவன் ஏகன் என்றும் அனேகன் என்றும் பேதத்தில் வ்யாமிச்ரத்ருஷ்டி என்பது இரண்டு விதமாக இருக்கின்றது. இவைகளில் முன்னுல் ஏற்பட்ட த்ருஷ்டி நிஷேதத்தினுல், பின்னுல் இருக்கின்ற த்ருஷ்டி ஏற்படுகிறது.

**வ்யாக்யானம் :** பரிணமவாதம் என்பதை ஒத்துக்கொண்டு, அந்த நிலையில் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் அறியப்படுவது எல்லாம் (ஸத்யம்) ப்ரமாணம்தான் என்று அறியப்படுவதே ஆரோபத்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது. இந்த ஆரோபத்ருஷ்டி என்பது அஞ்ஞானத்தினுல் ஏற்படுகின்றதாலும், ஸர்வ அனர்த்தத்திற்கும் காரணமாக இருப்பதனுலும், ப்ரஹ்மஞானம் என்ற தத்வஞானம் ஏற்படுவதற்கு வெகுதூரமாக இருப்பதாலும் இந்த த்ருஷ்டியை அதமம் (கீழ்தரம்) என்று சொல்லப்படுகிறது.

வ்யாமிச்ரம் என்ற விவர்த்த த்ருஷ்டியில், ப்ரத்யக்ஷாதிகளால் அறியப்படுவதெல்லாம் தத்வமில்லை என்பதால் ப்ரபஞ்சம் ஸத்யமென்று தெரிவிக்கின்ற ப்ரத்யக்ஷாதிகள் ப்ரமாணமில்லை என்று தெரிவிக்கப்படுகிறது. இவ்விதம் ப்ரபஞ்சம் ஸத்யமல்லவென்றும் மித்யை என்றும் அறிவதே விவர்த்த த்ருஷ்டி என்று சொல்ப்படுகிறது ஏனெனில்,




இந்த த்ருஷ்டி த்வைதம் என்பதை ஸத்யமென்று தெரிவிக்கின்ற ஆரோபத்ருஷ்டியுமில்லை. அகண்டானந்த அத்வயப்ரஹ்ம விஷயகமான தத்வத்ருஷ்டியாகவுமில்லை. எந்த நிலையில் ப்ரத்யக்ஷாதிகள் ப்ரமாணமில்லையென்று அறியப்படுகிறதோ அதுவே விவர்த்த த்ருஷ்டி என்று சொல்லப்படுகின்றது. ஆரோபிதமான ப்ரபஞ்சமும் அதற்கு அதிஷ்டானமான ஸ்வரூபமும் இரண்டும் கலந்து அறியப்படுகின்றதால் இதை மத்திமத்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது. (வ்யாமிச்ரத்ருஷ்டி) தத்வமான ப்ரஹ்மஸ்வரூப நிலையிலிருந்து நழுவியதால் ஏற்பட்ட ப்ராந்தி ஞானம், தத்வஞானம் என்பதால் நாசம் அடைகின்றபோது அதுவே அபவாத த்ருஷ்டி என்று சொல்லப்படும். ப்ரஹ்மதத்வம் ஒன்றே ஸர்வ ப்ரத்யக் ஸ்வரூபமாக இருக்கின்றதென்றும் அதுவே பரமார்த்த ஸத்யம் என்றும், ப்ரஹ்மமென்பதையன்றி சிறிதளவு (கிஞ்சித்) வஸ்துவும் ஒருபோதும் இருந்ததுமில்லை, இருக்கவுமில்லை, இருக்கப்போவதுமில்லை என்று வேதாந்த விசாரத்தினால் ஜகத் மித்யாத்வ நிச்சயத்தையும் விட்டு ப்ரஹ்மத்தையன்றி வேறெதுவுமே இல்லை என்று அறியப்படும் த்ருஷ்டி என்பதே அபவாதத்ருஷ்டி என்று சொல்லப்படும்.

இந்த ஞானம், வாக்யார்த்தத்தின் முடிவாக ஏற்படுகின்றதால் அத்யந்த ஸன்னிஹிதமான த்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது. ஆகவே, முன்னால் சொல்லப்பட்ட இரண்டு த்ருஷ்டிகளைக் காட்டிலும் சிறந்தது என்ற காரணத்தினால் இந்த அபவாத த்ருஷ்டி என்பது உத்தமத்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது. இந்தவிதம் மூன்று த்ருஷ்டிகள் என்ன என்றும் அதன் ஸ்வரூபம் என்ன என்றும் விளக்கமாகச் சொல்லப்பட்டது. இந்த மூன்றுவித த்ருஷ்டிகளின் மத்தியில் சொல்லப்பட்ட விவர்த்த த்ருஷ்டி என்பதில் இரண்டுவித விபாகங்கள் சொல்லப்படுகிறது. அதாவது ஏக ஜீவவாதம் என்றும், நானா ஜீவவாதம் என்று இரண்டுவித வாதங்கள் இருக்கின்றதென்றும், இந்த இரண்டுவிதமான த்ருஷ்டிகளும் உபாய உபேயபாவமாக இருப்பதாக சொல்லப்படுகிறது. இதில் ஏக ஜீவவாதம் என்பதே உத்தமம் என்று சொல்லப்படுகிறது.

ஏக ஜீவனானநான், ஸ்வப்ன காலத்தில் அனேக ஜீவர்களைக் கண்டு அவர்களுடன் விவகாரம் செய்தாலும்கூட, அது எப்படி உண்மையில் இல்லையோ அதுபோல் இந்த ப்ரபஞ்சமும்மித்யை என்று விளக்கப்படுகிறது. ஸ்வப்னத்தில் அனேக ஜீவர்கள் இருப்பதாக எப்படி கல்பிக்கப்படுகிறதோ அதுபோல் ஜாக்ரத் ப்ரபஞ்சம் என்பதிலும் ஜீவபேதம், ஈச்வரபேதம் என்பதும், பத்தன், முக்தன் போன்ற பலவித பேதங்கள் இருப்பதாக அவித்யையினால் கல்பிக்கப்படுகிறது. அஹம் ப்ரஹ்மாஸ்மி என்ற தத்வஞானத்தினால் இந்த ப்ராந்தி நீங்குகின்றது என்று சொல்லப்படுகிறது. அவரவர்க்கும் அவித்யை என்பது தனித்தனியே இருக்கின்றதென்றும் அதனால் ஏற்படும் ப்ராந்தி ஞானம் அவரவர்க்கு ப்ரத்யேகமாக ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது. இதனாலேயே ப்ரபஞ்சம் என்பதும்அவரவர்க்கும் வெவ்வேறாக தோன்றுகிறது என்றும் சொல்லப்படுகின்றது. இந்த காரணத்தினாலேயே மோக்ஷ இச்சையுடைய எவர் ஒருவர் வேதாந்த விசாரம் செய்து ஆத்ம ஞானத்தை அடைகின்றாரோ அவருக்கு மட்டுமே அனாதியான ஸம்ஸாரம் நீங்கி முக்தி ஏற்படுகிறது என்றும் மற்றவர்கள் பந்தத்திலிருந்து விடுதலை அடைவதில்லை என்றும் சொல்லப்படுகிறது. ஆகவே, ஏக ஜீவ வாதம், அனேக ஜீவ வாதம் என்ற இரண்டு வாதங்களும் தத்வத்தை அறிவதற்கு உபாயமாக இருக்கின்றதால், அதிகாரிக்கு தகுந்தவாறு இரண்டு முறைகளினாலும் ஞானம்

ஏற்படலாம். இந்த உபாயங்கள் இரண்டும் விவர்த்தவாதம் என்ற வ்யாமிச்ரத்ருஷ்டியில்தான் சொல்லப்படுகின்றது.

இந்தவிதம், ஆரோபத்ருஷ்டிகாலம், விவர்த்த த்ருஷ்டிகாலம், தத்வத்ருஷ்டிகாலம் என்ற மூன்று விதமான காலங்களை அனுசரித்து க்ரமம் சொல்லப்படுகிறது. அதமம் என்று சொல்லப்படும் ஆரோபத்ருஷ்டி மத்திமம் என்று சொல்லப்படும் விவர்த்த த்ருஷ்டியினுல் பாதிக்கப்படுகிறது. அந்த் விவர்த்தத்ருஷ்டியென்பதும் உத்தமம் என்று சொல்லப்படும் தத்வ த்ருஷ்டியினுல் பாதிக்கப்படுகிறது என்று சொல்லப்படுவதால் ஒன்றுக்குமேல் ஒன்று உபாய பாவமாக இருக்கின்றது என்பது இதன்மூலம் தெரிவிக்கப் படுகிறது.

**84. அவதாரிகை :**

இந்த மூன்று த்ருஷ்டிகளின் விலயம் எந்த க்ரமத்தில் ஏற்படுகிறது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

परिणामबुद्धिमुपमृद्य पुमान् विनिवर्तयत्यथ वितर्तमतिम् ।
उपमृद्य तामपि पदार्थधिया परिपूर्णदृष्टिमुपसर्पति सः

**ச்லோகார்த்தம் :** பரிணுமத்ருஷ்டியை நிஷேதம் செய்த பிறகு விவர்த்த புத்தி ஏற்படுகிறது. அதன்பிறகு தத்த்வம் பதங்களின் லக்ஷ்யார்த்தம் அறிவதன்மூலம், அந்த விவர்த்தத்ருஷ்டி என்பதும் நிஷேதம் செய்யப்படுவதால் பூர்ணத்வ த்ருஷ்டியை (ஸாதகன்) அடைகின்றுன்.

**வ்யாக்யானம் :** வேதாந்த விசாரம் செய்கின்ற நிலையில், முதலில் ப்ரஹ்மமென்பதே ஜகத்காரணம் என்று அறியப்படுகிறது. அந்த நிலையில் ப்ரஹ்மமென்பது ஜகத்திற்கு பரிணுமி உபாதானமென்ற புத்தி ஏற்படுகிறது இவ்விதம் ஏற்படும் பரிணும த்ருஷ்டியினுல்ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களால் அறிவிக்கப்படும் விஷயங்கள் எல்லாம் ஸத்யம் என்றே அறியப்படுகின்றது. 'ஸச்சத்யச் சாபவத்' என்பது போன்ற வாக்யங்களால் ஸர்வம் ப்ரஹ்மத்திலிருந்து உண்டாகிறது என்று ஏற்படும் புத்தியே பரிணும புத்தி என்று சொல்லப்படுகிறது.

அதன் பிறகு ப்ரஹ்ம ஸ்வரூபம் என்னவென்று விசாரிக்கின்றபோது விஸ"ுத்தம், நிரவயவம், கூடஸ்த்தம், ஸன்மாத்ரம் ப்ரஹ்ம என்று அறியப்படுகிறது. அதனுல் இப்பேர்ப்பட்ட ஸ்வரூபத்திலிருந்து அதற்கு நேர்விருத்தமான தன்மையிலுள்ள இந்த ஜகத் எப்படி உண்டாக முடியும் என்று விசாரிக்கின்றபோது ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் வ்யாவகாரிக வஸ்துகளை தெரிவிப்பதில்தான் ஸாமர்த்யம் உடையதாக இருக்கின்றது என்பது அறியப்படுகின்றது. ஆகவே, வ்யாவகாரிக ப்ராமாண்யமுடைய வஸ்துக்களும், ஜீவேச்வரபேதம், ஜீவர்களுக்குள் பரஸ்பரபேதம் என்பவைகள் எல்லாமே உண்மையல்ல என்று அறியப்படுகின்றபோதுஇந்த ப்ரபஞ்சம் விவர்த்தம் என்று அறியப்படுகிறது.

இவ்விதம் நானுஜீவ வாதம் என்ற பக்ஷம் வ்யாவகாரிகம் என்று அறியப்படும் விவர்த்த த்ருஷ்டியைக் கொண்டு, ப்ரத்யக்ஷாதிப்ரமாணங்களால் அறியப்பட்ட இந்த

ப்ரபஞ்சம் உண்மையென்று ஏற்பட்ட பரிணும வாதம் விடப்படுகிறது. இவ்விதம் ச்ருஷ்ட்டத்ருஷ்டிஎன்று சொல்லப்படும்பரிணும வாதம் விடப்பட்ட பிறகு ஏக ஜீவவாதம் என்று சொல்லப்படும் த்ருஷ்டி சிருஷ்டி என்ற பேதம் முதலான ஸர்வ பேதங்களும் ஜாக்ரத் காலத்திலும் உண்மையில் இல்லை என்றுஅறியப்படுகின்ற நிலையில் முன்னுல் ஏற்பட்ட விவர்த்த புத்தி என்பதும் விடப்படுகிறது. அதன்பிறகு தத்த்வம்பதார்த்த சோதனையினுல் கிடைக்கப்பெற்ற கேவல லக்ஷ்யார்த்த புத்தியினுல் விவர்த்தவாதம் உபமர்த்தனம் செய்யப்படுவதால் 'ஸத் சிதாத்மக ப்ரஹ்மஸ்வரூபமேநான்' என்று அறிந்து ஸ்வஸ்ரூபமாக நிலைத்திருக்கின்ருன். இப்பேர்ப்பட்ட அதிகாரிக்கே வாக்யார்த்த முடிவான லக்ஷ்யார்த்த போதம் ஏற்பட்டு முக்தனுகிருன்.

**85.** அவதாரிகை :

முமுக்ஷுவாக இருக்கின்ற எல்லோருக்குமே இந்த விதம் க்ரமமாக மூன்றுவித த்ருஷ்டி ஏற்படுகிறது என்று சொல்வதற்கு முடியுமா? என்ருல்

**ச்லோகம் :**

अथशब्दसूचितमुमुक्षुरिमं खलु दृष्टिभेदमुदितक्रमतः ।
उपढौकते विगलिताखिलधीखतिष्ठते निजमहिम्नि ततः

**ச்லோகார்த்தம் :** 'அத' சப்தத்தினுல் சொல்லப்படுகின்ற முமுக்ஷுவானவன் முன்னுல் சொல்லப்பட்ட த்ருஷ்டிகளை க்ரமமாக ஆச்ரயித்து அதன் பிறகு இந்த த்ருஷ்டிகளை விட்டு ஸ்வஸ்வரூபத்தில் ஸ்திதி பெற்றிருக்கின்ருன்.

**வ்யாக்யானம் :** முமுக்ஷுவாக இருக்கின்ற எல்லோருக்குமே இந்த விதம் க்ரமமாக மூன்றுவித த்ருஷ்டி ஏற்படுகிறது என்று சொல்ல முடியுமா என்ருல், அவ்விதம் சொல்ல முடியாது. ஒரு சிலர் ஜீவித பர்யந்தம் பரிணும த்ருஷ்டியிலேயே இருக்கலாம். ஒரு சிலர் விவர்த்த த்ருஷ்டியிலும் இருக்கலாம். வேறு சிலருக்கு அபவாத த்ருஷ்டியும் ஏற்படலாம் என்பது ஸத்யம். ஆனுல் 'அதாதோ ப்ரஹ்மஜிஞ்ஞாஸா' என்ற சூத்ரத்தினுல் சொல்லப்படும் சாதன சதுஷ்ட்டயஸம்பன்னனுன ப்ரஹ்ம சூத்ரபாஷ்யங்களின் நான்கு அத்யாங்களிலுள்ள ஸம்பூர்ணமான சாஸ்திரார்த்தங்களை அறிவதில் அதிகாரியாக இருப்பவன் எவனே அவனுக்கே இந்த நிலை க்ரமமாக ஏற்படுகிறது. இவ்விதம் அதிகாரித்வம் இல்லாமல் சிரத்தை மட்டும் உள்ளவனுக இருப்பாராகில், அவரவர் சிரத்தைக்கு ஏற்றவிதம், பரிணுமம், விவர்த்தம் என்ற இரண்டு த்ருஷ்டிகளும் ஏற்படலாம். உத்தம அதிகாரிக்கே க்ரமமாக மூன்று நிலைகளும் ஏற்பட்டு முக்தனுகின்ருன்.

**86.** அவதாரிகை :

பரிணுமபுத்தி, விவர்த்த புத்தி என்ற இரண்டும் ஒன்று ஸத்யம் ஒன்று மித்யை என்று ஒன்றுக்கொன்று விருத்தமாக இருக்கின்றதால், ப்ரஹ்மசாக்ஷாத் காரத்திற்கு இரண்டுமே உபகாரமாக இருக்கிறதென்று எப்படிச் சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

परिणाम इत्यथ विवर्त इति बहवोऽहमेव च मुमुक्षुरिति ।
परिपुष्कलं च परमं पदमि त्यवगत्य तिष्ठति महिम्नि निजे

**ச்லோகார்த்தம் :** முமுக்ஷுவான ஒருவன் முதலில் பரிணமவாதத்தையும், அதன்பின் விவர்த்தத்தையும் ஒத்துக்கொள்கிறான். அதேபோல் முதலில் அனேக ஜீவவாதத்தையும் அதன்பின் ஏக ஜீவவாதத்தையும் ஒத்துக்கொள்கிறான். அதன் பிறகு பூர்ணமான பரமபதத்தை அறிந்து தன் ஸ்வரூபத்தில் நிலைத்திருக்கின்றான்.

**வ்யாக்யானம் :** அதிகாரியாக இருக்கின்றவன் முதலில் 'ஸச்சத்யச்சாபவத்' என்பது போன்ற ச்ருதி வாக்யங்களினால் ப்ரஹ்மமே ஜகத்திற்கு உபாதானம் என்று அறிகின்றான். அதன் பிறகு, ப்ரஹ்மத்தினிடமிருந்து இந்த ஜகத் எப்படி உண்டாக முடியும் என்று யோஜித்து மேலும் விசாரிக்கின்றபோது "ஆரம்பண சப்தாதிப்ய:" என்ற சூத்ரத்தினாலும், 'வாசாரம் பணம்' என்பது போன்ற ச்ருதிவாக்யத்தினாலும் இந்த ஜகத் விவர்த்தம் என்று அறிந்து கொள்கிறான். அதன் பிறகு விவர்த்தவாதத்தினாலும் ஜீவர்கள் அனேகம் இருப்பதாக தோன்றுவதும் சரியல்ல என்று அறிந்து மேலும் விசாரிக்கின்றபோது ஸ்வப்ன காலத்தில் அனேக ஜீவர்கள் இருப்பதாக அறியப்பட்ட போதிலும், (அவைகள் உண்மையில் இல்லையென்றும்) அவைகளை அறிகின்ற நான் ஒருவன்தான் உண்மையில் இருக்கின்றேன். அதேபோல் முமுக்ஷுவான நான் ஒருவன் தான் இருக்கின்றேன் என்னையன்றிவேறாக எதுவுமில்லை என்று அறிகிறான். அதன் பிறகு சுத்த சித்ஸ்வரூப ப்ரஹ்மமாக இருக்கின்ற என்னிடம் அஞ்ஞானம் என்பதோ, அதன் கார்யமான இந்த ப்ரபஞ்சம் என்பதோ ஒருபோதும் இருக்க முடியாது என்ற அபவாத த்ருஷ்டியைக் கொண்டு விவர்த்த த்ருஷ்டி என்பது பாதிக்கப்படுகிறது. இந்த விதம் பரம பதம் என்ற பரிபூரண அகண்ட சத்சிதானந்த ரூபமே நான் என்று தன் நிஜ ஸ்வரூபத்தில் ஸாமான்ய விசேஷங்கள் என்ற தன்மைகள் அற்ற ப்ரஹ்மஸ்வ ரூபமாகவே நிலைத்திருக்கின்றான்.

**87.88.** அவதாரிகை :

பரிணம திருஷ்டி என்பது ஆரோபத்ருஷ்டி என்றும் விவர்த்த த்ருஷ்டி என்பது வ்யாமிச்ரத்திருஷ்டி என்றும் ஏன் சொல்லப்படவேண்டும்? விவர்த்தத்ருஷ்டி என்பது அனாரோபமாக (ஆரோபமற்றதாக) இருக்கின்றதால் அது ஏகரூபம் என்று தானே சொல்லவேண்டும்? அவ்விதமின்றி மிச்ரம் என்று சொல்லப்படுவதற்கு காரணம் என்ன?

**ச்லோகங்கள் :**

परिणामधियो विवर्तधीरपवादात्मतया व्यवस्थिता ।
सकलद्वयमर्दिनीं धियं प्रति साऽऽरोपगिराऽभिधीयते
उभयव्यतिमिश्ररूपतां भजते तेन विवर्तधीरियम् ।
प्रथमोत्तमयोर्द्वयोः पुनर्व्यतिमिश्रीभवनं न विद्यते

ச்லோகார்த்தம் : விவர்த்த திருஷ்டி என்பது பரிணும த்ருஷ்டிக்கு அபவாதமாக இருக்கிறது. ஆனுல் அந்த விவர்த்த த்ருஷ்டி என்பதும் த்வைதத்ருஷ்டியை நிஷேதம் செய்கின்ற ஞானத்தை அபேக்ஷித்து ஆரோபம் என்றே சொல்லப்படுகிறது. ஆகையால் விவர்த்த த்ருஷ்டி என்பது (பரிணுமத்ருஷ்டி, அத்வைதத்ருஷ்டி என்ற) இரண்டினுடைய மிச்ரமாக ஆகின்றது. பரிணுமத்ருஷ்டி என்ற முதல் த்ருஷ்டி, அத்வைதத்ருஷ்டி என்ற கடைசீ த்ருஷ்டி இவை இரண்டிற்கும் மிச்ரணம் (சேர்க்கை) ஏற்படாது.

வ்யாக்யானம் : முதலில் ஏற்படும் பரிணும புத்தியினுல் ப்ரபஞ்சம் ஸத்யம் என்ற புத்தி ஏற்படுகிறது. அதன் பிறகு அது சரியல்ல என்று அறியப்படுவதால், பரிணும புத்தி விலக்கப்படுகின்றபோது ப்ரபஞ்சம் விவர்த்தம் என்று அறியப்படுகிறது. அதனுல் பரிணுமபுத்திக்கு விவர்த்த புத்தி என்பது அபவாதமாக ஆகிறது. இதனுல் வஸ்து சுத்தம் என்று அறியப்படுகிறது. ஆனுல் ஸகலத்வைதமும் பாதிக்கப்படுவதால் ஏற்படும் உத்தமமான தத்வபுத்தியை அபேக்ஷித்து விவர்த்த புத்தி என்பது ஆரோபமாக ஆகிறது. வ்யவகார கால மாத்ரம் ப்ரபஞ்சம் தோன்றுகிறது என்ற புத்தியும் ஆரோபம் என்பதால், விவர்த்தத்ருஷ்டி என்பதும் தத்வத்திருஷ்டியினுல் பாதிக்கப்படுகிறது. ஆகையால், பரிணுமத்ருஷ்டியைக்கொண்டு விவர்த்தத்திருஷ்டி என்பது அபவாத த்ருஷ்டி என்றும், தத்வத்ருஷ்டியைக் கொண்டு ஆரோபத்ருஷ்டி என்றும் சொல்லப்படுகிறது. ஆகவே, இரண்டும் கலந்திருக்கின்ற இந்த விவர்த்தத்ருஷ்டி என்பது வ்யாமிச்ரத்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது.

இந்த விதம் பரிணுமத்ருஷ்டிக்கு முன் வேறுத்ருஷ்டி எதுவுமில்லாததால் பரிணும த்ருஷ்டி என்பது ஆரோபத்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது.

அதேபோல் தத்வத்ருஷ்டி என்பது ஏற்பட்ட பிறகு அந்த த்ருஷ்டியை அபவாதம் செய்யக்கூடிய த்ருஷ்டி என்பது வேறு எதுவும் இல்லாததால் தத்வத்ருஷ்டி என்பது அபவாதத்ருஷ்டி என்றே சொல்லப்படவேண்டும்.

ஆகவே-விவர்த்தத்ருஷ்டி என்பது ஒன்றே பரிணுமத்ருஷ்டியை அபேக்ஷித்து அபவாத த்ருஷ்டியாகவும், தத்வத்தை அபேக்ஷித்து ஆரோபத்ருஷ்டியாகவும் இருக்கின்றது. அதனுல் விவர்த்தத்ருஷ்டி என்பது மிச்ரம் என்றே சொல்லவெண்டும். ஆரோபம் என்று ஏகரூபமாக சொல்லமுடியாது. அதேபோல மற்ற இரண்டும் மிச்ரம் என்று சொல்வதற்கு காரணம் ஏதுமில்லை.

**89.** அவதாரிகை :

முன்னுல் சொல்லப்பட்ட முறையில் ஒரே அதிகாரியினிடம் ஒன்றன்பின் ஒன்ருக, க்ரமமாக, ஆரோபத்ருஷ்டி, விவர்த்தத்ருஷ்டி அபவாதத்ருஷ்டி என்று மூன்று விதமான த்ருஷ்டி எற்படுவதாகச் சொல்வது சரியல்ல. ஏனெனில் மூன்று வித்த்ருஷ்டிகளும் ஒன்றுக்கொன்று முரண்பாடு உடையதாக இருக்கின்றதால் ஒரே அதிகாரியிடம் மூன்று விதம் ஸம்பவிக்க முடியாது. அதனுல் அதம, மத்திம உத்தம அதிகாரி பேதத்தைக் கொண்டு த்ருஷ்டி பேதம் சொல்லப்பட வேண்டும் என்று ஒரு சிலரால் சொல்லப்படுகிறது. இந்த விஷயம் பற்றி மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

कृपणधीः परिणाममुदीक्षते क्षपितकल्मषधीस्तु विवर्तताम् ।
स्थिरमतिः पुरुषः पुनरीक्षते व्यपगतद्वितयं परमं पदम्

ச்லோகார்த்தம் : அசுத்த புத்தியை உடையவன் பரிணுமத்ருஷ்டியை ஆச்ரயிக்கின்ருன். சுத்த புத்தியை உடையவன் விவர்த்தத்ருஷ்டியை ஆச்ரயிக்கின்ருன். ஸ்திரமான புத்தி உடையவன் த்வைத மற்ற பரமபதம் என்பதை அறிகின்ருன்.

வ்யாக்யானம் : ப்ரபஞ்சம் ஸத்யம் என்றும், ப்ரபஞ்சத்தில் வைராக்யத்தை அடையாதவனும், நான் உண்மையில் கர்த்ருத்வபோக்த்ருத்வம் உள்ளவன் என்றும், உபாஸனம் என்ற ஸாதனத்திஞல் ப்ரஹ்ம பாவம் அடையப்படவேண்டும் என்று நினைத்து அந்த ஸாதனத்தில் ப்ரவர்த்திப்பவன் அதம அதிகாரி. ஏனெனில் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களிஞல் அறியப்படும் விஷயங்கள் எல்லாம் ஸத்யம் என்று நினைக்கின்ற புருஷனுக்கு வஸ்துதத்வம் இன்னதென்று விவேகம் செய்து அறியக்கூடிய ஸாமர்த்யம் கிடையாது. ஆகையால் வைராக்யம் முதலான ஸாதன ஸம்பத்தி இன்றி அசுத்த அந்த கரணம் உடையவஞக இருக்கின்ருன் என்பதால் அவனே அதம அதிகாரி.

எந்த புருஷன் ப்ரபஞ்சத்தில் வைராக்யத்தை அடைந்து அதஞல் ஏற்பட்ட சுத்த அந்த கரணமுடையவன் வேதாந்தச்ரவணுதிகளைச் செய்கின்ருனே அவனே ப்ரபஞ்சம் ப்ரஹ்ம விவர்த்தம் என்று அறிகிருன். அதஞல் அவன் மத்யம அதிகாரி. எந்த புருஷன் ச்ரவணம் மனனம் முதலானவைகளால் அசைக்க முடியாத த்ருடமான புத்தி உடையவஞக இருக்கின்ருனே அவனே த்வைத மற்ற பரமபதம் என்ற ஸ்வஸ்வ ரூபத்தில் ஸ்திரபுத்தி உடையவஞக நிலேத்திருக்கின்ருன். அவனே ஜீவன் முக்தன் என்றும் உத்தம அதிகாரி என்றும் சொல்லப்படுகிறது.

(ஸ்திரமதி என்ற பதம் ஜீவன் முக்தன் என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றது.)

இவ்விதம் க்ருபணதீ, க்ஷபிதகல்மஷதீ, ஸ்திரதீ என்று மூன்று வித புத்தியுடைய அதிகாரி பேதத்திஞல்தான் த்ருஷ்டி பேதம் சொல்லப்படுகிறது என்று அவர்களால் சொல்லப்படுகிறது.

**90. அவதாரிகை :**

இவ்விதம் முமுக்ஷுக்கள் அனேகம் என்றும் முமுக்ஷுவான அதிகாரி ஒருவனே என்றும், விவர்த்த புத்தி இரண்டு விதம் என்றும் சொல்லப்பட்ட விஷயத்திலும் அதிகாரி வெவ்வேருகத்தான் ஒத்துக் கொள்ள வேண்டும் என்றும் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

पुरुषभेदवशाद्द्विविधा भवेत्क्षपितकल्मषधीरपि मध्यमा ।
जगदनेकमुमुक्षुकमीक्षते पुरुष एकतरो न तथेतरः

**ச்லோகார்த்தம் :** மத்யமமாக இருக்கின்ற சுத்த புத்தி என்பது, புருஷ புத்தியினுல் இருவகைப்படுகிறது. ஒருவன் லோகத்தில் அனேக முமுக்ஷுக்கள் இருப்பதாக பார்க்கின்ருன். மற்ருெருவன் அவ்விதம் பார்ப்பதில்லை.

வ்யாக்யானம் : விவர்த்த த்ருஷ்டியில் இரண்டு விதமாக (ஏக ஜீவவாதம் என்றும் அனேக ஜீவவாதம் என்றும்) சொல்லப்பட்ட விஷயமும் அதிகாரி பேதத்தைக் கொண்டே சொல்லப்படுகிறது. ஒருவன் ஒரே முமுக்ஷுதான் என்று நினைக்கிறான். மற்றொருவன் அனேக முமுக்ஷுக்கள் இருப்பதாக அறிகிறான். அதனால் அதிகாரி பேதமே த்ருஷ்டி பேதத்திற்கு காரணம்.

**91.** அவதாரிகை :

இந்த விதம் சொல்லப்படும் கொள்கைகள் எதுவும் சரியல்ல என்று நிராகரணம் செய்யப்படுகிறது.

ச்லோகம் :

इति तु केचिदुशन्ति महाधियस्तदपि संभवतीति न दुष्यति ।
इह तु सूत्रकृताऽथ गिरोदितः पुरुष एकविधस्त्रिविधो न तु

ச்லோகார்த்தம் : இந்த விதம் சில அறிவாளிகளால் கூறப்படுகிறது. ஆனால், இந்த விதம் ஸம்பவிக்க முடியாது என்பதால் இந்த பக்ஷமும் தோஷமுடையதேயாகும். (ஏனெனில்) இந்த சாஸ்திரத்தில் 'அத' சப்தத்தினால் சொல்லப்படும் புருஷன் ஒருவன்தான் என்றும் மூன்று பேர் அல்ல என்றும் சூத்ரகாரரால் சொல்லப்படுகிறது.

வ்யாக்யானம் : இந்த விதம் மூன்று விதமான த்ருஷ்டிகளுக்கும் அதிகாரி பேதம் இருப்பதாகச் சொல்பவர்கள் என்ன காரணத்தைக் கொண்டு இவ்விதம் சொல்கிறார்களோ தெரியவில்லை. இவ்வித தோஷமுடைய கொள்கையுடையவர்கள் மிகுந்த புத்திமான்களாகவே இருக்க வேண்டுமென்று பரிகாசமாகச் சொல்லப்படுகிறது.

மூன்று த்ருஷ்டிகளும் வெவ்வேறாக இருக்குமானால் அவைகள் ஒன்றுக்கொன்று உபகாரகமாக இருக்கமுடியாது என்பதால் அவைகள் வ்யர்த்தமாகும் என்பது சூத்ரக்காரரின் அபிப்ராயம். ஆகவே, 'அதாதோப்ரஹ்ம ஜிஞ்ஞாஸா' என்ற சூத்திரத்தினால், 'அத' சப்தத்தினால் சாதனஸம்பத்தி அனந்தரம், க்ரமமாக மூன்று த்ருஷ்டிகளும் ஏற்படுகிறது என்று சொல்வதே வேதாந்த சித்தாந்தம். மோக்ஷமென்ற புருஷார்த்தத்தை அடைய விரும்புகின்ற முமுக்ஷுவான அதிகாரியே சாஸ்திரங்களைச் ச்ரவணம் செய்து க்ரமமாகமோக்ஷமென்ற புருஷார்த்தத்தை அடைகிறான். அதனால் மோக்ஷசாஸ்திரத்தில் கர்ம காண்டத்தில் சொல்லப்படுவது போன்ற அதிகாரி பேதம் சொல்லமுடியாது. ஏனெனில் கர்ம காண்டத்தில்தான், எந்த பலனை விரும்பி எந்த கர்மாவைச் செய்கின்றானோ அவன் அந்த கர்மாவைச் செய்து அந்த பலனை அடைகின்றான் என்பதால் அதிகாரி பேதம் சொல்ல முடியும். ஆனால் வேதாந்தத்தில் மோக்ஷம் என்ற பலம் ஒன்றுதான் என்பதால் அதிகாரி பேதம் சொல்லமுடியாது. அதனால் அதிகாரியான ஒருவனுக்கே மூன்று வித நிலையில் க்ரமமாக மூன்று வித த்ருஷ்டி ஏற்படுகிறது என்றே சொல்ல வேண்டும். பரிணாம த்ருஷ்டியிலோ விவர்த்த த்ருஷ்டியிலோ இருப்பவனுக்கு சாக்ஷாத் தத்வ ஞானம் ஏற்பட்டதாகச்சொல்லமுடியாது. அபவாத த்ருஷ்டி ஏற்பட்டவனுக்கே தத்வசாக்ஷாத் காரம் ஏற்படுகிறது. ஆகவே, அதிகாரி பேதத்தைக் கொண்டு சாஸ்திரம் மூன்று விதத்ருஷ்டியை தெரிவிக்கிறது என்று சொல்லப்படுமானால் அது வ்யர்த்தம் என்றே ஆகும். லோகத்தில் பரிணாம த்ருஷ்டியிலேயே ஒரு சிலர் இருக்கிறார்கள்

என்பதனுல், இப்படியும் இருக்கலாம் என்று சொல்லப்படுகிறதேயன்றி சாஸ்திர ஸம்மதமாகச் சொல்லப்படவில்லை.

**92. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்படுவதற்கு என்ன காரணம்?

**ச்லோகம் :**

तिसृषु भूमिषु तस्य च तिष्ठतः क्रमवशात्स्वयमुत्तमभूमिका ।
समुपसर्पति तत्र च तिष्ठतः समुपशाम्यति कारणकार्यधीः

ச்லோகார்த்தம் : க்ரமமாக மூன்று படிகளை ஆச்ரயிகின்ற புருஷனை உத்தமமான படியென்பது ஸ்வயமே அடைகின்றது. உத்தமமான நிலேயில் இருக்கின்றவனிடம் கார்ய காரண புத்தி என்பது மறைந்துவிடுகிறது.

வ்யாக்யானம் : முன்னுல் சொல்லப்பட்ட முறையில் சாஸ்த்ரார்த்தங்களை சரவணம் செய்கின்றபோது க்ரமமாக ஒன்றன் பின் ஒன்ருக த்ருஷ்டி ஏற்படுகிறது. பரிணும த்ருஷ்டி ஏற்பட்டவனுக்கு விவர்த்த த்ருஷ்டி ஏற்படுகின்றபோது புத்தி பரிபாகத்தை அடைகிறது. அதனுல் அவனுக்கே அதிக சிரமமின்றி மூன்ருவது த்ருஷ்டி ஏற்பட்டு அதில் நிஷட்டையை அடைகின்ருன். அதனுல் த்வைத த்ருஷ்டி ஸ்வயமே நாசத்தை அடைகின்றது. (ஒடுங்கிவிடுகிறது) இப்பேர்பட்ட அதிகாரிக்காகவே சாஸ்திரம், சிருஷ்டி வாக்யங்களைக் கொண்டு பரிணும த்ருஷ்டியை முதலில் போதித்து, அதன் பிறகு 'நேதி' என்ற நிஷேத வாக்யங்களைக் கொண்டு விவர்த்த த்ருஷ்டியை போதிக்கின்றது என்றே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படவில்லேயென்ருல் நிஷேதம் செய்வதற்குரிய விஷயமே இல்லேயென்ருகும். அதேபோல் பரிணுமவாதமோ விவர்த்தவாதமோ இல்லேயென்று தெரிவித்து அபவாத வாதம்தான் சித்தாந்தம் என்று சொல்லவேண்டிய அவஸ்யமும் இருக்க முடியாது. அதேபோல் த்வைத மற்ற நிலேயில் முக்தி என்ற நிலேயை அடைகிருன் என்று சாஸ்திரம் தெரிவிப்பதாகச் சொல்லவேண்டிய அவஸ்யமும் இருக்க முடியாது. ஆகவே, மஹாவாக்யத்திலிருந்து அகண்டார்த்தபோதகம் ஏற்படுமாஞல் அதுவே உத்தம த்ருஷ்டி என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் க்ரமமாக த்ருஷ்டி ஏற்படுபவனுக்கே உத்தம திருஷ்டி என்பது யத்னமின்றி சுலபமாக அடைய முடியும்.

**93. அவதாரிகை :**

இதே விஷயம் பற்றி வேருெரு முறையில் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

श्रुतिवचांसि मुनिस्मरणानि च द्वयविशारदगीरपि सर्वशः ।
अयमपेक्ष्य दशात्रितयं विना न हि घटामुपयाति कदाचन

ச்லோகார்த்தம் : ச்ருதி வாக்யங்கள், வ்யாஸ சூத்ரங்கள் என்ற இரண்டையும் விசாரிக்கின்றதில் குசலர்களாக இருக்கின்ற பாஷ்யகாரர் முதலானவர்களின் வாக்யங்கள், இவை மூன்றையும் அபேக்ஷித்து மூன்று நிலேகளை ஒத்துக் கொள்ளவில்லே என்ருல், பொருந்தாது.

வ்யாக்யானம் : இந்தவிதம் மூன்று விதமான த்ருஷ்டியை ஆச்ரயித்தே சாஸ்திரம் ப்ரவர்த்திக்கின்றது என்று சொல்வதற்கு என்ன காரணம் என்ருல், சிருஷ்டி வாக்யங்களிஞல் சிருஷ்டி என்பதை தெரிவித்த பிறகு, 'வாசாரம்பணம்' முதலான வாக்யங்களாலும், நிஷேத வாக்யங்களாலும், மஹா வாக்யங்களாலும் க்ரமமாக 'ச்யால் லோக வத்' (ப்ரஹ்ம ஸூத்ரம் (2.1.13) 'ததனன்யத்வம்' (ப்ரஹ்ம ஸூத்ரம் 2.1.14) என்ற வ்யாஸ ஸூத்ரங்கள், ச்ருதி வசனங்கள் இவைகளில் விசாரதரான பாஷ்ய காரருடைய வசனங்களே ஆலோசிக்கின்றபோது க்ரமமாக ஒரே அதிகாரிக்கே இந்த மூன்று நிலேகளும் ஸம்பவிக்கின்றது என்று அறியப்படுகிறது. அவ்விதமில்லேயென்ருல் ஒன்றுக்கொன்று உபகாரக, உபகார்யமாக இருக்கின்றதென்ரே, ச்ருதி வசனங்கள் க்ரமமாக போதிக்கின்றது என்ரே சொல்லமுடியாது. ஆகவே ச்ருதி வசனங்களின் நோக்கம் என்ன என்பதை அறிந்து, க்ரமமாக போதிக்கின்றது என்று சொல்லப்பட்டால் தான் ச்ருதியின் தாத்பர்ய விஷயம் சித்திக்கும்.

**94.** அவதாரிகை :

விசாரிக்கப்படும் விஷயத்திற்கு உபயோகமாகிறது என்ற காரணத்திஞல், 'ச்யால்லோகவத்' என்ற ஸூத்ரத்திஞல், ப்ரத்யக்ஷாதிகளுக்கும் ப்ரமாணபூதமான அர்த்தத்தை தெரிவிப்பதில் ஸாமர்த்யம் உண்டு என்று அவைகளுக்கு வ்யாவகாரிக ப்ரமாண்யத்தை முதலில் ஒத்துக்கொண்டு அதன்பிறகு தத்வத்தை போதிக்க வேண்டும் என்ற காரணத்திற்காக சொல்லப்படுகிறேதேயன்றி, அதுவே சித்தாந்தம் என்று சொல்லப்படவில்லே.

ச்லோகம் : अतोऽनपोह्यैव च तत्त्वसंविदुत्पादनेऽध्यक्षमतेः पुरस्तात् ।
सामर्थ्यमक्षादिविरोधमस्य निवारयामास समन्वयस्य

ச்லோகார்த்தம் : ஆகையால் முதலில், ப்ரத்யக்ஷ ப்ரமாணமானதுதத்வஞானத்தை ஏற்படுத்தக்கூடிய ஸாமர்த்யமுடையது என்ற கருத்தை நிஷேதம் செய்யாமல், ஸமன்வயத்துடன், ப்ரத்யக்ஷ விரோதத்தை நிஷேதம் செய்கிருர்.

வ்யாக்யானம் : தத்வபோதம் ஏற்படுவதற்கு முன்பு ப்ரத்யக்ஷாதிகளுக்கும் ப்ரமாண்யம் உண்டு என்று தெரிவிப்பதற்காகவே 'ச்யால் லோகவத்' என்ற ஸூத்ரத்திஞல் பரிணும வாதத்தை அவலம் பித்து விரோத பரிகாரம் செய்யப்பட்டது. அதஞல் அதுவே சித்தாந்தபக்ஷம் என்று சொல்லப்படவில்லே, வ்யாவகாரிக ப்ராமாண்யம் என்பது தத்வத்தை போதிப்பதற்கு உபகாரகமாக இருக்கின்றது. அதஞல் ப்ரத்யக்ஷாதிகளுக்கும் விஷய ஞானம் என்பதை உண்டு பண்ணக் கூடிய ஸாமர்த்யம் உண்டு என்பதால் அவைகளை நிராகரணம் செய்யாமல் ஒத்துக்கொண்டே விரோத பரிகாரம் செய்யப்படுகிறது.

**95.** அவதாரிகை :

அதன் பிறகு 'ததனன்யத்வ ஆரம்பண சப்தாதிப்ய:' என்ற ஸூத்ரத்தை அனுசரித்து ப்ரத்யக்ஷாதிகளுக்கு தத்வத்தை போதிக்கக் கூடிய ஸாமர்த்யம் இல்லே என்றும், காரணம் ஒன்றே ஸத்யம், கார்யமென்பதெல்லாம் ஸத்யமில்லே என்றும் தெரிவித்து

அத்வய ஸமன்வயத்திற்கு ப்ரத்யக்ஷாதிகளால் ஏற்படும் விரோத பரிகாரத்திற்காக விவர்த்த வாதம் சித்தாந்தமாகச் சொல்லப்படுகின்றது.

ச்லோகம் :

इहाधुनाऽऽरम्भणशब्दशक्तिं संश्रित्य तत्त्वावगतिक्षमत्वम् ।
अक्षादिमानस्य निराकरोति समन्वयस्यापनयन्विरोधम्

ச்லோகார்த்தம் : இந்த இடத்தில் ஸமன்வயத்துடன் ப்ரத்யக்ஷ விரோதத்தை நிஷேதம் செய்யும் பொருட்டு வாசாரம்பணம் என்ற சப்தத்தின் அர்த்தத்தை ஆச்ரயித்து ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களின் தத்வ போதக ஸாமர்த்யத்தை நிஷேதம் செய்கின்றுர்.

வ்யாக்யானம் : லோகவ்யவஹாரத்தை அனுசரித்து ப்ரத்யக்ஷாதிகளும் ப்ரமாணம் என்று சொல்லப்பட்ட போதிலும், 'ஆரம்பணசப்தாதிப்ய:' என்று பின்னுல் சொல்லப்படும் அதிகரணத்தின் மூலம், ப்ரத்யக்ஷாதிகளுக்கு வ்யாவஹாரிக ப்ராமாண்யம் தான் உண்டு என்று விவர்த்தவாதத்தின் மூலம் சித்தாந்தம் செய்யப்பட்டது. ஆகவே வ்யாவ ஹாரிகப்ராமாண்யத்திற்கு ஏற்படும் விரோதம் என்பது இந்த முறையில் பரிகாரம் செய்யப்பட்டது.

இப்போது சாஸ்திரத்திலிருந்து அகண்டார்த்த போதம் ஏற்படுவதற்கு உபகாரமாக, 'ஆரம்பணசப்தாதிப்ய:' என்ற சூத்ரத்தை அனுசரித்து ப்ரத்யக்ஷாதிகளுக்குதத்வத்தை போதிக்கக்கூடிய ஸாமர்த்யம் கிடையாது என்று தெரிவிப்பதன் மூலம் அத்வய ஸமன்வயத்திற்கு ஏற்படும் விரோதம் முற்றிலும் பரிகாரம் செய்யப்படுகிறது.

96. அவதாரிகை :

பரிணும வாதத்தினுல் விரோத பரிகாரம் செய்யப்பட்ட பிறகு விவர்த்த வாதத்தினுல் பரிகாரம் செய்யவேண்டும் என்று ஏன் இவ்வளவு ஆக்ரஹம் ?

ச்லோகம் :

अखण्डवाक्यार्थमनुव्रजन्ती समन्वयोत्थापितबुद्धिवृत्तिः ।
अक्षादिभिस्तत्त्वनिवेदने हि सद्यः परिम्लायति निर्विशङ्कम्

ச்லோகார்த்தம் : ப்ரத்யக்ஷாதிகள் தத்வபோதகமாக இருக்குமானுல், ஸமன்வயம் செய்வதன் மூலம் ஏற்படுகின்றதும் ஸங்கை அற்ற அகண்ட வாக்யார்த்தத்தை விஷயீ கரிக்கின்றதுமான புத்திவ்ருத்தி என்பது பாதிக்கப்படுகிறது.

வ்யாக்யானம் : பரிணுமவாதத்தின் மூலம் விரோத பரிகாரம் செய்யப்பட்டதால், ப்ரபஞ்சத்துடன் கூடிய ப்ரஹ்மமென்பது ஏகம் என்று அறியப்படுகிறது என்ருலும் அறியப்படவேண்டிய அகண்ட ஏகரஸமானதத்வம் அறியப்பட்டதாக ஆகாது. பரிணும வாதம் என்பதால் கார்யம், காரணம் என்று இரண்டு இருக்கின்றது என்றும் காரணத்தையன்றி, கார்யம் என்பது வேறுபட்டது அல்ல என்றும் சித்திக்கின்றது. இவ்விதம் சித்திக்கின்ற அபேதத்தைக்கொண்டு அத்வைதம் தத்வம் என்பது

சாதிக்கப்படுகிறது. ஆனுல் அகண்ட ஏகரஸம் அத்வைதம் என்ற சித்தாந்தம் பரிணும பக்ஷத்தில் சித்திக்கமுடியாது. அதனுல் அதை பரிகாரம் செய்வதற்காகவே விவர்த்தவாதம் என்பதை ஆச்ரயிக்க வேண்டும்.

**97.** அவதாரிகை :

ஸவிஸேஷம் என்பதே அத்வயத்தில் ஸமன்வயம் என்று சாஸ்த்ரார்த்தம் தாத்பாயத்துடன் தெரிவிக்கின்றது என்று சொல்லாமே? அகண்ட ஏகரஸமான தத்வத்தை தெரிவிப்பதில்தான் தாத்பர்யம் என்று ஏன் சொல்ல வேண்டும்?

ச்லோகம் :

अखण्डमेवाद्वयमात्मतत्त्वं त्रयीशिरोवाक्यमयं प्रविष्टाः ।
वदन्ति शब्दा इति शब्दशक्ति निरूपणे पूर्वमुदीरितं हि

ச்லோகார்த்தம் : உபநிஷத்திலுள்ள ஸத்யாதி சப்தங்கள் தத், த்வம், முதலான சப்தங்களுடன் சேர்ந்து அகண்டமும் அத்வைதமுமாக இருக்கின்ற ஆத்மதத்வத்தையே தெரிவிக்கின்றது என்ற விஷயம் முன்பே சொல்லப்பட்டிருக்கிறது.

வ்யாக்யானம் : 'வாசாரம்பணம்' என்ற ச்ருதி வாக்யமும் "அபாகாதக்னே: அக்னித்வம்" என்ற ச்ருதி வாக்யமும் (சாந்தோ 6.4.1) "நேஹநானுஸ்திகிஞ்சன" என்ற (ப்ரஹ 4.4.19) ச்ருதி வாக்யமும், கார்யம், என்று சொல்லப்படும் ஸர்வமும் சிறிதும் இல்லையென்றே நிஷேதம் செய்கின்றது. ஆகவே ஸகண்ட அத்வைதம் என்பதே தத்வம் என்று சொல்வது பொருந்தாது. அகண்ட ஏகரஸமான அத்வயஸ்வரூபத்தில்தான் ஸமன்வயம் என்று ஸமன்வய ஸூத்ரங்களினுல் சாதிக்கப்பட்டிருக்கின்றது. ஸம்ஸர்க்க விஷயமாக இல்லாத ஒரே அத்வைத தத்வம்தான் சாஸ்திரத்தினுல் போதிக்கப்படுகிறது என்பது முன்பே விளக்கப்பட்டிருக்கிறது. அதனுல் பேதஸம்ஸர்க்கம் என்பதே ஸம்பவிக்க முடியாது.

**98.** அவதாரிகை :

இவ்விதம் சாதிக்கப்படுவதால் என்ன விஷயம் சித்திக்கின்றது?

ச்லோகம் :

अतो विरोधस्य निराससिद्ध्यै निरस्यतेऽक्षादिषु तत्त्वभागः ।
संरक्ष्यते संव्यवहारशक्ति भागः पुनः सर्वमतोऽनवद्यम्

ச்லோகார்த்தம் : ஆகையால் விரோதத்தை பரிகாரம் செய்வதற்காக ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களுடைய தத்வபோதக தன்மை நிஷேதம் செய்யப்படுகின்றது. அவைகளின் வ்யாவஹாரிக ப்ரமாண்யம் ஒத்துக் கொள்ளப்படுகின்றது என்பதால் இதில் தோஷம் ஏதும் கிடையாது.

வ்யாக்யானம் : சாஸ்திரம் தெரிவிக்கின்ற விஷயங்களுக்கும்,, ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கும் விரோதம் ஏதுமில்லை என்று தெரிவிப்பதன் மூலம் விரோத பரிகாரம் செய்வதற்காக, ப்ரத்யக்ஷாதிகளுக்கு தத்வத்தை போதிக்கக்கூடிய ப்ராமாண்யம்

இல்லையென்றுலும், வ்யாவஹாரிக ப்ராமாண்யம் உண்டு என்று தெரிவித்து, ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்கள் ரக்ஷிக்கப்படுகிறது. அதனுல் மற்ற மதஸ்த்தர்களால் சொல்லப்படும் தோஷம் எதுவும் ஸம்பவிக்க முடியாது என்று தெரிவிக்கப்பட்டது. வாக்யத்திலிருந்து அகண்டார்த்த போதம் ஏற்படுவதற்குரிய ஸமன்வயத்தில் விரோதம் ஏற்படாமல், ப்ரத்யக்ஷாதிகளுக்கு தாத்விக ப்ராமாண்யம் கிடையாது என்ற அம்ஸத்தை மட்டும் நிஷேதம் செய்யப்படுகிறது. அதனுல் ப்ரத்யக்ஷாதிகளுக்கு வ்யாவஹாரிக ப்ராமாண்யம் ஒத்துக்கொள்ளப்படுவதால் சாஸ்திரம் என்ற ப்ரமாணத்திற்கும் ப்ரத்யாக்ஷாதிகளுக்கும் விரோதம் ஏதுமில்லை என்று சொல்லப்பட்டது. விவர்த்த வாதத்தை ஆச்ரயித்து "ஆரம்பண சப்தாதிப்ய:" என்ற அதிகரணம் ப்ரவர்த்திக்கின்றது என்பது பொருந்துகின்றது.

**99. அவதாரிகை :**

விவர்த்த வாதத்தை ஆச்ரயித்து ப்ரத்யக்ஷாதிகளுக்கு வ்யாவஹாரிகப் ப்ராமாண்யம் உண்டு என்று சொல்ல வேண்டிய அவஸ்யம் என்ன? அவைகளும் ஸ்வப்னம் போல் ப்ராந்தி மாத்ரம் என்று சொல்லாமே?

**ச்லோகம் :**

चितिवस्तुनः स्वमहिमस्फुरणे स्वयमेव कारणमिति प्रगतम् ।
प्रतिबध्य तच्चितिगताग्रहणं विपरीतबुद्धिमुपढौकयति

**ச்லோகார்த்தம் :** சித் வஸ்துவின் மஹிமை விளங்குவதற்கு ஸ்வயமே காரணம் என்று அறியப்பட்டது. சித் வஸ்துவில் இருக்கின்ற அஞ்ஞானமானது அதை மறைத்து விபரீத புத்தியை ஏற்படுத்துகின்றது.

**வ்யாக்யானம் :** ஆத்மா என்பது வேறு எந்தக் காரணத்தையும் அபேக்ஷித்து ப்ரகாசிக்கவில்லை. ஸ்வயம் ப்ரகாசஸ்வரூப்ம். ஆத்மாவையன்றி வேறு இரண்டாவது வஸ்து என்பதே கிடையாது. ஆனுல் இப்பேர்ப்பட்ட ஸ்வயம் ப்ரகாசமான ஆத்மாவையே ஆச்ரயித்து, அதையே விஷயமாகக் கொண்ட அஞ்ஞானம் என்பது, சித்ஸ்வரூபத்தின் ஸ்வஸ்வரூபம் என்பது பூர்ணமாக ப்ரகாசிக்கவொட்டாமல் தடை செய்கின்றது. அது மட்டுமல்ல, அபரிச்சின்னமான ஆத்மஸ்வரூபத்திற்கு மாருக பரிச்சின்னத்வம் முதலான விபரீத தன்மையில் தோன்றும்படிச் செய்கின்றது. ஆகவே, அஞ்ஞானத்தினுல் உண்டான ப்ரத்யாக்ஷாதி ப்ரமாணங்களும், அவைகளால் அறியப்படும் விஷயங்களும் அவித்யை என்ற தோஷத்தினுல்தான் உண்டாகி இருக்கின்றது. அதனுல் ப்ரத்யக்ஷாதிகள், விஷயங்களின்தத்வம் என்னவென்பதை ப்ரகாசப்படுத்துவதில்லை. அதுமட்டுமல்ல அதற்கு விபரீதமான தன்மையில் உள்ள ப்ரபஞ்சத்தையே ப்ரகாசப்படுத்துகின்றது. இந்த விதம் வ்யாவஹாரிக வஸ்து ப்ரகாசகமான ப்ரத்யக்ஷாதிகளுக்கு வ்யாவஹாரிக ப்ராமாண்யம் ஒத்துக்கொள்ளப்படுகிறது. அதனுல் சுக்திரஜதம் போலவோ அல்லது ஸ்வப்னப்ரபஞ்சம் போலவே ப்ராந்தி என்று சொல்ல முடியாது. ஆகையால் அனுபவ சித்தமாக இருக்கின்றப் ப்ரத்யக்ஷாதிகளுக்கு வ்யாவஹாரிக ப்ராமாண்யமும் கிடையாது என்று நிஷேதம் செய்யவேண்டிய அவஸ்யமும் இல்லை.

**100.** அவதாரிகை :

இவ்விதம் சொல்லப்படுவதற்கு காரணம் என்ன?

ச்லோகம் :

व्यवहारनिर्वहणशक्तिमसौ न चिदग्रहोऽस्य विनिवारयति ।
परमार्थवेदनविधिक्षमतामवखण्डयन्नपि मनः प्रभृतेः

ச்லோகார்த்தம் : சித்வஸ்துவில் இருக்கின்ற அஞ்ஞானமானது மனஸ் முதலானவைகளுடைய பாரமார்த்திக ஞானத்தை அடைகின்ற ஸாமர்த்யத்தை நாசம் செய்கின்ற போதும், வ்யவஹாரத்தை நிர்ணயம் செய்யக்கூடிய சக்தியை நாசம் செய்வதில்லை.

வ்யாக்யானம் : ப்ரத்யக் சைதன்யம் என்பதை ஸ்வஸ்வரூபேண ப்ரகாசிக்காமல் மறைக்கக்கூடிய தன்மை அஞ்ஞானத்தில் இருக்கின்றது. அதனுல் அஞ்ஞானத்தின் கார்யமான ப்ரத்யக்ஷாதிகளும் மனஸ் என்பதும் தத்வத்தை தெரிவிக்க முடியாது. ஆனுல் அஞ்ஞானம் என்பது ஆத்மஸ்வரூபத்தை மறைக்கின்றதால், ஆத்ம தத்வத்தை அறிவிக்கின்ற விஷயத்தில் அஞ்ஞானம் என்பது தோஷமாக இருக்கிறது. ஆனுலும் மனஸ் என்பதற்கும் ப்ரத்யக்ஷாதிகளுக்கும் அஞ்ஞானம் காரணமாக இருக்கிறதேயன்றி தோஷமாக இல்லை என்பது மட்டுமல்ல, குணமாகவும் இருக்கின்றது. ஆகவே ப்ரத்யக்ஷாதிகள் வ்யாவஹாரிக வஸ்துக்களை தெரிவிக்கின்ற சக்தி உடையது என்றுலும் தத்வத்தை தெரிவிப்பதற்குரிய யோக்யதை கிடையாது. உதாரணமாக, காச காமாலை என்ற வியாதி நேத்திரத்திற்கு தோஷமாக இருக்கிறது என்றுலும், இவ்விதம் நேத்ர தோஷம் ஏற்பட காரணமாக இருக்கின்ற பாபம் என்பதை அனுமானிப்பதற்கு அனுகுணமாக இருக்கிறது என்று சொல்லலாம். ஆனுல் காச காமாலைகள் பாப அனுமானத்திற்கு தோஷமாக இருக்கிறது என்று சொல்லமுடியாது. காச காமாலைகளால் நேத்ர சக்தி தடைபடுகின்றதால், நேத்ர சக்தியை அபேக்ஷித்து காசாதிகள் தோஷமாக இருக்கிறது என்று சொல்லலாம். பாபம் என்பதை அனுமானிப்பதற்கு அனுகூலமாக இருக்கிறது என்று சொல்லாமேயன்றி அதுவே தோஷம் என்று சொல்வதற்கு முடியாது. ஆகவே ப்ரத்யக்ஷாதிகளுக்கு வ்யாவஹாரிக ப்ராமாண்யம் இல்லையென்று பாதிக்கப்பட முடியாது. வ்யாவஹாரிக ப்ராமாண்யம் உண்டு என்றே ஒத்துக்கொள்ளப்பட வேண்டும்.

**101.** அவதாரிகை :

இவ்விதம் சொல்லப்படுமானுல், மனஸ் முதலானவைகள் போல, மஹாவாக்யம் என்பதும் (சாஸ்திரம் என்றவ்யாகாரிக ப்ராமாண்யம் உடையதாக இருப்பதால்) ப்ரத்யக் அஞ்ஞான தோஷ ஜன்யம் என்று தானே சொல்ல வேண்டும்? அதனுல் மஹாவாக்யம் என்பது தத்வத்தை போதிப்பதாக எப்படிச் சொல்ல முடியும்? என்றுல்,

ச்லோகம் :

चितिवस्तुबुद्धिजनकस्य पुनर्वचसो न खण्डयति शक्तिमसौ ।
स्वनिबन्धनस्फुरणमेव चितेः प्रतिबध्य तिष्ठति न वाचनिकम्

ச்லோகார்த்தம் : சித்வஸ்து ஞானத்தை ஏற்படுத்துகின்ற உபநிஷத் வாக்யங்களுடைய ஸாமர்த்யத்தை, அஞ்ஞானம் நாசம் செய்வதில்லை. சைதன்யத்தில் இருக்கின்ற ஸ்வயம் ஸ்புரணத்தை (மட்டுமே) அஞ்ஞானம் தடை செய்கின்றதேயன்றி சப்தத்திலிருந்து ஏற்படுகின்ற ஸ்புரணத்தை தடை செய்வதில்லை.

வ்யாக்யானம் : ப்ரத்யக்ஷாதிகள் போல் சாஸ்திரம் என்பதும் அவித்யா கார்யம் என்றே சொல்கிறோம். ஆனால் ப்ரத்யக்ஷாதிகள் போல் மஹாவாக்யம் தத்வத்தை போதிக்க முடியாது என்று சொல்ல முடியாது. ஏனெனில் அஞ்ஞானம் என்பது, ஆத்ம சைதன்யத்தின் ஸ்வயம் ப்ரகாசத் தன்மையை, ஸ்வஸ்வரூபேண ப்ரகாசிக்க முடியாமல் தடை செய்கின்றது என்றாலும், வேதாந்த வாக்யம் என்ற சப்தப்ரமாணத்தின் மூலமாக ஏற்படும் தத்வ போதம் என்பதை அஞ்ஞானம் தடை செய்வதில்லை. ஒரு வஸ்துவில் ஒரு தோஷம் இருக்கிறது என்றால், அந்த தோஷம் அந்த வஸ்துவில் குறிப்பிட்ட ஒரு தன்மையை தடை செய்கிறது என்பதற்காக, எந்த வஸ்துவாக இருந்தாலும் அந்த தோஷம் அதன் தன்மையை தடை செய்யும் என்று சொல்வதற்கு முடியாது. உதாரணமாக தூரத்வம் என்ற தோஷம் புருஷனிடம் இருக்குமானால் அந்த தோஷத்தினால் தூரத்திலுள்ள விஷயங்களை அவனுடைய சக்ஷுஸ் என்பது ப்ரகாசிக்கச் செய்ய முடியாது. ஆனால் சப்தத்திலிருந்து ஏற்படும் விஷய ப்ரகாசத்தையும் தூரத்வம் என்ற தோஷம் தடை செய்வதற்கு முடியாது. இதேபோல் சித்ஸ்வரூபத்திலிருக்கின்ற அஞ்ஞானம் என்ற தோஷம் ப்ரத்யகாத்மாவின்ஸ்வயம் ப்ரகாச தன்மையைத்தான் தடை செய்கிறது. மஹா வாக்யங்களிலிருந்து ஏற்படும் அகண்டார்த்த போதம் என்பதை தடை செய்வதற்கு முடியாது. சாஸ்திர விசாரத்திற்குப் பிறகு ஏற்படும் ஞானம் என்பது அஞ்ஞானத்தினால் தடை செய்யப்படுவதில்லை. அதனால் ப்ரத்யக்ஷாதிகள்அஞ்ஞான கார்யமான ஜடவஸ்துக்களைத்தான் ப்ரகாசப்படுத்தக் கூடிய தன்மையுடையதாக இருக்கிறது. மஹாவாக்யம் (என்ற சப்தப்ரமாணம்) ஸ்வயம் ப்ரகாசமான, சித்தமான ப்ரஹ்ம ஸ்வரூபத்தை அறிவிப்பதில் ப்ரமாணமாக இருக்கிறது. இவ்விதம் ப்ரமாணங்கள் அஞ்ஞான கார்யமாக இருந்த போதிலும் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கும் சப்த ப்ரமாணத்திற்கும் வித்யாஸம் இருக்கின்றது என்பதால் ப்ரத்யாக்ஷாதிகள் தத்வத்தை தெரிவிக்க முடியாது.

**102. அவதாரிகை :**

ப்ரத்யாக்ஷாதி ப்ரமாணங்களும் சப்த ப்ரமாணமென்பதும் இரண்டுமே அஞ்ஞான கார்யம் என்று சொல்லப்படுமானால், ப்ரத்யாக்ஷாதிகளில் மட்டுமே அஞ்ஞானம் என்ற தோஷம் சேர்ந்திருக்கிறதென்றும் வேதாந்த ப்ரமாணத்தில் அந்த தோஷம் சேருவதில்லை என்றும் சொல்வதற்குரிய விசேஷ காரணம் என்ன இருக்கிறது? என்றால்,

ச்லோகம் :

प्रत्यक्षादेरेष दोषस्ततोऽयं वेदान्तानां नैव दोषानुषङ्गः ।
सत्यं वस्तु च्छादयन्नद्वितीयं द्वैतं यस्मादानयत्येष दोषः

ச்லோகார்த்தம் : இந்த தோஷம் ப்ரத்யக்ஷாதிகளுக்கு இருக்கின்றது. வேதாந்த ப்ரமாணத்திற்கு இந்த தோஷம் கிடையாது. அத்விதீயமான ஸத்ய வஸ்துவை மறைத்து, த்வைத்தை தோற்றுவிக்கின்றதால் இது தோஷமாக இருக்கின்றது.

வ்யாக்யானம் : ஸத்யவஸ்துவை மறைத்து அஸத்வஸ்துவை தோற்றுவித்து, அதை ப்ரகாசப்படுத்துகின்றது என்பதே அஞ்ஞான தோஷத்தின் ஸ்வபாவம். அதனுல் தான் சக்ஷுராதி ப்ரத்யக்ஷ ப்ரமாணங்கள் அஞ்ஞான கார்யமான த்வைத பதார்த்தங்களைத் தான் தெரிவிக்கின்றது. ஸத்யமான அத்வைத வஸ்துவை தெரிவிப்பதில்லை என்பது மட்டுமின்றி வஸ்துவின் உண்மையான தன்மைகளையும் மறைக்கின்றது. தோஷம் என்பது ஒரு வஸ்துவில் இருக்கின்றதுபோல் மற்ற வஸ்துக்களிலும் இருக்க வேண்டும் என்று நியமம் சொல்வதற்கு முடியாது. சக்ஷுஸ் என்பது இருக்கின்ற வஸ்துவை இருக்கின்றபடி தெரிவிக்கவில்லை என்ருல் சக்ஷுஸ் என்பதில் தோஷம் இருக்கிறது என்று சொல்கிருேம். ஆனுல் வஸ்து இருக்கின்றபடியே தெரிவிக்குமானுல் இதில் ஏன் தோஷமில்லை என்று கேட்க முடியாது. ஆகவே சாஸ்திரம் என்ற சப்தப்ரமாணம் ஸத்யமான வஸ்துவை தெரிவிக்கின்றதால் அதில் தோஷமில்லை என்று சொல்கிருேம் மற்ற ப்ரமாணங்கள் ஸத்யமான வஸ்துவை தெரிவிப்பதில்லை என்பது மட்டுமல்ல, அதற்கு விபரீதமாக வேறு வஸ்துவாக தோற்றுவிக்கின்றது. அதனுல் அந்த ப்ரமாணங்களில் தோஷம் இருக்கிறதென்று சொல்லப்படுகிறது. இந்தவிதம், ப்ரமாணம் என்பது வஸ்துவை உண்மையாக தெரிவிக்குமானுல் அதில் தோஷமில்லை என்று சொல்லப்படுகிறது. ஆகவே, கார்யத்தைக் கொண்டே தோஷம் இருக்கிறதென்றும் இல்லையென்றும் சொல்லவேண்டுமேயன்றி வேறு நியமம் எதுவும் சொல்லமுடியாது என்று ச்லோகத்தில் பூர்வார்த்தத்தில் சொல்லப்பட்ட ப்ரதிஞ்ஞையை உத்தரார்த்தத்தில் சொல்லப்பட்டது.

அஞ்ஞானம் என்ற காரணத்தில் உள்ள தோஷம் அதன் கார்யமான ப்ரத்யாக்ஷாதி களில்தான் அனுவ்ருத்திக்கின்றதேயன்றி சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தில் அனுவ்ருத்திப் பதில்லை.

இந்த விஷயத்தில் வேறு சிலர் வேறு விதமான அபிப்ருயத்தை தெரிவிக்கின்ருர்கள். அதாவது மஹாவாக்யம் என்பது அஞ்ஞான கார்யமில்லை என்றும் ப்ரஹ்மத்தின் விவர்த்தம் என்றும், அதனுல் அஞ்ஞான தோஷம் ஸம்பவிக்காது என்றும் சொல்கிருர்கள். இவ்விதம் சொல்லப்படுவதற்கு காரணம் என்னவென்ருல், மாயா ஸபளப்ரஹ்மமே ஜகத் காரணம் என்பதால், இதில் மாயா ப்ராதான்யத்தினுல் ஜடாம்ஸமும், ஸம்வித் ப்ராதான்யத்தினுல் சைதன்யப்ரதிபலனமான ஜீவன் என்பதும் உண்டாவதாகச் சொல்லப்படுகிறது. இந்த காரணத்தினுல் ஸம்வித் ஸ்வரூபத்தில் இருந்து அதை மறைக்கின்ற அஞ்ஞானம் என்பதை முக்யமாகக்கொண்டு விசாரிக்கின்றபோது சக்ஷுராதி ப்ரமாணங்கள்அஞ்ஞான விவர்த்தம் என்று சொல்ல வேண்டும் என்றும், அவ்விதம் இன்றி ஸம்வித் என்பதை ப்ரதானமாகக்கொண்டு விசாரிக்கின்றபோது வேதம் என்பது ஸம்வித் என்பதின் விவர்த்தம் என்றும் சொல்லப்படுகிறது. இந்த விதம், அஞ்ஞான கார்யமான சக்ஷுராதி ப்ரமாணங்கள் அஞ்ஞானமென்ற தோஷ ப்ராதான்யம் உள்ளதாக இருக்கின்றதால் அவைகள் தத்வத்தை தெரிவிக்கமுடியவில்லை. வேதம் என்பது ஸம்வித்ப்ராதான்யேன விவர்த்தமாக இருக்கின்றதால் அஞ்ஞான தோஷம்

சாஸ்திரத்தில் கிடையாது என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் இரண்டிற்குமுள்ள வித்யாஸத்தினுலேயே ப்ரத்யக்ஷாதிகள் தத்வத்தை தெரிவிக்கமுடியவில்லே. சாஸ்திரம் ஒன்றே தத்வத்தை தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுகிறது.

**103.** அவதாரிகை :

இந்த விதம் ப்ரத்யாக்ஷாதிகள் தத்வத்தை தெரிவிக்க முடியாது என்றும் மித்யா வஸ்துக்களேயே ப்ரகாசப்படுத்துகின்றது என்றும் சொல்லப்பட்டதால் வேதாந்தம் ஒன்றே ப்ரமாணம் என்று சொல்லப்படுவதில் பாதகம் ஏதுமில்லே என்று தெரிவிக்கப்பட்டது. இப்போது ப்ரத்யக்ஷாதிகளுக்கு விஷயம் வேறு, வேதாந்த வாக்யங்களுக்கு விஷயம் வேறு. இரண்டிற்கும் விஷய பேதம் இருக்கின்றதால் ப்ரத்யக்ஸ்வரூபமான தத்வத்தை தெரிவிக்கின்ற சக்தி ப்ரத்யக்ஷாதிகளுக்கு கிடையாது என்று மேலே விளக்கப்படுகிறத.

ச்லோகம் :

किं च प्रतीचि सकलोपनिषत्प्रवृत्ता मानान्तरं सकलमेव तु तत्पराचि ।
प्रत्यक्पराग्विषयगोचरयोस्तु बुद्धयोः स्पर्धा न संभवति मेयविभागसिद्धेः

**ச்லோகார்த்தம் :** உபநிஷத் பூராவும் ப்ரத்ய காத்ம விஷயமாக இருக்கின்றது. மற்ற எல்லா ப்ரமாணங்களும் பாஹ்ய விஷயமாகவே இருக்கின்றது. (இவ்விதம்) ப்ரத்யகாத்ம விஷயமாகவும், பாஹ்ய விஷயமாகவும் இருக்கின்ற இரண்டு விதமான ஞானத்திற்கும் விரோதம் ஏற்பட முடியாது. ஏனெனில் அவை இரண்டிற்கும் விஷயம் வெவ்வேருக இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** இவ்விதம் தத்வத்தை தெரிவிக்கக்கூடிய சக்தி ப்ரத்யக்ஷாதிகளுக்கு கிடையாது என்று சொல்லப்பட்டதற்காக, தத்வத்தை தெரிவிக்கின்ற வேதாந்த சாஸ்திர ப்ரமாணத்திற்கும், ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கும் விரோதம் ஏதுமில்லே. ஏனெனில் சாஸ்திரம் என்பது ப்ரத்யக் விஷயம். ப்ரத்யக்ஷாதிகள் பராக் விஷயம். இவ்விதம் வெவ்வேறு தன்மையுடையதாக இருக்கின்றதால், அந்தந்த ப்ரமாணங்கள் அதற்குரிய விஷயங்களே தெரிவிக்கின்றது. உதாரணமாக சக்ஷுஸ் என்பது ரூபவத்தான விஷயத்தில் ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது. சக்ஷுஸ் என்பது ஒரு வஸ்துவைஇது பசு என்றும் மற்ரெரு வஸ்துவை இது குதிரை என்றும் தெரிவிக்கின்றது. இவ்விதம் சக்ஷுஸ் என்ற ப்ரமாணத்தினுல் ஏற்படும் விஷய ஞானத்தில் விரோதம் ஏதும் கிடையாது. அதேபோல் ப்ரத்யக்ஷாதிகளால் ஏற்படும் விஷய ஞானத்திற்கும், வேதாந்த ப்ரமாணத்தினுல் ஏற்படும் விஷய ஞானத்திற்கும் விரோதம் ஏதும் கிடையாது.

**104.** அவதாரிகை :

ப்ரத்யக்ஷாதிகளால் எந்த விஷய பேதம் க்ரஹிக்கப்படுகின்றதோ அந்த விஷய பேதம் அத்வைத ஸமன்வயத்திற்கு விரோதமாக இருக்கின்றது என்று சொல்லப்படுமாளுல், ப்ரத்யக்ஷாதிகள் அந்தந்த வஸ்துவை மட்டும் தெரிவிப்பதால் அத்வைதத்திற்கு விரோதம் என்று சொல்லப்படுகின்றதா? அல்லது ப்ரத்யக்ஷாதிகள் வஸ்துவை தெரிவிக்கின்றபோதே இந்த வஸ்து மற்ற வஸ்துக்களேக் காட்டிலும் வேறு என்ற பேதத்தை தெரிவிப்பதால் அத்வைதத்திற்கு விரோதம் என்று சொல்லப்படுகிறதா? என்ருல்,

ச்லோகம் :

अभिन्न एवैष पटः समीक्ष्यते न भेदगन्धोऽपि पटे समीक्ष्यते ।
पटेऽपि भेदो यदि कल्प्यते तदा पटो विदीर्येत कुतस्तदा पटः

ச்லோகார்த்தம் : ஒரு வஸ்த்ரம் என்பது பேதம் அற்றதாகவே அறியப்படுகிறது. இவ்விதம் சிறிது பேதமும் அறியப்படாத வஸ்திரத்தில் பேதம் என்பது கல்பிக்கப்படுமானல் வஸ்திரம் பிளவுபட்டதாக ஆகும். அவ்விதம் பிளவு ஏற்படுமானல் அது ஒரு வஸ்திரமாக எப்படி இருக்கமுடியும்.

வ்யாக்யானம் : ப்ரத்யக்ஷாதிகள் அந்தந்த வஸ்துக்களை இது கடம், இது படம் என்று தெரிவிக்கின்றதேயன்றி இது மற்ற வஸ்துக்களைக் காட்டிலும் வேறு என்று தெரிவிக்கவில்லை. இவ்விதமிருந்தும் கடம் என்பது கடம் என்று க்ரஹிக்கப்படாமல் படத்தைக் காட்டிலும் பின்னம் (வேறுபட்டது) என்று க்ரஹிக்கப்படுவதாகச் சொல்லப்படு மானல், க்ரஹிக்கப்படும். அந்த பேதம் என்பது கடந்தானு ? அல்லது கடத்தைக் காட்டிலும் வேரு ?

கடம் என்பதே பேதம், பேதம்தான் கடம் என்றும் சொல்லப்படுமானல் அது பொருந்தாது. எனெனில் பேதம் என்பது மற்ருரு வஸ்துவை அபேக்ஷித்தே அறியப்படுகின்றது. ஆகையால் பேதம் என்று மட்டும் சொல்லப்படுமானல், எதனுடைய பேதம் என்பதை சொல்லவேண்டும். படத்தினுடைய பேதம் என்று சொல்லவேண்டுமானல் அந்த பேதம் படத்தை அபேக்ஷிக்கின்றது. இந்த விதம் படம் என்பதை அபேக்ஷித்தே பேதம் இருக்கின்றதால் நிரபேக்ஷமான கடத்தின் ஸ்வரூபம் பேதம் என்று சொல்ல முடியாது. படம் என்பது அறியப்பட்டால்தான் கடம் என்பது அறியப்படும் என்று சொல்வதற்கு முடியாது. அதனுல் கடம் என்பது நிரபேக்ஷம். பேதம் என்பது ஸாபேக்ஷம். படம் என்பதை அபேக்ஷித்தே கடம் அறியப்படவேண்டும் என்ருல், கடம் ஸ்வதந்த்ரமாக ஆகாது பரதந்த்ரம் என்றே சொல்ல நேரிடும். ஆகவே, கடம் என்பதே பேதஸ்வரூபம் என்ருல் கடம் என்ற ஸ்வரூபமே தெறித்துவிடும், அதனுல் கடஸ்வரூபமே சித்திக்காது.

படம் என்பதை அபேக்ஷித்து கடத்திற்கு பேதம் சித்திக்கின்றது என்று சொல்லப்படுமானல் கடமே விதீர்ணமாக ஆகும். பேதம் என்ருலே விதரணே என்று பாணினியினுல் தெரிவிக்கப்படுகின்றது. அதனுல் பேதம் என்பது கடமாக இருக்குமானல் கடமே இல்லையென்றுதான் ஆகுமேயன்றி பாவரூபமான கடமாக அறியப்படமுடியாது. மேலும் இது கடம் என்று அறியப்படுகின்றபோது அதில் பேதம் என்பது இருக்கிறது என்று சொல்லப்படுமானல் கடம் கடத்திலிருந்தே பேதமாக இருக்கிறதா ? அல்லது படம் முதலானவைகளிலிருந்து அறியப்படுகிறதா ? கடம் கடத்திலிருந்தே பேதம் என்று சொன்னல் கடமே சித்திக்காது.

**105.** அவதாரிகை :

கடத்திற்கு படத்திலிருந்து பேதம் என்று சொல்லப்படுமானல்,

ச்லோகம் : 88

घटात्पटो भिन्न इतीष्यते यदि स्फुटं प्रसज्येत विकल्पिता भिदा ।
न सत्यमापेक्षिकमीक्षितं क्वचित्तथा च यत्नेन निवेदयिष्यते

**ச்லோகார்த்தம் :** வஸ்திரம் என்பது கடத்திலிருந்து வேறானது என்று சொல்லப்படுமானால், அந்த பேதமானது ஆரோபிதம் என்றேயாகும். ஏனெனில் ஆபேக்ஷிகமாக இருக்கின்ற வஸ்து ஓரிடத்திலும் ஸத்யமாக அறியப்படுவதில்லை என்ற விஷயம் மேலே யத்னத்துடன் விளக்கப்படுகிறது.

**வ்யாக்யானம் :** கடம் என்பது படத்தைக் காட்டிலும் வேறு என்று பேதம் க்ரஹிக்கப்படுகிறது என்று சொல்லப்படுமானால் கடம் என்பதில் படபேதம் இருக்கிறது என்றாகும். அவ்விதம் சொல்லப்படுமானால் அந்த பேதம் என்பது கடரூபமா? அல்லது கடத்தைக் காட்டிலும் வேறா? கடத்தைக் காட்டிலும் பேதம் என்பது வேறு என்று சொல்லப்படுமானால் அந்த பேதம் நிச்சயமாக கல்பிதமாகத்தான் இருக்கவேண்டுமேயன்றி ஸத்யமாக இருக்கமுடியாது. ஏனெனில் எது மற்றொன்றை அபேக்ஷித்தே தன்ஸ்வரூபம் சித்திக்க வேண்டியதாக இருக்கின்றதோ அந்த வஸ்து அஸத்யம் என்றே எல்லோராலும் அறியப்படுகிறது. உதாரணமாக ஸ்படிகமணியில் சிகப்பு நிறம் என்பது வேறொரு வஸ்துவை அபேக்ஷித்தே தோன்றுகிறது. அதனால் உண்மையில் சிகப்பு நிறம் என்பது ஸ்படிகத்தின் நிறமல்ல. ஆனால் ஜபாகுஸுமம் என்ற புஷ்பத்தின் சிகப்பு நிறம் அனபேக்ஷமாக ஸ்வயம் ஸ்வரூபமாக இருக்கின்றது. அதனால் புஷ்பத்தில் சிகப்பு நிறம் ஸத்யம். எது ஸத்யமோ அது வேறு எதையும் ஆபேக்ஷித்து சித்திப்பதில்லை. ஆத்மா ஸ்வயம் சித்தம். அனாத்மாக்கள் ஆத்மாவினால் சித்திக்க வேண்டும் என்ற விஷயம் பற்றி மூன்றாவது அத்யாயத்தில் சொல்லப்போகின்றதால் இங்கு விஸ்தரிக்கப்படவில்லை. ஆகவே அன்ய அபேக்ஷை இருக்கின்ற வஸ்துக்கள் எதுவும் ஸத்யமாக இருக்கிறதென்று சொல்வதற்கே முடியாது. அதனால் அவையெல்லாமே மித்யை என்றே சித்திக்கின்றது. அதனால் பேதம் என்பதும் ஸாபேக்ஷமாக இருக்கின்றதால் அது ஸத்யமல்ல. இதுவரை சொல்லப்பட்ட காரணங்களினால் த்வைத புத்தி என்பது அத்வைத புத்திக்கு விரோதமில்லை. பேத ப்ரத்யயத்தினால் என்ன சித்திக்கின்றது என்றே யுக்தியினாலும் அறிய முடியாது. ஆகவே பேதம் என்பது மித்யை என்றே சித்திக்கின்றது.

**106. அவதாரிகை :**

பேதபுத்தி என்பதே துர்நிரூபம் என்பதால் அந்த பேத ஞானம் எப்படி ஏற்படுகிறது என்று நிரூபணம் செய்வதற்கே முடியாது. அது ப்ராமாணிகமுமில்லை என்பதால் பேதம் மித்யை என்றே சித்திக்கின்றது.

ச்லோகம் :

न भेदबुद्धिर्घटते प्रमाणतो विनाऽपि धर्मिप्रतियोगिसंविदा ।
न भेदबुद्धिं विरहय्य कल्पते तथैव धर्मिप्रतियोगिधीरपि

**ச்லோகார்த்தம் :** தர்மிஞானம் என்பதும், ப்ரதியோகி ஞானம் என்பதும் இல்லாமல் பேத புத்தி என்பது ப்ராமாணிகமாக இருக்க முடியாது. அதேபோல் பேத ஞானம்

என்பது இல்லாமல் தர்மி ஞானம் என்பதோ ப்ரதியோகி ஞானம் என்பதோ ஏற்படமுடியாது.

வ்யாக்யானம் : கடம் என்பதைக் காட்டிலும் படம் என்பது பின்னம் (வேறு) என்று சொல்லவேண்டுமானுல் முன்னுலேயே கடம் வேறு படம் வேறு என்று அறிந்திருந்தால்தான், கடத்தைக் காட்டிலும் படம் வேறு என்று சொல்லாம். கடம் என்பது பேதத்திற்கு ப்ரதியோகி படம் என்பது அனுயோகி. படம் என்பது கட பேத ஆச்ரயம் என்பதால் அனுயோகியான படம் என்பதே தர்மி என்று சொல்லவேண்டும். ஆகவே, ப்ரதியோகியான கடம் வேறு என்றும் அனுயோகியான தர்மம் வேறு என்றும் சொல்லப்படவேண்டுமானுல், இரண்டும் வேறு என்று முன்னுல் அறிந்திருந்தால்தான் கடத்தைக் காட்டிலும் படம் வேறு என்று ஞானம் ஏற்படும். இந்தவிதம் தர்மி ஞானம், ப்ரதியோகி ஞானம் இரண்டும் இல்லையென்று சொல்லும்பக்ஷத்தில், அந்த பேதம் என்பது ஒரு ப்ரமாணத்தினுல் சித்திக்கிறது என்று சொல்வதற்கு முடியாது.

அதேபோல் பேத ஞானம் இல்லாமல் இது தர்மி, இது ப்ரதியோகி என்ற இரண்டு ஞானமும் ஏற்படாது. இந்த விதம் ஒன்றை ஒன்று எதிர்பார்க்கின்றதால் அன்யோன்ய ஆச்ரய தோஷம் ஸம்பவிக்கின்றது. இந்த வஸ்துவிற்குஇந்த வஸ்துவிலிருந்து பேதம் என்று சொல்லப்படவேண்டுமானுல் தர்மிப்ரதியோகி ஞானம் இன்றி சொல்ல முடியாது. ஒரே வஸ்து அதே தர்மியாகவும் ப்ரதியோகியாகவும் இருக்கின்றதென்று சொல்லமுடியாது. இவ்விதம் ஒன்றை ஒன்று ஆச்ரயிக்கின்றதால் பேதம் என்பது ப்ரமாணிகமில்லை.

**107.** அவதாரிகை :

கடத்தின் லக்ஷணம் வேறு, படத்தின் லக்ஷணம் வேறு என்று வஸ்துவின்தன்மை ஒன்றுக்கொன்று வைலக்ஷண்யமாக இருக்கின்றதால் பேதம் அறியப்படுகிறது என்று சொல்லாமே? என்ருல் முன்னுல் சொல்லப்படட தோஷமே ஸம்பவிக்கின்றது.

ச்லோகம் :

परस्पराभावधिया न भेदधी-र्विनोपपन्ना न तया विनेतरा ।
इतीदमन्योन्यसमाश्रयं यतो मतिद्वयं तेन तदस्तु कल्पितम्

ச்லோகார்த்தம் : பரஸ்பரம் இருக்கின்ற தாதாத்ம்ய அபாவ ஞானம் இல்லாமல் பேத ஞானம் என்பது ஏற்படாது. அதேபோல் பேத ஞானம் இல்லாமல் அபாவ ஞானம் என்பதும் ஏற்படாது. இந்த விதம் இரண்டு வித ஞானமும் அன்யோன்ய ஆச்ரிதமாகவே இருக்கின்றது. ஆகையால் அவை இரண்டும் ஆரோபிதம் என்றே ஒத்துக் கொள்ளவேண்டும்.

வ்யாக்யானம் : கடத்தின் ஆகாரம் வேறு, படத்தின் ஆகாரம் வேறு என்பதால், ஆகார பேத ஞானம் ஏற்படுகிறது என்று சொல்லலாமே? என்ருல், முதலில் இரண்டு ஆகாரங்களும் வேறு என்று வைலக்ஷண்யம் இல்லாமல் கடம் படமில்லை படம் கடமில்லை என்று அறியமுடியாது. ஆகாரம் இரண்டும் வேறு என்று சித்திக்காமல் வைலக்ஷண்ய புத்தி ஏற்படாது. தர்மி இரண்டும் வேறு என்று அறியப்பட்டால்தான், அதன் தர்மம் என்பது வேறு என்று அறியப்படும். அதேபோல் தர்மம் இரண்டும் வேறு

என்று அறியப்பட்டால்தான், தர்மி இரண்டும் வேறு என்று அறியப்படும். உதாரணமாக, கிளிஞ்சல் என்பதில் வெள்ளி என்ற ஞானம் ஏற்படுவதற்கு வெள்ளியைப் போன்ற பளபளப்பு கிளிஞ்சலில் இருக்கிறது என்றும் அதனுல் கிளிஞ்சலுக்கும் வெள்ளிக்கும் தர்ம சாத்ருச்யம் இருப்பதால் கிளிஞ்சல் வெள்ளி இல்லை என்ற பேதம் க்ரஹிக்கப்பட வில்லையென்று சொல்லப்படுகிறது. அதுமட்டுமல்ல கிளிஞ்சலே வெள்ளி என்ற அபேத ப்ராந்தியும் ஏற்படுகிறது. அதன்பிறகு அதை விசாரிக்கின்ற போதுதான் இரண்டும் வேறுபட்டதன்மையில் இருக்கின்றதால் வெள்ளி அல்ல என்று அறியப்படுகிறது என்பது லோகப்ரசித்தம். ஆகவே தர்மிப்ரதியோகி என்ற இரண்டும் தாதாத்ம்யம் இல்லையென்று அறியப்படுவதற்கே இரண்டிற்குமுள்ள பேத ஞானம் முன்னுல் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதால் அன்யோன்ய ஆச்ரய தோஷம் ஸம்பவிக்கின்றது. ஆகவே பேதம் ஸத்யமல்ல.

**108.** அவதாரிகை :

ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் ஜடமான விஷயங்களைத்தான் தெரிவிக்கின்றது. அதனுல் ஜடமான வஸ்துக்களுக்கு மானக்ருத்யம் (ப்ரமாணத்தினுல் அறியப்படுத் தன்மை) என்பதே கிடையாது. அதனுல் ப்ரத்யாக்ஷாதிகளுக்கு ப்ரமாணத்வ லக்ஷணம் என்பதே (கிடையாது) பொருந்தாது. ஆகையால் ப்ரத்யக்ஷாதிகள் அப்ரமாணம் என்றும் ச்ருதி ஒன்றே ப்ரமாணம் என்றே சொல்லப்படுகிறது. அதனுல் ச்ருதி என்ற ப்ரமாணம் ப்ரத்யக்ஷாதிகளால் பாதிக்கப்படுகிறது. என்று சொல்வதற்கே முடியாது.

ச்லோகம் :

असन्निवृत्तिर्न च सन्निवृत्तिर्नचोपपन्ना सदसन्निवृत्तिः ।
जडप्रमाणस्य फलं ततोऽपि न तेन वेदान्तजबुद्धिबाधः

ச்லோகார்த்தம் : ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களின் பலமானது அஸத்தினுடைய நிவர்த்தியென்ருே, ஸத்தினுடைய நிவர்த்தியென்ருே ஸதஸத்தினுடைய நிவர்த்தியென்ருே சொல்வது பொருந்தாது. ஆகையால் வேதாந்த ஞான ஜன்யத்திற்கு பாதம் ஏற்பட முடியாது.

வ்யாக்யானம் : ப்ரத்யக்ஷாதிகள் ப்ரமாணம் என்று சொல்லப்படுமானுல் அந்த ப்ரமாணத்திற்கு பலம் என்ன? ஸம்சயம் என்பதை நிவர்த்திக்கின்றதா? விபர்யயம் என்பதை நிவர்த்திக்கின்றதா? அல்லது யதார்த்த ஞானம் ஏற்படுகிறதா?

நிவர்த்திதான் பலம் என்று சொல்லப்படுமானுல் ஸத்வஸ்துவை நிவர்த்திக்கின்றதா அஸத்வஸ்துவை நிவர்த்திக்கின்றதா? அல்லது ஸதஸத்வஸ்துவை நிவர்த்திக்கின்றதா? என்று விசாரிக்கப்படுமானுல் மூன்று விதாமான நிவர்த்தியும் சொல்ல முடியாது. ஜடமாகவும் பேதமுள்ளதாகவும் அறியப்படும் இந்த ப்ரபஞ்சம் ப்ரமாணத்தினுல் அறியக் கூடிய யோக்யமுள்ளதாக ஆகாது. அதனுல் அவ்விதம் ஏற்படும் ஞானம் யதார்த்த ஞானமாக ஆகாது என்று முன்பே சொல்லப்பட்டிருக்கிறது. ப்ரமாணத்தின் கார்யமென்று சொல்லவேண்டுமானுல் அதனுல் ஏதாவதொரு பலன் ஏற்படவேண்டும். அவ்விதம் பலன் ஏதும் ஏற்படாததால் ப்ரத்யக்ஷாதிகள் ப்ரமாணமே இல்லையென்றும், அதனுல் ஏற்படும் ஞானம் ப்ரமை என்றே சொல்லமுடியாது என்பதால் ப்ராந்தி ஞானம் என்றே

சொல்லவேண்டும். ப்ரமாணம் என்றாலே அதற்கு உற்பத்தி என்பதோ, நிவர்த்தி என்பதோ பலமாக இருக்க வேண்டும். நிவர்த்தி என்பதே பலமாக இருக்கிறது என்றால் ஸத் என்பதற்கு நிவர்த்தி என்பதே கிடையாது. அதேபோல் அஸத் என்பதற்கும், நிவர்த்தி கிடையாது. ஸதஸத் என்பதே இருக்க முடியாது. அஸத் என்பது நித்யநிவர்த்தி ரூபம் (அபாவம்) ஸத் என்றால் ப்ரமாண ஜன்ய ஞானத்தினால் நிவர்த்திக்காது. லோகத்தில் ஸதஸத் என்று ஒரு வஸ்து இருக்கமுடியாது. ஆகையால் நிவர்த்தி என்பது ப்ரமாணபலம் என்று சொல்லமுடியாது.

**109.** அவதாரிகை :

இரண்டாவது பக்ஷமாக சொல்லப்பட்ட விகல்பத்திற்கும் பரிகாரம் சொல்லமுடியாது.

ச்லோகம் :

असत्प्रसूतिर्न च सत्प्रसूति र्न चोपपन्ना सदसत्प्रसूतिः ।
जडप्रमाणस्य फलं ततोऽपि न तेन वेदान्तजबुद्धिबाधः

ச்லோகார்த்தம் : ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களின் பலமானது அஸத் உற்பத்தி என்றோ, ஸதஸத் உற்பத்தி என்றோ சொல்வது பொருந்தாது. ஆகையாலும் வேதாந்த ஜன்ய ஞானத்திற்கு பாதம் ஏற்படமுடியாது.

வ்யாக்யானம் : அஸத் என்றால் முயல்கொம்புபோல் அசலே இல்லையென்பதால் அதற்கு நிவர்த்தியும் கிடையாது. உற்பத்தியும் கிடையாது. ஸத்ரூபமான ஆத்ம ஸ்வரூபத்திற்கும் உற்பத்தியுமில்லை நிவர்த்தியுமில்லை. ஸதஸத்ரூபமாக எந்த வஸ்துவும் கிடையாது என்பதால் அதற்கும்உற்பத்தியோ நிவர்த்தியோ கிடையாது. இந்தவிதம் ப்ரத்யக்ஷாதிகளால் அறியப்படும் வஸ்துக்களில் நிவர்த்தி கிடையாது என்பதுபோல் உற்பத்தி என்பதும் கிடையாது. ஏனெனில் ஜடே ஆவரணக்ருத்யாபாவாத் என்றுமுன்பே சொல்லப்பட்டிருக்கிறது. ஜட வஸ்துக்களை ப்ரமாணம் ப்ரகாசப்படுத்துகின்றது என்று சொல்லமுடியாது. ஏனெனில் ஸ்வயம் ப்ரகாசமாக இருக்கின்ற வஸ்துவைத்தான் அஞ்ஞானம் மறைக்கின்றது. அதனால் அஞ்ஞான நிவர்த்தி என்பது ப்ரமாணத்தினால்தான் ஏற்படவேண்டும். ஸ்வயம் ஜடவஸ்துக்களை அஞ்ஞானம் மறைக்க தேவைஇல்லை. அதனால் ப்ரமாண பலமாக அஞ்ஞான நிவர்த்தி ஏற்படுகிறது என்று சொல்லமுடியாது. ஆகவே, இந்த காரணங்களைக் கொண்டும் ப்ரத்யக்ஷாதிகளால் வேதாந்தம் என்ற ப்ரமாணத்திற்கு பாதம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது.

**110.** அவதாரிகை :

ஜடமான கடபடாதி ஞானம் ப்ரத்யக்ஷாதிகளால் உண்டாகிறது என்று உற்பத்திஎன்பது ப்ரமாணபலம் என்று சொல்லலாமே?

ச்லோகம் :

जडार्थसंवित्र हि कुर्वतः फलं तदा हि कुर्वत्त्वमपीदृशं भवेत् ।
अकुर्वतस्तत्फलमित्युदीरयन्विहस्यते दुर्मतिरर्भकैरपि

**ச்லோகார்த்தம் :** ஜட விஷயக ஞானம் என்பது வ்யாபாரமுடைய கரணங்களின் பலம் என்று சொல்ல முடியாது. ஏனெனில் அவைகளின் வ்யாபாரமும் இவ்விதமேயாகும். வ்யாபாரமற்ற கரணங்களின் பலம்என்று சொல்லப்படுமானுல் மந்தமதியுடைய அவன் பாலர்களாலும் பரிகசிக்கப்படுகின்ருன்.

**வ்யாக்யானம் :** ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களின் பலமாகஸத் என்பதற்கோ, அஸத் என்பதற்கோ, ஸதஸத் என்பதற்கோ, உற்பத்தி என்பதோ நிவர்த்தி என்பதோ சொல்ல முடியாது என்று முன்ஞல் சொல்லப்பட்டது. அதேபோல் ஜடவஸ்துவிஷயத்திலும் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணபலமாக உற்பத்திசெய்வதற்கோ நிவர்த்தி செய்வதற்கோ சக்தி இருக்கின்றதா என்று விசாரிக்கின்றபோது இல்லையென்றே சொல்லப்பட வேண்டும். ஏனெனில் ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கு ஸம்வித் என்பதை பலமாகச் சொல்லமுடியாது. (குர்வ்தவம் - வ்யாப்ரியமானத்வம்) விஷயம் என்பதை உண்டு பண்ணக்கூடிய ஸாமர்த்யம் (சக்தி) என்பது ப்ரமாணத்திற்கு பலம் என்று எந்தமுறையிலும் சொல்லமுடியாது. ப்ரமாணம் என்பதில் ஜடமான வஸ்து ஞானம் என்பதை உண்டுபண்ணக்கூடிய அனுகூலவ்யாபாரசக்தி இருக்கின்றதா, இல்லையா? என்று விசாரிக்கவேண்டும். சக்தி இருக்கின்றது என்றும் அதஞல்தான் ஞானம் ஏற்படுகிறது என்றும் சொல்லப்படுமாஞல், அந்த அனுகூல வ்யாபாரசக்தி என்பதும் ஞானம் போலவே கார்யமாக இருக்கின்றதால் அந்த சக்தியை உண்டு பண்ணக்கூடிய சக்தி அதில் இருக்கிறதா? இல்லையா? என்று விகல்பம் ஏற்படுமாஞல் அதற்கு பதில்சொல்லமுடியாது. அனவஸ்த்தை முதலான தோஷங்கள் ஸம்பவிக்கும். அதற்காக சக்தி இல்லாத ப்ரமாணத்திலிருந்து பலம் உண்டாகிறது என்று சொல்வதற்கு முடியாது. அதஞல் சக்தி என்பது நித்யமாகவே ப்ரமாணத்தில் இருக்கிறது என்று சொல்லப்படுமாஞல், அதஞல் ஏற்படும் பலம் என்பதும் நித்யமாகவே இருக்கவேண்டும்.

ஆகவே சக்தி இல்லாத ஒன்றிலிருந்தே பலம் ஏற்படுவதாகச் சொல்லப்படுமாஞல் லோக அனுபவத்திற்கு விரோதம் என்பதால் பரிகஸிக்கத்தக்க விஷயமாக ஆகும்.

**111.** அவதாரிகை :

ஸம்வித் என்பது நித்யமாக இருந்தபோதிலும், அதிலுள்ள ஆவரணம் நிவர்த்திக்கப்படுவதன் மூலம், ப்ரத்யக்ஷாதிகளுக்கு நிவர்த்தி என்பதே பலம் என்று சொல்லலாமே? என்ருல்,

**ச்லோகம் :**

सती न संवित्क्रियते हि सत्त्वान्न चासती तद्वदसत्त्वहेतोः ।
न चोपपन्नं सदसत्त्वमस्यास्ततो न कार्यत्वमुपैति संवित्

**ச்லோகார்த்தம் :** ஸத்ஞானம் என்பது ஸத்தாக இருப்பதஞல் உண்டு பண்ணப் படுவதில்லை. அஸத் ஞானமானது அஸத்தாக இருப்பதஞல் உண்டு பண்ணப்படுவதில்லை. ஸதஸத் ஞானமென்று ஒன்று இருப்பதாகவே சொல்லமுடியாது. அதஞல் ஞானமானது கார்யமாக ஆகாது.

வ்யாக்யானம் : ஸம்வித் என்பது, ப்ரத்யக்ஷாதி ப்ரமாண பலமாக அறியப்படுகிறதென்று சொல்லமுடியாது. ஸத்வஸ்துவிற்கும், அஸத்வஸ்துவிற்கும் உற்பத்தியோ நிவர்த்தியோ சொல்லமுடியாது என்பதை முன்பே ஸாமான்யமாக விளக்கப்பட்டிருக்கின்றது. இப்போது விசேஷமாக விசாரிக்கப்படுகிறது.

**112.** அவதாரிகை :

ப்ரமாண பலமாக உண்டாகின்ற விஷயம் சக்தியுடன் கூடியே உண்டாகின்றதா, அல்லது சக்தி இல்லாமலேயே உண்டாகின்றதா? என்று விசாரிக்கின்றபோது, சக்தியுடன் கூடியே உண்டாகிறது என்று சொல்லப்படுமானுல் அது பொருந்தாது. ஏனெனில்,

, ச்லோகம் :

न शक्यमुत्पाद्यमिति प्रशस्यते तदा हि शक्तेरपि जन्यताऽऽपतेत् ।
अशक्यमुत्पाद्यमितीष्यते यदि द्रुतं नभश्चूर्णय मुद्गरादिभिः

ச்லோகார்த்தம் : உற்பத்தி சக்தியுடைய வஸ்துவானது உண்டுபண்ணப்படுகிறது என்று சொல்லமுடியாது. ஏனெனில் உற்பத்தி சக்தி என்பதும் உண்டாகிறது என்று சொல்லப்பட்டதாகவே ஆகும். உற்பத்தி சக்திஅற்ற வஸ்து உண்டுபண்ணப்படுவதாகச் சொல்லப்படுமானுல் ஆகாசம் என்பதை உடனே உலக்கையினுல் பொடி செய்து காண்பிக்க வேண்டும்.

வ்யாக்யானம் : முன்னுல் கார்யம், காரணம் என்பதில் ஸாமான்யமாக தோஷம் சொல்லப்பட்டது. இப்போது அந்த தோஷம் விசேஷமாகச் சொல்லப்படுகிறது. சக்தம் என்ருல், சக்தி உடையது என்று அர்த்தம். சக்தம் என்பதால் ஏற்படும் கார்யம் சக்யம் என்று சொல்லப்படும். ஸம்வித் என்ருல் ஞானம். இந்த ஞானம் என்ற (ப்ரமை) ஸம்வித் என்பது ப்ரமாணத்திற்கு கார்யமா? (சக்யமா) அல்லது அசக்யமா? (சக்யமில்லையா) என்று விசாரிக்கவேண்டும்.

ஸம்வித் (ப்ரமை) என்பதை உற்பத்தி செய்யக் கூடிய சக்தி ப்ரமாணத்தில் இருக்கின்றது என்று சொல்லப்படுமானுல்,. ப்ரமாணம் சக்தம் என்றும் ப்ரமை சக்யம் (கார்யம்) என்றும் சொல்லப்பட்டதாக ஆகும். ஆகவே , ஞானம் என்ற ஸம்வித் என்பது, ப்ரமாணத்திற்கு சக்யம் (கார்யம்) என்று சொல்லப்படுமானுல், ப்ரமாணம் என்பது சக்தியுடன் கூடியே இருக்கின்றதால், அந்த சக்தியினுல் ஸதாஸர்வதா அதன் கார்யத்தை உண்டுபண்ணுகின்றது என்றே சொல்ல நேரிடும். அதற்காக அந்த சக்தி என்பதும் ஜன்யம் என்று சொல்லப்படுமானுல் அந்த சக்தி எப்படி உண்டாகிறது என்ற கேள்வி ஏற்படும். அந்த சக்திக்கு வேெருரு சக்தி காரணம் என்று மேன்மேலும் சொல்லப்படுமானுல் அனவஸ்த்தை முதலான தோஷங்கள் சம்பவிக்கும். அதற்காக, உத்பாத்யம் என்பது சக்யமல்ல, அசக்யம் என்று சொல்லப்படுமானுல் உற்பத்தி செய்ய தகுதி (சக்தி) அற்றது உற்புத்தி செய்கிறது என்று சொல்லப்பட்டதாக ஆகும். இவ்விதம் சொல்லப்படுமானுல் ஆகாசம் என்பதை உலக்கையினுல் உடனே பொடி செய்து காண்பிக்க வேண்டும்.

**பூர்வ :** ஆத்ம ஞானம் என்பதுஅஞ்ஞான நிவர்த்தி மூலம் ஏற்படுவதாக உங்களால் சொல்லப்படுகிறது. அவ்விதம் சொல்லப்படுமானுல், அதை ப்ரமாண பலமான நிவர்த்தி ஏன்று சொல்லப்படுகிறதா அல்லது உற்பத்தி என்று சொல்லப்படுகிறதா என்ற விகல்பம் ஏற்படுகிறது. அதனுல் என்பக்ஷத்தில் சொல்லப்பட்ட தோஷம் உங்கள் பக்ஷத்திலும் ஸம்பவிக்கின்றதே ?

**சித்தா :** ஸத்யம் எங்கள் பக்ஷத்திலும் இந்த தோஷம் ஸம்பவிக்கின்றது என்று தோன்றலாம். ஆனுல், அஞ்ஞானம் என்பது அநிர்வசனீயமாக ஸ்வரூபத்தில் இருக்கின்றது என்று சொல்லப்படுவதால் அஞ்ஞான நிவர்த்தியென்பதும் அநிர்வசனீயம். அந்த அஞ்ஞானம் எந்த ஞானத்தினுல் நிவர்த்திக்கின்றது என்று சொல்லப்படுகிறதோ அதுவும் அநிர்வசனீயம். (அகண்டாகாரவ்ருத்தி என்பதும் ஸத்தா அஸத்தா என்று விசாரிக்கின்றபோது அதுவும் அநிர்வசனீயம் என்றே சித்திக்கின்றது) ஆனுலும், இவ்விதம் அநிர்வசனீயமாக இருந்தபோதிலும், அதனுல் பரமார்த்த வஸ்து போதம் ஏற்படலாம். மானம் மேயம் என்றும் காரணம் கார்யம் என்றும் யுக்தி சொல்வதற்கு இடமே இல்லேயென்பதால் அநிர்வசனீயம் என்று சொல்கிருேம். ஆகையால் அத்வைதம் தத்வம் என்று அறிவதற்கு இவைகளெல்லாம் பூஷணமாகவே இருக்கிறதேயன்றி தூஷணமாக ஆகாது.

**113. அவதாரிகை :**

இதுவரை விசாரிக்கப்பட்டதன் மூலம் ஜடவஸ்துக்களே தெரிவிக்கின்ற ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கு பலம் கிடையாது என்று தீர்மானிக்கப்பட்டது. இதனுல் ஏற்பட்ட லாபம் என்னவென்ருல், ப்ரத்யக்ஷாதிகள் ப்ரமாணமே இல்லேயென்று தீர்மானிக்கப்பட்டதால் அதனுல் அறியப்படும் விஷயங்கள் ஏகமா அனேகமா என்ற விகல்பத்திற்கே இடமில்லே. அதனுல் ப்ரமாணம் அதன் பலம் என்பதெல்லாமே மித்யை என்றே சித்திக்கின்றது.

**ச்லோகம் :**

जडप्रमाणस्य फलानिरूपणाज्जडस्य तत्त्वं न निरूपणक्षमम् ।
अतो न मानान्तरमर्थतोऽपि न त्रयीशिरोवस्तु निराकरिष्यति

**ச்லோகார்த்தம் :** ப்ரதயக்ஷாதி ப்ரமாணங்களின் பலம் நிரூபணம் செய்யப்படாமல் இருப்பதால், ஜடத்வமும் நிரூபணம் செய்யப்படாமல் இருக்கிறது. ஆகையால் ப்ரத்யக்ஷாதிப்ரமாணங்கள் அவைகளின் விஷயங்கள் மூலமாகவும் வேதாந்த ப்ரமேயமான அத்வைதம் என்பதை பாதிக்க முடியாது.

**வ்யாக்யானம் :** ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கு பலம் என்ன என்றே நிருபணம் செய்ய முடியவில்லே. அதனுல் அவைகளை ப்ரமாணம் என்றே சொல்லமுடியாது. அவைகளால் அறியப்படும் விஷயங்களும் ஸத் என்ருே அஸத் என்ருே நிருபணம் செய்யமுடியாததால் அநிர்வசனீயம், மித்யை என்றே சித்திக்ன்றது. அதனுல் சாஸ்திரத்தினுல் போதிக்கப்படும் அத்வைத தத்வம் ஒன்றே ஸத்யம் இவ்விதம் ஒன்று ஸத்யம், மற்ருென்று மித்யை என்று சொல்லப்படுவதால் இரண்டிற்கும் விரோதம் என்பதே கிடையாது. அதுமட்டுமல்ல, இரண்டிற்கும் விஷயம் என்பதும் வேருக

இருக்கின்றதால் ஒன்றுக்கொன்று விரோதம் கிடையாது. இதுவரை சொல்லப்பட்ட யுக்திகளைக் கொண்டு ச்ருதிப்ரமாணம் என்பது வேறு எந்த ப்ரமாணத்தினுலும் பாதிக்கப்படமுடியாது.

சாஸ்திரம் தெரிவிக்கின்ற விஷயத்தினுலும் விரோதமில்லே, ஸ்வரூபத்தினுலும் விரோதமில்லே. ஆகவே ச்ருதியினுல் போதிக்கப்படும் அர்த்தம் அபாதிதமாகவும் அத்வைத லக்ஷணமுடையதாகவும் சித்திக்கின்றது ஆகையால் ச்ருதிஎன்ற ப்ரமாணமே, ப்ரமாணலக்ஷணம் பூரணமாக பொருந்தியதாக இருக்கின்றது.

**114. அவதாரிகை :**

ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் ஜடமான கடம், கட அவச்சின்ன சைதன்யம் என்ற இரண்டையுமே (போதிக்கின்றது) தெரிவிக்கின்றது என்றே சொல்லவேண்டும். ஏனெனில் அவச்சின்ன சைதன்யம் அஞ்ஞாதமாக இருக்கின்றதால், அந்த அஞ்ஞாதமான சைதன்யத்தை போதிக்கின்றது என்பதால் ப்ரத்யக்ஷாதிகளுக்கும் ப்ரமாண்யம் சொல்லலாமே? இவ்விதம் அவச்சேத்யமான சைதன்யம் அவச்சேதகமான ப்ரபஞ்சம் இரண்டிற்கும் ப்ராமாண்யம் சொல்லப்படவேண்டி இருப்பதால் அத்வைதமே தத்வம் என்று போதிக்கப்படுகின்ற வேதாந்தம் தான் ப்ரமாணம் என்று எப்படிச் சொல்லமுடியும்?

ச்லோகம் :

**आत्मन्येव समस्तमस्तु यदि वा मानान्तरं तेन च स्पष्टं वेदशिरोविरुद्धमिति च स्वी कुर्महे कामतः ।**
**एवं सत्यपि पूर्वभावि सकलं मानान्तरं बाधते पश्चात्कस्यचिदेव वेदशिरसो जाता परब्रह्मधीः**

**ச்லோகார்த்தம் :** அல்லது, மற்ற ப்ரமாணங்கள் எல்லாம் ஆத்ம விஷயமாகவே இருக்கிறதென்றும், அந்த ப்ரமாணங்களுடன் வேதாந்தம் என்ற ப்ரமாணம் விருத்தமாக இருக்கின்றதென்பது ஸ்பஷ்டடம் என்று சொல்லப்படும் விஷயத்தை ஒத்துக் கொள்ளப்பட்டாலும் கூட, ஒரு அதிகாரியினிடத்தில் வேதாந்தத்திலிருந்து ஏற்படுகிற ப்ரஹ்ம ஞானத்தினுல் அதற்குமுன் ஏற்பட்ட எல்லா ஞானங்களேயும் பாதிக்கின்றது.

**வ்யாக்யானம் :** இவ்விதம் அனேகயுக்திகளேக் கொண்டும் விரோதம் கிடையாது என்று நிரூபணம் செய்தும் கூட வேறு ஒருமுறையில் இரண்டிற்கும் விரோதம் இருப்பதாகவும், ப்ரதயக்ஷாதிகளும் ப்ரமாணம், சாஸ்திரமும் ப்ரமாணம் என்பதால், சாஸ்திரம் ஒன்றே ப்ரமாணமென்று எப்படிச் சொல்லமுடியும் என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது.

ஆத்மா ஒன்றே அறியப்பட வேண்டிய தத்வம் என்றும் அதுவே அஞ்ஞாதமாக இருக்கிறது என்பதால் ப்ரமாணத்திற்கு ப்ரமேயமாக இருக்கிறது என்றும் சொல்லப்படுகிறது. மேலும் ஆத்மாவே போக்தாவென்றும் போஜ்யமென்றும் அறியப்படும் ப்ரபஞ்சமாக இருக்கின்றதென்றால், ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களாலும் ப்ரபஞ்சம் அறியப்படக் கூடிய தன்மை உடையதாக இருக்கிறது. மித்யா பூதமான அனேக உபாதிகளினுல் ஆத்மா என்பது வேறுபட்டதாக ப்ரத்யக்ஷாதிகளால் அறியப்படுகிறது. ஆனுல் வேதாந்தம் உபாதிபேதங்கள் உண்மையல்லவென்றும் ஆத்மதத்வம் ஒன்றே பரமார்த்தம் என்றும் தெரிவிக்கின்றது. இந்த விதம் இரண்டிற்கும் விரோதம் இருக்கின்றதனுல் விரோதமே இல்லே என்று எப்படிச் சொல்வது?

சித்தா : ப்ரத்யக்ஷாதிகளுக்கு வ்யாவகாரிக ப்ராமாண்யம் உண்டு என்றும் வேதாந்தத்திற்கு தத்வத்தை தெரிவிக்கக் கூடிய (தத்வாவேதக) ப்ராமாண்யமும் சொல்லப்படுவதால், இவைகளுக்கு விரோதமில்லையென்று முன்பே சொல்லப்பட்டதே?

பூர்வ : வேதாந்தம் மட்டுமே தத்வத்தை தெரிவிக்கிறதென்று எப்படிச்சொல்வது? ப்ரதயக்ஷாதிகளும் அந்தந்த விஷயங்களை தெரிவிக்கின்றதால் தத்வத்தை தெரிவிக்கிறது என்றுதானே லோகத்தில் ப்ரசித்தமாக இருக்கிறது? அவ்விதம் லோக ப்ரசித்தமாக அறியப்படும் விஷயங்களை இல்லையென்று வேதாந்தம் தெரிவிக்கின்றது என்றால் இரண்டிற்கும் விரோதம் இருக்கிறது என்றுதானே சொல்ல வேண்டும்?

சித்தா : ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களும் ப்ரபஞ்சத்துடன் கூடிய ஆத்ம சைதன்ய ஆவாரகமான அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்றது என்ற முறையில் அவைகளை ஒப்புக் கொண்ட போதிலும், அதேபோல் வேதம் ஆத்மாவை ஏகம் என்று சொல்வதாலும் ப்ரத்யக்ஷாதிகள் அனேகம் என்று தெரிவிப்பதால் இரண்டிற்கும் விரோதம் இருக்கின்றது என்பதைஒப்புக் கொண்ட போதிலும், அவைகளுக்கும் பரிகாரம் சொல்கிறோம்.

உதாரணமாக வேதமானது பொதுவாக எந்த ஜீவனையும் ஹிம்ஸிக்கக் கூடாது என்று அஹிம்ஸையை போதிக்கின்றது. அதன்பிறகு அதே வேதம்யாகாதிகளுக்காக பசுவதம் செய்ய வேண்டும் என்று தெரிவிக்கின்றது. இவ்விதம் முதலில் எல்லோருக்கும் பொதுவான தர்மத்தை தெரிவித்து அதன்பிறகு விசேஷ தர்மத்தைக் கொண்டு அந்தந்யாயத்தை தளர்த்தப்படுகிறது. இதுபோல் சாதாரணமாக எல்லா ப்ரமாணங்களும் தத்வத்தையே தெரிவிக்கிறது என்பது பொதுவான ந்யாயம். ஆனால் பின்னால் சாதன சதுஷ்டயஸம்பன்னனான உத்தம அதிகாரிக்கு வேதாந்தத்திலிருந்து ஏற்படும் புத்தியினால், முதலில் ஏற்பட்ட புத்தி பாதிக்கப்படுகிறது. ஆகவே முன்னால் சொல்லப்படும் உத்ஸர்க்கம் பின்னால் ஏற்படும் அபவாதத்தினால் பாதிக்கப்படுகிறது. இந்தவிதம் உத்ஸர்க்க அபவாத ந்யாயம் என்பதும் லோகம் சாஸ்திரம் இரண்டிலும் ப்ரஸித்தமாகவே இருக்கிறது. விசேஷவிதியினால் ஸாமான்ய விதிபாதிக்கப்படுகிறது என்பதை அக்னிஷ்டோமாதிகளில் சொல்லப்படும் பசு விஸர்ஜனத்திலிருந்தே அறிந்து கொள்ளலாம். ஆகவே ப்ரத்யக்ஷாதிகள் வேதாந்த ப்ரமாணத்தினால் பாதிக்கப்படுகின்றது என்பதால் அவைகளுக்கு ப்ராமாண்யம் சொல்வதற்கு முடியாது. ப்ரத்யக்ஷாதிளால் வேதாந்தம் பாதிக்கப்படமுடியாது என்பதால் சாஸ்திரம் ஒன்றே ப்ரமாணம்.

**115. அவதாரிகை :**

முன்னால் ஏற்படும் ஞானம் பின்னால் ஏற்படும் ஞானத்தினால் பாதிக்கப்படுகிறது என்றுஏன் சொல்ல வேண்டும் ? முன்னால் ஏற்பட்ட ஞானம் அஸஞ்சாத விரோதமானதால் முன்னால் ஏற்பட்ட ஞானமே ப்ரபலம் என்று சொல்லலாமே? என்றால் அவ்விதம் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

पूर्वोत्पन्नमृगाम्बुविभ्रमधियो बाधं विना नोत्तरं विज्ञानं समुदेतुमूषरभुवो याथात्म्यमावेदयत् ।
शक्नोतीति यथा मृगाम्बुधिषणामुन्मृद्यदुत्पद्यते तद्वद्वेदशिरोवचोजनितधीर्भेदभ्रमं ब्रह्मणि

ச்லோகார்த்தம் : முன்னால் ஏற்பட்ட கானல் நீர் என்ற ஞானத்தை பாதிக்காமல் ஊஷர பூமியின் ஸ்வரூபத்தை தெரிவிக்கின்ற ஞானம் என்பது பின்னால் ஏற்படாது. எவ்விதம் கானல், நீர் (என்ற) ஞானத்தை பாதித்துக் கொண்டு (ஊஷர பூமி) ஞானம் ஏற்படுகிறதோ அதுபோல் பேதப்ரமத்தை பாதித்துக் கொண்டு வேதாந்த வாக்ய ஜன்ய ஞானம் ஏற்படுகிறது.

வ்யாக்யானம் : முன்னால் ஏற்பட்ட ஞானம், பின்னால் ஏற்படும் ஞானத்தினால் பாதிக்கப்படுகிறது என்பது லோகப்ரசித்தம். உதாரணமாக கானலைப் பார்த்து ஜலம் என்று முன்னால் ஏற்பட்ட ப்ராந்தி ஞானம் இது ஜலமில்லை. கானல்தான் என்று பின்னால் ஏற்படும் ஞானத்தினால் பாதிக்கப்படுகிறது. இந்த விதம் முன்னால் ஏற்படும் ப்ரத்யக்ஷாதி களும் அதன் விஷயங்களும் பின்னால் ஏற்படும் வேதாந்த ப்ரமாணத்தினால் பாதிக்கப் படுகிறது. அதனால் ப்ரத்யக்ஷாதிகள் மித்யை என்றே சித்திக்கின்றது.

**116.** அவதாரிகை :

இதே விஷயம் ஜைமினி மஹரிஷியினாலும் ஒத்துக் கொள்ளப்படுகிறது.

ச்லோகம் :

पौर्वापर्ये पूर्वदौर्बल्यमाह षष्ठेऽध्यायेऽवस्थितो जैमिनिर्यत् ।
वक्ष्यामस्तत्सर्वमानीय तुभ्यं बुद्धिं स्वीयां सम्यगत्रावधत्स्व

ச்லோகார்த்தம் : பூர்வாபரவிரோதம் ஏற்படுகின்ற போது பூர்வமே துர்பலம் என்று பூர்வ மீமாம் ஸாசாஸ்திரத்தில் ஆறுவது அத்யாயத்தில் ஜைமினியினால் சொல்லப்பட்டிருக் கிறது. அந்த விஷயத்தை பூர்ணமாக இங்கு தெரிவிக்கின்றோம். உனது புத்தியை இதில் ஏகாக்ரமாக நிலைக்கச் செய்வாயாக.

வ்யாக்யானம் : முன்னால் ஏற்பட்ட ஞானம், பின்னால் ஏற்படும் ஞானத்தினால் பாதிக்கப்படுகிறது என்பதால் முன்னால் ஏற்படும் ஞானம் துர்பலம் என்று பூர் மீமாம்ஸையில் ஆறுவது அத்யாயத்தில் 'பௌர்வாபர்யேபூர்வ தௌர்பல்யம் ப்ரக்ருதிவத்' என்று ஜைமினி மஹரிஷியினால் சூத்ரம் செய்யப்பட்டிருக்கிறது. (சூத்ரம் 6.5.54) ஆகவே, இந்த விஷயம் பற்றி குறைவில்லாமல் பூர்ணமாக தெரிவிக்கப் போகின்றேன். என்னால் உபதேசிக்கப்படும் விஷயம் மிக்க கடினமாகவும், சுலபமாக அறிந்து கொள்ளக் கூடியதாகவோ இல்லை. அதனால் சித்த ஏகாக்ரதையுடன் கவனமாக கேட்டு அறிந்து கொள்ளவேண்டும்.

**117.** அவதாரிகை :

பின்னால் தெரிவிக்கின்றேன் என்று ப்ரதிஞ்ஞை செய்யப்பட்ட நியாயம் என்ன என்பது பற்றி இப்போது தெரிவிக்கிறோம்.

ச்லோகம் :

उद्गातृप्रतिहर्तृकर्तृकतया जातौ वियोगौ क्रमा- द्यस्मिन्कर्मविधिप्रयोगसमये तत्रैष नः संशयः ।
किं सर्वद्रविणव्ययो भवतु वा संस्थापनं दक्षिणाहीनस्येति तदा परं बलवदित्यूचे मुनिर्जैमिनिः

**ச்லோகார்த்தம் :** எந்த யாகத்தை செய்கின்றபோது உத்காதாவும், ப்ரதிஹார்த்தாவும், க்ரமமாக கச்சத்தை விடுகின்ருர்களோ, அந்தயாக விஷயத்தில் ஸம்சயம் ஏற்படுகின்றது. எல்லா பொருட்களேயும் தக்ஷிணேயாக கொடுக்க வேண்டுமா? அல்லது தக்ஷிணே இல்லாமலேயே யாகத்தை அனுஷ்டிக்க வேண்டுமா (என்ற ஸந்தேஹத்திற்கு) என்ற இடத்தில் பின்ஞல் சொல்லப்படும் நியமமே பலவத் என்று ஜைமினியிஞல் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** அபச்சேத ந்யாயம் என்ருல் என்ன என்று விபாகம் செய்து விளக்கப்படுகிறது. ஜ்யோதிஷ்ட்ஹோமம் என்ற (ஸோமயாகம்) கர்மாவில் ரித்விக்குகள் பலர் இருக்கின்ருர்கள் அதில் முதலில் அத்வர்யு என்ற ரித்விக், இரண்டாவது உத்காதா என்ற ரித்விக், மூன்ருவது ப்ரதி ஹர்த்தா என்ற ரித்விக் என்பது போல் இன்னும் மற்றுமுள்ள ரித்விக்குகள் அனேவரும் ஒருவர் பின் ஒருவராக முன்ஞல் இருப்பவரின் கச்சையைப் பிடித்துக்கொண்டு குறிப்பிட்ட சுபதினத்தில் பவமான ஸ்தோத்ரத்தை சொல்லிக்கொண்டு யாககுண்டத்திற்கு வெளிப்பக்கத்தில் உத்தரவேதி என்ற வடக்கு பக்கத்திலுள்ள வேதியிலிருந்து ஸதஸ் என்ற இடத்திற்குச் செல்ல வேண்டும். (இவ்வித கர்மாவைச் செய்வதற்கு முன் செய்யவேண்டிய ஹோமத்தை செய்த பிறகே இவ்விதம் ஒருவர் பின் ஒருவராகச் செல்லவேண்டும்.) இவ்விதம் சுற்றி வருகின்றபோது இந்த, ரித்விக்குகளில் எவரேனும் நடுவில் கச்சையை விட்டுவிடுவா ராஞல் அதற்கு ஒரு ப்ராயச் சித்தம் செய்ய வேண்டுமென்று விதிக்கின்றது. யார் விடுகின்ருரோ அவரே ப்ராய சித்தம் செய்ய வேண்டுமென்பது ஸாமான்யந்யாயம். இதில் அத்வர்யு என்ற ரித்விக் விடுவாராகில் ஒருவருக்கும் தக்ஷிணேயே கொடுக்காமல் அந்த கர்மாவை முடித்து விட்டு மறுபடியும் கர்மாவை ஆரம்பித்து செய்து முடித்து அதற்குரிய தக்ஷிணேயைக் கொடுக்கவேண்டும். ப்ரதிஹர்த்தா என்ற ரித்விக் விடுவாராகில் யஜமானன் தன்னிடமுள்ள ஸர்வத்தையும் எல்லோருக்கும் தக்ஷிணேயாகக் கொடுக்க வேண்டும். இரண்டு பேருமே ஒரே ஸமயம் விட்டு விடுவாரேயாகில் யஜமானன் தன் இஷ்ட்டம் போல் செய்யலாம். ஒருவர் பின் ஒருவராக விடுவராகில் இரண்டையும் சேர்த்துச் செய்வதென்பது முடியாத கார்யம் என்பதால் இரண்டில் ஒன்றைத்தான் செய்யவேண்டும். இரண்டில் எதைச் செய்வது என்று ஸம்சயம் ஏற்படுவது ந்யாயம்தான்.

இவ்விதம் சொல்லப்பட்ட விஷயங்கள் ஸ்லோகத்தின் பூர்வார்த்தம். எந்த கர்மாவை அனுஷ்டிக்கப்படுகிறதோ அந்த ஸமயத்தில் உத்காதா என்பவரும் ப்ரதிஹர்த்தா என்பவரும் க்ரமமாக விடுவார்களேயாஞல் இதில் ஸம்சயம் ஏற்படும். இதில் யார் முதலில் விடுகின்ருரோ அவரே அதற்கு தகுந்த ப்ரயாச்சித்தம் செய்யவேண்டும். ஏனெனில் முதலில் ஏற்படுவதால் அதுவே ப்ரபலம் என்பது பூர்பக்ஷம். இந்த விஷயத்தில் பின்ஞல் எற்படுவதே பலவத் என்று ஜைமினியிஞல் தீர்மானிக்கப்பட்டிருக் கிறது. பின்ஞல் ஏற்படுவதை பாதிக்கக்கூடிய பலம் முன்ஞல் இருப்பதற்கு கிடையாது என்றும், முதலில் இருப்பதை பாதிக்காமல் இரண்டாவது வரமுடியாது என்பதால் பின்ஞல் இருப்பதே பலவத் என்றும் தீர்மானம் செய்யப்படுகிறது. ஆகவே இரண்டாவது எது சொல்லப்படுகிறதோ அதையே செய்ய வேண்டும் என்றும் முதலில் ஏற்படுவது தௌர்பல்யம் என்றும் அறியப்படுகிறது.

முதலில் ப்ரதிஹர்த்தா விடுவானுகில் அவனுக்குச் சொல்லப்பட்ட ப்ராயச்சித்தம் செய்யவேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டாலும் இரண்டாமவன் விடுவானுகில் முதலில் ஏற்பட்ட புத்தி பாதிக்கப்படுகிறது. விட்டவன் யார் என்று அறியப்படுமானுல் இவ்விதம் ப்ராயச்சித்தம் செய்யப்படவேண்டும். பூர்வத்தைக்காட்டிலும் பரம்பலீயஸ் என்று தீர்மானிக்கவேண்டும். ஒன்றுக்கொன்று அபேக்ஷையின்றி ஸ்வதந்தரமாக இருக்குமானுல் தனித்தனியாக இருக்குமிடத்தில் பின்னுல் ஏற்படுவதே பலவத்.

"பூர்வாத்பரபலீயஸ்த்வம் தத்ர நாம ப்ரதீயாதம்

அன்யோன்ய நிரபேக்ஷணும் யத்ர ஜன்மதியாம் பவேத்" என்று சொல்லப்பட்டிருக்கிறது.

**118.** அவதாரிகை :

"பௌர்வாபர்யே பூர்வ தௌர்பல்யம் ப்ரக்ருதிவத்" என்று ஜைமினி சூத்ரத்தில் சொல்லப்பட்டிருப்பதில் ப்ரக்ருதிவத் என்று உதாகரணம் சொல்லப்பட்டிருக்கிறது. அதைப் பற்றி மேலே விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

**यद्वत्प्राकृतवैकृतावतितरामन्योन्यसंस्पर्धिनौ धर्मौ बाध्यनिवर्तकाबभिमतौ बुद्धौ क्रमेणान्वयात् ।**
**पाठव्यत्ययसंभवेऽपि हि तयोर्बुद्धिक्रमो विद्यते पूर्वा प्राकृतधर्मधीरितरधीरन्त्या तथैवोत्थिते:**

ச்லோகார்த்தம் : ப்ரக்ருதியாகத்திலும் விக்ருதியாகத்திலும் சொல்லப்படும் விஷயங்களில் பரஸ்பர விரோதம் ஏற்படுகின்றபோது அவைகளுக்கு பாத்ய பாதக பாவம் சொல்லப்படுகிறது. ஏனெனில் அவை இரண்டும் புத்தியில் க்ரமமாகவே ஏற்படுகின்றது. பாடத்தில் மாற்றம் இருந்த போதிலும், அவைகளின் ஞானத்தில் க்ரமம் இருக்கின்றது. ப்ரக்ருதியில் சொல்லப்படும் விஷயத்தின் ஞானம் முதலாவதாக ஏற்படுகிறது. விக்ருதியில் சொல்லப்படும் விஷயத்தின் ஞானம் கடைசியாக ஏற்படுகிறது. ஏனெனில் அவ்விதமே ஞானம் ஏற்படுகிறது.

வ்யாக்யானம் : பூர்வாபரங்களில் பூர்வம் தௌர்பல்யம் என்ற சூத்ரத்தின் ஒரு பாகம் விளக்கப்பட்டது. அதில் ப்ரக்ருதிவத் என்று சொல்லப்படும் த்ருஷ்டாந்தம் என்னவென்று விளக்கப்படுகிறது. அபச்சேத ந்யாயம் என்பதற்கு த்ருஷ்ட்டாந்தமாக ப்ரக்ருதிவத் என்று சொல்லப்படுகிறது. ப்ரக்ருதி என்று சொல்லப்படும் கர்மாவில் சொல்லப்படுகின்ற கர்மாவிற்கு ப்ராக்ருதம் என்று பெயர். விக்ருதி என்ற கர்மாவில் சொல்லப்படும் கர்மாவிற்கு வைக்ருதம் என்று பெயர். இந்த இரண்டு கர்மாக்களும் எப்படிச் செய்ய வேண்டும் என்று சொல்லப்படும் முறையில் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக சில இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ப்ரக்ருதிவத் விக்ருதி: கர்த்தவ்யா என்ற ந்யாயம், இவ்விதம் முரண்பாடு ஏற்படுமிடத்தில் பாதிக்கப்படுகிறது. எப்படியெனில் ப்ரக்ருதியில் சொல்லப்பட்ட கர்மாவைச் செய்யவேண்டுமென்ற ந்யாயம் முதலில் புத்தியில் ஏற்படுகிறது. விக்ருதி என்பது பின்னுல் சொல்லப்படுகின்றதால், க்ரமம் அறியப்படுகின்றது அதனுல் பின்னுல் சொல்லப்படுவதே பலவத் என்று சொல்லப்படுகிறது.

இவ்விதம் சொல்லப்படும் இரண்டு கர்மாக்களில் பூர்ண அங்கங்களுடன் சொல்லப் படும் கர்மாவிற்கு ப்ரக்ருதி என்றும், சில அங்கங்களை தெரிவித்து சில அங்கங்களை தெரிவிக்காமல் விடப்பட்டிருக்குமானுல் அந்த கர்மாவிற்கு விக்ருதி என்றும் பெயர்.

ப்ரக்ருதி கர்மாக்களில் தர்ச பூர்ணமாஸம் என்பது ஒரு கர்மா. (ஸர்வயாகங்களுக்கும்) ஸர்வகர்மாக்களுக்கும் ப்ரக்ருதி. ஏனெனில் எல்லா அங்கங்களும் இதில் பூர்ணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் ப்ரஹ்ம தேஜஸ் ஏற்படுவதற்காக ஸ்ரீ சூர்ய பகவானை உத்தேசித்து ஹவிர் பாகத்தை கொடுக்க வேண்டும் என்று தெரிவிக்கின்றது. 'ப்ரஹ்ம வர்ச்சஸகாம:' என்ற கர்மா விக்ருதி கர்மாவில் சொல்லப்படுகிறது. விக்ருதி கர்மாவில், ப்ரக்ருதியைப் போல் பொதுவாகச் சொல்லப்படாமல், விசேஷமாக சில அங்கங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. உதாரணமாக 'அபிசரன் யஜேத' என்று விதிக்கப்படும் ஆபிசார கர்மாவில் 'சரமயம் பர்ஹி: விபீதக பவதி' என்று பஹிஸ் என்பதை சரமயத்திஞல் செய்ய வேண்டும். (தர்ப்பையை நாணலால் கட்ட வேண்டும் என்று தெரிவிக்கின்றது.) இந்த விதம் விக்ருதியில் என்ன அங்கங்களைக் கொண்டு இந்த கர்மாவைச் செய்ய வேண்டும் என்று தெரிவிக்கவில்லை. ஆனுல் ப்ரக்ருதியில் ஸாதாரணமாக தர்ப்பையைக் கொண்டு இந்த கர்மாவைச் செய்ய வேண்டுமென்று தெரிவிக்கின்றது. இந்த விதம் தர்ச பூர்ணமாஸம் என்ற கர்மாவில் விக்ருதி என்பதில் விசேஷமாக ஏதும் சொல்லப்படவில்லை என்ருல் ப்ரக்ருதியில் சொல்லப்படுவது போல் செய்யலாம். ஆனுல் 'சரமயம் பர்ஹிபவதி' என்ற வாக்யம் விசேஷமாகச் சொல்லப்பட்டிருக்கின்றதாலும், பின்னப்ரகரணமாக இல்லாமல் இருப்பதாலும், இரண்டையும் சேர்த்துச் செய்வதா? அல்லது ஒன்றை மட்டும் செய்வதா? அதில் எதைச் செய்வது? என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. ஆகவே பர்ஹிஸை ப்ரக்ருதியில் சொல்வது போல் செய்ய முடியாது. விசேஷமாகச் சொல்லப்படுவதையே செய்ய வேண்டும் என்று தீர்மானிக்கப்படுகிறது. விதி வாக்யங்களில், ஒன்றை விதிக்கப்படுமானுல், அந்த விதிக்கு வேறு முறையிலும் அவகாசம் கொடுக்க முடியுமானுல், எதற்கு அவகாசமே கொடுக்க முடியவில்லையோ அதற்குத் தான் இடம் கொடுக்க வேண்டும் என்று "ஸாவகாச நிரவகாசயோ:, நிரவகாசம் பலவத்" என்ற ந்யாயப்படி விக்ருதியில் சொல்லப்படும் 'சரமயம் பர்ஹி : விபீதக பவதி' என்ற வாக்யத்திஞல் முன்னுல் ப்ரக்ருதியில் சொல்லப்பட்ட விதி பாதிக்கப்படுகிறது.

அதேபோல் உத்காதா, ப்ரதிஹர்த்தா என்பவர்களில் ஒருவர் கச்சத்தை விடுவாராகில், பின்னுல் விடுபவருக்கு என்ன ப்ராயச்சித்தம் சொல்லப்படுகிறதோ அதையே செய்யவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

வேதத்தில் சில இடங்களில் ப்ரக்ருதியை தெரிவித்து அதன் பின் விக்ருதியை தெரிவிக்கிறது, சில இடங்களில் விக்ருதியை தெரிவித்து இதற்குப் ப்ரக்ருதி என்ன என்று பின்னுல் தெரிவிக்கப்படுகிறது. இப்பேர்ப்பட்ட ஸந்தர்ப்பத்தில பாடக்ரமத்தைப் பற்றி யோஜிக்காமல் 'ப்ரக்ருதிவத்விக்ரு திகர்த்தவ்யா' என்று சொல்லப்படுவதால் முதலில் ப்ரக்ருதி ஞானமே ஏற்படும். பின்னுல் சொல்லப்படும் விக்ருதி விதியையே அனுஷ்டிக்கப்பட வேண்டும். நிரவகாசத்தை உபேக்ஷை செய்ய முடியாது. சொல்லப்படும் விஷயம் வ்யர்த்தமாகாமல் அவஸ்யம் செய்யவேண்டும். ஆகவே ப்ரக்ருதிவத் விக்ருதி கர்த்தவ்யம் என்று சொல்லப்படுவது அதிதேச புத்தி. (சொல்லப்படும் நியமத்தை மற்ருேர் இடத்தில் கொண்டுவருவது). உபதேச புத்தியென்ற விக்ருதியென்பது புதிதாகச் சொல்லப்படும்

நியமம். இந்த இரண்டில் இரண்டாவது சொல்லப்படுவதே முதலில் சொல்லப்படுவதை பாதிக்கின்றது.

இதேபோல் ப்ரத்யாக்ஷாதிகளால் ஜன்யமான புத்தியை, சாஸ்திர ஜன்ய ஞானத்தினுல் பாதிக்கப்பட வேண்டுமெயன்றி சாஸ்திர ஞானத்தை ப்ரத்யக்ஷத்தைக் கொண்டு பாதிக்க முடியாது.

**119. அவதாரிகை :**

"உச்சை:ரிசாக்ரியதே:உபாம்ஸுயஜுஷா" என்று ரிக்மந்த்ரங்களை உரக்கச் சொல்ல வேண்டும் என்றும் யஜுர் மந்த்ரங்களை மெதுவான குரலில் சொல்ல வேண்டும் என்று இந்த வாக்யம் தெரிவிக்கின்றது. இவ்விதம் இந்த வாக்யத்தை தெரிவிப்பதற்கு முன்பு "த்ரயோ வேதா அஸ்ருஜ்யந்தோ" என்ற மந்த்ரம், சிருஷ்டி ஆரம்பத்தில் ப்ரஹ்மா மூன்று வேதங்களையும் சிருஷ்டித்தார் என்று தெரிவிக்கின்றது. இந்த வாக்யத்திலுள்ள 'வேத' சப்தம், 'மந்த்ர ப்ராஹ்மணாத்மகோவேத', என்று மந்த்ராத்மகமாகவும் ப்ராஹ்மணாத்மகமாகவும் இருக்கிறது என்ற அர்த்தத்தை தெரிவிக்கிறது என்று சொல்லப்படுகிறது. (ச்லோகம் போல் பாதங்களுடன் அமைந்திருக்குமானுல் அந்த மந்த்ரங்களுக்கு ரிக் என்று பெயர். கேவலம் வசனமாக அமைந்திருந்தால் யஜுஸ் என்றும், கானத்துடன் அமைந்திருக்குமானுல் சாமா என்றும் பெயர் சொல்லப்படுகிறது. ரிக், யஜுர் மந்தரங்களை விதிக்கப்பட்ட படியே சொல்லவேண்டும்.) (இதேபோல் ஒரு விஷயத்தை சுருங்க சொல்வது மந்த்ரம், விளக்கமாக சொல்வது ப்ராஹ்மணம்) ஆகவே இந்த வாக்யத்திலுள்ள வேத சப்தம் மந்த்ர ப்ராம்ணுத்மகமான அந்தந்த வேதங்களையே குறிக்கின்றது.

இந்தவிதம் ரிக், யஜுஸ் என்ற மந்த்ரத்தை உரத்த குரலிலும் மெதுவான குரலிலும் சொல்ல வேண்டும் என்ற வாக்யத்தில் உள்ள ரிக், யஜுஸ் என்ற பதம் சாதாரணமாக மந்த்ரத்தையே குறிக்கின்றது, என்பதே முக்யார்த்தம். ஆனுல் அந்த பதங்கள் மந்த்ரத்தை குறிக்கவில்லை லக்ஷணையாக வேதம் என்பதையே குறிக்கின்றது என்றே சொல்லவேண்டும் என்று முக்யார்த்தத்தை பாதித்து சித்தாந்தம் செய்யப் பட்டிருக்கிறது. இந்த இடத்தில் பூர்வம் ப்ரபலமாகவும், உத்தரம் துர்பலமாகவும் சொல்லப்படுவதால், உத்தரம்தான் ப்ரபலம் என்று எப்படிச் சொல்வது ? என்ருல்,

**ச்லோகம் :**

सापेक्षावुदितौ यदा तु भवतः पूर्वापरौ प्रत्ययौ पूर्वस्तत्र निवर्तको भवति तत्रन्त्यो निवर्त्यो यथा ।
वेदोपक्रमजा मतिर्बलवती नर्गादिसंहारजा वेदोपक्रममुख्यभाग्भवति तत्रर्गादिवाणी गुणात्

**ச்லோகார்த்தம் :** எப்போது பூர்வ ஞானமும் அபர ஞானமும் ஒன்றை ஒன்று அபேக்ஷித்து ஏற்படுகின்றதோ அப்போது பூர்வ ஞானம் என்பது பாதகமாகவும், அபர ஞானம் என்பது பாத்யமாகவும் இருக்கின்றது. உதாரணமாக, உபக்ரமத்தில் ஏற்படும் வேத ஞானமானது பலவத்தாக இருக்கிறது. உபஸம்ஹாரத்தில் ஏற்படும் ரிக் முதலானவைகளின் ஞானமானது பலவத்தாக இல்லை. ஆகையால் உபக்ரமத்திலுள்ள வேத சப்தத்திற்கு முக்யார்த்தமும் உபஸம்ஹாரத்திலுள்ள ரிகாதி சப்தத்திற்கு லக்ஷ்யார்த்தமும் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** பூர்வம், உத்தரம் என்பதில் ஒன்றை ஒன்று அபேக்ஷிக்கின்றது என்று இருக்குமானல் அந்த இடத்தில் பூர்வ ப்ரத்யயம் பாதகம், உத்தர ப்ரத்யயம் பாத்யம் என்பதால் இந்த இடத்தில் பூர்வமே ப்ரபலம் என்று சொல்லவேண்டும். எனெனில் பூர்வத்தை அபேக்ஷித்தே பின்னல் சொல்லப்படுவது ஏற்படவேண்டி இருக்கிறது. அதனுல் பூர்வத்தை உத்தரம் பாதிக்க முடியாது. ஏனெனில் பூர்வத்திற்கு விரோதமில்லாமல் பின்னல் சொல்லப்படுவது இருக்க வேண்டும்.

ப்ரஜாபதி வேதத்தை சிருஷ்டித்தார் என்பது உபக்ரம வாக்யம் (பூர்வம்) அதன் பிறகு 'உச்சை:ரிசாக்ரியதே உபாம்ஸுயஜுஷா' என்ற வாக்யத்திலுள்ள ரிகாதி பதங்கள் மந்தரத்தை மட்டும் குறிக்கின்றதா? அல்லது அந்தந்த வேதங்களையே குறிக்கின்றதா? என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. இதில் ரிக், யஜுஸ் என்ற பதங்கள் முக்யமாக மந்த்ரங்களையே குறிக்கின்றதென்றும் ஏனெனில் பதங்களுக்கு முக்யார்த்தம்தான் சொல்லப்பட வேண்டும் என்பது பூர்வ பக்ஷம்.

இது சரியல்ல. ஏனெனில் ரிக், யஜுஸ், சாமம் என்ற மூன்று வேதங்களிலும் மூன்று வேதங்களின் மந்த்ரங்களும் கலந்து இருக்கின்றது-. (அதாவது ரிக் வேத மந்த்ரம் யஜுஸ், சாமம், என்பதிலும் அதே போல் ஸாம வேதத்தில் மற்ற வேத மந்த்ரங்களும் கலந்து இருக்கின்றது.) ஆகையால் ரிக், யஜுஸ் என்ற பதங்களுக்கு முக்யார்த்தமான மந்தரம் என்பதே அர்த்தம் என்று க்ரஹிக்கப்படுமானல் உச்ச ஸ்தாயியில் உச்சரிக்க வேண்டும், மெதுவாக உச்சரிக்க வேண்டும் என்ற விதி இங்கு பொருந்தாது. ஏனெனில் ஒரே வேதத்தினை இரண்டு விதமாக உச்சரிக்க வேண்டும் என்ற அர்த்தம் சொல்லப்படுமானல் அது பொருந்தாது. யஜுர் வேத கர்மாவாக இருக்குமானல் அந்த மந்த்ரங்கள் மெதுவான குரலில் உச்சரிக்க வேண்டும். ரிக் வேத கர்மாவாக இருந்தால் அந்த மந்த்ரங்களை உரக்க உச்சரிக்க வேண்டும் என்பதால், இந்த வாக்யத்திலுள்ள ரிக், யஜுஸ் என்ற பதங்கள் வேதத்தையே குறிக்கின்றது என்று சித்தாந்தம் செய்யப்பட்டிருக்கிறது. வேதம் என்ற சப்தம் முதலிலேயே சொல்லப்பட்டிருக்கின்றதால் அதற்கு வேறு எதனுடனும் விரோதமில்லை என்பதால் வேதம் என்ற அர்த்தமே பலவத். அதனுல் பின்னல் சொல்லப்படும் ரிக், யஜுஸ், என்ற பதங்களுக்கும் மந்த்ரம் என்று அர்த்தம் செய்யக் கூடாது. பின்னல் ஏற்பட்ட புத்தி துர்பலம். அந்த பதங்கள் இரண்டும் மந்த்ரார்த்தமான முக்யார்த்தத்தை குறிக்காததால் ஸ்வார்த்த பரமில்லை. வேதம் என்ற ஸ்வரூபம் சித்தித்தால்தான் ரிக், யஜுஸ் என்ற மந்த்ரங்கள் சித்திக்க முடியும். வேதம் என்ற பதமே ஸ்வார்த்த பரம். ஆகவே ரிக், யஜுஸ், முதலான பதங்கள் வேதங்களை அபேக்ஷித்து ஜீவிக்கின்றதால் பூர்வத்தைக் கொண்டு உத்தரம் பாதிக்கப்படுகிறது. பின்னல் சொல்லப்படும் ரிகாதி மந்த்ரங்கள் அந்தந்த மந்த்ர விசேஷத்தையே தெரிவிக்கின்றது என்பதால் உபஸம்ஹாரத்திலுள்ள ரிகாதி பதங்கள் லக்ஷணையினுல் வேதத்தை தெரிவிக்கின்றது என்றே சொல்ல வேண்டும்.

இந்த விதம் ப்ரத்யக்ஷாதிகளுக்கு வ்யாவஹாரிக ப்ராமாண்யம் தான் இருக்கின்றது. அதனுல் முன்னல் ஏற்பட்ட ப்ரமாணமாக இருந்த போதிலும் பின்னல் எற்படுகின்ற வேதம் என்ற ப்ரமாணமானது-ப்ரத்யக்ஷாதிகளுக்கு தத்வத்தை போதிக்கக் கூடிய ப்ரமாண்யம் இல்லை என்று பாதிக்கின்றது. வேதம் தத்வத்தை போதிக்கின்ற

விஷயத்தில் ப்ரத்யக்ஷாதிகளை அபேக்ஷிக்கவில்லை. நிரபேக்ஷமாகவே போதிக்கின்றது. ஆனுல் பதபதார்த்தங்களை அறிவதற்கு ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தை அபேக்ஷிக்கின்றது. ஆகையால் ச்ரவணம் செய்தால்தான் ச்ருதியினுல் போதிக்கப்படும் விஷயம் அறிய முடியும். இந்த விஷயத்தில் மட்டும் ச்ருதி உபஜீவகமாகவும், ப்ரத்யக்ஷம் உபஜீவ்யமாகவும் இருக்கிறது என்ருலும், தத்வத்தை போதிக்கின்ற விஷயத்தில் வேதாந்தம் உப ஜீவகமாக இல்லை. (எதை அண்டி இருக்கிறதோ அது உப ஜீவ்யம். எது அண்டி இருக்கிறதோ அது உபஜீவகம்.)

**120.** அவதாரிகை :

இதுவரை பூ.மீமாம்ஸா சாஸ்திரவாக்யங்களை த்ருஷ்ட்டாந்தமாக தெரிவித்து, பூர்வம், உத்தரத்தைக் காட்டிலும் பலீயஸ் என்று சொல்லப்பட்டது. இப்போது உத்தரமீமாம்ஸா வாக்யத்தைக் கொண்டு பூர்வம் பலீயஸ் என்பதை தெரிவிக்கப்படுகிறது.

ச்லோகம் :

ब्रह्म पुच्छमितिवाक्यगामिनो ब्रह्म पुच्छमिति शब्दयोर्द्वयोः ।
ब्रह्म शब्दबलवत्तरत्वतः पुच्छशब्दपरिपीडिनं मतम्

ச்லோகார்த்தம் : 'ப்ரஹ்ம புச்சம்ப்ரதிஷ்ட்டா' என்ற வாக்யத்திலுள்ள ப்ரஹ்ம, புச்ச என்ற இரண்டு சப்தங்களில், ப்ரஹ்ம சப்தம் பலவத்தாக இருக்கின்றதால் புச்ச சப்தத்தின் முக்யார்த்தம் விடப்படுகிறது.

வ்யாக்யானம் : ஆனந்தமய அதிகரணத்தில் "ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்ட்டா" என்றவாக்யத்திலுள்ள 'ப்ரஹ்ம' பதத்திற்கும் 'புச்சம்' என்ற பதத்திற்கும் அர்த்தம் என்ன என்று விசாரிக்கப்படுகிறது.

ப்ரஹ்ம புச்சம் என்ற வாக்யத்தில் முதலில் 'ப்ரஹ்ம' பதம் சொல்லப்பட்டிருக்கிறது. முதலில் சொல்லப்படும் ப்ரஹ்ம சப்தம் தான் முக்யமாக பலவத்தாக இருக்கின்றது என்று சொல்ல வேண்டும் என்றும் பின்னுல் சொல்லப்படும் புச்சம் என்ற சப்தம் பக்ஷிரூபமாக வர்ணிக்கப்படும். அவயவகல்பனைக்கு தக்கவாறு ப்ரயோகம் செய்யப் பட்டிருக்கின்றது. ஆனுல் புச்ச சப்தத்திற்கு அவயவம் என்ற முக்யார்த்தத்தை விட்டு லக்ஷணையைக்கொண்டு அதிஷ்ட்டானம் என்ற அர்த்தமே சொல்லப்படுகிறது. பக்ஷிக்கு எப்படி புச்சம் என்பது ஆதாரமோ அதுபோல் ப்ரஹ்மமென்பது ஸர்வாதாரம் என்ற அர்த்தத்தையே தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுகிறது. 'ப்ரஹ்ம புச்சம் ப்ரதிஷ்ட்டா' என்ற வாக்யத்தில் முதலில் சொல்லப்படும் 'ப்ரஹ்ம' பதம் எதையும் அபேக்ஷிக்கமாலேயே முக்யமான அதன் அர்த்தத்தையே உடனே போதிக்கின்றது. அடுத்து வரும் 'புச்ச' சப்தம் முன் பர்யாயங்களில் சொல்லப்பட்ட அவயவம் என்பதையே முக்யார்த்தமாக தெரிவித்தபோதிலும் அவயவியை அபேக்ஷித்தே அவயவம் இருக்க வேண்டுமேயன்றி ஸ்வதந்தரமாக இருக்க முடியாது. ஆகையால் முன்னுல் இருக்கின்ற ப்ரஹ்ம பதத்தை அபேக்ஷித்து லக்ஷணையாக புச்ச பதத்திற்கு ஆதாரம் என்ற அர்த்தத்தையே சொல்லவேண்டும்.

**பூர்வ :** அந்த அனுவாதத்தின் உபக்ரமத்தில் ஆனந்த மயத்தைச் சொல்லப் பட்டிருப்பதால் ஆனந்த மயமே புச்ச சப்தார்த்தம் என்று சொல்லலாமே?

**சித்தா :** அவ்விதம் சொல்லப்பட்ட போதிலும்ஆனந்தமய சப்தத்திற்கு மஹா உபக்ரமமான ப்ரஹ்ம சப்தத்தை அனுசரித்து அர்த்தம் செய்ய வேண்டும். ஆனந்த மயம் என்ருல் அதன் ஸ்வார்த்தத்திற்கு பாதம் சொல்ல நேரிடும். ஆகவே ப்ரஹமமென்பதே புச்ச சப்தார்த்தம் என்பதை மாந்திர வர்ணிகம் என்ற சூத்ரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

(இந்த விதம் ஸாபேக்ஷ விஷயத்தில் பூர்வம் பலவத் என்பதை சித்தாந்தியிஞல் அங்கீகரிக்கப்படுகிறது.)

**121. அவதாரிகை :**

'ஆகாச : தல்லிங்காத்' என்ற சூத்ரத்தில் ஆகாச சப்தம் முன்ஞல் சொல்லப்பட்டிருக் கிறது. அதன் பிறகு 'ஸர்வாணி ஹவா இமானி பூதானி' என்ற வாக்ய சேஷத்தை அனுசரித்து முன்ஞல் சொல்லப்பட்ட ஆகாச சப்தத்திற்கு 'பூதாகாசம்' என்ற முக்யார்த்தத்தை விட்டு பின்ஞல் சொல்லப்படும் வாக்யத்தை அனுசரித்து ப்ரஹ்மமென்று லக்ஷணையாக அர்த்தம் செய்யப்படுவதற்கு என்ன காரணம் ? இந்த இடத்தில் பின்ஞல் சொல்லப்படுவதற்கே பலவத்வம் சொல்லப்படுகிறதே ? என்ருல்,

ச்லோகம் :

अथ यद्युपक्रमणमल्पतरं भवति प्रभूतमुपसंहरणम् ।
बलवत्तदा चरममेव भवे दुभयोर्विरोधसमये नितराम्

**ச்லோகார்த்தம் :** உபக்ரமத்தில் விஷயங்கள் குறைவாகவும் உபஸம்ஹாரத்தில் விஷயங்கள் அதிகமாகவும் சொல்லப்பட்டிருக்குமாஞல், அவை இரண்டிற்கும் விரோதம் ஏற்படுகின்றபோது உபஸம்ஹாரம் என்பதே பலவத்தாக ஆகும்.

**வ்யாக்யானம் :** சாரீரக அதிகரணத்தில் 'ஆகாச:தல்லிங்காத்' என்ற சூத்ரத்திற்கு என்னஅர்த்தம் என்பதை அதற்குரிய ந்யாயத்தைக்கொண்டு விளக்கப்படுகிறது. உபக்ரமத்தில் ஆகாசம் என்ற ஒரு பதம் தான் இருக்கிறது. ஆனால் உபஸம்ஹாரத்தில் வாக்யஸேஷம் அதிகமாக இருக்கிறது. இதில் உபக்ரமத்தில் சொல்லப்படுவதற்கும் உபஸம்ஹாரத்தில் சொல்லப்படுவதற்கும் விரோதம் ஏற்படுமேயாஞல், அனேக அர்த்தம் கிடைக்கின்றதைக் கொண்டு அல்ப்பமாக இருக்கின்ற அர்த்தத்தை பாதிக்க வேண்டும். ஆகவே, இந்த இடத்தில் 'ஆகாசம்' என்ற ஒரே பதம் தான் உபக்ரமத்தில் இருக்கிறது. அந்த பதம் பூதாகாசம் என்ற அர்த்தத்தையே முக்யமாக தெரிவிக்கின்றது. பின்ஞல் ப்ரஹ்மமென்ற அர்த்தம் உபஸம்ஹாரத்தில் சொல்லப்படுகின்றதால் இரண்டிற்கும் விரோதம் அறியப்படுகிறது. இந்த இடத்தில் ப்ரஹ்மென்ற அர்த்தம் அதிகமாக சொல்லப்பட்டிருப்பதால் ஆகாச சப்தம் ப்ரஹ்ம்மென்றே லக்ஷணையிஞல் சொல்லப்படுகிறது.

ஒரு சில இடத்தில் உபஸம்ஹாரத்தில் பலவிஷயங்களை சொல்லப்பட்டிருந்தாலும் கூட உபக்ரமத்தில் சொல்லப்படும் அர்த்தத்திற்கு தக்கவாறு அர்த்தம் சொல்லப்படுகிறது. அதாவது முதலில் ஒரு விஷயம், பின்ஞல் இரண்டு விஷயம் சொல்லப்பட்டிருந்தாலும், இரண்டாவது சொல்ப்படுவதை பாதித்து முதலில் சொல்லப்படுவதற்கே முக்யத்வம்

சொல்லப்படுவதும் உண்டு. ஆனுல் இரண்டிற்கு மேல் பின்னுல் நிறைய சொல்லப் படுமானுல் முன்னுல் சொல்லப்படுவதை மாற்றி அர்த்தம் செய்யப்படவேண்டும். உபக்ரமம் என்பது மிகக் குறைவாக அல்பதரமாக இருந்தால் மாற்றலாம். சில இடங்களில் வாக்யஸேஷத்தை அனுசரித்து அனேகமாக இருந்தால் உபக்ரமத்தை மாற்றி உபஸம்ஹாரம் பலவத் என்று ப்ராபல்யம் சொல்லாம்.

'அந்தர்யாமி' என்ற பதம் பஞ்ச கோசங்களுக்கு உள்ளே இருக்கிறது என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றது. ஆனுல் "ஏஷத ஆத்மா அந்தர்யாமி அம்ருத:" என்ற வாக்ய ஸேஷத்தினுல் 'அந்தர்யாமி' என்ற பதம் ஆத்மாவையே குறிக்கின்றது என்றும் பஞ்சகோசத்தை குறிப்பிடவில்லையென்றும் அறியப்படுகிறது. ஏனெனில் பின்னுல் இருக்கின்ற வாக்யம் சேதனன்என்றேதெரிவிக்கின்றதால் மறறவைகளை விட்டு ஆத்மா என்றே 'அந்தர்யாமி' சப்தத்திற்கு அர்த்தம் செய்யப்படுகிறது. இதேபோல் 'ஆகாச:தல்லிங்காத்' என்ற அதிகரணத்திலும், 'அத ஏவ ப்ராண': என்ற அதிகரணத்தினுலும், அதற்கு அடுத்த 'ஜ்யோதிஸ் சரணுபிதானுத்' என்ற அதிகரணத்தினுலும் ஆகாசம்-ப்ராணன், காயத்திரி என்ற சப்தங்கள் முதலில் சொல்லப்பட்டிருந்தாலும், "ஸர்வாணி ஹவா இமானி பூதானி" என்றும் "த்ரிபாதஸ்ய அம்ருதம்திவி" என்ற வாக்ய ஸேஷங்களை விசாரித்து, அதிலுள்ள பல காரணங்களைக் கொண்டு ஆகாச சப்தம் பூதாகாசமில்லை என்றும் ப்ராண சப்தம்ும் முக்ய ப்ராணனை குறிக்கவில்லை என்றும், காயத்ரி சப்தமும் மந்த்ர விசேஷத்தைக் குறிப்பிடவில்லை என்றும், எல்லாம் லக்ஷணையாக ப்ரஹ்மத்தையே குறிக்கின்றது என்றும் தீர்மானிக்கப்படுகிறது.

**122.** அவதாரிகை :

இவ்விதம் சொல்லப்பட்டபோதிலும், வேருெரு இடத்தில் உபக்ரம வாக்யம் அல்பமாகவும் உபஸம்ஹார வாக்யத்தில் அனேகமாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. 'ஆத்மாக்ரஹீதிதர இதர வத்துத்தராத்' என்ற சூத்ரம், உபக்ரமத்தில் அல்பமாக நிர் விசேஷ ஆத்மாவைப் பற்றி தெரிவிக்கிறது. அதன் பிறகு உபஸம்ஹாரத்தில் ஸவிஸேஷஸ்வரூபத்தை மிகுந்த அளவில் தெரிவிக்கின்றது. இதில் பின்னுல் சொல்லப்படுவதைக் கொண்டு முன்னுல் சொல்லப்படுவதைத்தானே பாதிக்க வேண்டும் ? என்ருல் அதற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

अथ यद्युपक्रमणमल्पमपि प्रतिपाद्यवस्तुविषयं भवति ।
अविवक्षितार्थविषयं चरमं भवति प्रभूतमपि बाध्यमद:

ச்லோகார்த்தம் : உபக்ரமத்தில் சொல்லப்படும் விஷயங்கள் குறைவாக இருந்த போதிலும், அதில் ப்ரதிபாத்ய விஷயம் இருக்குமானுல், உபஸம்ஹாரத்தில் சொல்லப் படுகின்ற ப்ரதிபாத்யமாக இல்லாத விஷயம் அதிகமாக இருந்த போதிலும் அவைகள் பாதிக்கப்படுகிறது.

வ்யாக்யானம் : முன்னுல் சொல்லப்பட்ட ந்யாயத்திற்கு அபவாதமாக வேறு ஒரு ந்யாயம் சொல்லப்படுகிறது. உதாரணமாக ஐதரேய உபநிஷயத்தில் "ஆத்மா வா இதம்

ஏகஎவஅக்ர ஆஸீத் ந அன்யத் கிஞ்சன மிஷத்” என்று முதலில் ஒரு வாக்யம் ஆத்மா அத்வைதம் என்று தெரிவிக்கின்றது. அதற்கு மேல் “ஸ இமான் லோகான் அச்ருஜத” என்று ச்ருஷ்டியை வர்ணிக்கின்ற வாக்யங்கள் அனேகம் இருக்கின்றது. இந்த விதம் உபக்ரமத்தில் சொல்லப்படும் வாகயம் அல்பமாக இருந்த போதிலும், ‘ஆத்மா வா இதம் ஏக ஏவ அக்ர ஆஸீத்’ என்பதில் ‘ஏக ஏவ’ என்ற ஏவகாரத்தினுல் ‘ஆத்மா ஏகம்’ என்பதை தாத்பர்யத்துடன் போதிக்கின்றது. அத்வைதம் தான் தத்வம் என்பதை தெரிவிக்கின்ற வாக்யம் தான் புருஷார்த்தம். ஆகவே விவக்ஷிதார்த்தமான மத்தியிலிருக்கின்ற இந்த ச்ருதி வாக்யத்தை அனுசரித்தே பின்னுல் சொல்லப்படும் வாக்யத்திற்கு அர்த்தம் செய்யப்பட வேண்டும். ஏனெனில் பின்னுல் சொல்லப்படும் வாக்யம் நிறைய இருந்த போதிலும் ஸவிஸேஷ ப்ரஹ்மத்தையே தெரிவிக்கின்றதாலும், விவக்ஷிதார்த்தத்தை தெரிவிக்காததாலும் ச்ருதியின் தாத்பர்யத்தை அனுசரித்து இந்த இடத்தில் அல்ப்பமாக இருக்கின்ற பூர்வ வாக்யத்தினுல் அதிகமாக இருக்கின்ற உத்தர வாக்யம் பாதிக்கப்படுகின்றது.

ஆகையால் வாக்யம் எப்படி இருந்த போதிலும் அதனுல் தெரிவிக்கப்படும் தாத்பர்ய விஷயத்தைக் கொண்டு அதற்கே முக்யத்வம் சொல்லப்படவேண்டும் என்ற ந்யாயத்தைக் கொண்டு தீர்மானிக்கப்பட வேண்டும்.

**123.** அவதாரிகை :

ச்ருதி ப்ரபலம், ப்ரத்யாக்ஷாதி ப்ரமாணங்கள் துர்பலம் என்று நிரூபணம் செய்வதற்காக, ப்ரஸங்கவஸாத் பல விஷயங்கள் விசாரிக்கப்பட்டது. மேலும் வேதாந்தம் என்பது மிக நெருங்கிய (அதிஸமீபமுள்ள) வஸ்துவை போதிக்கின்றதால் ப்ரத்யாக்ஷாதிகளை ச்ருதி பாதிக்கின்றது என்பதை உதாகரணத்தின் மூலம் தெரிவிக்கப்படுகிறது. ஸமீபத்தில் இருக்கின்ற அக்னியென்பது உஷ்ணம் என்று ப்ரத்யக்ஷம் தெரிவிக்கின்றது. அனுமானத்தினுல் அக்னி குளிர்ச்சியாகத்தான் இருக்கிறது. ஏனெனில் த்ரவ்யத்வாத், ஜலம் போல என்று சாதிக்கப்படுமானுல், ஸன்னிஹிதமான ப்ரத்யக்ஷத்தைக்கொண்டு அனுமானம் பாதிக்கப்படுகிறது என்பது போல் ச்ருதி ப்ரத்யக்ஷத்தை பாதிக்கின்றது.

**ச்லோகம் :**

आसन्नवस्तुविषयेण यथाऽक्षजेन बाधो भवत्यनुमितेर्व्यवधानयोगात् ।
प्रत्यक्त्वमात्रविषयेण तथाऽऽगमेन युक्तोऽक्षजादिविषयावगमस्य बाधः

**ச்லோகார்த்தம் :** ஸமீபமுள்ள வஸ்துவை போதிக்கின்ற ப்ரத்யக்ஷத்தினுல் தூரத்திலுள்ள வஸ்துவை போதிக்கின்ற அனுமிதி என்பதற்கு பாதம் ஏற்படுகிறது. அவ்வாறே ப்ரத்யகாத்மாவை போதிக்கின்ற ஆகமத்தினுல், ப்ரத்யக்ஷ விஷய ஞானத்தின் பாதம் என்பது பொருந்தக் கூடியதேயாகும்.

**வ்யாக்யானம் :** ஸன்னிஹிதார்த்தத்தை தெரிவிக்கின்ற ச்ருதியே, ப்ரத்யக்ஷாதிகளைக் காட்டிலும் ப்ரபலம் என்பதால் ச்ருதி ப்ரத்யக்ஷத்தை பாதிக்கின்றது. தூரத்திலுள்ள விஷயங்களை போதிக்கின்ற ப்ரத்யக்ஷாதி ப்ரமாணம் துர்பலம். ஏனெனில் ஸமீபத்தில் இருக்கின்றஅக்னியென்பதில் கைவைத்தால் சுடுகின்றது என்ற ஞானம் ஏற்படுகின்றது. இவ்விதம் ப்ரத்யக்ஷமாக அறியப்படும் ப்ரமாணம், வ்யவஹிதமான விஷயத்தை

போதிக்கின்ற அனுமானம் என்பதை பாதிக்கின்றது. அனுமானம் என்பது வ்யாப்பயமான லிங்கம் முதலானவைகளை ஸஹாபமாகக் கொண்டு அதன் விஷயத்தை போதிக்கின்றது. ஆனால் தத்வமஸ்யாதி ச்ருதி வாக்யங்களினால் போதிக்கப்படும் விஷயம் ப்ரத்யகாத்மஸ்வரூபம் அத்வைதம் என்ற ஞானம். ப்ரத்யக்ஷாதிகளால் போதிக்கப்படுவது த்வைத ஞானம். கர்த்தா, போக்தாவென்றும் ப்ராஹ்மணன் க்ஷத்திரியன் என்றும், தனிகன் என்றும் அறியப்படுவதெல்லாம் ஆரோபிதஸ்வரூபம். உபாதியினால் ஏற்பட்ட ஸ்வரூபமானதால் ப்ரத்யக்ஷாதிகள் வ்யவஹிதார்த்தமான ஸ்வரூபத்தையே தெரிவிக்கின்றது. அதனால் ச்ருதி என்பதால் ப்ரத்யக்ஷாதிகள் பாதிக்கப்படுகிறது.

**124.** அவதாரிகை :

ஸர்வ ப்ரமாணங்களுக்கும் உபஜீவ்யமான சைதன்ய ஸ்வரூபத்தை போதிக்கின்ற தால் உபநிஷத் ப்ரமாணமே ப்ரபலம். மற்ற எல்லா ப்ரமாணங்களும் உபநிஷத் என்ற ப்ரமாணத்தை (ஆச்ரயித்து) அண்டி இருக்கின்றதால் உபநிஷத் ப்ரமாணமே ப்ரத்யக்ஷாதிகளை பாதிக்கின்றது.

ச்லோகம் :

**किं चाऽऽम्नायवचः प्रमेयबलतः सर्वं प्रमाणान्तरं स्वार्थं साधयतीति तत्सकलमेवाऽऽयत्तमस्मिन्भवेत् ।**
**यद्यत्राऽऽयतते विरोधसमये तेनास्य तद्बाधने सामर्थ्यं न च विद्यते श्रुतिवचोबाधो यथा हि स्मृतेः**

ச்லோகார்த்தம் : வேதாந்த வாக்ய ப்ரமேயமான ஆத்மாவின் பலத்தினால்தான்மற்ற ப்ரமாணங்கள், தன்னுடைய விஷயத்தை தெரிவிக்கின்றது. ஆகவே, எல்லா ப்ரமாணங்களும் வேதாந்த ப்ரமாணத்தை ஆச்ரயித்தே இருக்கின்றது. விரோதம் ஏற்படுகின்றபோது எதை ஆச்ரயித்து எது இருக்கின்றதோ அதற்கு அதை பாதிப்பதற்குரிய ஸாமர்த்யம் கிடையாது. எவ்விதம் ஸ்ம்ருதி வாக்யத்தினுடைய பாதம் ஏற்படுவதில்லையோ அதுபோலாகும்.

வ்யாக்யானம் : தூரம் என்று சொல்லப்படும் வ்யவஹிதார்த்தத்திற்கும், ஸமீபமாக இருக்கின்ற அவ்யவஹிதார்த்தத்திற்கும் விரோதம் ஏற்படுமானால் வ்யவஹிதார்த்தத்தை போதிக்கின்ற ப்ரமாணமே ஸன்னிஹித விஷயத்தை போதிக்கின்ற ப்ரமாணத்தினால் பாதிக்கப்படுகிறது என்ற ந்யாத்தைக் கொண்டு வேதாந்தமே ப்ரபலமான ப்ரமாணம் என்று முன்னால் சித்தம் செய்யப்பட்டது. இப்போது உபஜீவ்யம், உபஜீவகம் என்ற இரண்டிற்கும் விரோதம் ஏற்படுமானால் உபஜீவ்யத்தினால் உபஜீவகம்தான் பாதிக்கப்படும் என்ற ந்யாத்தைக்கொண்டு வேதாந்தம் ப்ரபலம் என்று சித்திக்கின்றது. ப்ரத்யக்ஷாதிகள் ஸ்வயமே ஜடம். அந்த கரண அவச்சின்ன சைதன்யத்தைக் கொண்டே ப்ரத்யக்ஷாதிகள் அதன் விஷயத்தை சாதிக்க முடியும். ஸம்வித் என்பது ஆதி அந்த மற்ற நித்ய சைதன்ய ஸ்வரூபம், ஸர்வ சாக்ஷி "ஆத்மனைவாயம் ஜ்யோதிஷாஸ்தே" என்று சொல்லப்பட்டபடி வேறு எந்த ப்ரகாசமும் இல்லாதபோதும் ஆத்மஸ்வரூபப்ரகாசமே ஸர்வத்தையும் ப்ராகாசிக்கச் செய்கிறது என்று ஸ்வயம் ஜ்யோதி ப்ராஹ்மணம் தெரிவிக்கின்றது. இவ்விதம் வேதாந்த வாக்யங்களுக்கு ப்ரமேயமாக ஸ்வயம் ஜ்யோதிஸ்வரூபமான ஆத்மாவே இருக்கின்றது என்பதால் கூடஸ்த்தமாகவும் ஸர்வ சாக்ஷியாகவும்

இருக்கின்ற ஆத்ம சைதன்யத்தினுல் தான் ப்ரத்யாக்ஷாதி ப்ரமாணங்களும் அதன் விஷயங்களே தெரிவிக்க வேண்டும். கர்ம காண்ட விஷயங்களேயும், அதை அனுஷ்டிக்கின்ற கர்த்தாவும் சைதன்ய பலத்தினுல்தான் அந்தந்த விவகாரங்களேச் செய்யமுடியும். சைதன்ய அபேக்ஷையின்றி எந்த விவகாரமும் நடைபெருது என்பதால் சைதன்யமே உபஜீவ்யம் மற்றவைகள் உபஜீவகம். ஸ்ம்ருதி என்பது ச்ருதியை ஆச்ரயித்து இருப்பதால் ச்ருதியை ஸ்ம்ருதி பாதிக்க முடியாது. அதுபோல் எது ஒன்று எதை ஆச்ரயிக்கின்றதோ அந்த ஆச்ரயத்தை அது பாதிக்க முடியாது.

**125.** அவதாரிகை :

இந்த்ரியங்களுக்கும் விஷயங்களுக்கும் ஸம்பந்தம் ஏற்படுகின்றபோதே ப்ரத்யக்ஷ ஞானம் ஏற்படுகின்றது. வ்யாப்தியைக்கொண்டு ஏற்படும் ஞானம் அனுமானம். உபநிஷத் வாக்ய ஜன்ய ஞானமே ப்ரத்யக்ஷாதி ப்ரமாண ஜன்யமான ஞானத்தை பாதிக்கின்றது.

ச்லோகம் :

ब्रह्मज्ञानसमुद्भवं ग्रहगणं सातिग्रहं ब्रह्मण: स्वाकारग्रहणेन वेदशिरसो जाता मतिर्बाधते ।
विद्या वस्तुबलेन जन्म लभते माया तु निर्वस्तुका सा तामुद्भवमात्रत: क्षपयति ध्वान्तं यथा भास्कर:

ச்லோகார்த்தம் : வேதாந்தத்திலிருந்து ஏற்படும் ப்ரஹ்ம ஞானம் ப்ரஹ்மத்தின் ஆகாரத்தை க்ரஹிக்கின்றதால், ப்ரஹ்ம அஞ்ஞானத்தினுல் உண்டான இந்த்ரியங்கள், விஷயங்கள் என்ற இவை இரண்டையும் பாதிக்கின்றது. வித்யையானது அதன் விஷயத்தின் பலத்தினுல் ஏற்படுகின்றது. அவித்யை என்பது (ஸத்ய) விஷயமே இல்லாமல் இருக்கின்றது. வித்யை - ஏற்படுகின்ற மாத்திரத்தினுல் அவித்யை என்பதை நாசம் செய்கின்றது. எவ்விதம் இருள் என்பதை சூர்யன் நாசம் செய்கின்றதோ அதுபோலாகும்.

வ்யாக்யானம் : இந்த்ரியங்கள்தான் ஜீவர்களே மேல் நிலேக்குச் செல்லவிடாமல் கீழே இழுக்கின்றது. அதனுல்தான் பந்தம் ஏற்படுகிறது என்பதால் இந்த்ரியங்களுக்கு (க்ருண்ணாந்தி, பத்னந்திஇதிகரஹம்) க்ரஹம் என்று பெயர். இந்த்ரியங்கள் விஷயங்களே அறிவிக்கின்றதால்தான் விஷயங்கள் ஜீவர்களே ஆகர்ஷிக்கின்றது. விஷயங்கள் இருந்தால்தான் அதை இந்த்ரியங்கள் க்ரஹிக்கும் என்பதால் விஷயங்களுக்கு அதிக்ரஹம் என்று பெயர். வேதசிரஸ் என்று சொல்லப்படும் மஹா வாக்யங்களிலிருந்து ஏற்படும் ஞானத்தினுல்தான் க்ரஹம் அதிக்ரஹம் என்பவைகள் பாதிக்கப்படுகிறது. "இந்த்ரோ மாயாவி புரு ரூபாஈயதே" என்ற வாக்யங்கள் மாயா கார்யம் ப்ரபஞ்சம் என்பதால் உண்மையில் கிடையாது என்றும் மித்யை என்றும் தெரிவிக்கின்றது.

பூர்வ : ப்ரமாணம் என்ற தன்மை ப்ரத்யக்ஷாதிகளுக்கும் சாஸ்திரத்திற்கும் இருக்கின்றது. அதனுல் சாஸ்திரம், ப்ரத்யக்ஷாதிகளே பாதிப்பதாக எப்படிச்சொல்ல முடியும் ?

**சித்தா :** இரண்டும் ப்ரமாணமாக இருந்தாலும் சாஸ்திரம் என்பதே அபாதிதமான விஷயத்தை போதிக்கின்றது. ப்ரத்யக்ஷாதிகளுக்கு காரணமான மாயை என்பது அதன் கார்யமான மித்யா ப்ரபஞ்சத்தையே தெரிவிக்கின்றதால் வித்யை ஏற்பட்டதும்

அவித்யை, அதன் கார்யமான ஸர்வத்தையும் நிவர்த்திக்கின்றதால் ப்ரத்யக்ஷாதிகள் துர்பலம் சாஸ்திரமே ப்ரபலம்.

பூர்வ : ஞானத்தினுல் ப்ரபஞ்சமும் அதன் காரணமும் நாசமடைவதாகச் சொல்லப்படுமானுல், எத்தனேயோ காலமாக வேதாந்த ச்ரவணம் செய்தவர்களுக்கும் ப்ரபஞ்சம் பாதிக்கப்பட்டதாக அறியப்படவில்லேயே ?

சித்தா : அத்வைத ப்ரஹ்மாகாரமே ஆத்மாவிற்கு ஸ்வஆகாரம். இதுவே ஆத்மாவின் அசாதாரணத் தன்மை. இப்பேர்ப்பட்ட ஆத்ம ஸ்வரூபத்தை ப்ரகாசப்படுத்து கின்ற தன்மை உபநிஷத்திலுள்ள மஹா வாக்யங்களுக்கே இருக்கின்றது. ஆனுல் ச்ரவணம் செய்கின்றவர்களுக்கு சித்த தோஷம் இருக்குமானுல் ஏற்பட்ட ஞானம் பலனேக் கொடுப்பதற்கு ப்ரதிபந்தகமாக இருக்கின்றது. (தடை செய்கின்றது) ஆகவே ராகத்வேஷாதிகளுடன் கூடிய சித்தம் அஸம்பாவனே விபரீதபாவனேகளுடன்கூடியதாக இருப்பதால் ஆத்ம ஞானத்தின் பலன் ஏற்படவில்லே என்று சொல்லவேண்டுமே அன்றி வேதாந்த வாக்ய ஜன்ய ஞானத்திற்கு அஞ்ஞானத்தையும் அதன் கார்யத்தையும் போக்கக் கூடிய சக்தி இல்லே என்று சொல்ல முடியாது.

பூர்வ : ப்ரஹ்மாகாரவ்ருத்தி என்பதும் அஞ்ஞான கார்யமான புத்தியின் பரிணுமமாக இருக்கின்றதால் ப்ரஹ்மாகார ஞானம் என்பதும் அஞ்ஞான கார்யம் என்றே சொல்ல வேண்டும். அதனுல் எப்படி அஞ்ஞானத்தை (அனுத்மாவான) ப்ரஹ்மாகார வ்ருத்தி என்பது நிவர்த்திக்க முடியும் ?

சித்தா : ஞானம் என்பது விஷயம் எப்படி இருக்கின்றதோ அந்த ஆகாரமாகவே ஞானம் ஏற்படுகின்றதால் ஞானம் என்பது வஸ்து தந்த்ரம். அதனுல் இந்த கேள்விக்கே இடமில்லே. விஷயம் எதுவோ அதன் பலத்தைக் கொண்டே அந்தந்த ஞானம் ஏற்படுகிறது. ஆகையால் வஸ்து பலத்தைக்கொண்டே பலம், துர்பலம், என்பதை நிச்சயிக்க வேண்டும். ஜடமானமாயை அதன் கார்யம் என்பதெல்லாம் உண்மையில் இல்லாத காரணத்தினுல் அதன் ஸ்வரூபம் எதுவும் விஷயமாகிறதில்லே என்பதால் அது துர்பலம். அக்ண்டாகாரவ்ருத்தியில் ஸ்வப்ரகாசமான அபாதிமான வஸ்து ஸ்வரூபம் விஷயமாகின்றதால் (ப்ரகாசிக்கின்றதால்) அகண்டாகாரவ்ருத்தி ஞானம் என்பது மற்ற மித்யாவஸ்துக்களின் ஞானத்தை பாதிக்கின்றது என்றும் சாஸ்திர ஜன்ய ஞானம் அனுத்ம வஸ்துக்களே க்ரஹிப்பதில்லே என்றும் சொல்லப்படுகிறது. ஆகையால் வித்யை, அவித்யை அதன் கார்யம் எல்லாவற்றையும் பாதிக்கின்றது என்பதால் சாஸ்திர ப்ரமாணம் பலவத் என்று சொல்லப்படுகிறது. வஸ்து ஞானத்தினுல் அவஸ்து ஞானம் பாதிக்கப்படுவதால் அதை தெரிவிக்கின்ற ப்ரமாணங்கள் துர்பலம் என்று சொல்லப்படுகிறது.

**126. அவதாரிகை :**

இவ்விதம் இருந்தபோதிலும் அனேக ஜன்மாக்களில் ஏற்பட்ட ஸம்ஸ்காரம் த்ருடமாக இருக்கின்றதால், வித்யை ஏற்பட்டும் கூட ஸம்ஸரரம் நிவர்த்திப்பதாக அறியப்படவில்லேயே ? என்ருல்,

ச்லோகம் :

रागद्वेषप्रशाखं विषयगुणसमुद्भासिधीवृत्तिशाखं धर्माधर्मप्रवृत्तिप्रचुरसुखसमुद्वेगभोगप्रवालम् ।
छिन्धाः संसारवृक्षं निशितमतिमहाशस्त्रनिक्षेपदक्षः प्रत्यक्त्वस्थलीगं निबिडतमतमोमूललब्धप्ररोहम्

ச்லோகார்த்தம் : ராகத்வேஷங்கள் என்ற பெரிய கிளைகளை உடையதும் விஷயங்களை ப்ரகாசம் செய்கின்ற புத்தி வ்ருத்திகள் என்ற சிறிய கிளைகளை உடையதும் தர்மாதர்மம் என்ற ப்ரவ்ருத்திகளால் ஏற்படும் சுகதுக்கபோகங்கள் என்ற தளிர்களை உடையதும், ப்ரத்யகாத்மாவென்ற ஆதாரத்தில் இருக்கின்றதும் நிபிடமான அவித்யையிலிருந்து உற்பத்தியாகி இருக்கின்றதுமான ஸம்ஸார வ்ருக்ஷம் என்பதை சூக்ஷ்ம புத்தி என்ற மஹா அஸ்திரத்தை ப்ரயோகம் செய்வதில் ஸமர்த்தனாக இருக்கின்ற நீ, நாசம் செய்வாயாக.

வ்யாக்யானம் : வித்தையினால் அவித்யை என்பது நிவர்திக்கின்றது என்றே சொல்லவேண்டும். ஸம்ஸாரம் என்பது ஒரு வ்ருக்ஷத்தைப் போன்றது. இந்த வ்ருக்ஷத்திற்கு ஆவரண விக்ஷேப ரூபமாக இருக்கின்ற அஞ்ஞானம் தான் பீஜம். இதுவே ஸம்ஸார வ்ருக்ஷத்திற்கு மூலகாரணம். இந்த அஞ்ஞானம் ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தில் அத்யஸ்த்தம். இந்த அஞ்ஞானமென்ற பீஜத்திலிருந்தே ஸம்ஸாரம் எனற் பீஜம் முளைக்கின்றது. இந்த பீஜத்திற்கு பாஹ்யமான ஜலமோ மண் முதலானவைகளோ எதுவுமே தேவையில்லை. அஞ்ஞானம் ஒன்றே அதன் சக்திகளைக் கொண்டு வ்ருக்ஷம் முளைப்பதற்கு போதுமான காரணமாக இருக்கின்றது. அவித்யை என்ற க்ஷேத்ரத்தில் முளைக்கின்ற இந்த வ்ருக்ஷத்திற்கு ராகத் வேஷாதிகளே கிளைகள் என்று பாதஞ்சலி யோக சூத்ரத்திலும் சொல்லப்படுகிறது. ராகத்வேஷாதிகள் இரண்டுமே வ்ருக்ஷத்தின் பெரிய கிளைகள். விஷயங்களில் ஏற்படும் ஸோபனை அத்யாஸம் என்பது நம்மால் கற்பிக்கப்படுகிறது. ஆகவே அனர்த்தகரமானவைகளையும் சுகம் என்று நினைக்கின்ற புத்திவ்ருத்திகள் சிறிய கிளைகள். இது ஸோபனம், இது அஸோபனம் என்று கல்பிப்பதற்கே ராகத்வேஷம்தான் காரணம் என்பதால் புத்தி வ்ருத்திகளை சிறிய கிளைகள் என்று சொல்லப்படுகிறது. அந்த கிளைகளில் தர்மா தர்மம் என்பதே துளிர்கள். வாஸனைவஸாத் இது நல்லது இது கெட்டது என்று தர்மாதர்மங்களில் ப்ரவர்த்திக்கச் செய்கின்ற புத்திவ்ருத்தி கணக்கில் அடங்காது. இவ்விதம் தர்மாதர்மங்களினால் ஏற்படும் சுக துக்க போகத்தினால் ஏற்படும் அனுபவம். இந்த அனுபவங்களே துளிர்கள். ஆகவே வேதாந்த விசாரத்தினால் ஏற்பட்ட த்ருட புத்தி என்ற பலமான கோடாலியால்தான் இந்த ஸம்ஸார வ்ருக்ஷத்தை வேறுடன் நாசம் செயய் வேண்டும். புத்தியானது ஆத்ம ஞானத்தை அடைகின்ற விஷயத்தில் ஏகாக்ரமாகவும் த்ருடமாகவும் இருக்க வேண்டும். அலக்ஷ்யமாக இருந்தால் இந்த வ்ருக்ஷத்தை வெட்ட முடியாது. ஆகவே ஞானம்ஒன்றினால்தான் அஞ்ஞானம் அதன் கார்யம் என்பதெல்லாம் நாசத்தை அடைய முடியும் என்பதால் அலட்சியமின்றி த்ருடமான ஞானத்தை ஸம்பாதிக்கவேண்டும்.

127. அவதாரிகை :

'மாயாந்து ப்ரக்ருதிம்வித்தி' (ச்வேதா - 4:10) என்பது போன்ற பல ச்ருதிவாக்யங்கள் மாயை என்பதிலிருந்தே இந்த ஸம்ஸாரம் உண்டாகிறது என்று தெரிவிக்கின்றதால் அவித்தைதான் ஸம்ஸாரம் என்பதற்கு மூலகாரணம் என்றும், வித்யையினுல் ஸம்ஸாரம் நிவர்த்திக்கின்றதென்றும் சொல்வது சரியல்ல.

ச்லோகம் :

प्रत्यग्वस्तुन एव तत्र विषये माया तमः कारणं ध्वान्तं बीजमबोध इत्यपि गिरा विद्यैव संकीर्त्यते ।
तस्या एव विलास एष भवता गुर्वादिभेदान्वितः संक्लृप्तो न तु विद्यते पृथगसौ संध्ये यथा धामनि

ச்லோகார்த்தம் : ப்ரத்யக் வஸ்துவை ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்ட அவித்தையானது, மாயை, தமஸ், காரணம், த்வாந்தம், பீஜம், அபோதம் என்ற வார்த்தைகளால் சொல்லப்படுகின்றது. குரு முதலான பேதங்களுடன் கூடிய இந்த ப்ரபஞ்சமானது, அந்த அவித்தையயின் பரிணமமேயாகும். அது உன்னுல் கல்ப்பிக்கப்பட்டது என்பதால் அது வேருக இல்லே. எப்படி ஸ்வப்னுவஸ்த்தையில் ப்ரபஞ்சம் வேருக இல்லேயோ அதுபோலாகும்.

வ்யாக்யானம் : ஆத்ம விஷயகமான அவித்யை என்பதே மாயை என்றும் தமஸ் என்றம் த்வாந்தம் என்றும் அஞ்ஞானம் என்றும் பீஜம் என்றும் பலவிதமான சப்தங்களினுல் சொல்லப்படுகிறது. அதனுல் அவித்யை என்பதும் மாயை என்பதும் வேறல்ல. 'தரத்யவித்யாம் விததாம் யோகமாயாம்' என்ற ஸ்ம்ருதி வாக்யம் அவித்யை என்ற மாயையை யோகியானவன் தாண்டுகிருன் என்று தெரிவிக்கின்றது. ஆகவே ஆத்ம ஸ்வரூப ஆவாரகமான அவித்யை என்பதே ஆத்மாவை ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்டிருக்கின்றது. இவ்விதம் பல பெயர்களால் சொல்லப்படும் அவித்யை என்பதே ஜகத் காரணம் என்று ச்ருதி ஸ்ம்ருதி புராணங்கள் தெரிவிக்கின்றது. த்வைத ப்ரபஞ்சமான இந்த ஸம்ஸாரத்திற்கு அஞ்ஞானம் என்பதே காரணம் என்பதற்கு ச்ருதிகளே ப்ரமாணம். இவ்விதம் அவித்யா கார்யமான இந்த ப்ரபஞ்சம் குருவென்றும் சிஷ்யனென்றும் பல விதமான பேதங்களுடன் உன் சங்கல்பத்தினுலேயே சிருஷ்டிக்கப்படு கிறது. உண்மையில் ப்ரத்யகாத்மாவிற்கு வேருக இந்த ப்ரபஞ்சம் என்பது இல்லே.

ஸ்வப்ன காலத்தில் அவித்யை அதன் கார்யமான நித்ரையென்பதால் குரு சிஷ்யர் முதலான ஸர்வ பேதங்களுடைய ஸர்வ ப்ரபஞ்சமும் எப்படி தோற்றுவிக்கப்படு கிறதோ அதே போல் ஜாக்ரத் ப்ரபஞ்சமும், அவித்யா கல்பிதம் என்றே அறிய வேண்டும். மேலும் ஸ்வப்னப்ரபஞ்சம் என்பது எப்படி ஸ்வப்னம் காண்கின்றவனேயன்றி வேருக எதுவும் உண்மையில் இல்லேயோ அதேபோல் ஜாக்ரத் ப்ரபஞ்சமும் பார்க்கின்றவனுன உன்னேயன்றி வேருக எதுவும் உண்மையில் கிடையது. ஸர்வமும் அவித்யாவிலாஸம் என்பதால், வித்யை என்பதனுல்தான் ஸம்ஸாரம் நிவர்த்திக்கப்படவேண்டும்.

128. அவதாரிகை :

ஸ்வப்ன ப்ரபஞ்சம் தோஷத்தினுல் தோற்றுவிக்கப்படுகிறது என்பதும் அத்யஸ்த்தம் என்பதும் சாதாரண ஜனங்களும் அறிவார்கள். இவ்விதம் ஸ்வப்ன ப்ரபஞ்சம்

த்ரஷ்ட்டாவான ஆத்மாவைக் காட்டிலும் அன்யமில்லை என்பதற்காக, ஜாக்ரத் ப்ரபஞ்சம் என்பதும் ஸ்வப்னம் போல தோஷ ஜன்யமென்றோ அத்யஸ்த்தம் என்றோ யாருக்கும் அறியப்படவில்லை. அதனால் ஜாக்ரத் ப்ரபஞ்சம் உண்மையில் இல்லையென்று சொல்ல முடியாது.

**ச்லோகம் :**

**मुक्तामुक्तौ विद्वदज्ञौ त्वदन्यावकाशादिक्ष्मावसानं च विश्वम् ।**
**स्वाविद्योत्थस्वान्तनिष्पन्दनं तद्विज्ञातव्यं मा ग्रहीरन्यथैतत्**

**ச்லோகார்த்தம் :** முக்தன், பந்தன், ஞானி, அஞ்ஞானி என்று உனக்கு வேறாக தோன்றும் ஆகாசம் முதல் பூமி வரை உள்ள ப்ரபஞ்சம் இவை அனைத்தும் ஆத்ம அஞ்ஞானத்தினால் ஏற்பட்டிருக்கின்ற மனதினுடைய பந்தனமே (சலனமே) என்று அறிய வேண்டுமே அன்றி வேறு என்று அறியக்கூடாது.

**வ்யாக்யானம் :** ஜாக்ரத் ஸ்பவ்னம் என்ற இரண்டிற்கும் சிறிதளவு வித்யாஸம் இருந்த போதிலும் ஸ்வப்னம் போல் ஜாக்ரத் என்பதும் அத்யஸ்த்தம் தான் என்பதை ஏக ஜீவவாதத்தைக் கொண்டு அத்வைதம்தான் தத்வம் என்பதை ஸ்தாபனம் செய்வதற்காக பெருமுயற்சியுடன் திருஷ்டி சிருஷ்டி வாதத்தைக் கொண்டு பதில் சொல்லப்படுகிறது.

சுகர் முதலானவர்கள் முக்தர்கள் என்றும் மைத்ரன் முதலானோர் பந்தனென்றும், குரு என்பவர் வித்வான் என்றும், சிஷ்யன் சைத்ரன் அவித்வான் என்றும், தன்னைக் காட்டிலும் அநேக ஜீவர்கள் இருப்பதாகத்தோன்றும் சேதன ப்ரபஞ்சம் என்பதும் ஆகாசம் முதல் ப்ருதிவிபர்யந்தம் உள்ள அசேதன ப்ரபஞ்சம் என்பதெல்லாமே ஆத்ம அவித்யையினால் தான் தோற்றுவிக்கப்படுகிறது. அவித்யாகார்யமான அந்த:கரணத்தில் அனாதி காலமாக இருக்கின்ற வாஸனாவஸாத் எப்படி ஸ்வப்னம் தோற்றுவிக்கப் படுகிறதோ அதுபோல் ஜாக்ரத் ப்ரபஞ்சமும் வாஸனா வஸாத் தோன்றுகிறது என்றே சொல்ல வேண்டும்.

ஆத்மாவிற்கு மாயை ஒன்றே உபாதி. 'அஜாம் ஏகாம்' என்று ச்ருதி வாக்யமும் தெரிவிக்கின்றது. ஆகவே, உபாதி ஒன்று தான் என்றால் அதில் ப்ரதி பிம்பமும் ஒன்றாகவே இருக்க வேண்டும் என்பதால் ஏக ஜீவவாதம் என்பதை ஏற்றுக் கொள்வது தான் சுலபம் (லாகவம் சௌகர்யம்) ஜீவனுடைய அஞ்ஞானத்தினால் ஸர்வபேத ப்ரபஞ்சமும் கல்பிதம் என்றே அறிய வேண்டும். ஆகவே ஸ்வப்னத்தில் எப்படி அனேக போக்தாக்கள் இருப்பதாக அறியப்படுகிறதோ அதுபோல் முக்தன் பந்தன் குரு சிஷ்யன் வித்வான் அவித்வான் எனற பேதங்கள் இருப்பதாக அறியப்படுகிறது என்று சொல்வது பொருந்துகின்றதால் ஜீவர்கள் அனேகம் என்று சொல்லத் தேவை இல்லை. ஆகவே, அவித்யை ஏகம் என்பதால் அதில் ப்ரதிபிம்பிக்கின்ற ஜீவனும் ஒன்றே என்று ஒத்துக் கொள்ளலாம். ஆத்மா என்பதும் ஏகம், அவித்யை என்பதும் ஏகம் என்று சொல்லப்படுவதால் ஸமஷ்டி சரீரம் வ்யஷ்டி சரீரம் என்றும், பத்தன் முக்தன் என்ற பேதங்களும் அசேதனம் முதலான பேதங்களும் உண்மையில் இல்லை.

இவைகளுக்கெல்லாம் சாக்ஷி என்பதும் ஏகம் தான். சாக்ஷி என்பதும் ஆத்மா என்பதும் ஒன்றுதான். இரண்டும் வேறு என்று சொல்வதற்குரிய ப்ரமாணம் எதும் கிடையாது. ஸ்வப்னம் போல் ஜாக்ரத் காலத்திலும் அவித்யாகார்யமான அந்த:கரண பரிணமத்தினாலேயே ஜாக்ரத் ப்ரபஞ்சமும் தோன்றுகிறது. ஸ்வப்ன ப்ரபஞ்சம் எப்படி அவித்யை அதன் கார்யமான நித்ரை இருக்கின்ற பர்யந்தம் இருக்கின்றதோ அதுபோல் ஜாக்ரத் ப்ரபஞ்சமென்பதும் அவித்யை உள்ள பர்யந்தமே தோன்றும் என்று அன்வய வ்யதிரேகம் என்பதைக் கொண்டு அறியவேண்டும்.

**129.** அவதாரிகை :

அவித்யை என்பது ஏகம் என்று சொல்லப்படுமானால், ஒருவருக்கு முக்தி ஏற்பட்டால் எல்லோருக்கும் முக்தி ஏற்படவேண்டுமே? சாஸ்திரங்களில் சுகர், வாமதேவர் முதலானவர்கள் முக்தர்கள் என்றும் அதுபோல் வேறு சிலர் முக்தர், சிலர் பத்தர்கள் என்றும் சொல்லப்படுகிறது. வித்யை ஏற்படுமானால் அவித்யா நிவர்த்தி ஏற்பட்டு முக்தியை அடைகிறார்கள் என்றும் சாஸ்திரம் தெரிவிக்கின்றது. இவ்விதம் ச்ருதி யுக்தி அனுபவம் என்பவைகளுக்கு விரோதமாக ஏக ஜீவ வாதம் என்பதே சரி என்று பிடிவாதமாகச் சொல்வது எப்படி பொருந்தும்?

ச்லோகம் :

कालोऽतीतोऽनादिरेष्यन्ननन्तो मुक्तामुक्तौ तत्र पूर्वं तथोर्ध्वम् ।
तस्मादेतद्दुर्घटं शङ्कसे चेन्मा शङ्किष्ठाः स्वप्नदृष्टान्तदृष्टेः

ச்லோகார்த்தம் : கடந்த காலம் அனாதியாகவும், எதிர் காலம் அனந்தமாகவும் இருக்கின்றது. கடந்த காலத்திலும், எதிர் காலத்திலும், பந்தன், முக்தன் என்பவர்கள் இருக்கிறார்கள். ஆகையால் ஏக ஜீவ வாதம் என்பது பொருந்தாது என்ற ஸங்கை ஏற்படுமானால், அந்த ஸங்கை ஏற்பட வேண்டியதில்லை. ஏனெனில் ஸ்வப்ன த்ருஷ்டாந்தமே (போதுமானதாக) இருக்கிறது.

வ்யாக்யானம் : காலம் என்பது எப்போது ஆரம்பிக்கப்பட்டது என்றோ எப்போது முடிவு பெறுகிறது என்றோ அறியப்படவில்லை. ஆனாலும் இவ்விதம் அனாதியாக அனந்தமாக இருக்கின்ற காலத்தில் அதீதம், வர்த்தமானம், பாவி, என்று மூன்று காலங்கள் கல்பிக்கப்படுகிறது. இதே போல் அனாதி காலமாக பந்தம் மோக்ஷம் என்பது போன்ற விவகாரங்களும் தொடர்ந்து இருக்கின்றது என்பது ச்ருதி யுக்தி அனுபவம் என்பவைகளால் அறியப்படுகிறது என்று சொல்லப்படுவது சரியல்ல. ஏனெனில் ச்ருதியானது ஏற்கனவே இருக்கின்ற விவகாரங்களை அனுவாதம் செய்து இவைகள் உண்மையில் இல்லை என்று தெரிவிக்கின்றது. அதனால் இருப்பதாக அறியப்படும் விவகாரங்கள் ஸத்யம் என்று சொல்லப்படவில்லை. பேதம் என்பது ப்ரமாணத்தினால் அறியப்படவில்லை. ஸர்வ விவகாரமும் காலம் போன்று கல்பிதம் என்பதால் ஸ்வப்னம் போல் அஞ்ஞான பரிணமம் என்றே அறிந்து கொள்ள வேண்டும்.

**130.** அவதாரிகை :

ஜாக்ரத் விவகாரம், அதன் ஞானமென்பதெல்லாம் தீர்க்க காலம் இருக்கின்றதால், அல்ப காலமுள்ள ஸ்வப்ன வஸ்து போல் ஜாக்ரத் என்பதும் மித்யைதான் என்று எப்படி சொல்வது? என்ருல்,

ச்லோகம் :

सुप्तो जन्तुः स्वल्पमात्रेऽपि काले कोटीः पश्येद्वृत्तसंवत्सराणाम् ।
पश्येत्कोटीरेवमागामिनां च जाग्रत्काले योजयेत्सर्वमेतत्

ச்லோகார்த்தம் : ஸ்வப்னத்தில் இருக்கின்ற ஒரு புருஷன் ஸ்வப்ன காலத்திலேயே கடந்த அனேக வருஷங்களைக் காண்கிருன். வரப்போகின்ற அனேக வருஷங்களையும் பார்க்கின்ருன். இவை அனைத்தையும் ஜாக்ரத் காலத்திலும் பொருத்த வேண்டும்.

வ்யாக்யானம் : ஸ்வப்னத்திலும் அனேகம் பேர் இருப்பது போவும், குரு சிஷ்யன் முதலான பேதங்களும், எத்தனையோ வருஷங்கள், இவைகள் இருந்ததாகவும் எத்தனையோ காலம் இனி இருக்கப் போவதாகவும் எல்லா விவகாரங்களும் ஜாக்ரத்தில் நடக்கின்றது போலவே (அனுபவிக்கப்படுகின்றதால்) அறியப்படுகின்றதால் ஜாக்ரத், ஸ்வப்னம் என்பதில் எவ்வித வித்யாஸமும் கிடையாது.

**131.** அவதாரிகை :

மேலும் ஜாக்ரத் காலம் பற்றி விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

कालोऽनादिस्तत्र मुक्तः शुकादिः कालोऽनन्तो मोक्ष्यते तत्र चान्यः ।
इत्येवं ते बन्धमोक्षव्यवस्था संसिद्धिः स्यादापरात्मप्रबोधात्

ச்லோகார்த்தம் : கடந்த காலம் அனாதியானது. அதில் சுகாதிகள் முக்தர்கள் எதிர் காலம் அனந்தம் அதில் வேறு சிலர் முக்தி அடைவார்கள். இவவிதம் பந்த மோக்ஷ அவஸ்த்தை என்பது பரமார்த்த ஞானம் ஏற்படும் பர்யந்தம் சித்திக்கின்றது.

வ்யாக்யானம் : ஸ்வப்னம் என்ற நிலையில் அனேக விதமான பேத விவகாரங்கள் இருந்தபோதிலும் விழிப்பு ஏற்பட்டவுடன் ஜாக்ரத் நிலையில், நான் ஒருவன் தான் இருக்கின்றேன், ஸ்வப்னத்தில் பார்க்கப்பட்டது எதுவும் உண்மையில் இல்லையென்று எப்படி அறிகின்ருனே அதுபோல் ப்ரஹ்ம சாக்ஷத்காரம் ஏற்படும் பர்யந்தம் பந்தம் மோக்ஷம் என்ற பலவித பேத விவகாரம் இருந்த போதிலும், அவித்யை நீங்கினவுடன் அதனுல் ஏற்பட்ட விவகாரங்கள் அனைத்தும் உண்மையில் ஏதுவுமில்லை என்று அறியப்படுகிறது. ஆகவே ஸ்வப்னம் போல் ஜாக்ரத் என்று சொல்லப்படுவதில் பொருந்தாத விஷயமுமில்லை. இரண்டிற்கும் வித்யாஸமுமில்லை.

**132.** அவதாரிகை :

இந்த விதம் பந்தம் மோக்ஷம் முதலான பேத விவகாரம் என்பதெல்லாம் உண்மையில் கிடையாது என்று வேதாந்தத்தின் பரம சித்தாந்தம் பற்றி இது வரை

சொல்லப்பட்டது. இதே விஷயத்தில் வேறு மதஸ்த்தர்கள்அவரவர் அபிப்ருயத்தை தெரிவிக்கின்ருர்கள். அதைப் பற்றி மேலே விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

अज्ञानं सकलभ्रमोद्भवनकृत्पिण्डेषु सामान्यवज्जीवानां प्रतिबिम्बकल्पवपुषां बिम्बोपमे ब्रह्मणि ।
विद्वांसं पुरुषं जहाति भजते विद्याविहीनं नरं नष्टनष्टमिवाऽऽत्मपिण्डमधुना जातिस्तथैके जगुः

ச்லோகார்த்தம் : (பந்தம், மோக்ஷம், என்ற வ்யவஸ்த்தை பற்றி ஏழு விதமான விகல்பங்கள்) பிம்பத்திற்கு ஸமானமாக இருக்கின்ற ப்ரஹ்மத்தை விஷயமாகக் கொண்டதும், ஸர்வப்ரமத்திற்கும் காரணமாக இருக்கின்றதுமான அஞ்ஞானம் என்பது வ்யக்தியில் ஜாதி இருப்பது போல், ப்ரதி பிம்பத்திற்கு ஸமானமாக இருக்கின்ற ஜீவர்களிடம் இருக்கின்றது. எவ்விதம் ஜாதி என்பது நஷ்ட்டமான வ்யக்தியை விட்டு விட்டு, இருக்கின்ற வ்யக்தியை ஆச்ரயித்திருக்கின்றதோ அவ்விதமே அஞ்ஞானம் வித்வானை விட்டு விட்டு அவித்வானை ஆசரயிக்கின்றதென்று சிலர் சொல்கிருர்கள்.

வ்யாக்யானம் : அவித்யை, அதன் கார்யம் என்பவைகளால் ஏற்பட்ட விவகாரம் அவித்வானிடமே காணப்படுகிறது. ஆகவே வித்யை ஏற்படுமானுல் ஸ்வப்னம் போல் ஸர்வ விவகாரங்களும் நிவர்த்திக்கின்றது என்று நம்முடைய வேதாந்த சித்தாந்தம் சொல்லப்பட்டது. இந்தவிதம் சொல்லப்பட்ட வேதாந்த சித்தாந்தமே சரி என்று நிரூபணம் செய்வதற்காக வேறுபட்ட சில மதஸ்த்தர்களின் பக்ஷத்தை மேலே விளக்கப் படுகிறது.

அதாவது ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றே என்றும், உபாதி பேதத்தினுல்தான் பேத விவகாரம் என்பதை நாங்களும் ஒத்துக் கொள்வதால் அத்வைதமே தத்வம் என்பதில் எவ்வித ஹானியும் கிடையாது.

ஸாதாரணம், அஸாதாரணம் என்ற இரண்டுவித ரூபமாக இருக்கின்ற ஸர்வத்வைதப்ரபஞ்ச ப்ரமம் ஏற்படுவதற்கு அஞ்ஞானம் ஒன்றே காரணம். ப்ரஹ்ம விஷயகமான அஞ்ஞானம் என்பது ஏகமாக இருந்தபோதிலும் இந்த அஞ்ஞானம் ஜீவனை ஆச்ரயித்தே இருக்கின்றது. பிம்பஸ்தானீயமான ப்ரஹ்ம விஷயகமான அஞ்ஞானம் என்பது ஜீவனிடமே இருக்கின்றதால் ஜீவனை ஆச்ரயித்தே அஞ்ஞானம் இருக்கின்றது. ஜீவன் என்பது ப்ரதிபிம்பஸ்தானீயமாக இருக்கிறது என்ருலும் ஜீவர்கள் அனேகம் என்றே சொல்ல வேண்டும். ஆகவே அஞ்ஞானம் ஸர்வஜீவர்களையும் ஆச்ரயித்தே இருக்கின்றது என்று சொல்கிருர்கள்.

அஞ்ஞானம் ஏகம் என்ருல் அநேக ஜீவர்கள் எப்படி இருக்க முடியும்? என்ருல், அதற்கு த்ருஷ்ட்டாந்தம் சொல்லப்படுகிறது.

கோத்வம் என்ற ஜாதி ஏகம் தான். ஆனுல் ஒவ்வொரு வ்யக்தியிலும் எப்படி கோத்வம் என்பது தொடர்ந்து இருக்கின்றதோ அதுபோல் அஞ்ஞானம் ஏகமாக இருந்தாலும் அந்தந்த வ்யக்தியில் அஞ்ஞானம் தொடர்ந்து இருக்கின்றதால் ஒவ்வொரு ஜீவனிடமும் அஞ்ஞானம் இருக்கின்றது. எந்த ஜீவனுக்கு வித்தையினுல் அவித்யை நிவர்த்திக்கின்றதோ அந்த ஜீவனே முக்தி அடைகிருன். வித்யை ஏற்படாத ஜீவனுக்கு முக்தி ஏற்படுவதில்லை. எப்படி ஜாதி என்பது நஷ்ட்டமான வ்யக்தியை

விட்டுவிட்டு மற்றவைகளில் மட்டும் இருக்கின்றதோ, அதுபோல் அஞ்ஞானம் என்பதும் மற்ற ஜீவர்களிடம் இருக்கின்றது என்பதால் அவித்வானிடம் அஞ்ஞானம் நாசமடைவதில்லை. ஆகவே வ்யவஹார நிலையில் எப்படி ஜாதி வ்யக்திகளில் வ்யவஹாரம் செய்யப்படுகிறதோ அதுபோல் பந்தம் மோக்ஷம் என்ற வ்யவஹாரம் ஏற்படுகிறது என்று சிலர் சொல்கிறார்கள். (இதற்கு பதில் 130 முதல் 141 வரை பதில் சொல்லப்படுகிறது)

133. அவதாரிகை :

இவ்விதம் சொல்லப்பட்ட விஷயம் வேறொருவரால் ஆக்ஷேபிக்கப்படுகிறது. அதாவது ப்ரஹ்மமென்பதும் ஏகம், அவித்யை என்பதும் ஏகம் என்றால், அதில் ப்ரதி பிம்பிக்கின்ற ஜீவர்கள் எப்படி அனேகம் என்று சொல்ல முடியும் ? மேலும் அவித்யை ஏகமென்றால் உபாதி இருக்கின்ற பர்யந்தம் ப்ரதிபிம்பம் என்பதும் இருக்கின்றது என்றே சொல்ல வேண்டும். அதனால் ப்ரதி பிம்ப பாவம் எப்படி நிவர்த்திக்க முடியும் ? அதனால் இந்த பக்ஷத்தில் ஸ்வாரஸ்யம் எதுமில்லையென்பதால் வேறு விதமாக இதற்கு பரிகாரம் சொல்லாம் என்று வேறு மதஸ்த்தரால் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

अज्ञानानि बहून्यसंख्यवपुषो जीवान्मुमुक्षूनपि ज्ञानाज्ञानसमाश्रयाननुयुगं तेषां च निःश्रेयसम् ।
मायामीश्वरसंश्रयामनुगमात्संसारसंवर्तिनीं केचिद्दैवविघातनिघ्नमनसः स्वी चक्रुरल्पश्रुताः

ச்லோகார்த்தம் : துரதிர்ஷ்ட்ட வஸமாக ப்ரதிபத்தமான புத்தியை உடைய சிலர் அஞ்ஞானம் அனேகம் என்று ஒத்துக் கொள்கிறார்கள். அவ்விதமே, மோக்ஷ இச்சை உடையவர் என்றும் ஞானி என்றும், அஞ்ஞானியென்றும் எண்ணற்ற ஜீவர்களை ஒத்துக் கொள்கிறார்கள். ஈச்சவரனை ஆச்ரயித்திருக்கின்ற மாயையை அனுசரித்து ஒவ்வொரு யுகத்திலும் எல்லோருக்கும் பொதுவான ஸம்ஸாரம் முதலான அனைத்தையும் ஒத்துக் கொள்கிறார்கள். (இதற்கு பதில் 142வது ச்லோகத்தில் சொல்லப்படுகிறது)

வ்யாக்யானம் : அஞ்ஞானம் என்பது ஏகமல்ல. அனேகம் என்றே சொல்ல வேண்டும். அதேபோல் ஜீவர்களும் அனேகம். அஞ்ஞானமென்பதே கர்த்ருத்வ போக்த்ருத்வங்களுக்கு காரணம். சுகதுக்க அனுபவங்களுக்கும் ப்ரமாத்ராதிகளின் ஆத்யாஸிகவ்யவஹாரங்களுக்கும் அவரவர் அஞ்ஞானம் தான் காரணம். அதனால் எவருக்கு அஞ்ஞானம் நீங்குகின்றதோ அவரே ஞானி, மற்றவர்கள் அஞ்ஞானி என்றே சொல்லவேண்டும். இவ்விதம் சொல்லப்படுமானால் ஆகாஸாதி பூதங்கள் ஸாதரணமாகஒன்றாகவே இருக்கிறதே ? என்றால் அஞ்ஞானத்திற்கும் பூத உற்பத்திக்கும் ஸம்பந்தமில்லை பூதங்களின் சிருஷ்டிக்கு மாயை என்பதே காரணம். மாயை ஏகம் அதனால் பூதங்களும் ஏகம். இந்த மாயை ஈச்வரனை ஆச்ரயித்து இருக்கின்றது என்று சொல்கிறார்கள். ஈச்வரனை ஆச்ரயித்திருக்கின்ற மாயை என்பது, ஜீவனுக்கு ஏற்படும் தத்வ ஞானத்தினால் எப்படி நிவர்த்தியாகும் ? மாயை நிவர்த்திக்காவிடில் மோக்ஷம் என்பது சித்திக்காது. அத்வைத ஹானி ஏற்படும். இவ்வித தோஷங்கள் ஏற்படும் என்பது துரதிர்ஷ்ட்டவசத்தினால் புத்தியிலுள்ள ப்ரதிபந்தங்களினால் அவர்களுக்கு அறியப்படவில்லை. மேலும் அனேக ஜீவர்கள் உண்டாவதற்கு காரணம் என்னவென்பதும் அவர்களால் சொல்லப்படவில்லை. இதே போல் முமுக்ஷுக்கள் ஞானஸமாச்ரயன்

என்றும், பத்தன் அஞ்ஞான ஸமாச்ரயன் என்றும், முமுக்ஷுக்ளுக்கு எந்தெந்த காலத்தில் மோக்ஷம் சித்திக்க வேண்டுமோ அந்த காலத்தில்தான் சித்திக்கும் என்றும், மாயை என்பது அஞ்ஞானத்தைக் காட்டிலும் வேறு என்றும் ஏகம் என்றும் சொல்கிறார்கள். அதுவே ஸர்வ ப்ரபஞ்சத்திற்கும் காரணம் என்றும் தத்வ ஞானத்தினால் மாயை என்பது நிவர்த்திக்காது என்றும் சொல்லப்படுவதால் அத்வைத ஹானி ஏற்படுகிறது. மேலும் மாயைக்கும் அஞ்ஞானத்திற்கும் பேதம் சொல்லப்படுவதால் எவ்வித ப்ரயோஜனமும் கிடையாது.

**134.** அவதாரிகை :

இதுவரை சொல்லப்பட்ட இரண்டு பக்ஷங்களும் சரியல்லவென்று கண்டித்து மூன்றாவதாக வேறொருவர் தன் பக்ஷம் என்னவென்று தெரிவிக்கிறார்.

ச்லோகம் : आकाशे विहगोऽस्ति नास्ति च यथा तद्वत्परब्रह्मणि
स्वच्छे चिद्वपुषि स्वभावविमलेऽसङ्गे शिवे शाश्वते ।
निर्भेदेऽनुदयव्ययेऽनवयवे विद्या भवेन्नो भवेदित्येवं
निरवद्यमाहुरपरे पक्षव्यवस्थार्थिनः

**ச்லோகார்த்தம் :** ஆகாசத்தில் பக்ஷி இருக்கிறதென்றும், ஆனால் பக்ஷி இல்லையென்றும் (சொல்வது போல்) சுத்தமாகவும் சித்ரூபமாகவும் நிர்மலமாகவும் அகண்டமாகவும் மங்கள ரூபமாகவும் சாஸ்வதமாகவும், பேதமற்றதாகவும், உதயாஸ்த்தமனம் அற்றதாகவும் நிரவயமாகவும் இருக்கின்ற ப்ரஹ்மத்தில் அவித்யை இருக்கின்றதென்றும், ஆனால் அவித்யை இல்லையென்றும் சொல்லப்படுவதில் தோஷம் ஏதுமில்லையென்று வேறு சிலர் பந்த மோக்ஷ வ்யவஸ்த்தையை சித்தம் செய்கிறார்கள்.

**வ்யாக்யானம் :** ஏகமான ப்ரஹ்மஸ்வரூபத்தில் அஞ்ஞானம் என்பது ஒரே ஸமயத்தில் ஓரிடத்தில் இருக்கின்றது என்றும் மற்றோர் இடத்தில் இல்லையென்றும் சொல்லலாம். எப்படி அவ்விதம் இருக்க முடியும் என்றால் அதுவே அவித்யையின் தன்மை என்பதால் இதில் தோஷம் ஏதுமில்லை. உதாரணமாக அகண்டமான ஆகாசத்தில் பக்ஷி ஒன்று பறக்கின்றது. அந்த பக்ஷி பறக்கின்ற இடத்தில்தான் காணப்படுகிறது, மற்றோர் இடத்தில் காணப்படவில்லை. நிரம்ஸமான ஆகாசத்தில் பக்ஷி என்பது ஓரிடத்தில் இருக்கிறது, மற்றோர் இடத்தில் இல்லையென்று அறியப்படுகிறது. அதுபோல் ஸ்வச்சமாகவும் சித்ரூபமாகவும் இருக்கின்ற ப்ரஹ்மத்தினிடம் அவித்யை என்பது ஓரிடத்தில் இருக்கிறது வேறொரு இடத்தில் இல்லை என்றே சொல்லலாம். ஆகையால் அவித்யை இருக்கின்ற இடத்தில் பத்தம் என்றும் இல்லாத இடத்தில் முக்தம் என்றும் சொல்லாம். ப்ரஹ்மத்திற்கு சொல்லப்படும் ஸ்வச்சம் சுத்தம் நிர்மலம் நிரம்ஸம் அஸங்கம் நிர்க்குணம் சாஸ்வதம் என்ற விசேஷணங்கள் ஆகாசத்திற்கும் பொருந்துகின்றது. அதாவது ஆகாசம் என்பது ஸ்வயமே மலரஹிதம் என்பதால் ஸ்வச்சம், சுத்தம் நிர்மலம். கண்ணாடியில் இருக்கின்ற அழுக்கு துடைப்பதால் நீங்கி சுத்தமாகிறது. அதுபோல் இல்லாமல் ஆகாசம் எப்போதுமே மலரஹிதம் என்பதால் சுத்தம்அஸங்கம் என்பதால் நிர்மலம், நிர்க்குணமானதால் சாஸ்வதம். அநித்யவஸ்துக்கள் போல் குணத்துடன் ஸம்பந்தமில்லையென்பதால் உற்பத்தி விநாசமுடையது அல்ல

என்பதால் சாஸ்வதம், ஸர்வ உற்பத்தி நாசத்திற்கும் அதிஷ்ட்டானம் என்பதால் சாஸ்வதம். இந்த விதம் ஆகாச த்ருஷ்ட்டாந்தம் மிக்க பொருத்தமாக இருக்கின்றது.

அவித்யை என்பது ஓரிடத்தில் இருக்கிறது ஓரிடத்தில் இல்லை என்றால் அவித்யை ஸாவயவம் என்று சொல்ல நேரிடுமே என்றால், அவித்யைக்கு ஆச்ரயமான ப்ரஹ்மமென்பது ஆகாசம் போல் நிரவயமானதால் விரோதம் ஏதுமில்லை. ஆகவே மாயை, அவித்யை என்ற இரண்டிற்கும் பேதம் இருக்கிறது என்பதற்காகவோ ஈச்வராச்ரயம் மாயை என்று சொல்லப்பட்டதால் ஏற்படும் தோஷங்கள் இந்த பக்ஷத்தில் ஏற்படாது. அதனால் அத்வைத ஹானியுமில்லை. (இந்த ஆக்ஷேபத்திற்கு 152வது ச்லோகத்தில் பதில் சொல்லப்படுகிறது.)

**135. அவதாரிகை :**

ஒரே வஸ்துவில், வேறு ஒரு வஸ்து இருக்கிறதென்றோ, இல்லையென்றோ சொல்வதற்கு ஒரு காரணம் சொல்லவேண்டும். அவ்விதம் சொன்னால்தான் காரணம் இருக்கின்றபோது வஸ்து இருக்கின்றதென்றும் காரணமில்லாததால் வஸ்து இல்லை என்று சொல்வதற்கு முடியும் என்று வேறு சிலர் இந்த பக்ஷத்தை சரியல்ல என்று தெரிவித்து வேறு விதமாகச் சொல்கிறார்கள்.

ச்லோகம் :

**शुद्धे वस्तुनि यद्यपि प्रविशति ध्वान्तं मनः कारणं स्वीकृत्यैव तथाऽप्युपाधिमपरं ब्रह्मस्वरूपे विशेत् ।**

**तच्चान्तःकरणं सुसूक्ष्मवपुषा तिष्ठद्बहिः सर्वदा चैतन्ये तमसो नियामकमिति स्वी चक्रुरन्ये पुनः**

ச்லோகார்த்தம் : ஜகத் காரணமான அஞ்ஞானம் சுத்த வஸ்துவில்தான் இருக்கின்றது. ஆனால் ஆச்ரயத்திலிருந்து வேறாக இருக்கின்ற மனஸ் என்ற உபாதியை அபேக்ஷித்தே அது ப்ரஹ்மத்தை அடைகின்றது. அந்த, அந்த : கரணமானது தன்னுடைய சூக்ஷ்ம ரூபத்தினால் எப்போதும் வெளியில் இருந்து கொண்டே சைதன்யத்தின் அஞ்ஞான ஸம்பந்தத்திற்கு நியாமகமாக இருக்கிறது என்று வேறு சிலர் தெரிவிக்கின்றார்கள்.

வ்யாக்யானம் : காரணமின்றி ஒரு வஸ்துவில் மற்றொரு வஸ்து இருக்கிறதென்றோ, இல்லையென்றோ சொல்வதற்கு முடியாது. ஆகையால் சுத்தமான ப்ரஹ்மத்தினிடத்தில் அஞ்ஞானம் என்பது மனஸ் என்ற உபாதியினால் ஸம்பந்தப்படுகிறது. காரணமின்றி அஞ்ஞானம் என்பது ப்ரஹ்மத்தினிடம் ஸம்பந்தப்பட முடியாது. அஞ்ஞானம் என்பது விக்ஷேபஸ்வரூபமாக இருக்கின்றதால் ப்ரஹ்மத்தினிடம் ப்ரவேசிக்கின்றபோதே (ஸம்பந்தப்படுகின்றபோதே) அனேக அந்த கரணங்களையும் சிருஷ்டிக்கின்றது. இவ்விதம் சிருஷ்டிக்கப்படும் மனஸ் என்பது உபாதியாக இருக்கின்றதால், (அந்த மனஸ் ப்ரஹ்மத்துடன் ஸம்பந்தமில்லை என்றாலும்) அந்த மனஸ் என்பதை த்வராமாகக் கொண்டு அஞ்ஞானம் ப்ரஹ்மாச்ரயமாக ஆகிறது. இந்த மனஸ் என்பது சுஷுப்தியில் லயத்தை அடைகிறது என்றாலும், சூக்ஷ்மாத்மனா இருக்கிறது. ஆகவே, மனஸ் என்பது அஞ்ஞான கார்யமானதால் கார்யத்துடன் கூடிய அஞ்ஞானம் ப்ரஹ்மத்தினிடம் இருப்பதாகச் சொல்ல முடியாது. அதனால் மனஸ் என்ற உபாதித்வாரா அஞ்ஞானம் ப்ரஹ்மத்தினிடம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது.

மனித தன்மையின்றி பசுவைப் போல் இருக்கின்ற ஒன்றும் அறியாத புருஷனே த்ரிதிஹரி என்ற சப்தத்தால் குறிப்பிடப்படுகிறது. த்ரிதிஹரி என்பதற்கு புத்தி இல்லாதவன் என்ற அர்த்தம் இல்லே. ஆனாலும் அறிவு இல்லாத அந்த புருஷனிடம் பசுத்வம் என்பது இல்லேயென்றாலும் பசுவைக்குறிக்கின்ற த்ரிதிஹரி சப்தத்தை உபயோகிப்பதற்கு எப்படி காரணமாக ஆகிறதோ அதுபோல் ப்ரஹ்மத்தில் அஞ்ஞானம் ஸம்பந்தப்பட்டிருப்பதாகச் சொல்லப்படுகிறது. மனஸ் என்பது அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாக இல்லே அஞ்ஞானத்திற்கு மனஸ் உபாதியாகவே இருக்கின்றதால் தடஸ்த்தமாக இருக்கிறது. த்ரிதிஹரி சப்தம் பசுவைத்தான் குறிக்கும் மனுஷ்யனே குறிக்காது என்றாலும் பசுத்வம் என்பது எப்படி அஞ்ஞனுடன் ஸம்பந்தப்படுகிறதோ அதுபோல் மனஸ் என்பது அஞ்ஞானத்திற்கு உபாதியாக இருந்து அஞ்ஞானத்திற்கு ப்ரஹ்மஸம்பந்தம் ஏற்படச் செய்கிறது. மனஸ் என்பது சூக்ஷ்மமாக இருக்கின்றதால் மனோநாசம் ஏற்படும் வரையில் அஞ்ஞானஸம்பந்தம் ஏற்படகாரணமாகிறது. மனோ நாசம் ஏற்படுமானல் அஞ்ஞான ஸம்பந்தமும் ஏற்படாது. (159வது ச்லோகத்தில் இதற்கு பதில் சொல்லப்படுகிறது.)

**136.** அவதாரிகை :

ப்ரஹ்மத்தை ஆச்ரயித்திருக்கின்ற அஞ்ஞானத்தினல்தான் மனஸ் என்பதே சிருஷ்டிக்கப்படவேண்டும். மனஸ் என்பதை த்வாரமாகக்கொண்டே அஞ்ஞானம் ப்ரஹ்மத்தில் ஸம்பந்தப்படுகிறது என்று சொல்லப்படுமானல் அன்யோன்யாச்ரய தோஷம் ஸம்பவிக்கும். அஞ்ஞானம் என்பது ப்ரஹ்மத்தையன்றி வேருக ஸ்வதந்த்ரமாக இருந்து கொண்டு மனஸ் என்பதை சிருஷ்டிக்க முடியாது என்பதால் இந்த பக்ஷம் சரியல்ல என்று வேருெவர் வேறு விதமாக அவர் பக்ஷத்தை தெரிவிக்கின்ருர்.

ச்லோகம் :

अज्ञानि ब्रह्म बुद्धीरनुसरति ततः स्थावरं जङ्गमं च
स्वाज्ञानादेव भूत्वा क्वचिदवगतितो मुक्तमन्यत्र बद्धम् ।
तच्चाज्ञानं विनष्टं स्थितमथ च तदेवांशभेदोपपत्तेरेवं
सर्वव्यवस्था परमपुरुषगा जाघटीतीति केचित्

ச்லோகார்த்தம் : அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமான ஆத்மா, புத்திகளில் ப்ரதி பிம்பிக்கின்றது. அதன் பிறகு தன்னுடைய அஞ்ஞானத்தினலேயே ஸ்தாவரமாகவும் ஜங்கமமாகவும் ஆகிறது. சில உபாதிகளில் ஞானத்தினல் முக்தமாகிறது. வேறு சில உபாதிகளில் பத்தமாக இருக்கிறது. அந்த அஞ்ஞானம் அம்ஸபேதத்தினல் நஷ்ட்ட மானதாகவும் இருக்கிறது. இந்த விதம் ஆத்மாவினிடம் எல்லா அவஸ்த்தைகளும் பொருத்தமுடையதாகவே இருக்கிறது.

வ்யாக்யானம் : அஞ்ஞானத்தினல் சிருஷ்டிக்கப்படும் மனஸ் என்பதை த்வாரமாகக் கொண்டு அஞ்ஞானம் ப்ரஹ்மத்தினிடம் ஸம்பந்தப்படுகிறது. என்ருல் அன்யோன்யாச்ரய தோஷம் ஸம்பவிக்கின்றது. ஸ்வதந்தரமில்லாத அஞ்ஞானம் சைதன்யஸம்பந்த மின்றி மனஸை சிருஷ்டிக்கமுடியாது. மேலும் மனஸ் என்பது சூக்ஷ்மம் என்றும் தடஸ்த்தமாக எப்போதுமே இருக்கிறது என்றும் சொல்லப்படுமானல் ப்ரஹ்மத்தைப் போன்று மனஸ் என்பதும் அனுதி என்று சொல்ல நேரிடும். மனஸ் என்பது சாதி என்பதால் இவ்விதம் சொல்லப்படுவது முற்றிலும் பொருந்தாது. ஆகவே வேருெரு முறையில் இந்த தோஷங்களே நிவர்த்திக்கலாம் என்று வேருெருவர் தன் பக்ஷத்தை தெரிவிக்கின்ருர்.

ப்ரஹ்மத்தினிடம் அஞ்ஞானம் என்பது ஒரு சக்தியாக அனாதியாக இருக்கின்றது. இந்த அஞ்ஞானமே மனஸ் புத்தி என்பவைகளை சிருஷ்டிக்கின்றது. சிருஷ்டித்த புத்திகளில் காரணமான அந்த அஞ்ஞானமும் சைதன்யமும் தொடர்ந்து அந்தந்த புத்திகளில் தனித்தனியே இருக்கின்றது. இந்த விதம் அஞ்ஞானம் அதன் கார்யங்களில் ப்ரஹ்ம சைதன்யம் ப்ரதி பிம்பபாவத்தில் இருக்கின்றதால் பூதம், பௌதிகம், என்ற ஸர்வ ப்ரபஞ்சமும் அஞ்ஞானத்தினால் உண்டாக்கப்பட்டு ப்ரஹ்ம சைதன்ய ப்ரதிபிம்பத்வாரா ஸர்வத்தையும் ப்ரகாசப்படுத்துகின்றது. அதனால் இந்த ப்ரஹ்மமே ஸர்வ ப்ரபஞ்சாகாரமாக ஆகிறது. இவ்விதம் ப்ரஹ்மத்தினிடம் சக்தி ரூபமாக இருக்கின்ற அஞ்ஞானமானது சாதன ஸம்பத்தியுடையவனாகவும் சாஸ்த்ராசார்ய உபதேசத்தின் மூலமாக தத்வ ஞானத்தை அடைகின்ற ஜீவனிடத்தில் உள்ள அஞ்ஞானாம்ஸம் நாசமாகிறது. எந்த அம்ஸத்தில் அஞ்ஞானம் நாசமாகிறதோ அந்த அம்ஸிக்கு மட்டும் அஞ்ஞானம் இருக்க முடியாது என்பதால் அவனுக்கு மட்டும் முக்தி ஏற்படுகிறது. ஆகவே அஞ்ஞானத்தில் அம்ஸமில்லை கார்யமான புத்தியில் தான் அம்ஸகல்பனை சொல்லப்படுவதால் எந்த புத்தியில் ஞானம் ஏற்படுகிறதோ அந்த புத்தி அதன் காரணமான அஞ்ஞானத்துடன் நாசமாகின்றது. அதனால் மற்ற புத்திகளுடன் ஸம்பந்தப்பட்ட அஞ்ஞானத்திற்கு நாசமில்லை என்று சொல்லலாம் என்பது அவர்கள் அபிப்ருயம். (162வது ச்லோகத்தில் இதற்கு பதில் சொல்லப்படுகிறது.)

**137.** அவதாரிகை :

இந்த பக்ஷத்திலும், ஒரே அஞ்ஞானத்தில் அனந்த அவயங்கள், அனந்த ப்ரதி பிம்பங்கள் சொல்லப்படவேண்டி இருக்கின்றதால் கௌரவம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது. ஆகவே இந்த பக்ஷம் சரியல்லவென்று வேறொருவர் வேறு விதமாகஅவர் அபிப்ருயத்தைத் தெரிவிக்கின்றார்.

**ச்லோகம் :**

**बाह्याध्यात्मिकवस्तुजातजननी माया हरेर्बन्धिनी शक्तिर्दाशकजालवत्प्रसरणं प्राप्नोत्यविद्यावतः ।**
**जीवान्संकुचतीच्छया भगवतः सत्याऽस्तु मिथ्याऽथ वा संकोचश्च विलक्षणश्च भवतः स्वाभाविकावित्यपि**

**ச்லோகார்த்தம் :** பாஹ்ய ஆத்யாத்மிக வஸ்துக்களை உற்பத்தி செய்கின்றதும் ஜீவர்களை பந்தனம் செய்கின்றதுமான மாயை என்பது விஷ்ணுவின் சக்தியாகும். செம்படவனின் வலை போல் அஞ்ஞானியின் விஷயத்தில் விரிவடைவதாகவும், ஞானிகளின் விஷயத்தில் ஈச்வர இச்சையால் ஸங்கோசத்தை அடைகின்றது என்பதாலும் ஆகவே மாயை ஸத்யமாக இருக்கிறதென்றோ அல்லது மித்யை என்றோ எவ்விதம் சொல்லப்பட்டாலும் ஈச்வர இச்சையை அபேக்ஷிக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஈச்வரனிடமுள்ள மாயா சக்தி என்பதே பாஹ்யம், ஆத்யாத்மிகம் என்ற ஸாதாரணம் அஸாதாரணம் என்ற ப்ரபஞ்சத்வயத்திற்கும் காரணம். அஞ்ஞானம் என்பது ஜீவனிடம் இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இதே விஷயத்தை இரண்டாவது பக்ஷத்திலும் சொல்லப்பட்டிருந்த போதிலும், இந்த பக்ஷத்தில் வேறொரு விசேஷம் சொல்லப்படுகிறது. என்னவென்றால், ஜீவனிடம் இருக்கின்ற அஞ்ஞானம்

என்பது வஸ்து ஸ்வரூப ஆவாரகமாக ஆகிறதேயன்றி விக்ஷேபத்தை உண்டு பண்ணுவதில்லை. விக்ஷேபம் என்பது ஈச்வரனிடன் உள்ள மாயா சக்தியஞல் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது. ஆகவே மாயை என்பதே ஜீவர்களுக்கு விக்ஷேபத்தைக் கொடுத்து பந்தப்படுத்துகின்றது. ஜீவனுடைய ஸம்ஸாரத்திற்கு காரணமான இந்த மாயையானது வலைஞனுடைய வலையைப் போன்று சுருங்கி விரிகின்ற தன்மையுடையது. ஆகவே அவித்தையுடன் கூடிய இந்த ஜீவனிடம் மாயையானது விரிந்து வ்யாபித்து ஜெகத்தை தோற்றுவித்து அதன் மூலம் பந்தனைச் செய்கிறது. எந்த ஜீவனுக்கு ஈச்வர பக்தி ஏற்படுகிறதோ அந்த பக்தியினல் கட்டுப்பட்ட ஈச்வரன் ஸந்தோஷத்தை அடைந்து அவனுக்கு வித்யை ஏற்படும்படிச்செய்வதால் மாயை என்பது அவனை பந்தப்படுத்தாமல் சுருங்கிவிடுகிறது. எப்படி வலைஞனுடைய இச்சையைப் பொறுத்து வலை சுருங்கிவிரிகிறதோ அதுபோல் ஈச்வரனின் இச்சையைப் பொறுத்தே மாயை என்பது சுருங்கிவிரிகிறது. இந்த மாயை ஸத்யமா? மித்யையா? என்ருல், எப்படி இருந்தாலும் பகவானுடைய இச்சையைப் பொறுத்தே மாயா நிவர்த்தி ஏற்படும். ஈச்வர இச்சை இல்லையானல் மாயா நிவர்த்தி இல்லை. ஆகவே, பந்த மோக்ஷத்திற்கு அவித்யையோ வித்யையோ காரணமில்லையென்றும் ஈச்வர இச்சையே காரணம் என்றும் சொல்கிருர்கள்.

**138.** அவதாரிகை :

இந்த பக்ஷமும் சரியல்லவென்று வேருெவர் தன் அபிப்ருயத்தை தெரிவிக்கின்ருர்.

ச்லோகம் :

संस्कारभ्रमसंततिं प्रतिनरं भिन्नां परब्रह्मणि स्वी चक्रुर्विषये प्रवाहवपुषाऽनादिं तमः केचन ।
तामुच्छिद्य समुच्चयेन घटते मोक्षाय कश्चिन्नरः कश्चित्तद्विरहेण संसरति ना जीवाश्रया सेति च

ச்லோகார்த்தம் : ப்ரஹ்மமென்பதையே விஷயமாகக் கொண்டதும், ப்ரவாக ரூபமான அனுதியாக இருப்பதும், ஒவ்வொரு ஜீவனிடத்திலும் பின்னமாக இருக்கின்றதான ப்ரமஸம்ஸ்க்கார ஸந்ததியே அஞ்ஞானம் என்று சிலர் சொல்கிருர்கள். ஞான கர்மஸமுச்சியத்தினல் அதை நாசம் செய்வதன்மூலம் மோக்ஷத்திற்கு தகுதியுடையவனுக ஒருவன் ஆகிருன். மற்ருெவன் ஸமுச்சயத்தை அனுஷ்டிக்காததால் ஸம்ஸாரியாகவே இருக்கிருன். இந்த அஞ்ஞானம் ஜீவாச்ரயமாகவே இருக்கிறது.

வ்யாக்யானம் : மாயை, அஞ்ஞானம் என்ற இரண்டும் ஒன்று தான். அதேபோல் ஜீவன் என்பதும் ப்ரஹ்மமென்று சொல்வதும் ஒன்றுதான். அதனல் ப்ரஹ்மத்திற்கு அஞ்ஞான ஆச்ரயத்வம் சொல்லாம்.

இதில், வாக்யார்த்த ஞானம் ஏற்படுவதற்குமுன்பு ஞானஅபாவம் என்ற அபாவரூபமான அவித்யை என்பது ஒன்றுஇருக்கிறது. இதைத் தவிர மித்யா ஞானம் அதன் ஸம்ஸ்கார ரூபமான அவித்யை என்பது ஒன்று பாவரூபமாக இருக்கிறது. இந்த அஞ்ஞானமே ப்ரவாக ரூபமாக அனுதியாக தொடர்ந்து இருக்கின்றது. இந்த அஞ்ஞானம் ஒவ்வொரு ஜீவனிடமும் தனித் தனியாக இருக்கின்றது. இந்த அஞ்ஞானம் ஞான கர்ம ஸமுச்சயத்தினல் தான் நாசம் அடைகின்றது அதனல் அவன் மோக்ஷத்தை அடைகிருன். மற்றவர்கள் ஞான கர்ம ஸமுச்சயத்தை அனுஷ்டிக்காததால்

பந்தத்திலேயே இருக்கின்ருர்கள். இந்த ப்ரமஸந்ததி ஜீவனை ஆச்ரயித்தே இருக்கின்றது என்ருலும், அந்த ப்ரமத்திற்கு விஷயம் ப்ரஹ்மந்தான்என்பதால், ப்ரஹ்மமென்பது அஞ்ஞானி என்று சொல்லப்படும் தோஷம் ஸம்பவிக்காது. அது மட்டுமல்ல ஸர்வ ஜீவர்களுக்கும் அஹம் அஞ்ஞ: என்ற அனுபவம் இருக்கின்றது என்று சொல்வதற்கும் விரோதமில்லை ஆகவே, ப்ரமம் என்ருல் விக்ஷேபம். இந்த விக்ஷேப ஞானத்தினுல் ஏற்படுவதே ஸம்ஸ்காரம். இந்த விக்ஷேப ஞானம் என்பது ப்ரமமாகவும் இருக்கலாம்அல்லது ப்ரமையாகவும் (யதார்த்த ஞானம்) இருக்கலாம். இந்த ப்ரமம், ஸம்ஸ்க்காரம் என்ற இரண்டின் தொடர்ச்சியானது ப்ரவாக அனுதியாகவே இருக்கிறது. இதுதான் அவித்யை. இதையன்றி வேருக அவித்யை என்பது இல்லை. ப்ரமை என்பதற்கும் ஸம்ஸ்க்காரம் என்பதற்கும் அஞ்ஞானம் என்ற ஒன்றே காரணம் என்று சொல்லமுடியாது என்பது இவர்கள் கொள்கை. ஒவ்வொரு ஜீவர்களுக்கும் தனித்தனியாக ப்ரமம் என்பதும் ஸம்ஸ்க்காரம் என்பதும் இருக்கிறது என்றும் ப்ரஹ்ம விஷயமாகவே அஞ்ஞானம் இருக்கிறதென்றும் மண்டன மிச்ர மதஸ்த்தர்களால் சொல்லப்படுகிறது. அதனுல் ஞான கர்ம ஸமுச்சயத்தினுல் தான் அஞ்ஞானம் நாசமாகின்றது. ஆகவே அஞ்ஞானம் என்பது ஜீவாச்ரயம்தான் ப்ரஹ்மாச்சரயமில்லை என்றும் ப்ரஹ்மமென்பது அஞ்ஞானத்திற்கு விஷயம் என்றும் சொல்கிருர்கள்.

**139.** அவதாரிகை :

அஸங்க கூடஸ்த்த சைதன்யமான ப்ரத்ய காத்ம ஸ்வரூபத்தில் ப்ரமம் என்பதோ அதன் ஸம்ஸ்காரம் முதலானவைகளோ உண்மையாக ஸம்பவிக்க முடியாது. அதனுல் ஞான கர்ம ஸமுச்சயத்தினுல் நிவர்த்திக்கின்றது என்றும் சொல்லமுடியாது. ஆகையால் இதுவரை சொல்லப்பட்ட எழு விதமான பக்ஷங்களும் சரியல்ல என்று தூஷிக்கப்படுகிறது.

ச்லோகம் :

अज्ञस्तावत्प्रत्यगात्माऽहमज्ञ इत्येवं नः सिध्यति स्वप्रकाशात् ।
अज्ञातं तु ब्रह्म सिध्येत्कुतो वः सम्यग्ज्ञानाद्भ्रान्तितः स्वप्रकाशात्

ச்லோகார்த்தம் : 'நான் அஞ்ஞன்' என்பது ஸ்வயமே ப்ரகாசிக்கின்றதால், ப்ரத்ய காத்மாவே, அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமென்று சித்திக்கின்றது. 'அஞ்ஞாதம் ப்ரஹ்ம' என்பது எப்படி சித்திக்கின்றது? ஸம்யக் ஞானத்ததினுலா, ப்ராந்தி ஞானத்தினுலா, அல்லது ஸ்வப்ரகாசத்தினுலா?

வ்யாக்யானம் : இதுவரை சொல்லப்பட்ட ஏழு பக்ஷங்களில் முதல் இரண்டு பக்ஷங்களால் ஜீவனுக்கே அஞ்ஞானம் இருக்கின்றதென்று அனுபவம் ஏற்படுவதால் ஜீவனே அஞ்ஞான ஆச்ரயம் என்றும் அஞ்ஞானத்திற்கு ப்ரஹ்மமே விஷயம் என்றும் சொல்லப்பட்டது. இது சரியல்ல.

ஆத்மா என்பது ஸ்வயம் ஞானஸ்வரூபம் என்பதால் ஸ்வயம் ப்ரகாச ஸ்வரூபம். அதனுல் அஹம் அஞ்ஞ: என்று அஞ்ஞானம் இருக்கின்றது என்பது ஜீவனுக்கு ஸ்வயமே ப்ரகாசிக்கின்றது என்பதில் எங்களுக்கும் ஆக்ஷேபம் இல்லை. ஏனெனில் ஸ்வயமே ப்ரகாசிக்கின்ற ப்ரத்யகாத்மா, தன்னை ஆச்ரயித்திருக்கின்ற அஞ்ஞானம்

என்பதை ப்ரகாசப்படுத்துகின்றது என்பதற்குவேறு ப்ரமாணமே தேவையில்ல. ஆகவே சிதாபாஸனுக்கு அஹம் அஞ்ஞ: என்ற அனுபவம் ஏற்படுகிறது.

ஆனுல் ப்ரஹ்மமென்பதே அஞ்ஞானத்திற்கு விஷயம் என்று எதனுல் அறியப்படுகிறது? அதற்கு ப்ரமாணம் என்ன, ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் என்ன, என்று அறியாமல் ப்ரஹ்மமென்பது அஞ்ஞாதம் என்று எப்படி அறியப்படுகிறது? ஸம்யக் ஞானத்தினுல் அறியப்படுகிறதா அல்லது ஸ்வப்ரகாசத்தினுல் சித்திக்கின்றதா?

**140.** அவதாரிகை :

ஸம்யக் ஞானத்தினுல் சித்திக்கின்றது என்ருல் அதனுல் ஏற்படும் தோஷம் என்ன என்று விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

सम्यग्ज्ञानाद्ब्रह्मणः सिद्धिपक्षे जाड्यं तस्य स्याद्घटादेर्यथैव ।
सम्यग्ज्ञानाद्ब्रह्मणोऽज्ञानसिद्धौ तस्यापि स्यात्सत्यता तद्वदेव

ஸ்லோகார்த்தம் : ஸம்யக் ஞானத்தினுல் ப்ரஹ்மமென்பது சித்திக்கின்றது என்று சொல்லப்படுமானுல், அது கடம் போல, ஜடம் என்று ஆகும். ஸம்யக் ஞானத்தினுல் ப்ரஹ்ம அஞ்ஞாதம் என்று சித்திப்பதாகச் சொல்லப்படுமானுல் ப்ரஹ்மம் போல் அதுவும் ஸத்யமென்ருகிவிடும்.

வ்யாக்யானம் : அஞ்ஞாதம் ப்ரஹ்மமென்றும், அது ஸம்யக் ஞானத்தினுல் அறியப்படுகிறது. என்றும் சொல்லப்படுமானுல் ப்ரஹ்மமென்பது ஞானத்திற்கு விஷயம் என்ருகிறது. ஞானத்திற்கு விஷயம் என்ருல் அது ஜடமென்றே சொல்லவேண்டும். மேலும் ப்ரஹ்மத்தின் அஞ்ஞானம் ஸம்யக் ஞானத்தினுல் அறியப்படுகிறது என்ருல், ப்ரமாண சித்தமான அஞ்ஞானம் ஸத்யம் என்ருகும். அஞ்ஞானம் ஸத்யமென்ருல் நிவர்த்தி என்பதே ஏற்படாது. இந்த விதம் ப்ரஹ்மமென்பது ஜடம் என்றும், ப்ரஹ்மம் போல் அஞ்ஞானம் என்பது ஸத்யம் என்றும் சொல்ல நேரிடுகின்றது என்ற இரண்டு விதமான தோஷங்கள் ஸம்பவிக்கின்றது.

**141.** அவதாரிகை :

அதற்காக ப்ரஹ்மமென்பதும், ப்ரஹ்மம் அஞ்ஞாதம் என்பதும், இரண்டுமே ஸம்யக் ஞானத்தினுல் சித்திக்கவில்லை என்று சொல்லப்படுமானுல்,

ச்லோகம் :

भ्रान्तिज्ञानद्ब्रह्मणः सिद्धिपक्षे तस्यापि स्यात्कल्पितत्वं तमोवत् ।
अज्ञातं चेद्ब्रह्म नः स्वप्रकाशं मा भाषिष्ठा नानुभूतिस्तथा नः

ச்லோகார்த்தம் : ப்ராந்தி ஞானத்தினுல் ப்ரஹ்மமென்பது சித்திக்கின்றது என்று சொல்லப்படுமானுல், அதுவும் அஞ்ஞானத்தைப் போல் கல்பிதம் என்ருகும். ‘அஞ்ஞாதம் ப்ரஹ்ம’ என்பது ஸ்வப்ரகாசத்தினுல் சித்திக்கின்றது என்று சொல்லப்படுமானுல், அவ்விதம் அனுபவமும் கிடையாது. அவ்விதம் சொல்லவும் முடியாது.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மமென்பதும், ப்ரஹ்மம் அஞ்ஞாதம் என்பதும் ஸம்யக் ஞானத்தினுல் சித்திக்கவில்லையென்ருல் ப்ராந்தி ஞானத்தினுல் சித்திக்கின்றது என்று சொல்லவேண்டும். அவ்விதம் சொல்லப்படுமாஞல் அஞ்ஞானம் என்பதைப்போல ப்ரஹ்மம் என்பதும் மித்யை என்று சொல்லநேரிடும். அதற்காக ப்ரஹ்மமென்பது அஞ்ஞாதம் என்பது ஸ்வயமே (சித்திக்கின்றது) ப்ரகாசிக்கின்றது என்று சொல்வதற்கும்முடியாது. ஏனெனில் அஹம் அஞ்ஞ: என்று எப்படி அனுபவத்தினுல் அஞ்ஞானம் சித்திக்கின்றதோ அதுபோல் ப்ரஹ்மம் அஞ்ஞாதமாக இருக்கிறது என்றே ஸ்வயமே சித்திக்கிறது என்றே சொல்லமுடியாது. ஜீவனைத் தவிர வேருக (தன்னையன்றி வேருக) ஸர்வஞ்ஞன ப்ரஹ்மமென்று ஒரு வஸ்து இருக்கிறதென்று அனுபவத்திஞலும் அறியப்படவில்லை. ஸ்வயமாக ப்ரகாசிக்கின்றதாகவும் அறியப்படவில்லை அவ்வித அனுபவமும் கிடையாது, ப்ரஹ்மம் அஞ்ஞாதம் என்று ப்ரமாணத்திஞலும் அறியப்படவில்லை.

**142.** அவதாரிகை :

எப்படி ப்ரஹ்மமென்பது அஞ்ஞாதம் என்று சொல்லப்படுவதில் தோஷம் ஸம்பவிக்கின்றதோ அதேபோல் ப்ரஹ்மம் மாயாவி என்று சொல்லப்படுவதிலும் தோஷம் ஸம்பவிக்கின்றது.

**ச்லோகம் :**

अज्ञातत्वे यानवोचाम दोषान् मायावित्वे ब्रह्मणस्तानवेहि ।
मिथ्याज्ञानात्स्वप्रकाशात्प्रमाणात्संसिद्धिः स्यात्तस्य तत्कथ्यतां नः

**ச்லோகார்த்தம் :** 'அஞ்ஞாதம் ப்ரஹ்ம' என்று சொல்லப்படுவதால் எந்த தோஷங்கள் ஸம்பவிக்கின்றதோ, அவை அனைத்தும் மாயாவி ப்ரஹ்மமென்று சொல்லப்படும் பக்ஷத்திலும் ஏற்படுகிறது. மாயாவி ப்ஹ்மமென்பது ஸம்யக் ஞானத்தினுல் சித்திக்கின்றதா ? ப்ராந்தி ஞானத்தினுலா ? அல்லது ஸ்வப்ரகாசத்தினுலா ? எதனுல் சித்திக்கின்றது ?

**வ்யாக்யானம் :** இரண்டாவது பக்ஷத்தில் ப்ரஹ்மமென்பது மாயைக்கு ஆச்ரயம் என்றும் மாயாவி என்றும் சொல்லப்படுமானுல், மித்யா ஞானத்தினுல் இவ்விதம் சித்திக்கின்றதா ? ஸ்வப்ரகாசத்தினுல் சித்திக்கின்றதா ? அல்லது ப்ரமாணத்தினுல் சித்திக்கின்றதா ? எந்த விதம் சொன்னுலும் முன்னுல் சொல்லப்பட்ட தோஷங்கள் இந்த விஷயத்திலும் சித்திக்கின்றது.

**143.** அவதாரிகை :

தோஷங்கள் என்னவென்பதை தெரிவிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

मिथ्याज्ञानाद्ब्रह्मणः सिद्धिपक्षे मायेव स्यात्कल्पितं तच्च तद्वत् ।
मानादिष्टं ब्रह्म मायावि चेद्वो मायायाः स्यात्सत्यता जाड्यमस्य

**ச்லோகார்த்தம் :** ப்ராந்தி ஞானத்தினுல் ப்ரஹ்மம் சித்திக்கின்றது என்ருல், அதுவும் மாயையைப் போல் கல்பிதம் என்று சொல்ல நேரிடும், மாயாவி ப்ரஹ்மமென்பது

ஸம்யக் ஞானத்திஞல் சித்திக்கின்றது என்ருல் மாயை ஸத்யமென்றும், ப்ரஹ்மம் ஜடம் என்றும் சொல்லப்பட்டதாக ஆகும்.

வ்யாக்யானம் : ப்ரஹ்மமென்பது மித்யா ஞானத்திஞல் சித்திக்குமாஞல் மாயையைப் போல் மித்யை என்ருகும். மாயா விசிஷ்ட்டம் ப்ரஹ்மமென்று ப்ரமாணத்திஞல் சித்திக்கின்றது என்ருல், விசேஷணமான மாயை ஸத்யம் என்றும் விசேஷ்யமான ப்ரஹ்மமென்பது ஞேயம் என்ருல் ஜடம் என்ருகும்.

**144.** அவதாரிகை :

இரண்டாவது பக்ஷத்தில் உள்ள தோஷத்தைப் பற்றி மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

तन्मायावि ब्रह्म चेत्स्वप्रकाशं मायाऽपि स्याद्ब्रह्मवत्स्वप्रकाशा ।
मायां पश्येद्ब्रह्म चेत्स्वप्रकाशं तत्रापि स्यात्स्वानुभूत्या विरोधः

ச்லோகார்த்தம் : 'மாயாவி ப்ரஹ்ம'மென்பது ஸ்வப்ரகாசம் என்று சொல்லப்படுமாஞல், மாயை என்பதும் ப்ரஹ்மத்தைப் போல் ஸ்வப்ரகாசம் என்று சொல்ல நேரிடும். ஸ்வப்ரகாசமான ப்ரஹ்மமென்பது மாயை என்பதை ப்ரகாசிக்கச் செய்கின்றது என்று சொல்லப்படுமாஞல் அது ஸ்வானுபவத்திற்கு விரோதமாக ஆகிறது.

வ்யாக்யானம் : ப்ரஹ்மமென்பது மாயாவிசிஷ்ட்டம் என்ருல், ப்ரஹ்மத்தைப் போல் மாயை என்பதும் ஸத்யம் என்றும் ஸ்வப்ரகாசம் என்றும் சொல்ல நேரிடும். ஸ்வப்ரகாசமான ப்ரஹ்மத்திஞல் மாயை என்பது அறியப்படுகிறது என்பதாக ஒருவருக்கும் அனுபவமும் இல்லை. அவ்விதம் அறியப்படவுமில்லை. ஆகவே விசிஷ்ட்டம் ஸ்வப்ரகாஸம் என்ருல் விசேஷணமான மாயை என்பதும் விசேஷ்யத்தைப் போல ஸ்வப்ரகாசம் என்றும் சித்ரூபம் என்றும் சொல்லப்படுமாஞல் அதை மாயை என்றே சொல்லமுடியாது. ஸ்வப்ரகாசமான ப்ரஹ்மத்திஞல் மாயை வேத்யம் என்ருல் அனுபவ விரோதமாகவும் இருக்கின்றதால் அதை ப்ரமாணமென்றே ஒத்துக் கொள்ளமுடியாது.

**145.** அவதாரிகை :

அனுபவ விரோதம் என்று எப்படிச் சொல்லமுடியும்?

ச்லோகம் :

आत्मा मूढः स्वप्रकाशो यथाऽयं नैवं मायि ब्रह्म नः स्वप्रकाशम् ।
अज्ञादन्यद्ब्रह्म चेत्स्वप्रकाशं द्वे विस्पष्टे स्वप्रकाशे स्फुरेताम्

ச்லோகார்த்தம் : அஞ்ஞானத்துடன் கூடின ஆத்மா என்பது எவ்விதம் ஸ்வப்ரகாசமாக இருக்கின்றதோ, அவ்விதம் மாயாவி ப்ரஹ்மமென்பது ஸ்வப்ரகாசமாக இல்லை. அஞ்ஞானத்துடன் கூடிய ஆத்மாவிலிருந்து வேருக இருக்கின்ற ப்ரஹ்மமென்பது ஸ்வப்ரகாசம் என்று சொல்லப்படுமாஞல் இரண்டு ஸ்வப்ரகாசமான வஸ்துக்கள் வெவ்வேருக ஸ்புரிக்கக் கூடும்.

வ்யாக்யானம் : அஞ்ஞான ஆச்ரயமான ஆத்மா ஸ்வப்ரகாசம் என்பது போல் மாயாச்ரயமான ப்ரஹ்மும் ஸ்வப்ரகாசம் என்று சொல்லப்படுமாஞல் ஆத்மா என்பதும் ப்ரஹ்மமென்பதும் இரண்டும் வேறு என்று சொல்வது பொருந்தாது. (துர்கடம்) அதற்காக ஜீவனும் ப்ரஹ்மமும் ஒன்றுதான் என்று சொல்லப்படுமாஞல், ஜீவனுக்கும் அஹம்மாயி என்ற அனுபவம் ஏற்படவேண்டும். ஆனுல் அவ்விதமின்றி அஹம் அஞ்ஞ: என்ற அனுபவம் மட்டுமே இருக்கின்றது. அதஞல் அஞ்ஞானம், மாயை, என்ற இரண்டும் வேறு என்று சொல்வதற்கும் முடியாது. அதேபோல் ஆத்மாவும் ப்ரஹ்மும் ஸ்வப்ரகாசம் என்ருல் இரண்டும் வேறு என்று சொல்வதற்கும் முடியாது. அதஞல் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாக இருக்கின்றதால் இந்த பக்ஷமும் சரியல்ல.

**146. அவதாரிகை :**

ஜீவனும் ப்ரஹ்மமும் வேறு என்றும், ப்ரஹ்மமென்பது ஜீவஞல் அறியப்படவேண்டிய தத்வம் என்று சொல்லப்படுகின்றதை நிராகரித்து, இரண்டிற்கும் பேதம் சொல்லப்படுமாஞல் அந்த பேதம்என்பது என்னவென்றே நிரூபணம் செய்ய முடியாது என்று கண்டிக்கப் படுகிறது.

ச்லோகம் :

ज्ञायन्ते चेद्ब्रह्मणा जीवभेदा जाड्यं तेषां कुड्यवन्निर्विवादम् ।
न ज्ञायन्ते ब्रह्मणा चेत्तदानीं सर्वज्ञत्वव्याहतिर्दुर्निवारा

ச்லோகார்த்தம் : வேருக இருக்கின்ற பல ஜீவர்கள் ப்ரஹ்மத்திஞல் அறியப் படுவதாகச் சொல்லப்படுமாஞல், சுவர் எப்படி ஜடமோ அதுபோல் ஜீவர்கள் ஜடம் என்ருகும். ப்ரஹ்மத்திஞல் அறியப்படவில்லையென்ருல், ப்ரஹ்மத்தின் ஸர்வஞ்ஞத்வத்திற்கு விரோதம் ஏற்படும்.

வ்யாக்யானம் : ப்ரஹ்மமென்பதையும், ப்ரஹ்மம் மாயாவி என்பதையும் ஜீவர்கள் அறியமாட்டார்கள் என்ருலும் ப்ரஹ்மமென்பது ஜீவர்களையும், அவர்களின் அஞ்ஞானம் என்பதையும் அறிகின்றது என்று சொல்லப்படுமாஞல் ப்ரஹ்மமென்பதை காட்டிலும் ஜீவன் வேறு என்று சித்திக்கின்றது. நேரிடையாக இந்த அர்த்தம் கிடைக்கவில்லை என்ருலும் அர்த்தாத் சித்திக்கிறது என்று சொல்லலாமே? என்ருல், ப்ரஹ்மத்திஞல் ஜீவர்களும் அவர்களுக்கிடையில் இருக்கின்ற பேதமும் அறியப்படுகிறது என்ருல், ப்ரஹ்மத்தையன்றி ஜீவன் வேறு என்று சொல்ல நேரிடும். அவ்விதம் சொல்லப்படுமாஞல் த்ருச்யமான ஜீவன் அஞத்மா என்ருகும். அதற்காக ப்ரஹ்மத்திஞல் ஜீவர்கள் அறியப்படவில்லையென்ருல் ப்ரஹ்ம ஸர்வஞ்ஞம் என்பதற்கு ஹானி ஏற்படும். எவ்விதம் சொன்ஞலும் தோஷம் ஏற்படும்.

**147. அவதாரிகை :**

ஸ்வப்ரகாசமான ஜீவர்கள் ஸ்வப்ரகாசமானதால் தன்னை ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறு என்று அறிந்து கொள்கிருர்கள் என்று சொல்லும் பக்ஷத்தில் ஜீவனுக்கும் ப்ரஹ்மத்திற்குமுள்ள பேதம் என்பதும் ஜீவனிடத்தில் இருப்பதாகச் சொல்லப்படுமாஞல் பேதமும் ஸ்வப்ரகாசமென்று சொல்ல நேரிடும்.

जीवा एते स्वप्रकाशस्वभावा निर्भासन्ते ब्रह्मणश्चेद्विभक्ताः ।

ச்லோகம் : तेषां भेदः स्वप्रकाशो न वा स्याद्दोषं ब्रूमो दुर्निवारं द्विधाऽपि

ச்லோகார்த்தம் : ஸ்வப்ரகாசமான ஜீவர்கள் ப்ரஹ்மத்திலிருந்து வேருக ப்ரகாசிக்கின்ருர்கள் என்று சொல்லப்படுமாஞல், அவர்களிடம் சொல்லப்படும் ப்ரஹ்ம பேதம் என்பது ஸ்வப்ரகாசமா ? இல்லையா என்று விகல்பிக்கப்படுமாஞல் இரண்டு பக்ஷத்திலும் தோஷம் ஸம்பவிக்கின்றது.

வ்யாக்யானம் : ப்ரஹ்மத்தைக் காட்டிலும் ஜீவர்கள் வேறு என்று சொன்ஞல்தான், ஜீவனுக்கு ஜடத்வம் ஸம்பவிக்கும். ஆஞல் ஜீவன், ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறு என்பது ஸ்வயம் ப்ரகாசத்திஞல் சித்திக்கிறது என்று சொல்லப்படுமாஞல் ஜடத்வம் ஸம்பவிக்காது என்று சொல்லலாமே ? என்ருல், ப்ரஹ்மத்தையன்றி வேறு பட்டவர்கள் ஜீவர்கள் என்ருலும் ஸ்வயம் ப்ரகாசம் என்பதில் வித்யாஸம் எதுமில்லை என்று சொல்லலாம்.

அவ்விதம் சொல்லப்படுமாஞல் இரண்டிற்கும் உள்ள பேதம் என்பது ஸ்வயம் ப்ரகாசமா ? இல்லையா ? (வேத்யமா ? இல்லையா ?) என்று விகல்பிக்கின்ருேம்.

148. அவதாரிகை :

பேதம் என்பது ஸ்வயம் ப்ரகாசம் என்று சொல்லப்படுமாஞல்,

ச்லோகம் :

तेषां भेदः स्वप्रकाशो यदीष्टः सत्यत्वं स्यात्तस्य तेषां तथैव ।
वेद्योऽभीष्टस्तद्विभागो यदि स्यात्तानज्ञात्वा तद्विभागो न वेद्यः

ச்லோகார்த்தம் : ஜீவர்களிடம் இருக்கின்ற ப்ரஹ்மபேதம் என்பது ஸ்வப்ரகாசம் என்று சொல்லப்படுமாஞல், அது ஸத்யமாகிவிடும். ஜீவர்களும் ஸத்யமென்ருகும். பேதம் என்பது இருக்கின்றது என்று அறியப்படுகிறது என்று சொல்லப்படுமாஞல், ஜீவர்கள், ப்ரஹ்மம் என்ற இரண்டையும் அறியாமல் அவர்களுக்கு இடையில் இருக்கின்ற பேதம் அறியப்படமுடியாது.

வ்யாக்யானம் : பேதம் என்பதும் சிதாத்ம ஸ்வரூபம் போல் ஸ்வயம் ப்ரகாசம் என்று சொல்லப்படுமாஞல் பேதம் என்பதும் ஸத்யம் என்று சொல்ல நேரிடும். அதஞல் அத்வைத ஹானி ஏற்படும். அதற்காக பேதம் ஸத்யமில்லை என்றும் அது வேத்யம் தான் என்றும் சொல்லப்படுமாஞல் ப்ரதியோகியோ, அனுயோகியோ இல்லாமல் பேதம் என்பது அறியப்படுவதாகச் சொல்ல முடியாது. இவ்விதம் அனுயோகி ப்ரதியோகியான ஜீவர்களே வேத்யம் என்று சொல்லப்படுமாஞல் அவர்கள் ஜடம் என்றே சித்திக்கின்றது. ஜீவன் ஸ்வரூபத : ஸ்வப்ரகாசம் ஸத்யமென்று சொல்லப்படுகிறதேயன்றி ஜீவத்வ உபாதி விசிஷ்டத்தை சொல்லப்படவில்லை என்று சொல்லப்படுமாஞல் ஜீவத்வ உபாதியுடன் கூடிய ஜீவன் ஸத்யமில்லை என்று சொல்லப்பட்டதாக ஆகும். மேலும் பேதம் ஸத்யம் என்ருல் ஞானத்திஞல் நிவர்த்தி என்பதும் ஏற்படாது. பேதம் நிவர்த்திக்கப்படவில்லை என்ருல் அத்வைத ஹானி ஏற்படும்.

**149.** அவதாரிகை :



ஜீவர்கள் ஒருவருக்கொருவர் வேறு என்று அறியப்படுகிறதா ? இல்லையா ? என்று விசாரிக்கின்ற போது அதிலும் தோஷம் ஸம்பவிக்கின்றது.

ச்லோகம் :

जीवाः सर्वे त्वां प्रति प्रस्फुरन्तः सम्यग्ज्ञानात्प्रस्फुरन्ति स्वतो वा ।
यद्वा मिथ्याज्ञानसामर्थ्यतोऽमी पक्षः कस्ते रोचते ब्रूहि तन्मे

ச்லோகார்த்தம் : உனக்கு (எதிரில்) முன்ஸ்புரிக்கின்ற ஜீவர்கள் எல்லாம் எதனுல் ஸ்புரிக்கின்ருர்கள்? ஸம்யக் ஞானத்திஞலா? ப்ராந்தி ஞானத்திஞலா? எந்த பக்ஷத்தை நீ ஆதரிக்கின்ருய் என்பதை என்னிடம் தெரிவிக்க வேண்டும்.

வ்யாக்யானம் : ஈச்வரனுக்கு, ஜீவனென்றும் ஜீவபேதம் என்பதும் அதன் ஞானம் என்பதும் எப்படி ஏற்படுகிறது என்று விசாரிக்கின்றபோது என்ன தோஷம் சொல்லப் பட்டதோ, அந்த காரணத்திஞலேயே ஜீவர்களுக்குள் பரஸ்பர பேதம் சொல்லப்பட்டாலும் அந்த தோஷம் ஸம்பவிக்கும். தன்னைக்காட்டிலும் வேருக வேறு ஜீவர்கள் இருக்கின்றதாக ஞானம் ஏற்படுவதாகச் சொல்வதும், ஸ்வயம் ப்ரகாசத்திஞல் பேதம் சித்திக்கின்றது என்று சொல்வதும் பொருந்தாது. (துர்கடம்)

**150.** அவதாரிகை :

இதுவரை செய்யப்பட்ட விகல்பங்களில் எந்த விதம் சொல்லப்பட்டாலும் தோஷம் ஸம்பவிக்கின்றது என்பதை மேல் வரும் இரண்டு ச்லோகங்களில் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

सम्यग्ज्ञानाज्जीवभेदप्रसिद्धावद्वैतत्वं ब्रह्मणो न प्रसिध्येत् ।
जीवाः सर्वे मां प्रति स्वप्रकाशा इत्युक्तिस्ते स्वानुभूत्या विरुद्धा

ச்லோகார்த்தம் : ஸம்யக் ஞானத்திஞல் ஜீவபேதம் சித்திக்கின்றது என்று சொல்லப்படுமாஞல் ப்ரஹ்மத்தின் அத்வைத தன்மை சித்திக்காது. எல்லா ஜீவர்களும் ஸ்வப்ரகாசமாகவே எனக்கு சித்திக்கின்ருர்கள் என்ருல், அது ஸ்வானுபூதிக்கு விரோதமாக ஆகிறது.

வ்யாக்யானம் : 'அத்வைதம் ப்ரஹ்ம' என்பதை உன்ஞலும் ஒத்துக்கொள்ளப் படவேண்டும். அதஞல் ஸம்யக் ஞானத்திஞல் ஜீவபேதம் சித்திக்கின்றது என்ருல் அத்வைதமான ப்ரஹ்மதத்வம் சித்திக்காது. அதற்காக ஜீவபேதம் ப்ரமாண சித்தமில்லை என்றும் ஸ்வப்ரகாசமான ஜீவர்களாலேயே அறியப்படுகிறது என்று சொல்லப்படுமாஞல், எல்லா ஜீவர்களுக்கும் தன்னைத் தவிர மற்றவர்கள் வேறு என்று ஸ்வயமே அறியப்படுவதாகச் சொல்ல நேரிடும். இவ்விதம் சொல்லப்படுவது அனுபவ விரோதம்.

**151.** அவதாரிகை :

ஜீவபேதம் ப்ரமாணத்திஞல் சித்திக்கவில்லையென்றும் மித்யா ஞானத்திஞல் சித்திக்கிறது என்றும் சொல்லப்படுமாஞல் ஜீவன் ஏகம் என்றே சித்திக்கின்றது.

ச்லோகம் :

मिथ्याज्ञानाज्जीवभेदप्रसिद्धौ सम्यग्ज्ञानाद्बाध एवाभ्युपेयः ।
मिथ्याज्ञानाद्रज्जुसर्पः प्रसिद्धः सम्यग्ज्ञानात्तस्य बाधोऽपि सिद्धः

ச்லோகார்த்தம் : ப்ராந்தி ஞானத்திஞல் ஜீவபேதம் சித்திக்கின்றது என்று சொல்லப்படுமாஞல், ஸம்யக் ஞானத்திஞல் அது பாதிக்கப்படுகிறதென்றே சொல்ல வேண்டும். ப்ராந்தி ஞானத்திஞல் சித்திக்கின்ற ரஜ்ஜு ஸர்ப்பம், ஸம்யக் ஞானத்திஞல் பாதிக்கப்படுகின்றது.

வ்யாக்யானம் : ஜீவபேதம் என்பது மித்யா ஞானத்திஞல் சித்திக்கின்றது என்ருல் ஸம்யக் ஞானத்திஞல் பாதிக்கப்படுகிறது. அதஞல் ஜீவபேதம் என்பதே சித்திக்காததால் பந்த மோக்ஷ வ்யவஸ்த்தைக்கே இடமில்லே. ரஜ்ஜு ஸர்ப்பம் போல் மித்யா ஞானம் பாதிக்கப்படுகிறது.

**152.** அவதாரிகை :

அஞ்ஞானமென்றும், மாயையென்றும் இரண்டும் வெவ்வேருக இருக்கிறதென்றும், இதில் அஞ்ஞானம் ஜீவாச்ரயமென்றும், மாயை ப்ரஹ்மாச்ரயம் என்றும் சொல்லப்படுகிறது. ப்ரஹ்ம விஷயகமான அஞ்ஞானத்திற்கு ஜீவனே ஆச்ரயம், ப்ரஹ்மமென்பது விஷயமென்றும், ப்ரஹ்மம் மாயாவி என்றும் சொல்லப்படுகிறது. இந்தவிதம் சொல்லப்படுவது சரியல்ல என்று சொல்லப்பட்ட பிறகு, பக்ஷித்ருஷ்ட்டாந்தத்தின் மூலம் ப்ரஹ்மத்தை ஆச்ரயித்து அஞ்ஞானம் இருக்கிறது என்றும், அதஞல் அஞ்ஞானத்திற்கு ஸத்வம் (இருப்பு) ஏற்படுகிறது என்றும், தத்வ ஞானம் ஏற்படுகின்றபோது நாசமடைகிறது என்றும் சொல்லப்படுகிறது. இதஞல் பந்தம் மோக்ஷம் என்ற வ்யவஸ்த்தையும் ஸம்பவிக்கலாம் என்று சொல்லப்படுகிற இந்த பக்ஷமும் சரியல்ல என்று கண்டிக்கப்படுகிறது.

ச்லோகம் :

एकोपाधावेकवस्तुप्रसिद्धौ भावाभावौ नेक्षितौ क्वापि लोके ।
पक्ष्यादीनामस्तिता नास्तिता च व्योम्न्येकस्मिन्नप्यवच्छिन्न एव

ச்லோகார்த்தம் : லோகத்தில் எந்த இடத்திலும், ஒரு அதிகரணத்தில், ஒரு வஸ்து சித்திக்கின்ற போது, அதன் பாவமோ அபாவமோ அறியப்படுவதில்லே. ஒரே ஆகாசத்தில் பக்ஷியின், பாவம் என்பதோ அபாவம் என்பதோ அவச் சேதக பேதத்திஞல் தான் ஏற்படுகிறது.

வ்யாக்யானம் : முதல் இரண்டு பக்ஷமும் சரியல்ல என்று நிராகரித்த பிறகு மூன்ருவது பக்ஷத்தை விசாரிக்கப்படுகிறது. ஒரு வஸ்து ஏகம் என்று சொல்லப்படுமாஞல் அந்த வஸ்துவில் பாவம், அபாவம் என்பது, உபாதி பேதமில்லாமல் இருக்க முடியாது. அவச் சேதக பேதமில்லேயென்ருல், அந்த வஸ்து இருக்கிறதென்று சொல்லப்படுமாஞல் அதை இல்லேயென்று எப்படிச் சொல்லமுடியும்? ஆகவே ஒரே ஆகாசத்தில் பக்ஷி இருக்கிறதென்றும், பக்ஷி இல்லேயென்றும் சொல்லவேண்டுமாஞல் இந்த இடத்தில் இருக்கிறது அந்த இடத்தில் இல்லேயென்று சொல்லலாம். ஆகவே கல்பித உபாதி

பேதத்தைக் கொண்டே பேதம் சொல்ல முடியும். மரம் என்பதில் கபிஸம்யோகம் என்பது இந்த கிளையில் இருக்கிறது. அந்த கிளையில் இல்லை என்று அவச்சேதக பேதத்தைக் கொண்டே சொல்லப்படவேண்டும். அவ்விதமின்றி இருக்கிறது இல்லையென்று சொல்வதற்கு முடியாது.

**153.** அவதாரிகை :

ஆகாஸத்தில் பக்ஷி இருக்கிறது என்றோ இல்லையென்றோ சொல்வதற்குஅவச் சேதகமான ஒரு உபாதி இருக்க வேண்டும் என்று சொல்லப்படுமானுல், அந்த உபாதி என்பது எந்த அவச்சேதகத்தினுல் ஆகாஸத்தில் இருக்கிறது என்று சொல்லவேண்டும். அவ்விதம் அவச்சேதக உபாதிக்கு வேறு அவச் சேதகம் தேவை இல்லையென்ருல், அதேபோல் பக்ஷித்ருஷ்ட்டாந்தத்திலும் ஒத்துக் கொள்ளப்படலாமே ?

ச்லோகம் :

सोऽवच्छेदोऽप्यस्ति नास्त्यम्बरे चेत्तत्रान्वेष्यः सोऽप्यवच्छिन्नभावः ।
सोऽवच्छेदोऽप्यस्ति नास्त्यम्बरे चेद्बाढं तस्मिन्सोऽप्यवच्छिन्न एव

ச்லோகார்த்தம் : அந்த அவச்சேதகமானது, ஆகாசத்தில் பாவமாகவும் அபாவமாகவும் இருக்கின்றதே என்று சொல்லப்படுமானுல், அதற்கு வேருெரு அவச் சேதகம் ஒத்துக்கொள்ளப்பட வேண்டும். அதுவும் பரவாபாவமாக இருக்கிறதே என்ருல் அதற்கு வேருெரு அவச்சேதகத்தினுல் அவச்சின்னமாகவே இருக்கிறது.

வ்யாக்யானம் : ஆகாசம் என்பதில் பக்ஷியின் இருப்புத் தன்மையும் இல்லாத தன்மையும், தேசம் என்ற உபாதி அவச்சேதகமின்றி சொல்லமுடியாது. ஒரு வருக்ஷத்தில் கபி ஸம்யோகம் இருக்கிறதென்றும் இல்லையென்றும் அவச்சேதக பேதத்தைக் கொண்டே அறியப்படுகிறது. அதேபோல் ஆகாசத்தில் பக்ஷியினுடைய பாவாபாவம் உபாதியினுல் ஏற்படுகிறது என்ருல், அந்த உபாதியின் பாவாபாவம் ஆகாஸத்தில் ஏற்படுவதாகவே சொல்லவேண்டும். அவ்விதம் சொல்லப்பட வேண்டுமானுல் அவச் சேதக பேதமின்றி சொல்ல முடியாது. உபாதிக்குஅவச்சேதக பேதமின்றி ஆகாசத்தில் உபாதி பாவாபாவம் சொல்லப்படுமானுல் அதேபோல் அஞ்ஞானத்திற்கு ப்ரஹ்மத்தினிடம் பாவாபாவம் சொல்லலாமே? லோகத்தில் அவச் சேதமின்றி பாவாபாவம் என்பது சித்திப்பதாக அறியப்படவில்லை.

**154.** அவதாரிகை :

இவ்விதம் உபாதியென்பதற்கு உபாதி அவச்சேதகம் சொல்லப்படுமானுல் அனவஸ்த்தை முதலான தோஷங்கள் ஏற்படுமே? என்ருல்,

ச்லோகம் :

नन्वेवं स्याद्दुर्निवाराऽनवस्था बाढं का नो हानिरिष्टैव साऽपि ।
कर्मोद्भूतं नः शरीरं शरीरात्कर्मोद्भूतिस्तत्र किं नेष्यते सा

ச்லோகார்த்தம் : இவ்விதம் மேன்மேலும் சொல்லப்படுமானுல் அனவஸ்த்தா தோஷம் ஸம்பவிக்கின்றது என்பதால், அதற்கு பரிகாரமே செய்யமுடியாதே என்ருல்,

ஸத்யமே. அதனுல் ஹானி எதுமில்லையென்பதால் அது இஷ்ட்டம் தான். நம்முடைய சரீரம் கர்மத்தினுல் ஏற்படுகிறது என்றும் சரீரத்திலிருந்து கர்மோற்பத்தி ஏற்படுகிறது என்ற பக்ஷம் நம்மால் ஒத்துக் கொள்ளப்படுகிறதா? இல்லையா?

வ்யாக்யானம் : எவராலும் பரிகாரம் செய்ய முடியாத அனவஸ்த்தையாக இருக்கும் பக்ஷத்தில் இதை ஒத்துக் கொள்வதையன்றிவேறு வழியே இல்லை. அனுதித்வாத் அத்ருஷ்ட்டத்தை மூலமாக கொண்டிருக்கின்றதால் இதை தோஷமாகச் சொல்ல முடியாது. ஏனெனில் மாயாவாதத்தில் ஸங்கைக்கே இடமில்லை. எப்படி ஸம்ஸாரம் என்பது அனுதியாக இருக்கிறதோ அதுபோல் அவச்சேதகப்ரவாகம் என்பதில் மேன்மேலும் அவச்சேதகம் என்று சொல்லாம். இந்த விகல்பம் ஏதோ ஓரிடத்தில் முடிவு பெறுகிறது என்பதற்கு ப்ரமாணமே இல்லை. இது பொருந்தவில்லையே என்ருல், 'அகடிதகடனுபடீயஸிமாயா' என்று சொல்லப்படுவதால் மாயா வாதத்தினுல் அனுபவத்தைக் கொண்டே எங்களால் இவ்வித நியமம் சொல்லப்படுகிறது. சரீரத்திற்கு கர்மாதான் காரணம் என்ருே, கர்மாவிற்கு சரீரம்தான் காரணம் என்ருே ப்ரத்யக்ஷத்தினுல் அறியப்படவில்லை. ஆனுல் அத்ருஷ்ட்டமாக இருக்கின்றதால் அனவஸ்த்தை என்பது கல்பிக்கப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படும் அனவஸ்த்தாதோஷத்தினுல் சித்தாந்தத்திற்கு எவ்வித ஹானியும் கிடையாது. அனவஸ்த்தையினுல் மூலமான சித்தாந்தம் நாசமடைய முடியாது. அதனுல் இந்த அனவஸ்த்தையை ஒத்துக் கொள்கிருேம். (ப்ராமாணிகீ அனவஸ்த்தா அப்யுபேயா) இவ்விதம் அனவஸ்த்தை இருந்தால்தான் ப்ரபஞ்சம் மித்யை என்று சித்திக்கும். இவ்விதம் உபாதி அனவஸ்த்தை என்பது அனுதியான ஸம்ஸாரத்திலும் இருக்கின்றதால் ஸம்ஸாரப்ரவாஹத்தில் எப்படி அனவஸ்த்தா தோஷம் சொல்லமுடியாது என்று சொல்லப்படுகிறதோ அதுபோல் அவச்சேதக பரம்பரையிலும் அனவஸ்த்தை இருந்தாலும் தோஷமாகச் சொல்லமுடியாது.

**155.** அவதாரிகை :

ப்ரஹ்மஸ்வரூபத்தில் அஞ்ஞானம் இருக்கின்றது என்பது ப்ரமாணசித்தமில்லை. அதனுல் ப்ரஹ்மத்தினிடம் அஞ்ஞானத்தின் பாவாபாவம் சொல்லமுடியாது.

ச்லோகம் :

किं चाज्ञानं ब्रह्मणोऽप्यस्ति नास्तीत्येत्कस्मात्त्वं विजानासि हेतोः ।
मूढोऽस्मीतिप्रत्ययादस्ति बुद्धिर्मुक्ते दाहान्मोहनास्तित्वबुद्धिः

ச்லோகார்த்தம் : (சித்தா) மேலும் ப்ரஹ்மத்தினிடம், அஞ்ஞானம் இருக்கின்றது என்றும் அஞ்ஞானம் இல்லையென்ற விஷயத்தையும் நீ எவ்விதம் அறிகிருய்?

பூர்வ : நான் அஞ்ஞன் என்ற அனுபவத்திலிருந்து அஞ்ஞானம் இருக்கின்றது என்ற புத்தியும் முக்தனிடம் அஞ்ஞானம் நாசத்தை அடைந்துவிட்டதால் அஞ்ஞானம் இல்லையென்ற புத்தியும் ஏற்படுகிறது (அதனுல் அறிகிறேன்)

வ்யாக்யானம் : ப்ரஹ்மஸ்வரூபத்தில் அஞ்ஞானம் இருக்கின்றதென்ருே இல்லையென்று சொல்வதற்கோ ப்ரமாணம் ஏதுமில்லை. அதனுல் அஞ்ஞானம் பாவமா? அபாவமா? என்ற சங்கைக்கே இடமில்லையே?

அஹம் அஞ்ஞ: என்ற அனுபவம் எல்லோருக்கும் இருக்கின்றதால் அஞ்ஞானம் இருக்கிறதென்றும், வித்வத் அனுபவத்தினுல் அஞ்ஞானமில்லையென்று அஞ்ஞான அபாவமும் சித்திக்கின்றது என்று சொல்லாம்.

**156.** அவதாரிகை ;

முக்தனிடம் அஞ்ஞானமில்லை என்பது எதனுல் சித்திக்கிறது ? என்றுல்,

ச்லோகம் :

मुक्तेऽज्ञानं दग्धमित्येतदेवं कस्मोद्धेतोर्वेत्सि तत्कथ्यतां नः ।

मिथ्याज्ञानात्स्वप्रकाशात्प्रमाणान्मुक्तेऽज्ञानं दग्धमित्यस्य सिद्धिः

ச்லோகார்த்தம் : முக்தனிடம் அஞ்ஞானம் நாசம் அடைந்துவிட்டது என்று எப்படி அறிகின்றுய் என்று சொல்லவேண்டும். முக்தனிடம் அஞ்ஞானம் நஷ்டம் என்று ப்ராந்தி ஞானத்தினுல் சித்திக்கின்றதா ? ஸ்வப்ரகாசத்தினுல் சித்திக்கின்றதா ? ஸம்யக் ஞானத்தினுல் சித்திக்கின்றதா ?

வ்யாக்யானம் : முக்தனிடம் அஞ்ஞான நாசம் ஏற்படுகிறது என்று சொல்வதற்குரிய ப்ரமாணம் என்னவென்றே சொல்லமுடியாது. அதனுல் முக்தனிடம் அஞ்ஞான நாசம் என்பதே சித்திக்காது.

**157-158.** அவதாரிகை :

சொல்லப்பட்ட மூன்று பக்ஷங்களும் சரியல்ல என்று முன்போல் தூஷிக்கப்படுகிறது. முக்தன் என்பது, மித்யா ஞானத்தினுல் சித்திக்கின்றதா, ஸம்யக் ஞானத்தினுல் சித்திக்கின்றதா ? அல்லது ஸ்வயம் ப்ரகாசத்தினுல் சித்திக்கின்றதா ? எந்த பக்ஷத்தினுலும் சாதிக்க முடியாது.

ச்லோகம் :

सम्यग्ज्ञानान्मुक्तिसिद्धिर्यदीष्टा नूनं मुक्तः कुड्यवत्ते जडः स्यात् ।

मिथ्याज्ञानान्मुक्ति सिद्धिर्यदीष्टा स्रक्सर्पादिर्मुख्य एवैष मुक्तः

मुक्तो मह्यं स्वप्रकाशश्चकास्तीत्येषा वाणी स्वानुभूत्या विरुद्धा ।

न ह्यश्रुत्वा शास्त्रमेतन्मनुष्यः कश्चिज्जानात्येष मुक्तोः शुकादिः

ச்லோகார்த்தம் : ஸம்யக் ஞானத்தினுல் முக்தி சித்திக்கின்றது என்றுல் முக்தன் சுவரைப் போல் ஜடமென்றுகும். ப்ராந்தி ஞானத்தினுல் முக்தி சித்திக்கின்றது என்றுல், முக்தன் ரஜ்ஜு ஸர்ப்பத்திற்கு ஸமானம் என்றுகும். முக்தன் எனக்கு ஸ்வயம் ப்ரகாசமாக அறியப்படுகிறுன் என்றுல் அது ஸ்வானு பூதிக்கு விரோதம். சாஸ்திரம் படிக்காமல் சுகர் முதலானேர் முக்தர்கள் என்று யாரும் அறிகின்றதில்லை.

வ்யாக்யானம் : 1. முக்தன் என்பது ப்ரமாணத்தினுல் அறியப்படுவதாகச் சொல்லப் படுமானுல் ப்ரமாண வேத்யம் என்றுல் முக்தன் ஜடம் என்று சொல்ல நேரிடும்.

2. முக்தன் மித்யா ஞானத்தினுல் சித்திப்பதாகச் சொல்லப்படுமானுல் ரஜ்ஜு ஸர்ப்பம் போல் அசல் வஸ்துவே இல்லையென்றுகும். இல்லாத வஸ்துவிற்கு பந்த மோக்ஷம் ஸம்பவிக்காது.

3. ஸ்வப்ரகாசத்திஞல் அறியப்படுகிறது என்று சொல்லப்படுமாஞல் தன்னைக் காட்டிலும் வேருக இருப்பவன் முக்தன் என்று தடஸ்த்தமாக இருந்து அறிகின்ருஞ அல்லது ப்ரத்யக்த்வேன அறிகின்ருஞ ?

தடஸ்த்தஞக இருந்து தன்னைக் காட்டிலும் வேருனவன் முக்தன் என்று அறிகிருன் என்ருல் ஸ்வப்ரகாசமாக அறிகின்ருன் என்று சொல்வது விருத்தம். தன்னைக் காட்டிலும் வேருன ஒன்றை, ப்ரமாணத்திஞலோ, ப்ராந்தி ஞானத்திஞலோ அறிகிருன் என்று சொல்லமுடியாது. தடஸ்த்தம் என்ருல் வேத்யமாகத்தான் இருக்க வேண்டும் ஸ்வப்ரகாசமாக இருக்க முடியாது. ப்ரத்யக்த்வேன அறியப்படுகிறது என்ருல் அவன், நான், என்ற பேதம் என்னிடமே அறியப்படுகிறது என்று சொல்லமுடியாது. ஆகவே முக்தன் எனக்கு ஸ்வப்ரகாசமாக அறியப்படுகிருன் என்ற வாக்யமே பொருந்தாது. அதஞல் அந்த வாக்யம் ம்ருஷா என்றே சித்திக்கின்றது. லோகத்தில் சுகர், வாமதேவர் என்பவர்கள் முக்தர்கள் என்று சாஸ்திர ப்ரமாணத்திஞல்தான் ப்ரசித்தமாக இருக்கிறது. அதேபோல் பந்தாவஸ்த்தை முக்தா வஸ்த்தை என்பதும் சாஸ்திரமின்றி அறியமுடியாது. ச்ருதி அதற்கனுகூலமான ஸ்ம்ருதிகளால்தான் அறியப்படுகிறது. ஸ்திதப்ரஞ்ஞனுடைய லக்ஷணம் என்ன என்று கீதையிஞல் அறிந்திருக்கவேண்டும் அல்லது லோக வ்யவஹாரங்களில் ஈடுபாடு அற்றவஞக சுகம், துக்கம், விருப்பு, வெறுப்பு என்பவைகள் அற்ற நிலையில் இருப்பவனைக் கொண்டும் அறியலாம். ஆகவே இவ்விதம் முக்தனென்பவன ஞானமின்றி ஸ்வயம் ப்ரகாசமாக அறியப்படுவதாகச் சொல்லமுடியாது. ஆகவே, தன்னையன்றி வேருக ஒருவன் இருக்கின்ருன் என்றம் அவன் வித்வான் முக்தன் என்றும் அஞ்ஞானத்திஞல்தான் கல்ப்பிக்கப்படுகிறதேயன்றி உண்மையில் முக்தனுமில்லை. பந்தனுமில்லை. ஏனெனில் அஞ்ஞ நிலையில் அறியப்படும் ஸர்வ விவகாரங்களும் உண்மையாக இருக்கின்றதென்று எந்த ப்ரமாணத்திஞலும் அறியப்படவில்லை. அதஞல் இந்த வ்யவகாரங்கள் எல்லாம் மித்யை என்றே சித்திக்கின்றது. தத்வ ஞானம் ஏற்படுமாஞல், இவ்வித விவகாரங்களுக்கு இடமே இல்லை.

**159-160.** அவதாரிகை :

அஞ்ஞானம் என்பது, தன்ஞல் சிருஷ்டிக்கப்பட்ட மனஸ் என்பதை உபாதியாகக் கொண்டு ப்ரஹ்மத்தில் ஸம்பந்தமுடையதாக ஆகிறது என்று சொல்லப்படும் நான்காவது பக்ஷமும் சரியல்லவென்று தூஷிக்கப்படுகிறது.

**ச்லோகம் :** ताटस्थ्येनोपाधिमादाय मोहश्चैतन्येऽस्मिन्स्वप्रकाशे प्रविष्टः ।

तेनेह स्याद्बन्धमोक्षव्यवस्थेत्युक्तं यत्प्राग्दूषणं तस्य सिद्धिः

ताटस्थ्येनोपाधिरङ्गं यदि स्यान्मोहाविष्टेर्ब्रह्मणि स्वप्रकाशे ।

अग्निक्षेपस्योल्मुकं यद्वदेवं मोहस्य स्यात्र प्रदेशस्थितत्वम्

**ச்லோகார்த்தம் :** தடஸ்த்தமாக இருக்கின்ற மனஉபாதியை அபேக்ஷித்து அஞ்ஞானமானது ஸ்வப்ரகாச சைதன்யத்தில் ப்ரவேசிக்கின்றது. அதஞல் பந்த மோக்ஷ வ்யவஸ்த்தை சித்திக்கின்றது என்று சொல்லப்பட்டது. முன்பு சொல்லப்பட்ட தோஷங்கள் இந்த பக்ஷத்திலும் இருக்கின்றது என்று அறிந்து கொள். எவ்விதம் தீவட்டியானது க்ருஹத்தில் அக்னி ப்ரவேசிப்பதற்கு நிமித்தமாக இருக்கின்றதோ அவ்விதம்

தடஸ்த்தமாக இருக்கின்ற மனஉபாதி என்பது ஸ்வப்ரகாசமான ப்ரஹ்மத்தில் அஞ்ஞானம் ப்ரவேசிப்பதற்கு நிமித்தம் என்று சொல்லப்படுமானுல் அந்த அஞ்ஞானம் எந்த தேஹத்தில் இருக்கின்றதென்று சொல்ல முடியாது.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மத்தில், அஞ்ஞானம் என்பது அதன் கார்யமான மனஸ் என்பதன் மூலமாகவே ஸம்பந்தப்படுகிறது என்று சொல்லப்படுமானுல், மனே அவச்சின்ன ப்ரஹ்மமே அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அவ்விதம் சொல்லப்படுமானுல் அந்த ப்ரஹ்மம் ஆகாசாதி ப்ரபஞ்சத்திற்கு உபாதானமாக ஆக முடியாது. ஏனெனில் மனஸினுல் உபலக்ஷிதமான ப்ரஹ்மத்தில்தான் அஞ்ஞானம் இருப்பதாகச் சொல்லப்படுமானுல் மனே அனவச் சின்னமான ப்ரஹ்மத்திலும் அஞ்ஞானம் இருப்பதாகச் சொல்லநேரிடும். இந்த பக்ஷத்திலும் பந்தமுக்த வ்யவஸ்த்தை சொல்ல முடியாது. உதாரணமாக எப்படி ஒரு கட்டையில் பற்றிய அக்னியானது கட்டையின் மூலமாக க்ருஹத்தில் ப்ரவேசிக்கின்றபோது அக்னி என்பது க்ருஹம்பூராவும் வ்யாபிக்கின்றதால் அந்த க்ருஹத்தில் அக்னி அபாவம் சொல்லமுடியாதோ அதுபோல் அஞ்ஞானம் என்பதும் மனஸ் என்பதை த்வாரமாகக் கொண்டு ப்ரஹ்மத்தை வ்யாபிக்கின்றதால், ப்ரஹ்மத்தினிடம் அஞ்ஞான அபாவம் சொல்ல முடியாது. அதனுல் பந்த மோக்ஷவ்யவஸ்த்தையும் சித்திக்கிறது.

**161. அவதாரிகை :**

சொல்லப்பட்ட விஷயம் த்ருஷ்ட்டாந்தம் மூலம் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

अग्निः क्षिप्तो ह्युल्मुकेन प्रदेशमात्रव्याप्तिं वर्जयित्वा समस्तम् ।
वेश्म व्याप्नोत्येवमेवेह कृत्स्नं ब्रह्म व्याप्नोत्याधिनाऽस्तं तमोऽपि

**ச்லோகார்த்தம் :** தீவட்டியினுல் உள்ளே வைக்கப்பட்ட அக்னியானது ஏகதேச மாத்ரத்தை வ்யாபிக்கின்றதில்லை. க்ருஹம் முழுவதும் வ்யாபிக்கின்றது. அதேபோல் உபாதியினுல் செலுத்தப்பட்ட அஞ்ஞானமானது ப்ரஹ்ம பூராவும் வ்யாபிக்க நேரிடும்.

**வ்யாக்யானம் :** அக்னியுடன் கூடிய கட்டை எந்த இடத்தில ஸம்பந்தப்படுகிறதோ அதோடு மட்டுமின்றி மற்ற இடங்களிலும் எப்படி வ்யாபிக்கின்றதோ அதுபோல், மனஸ் என்பதின் ஸம்பந்தத்தினுல்தான் அஞ்ஞானத்திற்கு ப்ரஹ்ம ஸம்பந்தம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுமானுல் அஞ்ஞானம் என்பது ப்ரஹ்மஸ்வரூபம் பூரா வ்யாபிக்கின்றது என்றே சொல்லவேண்டும். அதனுல் பத்தன் என்றும் முக்தன் என்றும் வ்யவஸ்த்தை சொல்வதற்கு முடியாது.

**162. அவதாரிகை :**

இந்த விதம் விகல்பம் செய்யப்பட்ட பக்ஷங்கள் எல்லாமே சரியல்ல என்று நிரூபணம் செய்யப்பட்டதால், ஆரம்பத்தில் எங்களால் சொல்லப்பட்ட விதம் அஞ்ஞானத்தினுல் பந்தாவஸ்த்தையென்றும், விஞ்ஞானத்தினுல் முக்தா வஸ்த்தை என்றும் சொல்லப்பபட்ட சிந்தாந்தமே சரி என்று சித்திக்கின்றது.

ச்லோகம் :

तस्माद्ब्रह्माविद्यया जीवभावं प्राप्याऽऽसित्वा तावके तु स्वरूपे ।
त्वच्चित्तेन स्पन्दितं जीवजात माकाशादि क्ष्मावसानं च पश्येत्

ச்லோகார்த்தம் : ஆகையால் ப்ரஹ்மமானது அவித்தையயினுல் ஜீவபாவத்தை அடைந்து உன்னுடைய ஸ்வரூபமாக இருந்து கொண்டு கல்ப்பிதமான ஜீவர்களையும், ஆகாசம் முதல் பூமி வரையில் உள்ள ப்ரபஞ்சத்தையும் உன்னுடைய சித்தத்தினுல் காண்கின்றது.

வ்யாக்யானம் : அஞ்ஞானம் என்பது அனுதி காலமாக ப்ரஹ்மத்தினிடம் சக்தி ரூபமாக இருக்கின்றதென்றே சொல்லவேண்டும். அதனுல்தான் ப்ரஹ்மத்திற்கு ஜீவ பாவம் ஏற்படுகிறது. இந்த ஜீவனிடமுள்ள சித்த ஸ்பந்தனமே (அசைவு என்ற மாறுதல்) ப்ரபஞ்ச கல்பனைக்கு காரணம் ஆகிறது. அனுதி ஸம்ஸ்க்காரம் ப்ரபஞ்ச தோற்றத்திற்கு காரணம். (இதுவே த்ருஷ்டி சிருஷ்டி என்று சொல்லப்படுகிறது) ஆகவே ப்ரத்யகாத்ம ஸ்வரூபமான சித்ரூபமான ப்ரஹ்மத்தின் சக்தியான அஞ்ஞானம் என்பதும் ப்ரஹ்மத்தில் ஆரோபிதமாக இருக்கின்றது. அதனுல் ப்ரபஞ்ச தோற்றம், ஜீவபாவம் என்பதெல்லாம் அனந்தமாக உண்டாகிறது. ஆகவே அஞ்ஞான மாத்ர உபாதிகமான ப்ரஹ்மமென்பது ஈச்வரன் என்றும், அஞ்ஞான கார்யமான அந்த:கரணம் என்ற உபாதியுடன் கூடின ப்ரஹ்ம சைதன்யம் ஜீவன் என்றும் வ்யவஹாரம் செய்யப்படுகிறது. இவ்விதம் செய்யப்படும் ப்ரபஞ்ச வ்யவஹாரம் அனைத்தும் அவித்யாவிலாஸம்தான். சிதாபாஸன் இருக்கின்றபோதே இந்த வ்யவஹாரம் இருக்கின்றது. சுஷுப்தியில் எவ்வித வ்யவஹாரமும் கிடையாது. அதனுல் அந்த:கரண ப்ரதிபலன சிதாபாஸனுல்தான் அஹம் என்றும் இதம் என்றும் ஸர்வவ்யவஹாரங்களும் ஏற்படுகின்றது என்று சொல்லப்படும் எங்கள் பக்ஷம்தான் சரி என்று சித்திக்கின்றது. (சித்த ஸ்பந்தனம் என்பது அவித்யை என்பதையே குறிப்பிடப்படுகிறது)

**163.** அவதாரிகை :

ஜீவபாவம் என்பது ப்ரஹ்ம வித்யை இன்றி நிவர்த்திக்காது. ப்ரஹ்ம வித்யை என்பது வேதம், ஆசார்யன் என்ற உபாதி இன்றி ஏற்படாது. ஆகவே, என்னையன்றி வேறு ஜீவன் இல்லயென்ருல் ஆசார்யன் என்பதும் ஸம்பவிக்க முடியாது. அதனுல் அஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட ஜீவ பாவம் என்பது எப்படி நிவர்த்திக்கும்?

ச்லோகம் :

स्वीयाविद्याकल्पिताचार्यवेदन्यायादिभ्यो जायते तस्य विद्या ।
विद्याजन्मध्वस्तमोहस्य तस्य स्वीये रूपेऽवस्थितिश्चित्प्रकाशे

ச்லோகார்த்தம் : தன்னுடைய அவித்யையினுல் கல்ப்பிதமான ஆசார்யன், வேதம், ந்யாயம் இவைகளால் அவனிடத்தில் வித்யை ஏற்படுகிறது. வித்யோற்பத்தியில் அவித்யை அற்ற அந்த ஜீவனுக்கு ஸ்வப்ரகாச ஸ்வரூபத்தில் நிஷ்ட்டை ஏற்படுகிறது.

வ்யாக்யானம் : அஞ்ஞானம் என்பது ஏகம் என்பதால் அதனுல் ஏற்பட்ட ப்ரதி பிம்பமான ஜீவன் என்பதும் ஏகம்தான். ஆனுல் அவித்யாகார்யமான அந்த:கரணத்தில்

அவச்சின்னமான ஏகமான ஜீவனுக்கு அனந்தமான ப்ரமாத்ராதி பாவம் (ப்ரமாதா ப்ரமாணம் முதலான) ஏற்படுகிறது. ஆகவே எந்த அந்த:கரண அவச்சின்ன சைதன்யமான ஜீவனுக்கு ச்ரவணுதிகளால் வித்யை ஏற்படுகின்றதோ அவனுக்கே அவித்யை அதன்கார்யம் என்பதெல்லாம் நிவர்த்திக்கின்றது. அந்த ஜீவனையே ஆசார்யன் என்று சொல்கிருேம். இந்த வித்வான் தனக்கு வேருக எதுவுமே இல்லையென்று அறிந்திருந்தாலும் கூட, இவ்வித வித்யை ஏற்படாத மற்றுமுள்ள ஜீவர்களுக்கு வித்யோற்பத்தி ஏற்படுவதற்காக உபதேசம் செய்யலாம். இந்த விதம் அவித்யா கார்யமான அந்த:கரண அவச்சின்ன உபாதியில் ஒரே ஸமயத்திலோ அல்லது க்ரமமாகவோ வித்யை ஏற்படுவதற்கு ப்ரவர்த்தி ஏற்படலாம். அதனுல் வித்வான் மற்றவர்களுக்கு உபதேசிக்கலாம். ஆகவே வ்யாவஹாரிகமான ப்ரமாத்ராதி பேதங்களை ஒத்துக்கொள்வதால் ஏக ஜீவவாதம் என்பதில் பொருந்தாமை என்பது ஏதுமில்லை. ஏனெனில் ஸ்வப்னத்தில் எவ்விதம் தன்னையன்றி வேருக இருக்கின்ற ஆசார்யனிடமிருந்து மந்த்ரோபதேசங்களைப் பெற்று க்ருதார்த்தனுகின்ருனே அதுபோல் ப்ரஹ்ம அஞ்ஞானத்தினுல் ஆசார்யன் வேதம் முதலானவைகள் கல்ப்பிக்கப்பட்டு அதனுல் உபதேசிக்கப் பெற்று, அவித்யா நாசம் ஏற்படுவதால் ஸ்வஸ்வரூப அவஸ்த்தானம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுவதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை.

ப்ரஹ்மமென்பது ஏகம், ப்ரஹ்மத்துடன் கூடிய அஞ்ஞானம் அதன்கார்யமான புத்தியில் ப்ரதிபலிக்கின்றது என்றும் புத்தி என்பது அனேகம் என்றும் சொல்லப்படுகிறது. இந்த புத்தி மூலமாகவே அஞ்ஞானம் ப்ரஹ்மத்தில் ப்ரவேசிக்கின்றது என்று ஒரு சிலரால் சொல்லப்படுகிறது. இதுவும் சரியல்ல. ஏனெனில் அக்னியுடன் கூடிய கட்டை க்ரஹத்தில் ஓரிடத்தில் ஸம்பந்தப்பட்டாலும் க்ரஹம் பூரா வ்யாபிக்கும் என்பது போல் அஞ்ஞானம் என்பது புத்தித்வாரா ப்ரஹ்ம சைதன்யம் பூரா பரவி இருக்கிறதென்றே சொல்ல வேண்டும். அதனுல் இந்த முறையிலும் பந்த முக்தாவஸ்த்தைக்கு காரணம் சொல்ல முடியாது.

ப்ரஹ்மத்தில் ஸம்பந்தப்படாமல் தடஸ்த்தமாக இருக்கின்ற புத்தியினுல் அவித்யை என்பது ப்ரஹ்மத்துடன் ஸம்பந்தப்படுகிறது என்று சொல்வதும் பொருந்தாது. தடஸ்த்தம் என்பதற்கு உதாரணமாக, பசுத்வம் என்பது எப்படி அஞ்ஞனுடன் ஸம்பந்தப்படாமலேயே, த்ரிதிஹரி சப்தமானது (பசுத்வம் என்பதால் அறியாமையுடன் கூடியவன்) எப்படி அஞ்ஞனை தெரிவிப்பதற்கு காரணமாகிறதோ அதுபோல் என்று சொல்லப்பட்டது. இந்த த்ருஷ்ட்டாந்தம் இந்த இடத்தில் பொருந்தாது. ஏனெனில், அஞ்ஞர்கள் அனேகர் இருக்கின்ற இடத்தில் குறிப்பிட்ட ஒருவனை த்ரிதிஹரி சப்தத்தால் குறிப்பிடுவதற்கு காரணம் இருக்கினறது. ஆனுல் ப்ரஹ்மமென்பது ஏகம் என்பதால் அந்த த்ருஷ்ட்டாந்தம் பொருந்தாது. (அதாவது அஞ்ஞர்கள் அனேகம் இருக்கலாம். ஆனுல் எல்லோரும் ஒரே விதமாக இருப்பார்கள் என்று சொல்லமுடியாது. அதனுல் த்ரிதிஹரி சப்தத்தினுல் குறிப்பிடக் கூடிய காரணம் எவனிடம் இருக்கிறதோ அவனிடம் ப்ரயோகிக்கப்படுவது பொருந்தும்). ப்ரஹ்மம் ஏகம் நிரம்ஸம். அதனுல் புத்தி என்ற உபாதியினுல் அவித்யை ப்ரஹ்மத்தில் ஒரு அம்ஸத்தில் இருக்கிறது என்ருே இல்லையென்ருே சொல்வதற்கு முடியாது. அதனுல் இந்த பக்ஷமும் சரியல்ல.

அஞ்ஞானம் என்பதும், மாயை என்பதும் வேறு என்றும், அஞ்ஞானம் என்பது ஜீவனிடம் இருக்கிறது என்றும் மாயை என்பது ஈச்வர சக்தி என்றும் சொல்லப்பட்டது. மேலும் ப்ரத்யக்ஸ்வரூபத்திலுள்ள அவித்யையைக் காட்டிலும் வேருன ஈச்வரனிடமுள்ள மாயா சக்தி ஸங்கோச விகாஸமுடையது என்று சொல்லப்படும் பக்ஷமும் சரியல்ல. ஏனெனில் மாயா சக்தி இவ்விதம் இருக்கின்றது என்பதில் ப்ரமாணம் என்ன ? ஸம்யக் ஞானத்திஞல் சித்திக்கின்றதா ? ப்ராந்தி ஞானத்திஞலா ? அல்லது ஸ்வயம் ப்ரகாசத்திஞலா ? என்று விசாரிக்கின்றபோது; ஸங்கோச விகாஸமுடைய மாயா சக்தி என்பதே சித்திக்கமுடியாது. அதஞல் பந்த முக்த வ்யவஸ்த்தை என்பதும் சித்திக்காது.

கடைசி பக்ஷமான அஞ்ஞானம் என்பது ப்ரமம் என்றும் ஸம்ஸ்காரரூபமாக அஞதியாக இருக்கின்றதென்றும் ஒவ்வொரு ஜீவனுக்கும் தனித்தனியாக இருக்கின்றதென்றும் சொல்லப்பட்டது. இவைகள் ஞான கர்ம ஸமுச்சயத்திஞல்தான் நிவர்த்திக்கும் என்று சொல்லப்படுகிறது. இதுவும் சரியல்ல. ப்ரமம், ஸம்ஸ்க்காரம் என்பவைகளுக்கு (உபாதானமாக) காரணமாக பாவரூபமான அஞ்ஞானம் ஒன்று இருப்பதாகச் சொல்லாவிடில், காரணமின்றி ப்ரமம் ஸம்ஸ்க்காரம் இருக்கிறது என்று நிரூபணம் செய்வதற்கு முடியாது. பீஜாங்குரந்யாயேன பரஸ்பரம் உபாதானம் என்று சொல்லலாமே என்ருல் அவ்விதம் சொல்ல முடியாது. ஏனெனில் உபாதானம் என்பது த்ரவ்யமாகஇருக்கவேண்டும். ப்ரமம் ஸம்ஸ்க்காரம் என்பதெல்லாம் குணமாக இருப்பதால், குணம் ஒருவஸ்துவிற்கு உபாதானமாகாது. ஒரு வஸ்து கார்யம் என்றும் அநித்யம் என்றும் சொன்ஞலும் சரி அல்லது நித்யம் என்று சொன்ஞலும் சரி, கார்யமான வஸ்து மற்ருென்றுக்கு உபாதானமாக முடியாது. அதற்காக பாவரூபமான அஞ்ஞானம் உபாதானமில்லையென்றும் ஆத்மாவே இரண்டிற்கும் உபாதானம் என்று சொல்லப்படுமாஞல், ப்ராந்தி ஸம்ஸ்க்காரம் என்ற இரண்டும் நிவர்த்திக்க வேண்டுமாஞல் உபாதானமான ஆத்மாவும் நிவர்த்திக்கப்படவேண்டும். நித்யமான ஆத்மாவிற்கு நிவர்த்தி கிடையாது. அதஞல் ப்ரமம், ஸம்ஸ்க்காரங்களுக்கும் நிவர்த்தி கிடையாது அதஞல் ஸம்ஸார நிவர்த்தி என்பதே ஏற்படாது. மேலும் கூடஸ்த்தமான ஆத்மாவில் மாறுபாடு ஏற்படமுடியாததாகையால் ப்ரமம் ஸம்ஸ்காரங்களுக்கு ஆத்மா உபாதானமாக முடியாது. கார்ய ரூபமாக பரிணும் ஏற்படுமாஞல் விகாரியான ஆத்மா அநித்யமென்ருகும். இவ்விதம் 6,7, என்ற இரண்டு பக்ஷங்களும் ஆசார்யர் தனியாக விசாரிக்கவில்லை என்ருலும் இவ்விதம் விசாரிக்கின்றபோது இந்த தோஷங்கள் ஸம்பவிக்கின்றது என்பது தானே அறியப்படுகிறது.

பூர்வ : அப்படியாஞல் சேதனம், அசேதனம் என்று ஸர்வபேதங்கள் இருப்பதாக அறியப்படும். இந்த ப்ரபஞ்சம், ஏகமான சின்மாத்ர ஸ்வரூபத்தை ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்ட ஏகமான அஞ்ஞானத்திஞல் கல்ப்பிக்கப்பட்டது என்று சொல்லப்படுமாஞல் ஆசார்யனென்ருே சிஷ்யனென்ருே பேதம் எதுவும் இருக்கமுடியாது/ .மேலும் "ஆசார்யவான் புருஷோ வேத" என்றும் "தத்வித்திப்ரணி பாதேன பரிப்ரச்னே னஸேவயா" என்ற வாக்யங்கள், ஆசார்யனே அடைந்து ஸேவை செய்து வித்யையைப் பெற வேண்டும் என்று தெரிவிக்கின்றது. ஏக ஜீவவாதத்தில் இந்த வாக்யங்களுக்கு என்ன பதில் சொல்ல முடியும் ?

**சித்தா :** சிதாத்மஸ்வரூபத்தை அன்றி வேருக அறியப்படும் மற்ற வஸ்துக்கள் எல்லாம் அஞ்ஞான கல்பிதம் என்று சொல்லப்பட்ட விஷயத்தில் விரோதம் ஏதுமில்லே. அஞ்ஞானகல்பிதமாக ஆசார்யன், சாஸ்திரம், சிஷ்யன் என்பதெல்லாம் ஒத்துக் கொள்ளப்படுவதால் சிஷ்யன் ஆசார்யனே அடைந்து வைராக்யாதிகளே அடைந்து வித்யையை அடையலாம். அவித்யா நிவர்த்தியினுல் முக்தியும் சித்திக்கலாம். ஆகவே ஸர்வமும் கல்பிதம் ப்ரஹ்ம சைதன்யம் ஒன்றே பரமார்த்தம் என்று சொல்லப்படுவதில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லே. ஸர்வம் கல்பிதம் என்று சொல்லப்பட்டதற்காக சுக்தியில் தோன்றும். ரஜதம் போலவோ அல்லது ஸ்வப்னுவஸ்த்தையிலுள்ள வஸ்துக்கள் போலவோ, பார்க்கப்படும் வஸ்து அசலே இல்லயென்று சொல்வதற்கு முடியாது. ஜாக்ரத் ப்ரபஞ்ச விவகாரங்களுக்கும் ஸ்வப்னுதி விவகாரங்களுக்கும் சிறிது வித்யாஸம் இருக்கின்றது. சேதனுன ஆசார்யன், அனுதியான வேதம் இரண்டுக்கும் வ்யாவஹாரிகப்பரமாண்யம் உண்டு. ஸர்வ விகல்பங்களுக்கும் அதிஷ்டானமான ப்ரஹ்ம சைதன்யம்தான், ஞானம் ஏற்பட்ட உபாதியுடன் கூடிய ஆசார்ய ரூபமாகவும் வேத ரூபமாகவும் கல்ப்பிக்கப்படுகிறது. ப்ரமாண ப்ரமேயவ்யவஹாரங்களும் அவ்விதமே கல்பிக்கப்படுகிறது. அதேபோல் அவித்வானுக கல்ப்பிக்கப்படும் ப்ரஹ்ம சைதன்யமே சிஷ்யன் என்று வ்யவஹாரம் செய்யப்படுகிறது. ஆசார்யனுக்கு ப்ரஹ்மவித்யை ஏற்பட்ட போதிலும் ப்ராரப்தம் உள்ள வரை அவித்யாலேசம் இருப்பதாக ஒப்புக் கொள்ளப்படுவதால் சிஷ்யனுக்கு உபதேசிக்கலாம்.

ஆகவே, ஜாக்ரத்வ்யவஹாரத்தில் ஸத்யமும் கலந்திருக்கின்றது. ஸர்வகல்பிதங்களுக்கும் அதிஷ்டான ஸ்வரூபம் ப்ரஹ்மமென்று சொல்லப்படுவதால் சாஸ்த்ரா சார்ய பேதவ்யவஹாரங்கள் எப்படி இருக்க முடியும் என்ருே பந்த நிவர்த்தி எப்படி ஏற்படும் என்ருே விவாதம் செய்வதற்கு இடமில்லே. தன்னிடமுள்ள அவித்தையை தன் முயற்சியினுலேயே வித்யையை அடைந்து ஸ்வஸ்வரூப நிஷ்ட்டையை அடையலாம். ஆகவே அஞ்ஞானம் ப்ரஹ்மாச்ரயம் என்றே சொல்லவேண்டும். "ஸகல வாங்மனஸாதிகதாசிதி:" ஸகல வாங்மனஸவ்யவஹார பாக்" என்று வாக்மனஸ் என்ற விவகாரங்களுக்கு எட்டாத வஸ்துவாக இருந்தபோதிலும், உபாதி வஸாத் அறியப்படுவதாகச் சொல்லப்படுகிறது. ஆனுல் உண்மையில் அறியப்படும் வஸ்துவல்ல. ஸர்வத்தையும் அறிவிக்கின்ற அறிவு ஸ்வரூபம் என்றே அறிய வேண்டும்.

**164.** அவதாரிகை :

'அஹம் அஞ்ஞ:' என்று எல்லோருக்கும் அனுபவ சித்தமாக இருக்கின்றது. 'கஸ்ய அவித்யா' என்று சிஷ்யன் கேட்க்கின்றபோது 'யஸ்யத்வம் ப்ருச்சாமிதஸ்ய' என்று பதில் சொல்லப்படுகிறது. அதாவது அவித்யை எங்கு இருக்கிறது என்ற கேள்விக்கு, எவன் இந்த கேள்வியை கேட்க்கின்ருனே அவனிடமே அவித்யை இருக்கின்றது என்றுஆசார்யரரால் பதில் சொல்லப்படுகிறது. இதனுல் அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்று தானே சொல்லப்படுகிறது ? ப்ரஹ்மாச்ரயம் என்று எப்படிச் சொல்வது ?

ச்லோகம் : अज्ञानि ब्रह्म जीवो भवति भवति च स्पष्टमज्ञानमस्य
प्रागस्पष्टं सदन्तः करणनिपतितज्योतिभासयोगात् ।
चैतन्यैकप्रतिष्ठं स्फुरति न हि तमस्तादृशं यादृशं
तद्बुद्धिस्थाभासनिष्ठं स्फुरति तदुचितं जीवमौढ्याभिधानम्

ச்லோகார்த்தம் : அஞ்ஞானத்துடன் கூடிய ப்ரமம் என்பது ஜீவனுகிறது. முதலில் அஸ்பஷ்ட்டமாக இருக்கின்ற அஞ்ஞானமானது, அந்த:கரணத்திலிருக்கின்ற சிதாபாஸனுல் ஸ்பஷ்ட்டமாகிறது. புத்திஸ்த்தமான சிதாபாஸத்தில் இருக்கின்ற அஞ்ஞானம் எவ்விதம் ஸ்புரிக்கின்றதோ அவ்விதம் கேவல சைதன்யத்திலுள்ள அஞ்ஞானமானது ஸ்புரிக்கவில்லே. ஆகையால் ஜீவன் அஞ்ஞன் என்று சொல்வது உசிதமென்றேயாகும்.

வ்யாக்யானம் : கேவல சின்மாத்ரமானஸ்வரூபமே அனுதிகாலமாக அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாக இருக்கிறது. அதனுல்தான் ப்ரஹ்மத்திற்கு ஜீவபாவம் என்பதும் ஸம்ஸாரம் என்பதும் ஏற்படுகிறது. இந்த அஞ்ஞானம் என்பது ஆவரணம், விக்ஷேபம் என்ற இரண்டு விதமான ஆகாரமுடையதாக இருக்கின்றது. ஆவரண ஆகாரமான அஞ்ஞானம் என்பது ஸ்வஸ்ரூபமான ஸர்வப்ரபஞ்சத்தின் ஜடத்தன்மை அஞ்ஞானத்தின் விக்ஷேப ஆகாரமாக இருக்கின்றது. அதாவது ஸர்வ கார்யங்களிலும் அனுகதமான ஜாட்யம் என்பதே ஜடமான அஞ்ஞானத்தின்விக்ஷேபாகாரம். ஆவரண ரூபமாக இருக்கின்ற அஞ்ஞானம் சைதன்யத்தை மறைக்கின்றது. ஆனுல் ஆவரணமாத்ரமாக அஞ்ஞானம் இருக்கின்றபோது சுஷுப்தியைப் போலும் ப்ரளயத்தைப் போலும் இருக்கின்றதால், அந்த அவஸ்த்தையில் ஜீவன் ஈச்வரன் ஜகத் என்ற பேதம் கல்ப்பிக்கப்படுவதில்லே. எப்போது அஞ்ஞானம் விக்ஷேபாகாரமாக (விவர்த்தமாக மாறுபாட்டை) மாறுதலே அடைகின்றதோ அப்போதுதான் ப்ரஹ்ம சைதன்யம் என்பதை தனக்கு அன்யமான ப்ரபஞ்சாகாரமாக தோற்றுவிக்கின்றது. இந்த காரணத்திஞலேயே ஸர்வப்ரபஞ்சமும் தனக்கு வேருக இருப்பதாக அறியப்படுகிறது. இவ்விதம் விக்ஷேபாகாரமான அஞ்ஞானத்திஞலேயே அந்த:கரணம் முதலான உபாதிகள் உண்டாகின்றது. இந்த உபாதிகளில் ப்ரதிபலிக்கின்ற சைதன்யமே சிதாபாஸன் என்று சொல்லப்படுகிறது. இந்த நிலேயில் சைதன்யத்திற்கு அந்த:கரணத்துடன் ஏற்படும் தாதாத்ம்ய அத்யாஸத்திஞல் அந்த:கரணங்களுடன் சேர்ந்து அஹம் என்று ப்ரதீதி (ஞானம்) ஏற்படுகிறது. அஞ்ஞான ஆச்ரயமான ப்ரஹ்மமென்பது சிதம்ஸத்திஞல் ஜீவபாவத்தை அடைகிறது. (ஜீவன் என்ற அனுபவம் ஏற்படுகிறது.)

இந்த அஞ்ஞானம் அந்த:கரணுத்மகமாக விக்ஷேபாகாரத்தை அடைவதற்கு முன்பு, அஞ்ஞானம் என்பது சின்மாத்ரமாக சுஷுப்தி அவஸ்த்தையில் இருக்கின்றது என்ருலும் அந்த நிலேயில் அஞ்ஞானம் இருக்கின்றதென்பது ஸ்பஷ்ட்டமாக அறியப்பட வில்லே. ஜாக்ரத்தில் அந்த:கரண ப்ரதிபலன சைதன்யத்திஞல்தான் அஹம் அஞ்ஞ: என்று, தன்னிடம் அஞ்ஞானம் இருப்பதாக அறியப்படுகிறது. ஆகவே அந்த:கரண ப்ரதி

பிம்பித சைதன்யமே ப்ரதிபிம்பத்தின் மூலமாக ஸவிஸேஷமாக இருக்கின்றது. அதனால்தான் ஜாக்ரத் நிலேயில் அஞ்ஞானம் ஸ்பஷ்ட்டமாக அறியப்படுகிறது. சுஷுப்தியில் அந்த:கரணம் லயத்தை அடைகின்றதால் சைதன்யப்ரதிபலனம் ஏற்படுவதில்லே. அதனால் நிர்விகல்பகமாக சைதன்யம் இருக்கின்றது. ஆகவே அஞ்ஞானம் சுஷுப்தியில் ஸ்பஷ்ட்டமாக அறியப்படவில்லே. அந்த:கரண ப்ரதிபிம்ப சைதன்யமே ப்ரதிபிம்பத்தின் மூலமாக ஸவிஸேஷமாக இருக்கின்ற நிலேயில்தான் 'அஹம் அஞ்ஞ:' என்று விசேஷமாக (ஸ்பஷ்ட்டமாக அறியப்படுகிறது.) சைதன்யமாத்ரமாக அஞ்ஞானம் இருக்கின்றபோது அஞ்ஞானம் இருக்கின்றது என்ற அனுபவம் ஏற்படுவதில்லே. ஆகவே எனக்கு அஞ்ஞானம் இருக்கின்றது என்று ஸ்பஷ்ட்டமாக அறியப்படுகின்ற நிலேயைக்கொண்டு கேள்வி கேட்க்கின்ற உன்னிடம் தான் இருக்கின்றது என்று பாஷ்யகாரரால் சொல்லப்படுகிறது. அதனால் அஞ்ஞானம் ப்ரஹ்மாச்ரயம் இல்லேயென்று பாஷ்யகாரரால் சொல்லப்படவில்லே. மேலும் ஜீவபாவம் ஏற்படுவதற்கு காரணமாக இருக்கின்ற அஞ்ஞானம் அதன் கார்யமான ஜீவனே ஆச்ரயித்து இருக்கின்றது என்று சொல்வது எப்படி பொருந்தும்? அதேபோல் அஞ்ஞானத்திற்கு ஜீவன் விஷயம் என்று சொல்வதும் பொருந்தாது. அஹம் அஞ்ஞ: என்ற ஞானமே (ப்ரதீதி) அஞ்ஞான கார்யமான அந்த கரணத்தினால் ஏற்படுகிறது. அந்த:கரண அவச்சின்ன சைதன்யமே அஹமஹம் என்று ஜீவபாவத்தில் ப்ரகாசிக்கின்றது. அதனால் அஞ்ஞானம் என்பது ஜீவாச்ரயமுமில்லே, ஜீவன் அஞ்ஞானத்திற்கு விஷயமுமில்லே ப்ரஹ்மமென்பதே அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகவும் விஷயமாகவும் இருக்கின்றது.

**165.** அவதாரிகை :

ஜீவபாவத்தில் இருக்கின்றபோதுதான் அஞ்ஞானம் இருக்கின்றதென்று ஸ்பஷ்ட்டமாக அறியப்படுகிறது என்ற விஷயத்திற்கு அனுகூலமாக வேறொரு விஷயம் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

**अज्ञानं जडशक्तिमात्रवपुषा जीवाद्बहिः सिध्यति जीवारूढमहं न जान इति तु ज्ञानापनोद्यात्मना ।**
**संसिद्धिं प्रतिपद्यते तदुचितं जीवाज्ञताभाषितं द्वैरूप्ये सति रूपमेकमनिशं भात्येवमन्यत्र हि**

ச்லோகார்த்தம் : விக்ஷேப சக்தி ரூபத்தில் இருக்கின்ற அஞ்ஞானமானது ஜீவனுக்கு வேறாக இருக்கின்றது. நான் அஞ்ஞன் என்றதும், ஞானத்தினால் நிவர்த்திக்கக் கூடியதுமான அஞ்ஞானம் என்பது ஜீவனிடத்தில் இருக்கின்றது. அதனால் ஜீவன் அஞ்ஞன் என்று சொல்வதே உசிதம் என்றாகும். இவ்விதம் இரண்டு விதமான அஞ்ஞானத்தில் ஒன்று எப்போதும் ஜீவனிடம் ப்ரகாசிக்கின்றது. மற்றொன்று அவ்விதம் ப்ரகாசிப்பதில்லே.

வ்யாக்யானம் .: ப்ரஹ்மத்தின் சக்தியாகச் சொல்லப்படும மாயை என்பது ப்ரஹ்மபரதந்தரம். இந்த மாயைதான் அவித்யை என்றும் அஞ்ஞானம் என்றும் பலவிதமாகச் சொல்லப்படுகின்றது. பரதந்த்ரமாக இருக்கின்ற இந்த அஞ்ஞானம் ஜடம். இவ்விதம் ஜடாம்ஸமான இந்த அஞ்ஞானம், ஜீவனைக் காட்டிலும் வேறாக இருக்கின்ற கடம், படம் முதலான வஸ்துவாகாரமான ப்ரபஞ்சத்தில் வ்யாபிக்கின்றது. இவ்விதம் அஹங்காராதிகள் அற்ற கேவல சைதன்யத்தில் அஞ்ஞானம் என்பது ஜீவனுக்கு வேறான ப்ரபஞ்சத்தில் வியாபித்திருக்கின்றது. அந்த அஞ்ஞானமே ஜீவசைதன்யத்தில் இருக்கின்றபோது 'அஹம் நஜாநாமி' என்று விசேஷ ஆகாரத்துடன் அறியப்படுகிறது. ஆகவே இந்த விதம் ஜீவனிடமும், ஜீவனுக்கு வேறான ஜட வஸ்துக்களிலும் ஒரே அஞ்ஞானம்தான் இருக்கின்றது என்றாலும், ஞானத்தினால் நிவர்த்திக்கக் கூடிய அஞ்ஞானம் ஜீவனிடமே இருக்கின்றது என்று ஸ்பஷ்ட்டமாக அறியப்படுகிறது. மற்ற ஜட வஸ்த்துக்களில் அவ்விதம் அறியப்படவில்லை. ப்ரகாச ஸ்வரூபமான ஞானம் ஏற்படுகின்றபோது ஆவரண ரூபமான அஞ்ஞானம் நிவர்த்திக்கின்றது. ஆகவே அஞ்ஞானம் ஜீவனிடம் இருக்கின்றது என்று பாஷ்யங்களில் சொல்லப்பட்டதில் தவறு ஏதுமில்லை.

**166.** அவதாரிகை :

அஞ்ஞானத்தின் ஜாட்ய ரூபம், ப்ரஹ்மத்தினிடமே அறியப்படுகிறது என்ற விஷயம் மேலே விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

जडशक्तिमात्रवपुषा गगनश्वसनादिकार्यजननी भवति ।
पुरुषोत्तमस्य वशवर्तितया प्रकृतिः परस्य जगदेकगुरोः

ச்லோகார்த்தம் : விக்ஷேப சக்தி ரூபத்திலுள்ள அஞ்ஞானமானது, ஆகாசம், வாயு, முதலான கார்யங்களை உற்பத்தி செய்கின்றது. அஞ்ஞானம் என்பது, ஜகத் குருவும் புருஷோத்தமனுமாக இருக்கின்ற பரமாத்மாவின் வசத்தில் இருந்து கொண்டு ஜகத் காரணமாக ஆகின்றது.

வ்யாக்யானம் : அஞ்ஞானம் என்பதில் இரண்டு வித ஆகார பேதங்கள் இருக்கின்றதென்பதில் ப்ரமாணம் என்னவென்றால், ஆகாசாதி ப்ரபஞ்சத்திற்கு காரணமான அஞ்ஞானம், தன்னுடைய கேவல ஜடாம்ஸத்தைக் கொண்டு விக்ஷேப ஆகார ப்ரதான்யத்தினால் ஆகாசாதிகளை உற்பத்தி செய்கின்றது. கார்யமான ஆகாசாதிகள் ஜடமாக இருக்கின்றதால் அதன் காரணமான மாயை என்பதும் ஜடமாகத்தான் இருக்கவேண்டும். ஆனால் மாயை என்பதும் அதன் கார்யம் என்பதும் 'இருக்கிறது', 'தெரிகிறது' என்று சொல்லப்படுவதெல்லாம் சித்ரூபமான ப்ரஹ்ம சைதன்யத்தின் ஸ்வரூபம். ஸத்தாஸ்பூர்த்தி என்பது சித்ஸ்வரூப ஸம்பந்தமின்றி ஏற்படமுடியாது. அதுமட்டுமல்ல மாயை என்பது சிதாத்ம ஸம்பந்தமின்றி ஸ்வதந்தரமாக சிருஷ்டிக்க முடியாது. மாயை பரதந்த்ரம் என்று சொல்லப்படுகிறது. அதனால் சாங்க்யவாதம் என்று

சொல்வதற்கு முடியாது. இதே கருத்தை ச்ருதி வாக்யமும் தெரிவிக்கின்றது. சரீராதிகள்-அஞ்ஞானம் இவைகளுக்குள் ஆந்தரமாக இருக்கின்ற இந்த சைதன்யமே அந்தந்த கார்யங்களைச் செய்வதற்கு காரணமாகிறது என்று அந்தர்யாமி ப்ராஹ்மணத்தில் சொல்லப்படுகிறது. அதேபோல், க்ஷராக்ஷராத்மகமான இந்த ப்ரபஞ்சத்திற்கு அன்யமாக இருக்கின்ற ப்ரஹ்ம சைதன்யம் என்பதே உத்தம புருஷன் என்று 'உத்தம:புருஷஸ்து அன்ய:' என்றும் "ஸர்வஸ்யசாஹம்ஹ்ருதி ஸன்னிவிஷ்ட:' என்றும் ஸ்ம்ருதி (கீதா 15-15) வசனம் தெரிவிக்கின்றது. இந்த விதம் ஜீவனுக்கு அந்தர்யாமியாக இருக்கின்ற சைதன்யத்தை ச்ருதி வாக்யங்களும் ஸ்ம்ருதி வாக்யங்களும் தெரிவிக்கின்றது.

கேவல சின்மாத்ர ஸ்வரூபமான ஆத்ம வஸ்து எந்த விசேஷமும் அற்றதாக இருப்பதால் நிர்விகல்பகம். இவ்விதம் நிர்வகல்பகமான சைதன்ய ஆச்ரயமான அஞ்ஞானம் என்பது அஸ்பஷ்டம். அந்த கரண உபாதி ப்ரதிபிம்பித சைதன்யம், அந்த:கரண ஸம்பந்தத்தினுல் ஸவிகல்பகம் என்று சொல்லப்படுகிறது.

பூர்வ : அப்படியானுல் ஆகாசாதிகளும் அஞ்ஞானகார்ய விசேஷமாக இருக்கின்றதால், அவைகளிலும் அஞ்ஞானம் ஸ்பஷ்டமாக அறியப்படவேண்டுமே?

சித்தா : ஜீவனுக்கு வேருன ஆகாசாதிகளும் அஞ்ஞான கார்யம்தான். அவைகளுக்கும் அஞ்ஞான ஸம்பந்தமும் இருக்கின்றது. சைதன்ய ஸம்பந்தமும் இருக்கின்றது. அதாவது ஜாட்யதன்மையினுல் அஞ்ஞான ஸம்பந்தமும், ஆகாசாதிகள் 'இருக்கிறது', 'தெரிகிறது' என்பதால் சித்ஸம்பந்தமும் இருக்கின்றது. ஆனுல் சைதன்ய ஸம்பந்தத்தினுல் அந்த:கரணத்தில் அஹம் என்று எப்படி ஸவிகல்பகமாக அறியப்படுகிறதோ அதுபோல் ஆகாசாதிகளில் அஞ்ஞானம் ஸவிகல்பகமாக அறியப்படவில்லை.

ஜடாத்மனு அஞ்ஞானம் ஸர்வத்திலும் அனுவ்ருத்திக்கின்றது என்ருலும் சைதன்ய ஸம்பந்தமின்றி ஸ்வதந்தரமாக எந்தக்கார்யமும் உற்பத்தி செய்வதற்கு முடியாது. ஆகவே மாயா ஸம்பந்த சைதன்யமே ஜகத்காரணம் என்று ச்ருதி ஸம்ருதிகளால் அறியப்படுகின்றது. அதனுல் ப்ரதானம் காரணம் என்று சொல்லப்படும் ஸாங்க்யவாதம் என்று சொல்வதற்கு முடியாது.

**167. அவதாரிகை :**

அப்படியானுல் ஆகாசாதிகளில் அஞ்ஞானம் ஜாட்ய ரூபமாக இருப்பதால் ஸவிகல்பகமாக அறியப்படவில்லை என்றும் ஜீவனிடம் அஞ்ஞானம் ஆவாரகமாக இருக்கின்றதால் ஸவிகல்பகமாக அறியப்படுகிறது என்றும் இரண்டிற்கும் வித்யாஸம் சொல்லப்படுமானுல், இரண்டிற்கும் லக்ஷணபேதமிருப்பதால், (அஞ்ஞானத்தில்) வஸ்து பேதம் இருப்பதாகச் சொல்லாமே? என்ருல்,

ச்லோகம் : इयमेव सर्वजननी प्रकृतिर्वशिनी शरीरिणमिमं पुरुषम् ।
अधिरुह्य जीवमहमज्ञ इति स्फुरणैकगोचरवपुः स्फुरति

ச்லோகார்த்தம் : ஸர்வ காரணமான இந்த அஞ்ஞானமே சரீரத்துடன் கூடிய ஜீவனை ஆச்ரயித்து, அவனை தன்வசப்படுத்தி 'நான் அஞ்ஞன்' என்ற ரூபத்தில் சாக்ஷிக்கு விஷயமாக இருக்கின்றது.

வ்யாக்யானம் : ஆகாசாதிகளில் அஞ்ஞானம் என்பது கேவல ஜடாத்மனு இருக்கின்றதென்று முன்னுல் சொல்லப்பட்டது. இப்போது ஜீவனிடம் அஞ்ஞானம் என்பது ஞானவிரோதி ரூபமாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது.

ஆகாசம் முதலான ப்ரபஞ்சத்திற்கு காரணமான ப்ரக்ருதியை அவித்யை என்று சொல்லப்படுகிறது. இந்த அவித்யை, அதன் கார்யமான அந்த:கரணத்துடன் சைதன்ய ஸம்பந்தம் ஏற்படுகின்றபோது சிதாபாஸ ஸம்பந்தமுடையதாக ஆகிறது. இவ்விதம் சிதாபாஸஸம்பந்தமுடைய அஞ்ஞானத்திஞல்தான் கேவல சைதன்ய ஸ்வரூபம் ஜீவ பாவத்தை அடைகின்றது. இவ்விதம் சரீரஸம்பந்தம் ஏற்படுகின்றதால், அந்த சைதன்யமே சரீரி என்றும், புரிஸ்யனுத் புருஷன் என்றும் விவகாரம் செய்யப்படு கிறது. இவ்விதம் சிதாபாஸ ஸம்பந்தமுடைய அஞ்ஞானம், சிதாபாஸனுடைய உண்மை ஸ்வரூபம் அறியப்படாமல் மறைக்கின்றது. இவ்விதம் சரீரத்தில் அபரோக்ஷமாக அபிவ்யக்தமாகின்ற சைதன்யம் சரீர அபிமானத்திஞல், அஹம் என்று விவகாரம் செய்கின்றது. பூர்ணத்வாத்புருஷன் என்ற புருஷசப்தார்த்தமான அகண்ட ஸ்வரூபமே அஞ்ஞான கார்யமான அந்த:கரண தர்மத்துடன் கூடி பரிச்சின்னமான இந்த சரீரத்துடன் கூடியவனுக அஹம் என்ற தன்னை அறிவதற்கு காரணம் அஞ்ஞானம் தான். இவ்விதம் அஹம் என்ற அம்ஸத்தை தவிர, தன் உண்மையான ஸ்வரூபம் என்று ஒன்று இருப்பதாகவே அறியப்படாத காரணத்திஞல், தனக்கு வேருக, அஞ்ஞானத்திஞல் தோற்றுவிக்கப்பட்ட இந்த ப்ரபஞ்சத்தை ப்ரமாணத்தின் மூலமாக அறிந்து விவகாரம் செய்கிருன். இவ்விதம் ஒரே அஞ்ஞானமே ஆவரண ரூபாகாரமாகவும் விக்ஷேப ரூபாகாரமாகவும் இருந்து ஜீவனுடைய ஸ்வஸ்வரூபத்தை மறைக்கின்றது. அந்த அஞ்ஞானமே ஜடப்ரபஞ்சாகாரமாக விக்ஷேப ரூபமாக ஆகின்றது. இந்த ஜடவஸ்துக்களை அஞ்ஞானம் மறைக்க வேண்டிய அவஸ்யமில்லை. ஸ்வயமே ஜடமாக இருக்கின்றது. ஆகவே அஞ்ஞானத்தில் பேதம் சொல்வதற்குரிய லக்ஷண பேதம் எதுவுமில்லை என்பதால் அஞ்ஞானம் ஏகம் என்றே சித்திக்கின்றது.

**168.** அவதாரிகை :

ஒரே அஞ்ஞானம், ஏகமான சைதன்ய ஸ்வரூபத்தின் விஷயத்தில் ஸ்வந்த்ரமாகவும், பரதந்த்ரமாகவும் இருக்கின்றது என்று சொல்வதற்கு காரணம் என்ன என்ருல்,

ச்லோகம் :

चितिशक्तिबाधितवपुः परमं पुरुषं प्रति स्फुरति सा प्रकृतिः ।
चितिशक्तिबाधकवपुः पुरुषं पुरवर्तिनं प्रति पुनः स्फुरति

ச்லோகார்த்தம் : சைதன்ய சக்தியினுல் பாதிக்கப்பட்ட ஸ்வரூபத்துடன் கூடியதாக அஞ்ஞானம் விளங்குகின்றது. பூர்ண சக்தியை இழந்த அந்த அஞ்ஞானம் ஈச்வரனுடைய ஸ்வரூபத்தை மறைப்பதில்லை. ஆனுல் ஜீவனிடம் அந்த அஞ்ஞானம் சைதன்ய சக்தியை மறைக்கின்ற ஸ்வரூபத்துடன் ஸ்புரிக்கின்றது-

வ்யாக்யானம் : சைதன்யம் என்பதும் ஏகம், அஞ்ஞானம் என்பதும் ஏகம் என்றே சொல்லவேண்டும். இந்த அஞ்ஞானம், கேவல சைதன்ய ஸ்வரூபத்தில் சக்தி ரூபமாக இருக்கின்றது என்பதால் சைதன்யத்தையன்றி வேருக இல்லை. அஞ்ஞானம், அதன் கார்யம் முதலான ஸர்வத்திற்கும் அதிஷ்டானமான சைதன்யமே அஞ்ஞானத்திற்கு காரணமாக இருக்கின்றது என்பதால் உபசாராத் அஞ்ஞானம் சைதன்ய சக்தி என்று சொல்லப்படுகிறது. எந்த பரமாத்மஸ்வரூபத்தின் ஸத்தாஸ்பூர்த்தியினுல் அஞ்ஞானத்திற்கு ஸத்தாஸ்பூர்த்தி ஏற்படுகிறதோ அந்த பரமாத்ம அதீனமாகவே அஞ்ஞானம் சித்திக்கின்றது. அதனுல் அஞ்ஞானம் அதன் கார்யமான ஆவரணம் என்பதை செய்யமுடியவில்லை.

உதாகரணமாக கிளிஞ்சல் என்பது வெள்ளியாக தோன்றும் ப்ராந்தி ஸ்தலத்தில் கிளிஞ்சலின் ஸ்வரூபம் ஆரோபிதமான வெள்ளியினுல் முற்றிலும் மறைக்கப்படுவதில்லை. இதம் ரஜதம் என்று அதிஷ்டான ஸ்வரூபமான இதம் அம்ஸத்துடன் சேர்ந்தே வெள்ளி ப்ரகாசிக்க வேண்டியதாக இருக்கிறது. ஆகவே அதிஷ்டானமான கிளிஞ்சலின் ஸத்தாஸ்பூர்த்தியே ஆரோபித ரஜதத்தின் ஸத்தாஸ்பூர்த்திக்கு காரணமாகின்றது. அதே போல் அஞ்ஞானம் என்பதும் தன்னுடைய ஸத்தாஸ்பூர்த்திக்கு காரணமான கேவல சைதன்யத்தை மறைப்பதில்லை. அதிஷ்டான சைதன்யம் மறைக்கப்படுமானுல் அஞ்ஞானம் என்பதே ப்ரகாசிக்க முடியாது.

ஆகவே, கேவல சைதன்யத்தை அதிஷ்டானமாகக் கொண்டு அதனுலேயே ப்ரகாசிக்கின்ற அஞ்ஞானம், அதன் கார்யமான அந்த:கரண ப்ரதிபலன சைதன்யத்வாரா (ஜீவன்) தன் உண்மையான ஸ்வரூபம் அறியப்படாமல் ஆவரண சக்தினுல் மறைக்கின்றது. அஞ்ஞான கார்யமான அந்த:கரணப்ரதிபலனமாக இல்லாத கேவல சைதன்யத்தை அஞ்ஞானம் மறைப்பதில்லை. அதனுல் ஈச்வரனுக்கு அஹம் அஞ்ஞ: என்ற மோஹம் கிடையாது. அந்த:கரணப்ரதிபலனமான சிதாத்மனுஸ்வஆபாஸம் என்ற விக்ஷேபத்வாரா சிதாபாஸனின் உண்மை ஸ்வரூபம் அறியப்படாமல் ஆவரண காரமான அஞ்ஞானம் மறைக்கின்றது. சிதாபாஸன் அந்த:கரண பரதந்த்ரனுக இருக்கின்றதால் அந்த: கரண தர்மங்களை ஆரோபம் செய்வதனுல் ஸர்வ விவகாரங்களும் ஏற்படுகிறது.

ஆகவே கேவல அவித்யாமாத்ரமாக இருக்கின்றபோது தன்னுடன் ஸம்பந்தப்பட்ட சைதன்யத்தை மறைப்பதில்லை. அவித்யை, அதன் கார்யத்துடன் சைதன்யத்திற்கு ஸம்பந்தம் ஏற்படும்போதுதான் அஞ்ஞானம் சிதாபாஸனின் உண்மையான ஸ்வரூபம் அறியவொட்டாமல் மறைக்கின்றது. இவ்விதம் சொல்லப்பட்ட காரணத்தினுல் அஞ்ஞானம் காரணரூபமாக இருக்கின்றபோது சைதன்யஸ்வரூபத்தில் பரதந்த்ரமாக இருக்கிறது. காரணபாவம் கார்யபாவம் என்ற இரண்டுடன் கூடி இருக்கின்றபோது ஸ்வதந்த்ரமாக இருக்கின்றது. அதனுல்தான் ஜீவனை தன் வசப்படுத்துகின்றது என்றும் ஈச்வரனை வசப்படுத்த வில்லை என்று சொல்லப்படுகிறது.

**169. அவதாரிகை :**

இவ்விதம் சொல்லப்பட்ட முறையில் மாயை, அவித்யை இரண்டும் வேறல்ல என்று சொல்லப்பட்டது. மேலும் இதே விஷயம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் : 

दृश्यत्वजाड्यपरतन्त्रचिदाश्रयत्वैर्मायेश्वरस्य तमआत्मतयाऽनुमेया ।
स्वप्नप्रपञ्चरजतभ्रमलिङ्गदेहदिक्चन्द्रविभ्रममरीचिजलोपमानैः

ச்லோகார்த்தம் : த்ருச்யத்வம், ஜடத்வம், பரதந்த்ரத்வம் சிதாச்ரயத்வம் என்ற இவைகளினுல் ஈச்வரனுடைய மாயையானது அஞ்ஞான ரூபம் என்று அனுமானிக்கப்பட வேண்டும். இதற்கு ஸ்வப்ன ப்ரபஞ்சம், சுக்திரஜதம். அந்த:கரணம், திக்ப்ரமம், சந்த்ர ப்ரமம், கானல் நீர் என்பவைகள் உதாரணமாக ஆகிறது.

பூர்வ வ்யாக்யானம் : கேவல ஜடசக்தியான மாயை என்பதை உபாதியாகக் கொண்ட சைதன்யமே ஈச்வரன். ஜீவனுடைய ஸ்வரூபம் அறியப்படாமல் ஆவரணம் செய்கின்ற அஞ்ஞானம் ஜீவனிடம்தான் இருக்கின்றது. அதனுல் இரண்டும் வேறு என்றே சொல்லவேண்டும்.

சித்தா : இதுசரியல்ல. ஏனெனில் மாயை, அஞ்ஞானம் என்று இரண்டு விதமாகச் சொல்லப்பட்டாலும் அவை இரண்டுமே சைதன்யத்தினுல்தான் ப்ரகாசிக்கவேண்டி இருக்கின்றது. ஸ்வயம் ப்ரகாச தன்மையென்பது இல்லாமல் அப்ரகாசத்வம் என்ற ஜடத்தன்மை இரண்டிலும் இருக்கின்றது. இரண்டிற்கும் சைதன்ய அதிஷ்ட்டானத்வம் இருக்கின்றது. ஸ்வப்னப்ரபஞ்சம் போல் இவை இரண்டும் சித்ஸ்வரூபத்தில் ஆரோபிதம் ஸ்வப்னம் முதலான ஆரோபிதங்களுக்கு ஜீவஉபாதியான அஞ்ஞானமே காரணம். அதேபோல் ஸர்வ ப்ரபஞ்ச ஆரோபிதத்திற்கும் ஈச்வர உபாதியானமாயை காரணம் என்று சொல்லப்படுகிறது. ஆகையால் இரண்டிலும் உள்ள ஒரே தன்மையினுல் இரண்டும் ஒன்றே என்று அறியப்படுகிறது-

"ஈச்வரனுடைய மாயை என்பதும் ஜீவனுடைய அஞ்ஞானம் என்பதும் ஒன்றுதான் த்ருச்யத்வாத் ஸ்வப்னப்ரபஞ்சம் போல்" என்று அனுமானத்தினுலும் சாதிக்கலாம்.

இரண்டிற்கும் சித்ஸ்வரூபத்தின் பாரதந்த்ரியம் இருக்கின்றது. சித்ஸ் வரூபத்திற்கு வேறுன தன்மை உடையதாக இருப்பதால் ஜடம் என்றும் சித்திக்கின்றது. இந்த விதம் பல விதமான திருஷ்ட்டாந்தங்களினுல் வ்யாப்தி என்பது மேண்மேலும் த்ருடப்படுகிறது.

**170.** அவதாரிகை :

மாயை என்ற காரணம் அஞ்ஞானம் என்பதைக் காட்டிலும் வேறல்ல என்று மாயை என்பதை பக்ஷமாகக் கொண்டு அனுமானம் சொல்லப்பட்டது. இப்போது கார்யத்தை பக்ஷமாகக் கொண்டு இரண்டும் வேறல்ல என்றுஅனுமானிக்கப்படுகிறது.

ச்லோகம் :

एकाज्ञानविकल्पितं सकलमेवाऽऽकाशपूर्वं जगद्बाध्यत्वादिह यद्यदीदृशमदस्तादृङ्मतं स्वप्नवत् ।
बाध्यं चेदमभीप्सितं भवति वस्तस्मादिदं तादृशं शुद्धं धूमवदेव साधनमिदं तत्पाञ्चरूप्यान्वयात्

ச்லோகார்த்தம் : பாத்யமாக இருக்கின்றதால் ஆகாசம் முதலான இந்த ப்ரபஞ்சம் முழுவதும் ஏக அஞ்ஞான கல்ப்பிதமேயாகும். எந்த வஸ்துவானது இவ்விதம் பாத்யமாக இருக்கின்றதோ அந்த வஸ்து ஸ்வப்னம்போல் அஞ்ஞான கல்ப்பிதமேயாகும். இந்த

ப்ரபஞ்சம் பாத்யம் என்று உங்களால் ஒத்துக்கொள்ளப்படுகிறது. அதனுல் தூமம் போன்ற இந்த ஹேது ஐந்து விசேஷங்களை உடையதாக இருக்கின்றதால் தோஷ மற்றதாகவே இருக்கின்றது.

வ்யாக்யானம் : ஆகாசாதிகள் முதல், ஸ்வப்னம், ரஜ்ஜு ஸர்ப்பம் என்பது போன்ற எல்லாமே அஞ்ஞான கல்பிதம். (ஆரோபிதம்) ஏனெனில், ஸ்வப்னம் எப்படி விழித்தவுடன் பாதிக்கப்படுகிறதோ அதுபோல் தத்வ ஞானம் ஏற்படுகின்றபோது ஸர்வ ஆரோபிதங்களும் பாதிக்கப்படுகின்றது. அதனுல் ரஜ்ஜு ஸர்ப்பம் போல் பாதிக்கப்படுவதால், ஆகாசம் முதலானவைகளும் அஞ்ஞான கல்பிதம் என்றே அனுமானத்தினுலும் சித்திக்கின்றது.

"ஆகாஸாதிகளும் அஞ்ஞான கல்பிதம்தான், பாதிக்கப்படுவதால், ரஜ்ஜு ஸர்ப்பம்போல்" என்று சொல்லப்படும் அனுமானத்தில் தோஷம் ஏதுமில்லை. 'நேஹநானுஸ்தி கிஞ்சன' என்று ஆகாஸாதி முதல் ஸர்வ ப்ரபஞ்சத்தையும் ச்ருதியே பாதிக்கின்றது.

இந்த அனுமானத்தில் ப்ரதிஞ்ஞா, ஹேது, உதாகரணம் உபநய, நிகமனம் என்ற பஞ்ச அவயங்களும் இருக்கின்றதால் இந்த விஷயம் உன்னுல் அவஸ்யம் ஒத்துக்கொள்ளப் படவேண்டும். எங்கெல்லாம் த்ருச்யத்வம், ஜடத்வம், பாத்யத்வம், அஸ்வதந்த்ரத்வம் என்பதெல்லாம் இருக்கின்றதோ அவையெல்லாமே பாதிக்கப்படுவதால் அஞ்ஞான கல்பிதம் என்றே அறியவேண்டும்.

இவ்விதம் ஒரே அஞ்ஞானத்தினுல்தான் ஸர்வப்ரபஞ்சமும் கல்பிதம் என்றே சித்திக்கின்றதால் அனேக அஞ்ஞானங்கள் இருப்பதாக கல்ப்பிக்கவேண்டிய தேவை இல்லை என்று தெரிவிப்பதற்காகவே ச்லோகத்தில் 'ஏகம் அஞ்ஞானம்' என்று விசேஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆத்மஸ்வரூபத்தில்தான் ஸர்வமும் ஏகீபாவத்தை அடைகிறது என்றும் ஸர்வமும் பரமாத்மஸ்வரூபமே என்றும் தெரிவிப்பதற்காகவே 'நேஹநானு ஸ்திகிஞ்சன' என்ற வாக்யம் ப்ரஹ்மஸ்வரூபத்தையன்றி வேருக எதுவுமே இல்லை என்றும் ச்ருதி வாக்யங்கள் தெரிவிக்கின்றது. வித்வத் அனுபவத்தைக் கொண்டும் அஞ்ஞானம் அதன் கார்யத்துடன் பாதிக்கப்படுகிறது என்று அறியப்படுகிறது. பாதிக்கப்படுவதெல்லாமே அஞ்ஞானம் என்பதை மூலமாகக் கொண்டே இருக்க வேண்டும். இந்த அனுமானத்தில் அன்வயவ்யாப்திக்கு த்ருஷ்ட்டாந்தம் ஸ்வப்னம் முதலானவை. வ்யதிரேக த்ருஷ்ட்டாந்தம் ஆத்மா போல் பாதிக்கப்படாததாகவும் இல்லை, த்ருச்யமாக இல்லாததாகவும் இல்லை. இவ்விதம் அன்வயம், வ்யதிரேகம் என்ற இரண்டு விதமாகவும் இந்த அனுமானத்தினுல் சொல்லப்பட்ட விஷயம் சித்திக்கின்றது.

**171.** அவதாரிகை :

'ஆத்மன: ஆகாச: ஸம்பூத:' என்ற ச்ருதிவாக்யம் ஆத்மா என்பதே ஜகத்காரணம் என்று தெரிவிக்கின்றதால் அஞ்ஞானமே ஜகத் காரணம் என்று ஆகம விருத்தமாக எப்படிச் சொல்வது ?

ச்லோகம் : अनुमानमागमबिरुद्धमिदं प्रतिवादिनो यदि मतं तदसत् ।
न तमोऽतिरिच्य जगतो जनक प्रतिपादकं वचनमस्ति यतः

ச்லோகார்த்தம் : இந்த பக்ஷம், அனுமானத்திற்கும் ஆகமத்திற்கும் விருத்தம் என்று ப்ரதிவாதிகளால் கூறப்படுமானுல் அது சரியல்ல. அஞ்ஞானம் என்பதைத் தவிர, வேறு ஜகத்காரணம் இருப்பதாகத் தெரிவிக்கின்ற வாக்யங்கள் கிடையாது.

வ்யாக்யானம் : கூடஸ்த்தமான ஆத்மா நிர்விகாரம் என்பதால் ஆத்ம பரிணுமமாக ஜகத் என்பது உண்டாக முடியாது. "இந்த்ரோமாயாபி: புருரூப ஈயதே" என்று ச்ருதி வாக்யமும் ஜகத் என்பது மாயா பரிணுமம் என்றே தெரிவிக்கின்றது. 'தமஆஸீத்' என்ற வாக்யமும் சிருஷ்டிக்கு முன் அஞ்ஞான மாத்ரமாக அநிர்வசனீயமான மாயையே இருந்தது என்று தெரிவிக்கின்றது. இந்த காரணத்தினுலும் மாயை, அஞ்ஞானம் என்ற இரண்டும் ஒன்றே என்று அறியப்படுகிறது. அஞ்ஞானம், மாயை, அக்ஷரம், தமஸ், அவ்யக்தம் என்று பல பெயர்களால் ஒரே வஸ்துதான் குறிப்பிடப்படுகிறது. அஞ்ஞானத்தையன்றி வேருக எந்த வஸ்துவும் ஜகத்காரணமென்று வேதங்களில் சொல்லப்படவில்லே. ஆகையால் 'மாயாவி: புருரூபஈயதே' என்ற வாக்யத்தினுல் முன் சொல்லப்பட்ட அனுமானம் பாதிக்கப்படவில்லே. அதேபோல் உபாதிதோஷமும் கிடையாது.

**172.** அவதாரிகை :

அஞ்ஞானம் செயல்படுவதற்கு மாயையுடன் கூடிய சைதன்யமே காரணம். அதனுல் மாயை என்பதே அஞ்ஞானம் என்பதை அசைவிக்கின்றது. ஆகவே அசைவிக்கின்ற மாயையும், அதனுல் அசைகின்ற அஞ்ஞானமும் ஒன்று என்று எப்படிச் சொல்வது ? மாயை என்பது தோஷம், இந்த மாயை, அஞ்ஞானம் செயல்படுவதற்கு ஸஹகாரியாக இருக்கிறது என்றே சொல்லவேண்டும்.

ச்லோகம் :

विषयकरणदोषान्न भ्रमः संविदि स्यादपि तु भवति मोहात्केवलादेवमेव ।
भगवति परमात्मन्यद्वितीये समस्तद्वयमतिरियमस्तु भ्रान्तिरज्ञानहेतुः

ச்லோகார்த்தம் : ஸம்வித் என்பதில் ஏற்படும் ப்ரமமானது, விஷயதோஷத்தினுலோ கரண தோஷத்தினுலோ ஸம்பவிக்க முடியாது. கேவல அஞ்ஞானத்தினுலேயே ஸம்பவிக்கின்றது. அதனுல் அத்விதீயமான ப்ரமாத்ம ஸ்வரூபத்தில் விசித்திரமான த்வைத ப்ரதீதியானது அஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட ப்ராந்தி என்றே சொல்ல வேண்டும்.

வ்யாக்யானம் : அஞ்ஞானம் என்பது ஸர்வ ஜகத்திற்கும் உபாதான காரணம் என்று சொல்ல வேண்டுமானுல், மாயை என்ற தோஷம் அதற்கு ஸஹகாரியாக இருக்கிறதென்றே ஒப்புக்கொள்ளவேண்டும். சுக்தி அஞ்ஞானமே ரஜத ப்ரமத்திற்கு காரணம் என்று சொல்லப்பட்டபோதிலும் கண்ணிலுள்ள காச காமாலே முதலான தோஷமும் அதற்கு காரணமாக இருக்கிறது. அதுபோல் ஜகத்தோற்றத்திற்கும் உபாதானமான அஞ்ஞானத்தையன்றி வேறு ஒரு தோஷம் என்பதும் காரணம் என்றே சொல்லவேண்டும்.

சித்தா : இந்த ஆக்ஷேபம் சரியல்ல. அஞ்ஞானம் என்பது அதன் கார்யத்தை ஸ்வயமே தோற்றுவிக்க முடியும் என்பதால் ஸஹகாரி அபேக்ஷை ஏதும் தேவையில்லே என்று முன் அத்யாயத்திலேயே சொல்லப்பட்டிருக்கிறது. கால ரூபமாக இருக்கின்ற

சைதன்யமே அஞ்ஞானம் என்பதை ப்ரவ்ருத்திக்கச்செய்கின்றது. வேறு ஸஹகாரி எதுவும் தேவையில்லை. ஆகவே, இந்த காரணத்தைக்கொண்டும் அஞ்ஞானம் வேறு மாயை வேறு என்று சொல்லமுடியாது.

**173.** அவதாரிகை :

ப்ரஹ்மமென்பது ஏகம். அஞ்ஞானம் என்பதும் ஏகம் என்ருல், ஒரே அஞ்ஞானம், ப்ரஹ்மமென்பதை ஸர்வஞ்ஞன ஈச்வரனுகவும் அதே ப்ஹ்மம் என்பதை கிஞ்சிக்ஞுனுகவும் துக்கித்வம் முதலானவைகளுடன் கூடின ஜீவனுகவும் விருத்த தர்மமுடைய இரண்டு விதமாக தோற்றுவிக்கின்றது என்று எப்படிச் சொல்ல முடியும்? கார்யம் இரண்டும் ஒன்றுக்கொன்று விருத்தமாக இருக்குமாஞல் காரணம் இரண்டும் விருத்தமாகத்தானே இருக்க வேண்டும்? என்ருல்,

ச்லோகம் :

अज्ञानिनो भवति दुःखमनेन क्लृप्तं सर्वेश्वरस्य न खलु प्रतिभासतोऽपि ।
सर्वज्ञतादिगुणजातममुष्य नास्य संसारिणः स्फुरति मोहसमन्वितस्य

ச்லோகார்த்தம் : அஞ்ஞானத்திஞல் ஏற்பட்ட துக்கமானது அஞ்ஞானியினிடம் இருக்கின்றது. ஸர்வேச்வரனிடம், இந்த துக்கத்தின் ஆபாஸம் கூட கிடையாது. ஈச்வரனிடம் ஸர்வஞ்ஞுத்வம் முதலான குணங்கள் இருக்கின்றது. அஞ்ஞானத்துடன் கூடிய ஸம்ஸாரியினிடம் இவைகள் ஸ்புரிப்பதில்லை.

வ்யாக்யானம் : ஒரே சைதன்ய ஸ்வரூபம்தான் ஈச்வரனுகவும் ஜீவனுகவும் ஆகின்றது. இவ்விதம் ஏற்படுவதற்கு அஞ்ஞானம் என்ற ஒரே உபாதிதான் காரணம். அஞ்ஞானம் ஆவரணசக்தி ப்ராதான்யேன மலினஸத்வ குணமுடையதாக இருக்கின்றதால், அதில் ப்ரதிபலிக்கின்ற ஜீவனை தன் வசப்படுத்தி, அவனுடைய உண்மையான ஸ்வரூபம் தெரியவொட்டாமல் மறைக்கின்றது. அதஞல் கிஞ்சிக்ஞுத்வம், துக்கித்வம் ஸம்ஸாரித்வம் என்பதெல்லாம் ஜீவனிடம் இருப்பதாக அறியப்படுகிறது. அதே அஞ்ஞானம் என்ற உபாதி விக்ஷேப சக்தி ப்ராதான்யேன சுத்தஸத்வ குணப்ரதானமாக இருக்கின்றதால் அதில் ப்ரதிபலிக்கின்ற ஈச்வர சைதன்யம் அஞ்ஞானம் என்பதை தன் வசப்படுத்தி இருப்பதால் அவருடைய ஸ்வரூபத்தை அஞ்ஞானம் மறைப்பதில்லை. அஞ்ஞானம் ஈச்வர பரதந்த்ரம் ஆகவே ஈச்வரஸ்வரூபம் மறைக்கப்படாததால் ஸர்வஞ்ஞுத்வாதிகள் ஈச்வரனிடம் இருக்கின்றது. இவ்விதம் இரண்டும் அஞ்ஞான கார்யம் என்று சொல்லப்பட்டபோதிலும் இரண்டிற்கும் வித்யாஸம் இருக்கின்றது. அதஞல்தான் அஞ்ஞானத்துடன் கூடி இருக்கின்ற ஜீவனுக்கு அஹம் அஞ்ஞ: என்றும் துக்கி ஸம்ஸாரி என்ற அனுபவமும் ஏற்படுகிறது. அஞ்ஞானம் ஈச்வர உபாதியாக இருக்கின்றபோது ஸத்வகுணப்ரதானமாக இருக்கின்றதால் ஆவரணம் கிடையாது. விக்ஷேப மாத்ரமாக இருக்கின்றது. தன்ஸ்வரூப ஞானத்திற்கு தடையாக ஏதும் இல்லாததால் அஹம் ஜாஞமி என்றோ, அஹம் நஜாஞமி என்றோ, சுகிதுக்கிஸம்ஸாரி என்றோ எந்த விதமான ப்ராந்தி ஞானமும் கிடையாது. ஆஞல் விக்ஷேப சக்தியிஞல் ஜகத் காரணத்வம், ஸர்வஞ்ஞுத்வம் என்ற தன்மைகள் மட்டும் தோற்றுவிக்கப்படுகிறது. ஆகவே ஆவரண சக்தியிஞல்தான் ஜீவனுக்கு கிஞ்சிக்ஞுத்வாதி தர்மங்கள் இருப்பதாக

ப்ரமம் ஏற்படுகிறது. ஆகையால் சைதன்யம் ஏகமாக இருந்தபோதிலும் அஞ்ஞானம் என்பதும் ஏகமாக இருந்தாலும் அஞ்ஞானத்தின் வசப்பட்டு மோஹமென்ற காரணத்தினுல் ஜீவனுக்கு ஸர்வஞ்ஞத்வாதி தன்மைகள் கிடையாது. இவ்விதம் ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் பேதம் இருக்கின்றது என்று சொல்லப்படுகிறது-

**174.** அவதாரிகை :

இவ்விதம் தன்னுடைய சித்தாந்தம் என்னவென்பதை தெரிவித்து அதன் பிறகு பாஷ்ய காரரின் வசனத்தின் தாத்பர்யம் என்ன என்பதையும் தெரிவிக்கப்பட்டது. இந்த விஷயம் இப்போது முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

ச்லோகம் :

जीवन्मुक्तिगतो यदाह भगवान्सत्संप्रदायप्रभुर्जीवाज्ञानवचस्तदीदृगुचितं पूर्वापरालोचनात् ।
अन्यत्रापि तथा बहुश्रुतवचः पूर्वापरालोचनान्नेतव्यं परिहृत्य मण्डनवचस्तद्ध्यन्यथा प्रस्थितम्

ச்லோகார்த்தம் : ஜீவன் முக்தியைப் பற்றி சொல்லப்படும் இடத்தில் ஸத்ஸம் ப்ரதாயத்தை அறிந்த பகவான், ஜீவனிடம் அஞ்ஞானம் இருக்கின்றதென்று எந்த வாக்யத்தைக் கொண்டு சொல்லப்பட்டிருக்கின்றதோ அந்த வாக்யத்தை பூர்வாபர விசாரம் மூலம் இவ்விதமே விளக்கப்படவேண்டும். வேறு இடங்களிலும் பாஷ்யகாரர் முதலானவர்களின்வாக்யங்கள் பூர்வாபர விசாரத்தின் மூலம் இவ்விதமே விளக்கப்பட வேண்டும். ஆனுல் மண்டனமிச்ராரின் வசனம், வேறு பக்ஷத்தை அனுசரிக்கின்றதால் அதுவிடப்படவேண்டும்.

வ்யாக்யானம் : அஞ்ஞானம் என்பது சித்ஸ்வரூபத்தையே ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்டு இருக்கின்றது. அதனுலேயே சைதன்யத்திற்கு ஜீவபாவம், ஈச்வரபாவம் ஜகத்காரணத்வம் என்பதெல்லாம் ஏற்படுகின்றது.

அதாவது ஜீவன் முக்தி (ப்ரகரணத்தில்) நிரூபணம் செய்யுமிடத்தில் கீதாபாஷ்ய வசனம், அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்று சொல்வதுபோல் அறியப்படுகிறது. பகவான் என்ற பதம் ஸ்ரீக்ருஷ்ண பகவானையே குறிக்கின்றது. ஏனெனில் "ஸத்ஸம்ப்ரதாய ப்ரபு:" என்ற அர்த்தம் சொல்லப்படுகின்றதால் ஸ்ரீகிருஷ்ணபகவானையே குறிப்பிடப்படுகிறது. 'யதா தே மோஹ கலிலம் புத்திர்வ்யதி தரிஷ்யதி' என்ற கீதா வசனம் 'உன் புத்தியானது எப்போது அஞ்ஞானத்தை தாண்டுகின்றதோ' என்று ஜீவனிடம் அஞ்ஞானம் இருக்கிறது என்று சொல்லப்படுவதாக தோன்றுகிறது. ஆனுல் முன்னுல் விசாரிக்கப்பட்ட முறையில் ஜீவனிடம் நஜானுமி என்ற அனுபவம் இருப்பதைக்கொண்டு அஞ்ஞானம் இருக்கிற தென்பது ஸ்பஷ்ட்டமாக அறியப்படுகிறது என்ற காரணத்தினுலேயே கீதா வசனமும் பாஷ்யகாரரின்வசனமும் தெரிவிக்கின்றது என்ற விஷயம்பூர்வாபரங்களை விசாரிக்கின்ற போது அறியப்படுகிறது.

ஆனுல் மண்டன மிச்ரர் சொல்வதுபோல் அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்று சொல்வதை ஒப்புக் கொள்ளமுடியாது.

இந்த இடத்தில் 'பஹுச்ருதவச:' என்று ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. அதற்கு அர்த்தம் என்னவென்ருல், பகவத் வசனம் என்பதற்கு பாஷ்யகாரரான ஆசார்யார்

என்று அர்த்தம் செய்யலாம். அவ்விதம் அர்த்தம் செய்யப்படுமானுல் பகவான் என்ற பதத்திற்கு 'ஸத்ஸம்ப்ரதாயப்ரபு:' என்று அர்த்தம் செய்யலாம். ஸத்ஸம்ப்ரதாயப்ரபு: என்பதற்கு ஆசார்யாள் என்று அர்த்தம் செய்யப்படுமானுல் பகவான் என்பதற்கு ஸ்ரீக்ருஷ்ண பகவான் என்றே அர்த்தம் செய்யலாம். அவ்விதம் சொல்லப்படுமானுல் பஹுச்ருத: என்ற பதம் பகவத் பாதரானசங்கரர் சுரேச்வராச் சாரியர் முதலானவர்களை குறிப்பிடுவதாக அர்த்தம் செய்யலாம் (ஆனுல் ஜீவாச்ரயம் அஞ்ஞானம் என்று சொல்கின்ற மண்டனமிச்ரரை குறிப்பிடவில்லை என்று அறிய வேண்டும்.)

**175. அவதாரிகை :**

வேறு சில இடங்களிலும் ஜீவனுக்கே அவித்யை என்று ஆசார்யரால் சொல்லப்படுகிறது. அவையெல்லாவற்றிர்க்கும் ஸ்பஷ்ட்டமாக அறியப்படுகிறது என்பதே தாத்பர்யம் என்று அறியவேண்டும்.

**ச்லோகம் :**

जीवस्य कार्यकरणाधिपतेरविद्या दोषान्वितस्य तमसाऽऽवृतमन्धदृष्टेः ।
ज्ञानं निरावरणमैश्वरमित्यपीदं भाष्याक्षरं कथितनीतिवशेन योज्यम्

**ச்லோகார்த்தம் :** ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களால் அவச்சேதம் செய்யப்பட்டவனும் தோஷத்துடன் கூடினவனும், அவித்யையினுல் ஆவரணம் செய்யப்பட்ட த்ருஷ்டியை உடையவனுமான ஜீவனிடத்தில் அவித்யை இருக்கின்றது. ஈச்வரனுடைய ஞானமானது அனுவ்ருதமாக இருக்கிறது. இந்த விதமான வாக்யங்களை முன்னுல் சொல்லப்பட்ட ரீதியில் விளக்கவேண்டும்.

**வ்யாக்யானம் :** ப்ரஹதாரண்யக உபநிஷத்தில் அக்ஷரப்ராஹ்மணத்தில் அவித்தையினுல் ஆவரணம் செய்யப்பட்டு அவித்யாவசப்பட்டு அவித்யாகார்யமான அந்த: கரண உபாதியுடன் கூடினவனுக இருப்பவனே ஜீவன் என்றும் நிரதிசய ஞான சக்தி உடையவன் ஸர்வஞ்ஞுன ஈச்வரனே அந்தர்யாமி என்றும் சொல்லப்படுகிறது. பகவான் அர்ஜுனனுக்கு கீதையை உபதேசிக்கின்றபோது அர்ஜுனனை பார்த்து, 'உனக்கு இவையெல்லாம் அறிந்து கொள்ளமுடியாது.' ஏனெனில் தர்மா தர்மத்தின் காரணமாக ஏற்பட்ட புண்யம் பாபம் என்ற பலங்களினுல் ஞான சக்தியை அஞ்ஞானம் தடை செய்கின்றது. அதனுல் விவேகம் செய்து அறிந்து கொள்ளக் கூடிய ஸாமர்த்யம் உன்னிடமில்லை. என்னிடத்தில் ஞான சக்தியை ப்ரதி பந்தம் செய்யக் கூடிய காரணம் ஏதும் இல்லை. அதனுல் நான் ஸர்வஞ்ஞுக இருக்கிறேன் என்று தெரிவிக்கின்றுர். இந்த வாக்யங்கள் எல்லாம் ஜீவனிடம் அஞ்ஞானம் ஸ்பஷ்ட்டமாக அறியப்படுகிறது என்ற தாத்பர்யத்தைக் கொண்டே ஜீவனிடம் அஞ்ஞானம் இருப்பதாக தெரிவிக்கின்றது.

கார்யகரண ஸங்காதத்திற்கு அஞ்ஞானமே காரணம். ஆனுல் ஸ்தூலசரீரம் ஏற்பட லிங்க சரீரமே காரணமாகிறது. ஸ்தூலம், சூக்ஷ்மம் என்ற தேஹத்வய ஸம்பந்தம் உள்ள சைதன்யத்திற்கே அவித்தையினுலும் அதனுல் ஏற்பட்ட பூர்வ பூர்வ ஸம்ஸ்கார வாஸனு தோஷம் என்பதாலும் ஞான சக்தியென்பது ப்ரதிபத்தமாகிறது (தடைபடுகிறது) அதனுலேயே 'த்வம் நஜானீஷே' என்று கீதா பாஷ்யத்தில் ஆசார்யரால் சொல்லப்படுகிறது. இந்த விதம் தர்மா தர்மத்தினுல் ப்ரதிபத்தமாக இருப்பதே ஜீவனுக்கு தோஷம் என்றும்,

இந்த தோஷம் ஜீவ பாவத்தில் இருப்பதால்தான் அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்று சொல்லப்படுகிறதேயன்றி இந்த அவித்யை ஈச்வரனிடம் இல்லையென்ற கருத்தில் சொல்லப்படவில்லை.

தர்மா தர்மம் என்ற ப்ரதிபந்தகம் இருப்பதனுல்தான் ஞானம் தடைபடுகிறது என்பதால் அஞ்ஞானம் உன்னிடமே இருக்கிறது. நித்ய சுத்த புத்த முக்த ஸ்வபாவனுன என்னிடம் அஞ்ஞானம் ஆவரணம் செய்வதில்லை என்ற கருத்தை பல இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

**176.** அவதாரிகை :

முதலில் சொல்லப்பட்ட ந்யாயம் என்னவென்பதை ஸ்பஷ்ட்டமாக தெரிவிக்கின்ருர்.

**ச்லோகம் :**

स्पष्टं तमः स्फुरणमत्र न तत्र तद्वत्सर्वेश्वरे तदिति तत्र निषिध्यते तत् ।
बिम्बे तमोनिपतिते प्रतिबिम्बके वा देहद्वयावरणवर्जितचित्स्वरूपे

ச்லோகார்த்தம் : அவித்யையின் ஸ்புரணம், ஜீவனிடம் ஸ்பஷ்ட்டமாக இருக்கின்றது. ஸர்வேச்வரனிடம் ஸ்பஷ்ட்டமாக இல்லை. ஆகையால், பிம்ப ரூபமாகவோ, அவித்யா ப்ரதிபிம்பரூபமாகவோ இருக்கின்றவனும் ஸ்தூல, சூக்ஷ்ம சரீரங்கள் என்ற ஆவரணம் அற்ற சைதன்ய ரூபமாக இருக்கின்றவனுமான ஈச்வரனிடம் அவித்யை நிஷேதம் செய்யப்படுகிறது.

வ்யாக்யானம் : 'ஆச்ரயத்வ, விஷயத்வபாகினி, நிர்விபாக சிதிரேவகேவல' என்று சொல்லப்பட்டபடி; உண்மையில் அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் கேவல சைதன்யம் என்றே சொல்லவேண்டும். உண்மை இவ்விதம் இருந்தபோதிலும் அஞ்ஞானம் ப்ரஹ்மாச்ரமில்லை, ஜீவாச்ரயம்தான் என்றும், ஜீவாச்ரயமில்லை ப்ரஹ்மாச்ரயம்தான் என்றும் விவகாரம் செய்யப்படுகிறது. இதற்கு காரணம் என்னவென்ருல், ஜீவனிடம் இருக்கின்ற அஞ்ஞானம் ஸ்பஷ்ட்டமாக அறியப்படுகிறது. ஈச்வரனிடம் அவ்விதம் ஸ்பஷ்ட்டமாக அறியப்படவில்லை என்பதே காரணம். மேலும் ஜீவபாவம் என்பதும், ஈச்ரவ பாவம் என்பதும் ஏற்படுவதற்கு அஞ்ஞானமே காரணம் என்பதால், அஞ்ஞான கார்யமான ஜீவனே, ஈச்வரனே, அஞ்ஞான ஆச்ரயமில்லை, கேவல சுத்தசைதன்யமே ஆச்ரயம் என்றே சொல்லவேண்டும். அதுவே சித்தாந்தம். ஆகவே கேவல மாயா (அஞ்ஞான) உபாதியில் ப்ரதிபிம்பிக்கின்ற ஈச்வரனையும் அஞ்ஞானம் ஆச்ரயிக்கவில்லை. கார்யமான அந்த : கரணத்தில் ப்ரதிபிம்பிக்கின்ற ஜீவனையும் அஞ்ஞானம் ஆச்ரயிக்கவில்லை. கேவல நிர்விபாக சித்ஸ்வரூபத்தையே ஆச்ரயத்திருக்கின்றது. இந்த சைதன்யத்திற்கு தேஹ த்வய ஆவரணமில்லை என்ருலும், (அதாவது சித்ஸ்வரூபம்) உபாதிஸம்பந்தமற்றதாக, கார்யகரண ஸம்பந்தமற்றதாக இருந்த போதிலும்) உபலக்ஷிதமான சின்மாத்ர ஸ்வரூபத்தையே இந்ததமஸ் ஆச்ரயித்திருக்கின்றது.

**177.** அவதாரிகை :

ஜீவன் கிஞ்சிக்ஞன், ஈச்வரன் ஸர்வஞ்ஞன் என்றும் ப்ரஹ்மஸ்வரூபம் அறியப்படுவதற்கு காரணம் என்னவென்ருல், அஞ்ஞானம் என்பது ஸ்பஷ்ட்டமாகவும்

அஸ்பஷ்ட்டமாகவும் இருப்பதே காரணம். அதனுல் அஞ்ஞானம் ஜீவனிடத்திலோ ஈச்வரனிடத்திலோ இருக்கின்றதென்ருே இல்லையென்ருே சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

किंचिज्ज्ञताऽस्य तमसाऽऽवृतनित्यदृष्टेः सर्वज्ञता पुनरमुष्य परस्य पुंसः ।
अज्ञानतज्जकरणादिविवर्जितत्वादित्येतदेवमुपपन्नतरं हि भाष्यम्

**ச்லோகார்த்தம் :** அஞ்ஞானத்தினுல் ஆவரணம் செய்யப்பட்ட சைதன்யத்துடன் கூடிய ஜீவனிடம் அல்பஞ்ஞுத்வம் இருக்கின்றது. அஞ்ஞான ஆவரணம், அதனுல் ஏற்படும் கரணங்களும் இல்லாததால் பரமாத்மாவினிடம் ஸர்வஞ்ஞுத்வம் இருக்கிறது என்று இவ்விதம் பாஷ்யத்தை விளக்குவதே பொருத்தமுடையதாகும்.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்றும் ப்ரஹ்மமென்பது அதற்கு விஷயம் என்றும் ஒரு சிலரால் சொல்லப்படுகிறது. அது சரியல்ல மாயா பரிணுமமின்றி ஈச்வரனுக்கு ஸர்வஞ்ஞுத்வாதிகள் ஸம்பவிக்க முடியாது. மாயை இல்லாமல் சுத்த சைதன்யத்திற்கு ஜீவத்வமோ ஈச்வரத்வமோ ஸம்பவிக்காது. சுத்த சைதன்யமே அஞ்ஞானவஸாத் ஜீவத்வம் ஈச்வரத்வம் என்ற தன்மையுடையதாக ஆகிறது என்று சொன்னுல்தான் ஜீவனே அஞ்ஞானி என்றும் ஈச்வரனே ஸர்வஞ்ஞன் என்றும் சொல்லப்படும். பாஷ்யங்களின் அர்த்தம் பொருத்தமுள்ளதாக ஆகும். ப்ரஹ்மத்தினிடம் (ஈச்வரனிடம்) அஞ்ஞானமே இல்லையென்ருல் ஸர்வஞ்ஞுத்வாதிகள் இருப்பதாகச் சொல்லமுடியாது.

**178. அவதாரிகை :**

ஒரே சைதன்யத்தில் கிஞ்சிக்ஞுத்வம், ஸர்வஞ்ஞுத்வம்என்ற விருத்தமான இரண்டு தன்மைகள் இருப்பதாக எப்படிச் சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

अज्ञोऽहमित्यवगतिर्न परस्य पुंसः सर्वज्ञतावगतिरात्मनि नास्य पुंसः ।
अत्रापि कारणमहंकृतिवर्जितत्वं तद्वत्तया च परमेऽल्पतरे च पुंसि

**ச்லோகார்த்தம் :** ஈச்வரனிடம் நான் அஞ்ஞன் என்ற எண்ணம் கிடையாது. எனெனில் அல்பஞன ஜீவனிடத்தில் இருக்கின்ற அஹங்காரம் போல், பரமேச்வரனிடத்தில் அஹங்காரம் கிடையாது.

**வ்யாக்யானம் :** கேவல சுத்த சைதன்யத்தில் அஞ்ஞானம் என்ற உபாதி மட்டும் ஸம்பந்தப்படுகின்றபோது ஈச்வரபாவம் ஏற்படுகிறது. இவ்விதம் ஏற்படும் அஞ்ஞான ஸம்பந்தத்தினுல், அஞ்ஞான கார்யமான அஹங்காரமோ, அஹங்கார அபிமானமோ ஈச்வரனுக்கு கிடையாது. அதனுல் அஹம் ஸர்வஞ்ஞனென்ருே, கிஞ்சிக்ஞன் என்ருே ஞானம் ஏற்படுவதில்லை. அதேபோல் அஹம் அஞ்ஞ: என்ற ப்ரதீதியும் ஏற்படுவதில்லை. ஜீவனிடம், அஞ்ஞானமென்ற உபாதியும் அதன் கார்யமான அந்த:கரணம் என்ற உபாதியும் சேர்ந்திருக்கின்றது. அதனுல் அஹங்காரம் என்பதும், அஹங்கார அபிமானமும் இருக்கின்றது. அதனுல் அஹம் அஞ்ஞ: என்ற அனுபவம் இருக்கின்றது, ஸர்வஞ்ஞன்

என்ற ஞானம் இல்லை. ஆகவே, கேவல சைதன்யம் அவித்யா ஸம்பந்தத்தினால் காரண உபாதி மாத்ரமாக இருக்கின்றபோது ஸர்வஞ்ஞனென்றும், காரணம், கார்யம் என்ற இரண்டு உபாதிகளுடன் கூடி இருக்கின்றபோது கிஞ்சிக்ஞன் என்றும் விருத்தமான வ்யவஹாரம் ஏற்படுகிறது.

**179.** அவதாரிகை :

ஈச்வரனுக்கு அஞ்ஞான ஸம்பந்தம் மட்டும் இருக்கின்றதென்றும், அஹங்கார ஸம்பந்தமோ, அதில் அபிமானம் என்பதோ கிடையாது என்று எந்த காரணத்தைக் கொண்டு சொல்லப்படுகிறது என்றால்,

ச்லோகம் :

बिम्बस्य नापि तमसि प्रतिबिम्बकस्य संघट्टनं क्वचिदहंकरणेन शक्यम् ।
वक्तुं प्रभोः सकललोकहितावतारस्वेच्छाविनिर्मितवपुर्वरमन्तरेण

ச்லோகார்த்தம் : பிம்ப ரூபமாகவோ, அவித்யா ப்ரதிபிம்ரூபமாகவோ இருக்கின்ற ஈச்வரனிடத்தில், ஸர்வலோகத்திற்கும் ஹிதம் செய்கின்றதும், ஸ்வ இச்சையினால் உண்டு பண்ணப்படுகின்றதுமான உத்தம அவதார சரீரத்தைத் தவிர வேறு அஹங்கார ஸம்பந்தம் சொல்லமுடியாது.

வ்யாக்யானம் : சுத்த சைதன்யம் கூடஸ்த்தமாகவும், நிர்விகல்பஸ்வரூபமாகவும் ஞானஸ்வரூபமாகவும் இருக்கின்றது. அதனால் அஞ்ஞான ஸம்பந்தமோ, அஹங்கார ஸம்பந்தமோ இருக்க முடியாது.

ஈச்வரன் பிம்பம் என்று சொல்லப்படும் பக்ஷத்தில் சின்மாத்ரமாக இருக்கின்ற பிம்பத்திற்கு அஹங்காரத்துடன் ஸம்பந்தம் சொல்லமுடியாது. ஏனெனில் கூடஸ்த்தம் நிர்விகல்பகம் சைதன்யம் என்பது ஸர்வவிகல்பங்களுக்கும் அதிஷ்ட்டானமாக இருக்கின்றது. விகல்பங்கள் எல்லாம் ஆரோபிதம். அதனால் பிம்பஸ்தமானீயமான சின்மாத்ர ஸ்வரூபமான ஈச்வரனிடம் எந்த நிலையிலும் அஹங்காரம், அஞ்ஞானம் என்ற இவைகளின் ஸம்பந்தம் உண்மையில் கிடையாது. இதேபோல் ஈச்வரன் ப்ரதி பிம்பம் என்று சொல்லப்படும் பக்ஷத்திலும், தமோரூபமாகவும், காரண ரூபமாகவும், அவ்யாக்ருத ரூபமாகவும் இருக்கின்ற அஞ்ஞானத்தில் ப்ரதிபிம்பிக்கின்ற சைதன்யத்திற்கும், அஞ்ஞானம், அஹங்காரம் இவைகளுடன் ஸம்பந்தம் சொல்லமுடியாது. எனெனில் ப்ரதி பிம்ப சைதன்யமான ஈச்வரன், அஞ்ஞானம், அஹங்காரம் என்பவைகளுக்கு அதிஷ்ட்டானமாக இருக்கின்றதால் ஸ்வதந்த்ரமாக இருக்கின்றது. அதனால் அஞ்ஞானம் ஆவரண ரூபமாக இல்லாததால், அஞ்ஞானம் என்பதும் அஹங்காரம் என்பதும் ஈச்வரனுக்கு வசப்பட்டதாக இருக்கின்றது. ஆகவே ஈச்வரனுக்கு அஹங்கார அத்யாஸமோ, அஹங்கார அபிமானமோ கிடையாது. அஞ்ஞானத்தினாலோ அதன் கார்யத்தினாலோ எந்த விதமான அதிசயமும் (விகாரமும்) ஏற்படுவதில்லை.

பூர்வ : அப்படியானால், அஹமாத்மா குடாகேச: என்றும், அஹம் ஸர்வஸ்ய ப்ரபவ: என்றும் பகவான் பல இடங்களில் அஹமஹம் என்று தெரிவிக்கின்றாரே? அதனால் ஈச்வரனுக்கும் அஹங்காரத்தில் அபிமானம் இருக்கிறதென்று தானே சொல்ல வேண்டும்?

**சித்தா :** பல இடங்களில் பகவானல் அஹமஹம் என்று சொல்லப்பட்டிருந்தாலும் அதற்காக ஈச்வரனுக்கு வ்யாமோஹம் இருப்பதாக சொல்ல முடியாது. ஏனெனில் லோகக்ஷேமத்திற்காக பக்தர்களின் ப்ரார்த்தனைக்கு இணங்கி அவர்கள் அபீஷ்ட்டத்தை நிறைவேற்றவேண்டி ஸ்வ இச்சையினுல் இந்த சரீரத்தை எடுக்க வேண்டுமென்று ஸங்கல்பித்து, ச்ரேஷ்ட்டமான இந்த சரீரத்தை எடுத்திருக்கின்றதால் பகவான் அஹங்கார வசப்பட்டவரல்ல. லோக வ்யவஹாரத்திற்காகவே அஹம் என்று வ்யவஹாரம் செய்யப்படுகிறது என்று அறியவேண்டும். கர்மபலனை அனுபவிப்பதற்காக ஏற்பட்ட சரீரமல்ல. ஈச்வர சரீரம் மாயா மாத்ரம் (மாயிகம்) என்பதால் அஹங்கார வசப்பட்டவரல்ல.

**180.** அவதாரிகை :

அஹங்காரம் இல்லாததால் அஹம் என்ற அத்யாஸம் இல்லை என்றாலும், அஞ்ஞான ஸம்பந்தம் இருப்பதால் அஞ்ஞானி என்ற புத்தி ஈச்வரனுக்கும் இருக்கிறதென்று தானே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

नाहंकृतिं च परिहृत्य तमस्विताधीः संभाव्यतेऽपहतपाप्मनि नित्यमुक्ते ।
तामन्तरेण घटते न च मूढभाव संभावनाऽपि परमेशितरि प्रसन्ने

**ச்லோகார்த்தம் :** அஹங்காரம் இல்லாமல் நான் அஞ்ஞன் என்ற எண்ணம், பாபமற்றவனும், நித்யமுக்தனுமான ஈச்வரனிடம் ஏற்படாது. நான் அஞ்ஞன் என்ற எண்ணம் இல்லாததால், ப்ரகாச ஸ்வரூபமான பரமேச்வரனிடத்தில் மோஹ ஸம்பாவனையே கிடையாது.

**வ்யாக்யானம் :** நிர்மலமான ப்ரகாச ஸ்வரூபமான ஈச்வரனிடம் அஞ்ஞானமோ அதன் கார்யமான மோஹாதிகளோ இருக்கமுடியாது. அஞ்ஞான ஸம்பந்தம் இருந்தபோதிலும் கர்மா தீனமான பாப புண்யங்கள் அற்ற ஸ்வரூபமாக இருக்கின்றதால் அஹங்காரம் என்பது கிடையாது. அபஹத பாப்மத்வாதி ஸ்வரூபரான ஈச்வரனுக்கு தன் ஸ்வரூப போதம் இருப்பதால் அஞ்ஞானம் பாதிதமாக இருக்கிறது. அதனுலேயே அஞ்ஞானம் அதன் காரணமான அஹங்கார ஸம்பந்தமோ, அதனுல் ஏற்படும் தாதாத்ம்ய அத்யாஸமோ கிடையாது. ஸ்வப்ரகாச சின்மாத்ரஸ்வரூபத்தில் அஞ்ஞானம் பாதிதம் என்பதால் ஈச்வரனுக்கு ஆவரணம் இருக்கமுடியாது. ஸர்வஞ்ஞத்வாதி தன்மைகள்தான் இருக்க முடியுமோயன்றி அதற்கு மாறுபட்ட மூடத்தன்மைகள் இருக்க முடியாது. ஈச்வரஸ்வரூபம் அஞ்ஞானத்தினுல் அவச்சின்னமில்லை என்பதால் மோஹாதிகள் கிடையாது. ஜீவன் முக்தனிடம் ஞானம் ஏற்படுவதற்கு முன் அஹங்கார அபிமானம் இருந்தபோதிலும் கூட ஞானம் ஏற்பட்ட பிறகு அவைகள் நாசத்தை அடைகின்றது. ஆகவே ஒருபோதும் ஈச்வரனிடம் அஹங்காரம் இருக்க முடியாது. ஆனுல் தன் இச்சையினுல் அஹங்காரத்தை உண்டு பண்ணி பக்தர்களை ரக்ஷிக்கின்றூர். ஜீவனுக்கும் ஸுஷுப்தி நிலையில் அஞ்ஞானம் இருந்தும் அஹங்காரம் இல்லை. ஜாக்ரத் போகப்ரதமான கர்ம ஸம்பந்தம் ஏற்படுகின்றபோதே அஹங்காரம் ஏற்படுகிறது.

**181.** அவதாரிகை :

ஈச்வரன் ஸ்வ இச்சையினுல் சரீரத்தை எடுத்துகொண்ட போதிலும், சரீரம் இருக்கின்ற இடங்களில் அஞ்ஞானம் இருக்கிறதென்று சொல்ல வேண்டுமே?

ச்லோகம் :

स्वेच्छाविनिर्मितवपुर्भजनेऽपि तस्य नाज्ञानितावगतिरस्ति वशित्वहेतोः ।
वश्यत्वहेतुकमिदं स्फुरणं नराणां नाहं विजान इति नास्ति हृदीश्वरस्य

ச்லோகார்த்தம் : ஸ்வ இச்சையால் ஏற்பட்ட சரீரத்தை அடைந்த போதிலும் அஞ்ஞானம் என்பதை தன் வசமாக வைத்துக் கொண்டிருப்பதால், நான் அஞ்ஞன் என்ற எண்ணம் ஈச்வரனுக்கு ஏற்படாது. அஞ்ஞான வசப்பட்டிருக்கின்ற ஜீவனிடமே நான் அஞ்ஞன் என்ற எண்ணம் ஏற்படுகிறது. ஈச்வரன் அவ்விதமில்லே.

வ்யாக்யானம் : சரீரம் இருக்கின்ற இடங்களில் எல்லாம் அஞ்ஞானம் இருக்க வேண்டுமென்ற நியமம் சொல்ல முடியாது. ஈச்வரனுடைய சரீரம் ஸ்வ இச்சையினுல் ஏற்பட்டிருப்பதாலும் அஞ்ஞானம் என்பதை தன் வசப்படுத்தி இருப்பதாலும் அஞ்ஞானத்தினுல் எற்படும் மோஹம் என்பதும் கிடையாது. அதேபோல் அஹங்காரம் என்பதும் கிடையாது. ஜீவனுனவன் அஞ்ஞான பரதந்தரனுக இருக்கின்றதால் அஞ்ஞானத்தையும் அதன் கார்யமான கரணுதிகளேயும் தன்னிடம் ஆரோபம் செய்து கொள்கிருன். ஸ்வதந்த்ரனுன ஈச்வரனிடன் இவ்வித வ்யவஹாரங்கள் ஸம்பவிக்க முடியாது.

**182.** அவதாரிகை :

ஸ்வ இச்சையினுல் ஈச்வரனுக்கு சரீரம் ஏற்பட்டிருந்தபோதிலும், ஸ்ரீ ரகுநந்தருக்கு அஞ்ஞானம் இருப்பதாக புராண வசனங்களினுல் அறியப்படுகிறதே? என்றுல்,

ச்லோகம் :

संकल्पपूर्वकमभूद्रघुनन्दनस्य नाहं विजान इति कंचन कालमेतत् ।
ब्रह्मोपदेशमुपलभ्य निमित्तमात्रं तच्चोत्ससर्ज स कृते सति देवकार्ये

ச்லோகார்த்தம் : நான் அஞ்ஞன் என்ற எண்ணம் சிறிது காலம் தனது இச்சையினுலேயே ஸ்ரீராமரிடம் இருந்தது. தேவ கார்யம் முடிந்த பிறகு ப்ரஹ்மோப தேசம் என்ற நிமித்தத்தைக்கொண்டு, ராமன் அந்த அஞ்ஞானத்தையும் விட்டு ஒழித்தார்.

வ்யாக்யானம் : ரகுநந்தரான ஸ்ரீராம பிரானுக்கு அஞ்ஞானம் இருந்ததாக சாதரணமாக அறியப்பட்ட போதிலும், ராமாயணம் என்ற காவ்யத்தில் "அஸ்ய ராமஸ்ய ராமத்வம் பச்யந்து ஹரிபூத்வா ஸாகரம் ஸோஷயிஷ்யாமி" என்று தன்னுடைய ஸ்வரூப சக்தியைப் பற்றி தெரிவிப்பதாகச் சொல்லப்படுகிறது. ஆகவே தேவ கார்யத்தை உத்தேசித்து ஈச்வரன் மானுட சரீரத்தை தன் இச்சையினுலேயே எடுத்து, அஞ்ஞனேப் போன்று வேஷதாரியாக இருந்தார் என்றே புராணங்களில் சொல்லப்படுகிறது. அதனுல் தன் ஸங்கல்ப பூர்வகமாகவே கார்யங்களே அஞ்ஞானியைப் போல் செய்தாரேயன்றி

அஞ்ஞான பரதந்த்ரமாக செயல்படவில்லை. ராக்ஷஸ வதம் முடியும் பர்யந்தம் அஞ்ஞானியைப் போல் செயல் புரிந்தார். அதன்பின் தேவ கார்யம் முடிந்துவிட்டது என்ற ப்ரஹ்மாவின் உபதேசமும் தேவ கார்ய நிமித்தமாகவே செய்யப்பட்டது. அதனுல் உண்மையில் ஸ்ரீ ராமபிரானுடைய அஞ்ஞான நிவர்த்திக்காக உபதேசிக்கப்படவில்லை.

**183.** அவதாரிகை :

விசாரிக்கப்பட்ட விஷயம் முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

अज्ञानवर्जिततया परमेश्वरोऽसौ सर्वज्ञ एव यदहंकृतिबन्धहीनः ।
ज्ञानं निरावरणमिष्टममुष्य यस्माज्जीवस्य सावरणमेव यतोऽनभिज्ञः

**ச்லோகார்த்தம் :** அஞ்ஞான ஆவரணம் இல்லாததாலும், அஹங்கார ஸம்பந்தம் இல்லாததாலும் அந்த பரமேச்வரன் ஸர்வஞ்ஞனாகவே இருக்கிறுன் அவனுடைய ஞானம் அனுவ்ருதமாகவே இருக்கின்றது. ஜீவனுடைய ஞானம் ஆவ்ருதமாக இருக்கின்றதால் அவனே அஞ்ஞானியாக இருக்கின்றுன்.

**வ்யாக்யானம் :** ஈச்வரனுக்கு அஞ்ஞானம் என்ற உபாதிஸம்பந்தம் இருந்தபோதிலும் ஆவரணம் என்பது கிடையாது. அதனுல் ஈச்வரன் ஸ்வரூப ஆவரணம் உடையவரல்ல. ஜீவனுக்கு அஞ்ஞானம் என்பது மட்டுமின்றி அஹங்காரம் என்ற சட்டையும் இருக்கின்றது. அதன் காரணமாக இவனுடைய உண்மையான ஸ்வரூபம் மறைக்கப்பட்டிருக்கிறது. இவ்விதம் அஹங்காரதாதாத்ம்ய அத்யாஸத்தினுல் தான் கிஞ்சிக் ஞத்வம், அல்பத்வம், அஞ்ஞத்வம் அநீச்வரத்வம் என்பதெல்லாம் ஜீவனிடம் இருக்கின்றது. அதனுல்தான் பரோக்ஷமாக அறியப்படும் ஈச்வரன் ஸர்வஞ்ஞன் என்று ஒத்துக்கொள்ளப்படுகிறது. அஹங்காராதிகளில் அபிமானம் உள்ளவனுக்கே அஞ்ஞத்வம் அல்பத்வம் என்பவைகளெல்லாம் இருக்கின்றது. ஆகவே சைதன்யம் ஒன்ருகவே இருந்தபோதிலும் அவ்விதமே, அஞ்ஞானம் என்ற உபாதி இருந்தபோதிலும், ஸ்வரூப ஆவரணம் இல்லாததால் ஸர்வஞ்ஞனாக இருக்கின்ருர் ஜீவனுக்கு ஆவரணம் இருப்பதால் அஹம் அஞ்ஞ; என்ற அனுபவம் இருக்கிறது.

**184.** அவதாரிகை :

ஜீவன், ஈச்வரன் இரண்டுபேரும் சேதனன் என்றும், அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் என்றும் சொல்லப்படுமானுல், ஜீவனென்றும், ஈச்வரனென்றும் வைலக்ஷண்யம் சொல்வது எதற்காக ?

**ச்லோகம் :**

सर्वप्रमाणफलभूतसमस्तसंविज्ज्ञानं बिभर्ति परमः पुरुषो न जीवः ।
ज्ञानं निरावरणमैश्वरमस्तु तस्माज्जैवं च सावरणमस्य विशेषहेतोः

**ச்லோகார்த்தம் :** ஸமீபத்தில் இருந்துகொண்டு ஈச்வரன்தன் சைதன்ய ஆபாஸத்தினுல் அஞ்ஞானம், அதன் கார்யமான ஜகத் என்ற இரண்டையும் எப்போதும்

ப்ரகாசிக்கச் செய்கின்றுன். ஜீவன் இவ்விதம் செய்வதில்லை. ஆகையால் ஜீவனுடைய ஞானம் ஆவ்ருதம். ஈச்வரனுடைய ஞானம் அனுவ்ருதம் என்று அறியப்படுகிறது.

வ்யாக்யானம் : லோகத்தில் விஷயஞானம் என்பதையே ஞானம் என்று சொல்லப்படுகிறது. அகண்ட சைதன்யம் என்ற ஸம்வித்ஸ்வரூபமே அந்தந்த ப்ரமாணத்தினுல் அந்தந்த விஷய ஞானம் உண்டாவதற்கும் அந்த விஷயங்கள் ப்ரகாசிப்பதற்கும் உபாதானமாக இருக்கின்றது. இந்த ஸம்வித் என்பது அஞ்ஞானத்தினுல் அபிபூதமாக ஆகாது. (அதாவது ஸம்வித் ஸ்வரூபம் ப்ரகாசிக்காமல் தடுக்கக் கூடிய சக்தி அஞ்ஞானத்திற்கு கிடையாது ஏனெனில் அஞ்ஞானத்தினுல் ஸம்வித் என்பது அபிபூதமாக இருக்குமானுல் விஷயவிவகாரம் என்பதே சித்திக்காது. ஒவ்வொரு ப்ரமாண வ்யாபாரத்திலும்ஸம்வித் ஜன்யமாக இருக்கின்றதால் (வ்ருத்திஞானம்) அதற்குஒரு உபாதானம் தேவைப்படுகிறது. அந்த உபாதானம் ஸம்வித்திற்கு ஸமானஸ்வபாவமுடையதாகவும் அகண்ட எகரஸஸ்ரூபமாகவும் ஒத்துக்கொள்ளப்பட வேண்டும். அதுவே (அந்த உபதானமே) விஞ்ஞானம் ஆனந்தம் ப்ரஹ்ம என்ற ச்ருதிவாக்யத்தினுல் ப்ரஹ்மரூபமாகவே இருக்கிறது. எல்லா ப்ரமாணங்களுக்கும் பலமாக ஏற்படுகின்ற ஸர்வஸம் வித்ரூபஞானங்களும் பரம புருஷனுன ஈச்வரனுல் தரிக்கப்படுகிறது. அந்த:கரணம் என்ற உபாதி பரிச்சின்னனுன ஜீவனுல் தரிக்கப்படவில்லை. ஆகையால் சேதனத்வம் என்பதும் அஞ்ஞான ஆச்ரயம் என்பதும் ஜீவன் ஈச்வரன் இரண்டுபேருக்கும் ஸமம் என்று சொல்லப்பட்டபோதிலும் ஜீவனிடம் ஞானம் ஆவரணமாகவும் ஈச்வரனிடம் நிராவரண ஞானமும் இருக்கின்றதால் வைலக்ஷண்யம் சொல்லப்படுகிறது.

**185.** அவதாரிகை :

மேலும், "தஸ்ய பாஸாத் ஸர்வமிதம்விபாதி" என்ற ச்ருதிவாக்யம், ஸ்வபாவத்திலேயே அஞ்ஞானம், அதன் கார்யமான ப்ரபஞ்சம் என்பதெல்லாம் ஜடமாக இருக்கின்றதால் ஸர்வமும் ஸம்வித் ஸ்வரூபத்தினுல்தான் ப்ரகாசிக்கவேண்டும். அதனுல் ஈச்வரனுடைய ஸ்வரூபஞானத்திற்கு ஆவரணமில்லையென்பது சித்திக்கின்றது.

ச்லோகம் :

अज्ञानतज्जमखिलं जगदात्मभासा नित्यं प्रकाशयति संनिहितः सदात्मा ।
जीवस्तु नैवमिति सावरणं तदीयं ज्ञानं निरावारणमैश्वरमुच्यते हि

ச்லோகார்த்தம் : ஸமீபத்தில் இருந்துகொண்டு ஈச்வரன் தன் சைதன்ய ஆபாஸத்தினுல், அஞ்ஞானம் அதன் கார்யமான ஜகத் இவை இரண்டையும் எப்போதும் ப்ரகாசிக்கச் செய்கின்றுன். ஜீவன் இவ்விதம் செய்வதில்லை. ஆகையால் ஜீவனுடைய ஞானம் ஆவ்ருதமாக இருக்கிறது. ஈச்வரனுடைய ஞானம் அனுவ்ருதமாக இருக்கிறது.

வ்யாக்யானம் : ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் உள்ள விசேஷம் என்ன என்பதை மேலும் விளக்கப்படுகிறது. ஸத் சப்தத்தினால் குறிப்பிடப்படும் பரமாத்மாவே அகில ஜகத்திற்கும் அதிஷ்ட்டானமாக இருக்கிறது. அதனுல் தன்னிடம் ஆரோபிதமான எல்லா வஸ்துக்களையும் தன்னுடைய சைதன்ய ப்ரகாசத்தினுலேயே ப்ரகாசப்படுத்துகின்றது. ஆகவே ஸர்வ அதிஷ்ட்டான சைதன்யம் ஸர்வத்திற்கும் ஸ்வரூபமாகவே இருக்கின்றதால்

ஸன்னிஹிதம். எப்படி சூர்யன்ஸ்வயம் ப்ரகாச ஸ்வரூபமாக இருந்து மற்றவைகளையும் ப்ரகாசிக்கச் செய்கின்றதோ அதுபோல் சைதன்யம் தானும் ப்ரகாசித்து மற்றவைகளையும் ப்ரகாசிக்கச் செய்கிறது. ஜீவன் என்பவனும் ஞானஸ்வரூபமாக இருந்தாலும்கூட உபாதி வஸாத் பரிச்சின்னத்வம் அல்பத்வம், கிஞ்சிக்ஞத்வம் போன்ற தன்மைகளுடன் கூடினவனுக இருக்கின்றதால் ஜீவனுடைய ஞானம் ஆவரணத்துடன் கூடியதாக (ஸாவரணமாக) இருக்கிறது. ஈச்வரஞானம் அனுவரணம் ஜீவனுடைய ஞானம் கர்மாதீனமாக புண்யாபுண்யத்தினுல் ஏற்படுகிறது. புருஷப்ரயத்னம் இருந்தும் ஞானம் ஏற்படவில்லையென்ருல் ப்ராரப்தம் அதிக (த்ருடமாக) பலவத் என்று அறியவேண்டும். புண்யபலத்தினுல்தான் ஞானம் தடையின்றி ஏற்படும். பாபத்தினுல் ஞானம் தடைபடும். ப்ரமாகரணம் என்று சொல்லப்படும் இந்த்ரியாதிகளில் உள்ள தோஷத்தின் தாரதம்யத்தினுல் எப்படி அந்த:கரண வ்ருத்தியில் வஸ்து ஞானம் ப்ரகாசிக்கின்றதோ அதுபோலவே அந்த:கரணவ்ருத்தியைக் கொண்டு ஏற்படும் விஷய ஞானமும் ஏற்படுகிறது. ஆகையால் ஜீவனுக்கு ஞான ஆவரணம் இருக்கின்றதால் வஸ்துதத்வம் என்னவென்று அறியக் கூடியதன்மையில் இல்லை. ஈச்வரனுக்கு எந்தவிதமான தோஷங்களும் இல்லாததால், நித்ய நிரதிசயஞானம் ஏகரூபம் என்பதால் ஆவரணமில்லை என்று அறியவேண்டும்.

**186.** அவதாரிகை :

ஈச்வரனுடைய ஸ்வரூபம் அனுவ்ருதமாக இருப்பதாலும் ஸர்வத்திற்கும் ஸ்வரூபமாக ஸன்னிஹிதமாக இருப்பதாலும் ஸர்வதா ஸர்வஞ்ஞராகவே இருக்கின்ருர். ஆகவே அஞ்ஞானஸம்பந்தமில்லை என்றும் அதனுல் ஆவரணமில்லையென்றும் சொல்லமுடியாது.

ச்லோகம் :

ज्ञानात्मकस्यामलसत्त्वराशेरपेतदोषस्य सदा स्फुटस्य ।
किं वा जगत्यत्र समस्तपुंसामज्ञातमस्यास्ति हृदि स्थितस्य

ச்லோகார்த்தம் : ஞானஸ்வரூபனும் சுத்த ஸத்வனும் தோஷரஹிதனும் ஸதாப்ரகாசிக்கின்றவனும் எல்லா ஜீவர்களின் ஹ்ருதயத்தில் வசிப்பவனுமான ஈச்வரனுக்கு இந்த உலகத்தில் எந்த வஸ்து அஞ்ஞாதமாக இருக்க முடியும்?

வ்யாக்யானம் : ஈச்வரன் சுத்த ஸ்த்வகுணஸம்பன்னராக இருக்கின்றதால், அவித்யை என்பது இருந்தபோதிலும் ஆவரணம் கிடையாதுஎன்றே சொல்லவேண்டும். அத்யந்தம் அஞ்ஞானமே இல்லையென்று சொல்லப்படவில்லை என்று "அமலோ ரஜஸ் தமோப்யாம் நஅபிபூத:ஸத்வராசி:" என்ற விஷ்ணுபுராணவாக்யம் தெரிவிக்கின்றது.

அமல ரஜஸ் தமோப்யாம் என்ற பதங்களே ஈச்வரனுக்கு அஞ்ஞானம் இருக்கின்றதென்று சூசனையாகத் தெரிவிக்கின்றது. ஸத்வ ரஜஸ் தமஸ் என்பதெல்லாம் அஞ்ஞானதர்மம். ஸத்வகுண ப்ரதானமாயாப்ரதிபிம்பமே ஈச்வரன் என்பதால் அஞ்ஞானஸம்பந்தம் இருக்கின்றதென்று அறியப்படுகிறது. ரஜஸ்தமஸ் என்ற குணங்கள் அடங்கி இருப்பதால் ஞான ஆவரணம் கிடையாது.. தோஷரஹிதமாக இருக்கின்றதால் ஸத்வம் ப்ரதானம் என்ருே அல்லது ஸத்வகுண ப்ரதானத்தினுல் தோஷமில்லை என்ருே சொல்லலாம். ஸர்வ ஜீவராசிகளிடத்திலும் அந்தர்யாமியாகவும் இருக்கின்ற காரணத்தினுல்

ஜீவன் ஈச்வரன் இரண்டிற்கும் வித்யாஸம் இருக்கின்றது. ஆகவே ஈச்வரன் ஸர்வஞ்ஞனுக இருந்து, ஸர்வத்தையும் அறிகின்ருர் என்று சொல்லப்படுவதில் பொருந்தாதது ஏதுமில்லே.

**187.** அவதாரிகை :

ஜீவன் அவித்யைக்கு வசப்பட்டவன், ஈச்வரன் அவித்யைக்கு வசப்பட்டவர் அல்ல என்று புராணுதிகளிலும் சொல்லப்பட்டிருக்கிறது.

ச்லோகம் :

मायामसौ वितनुते विभुरेवमेनां सर्वेश्वरः सततमेव वशी करोति ।
इत्यादिवाक्यमुपपन्नतरं पुराणे स्वाज्ञानमस्य च वशे चिदधीनभावात्

ச்லோகார்த்தம் : நியந்தாவான ஈச்வரன் மாயைஎன்பதை வசீகரிக்கின்ருன். அதை ப்ரபஞ்சரூபமாக பரிணமிக்கச் செய்கின்ருன். என்பது போன்ற புராணவசனங்கள் பொருத்தமாகவே இருக்கின்றது. ஏனெனில், சைதன்யாதீனமாக இருக்கின்ற அஞ்ஞானம் என்பது ஈச்வரனுடைய வசத்தில் இருக்கின்றது.

வ்யாக்யானம் : ஈச்வரன் மாயாவி என்று புராணங்களில் நேரிடையாகவே சொல்லப்படுகிறது. இந்த மாயை ப்ரபஞ்சாகாரமாக பரிணுமத்தை அடைவதற்கு சக்தியைக் கொடுப்பவர் ஈச்வரன்தான். அதனுல் ஸர்வத்திற்கும் ஈச்வரனுக இருக்கின்ற காரணத்தினுலேயே மாயை ஈச்வரனுக்கு வசப்பட்டிருக்கிறது. ஈச்வரன் ஒரு போதும் மாயா வசப்பட்டவரல்ல. இப்பேர்ப்பட்ட காரணத்தினுலேயே ஈச்வரனே ப்ரபு என்று சொல்லப்படுகிறது. ஈச்வர அதீனம் மாயை என்று சொல்லப்பட்டால்தான் புராண வசனங்களும் ப்ரமாணமாக ஆகும். இந்த மாயைதான் அஞ்ஞானம் என்று சொல்லப்படுகிறது இந்த அஞ்ஞானம் சித்ஸ்வரூப அதீனமாக இருக்கிறது என்று சொன்னுல்தான் அஞ்ஞானம் இருக்கிறதென்றும் அஞ்ஞானம் அறியப்படுகிறது என்றும் சொல்ல முடியும். அஸ்தி என்பதும் பாதி என்பதும் சைதன்யஸ்வரூபமே என்பதால் அஞ்ஞானம் பரதந்த்ரம் என்றே சொல்லவேண்டும். ஆகவே அஞ்ஞானம் ஈச்வரனுக்கு வசப்பட்டது என்றே சொல்லவேண்டும்.

**188.** அவதாரிகை :

ஜீவனுக்கே அஞ்ஞானம் என்றும் ஈச்வரனுக்கு அஞ்ஞானம் கிடையாது என்றும் பாஷ்யாதிகளில் சொல்லப்படுவதால் அஞ்ஞான ஸம்பந்தம் ஈச்வரனுக்கு சொல்லமுடியாது.

ச்லோகம் :

जीवाज्ञतावचनमेवमिदं समस्तं सर्वत्र योज्यमितरत्र च तन्निषेधः ।
तस्मात्समञ्जसमिदं मतमस्मदीयमाचार्यवाक्यमुपपन्नतरं हि तत्र

ச்லோகார்த்தம் : இவ்விதம் ஜீவன் அஞ்ஞன் என்றும், ஈச்வானிடம் அஞ்ஞானம் இல்லேயென்றும் தெரிவிக்கின்ற ஸர்வ வாக்யங்களும் இந்த முறையில் (யுக்தி யுக்தமாக) பொருத்திக் கொள்ளவேண்டும். ஆகையால் எங்கள் மதமே சரியானது. இந்த மதத்தில்தான் ஆசார்ய வாக்யம் பொருந்துகிறது.

**வ்யாக்யானம் :** இந்த ஆக்ஷேபத்திற்கு பதில் முன்பே சொல்லப்பட்டிருக்கிறது. ஜீவனிடம் அந்த கரண ஸம்பந்தமிருப்பதால் ஸ்பஷ்ட்டமாக அஞ்ஞானம் அறியப்படுகிறது. ஈச்வர சைதன்யத்தில் அஞ்ஞானம் ஆவரண ரூபமாக இல்லாததால் அஞ்ஞானம் என்பது ஸ்பஷ்ட்டமாக அறியப்படவில்லை. ஒரே சைதன்யம் தான் ஈச்வரனுகவும், அனேக ஜீவர்களாகவும் வ்யவஹாரம் செய்யப்படுகிறது. இதுவே ஆசார்யாளுக்கும் ஸம்மதம், வேதாந்த சித்தாந்தமும் அதுவேயானதால் அதுவே எங்கள் மதம்.

**189.** அவதாரிகை **:**

உங்களுடைய மதம் என்ருல் என்ன?

**ச்லோகம் :**

चैतन्यमेव तु तमस्वि तदप्रबुद्धं सर्वज्ञमेतदिह विश्वमिमं विभागम् ।
जीवेश्वरौ च जगदित्यपि निर्मितीत इत्येव वेदशिरसः प्रथितः प्रचारः

**ச்லோகார்த்தம் :** சைதன்யமே அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் என்றும் அந்த சைதன்யமே, அஞ்ஞனுகவும், ஸர்வஞ்ஞனுகவும் இருக்கின்றது என்றும், சைதன்யமே ஜீவன், ஈச்வரன், ஜகத் என்ற ஸர்வ விபாகங்களேயும் உண்டு பண்ணுகின்றதென்றும் வேதத்தில் சொல்லப்படும் ப்ரசித்தமான சித்தாந்தம்.

**வ்யாக்யானம் :** உபநிஷத் என்பது தாத்பர்ய விஷயமாக எதை போதிக்கின்றதோ அதே கருத்தை ஆசார்ய பாஷ்யங்களும் தெரிவிக்கின்றது. எங்களுடைய சித்தாந்தமும் வேதாந்த வாக்யங்களின் தாத்பர்யத்தையே தெரிவிக்கின்றது.

சுத்த சைதன்யம் அனுதி மாயா ஸம்பந்தத்தினுல் மாயா ஸபளம் என்று சொல்லப்படுகிறது. அந்த நிலேயில் சைதன்யம் எவ்வித விபாகமும் அற்றதாக இருக்கிறது. ஆனுல் மாயையில் ஏற்படும் விகாரத்தினுல் அதே சைதன்யம் மாயா கார்யமான அந்த:கரண ஸம்பந்தமுடையதாக ஆகிறது. அந்த:கரண அவச்சின்ன சைதன்யமே ஜீவனென்றும் அஞ்ஞானி என்றும் சொல்லப்படுகிறது. அந்த:கரண ஸம்பந்தமில்லாமல் அவித்யா மாத்ர ஸம்பந்தம் உடையதாக இருக்கின்றபோது ஸர்வ வஸ்துக்களின் ஸம்பந்தத்தினுல் ஸர்வஞ்ஞனென்று சொல்லப்படுகிறது. அதாவது ஸர்வ வஸ்துக்களி லும் ஸத்ரூபமாக இருந்து ஸர்வத்தையும் ப்ரகாசப்படுத்துகின்றதால் ஸர்வஞ்ஞன் என்று சொல்கிருேம். இந்த விதம் லோக வ்யவஹார காலத்தில் ஜீவனென்றும் ஜகத் என்றும் ஈச்வரனென்றும் விபாகம் செய்து வேத சிரஸ் என்று சொல்லப்படும் உபநிஷத்துக்களில் சொல்லப்படுகிறது.

'ப்ரஹ்மவா இதமக்ரமாஸீத்', 'தத் ஆத்மானமேவாவேத் அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற (ப்ரஹ்தாரண்யக 1.4.10) வாக்யம் ப்ரஹ்மமே ஆத்ம வித்யையினுல் தன்னே ப்ரஹ்மமென்று அறிந்தது என்றும் தெரிவிக்கிறது. இவ்விதம் தன்னே ப்ரஹ்மமென்று அறிந்த அறிவினுல் ஜீவன், ஈச்வரன், ஜகத் என்ற விபாகம்அற்றதாகஸர்வாத்ம பாவத்தை அடைந்தது என்று தெரிவிக்கின்றது. அதுவே ஸர்வமாக ஆயிற்று என்ற வாக்யம் ப்ரஹ்ம பாவத்தை அடைந்தது என்று தெரிவிக்கின்றதால் ஞான நிவர்த்யமாக இருக்கின்ற இந்த விபாகங்கள் அவித்யா கல்பிதம்தான் என்று நிச்சிதமாகின்றது.

ஸத்யமாக இருக்குமானுல் வித்யையினுல் நிவர்த்திக்க முடியாது. ஸர்வத்திற்கும் ஸ்வரூபமாக (ஆத்மாவாக) இருப்பது நானே என்ற ஞானமே ஸர்வாத்மபாவம். என்ஸ்வ ரூபத்தையன்றி வேருக எதுவுமே இல்லையென்று அறிய வேண்டும். எது சோரன் என்று அறியப்பட்டதோ அதுவே ஸ்தாணு என்று அறிவதுபோல் அஞ்ஞத்வம் சுத்தத்வம் என்பது போன்ற பேத விவகாரங்கள் எந்த சைதன்யத்தில் இருப்பதாக அறியப்பட்டதோ அவையெல்லாமே உண்மையில் இல்லையென்றும் சுத்த சைதன்யம் என்பதே உண்மையான ஸ்வரூபம் என்று பாதாயாம் ஸாமானுதி கரண்யத்தினுல் அறியப்படவேண்டும். இந்த விதம் ச்ருதி வாக்யங்களை ஆராய்ந்து அறிந்த காரணத்தினுல் எங்களுடைய மதம் வேதாந்த சித்தாந்த மதம் என்றும் அதுவே சரியானது என்றும் சொல்லப்படுகிறது.

**190.** அவதாரிகை :

ஜீவனிடம் இருக்கின்ற அஞ்ஞானமென்பதும், ஈச்வரனிடம் இருக்கின்ற மாயை என்பதும் வேருக இருக்கிறதென்றே சொல்லவேண்டும். ஈச்வானிடம் இருக்கின்ற மாயை என்பதே அஞ்ஞானியான ஜீவனிடம் மோஹத்தை உண்டு பண்ணுகின்றது என்றே சொல்ல வேண்டும் என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது.

ச்லோகம் :

जीवेशानजगद्विभागजननी शक्तिर्जडा वैष्णवी मायेशानगता सती भवति सा जीवावधिर्मोहगीः ।
जीवानीश्वर एष मोहयति ते जीवा विमुह्यन्त्यतः शश्वद्विश्वदृगीश्वरो भवति ते जीवा विमूढा मुहुः

ச்லோகார்த்தம் : ஸர்வகதமான ஆத்மாவில் இருக்கின்ற ஜடசக்தியானது ஜீவன் ஈச்வரன், ஜகத், என்ற விபாகத்தை ஏற்படுத்துகின்றது. அந்த சக்தியானது ஈச்வரனிடம் இருக்கின்றபோது மாயை என்றும், அதுவே ஜீவனை ஆச்ரயித்திருக்கின்ற போது அஞ்ஞானம் என்ற சப்தத்திற்கு வாச்யமாகிறது. மாயாவியான ஈச்வரன் மாயையை வசப்படுத்தி அதனுல் ஜீவர்களை மோஹமடையச் செய்கிருர். ஜீவர்கள் அஞ்ஞான பரதந்த்ரமானதால் மோஹத்தை அடைகின்றனர். அதனுல் ஈச்வரன் எப்போதும் ஸர்வஞ்ஞனுகவும் ஜீவன் மோஹத்தை அடிக்கடி அடைபவனுகவும் ஆகிருன்.

வ்யாக்யானம் : ஈச்வர மாயையினுல்தான் ஜீவனுக்குமோஹம் எற்படுகிறது என்று ச்ருதி ஸ்ம்ருதிகளில் சொல்லப்படுகிறது. அதனுல் மாயை வேறு அஞ்ஞானம் வேறு என்று சொல்லப்படவேண்டும் என்ற ஆக்ஷேபம் சரியல்ல. ஏனெனில், ப்ரத்யக் சைதன்யத்தில் எந்த அஞ்ஞானம் ஜடசக்தி ரூபமாக இருக்கின்றதோ அந்த அஞ்ஞானமே ஈச்வரனிடம் இருக்கின்ற போது மாயை என்ற சப்தத்தினுல் விவகாரம் செய்யப்படுகிறது. ஸர்வபேதவ்யஹாரத்திற்கும் காரணமான வைஷ்ணவி என்ற இநத் சக்தியே பல பெயர்களால் சொல்லப்படுகிறது. ஆகவே ஒரே சக்தியென்பதே ஸ்புடமாக அறியப்படுகின்றபோது அஞ்ஞானம் என்றும் அஸ்புடமாக அறியப்படுகின்றபோது மாயை என்றம் ஸ்வதந்தரம் பரதந்தரம் என்றும் பலவிதமாகச் சொல்லப்படுகிறது என்று முன்பேவிளக்கப்பட்டிருக்கிறது.

**191.** அவதாரிகை :

இவ்விதம் ஒரே சக்திதான் காரணம் என்று சொல்லப்பட்டபோதிலும் அஞ்ஞான வசப்பட்ட ஜீவனுக்கு ஸம்ஸாரித்வம் என்பதும், மாயை என்ற சக்தி ஈச்வரனுக்கு

பரதந்த்ரமாக இருக்கின்றதால் ஜகத் சிருஷ்டி முதலான கர்த்ருத்வம் ஈச்வரனுக்குச் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

अज्ञानिनो भवति मोहविजृम्भितं तद्दुखं जगज्जनकता परमेश्वरस्य ।
मायामयी भवति तेन विलक्षणत्व मेकान्ततः श्रुतिशिरस्सु तयोः प्रसिद्धम्

ச்லோகார்த்தம் : அஞ்ஞானியான் ஜீவனிடத்தில் மோஹத்தினுல் ஏற்பட்ட துக்கம் இருக்கின்றது. பரமேச்வரனிடத்தில் மாயையினுல் ஏற்பட்ட ஜகத் காரணத்வம் இருக்கின்றது. இந்த விதம் ஜீவன் ஈச்வரன் இவர்களுக்கிடையே இருக்கின்ற நியமமான பேதம் வேதாந்தத்தில் ப்ரசித்தமாக இருக்கின்றது.

வ்யாக்யானம் : இந்த விதம் அஞ்ஞானம் ஒன்றே என்று சொல்லப்பட்ட போதிலும், ஈச்வரனுக்கு வசப்பட்ட அஞ்ஞானம் ஜகத்கர்த்ருத்வத்தின் காரணமாகிறது. அஞ்ஞான வசப்பட்ட ஜீவனுக்கு ஸம்ஸாரத்திற்கு காரணமாகிறது என்று சொல்லப்படுவது ச்ருதி யுக்தி இரண்டிற்கும் பொருத்தமாக இருக்கிறது. ஆகவே இந்த விதமே ஜீவனுக்கும் ஈச்வரனுக்கும் பேதம் சொல்லப்படுகிறது. வேறு எந்த முறையிலும் பேதம் என்பதே சொல்லமுடியாது.

**192.** அவதாரிகை :

கேவல சைதன்யமாத்ர நிஷ்ட்டமாக இருக்கின்ற அஞ்ஞானம் என்பது ப்ரஹ்மாச்ரயம் என்று சொல்லப்படுகிறது என்ருலும், ஜீவனிடம் இருக்கின்றபோதுதான் ஸ்பஷ்ட்டமாக அறியப்படுகிறது என்பதால் அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்று விவகாரம் செய்யப்படுகிறது.

ச்லோகம் :

चैतन्यस्याज्ञानशक्तेरनादेर्जीवत्वं तु व्यञ्जकं कल्पयन्तः ।
जीवारूढं व्यक्तमज्ञानमाहुर्जीवो मूढः कथ्यतेऽतो बहुज्ञैः

ச்லோகார்த்தம் : ஜீவத்வம் என்பது சைதன்யத்தில் இருக்கின்ற அனுதியான அஞ்ஞானத்திற்கு வ்யஞ்சகமாக இருக்கின்றது என்று வித்வான்கள் சொல்கிருர்கள். ஆகையால் ஜீவஸம்பந்தமான அஞ்ஞானமானது வ்யக்தமாக இருக்கின்றது. அதனுல் ஜீவன் அஞ்ஞனென்று வித்வான்களால் சொல்லப்படுகிறது.

வ்யாக்யானம் : அனுதியான அஞ்ஞான சக்தி என்பது சின்மாத்ரஸ்வ ரூபத்தை ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்டிருக்கிறது என்பதே உண்மை என்ற போதிலும், அந்த:கரணப்ரதிபலன சைதன்யத்தில்தான் அஞ்ஞானம் வ்யக்தமாக அறியப்படுகிறது. வ்யக்தி என்பது எப்படி ஜாதிக்கு அபிவ்யஞ்சமாக இருக்கிறதோ அதுபோல் ஜீவபாவத்தில்தான் அஞ்ஞானம் வெளிப்படையாக அறியப்படுகிறது. அதனுலேயே ஜீவாச்ரயம் என்றும், தத்வஞானத்தினுல் அஞ்ஞான நாசம் ஏற்படுகின்றபோது அதன் கார்யமான ஸர்வ விவஹாரங்களும் நாசமாகின்றது என்றும் ஆசார்யார், சூத்ரகாரர் முதலான பெரியோர்களாலும் வித்வான்களாலும் சொல்லப்படுகின்றது.

**193.** அவதாரிகை :

ஸூத்ரகாரர் பரிணாம வாதத்தைப் பற்றியே பல இடங்களில் தெரிவிக்கின்றதால், அஞ்ஞான கார்யம்என்று ஸூத்ரகாரர் தெரிவிப்பதாக எப்படிச் சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

अत्रैव वस्तुनि दृढं व्यवतिष्ठमानः प्रौढिप्रदर्शनपरः पुनरन्यदन्यत् ।
भाषापदं किमपि निक्षिपति स्फुटं तदस्माभिरेवमुपपादितमञ्जसैव

**ச்லோகார்த்தம் :** இந்த பக்ஷத்தையே த்ருடமாகக் கொண்டு அப்யுகம வாதத்தை ஆச்ரயித்து வ்யாஸாசார்யர் வெவ்வேறு ஸூத்ரங்களைச் செய்திருக்கின்றார். அந்த ஸூத்ரங்கள் எங்களால் ஸ்புடமாகவும் நேரிடையாகவும் வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஆரம்ப வாதம், ஸங்காத வாதம், விவர்த்த வாதம், பரிணாம வாதம்என்று பல வாதங்கள் இருக்கின்றதால், அவைகளுக்குள் வேதாந்த சித்தாந்தம் என்ன என்பதை தெரிவிப்பதற்கு பரிணாம வாதம் என்பது ஓரளவு உபகாரமாக இருக்கின்றது என்பதால் ப்ரௌடிவாதமாக பரிணாம வாதம் பற்றி தெரிவிக்கின்றாரேயன்றி உண்மையில் பரிணாம வாதத்தை அவர் ஒத்துக்கொள்ளவில்லை. ஏனெனில் அத்வைத சித்தாந்தத்திற்கு ஸாதகமாக இல்லை. கர்த்ருத்வம் என்பது உபாதான ஞானமின்றி ஏற்படாது, ஸர்வஞ்ஞத்வமின்றி ஜகத்கர்த்ருத்வம் ஸம்பவிக்காது. ஸர்வஞ்ஞத்வம் என்பது, கூடஸ்த்தசைதன்யத்தில் மாயை என்பதின்றி இருக்கமுடியாது. ஆகையால் விவர்த்த வாதம் என்பதே ஸூத்ரகாரருக்கு ஸம்மதம். பாஷ்யகாரரும் ஸர்வஞ்ஞம், ஸர்வசக்தி, மாயாமயம் ப்ரஹ்ம என்று ஸூத்ரகாரரின் அபிப்ராயத்தை தெரிவிக்கின்றார். ஆகவே பரிணாம வாதம் வேதாந்த சித்தாந்தத்திற்கு பாதகம். அதனால் சித்தாந்தத்திற்கு ஹானி ஏற்படும் முறையில் ஸூத்ரகாரர் அபிப்ராயம் பரிணாம வாதம் என்று சொல்வது ஒத்துக்கொள்ளக்கூடியது அல்ல. இது பற்றி முன்பே விளக்கப்பட்டிருக்கிறது.

**194.** அவதாரிகை :

பரிணாம வாதம் என்பது ஸூத்ரகாரர் அபிப்ராயம் இல்லை என்பதை தெரிவிக்க மேலும் சில காரணங்கள் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

विस्पष्टमात्ममतमेव हि सर्वधर्मसूत्रेण सूत्रकृदिदं दृढमाचचक्षे ।
सर्वज्ञतादिपरिपालनतत्परः संस्तत्रैव भाष्यकृदपीदमुवाच यत्नात्

**ச்லோகார்த்தம் :** 'ஸர்வ தர்மோப பத்தேச்ச' என்ற ஸூத்ரத்தினால் வ்யாஸாசார்யர் தன்னுடைய மதத்தையே ஸ்புடமாகவும் த்ருடமாகவும் வெளிப்படுத்தி இருக்கின்றார். அந்த இடத்தில் பாஷ்யகாரரும் ஈச்வரனுடைய ஸர்வஞ்ஞத்வம், முதலானவைகளை ரக்ஷிப்பதற்காக இந்த விஷயத்தையே ப்ரயத்னத்துடன் விளக்குகின்றார்.

வ்யாக்யானம் : விவர்த்த வாதம் என்பதே சித்தாந்தம் என்று விசாரித்து முடிவுபெறும் தருணத்தில் (ஸந்தர்பத்தில் "ஸர்வதர்மோபபத்தேச்ச") என்ற சூத்ரம் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, நிர்விசேஷமான ப்ரஹ்மத்தினிடமிருந்து ஜகத் சிருஷ்டி எப்படி ஏற்படமுடியும்? என்ற ஆக்ஷேபத்திற்கு ஸர்வதர்மங்களும் மாயையினுல் ப்ரஹ்மத்திற்கு சொல்லப்படுகிறது என்று மாயா வாதம் என்பதை சித்தாந்தமாக சொல்லப்படுகிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது.

பூர்வ : 'ஸர்வதர்மோப பத்தேச்ச' என்ற சூத்ரத்தில், மாயை என்ருே விவர்த்தம் என்ருே காரணத்வம் என்ருே, எதைப் பற்றியும் தெரிவிப்பதாக அறியப்படவில்லையே? இவ்விதமிருக்கின்ற போது மாயைதான் காரணம் என்று இவ்வளவு த்ருடமாகச் சொல்லப்படுவதற்கு காரணம் என்ன?

சூத்ரத்தின் அர்த்தம் என்னவென்று ஸ்பஷ்ட்டமாக அறிவிப்பதற்காகவே பாஷ்யம் ஏற்பட்டிருக்கிறது. அதில் இந்த சூத்ரத்தின் பாஷ்யத்தில் ஸர்வஞ்ஞத்வாதிகள் மஹா மாயம் என்று ஸ்பஷ்ட்டமாகவே சொல்லப்படுகிறது. சூத்ரத்தில் மாயை, அஞ்ஞானம் என்ற பதங்கள் இல்லையென்ருலும் மாயை இன்றி ஸர்வஞ்ஞத்வம் முதலானவைகள் ப்ரஹ்மத்திற்கு ஸம்பவிக்கமுடியாது.

**195.** அவதாரிகை :

இவ்விதம் சின்மாத்ரமான ப்ரஹ்மத்தையே ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்ட அஞ்ஞானமே ஜகத்காரணம் என்று சொல்லப்பட்டதால், அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்று சொல்லப்படும் பக்ஷம் சரியல்ல என்று நிராகரிக்கப்படுகிறது.

ச்லோகம் :

अज्ञानित्वं ब्रह्मणो जीवता चेन्नाज्ञानित्वं तत्र जीवस्य युक्तम् ।
अज्ञानित्वे चान्यदप्यभ्युपेतमज्ञानित्वं यद्यहो कष्टपिष्टिः

ச்லோகார்த்தம் : அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாக இருப்பதனாலேயே ப்ரஹ்மமென்பது ஜீவனுக இருக்கின்றது. ஆகையால் ஜீவனுக்கு அஞ்ஞானித்வம் சொல்வது பொருந்தாது, ஜீவனுடைய அஞ்ஞானித்வம் சித்திக்கவேண்டும் என்பதற்காக வேறு ஒரு அஞ்ஞானித்வம் ஒத்துக் கொள்ளப்படுமானுல் அது மிகவும் கஷ்ட்டமான கல்பனையாகும்.

வ்யாக்யானம் : ஜீவனுக்கே அஞ்ஞானம் என்றும் அந்த அஞ்ஞானத்திற்கு விஷயம் ப்ரஹ்மமென்றும் சொல்லப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படுமானுல் அஞ்ஞானத்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் ஸம்பந்தம் இல்லை என்ருகிறது. இவ்விதம் சொல்லப்படுமானுல் ஜீவபாவம் உண்மை என்றே சொல்ல நேரிடும். அவ்விதம் இருந்தால் ஜீவன் ஒருவனே சித்திக்க முடியுமேயன்றி, ப்ரஹ்மமென்பதோ, ஈச்வரனென்பதோ சித்திக்கமுடியாது. ஆனுல் ப்ரஹ்மமென்பதே ஜகத்தை சிருஷ்டித்து ஜீவபாவேன ப்ரவேசித்தது என்று ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. அதனுல் ப்ரஹ்மத்திற்கே ஜீவபாவம் ஏற்படுகிறது.

அப்படியானுல் ப்ரஹ்மத்திற்கு ஜீவபாவம் ஏற்படுவதற்கு அஞ்ஞானம்தான் காரணமா அல்லது வேறு ஏதாவது காரணமா? என்று விசாரிக்கின்றபோது ஜீவபாவம்

ஏற்படுவதற்கு அஞ்ஞானம் ஒன்றே காரணம் என்று அறியப்படுகிறது. அதனுல் அஞ்ஞானம், ப்ரஹ்மத்தில் ஸம்பந்தமுடையதாக இருந்தே ஜீவபாவம் ஏற்படுகிறது என்று சொல்லவேண்டும். இதனுல் அஞ்ஞானம் ப்ரஹ்மாச்ரயம் என்றே சித்திக்கின்றது.

இவ்விதம் சொல்லப்படுமானுல் ஜீவனிடம் அஞ்ஞானம் இல்லையென்ருகிறது, ஆனுல் ஜீவனிடம் அஞ்ஞானம் இருப்பதாக எப்படி அனுபவம் ஏற்படமுடியும்? ப்ரஹ்மத்தில் இருக்கின்ற அஞ்ஞானம் என்பது வேறு, ஜீவனிடம் இருக்கின்ற அஞ்ஞானம் வேறு என்று சொல்லப்படுகிறதா? ப்ரஹ்மத்தினிடம் இருந்தே ஜீவனிடம் அஞ்ஞானம் உண்டாகிறது என்று சொல்லப்படுமானுல் ஆத்மாச்ரய தோஷம் ஸம்பவிக்கும். அதற்காக அதைக்காட்டிலும் வேறு என்று சொல்லப்படுமானுல் உன் புத்தி சாதுர்யத்தை மெச்சத்தான் வேண்டும். ஏனெனில் அனவஸ்த்தை முதலான தோஷங்கள் ஸம்பவிக்கும். ஆகையால் ப்ரஹ்மாச்ரயமான அஞ்ஞானமே ஜீவபாவத்திற்கு காரணம் என்று சொல்வதே பொருத்தமானது.

**196.** அவதாரிகை :

அஞ்ஞான அவச்சின்ன ப்ரஹ்மமே ஜீவன் என்று சொல்லப்படுமானுல், சுத்த ப்ரஹ்ம ஆச்ரயம் அஞ்ஞானம் என்றே சொல்லப்பட்டதாகிறது. இவ்விதம் சொல்லப்படுமானுல், ப்ரஹ்மத்தில் அஞ்ஞானம் இல்லையென்றும், ஜீவனுக்கே அஞ்ஞானம் என்றும் சொல்லப்படும் உன்னுடைய பக்ஷத்திற்கு விருத்தமாக இருக்கிறது.

ச்லோகம் :

अज्ञानित्वं ब्रह्मणश्चानभीष्टमस्मिन्पक्षे दुर्निवारं प्रसक्तम् ।
अज्ञानित्वं ब्रह्मणश्चेदभीष्टमस्मत्पक्षस्त्यज्यते कस्य हेतोः

ச்லோகார்த்தம் : இந்த பக்ஷத்தில் ப்ரஹ்மத்தினிடம் அஞ்ஞானித்வம் இருக்கின்றது என்பதை நிவாரணம் செய்யமுடியாது. அஞ்ஞானித்வம் ப்ரஹ்மத்தினிடம் இருக்கிறது என்று உங்களால் ஒத்துக் கொள்ளப்படவில்லை. அவ்விதம் ப்ரஹ்மத்தினிடம் அஞ்ஞானித்வம் இருப்பதாக ஒத்துக் கொள்ளப்படுமானுல் எங்கள் பக்ஷத்தை ஏன் தள்ளவேண்டும்?

வ்யாக்யானம் : அனுதிகாலமாக ப்ரஹ்மத்தினிடம் அஞ்ஞானம், சக்திரூபேண இருக்கின்றது என்று சொல்லப்படுவதால் உன் பக்ஷம் சித்திக்க முடியாது. ஆகையால் சுத்த ப்ரஹ்மமென்பதை ஆச்ரயித்திருக்கின்ற அஞ்ஞானம் என்பதையன்றி வேருக ஒரு அஞ்ஞானம் இருக்கின்றதாக ஒப்புக்கொள்ள வேண்டிய அவஸ்யம் ஏதுமில்லை. ப்ரஹ்மத்தையன்றி வேருக, அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாக ஜீவன் இருப்பதாகச் சொல்லப்படாததாலும் அஞ்ஞானம் ஜீவச்ரயம் என்று சொல்லமுடியாது. அதுமட்டுமல்ல, ப்ரஹ்மத்தில் அஞ்ஞானம் இல்லையென்ற வாதமும் சித்திக்கமுடியாது.

**197.** அவதாரிகை :

ப்ரஹ்மத்தில் அபஹத பாப்மத்வம் முதலானவைகள் சித்திக்க வேண்டுமென்ருல், அஞ்ஞானம் எப்படி இருக்க முடியும்?

ச்லோகம் :

शुद्धत्वार्थं ब्रह्मणस्त्यज्यते चेदस्मत्पक्षेऽप्यस्ति शुद्धत्वमस्य ।
अस्मत्पक्षे शुद्धता वास्तवी चेद्युष्मत्पक्षे कल्पिता शुद्धता किम्

**ச்லோகார்த்தம் :** ப்ரஹ்மத்தினுடைய சுத்தத்வம் என்பதை ரக்ஷிப்பதற்காக எங்கள் பக்ஷம் தள்ளப்படுகிறது என்று சொல்லப்படுமானுல், எங்கள் பக்ஷத்திலும் சுத்தத்வம் ப்ரஹ்மத்திற்கு இருக்கிறது என்றே சொல்கிருேம். பாரமார்த்திக த்ருஷ்டியில்தான் எங்கள் பக்ஷத்தில் சுத்தத்வம் இருக்கிறது என்று சொல்லப்படுமானுல், உங்கள் பக்ஷத்தில் சுத்தத்வம் என்பது கல்பிதமாக இருக்கிறதா என்பதை தெரிவிக்கவேண்டும்.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மஸ்வரூபத்தில் அஞ்ஞானம் என்பது கல்பிதம் என்று சொல்லப்படுவதால் ப்ரஹ்மத்தின் சுத்தத்வத்திற்கு ஹானி ஏதுமில்லை. சுத்ததை என்பதே ப்ரஹ்மத்தின் உண்மையான ஸ்வரூபம் என்பதால் அதற்கு நிவர்த்தி என்பதே கிடையாது. ஆரோபிதமான அஞ்ஞானத்தினுல் அதிஷ்டான ஸ்வரூபத்தின் சுத்தத்வத்திற்கு ஹானி ஏதும் கிடையாது. சுத்தம் ப்ரஹ்மமே வாஸ்தவஸ்வரூபம் என்று சொல்லும் பக்ஷத்தில், அவாஸ்த்வமான அசுத்த ப்ரதீதி ஏற்படுமே என்ருல், அசுத்தம் என்பது கல்பிதம் என்று சொல்லப்படுவதை உன் பக்ஷத்திலும் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும்.

**198.** அவதாரிகை :

ச்லோகம் :

कष्टः कष्टः कल्पितब्रह्मवादः श्रेयोमार्गाद्भ्रश्यतो भ्रान्तबुद्धेः ।
त्यक्तव्यस्ते सज्जनैरस्मदीयः श्रेयोमार्गः श्रेयसे चाभ्युपेयः

**ச்லோகார்த்தம் :** ச்ரேயோ மார்க்கத்திலிருந்து நழுவுகின்றவனும், ப்ரமத்தை உடையவனுமான உன்னுடைய கல்பிதமான ப்ரஹ்மவாதம் விடத்தக்கதேயாகும். மோக்ஷத்திற்கு உபாயமாக இருக்கின்ற எங்கள் பக்ஷத்தையே மோக்ஷத்திற்காக ஸத் ஜனங்களால் ஒத்துக்கொள்ளப்படுகிறது.

வ்யாக்யானம் : அஞ்ஞானம் ஜீவனை ஆச்ரயித்து இருக்கின்றது என்றும் அந்த அஞ்ஞானத்திற்கு ப்ரஹ்மமே விஷயம் என்றும் சொல்லப்படும் பக்ஷம் கஷ்டத்திலும் கஷ்டம். இது யுக்திக்குப் பொருந்தாது என்பதால் இந்த வாதம் விடப்படவேண்டும். கேவலசைதன்யமே அஞ்ஞான ஆச்ரயம் என்று சொல்லப்பட்டால்தான் பந்தம் என்பது ஆவித்யகம் (அஞ்ஞான கார்யம்) என்ருகும். பந்தம் ஆவித்யகம் என்று சொல்லாவிடில் மோக்ஷம் என்பதே சித்திக்க முடியாது. அஞ்ஞானம், ப்ரஹ்மாச்ரயமில்லை என்று ப்ராந்த த்ருஷ்டியினுல் சொல்லப்படுமானுல், ச்ரேயோமார்க்கத்திலிருந்து கீழே இரங்க நேரிடும்.

மேலும், ஜீவனிடமும் அஞ்ஞானம் இருக்கிறது, ப்ரஹ்மத்தினிடமும் அஞ்ஞானம் இருக்கிறது என்றும், ஜீவனிடம் இருக்கின்ற அஞ்ஞானம் ஸம்ஸார ரூபமாக (அஹங்காரம் முதலானவைகளால் துக்கித்வ ரூபமாக) இருக்கின்றதால் அசுத்தி அறியப்படுகிறது என்றும், அதேபோல் ப்ரஹ்மத்தினிடம் (ஈச்வரனிடம்) இருக்கின்ற

அஞ்ஞானத்தினுல் நிவர்த்திக்கின்றது என்றும் அதனுல் முக்தி ஏற்படுவதாகச் சொல்லப்படும் பக்ஷம் முற்றிலும் சரியல்ல.

ஈச்வரனிடம் ஏற்படும் வ்யாவஹாரிகமான அசுத்தி என்பது ஜகத் கர்த்ருத்வரூபமாக இருக்கின்றதென்றும், ஜீவனிடம் இருப்பது போல் ஸம்ஸாரித்வரூபமான அசுத்தி ஈச்வரனிடம் கிடையாது என்று முன்பே எங்களால் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால், அஞ்ஞானத்தினுல் கல்பிக்கப்பட்ட ஜீவபாவமுடைய சைதன்யதித்திற்கே அஞ்ஞானம் இருக்கிறது என்றும் அந்த ஜீவனுக்கே வித்தையினுல் ப்ரஹ்மபாவம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகின்ற பக்ஷம் ஸர்வந்யாய விரோதம். அதனுல் ச்ரேயஸ்ஸை விரும்புகின்ற ஸாதுக்களால் இந்த பக்ஷம் அவச்யம் விடப்படவேண்டும்.

**199.** அவதாரிகை :

அஞ்ஞானம் என்பது ப்ரஹ்மாச்ரயம் என்று சொல்லப்படுமானுல் அவச்சின்ன ஜீவனுக்கு பந்தாவஸ்த்தை, முக்தாவஸ்த்தை என்ற வ்யவஸ்த்தை எப்படிச் சொல்ல முடியும்? அதனுல் ப்ரஹ்மத்தில் ஓரிடத்தில் அஞ்ஞான ஆச்ரய ஸம்பந்தமும் மற்ருேர் இடத்தில் அஞ்ஞான அபாவத்திற்கு ஆச்ரயம் என்றும் சொல்லலாமே?

ச்லோகம் :

एकोपाधावस्तिता नास्तिता च मूढत्वस्य स्वीकृता चेत्परस्मिन् ।
व्योम्न्येकस्मिन्नस्तिता नास्तिता च पक्ष्यादीनां यद्वदिष्टा तथैव

ச்லோகார்த்தம் : எவ்விதம் ஒரே ஆகாசத்தில் பக்ஷி முதலானவைகளின் பாவமும் அபாவமும் ஒத்துக்கொள்ளப்படுகிறதோ அவ்விதமே ஒரே அதிஷ்ட்டானத்தில் அஞ்ஞானத்தின் பாவமும் அபாவமும் ஒத்துக்கொள்ளப்படலாமே?

வ்யாக்யானம் : ஆகாசத்தில் ஓரிடத்தில் பக்ஷி பறக்கின்றது, மற்ருேர் இடத்தில் பக்ஷி பறக்கவில்லை என்று எப்படிச் சொல்லப்படுகிறதோ அதுபோல் ப்ரஹ்மத்தினிடம் அஞ்ஞானம் எந்த இடத்தில் இருக்கின்றதோ அந்த இடத்தில் மட்டும் ஜீவபாவம் என்றும் அஞ்ஞானம் இல்லாத இடத்தில் ப்ரஹ்மபாவம் என்றும் சொல்லலாம். இதனுல் பாவாபாவ விரோதம் ஏற்படாது. (இதற்கு பதில் அடுத்த ச்லோகத்தில் சொல்லப்படுகிறது)

**200.** அவதாரிகை :

ப்ரஹ்மத்தினிடம் அஞ்ஞானம் இருக்கிறது என்றும் இல்லையென்றும் சொல்லப்படுமானுல், பாவம், அபாவம் என்ற இரண்டிற்கும் ஸமஸத்தாகமா? அல்லது விஷமஸத்தாகமா?

ச்லோகம் :

नैतत्सारं सत्त्वमिष्टं यदि स्यादस्तित्वादेरिष्टहानिः प्रसक्ता ।
एकोपाधावस्तिता नास्तिता चेत्स्यादित्येवं स्वीकृतेऽस्मिन्हि पक्षे

ச்லோகார்த்தம் : இந்த பக்ஷம் சரியல்ல. ஏனெனில் ஒரே அதிகரணத்தில் அஞ்ஞானத்தின் பாவமும் அபாவமும் ஒத்துக் கொள்ளப்படுமானுல் உன் இஷ்டத்திற்கு

ஹானி ஏற்படும். (அதுமட்டுமல்ல) ஒரே அதிகாரணத்தில் பாவம், அபாவம் என்ற இரண்டும் ஒத்துக் கொள்ளப்படுமானுல் வேருெரு தோஷம் ஏற்படுகிறது.

வ்யாக்யானம் : ஆகாசத்தில் பக்ஷி இருக்கின்றது என்ரே இல்லையென்ரே சொல்லவேண்டுமானுல் அவச்சேதக பேதம் இருக்கவேண்டும். அவ்விதம் அவச் சேதகபேதம் ஏற்பட காரணம் என்னவென்று கேள்வி கேட்க்கப்படுமானுல், அனவஸ்த்தை முதலானதோஷம் ஸம்பவிக்கும். ஈச்வரன் பிம்பம் என்றும் ஜீவன் ப்ரதிபிம்பம் என்றும் அவித்தையினுல் சொல்லப்படுகிறது என்று. சொல்லப்படுமானுல் வித்யையினுல் அவித்யை என்பது நிவர்த்திக்கின்றதால் ப்ரதிபிம்பத்தில் அறியப்படும் ஸம்ஸாரித்வம் என்பதும் நிவர்த்திக்கின்றது என்று சொல்லமுடியும். இந்த விதம் சொல்லப்படுமானுல் ப்ரஹ்மத்தினிடமே அஞ்ஞானம் இருக்கின்றதென்று சொல்லவேண்டும். அதனுல் ஜீவாச்ரயம் அஞ்ஞானம் என்று சொல்லப்படும் உன் பக்ஷம் சித்திக்க முடியாது.

**201.** அவதாரிகை :

அதுமட்டுமின்றி மற்றுமொரு தோஷமும் ஸம்பவிக்கின்றது.

ச்லோகம் :

धूमे सत्ता स्यादसत्ता च तस्मिन्धूमस्यैवं कारणं कल्प्यते किम् ।
कादाचित्कं कारणं नान्तरेण स्यादित्येवं तस्य क्लृप्तिः कुतो वः

ச்லோகார்த்தம் : தூமம் என்பது பர்வதத்தில், பாவமாகவும், அபாவமாகவும் ஒத்துக் கொள்ளப்படுமானுல், அந்த பர்வதத்தில் அக்னியென்பது இருக்கின்றதா இல்லயா ? ஏனெனில் லிங்கம் என்பது இல்லாமல் (ஒரு ஸமயம் இருக்கின்றது என்ற) காதாசித்கமான காரணத்தைக் கொண்டு அக்னியென்பதை அனுமானிக்க முடியாது. இவ்விதம் இருக்கின்றபோது எப்படி உன்னுல் அக்னி என்பதை அனுமானத்தினுல் அறிந்து கொள்ளமுடியும் ?

வ்யாக்யானம் : ஆகாசம் என்பதில் அவச்சேதக பேதம் இன்றி பக்ஷி இருக்கிறது என்றும் இல்லையென்றும் சொல்லாம் என்று உன்னுல் சொல்லப்படுமானுல், பர்வதத்தில் தூமம் என்பது இருக்கின்றது என்று அறியப்படுகின்றபோதே தூமம் இல்லை (தூம அபாவம்) என்பதும் இருக்கலாம் என்று சொல்லப்பட்டதாக ஆகும். தூமத்தின் அஸத்வத்தினுல் தூமத்திற்கு காரணமான வன்னி என்பது எப்படி கல்பிக்க முடியும். வ்யாப்யமான லிங்கம் இல்லாமல் அதற்கு காரணமான வன்னியை அனுமானம் செய்வதற்கே முடியாது. அதனுல் இந்த இடத்தில் அனுமானமே ஏற்படமுடியாது.

**202.** அவதாரிகை :

பர்வத்தில் தூமம் இருக்கின்றபோதே தூமம் இல்லையென்று தூம அபாவம் சொல்லப்பட்டபோதிலும், தூமம் இருக்கிறது என்று நிச்சயித்து, அதற்கு காரணமான வன்னியை ஏன் கல்பிக்கக்கூடாது ?

ச்லோகம் :

कादाचित्कात्कल्पनां कारणस्य प्रत्याचक्षीताविरोधं ब्रुवाणः ।
एकोपाधावस्तिनास्तित्वयोर्हि तस्मादेषा कष्टक्लृप्तिर्न कार्या

ச்லோகார்த்தம் : ஒரே அதிகரணத்தில் ஒரு வஸ்துவின் பாவம் என்பதும், அபாவம் என்பதும் விரோதமற்றது என்று சொல்பவன் காதாசித்கமான கார்யத்திலிருந்து காரணத்தின் அனுமானத்தை நிஷேதம் செய்கின்றுன். இவ்விதம் கஷ்ட்டமான கல்பனையானது செய்யத்தகாததேயாகும்.

வ்யாக்யானம் : ஒரே ஸமயத்தில் ஒரு வஸ்து ஒரே இடத்தில் இருக்கிறதென்றும், இல்லையென்றும் சொல்லப்படுமாளுல், அதனுல் ஏற்படும் விரோதத்திற்கு பரிகாரமே கிடையாது. ஏனெனில் எந்த விதமான அவச்சேத பேதமும் இல்லாமல் ஒரே ஸமயத்தில் ஒரு வஸ்து ஒரே இடத்தில் இருக்கிறது என்றும் இல்லையென்றும் சொல்லப்படுமாளுல் லோகத்தில் கார்யத்தைக் கொண்டு காரணத்தை அனுமானம் செய்யப்படும் விவகாரம் என்பதே இருக்கமுடியாது. இவ்விதம் அனுமானத்தினுல் அறியப்படும் லோக விவகாரம் என்பதே கிடையாது என்று நிரூபணம் செய்வதென்பது கஷ்ட்டத்திலும் கஷ்ட்டம். ஆகவே ஒரே ப்ரஹ்மத்தில் அஞ்ஞானம் இருக்கின்றது என்றும், இல்லை என்றும் இரண்டு விதமான தன்மைகளை கல்பிப்பது ந்யாயத்திற்கும், அனுபவத்திற்கும் விரோதமாகும்.

**203.** அவதாரிகை :

இவ்விதம் பதில் சொல்லப்பட்ட முறையில் அவர்களுடைய பக்ஷம் சரியல்ல என்று நிராகரிக்கப்பட்டது. ஆளுலும் சிந்தாந்த ரீதியில் சொல்லப்படும் விஷயத்தை த்ருஷ்ட்டாந்தமாகக் கொண்டு மறுபடியும் இதே விஷயம் பற்றி ஆக்ஷேபிக்கப்படுகிறது. (பூர்வபக்ஷம்)

ச்லோகம் :

ननु चैकरूपचितिवस्तुगतं स्फुरणं तदस्फुरणमेव च वः ।
अविरुद्धमभ्युपगतं द्वितयं तदिवास्तिनास्तियुगलं भवतु

ச்லோகார்த்தம் : ஒரே சைதன்யத்தில் ஸ்புரணம், ஸ்புரண அபாவம் என்ற இரண்டும் விரோதம் அற்றது என்று உங்களால் ஒத்துக்கொள்ளப்படுகிறது. இவ்விதமே ஒரே சைதன்யத்தில், அவித்யையின் பாவமும் அபாவமும் இருக்கலாமே?

வ்யாக்யன்ம் : உங்களுடைய சித்தாந்தத்திலும் அஹம் என்று ஆத்மா ஸாமான்யரூபேண ப்ரகாசிக்கின்றது என்றும் அத்வயம் ஆத்மா என்ற விசேஷ ரூபத்தில் ப்ரகாசிக்கவில்லை என்று, ஒரே ஸமயத்தில ஆத்மா ப்ரகாசிக்கின்றது என்றும் ப்ரகாசிக்கவில்லையென்றும் விருத்தமான தன்மையில் சொல்லப்படுகிறதே? அதுபோல் ப்ரஹ்மத்தில் அஞ்ஞானம் இருக்கிறதென்றும் இல்லையென்றும் சொல்லப்படுவதால் விரோதம் என்ன இருக்கமுடியும்?

**204.** அவதாரிகை :

சைதன்யம் ஸ்வப்ரகாச ஸ்வரூபம். அதனால் ஸ்வப்ரகாசம் என்பது சைதன்யத்தைக் காட்டிலும் வேறானது அல்ல. ஆகவே இந்த விஷயத்தில் ப்ரகாசிக்கவில்லை என்று சொல்லப்படுவதற்கு, ப்ரகாச அபாவம் என்று அர்த்தமில்லை. பாவரூபமான அஞ்ஞானத்தினால் ஸர்வதா ப்ரகாசித்துக் கொண்டிருக்கின்ற வஸ்துவின் ஒரு அம்ஸம் ப்ரகாசிக்கவில்லையென்றே சொல்லப்படுகிறது. அதனால் ஸ்புரண அபாவம் சொல்லப்படவில்லையென்பதால் இதில் விரோதம் ஏதுமில்லை.

ச்லோகம் :

न तदात्मनः स्फुरणमेव निजं परतोऽप्रकाशनमबोधबशात् ।
न च किंचिदन्यदनयोरुभयोरविरोधसिद्धिकृदुदाहरणम्

ச்லோகார்த்தம் : இவ்வித ஆக்ஷேபம் சரியல்ல. ஆத்மாவின் ஸ்புரணம் என்பது ஸ்வாபாவிகம். ஸ்புரண அபாவம் என்பது அவித்யை என்ற பாஹ்ய நிமித்தத்தினால் ஏற்படுகிறது. ஆகவே பாவா பாவங்கள் விரோதம் அற்றது என்று சாதிப்பதற்கு உதாகரணம் வேறு ஏதும் இல்லை.

வ்யாக்யானம் : ஆத்ம வஸ்து ஸ்வரூபமே ஸ்வப்ரகாசம், (ஸ்புரணம்) ஸ்புரணம் என்பது ஆத்மதர்மமல்ல. அஸ்புரணம் என்பது அவித்யா கார்யமாகச் சொல்லப்படுகிறது. (ஆரோபிதம்) ப்ரகாசிக்கின்ற வஸ்து எந்தவிதம் ப்ரகாசிக்கின்றதோ அந்த விதம் அறியப்படவில்லை. அதனால் பாவரூபமான அஞ்ஞானத்தின் கார்யமான மறைவு இருக்கின்றதென்ற காரணத்தினால் அஸ்புரணம் என்று சொல்லப்படுகிறது. உண்மையில் அஸ்புரணம் என்ற தன்மை ஆத்மாவில் இல்லை. ஆகவே, ஆரோபித வஸ்துவிற்கும் உண்மையான வஸ்துவிற்கும் விரோதம் ஏதுமில்லை.

ஸம்யோகத்தினால் இருக்கிறது என்றும் இல்லையென்றும் சொல்லலாமே? என்றால், அவ்விதம் சொல்லமுடியாது, ஏனெனில் ஸம்யோகத்தினால் அஞ்ஞானம் இந்த இடத்தில் இருக்கிறது. அந்த இடத்தில் இல்லையென்று சொல்லாம். ஆனால் தேசபேதமோ, காலபேதமோ ஏதுவும் இல்லாமல் பாவம், அபாவம் என்ற இரண்டும் இருப்பதாகச் சொல்லப்படுவது விரோதமாகும். அதனால் எந்த இடத்தில் ஒரு வஸ்துவின் பாவம், அபாவம் என்ற இரண்டும் இருப்பதாகச் சொல்லப்படுகிறதோ அந்த இடத்தில் அவஸ்யம் அவச் சேதபேதமோ அல்லது ஸத்தாபேதமோ (ஒன்று ஆரோபிதம், ஒன்று பரமார்த்தம்) இருக்க வேண்டும். அவ்விதம் பேதம் இருக்குமானால் பாவாபாவ விரோதம் இருக்க முடியாது. இதைத் தவிர வேறு எந்த முறையில் சொல்லப்பட்டபோதிலும் உன் சித்தாந்தம் பொருந்தாது. ஆகையால் உன்னால் சொல்லப்பட்ட த்ருஷ்ட்டாந்தத்தில் வைஷம்ய தோஷம் ஸம்பவிக்கின்றது.

**205.** அவதாரிகை :

ஸ்புரணம், அஸ்புரணம் என்று சொல்லுமிடத்தில் அஸ்புரணம் என்பதில் 'நஞ்' அர்த்தத்தினால் ஸ்புரண அபாவம் என்று அறியப்படுகிறது. அதனால் ஒரே வஸ்துவில் பாவம், அபாவம் என்ற இரண்டும் இருக்கமுடியாது என்று எப்படிச் சொல்லமுடியும்?

ச்லோகம் :

स्फुरणास्फुरणे च नाऽऽत्मनः सदसद्भावतया मनीषिते ।
स्फुरणं चितिरात्मवस्तुनस्तदविद्यास्फुरणं च कथ्यते

**ச்லோகார்த்தம் :** ஆத்மாவின் ஸ்புரணம் என்பதும் அஸ்புரணம் என்பதும் பாவ, அபாவங்களாக ஒத்துக்கொள்ளப்படவில்லை. ஸ்புரணம் என்பது ஆத்மாவின் சைதன்ய ஸ்வரூபமேயாகும். ஆத்மாவை ஆச்ரயமாகவும், விஷயமாகவும் கொண்ட அவித்யை என்பதே அஸ்புரணம் என்று சொல்லப்படுகிறது.

வ்யாக்யானம் : ஸ்புரணம், அஸ்புரணம் என்ற இரண்டு பதங்களினுல் சொல்லப்படும் வஸ்து ஒன்று பாவம் மற்றென்று அபாவம் என்ற அர்த்தத்தில் சொல்லப்படவில்லை. ஆத்ம ஸ்வரூபமே, ஸ்வயம் ப்ரகாச சைதன்யம் என்பதால் ஆத்ம வஸ்துவே ஸ்புரணம் என்று சொல்லப்படுகிறது. ப்ரகாசஸ்வரூபமான சைதன்யத்தை ஆச்ரயமாகவும், விஷயமாகவும் கொண்ட பாவரூபமான அஞ்ஞானம் என்பதையே அஸ்புரணம் என்று சொல்லப்படுகிறது இந்த இடத்தில் நஞ் அர்த்தம் அபாவரூபமல்ல. ஞானத்திற்கு விரோதியாக இருக்கின்ற பாவரூபமான அஞ்ஞானம் என்பதையே(விரோதி ரூபமான) நஞ்அர்த்தம் தெரிவிக்கின்றது. எப்படி தர்மம், அதர்மம் என்ற இரண்டும் பரவரூபமான செய்கை என்று சொல்லப்படுகிறதோ அதுபோல அஸ்புரணம் என்பதும் பாவரூபம், ஸ்புரணம் என்பதும் பாவரூபமான அர்த்தம் என்று அறியவேண்டும். 'நேக்ஷேதோத்யந்தம் ஆதித்யம்' என்னுமிடத்தில் 'நாஈக்ஷேதா' என்ற நஞ் அர்த்தமானது ப்ரஹ்மசாரி உதயசூர்யனை பார்க்கக்கூடாது என்ற அர்த்தத்தை தெரிவிக்கவில்லை என்றும், உதயசூர்யனை பார்க்கவேண்டும் என்ற எண்ணத்திற்கு விரோதமான ஸங்கல்பத்தைச் செய்யவேண்டும் என்பதே அர்த்தம் என்று பூர்வ மீமாம்ஸகர்களாலேயே ஒத்துக்கொள்ளப்படுகிறது. அதனுல் பாவாபாவம் என்பதற்கு உன்னுல் சொல்லப்படும் த்ருஷ்ட்டாந்தம் பொருந்தாது.

**206.** அவதாரிகை :

கேவலம் ப்ரஹ்மசைதன்யத்தில் அஞ்ஞான ஸம்பந்தம் இருக்கிறது என்பதற்காக ப்ரஹ்மத்திற்கு ஜீவபாவம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. ஏனெனில் ஈச்வரனுக்கும் அஞ்ஞான ஸம்பந்தம் இருக்கின்றது. ஆகையால் அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்றே சொல்லவேண்டும்.

ச்லோகம் :

अज्ञानित्वं जीवभावो न तस्माज्जीवत्वादेः कारणं युक्तमेतत् ।
प्राणोपाधेर्वाचको जीवशब्दश्चैतन्यस्य स्यात्प्रसिद्धो हि तत्र

**ச்லோகார்த்தம் :** ஆத்மா என்பது, அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாக இருக்கின்றது என்பது, ஜீவத்வம் முதலானவைகளுக்கு காரணமாக ஆகாது. ஜீவசப்தமானது ப்ராணனை உபாதியாகக் கொண்ட சைதன்யத்தையே குறிக்கின்றது என்பதே பொருத்தமானது. இந்த அர்த்தத்தில்தான் ஜீவசப்தம் ப்ரசித்தமாகவும் இருக்கிறது.

வ்யாக்யாம் : அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்று சொல்லப்படுமானுல் அன்யோன்யாச்ரய தோஷம் ஸம்பவிக்கின்றது. ஏனெனில் அஞ்ஞானத்தினுல்தான் ஜீவபாவம் ஏற்படுகிறது. அஞ்ஞானம் ஜீவனை ஆச்ரயிக்கிறது என்று சொல்லப்படுமானுல் அஞ்ஞானம் சித்திப்பதற்கு முன் ஜீவன் சித்திக்க வேண்டும். இதனுல் ஒன்றை ஒன்று ஆச்ரயிக்கின்றது என்பதால் தோஷம் ஏற்படுகிறது.

பூர்வ : அப்படியானுல் அஞ்ஞானம் ப்ரஹ்மசைதன்யத்தில் இருக்கின்றது என்று கல்பிக்கப்படுவதற்கு ப்ரயோஜனம் என்ன ?

சித்தா : ஈச்வரத்வம் ஜீவத்வம், ஜடமான ப்ரபஞ்சம் இவைகளை தோற்றுவிப்பதற்கு அஞ்ஞானம் என்பது ஸாதாரணகாரணமாக இருக்கிறது. ஜீவன் என்று சொல்லப்படுவதற்கு, ப்ராணன், இந்த்ரியம், அந்த:கரணம் முதலானவைகள் விசேஷ காரணமாக இருக்கிறது. இவ்விதம் அஞ்ஞான கார்யமாக ஞானக்ரியா சக்தியாத்மக மானலிங்க சரீரமென்பதே ப்ராணசப்தத்தினுல் சொல்லப்படுகிறது. இதுவே அஞ்ஞானத்தின் முதல் கார்யம் அனுத்மாவான இந்த லிங்க சரீரத்தில்தான் அஹம் என்ற ஆத்மஅபிமானம் ஏற்படுகிறது. சித்ஸ்வரூபமான சைதன்யம் இந்த உபாதியையே 'தான்' என்று தரிக்கின்றதால் ஜீவத்வம் ஏற்படுகின்றது. அதனுல் அஞ்ஞானித்வம் மட்டும் ஜீவத்வமில்லை. அதன்கார்யமான உபாதி அபிமானத்தினுல்தான் ஜீவத்வம் ஸம்பவிக்கின்றது என்பது சுஷுப்தி அவஸ்த்தையில் ஜீவபாவம் இல்லையென்றபதைக் கொண்டே அறிந்து கொள்ளலாம். ஆகவே ப்ராணஸம்பந்த அபிமானியே ஜீவன் என்பது லோகப்ரசித்தம். இதையே 'ஜீவப்ராணதாரணே' என்று பாணினியினுலும் சொல்லப்படுகிறது. ஆகையால் அஞ்ஞான கார்யமான ஜீவன் அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் என்று சொல்வதற்கு முடியாது.

**207.** அவதாரிகை :

எவ்விதம் லோகப்ரசித்தம் என்று சொல்லப்படுகிறது ?

ச்லோகம் :

अज्ञानजन्यकरणप्रतिबिम्बवाचि जीवाभिधानमिह वृद्धजनप्रसिद्धम् ।
अत्रैव निर्वचनमस्ति च तस्य तस्माज्जीवो भवेत्करणपूगवशीकृता चित्

ச்லோகார்த்தம் : அஞ்ஞான ஜன்யமான சூக்ஷ்ம சரீரத்தில் ப்ரதிபிம்பிதமான சைதன்யத்திற்கு ஜீவன் என்ற பெயர், பெரியோர்களிடம் ப்ரசித்தமாக இருக்கிறது. ஜீவசப்தத்தின் நிர்வசனமும் இந்த அர்த்தத்தில்தான் சொல்லப்படுகிறது. ஆகவே, காரணங்களினுல் அவச்சேதகமாக இருக்கின்ற சைதன்யமே ஜீவனுகின்றது.

வ்யாக்யானம் : அஞ்ஞானம், அதன் கார்யமான லிங்கசரீரம் இவைகளில் ப்ரதிபலிக்கின்ற சைதன்யமே ஜீவன் என்ற ரூடி அர்த்தத்தைக் கொண்டு, ஜீவ ப்ராணதாரணே என்று பாணினியினுல் சொல்லப்படுவதாலும், யோக சக்தியினுல் ப்ராணனை தரிப்பவன் ஜீவன் என்றும், ஜீவன் என்ருலே ப்ராணனை தரிப்பவன் என்றும் தாத்வர்த்தத்தைக் கொண்டு சொல்லப்படுகிறது. இந்த இடத்தில் கரணம் என்ற சப்தம் லிங்க சரீரத்தையே குறிப்பிடுகின்றது. கார்யம் என்பது ஸ்தூலசரீரம். கார்யகரண

ஸங்காதமான இந்த சரீரத்தில் அபிவ்யக்தமாகின்ற சைதன்யமே ஜீவசப்தத்திற்கு அர்த்தம் என்று ரூடி அர்த்தமாகவும், யோகவ்யுத்பத்தியினுலும் அர்த்தம் சொல்லப்படுகிறது. ஆகவே, அஞ்ஞான கார்யமான லிங்க சரீர வசப்பட்ட சைதன்யமே ஜீவன் என்று விவகாரம் செய்யப்படுகிறது.

**208.** அவதாரிகை :

இவ்விதம் ஜீவன் அஞ்ஞான கார்யம் என்று சித்திக்கின்றதால், அஞ்ஞான ஆச்ரயம் ஜீவன் என்று சொல்வது சரியல்ல. அஞ்ஞான கார்யம் என்பதனுலேயே அஞ்ஞானுத்மகம் ஜீவன் என்றே சொல்லவேண்டும் (ம்ருத்கார்யமானகடம் ம்ருதாத்மகம்) அதனுல் ஜீவனென்றும் ஈச்வரனென்றும் விபாகம் அற்ற கேவல சைதன்யமே அஞ்ஞான ஆச்ரயம் என்று சொல்லவேண்டும்.

ச்லோகம் :

ब्रह्मैवाज्ञानि तस्मादिह भवितुमलं नापरं वस्तु किंचित्तस्याज्ञानात्मकत्वान्न
च तमसि तमस्तन्निवृत्तेरयोगात् ।
नाज्ञानोत्थस्य विद्याजनिरिह घटते तां बिना तन्न नश्येन्न
ह्यज्ञानं विनश्येदवगतिजनकज्ञानजन्मान्तरेण

ச்லோகார்த்தம் : ஆகையால் இந்த வேதாந்த சாஸ்திரத்தில் ப்ரஹ்மமென்பதே அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் என்றும், அதற்கு வேருக இருக்கின்ற எந்த வஸ்துவும் ஆச்ரயமாக இருக்கமுடியாது என்றும் சொல்லப்படுகிறது. ஏனெனில் அஞ்ஞனாத்மகமாகவே அந்த வஸ்து இருக்கின்றது. அஞ்ஞானத்தில் அஞ்ஞானம் இருக்கமுடியாது. ஜடத்தை ஆச்ரயமாகக் கொண்டிருக்குமானுல் அஞ்ஞானத்திற்கு நிவர்த்தி என்பதே ஏற்படாது. ஏனெனில் அஞ்ஞானத்திலிருந்து உண்டான ஜடவஸ்துவில் வித்யோற் பத்தி ஏற்படாது. வித்யை இன்றி அஞ்ஞானம் நாசத்தை அடையாது. ஆகவே ஆத்மாவை அறிவிக்கின்ற ஞானம் ஏற்படாமல் அஞ்ஞானம் என்பது நசிக்காதன்றே ?

வ்யாக்யானம் : ப்ரஹ்மாச்ரயம் அஞ்ஞானம் என்றே சொல்லப்படவேண்டும் அவ்விதமின்றி அஞ்ஞான ஆச்ரயமாக ஜீவனேயோ அல்லது ஜடமானவேறென்றையோ ஆச்ரயமாகச் சொல்லமுடியாது. ஏனெனில் அஞ்ஞான கார்யமென்று சொல்லப்படுகின்ற ஜீவனும் ஜடமான அஞ்ஞானுத்மகமாகவே இருக்கின்றதால் ஜடத்வாத் அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்று சொல்லமுடியாது. அதனுல் கேவல சித்ஸ்வரூபமே அஞ்ஞான ஆச்ரயம் என்று சொல்லவேண்டும். அதையன்றி வேறு ஒன்றை அஞ்ஞான ஆச்ரயமாக சொல்லப்படுமானுல் ஆத்மாச்ரயம் முதலான தோஷங்கள் ஸம்பவிக்கும். ஜடமான வஸ்து அஞ்ஞான ஆச்ரயமாக இருக்கமுடியாது. ஏனெனில், ஜடம் என்பதற்கு ஆவரணம் ஸம்பவிக்காது அதுமட்டுமல்ல ஜடாச்ரயமான அஞ்ஞானத்திற்கு நிவர்த்தி என்பதே ஏற்படாது. ஞானம் ஒன்றினுல்தான் அஞ்ஞான நிவர்த்தி ஏற்படவேண்டும். ஜடத்திற்கு ஞானம் ஏற்படாது. அஞ்ஞான கார்யம் என்பது எல்லாமே ஜடமாகத்தான் இருக்கவேண்டும். அதனுல் ப்ரமாதாப்ரமாணம் ப்ரமை என்ற வ்யவஹாரமே ஏற்படமுடியாது. அஞ்ஞானம் என்பது ஞானத்தினுல் நிவர்த்திக்கப்படவேண்டியதாக இருக்கின்றதால் விஷய அபிவ்யஞ்சகமான அந்த:கரண வ்ருத்தி இல்லாமல் ஞானம் ஏற்படமுடியாது. ப்ரஹ்மஸ்வரூப ஆவாரகமான அஞ்ஞானம், ப்ரஹ்மஸ்வரூபத்திற்கு அபிவ்யஞ்சகமான அகண்டாகார வ்ருத்தி ப்ரதிபலன சைதன்யத்தினுல்தான் நிவர்த்திக்கப்படவேண்டும்.

தமேவம் விதித்வா அதிம்ருத்யுமேதி என்ற வாக்யம், ஞானத்தினுல்தான் ம்ருத்யுவை தாண்ட முடியும் என்று தெரிவிக்கின்றது. ஆத்ம ஞானம் இல்லாமல் தமஸ் என்பதற்கு நாசம் ஏற்படாது என்றும் ஞானத்தினுல்தான் பரத்தை அடையலாம் என்றும் தஸ்மின் த்ருஷ்ட்டே பராவரே என்றும் ச்ருதி வாக்யங்கள் தமோநிவர்த்தி அவஸ்யம் என்று தெரிவிக்கின்றது.

ஆகவே அஞ்ஞானத்திற்கு ஜீவன் ஆச்ரயமென்று சொல்வதும் சரியல்ல, ஜீவத்வ விசிஷ்ட்டமான சிதாத்மாவை ஆச்ரயித்து அஞ்ஞானம் இருக்கின்றது என்று சொல்லப்படும் பக்ஷமும் ஆத்மாச்ரயம் முதலான தோஷங்கள் ஸம்பவிக்கின்றதால் கேவல சைதன்யாச்ரயம் என்று சொல்லப்படுவதை அவஸ்யம் ஒத்துக்கொள்ளப்பட வேண்டும்.

தமேவம் விதித்வா அதிம்ருத்யுமேதி என்ற வாக்யம், ஞானத்தினுல்தான் ம்ருத்யுவை தாண்ட முடியும் என்று தெரிவிக்கின்றது. ஆத்ம ஞானம் இல்லாமல் தமஸ் என்பதற்கு நாசம் ஏற்படாது என்றும் ஞானத்தினுல்தான் பரத்தை அடையலாம் என்றும் தஸ்மின்த்ருஷ்ட்டே பராவரே என்றும் ச்ருதிவாக்யங்கள் தமோநிவர்த்தி அவஸ்யம் என்று தெரிவிக்கின்றது.

ஆகவே அஞ்ஞானத்திற்கு ஜீவன் ஆச்ரயமென்று சொல்வதும் சரியல்ல, ஜீவத்வ விசிஷ்ட்டமான சிதாத்மாவை ஆச்ரயித்து அஞ்ஞானம் இருக்கின்றது என்று சொல்லப்படும் பக்ஷமும் ஆத்மாச்ரயம் முதலான தோஷங்கள் ஸம்பவிக்கின்றதால் கேவல• சைதன்யாச்ரயம் என்று சொல்லப்படுவதை அவஸ்யம் ஒத்துக்கொள்ளப்பட வேண்டும்.

**209.** அவதாரிகை :

ப்ரஹ்மத்திற்கு ஜீவபாவம் என்பது வாஸ்தவமாகவே இருக்கிறது என்று சொல்லப்படுமானுல் ஜீவனிடமே அஞ்ஞானம் இருக்கின்றதென்றே சொல்லலாமே? அவ்விதமின்றி அஞ்ஞானத்தினுல்தான் ஜீவபாவம் என்று சொல்லவேண்டிய அவஸ்ம் என்ன ?

**ச்லோகம் :**

अज्ञानात्मकवस्तु नाऽऽश्रयतयाऽज्ञानस्य संभाव्यते नाज्ञानात्मकताबहिः कृतमिदं जीवत्वमङ्गीकृतम् ।
नाज्ञानाश्रयमध्यपाति घटते जीवत्वमेतेन वश्चैतन्याश्रयमेतदस्तु घटते तत्रैव हीदं तमः

**ச்லோகார்த்தம் :** அஞ்ஞானுத்மகமான வஸ்து அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாக இருக்க முடியாது. ஜீவத்வம் என்பது அஞ்ஞானுத்மகமே தவிர அதற்கு பாஹ்யமாக இல்லையென்று உங்களால் ஒத்துக்கொள்ளப்படுகிறது. உன்னுடைய மதத்தின்படியே ஜீவத்வம் என்பது அஞ்ஞான ஆச்ரயமாக இருக்கமுடியாது. ஆகையால் இந்த அஞ்ஞானமானது சைதன்ய ஆச்ரயம் என்றே ஒத்துக்கொள்ளவேண்டும். அஞ்ஞானம் என்பது சைதன்யத்தில் இருப்பதற்குத்தான் தகுதி உடையதாக இருக்கிறது.

வ்யாக்யாம் : ப்ரஹ்மத்திற்கு ஜீவபாவம் என்பது அஞ்ஞானத்தினுல் ஏற்பட்டது என்பதை முன்பே விளக்கப்பட்டிருக்கிறது. அஞ்ஞானத்தினுல் உண்டான ஜீவன், தனக்கு காரணமான அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் என்று சொல்வது பொருந்தாது. அஞ்ஞானத்தை அன்றி வேருக ஜீவன் என்று ஒருவன் இருப்பதாக பெரியோர்களாலும் ஒப்புக்கொள்ளப்படவில்லை. 'தத்வமஸி' முதலான மஹாவாக்யங்கள் ஜீவன் ப்ரஹ்மத்தையன்றி வேறில்லை என்று தெரிவிக்கின்றது. அதனுல் அஞ்ஞானம் ப்ரஹ்மாச்ரயம் என்றே சித்திக்கின்றது. ஜீவாச்ரயம் என்று சொல்லப்படும் உன் சித்தாந்தம் என்பது அபசித்தாந்தம் என்றே சித்திக்கின்றது.

**210.** அவதாரிகை :

அஞ்ஞானம் என்பது ஜீவனிடம் இருப்பதாகவே அறியப்படுகின்றதால், அத்வயசின் மாத்ரஸ்வரூபமே அஞ்ஞான ஆச்ரயம் என்று சொல்லப்படுவதை ஒத்துக்கொள்ளமுடியாது.

ச்லோகம் :

ननु चाद्वयाश्रयतमः स्फुरणं न कथंचिदत्र न हि तत्स्फुरति ।
स्फुरदाश्रयस्य तमसः स्फुरणं घटते न चाद्वयमिह स्फुरति

ச்லோகார்த்தம் : அத்வய ஆத்மாவை ஆச்ரயித்திருக்கின்ற அஞ்ஞானத்தின் ஸ்புரணம் என்பது எவ்விதத்திலும் ஸம்பவிக்காது. ஏனெனில் அத்வய ஆத்மாவில் அஞ்ஞானம் ப்ரகாசிப்பதில்லை. ஸ்புரிக்கின்ற ஆச்ரயத்தில் இருக்கின்ற அஞ்ஞானம் ப்ரகாசிக்கின்றது என்ருல் பொருத்தமாக இருக்கும். ஆனுல் அஞ்ஞானத்தை அத்வயமான ஆத்மா ஸ்புரிக்கின்றதில்லை.

வ்யாக்யானம் : கேவல சின்மாத்ர ஸ்வரூபத்தை ஆச்ரயித்தே அஞ்ஞானம் இருக்கிறது என்று சொல்லப்படுவது அனுபவத்திற்கு விரோதமாக இருக்கிறது. வ்யவஹாரதசையில் அத்வயம்ப்ரஹ்ம என்ருே, அதில் அஞ்ஞானம் ஆச்ரயம் என்ருே ஒருவராலும் அறிந்து கொள்வதற்கு முடியாது. அஞ்ஞானம் என்பது ஸ்வதந்த்ரமாக ப்ரகாசிக்க முடியாது. அதற்கு அதிஷ்ட்டானமான ப்ரஹ்மமென்பது ப்ரகாசிக்காமல் அதில் அஞ்ஞானம் இருக்கின்றதென்று அறிந்து கொள்வதற்கே முடியாது. அஞ்ஞானம் யாரிடம் இருக்கிறது? அஞ்ஞானத்திற்கு விஷயம் என்ன? என்று ஆச்ரயம், விஷயம் இரண்டுமே தெரியவேண்டும். ஆகையால் அத்வய ஸ்வரூபமான ப்ரஹ்மமென்பது அறியப்படாமல், அதில் அஞ்ஞானம் இருக்கிறது என்று சொல்வது பொருந்தாது.

**211.** அவதாரிகை :

இந்த ஆக்ஷேபத்திற்கு மேலே பதில் சொல்லப்படுகிறது.

ச்லோகம் : **नाज्ञानमद्वयसमाश्रयमिष्टमेवं नाद्वैतवस्तुविषयं निशितेक्षणानाम् ।**
**नाऽऽनन्दनित्यविषयाश्रयमिष्टमेतत्प्रत्यक्त्वमात्रविषयाश्रयतानुभूतेः**

ச்லோகார்த்தம் : வித்வான்களின் த்ருஷ்டியில் அஞ்ஞானம் என்பது அத்வைத வஸ்துவை, ஆச்ரயமாகவும் கொண்டதில்லை, விஷயமாகவும் கொண்டதில்லை. அதேபோல் நித்யஆனந்த வஸ்துவையும் ஆச்ரயமாகவோ, விஷயமாகவோ அஞ்ஞானம்

கொண்டிருப்பதில்லை. ப்ரத்யகாத்மாவையே ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்டதாகவே அஞ்ஞானம் அனுபவிக்கப்படுகிறது.

வ்யாக்யானம் : (அத்வைதாகாரேண) அத்வைதஸ்வரூபேண ப்ரஹ்மமென்பது அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகவோ விஷயமாகவோ இருக்கிறதென்று சொல்லப்படவில்லை. ஏனெனில் அவ்விதம் அத்வைத ப்ரஹ்மம் என்பது எனக்கு அறியப்படவில்லையென்று அஞ்ஞதசையில் ஒருவருக்கும் அனுபவம் ஏற்படவில்லை. ஆகவே, ப்ரத்யக்சைதன்யமே அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகவும், விஷயமாகவும் இருக்கின்றதென்றே புத்திமான்களான எங்களால் சொல்லப்படுகிறது. நம்மை அன்றி வேருக ப்ரஹ்மமென்று ஒன்று இருக்கின்றதென்ருே அந்த ப்ரஹ்மத்தினிடம் அஞ்ஞானம் இருக்கின்றதென்ருே எங்களால் சொல்லப்படவில்லை.

பூர்வ : ப்ரத்யக் சைதன்யமே அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் என்று சொல்லப்பட்ட போதிலும் 'அத்வயம் ப்ரஹ்ம' என்ற விஷயம் அறியப்படாத காரணத்தினுல் 'அத்வயமான ப்ரஹ்மமே அஞ்ஞானத்திற்கு விஷயம் என்று சொல்லலாமே ?

சித்தா : அஞ்ஞானம் என்பது சின்மாத்ர ஸ்வரூப ஆச்ரயம் என்றும் அத்வைத ப்ரஹ்மமே விஷயம் என்றும் சொல்லப்படுமானுல், ப்ரத்யக் சைதன்ய ரூபம் என்றும், அத்வய ப்ரஹ்மஸ்வரூபம் என்றும் இரண்டிற்கும் ரூபபேதம் இருப்பதாக சொல்ல நேரிடும். அஞ்ஞான அனுபவகாலத்தில் அத்வைத ஆகாரவஸ்து என்பதே சித்திக்காது. அதனுல் அஞ்ஞானத்திற்கு அத்வயவஸ்து, அவச்சேதகம் என்ருே சொல்லமுடியாது.

அத்வயப்ரஹ்ம அபரோக்ஷ ஞானம் ஏற்படும் காலத்தில் அஞ்ஞானமே நாசத்தை அடைகின்றது. அதனுல் அந்த நிலையில் அஞ்ஞான அனுபவம் என்பது இருக்கமுடியாது. அஞ்ஞான தசையில்தான் 'மாமஹம்நஜானுமி என்ற அனுபவம்தான் இருக்கிறதேயன்றி அத்வைத ஸ்வரூபம் அறியப்படவில்லை என்ற அஞ்ஞானம் ஒருவருக்கும் இருக்க முடியாது. அதேபோல் 'ஸத்யம்' ஞானம் அனந்தம் ஆனந்தம் ப்ரஹ்ம' என்ற ஸ்வரூப அஞ்ஞானம் எனக்கு இருக்கிறது என்ற அனுபவம் ஒருவருக்கும் கிடையாது. அதனுல் ப்ரத்யக் சைதன்யத்தில்தான் அஞ்ஞானம் இருக்கிறது என்பது அஹம் அஞ்ஞ; என்ற அனுபவத்தினுல் சித்திக்கின்றது. அதனுல் ப்ரத்யக் சைதன்யமே விஷயம் என்று சொல்லவேண்டும். சாஸ்திர ஆசார்ய உபதேசத்தினுல் அஹம் அத்வய ஆனந்த ஸ்வரூபம் என்று அறியப்படுகின்றபோது அஞ்ஞானம் என்பதே இருக்கமுடியாது. ஆகவே ஆனந்த ஸ்வரூபத்தில் ப்ரஹ்மமென்பது ப்ரகாசித்தால்தான் அதில் அஞ்ஞானம் ஆச்ரயம் என்று சொல்லமுடியும். ஆகவே, மாமஹம் நஜானுமி என்ற அனுபவம் இருக்கின்றதால் ப்ரத்யக் சைதன்யமே ஆச்ரயமாகவும் விஷயமாகவும் இருக்கிறதென்றே சொல்லவேண்டும்.

**212. அவதாரிகை :**

ப்ரத்யக்சைதன்யத்தை ஆச்ரயித்தே அஞ்ஞானம் இருக்கிறதென்று சொல்லலாம். ஆனால் ப்ரத்யக் சைதன்யமே அஞ்ஞானத்திற்கு விஷயம் என்று எப்படிச் சொல்லமுடியும் ? ஏனெனில் ப்ரத்யக் சைதன்யத்தினுல்தான் அஞ்ஞானம் என்பதே ப்ரகாசிக்கின்றது. அதனுல் அஞ்ஞானம் ப்ரத்யக் சைதன்யம் என்பதை மறைக்கின்றது என்று எப்படிச் சொல்வது ?

ச்லோகம் :

प्रत्यक्त्वमात्रविषयाश्रयमोहहेतोः प्रत्यक्तिरोहित इति प्रतिपादयामः ।
प्रत्यञ्चमेव खलु वेद्मि न वेद्मि चेति प्रत्यक्षमस्ति ननु वेदनमस्य पुंसः

ச்லோகார்த்தம் : அஞ்ஞானம் என்பது ப்ரத்யக் வஸ்துவை ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்டிருப்பதால், ப்ரத்யக் வஸ்து மறைக்கப்பட்டிருக்கின்றது என்றே ப்ரதிபாதனம் செய்கின்றோம். ப்ரத்யக் வஸ்து அறிகிறேன் என்றும் அறியவில்லையென்றும் ப்ரத்யக்ஷமான அனுபவம் ஒருவனுக்கு இருக்கின்றது.

வ்யாக்யானம் : அஞ்ஞானம் என்பது ப்ரத்யகாத்மாவையே ஆச்ரயித்திருக்கின்றது என்பது எனக்கு அஞ்ஞானம் இருக்கிறது என்று ப்ரகாசிக்கின்றதனாலேயே அறியப்படுகிறது. அந்த ப்ரத்யக்சைதன்யம் என்பது தமஸைப்போல் அஞ்ஞானத்தினால் மறைக்கப்படுகிறது. இருள் என்பது எந்த இடத்தில் இருக்கின்றதோ அந்த இடத்தில்தான் மறைவு ஏற்படும். அதனால் அஞ்ஞானம் என்ற தமஸானது எந்த வஸ்துவை ஆச்ரயித்திருக்கின்றதோ அந்த வஸ்துவைத்தான் மறைக்கமுடியும். அதைத்தவிர அன்யமான ஒரு வஸ்துவில் அஞ்ஞானம் அதன் கார்யமான அதிசயத்தை உண்டு பண்ணக் கூடிய ஸாமர்த்யம் உடையது அல்ல. அஹம் அஞ்ஞ: என்ற அனுபவம் எல்லோருக்கும் ஸ்புடமாகவே இருக்கின்றது. அதனால் அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் என்பதும் விஷயம் என்பதும் ப்ரத்யக் சைதன்யம்தான் என்றே ஒத்துக்கொள்ளப்பட வேண்டும்.

**213.** அவதாரிகை :

நிரம்ஸமாகவும் ஏகமாகவும் இருக்கின்ற ப்ரக்யக்ஸ்வரூபம் ஆச்ரயமாகவும் அதுவே விஷயமாகவும் எப்படி இருக்கமுடியும் ?

ச்லோகம் :

संवित्परिस्फुरति न स्फुरतीति तस्यां वैयात्यदूषितधियस्तु विसंवदन्ते ।
अज्ञानतस्तदपि तद्वदिहाद्वयत्वं भादप्यभादिति विमूढधियो वदन्ति

ச்லோகார்த்தம் : (விஷய) ஞானம் என்பது ப்ரகாசிக்கின்றது, ப்ரகாசிக்கவில்லை என்று முரட்டு பிடிவாதத்தினால் தூஷிதமான புத்தியை உடையவர்கள் விவாதம் செய்கின்றார்கள். அதேபோல் ஆத்மசைதன்யம் என்பதும் ப்ரகாசிக்கின்ற போதே ப்ரகாசிக்கவில்லை என்று மூடர்கள் சொல்கிறார்கள்.

வ்யாக்யானம் : ஸம்வித் என்பது ஸ்வப்ரகாசம் என்றும் அது தன்னை, தானே ப்ரகாசப்படுத்துகின்றது என்றும் பௌத்தர்களால் சொல்லப்படுகிறது (அது மட்டுமல்ல, ஆத்மா ஜடம் என்றும் நித்ய சைதன்யம் க்ஷணிகம் என்றும் விப்ரதிபத்தியுடன் சொல்லப்படுகிறது) இந்தவிதம் பௌத்தர்கள், ஸம்பவித் என்பது தானே ப்ரகாசிக்கின்றது என்றும் தன்னைத்தானே ப்ரகாசப்படுத்துகின்றது என்றும் புத்திஸாமர்த்யம்இல்லாததாலும் முரட்டுத்தனமான பிடிவாதத்தினால் சொல்கிறார்கள். இவ்விதம் ஸம்வித் ஸ்புரிக்கின்றது என்றும் ஸ்புரிக்கவில்லை என்றும் சொல்லப்படுவதுபோல் அஹம் என்று ஸ்வப்ரகாசமாக

ப்ரகாசித்துக் கொண்டிருக்கின்ற நித்ய சைதன்ய ஸ்வரூபமான அத்வய ப்ரஹ்மமானது அஞ்ஞானத்தினுல் அறியப்படவில்லை என்று விவகாரம் செய்யப்படுகிறது. ஸ்வப்ரகாசமாகப்ரகாசித்த போதிலும், ஏதோ ஒரு ஆகாரத்தில் ஸ்புரிக்கவில்லையென்று எந்த வஸ்து ஸதா அஹமஹம் என்று ப்ரகாசிக்கின்றதோ அதுவே ப்ரகாசிக்கவில்லை என்று புத்திகலக்கத்தினுல் ஒன்றுக்கொன்று விரோதமாகச் சொல்கிருர்கள். அஸ்புரணம் என்பது ப்ரமம் என்று அறியப்படுமாளுல் விரோதம் ஏதும் ஸம்பவிக்காது.

**214.** அவதாரிகை :

அஸ்புரணம் என்பது ப்ரமம் என்றே அறிந்தாலும் ஸ்புரிக்கின்றது, ஸ்புரிக்கவில்லை என்ற இரண்டும் ஒன்றுக்கொன்று விரோதமில்லை என்று எப்படிச் சொல்வது?

ச்லோகம் :

अव्यत्पत्तिं बिभ्रती भाति संवित्तद्वद्ब्रह्माप्यद्वितीयस्वरूपम् ।
अव्युत्पत्तिं नाशयद्भाति वेद्यं तस्मादेतच्चोद्यमस्मासु नास्ति

ச்லோகார்த்தம் : அஞ்ஞானத்தை தரித்துக்கொண்டே (விஷய) ஞானம் என்பது ப்ரகாசிக்கின்றது. அதேபோல் அத்விதீயமான ப்ரஹ்மமென்பதும் அஞ்ஞானத்தை தரித்துக்கொண்டே ப்ரகாசிக்கின்றது. அஞ்ஞானம் என்பதை நாசம் செய்துகொண்டே வேத்யவஸ்து ப்ரமாணமூலம் ப்ரகாசிக்கின்றது. ஆகையால் எங்களிடம் இந்த கேள்விக்கே இடமில்லை.

வ்யாக்யானம் : நித்யப்ரகாச ஸ்வரூபமான ஸம்வித் என்பது ஸதாப்ரகரசித்துக் கொண்டிருந்தபோதிலும், அதில் அத்யஸ்த்தமான அஞ்ஞானம் இருக்கின்ற பர்யந்தம் ஸ்புரிக்கவில்லையென்று விவகாரம் செய்யப்படுகிறது. அவ்விதம் இருந்தும்கூட அஞ்ஞானம் இருக்கின்றது, தெரிகின்றது என்று அந்த சைதன்யத்தினுலேயே ப்ரகாசிக்கின்றது.

அதேபோல் அத்விதீயமான ப்ரஹ்மமே ப்ரத்யக் ஸ்வரூபாகாரமாத்ரமாக ப்ரகாசிக்கின்றது. அஞ்ஞானம் என்பது ப்ரஹ்மஸ்வரூபமே நான் என்று தன்னை அறியவொட்டாமல் மறைக்கின்றது என்பதும் அந்த சைதன்யமே ப்ரகாசப்படுத்துகின்றதுடன் தானும் ப்ரகாசிக்கின்றது. ஆகவே, சிதாத்ம ஸ்வரூபத்தில் பாவரூபமாக இருக்கின்ற அஞ்ஞானம் என்பதையே அஸ்புரணம் என்று சொல்லப்படுகிறது. ஸ்புரணம் என்பது ஸ்வத:ஞானரூபம்.

இந்தவிதம் அஸ்புரணம் என்பது அஞ்ஞானரூபம் என்றும், ஸ்புரணம் என்பது ஞானரூபம் என்றும் சொல்லப்படுவதால் இரண்டும் பாவரூபம் என்றே சித்திக்கின்றது. இவ்விதம் இரண்டுமே பாவரூபமென்பதால் விரோதம் ஏதுமில்லை. பாவாபாவரூபம் என்று சொல்லப்பட்டால்தான் விரோதம். அஞ்ஞானம் இருக்கின்றபோதே ஆத்மா ப்ரகாசிக்கின்றது என்று அறியப்படுகின்றது என்பதால் இரண்டும் பாவரூபம் என்றே சித்திக்கின்றது.

பூர்வ : அவ்விதம் ஆத்மா ப்ரகாசிக்கின்றது என்ருல், வேதாந்த விசாரத்தினுல் தத்வஞானம் ஏற்படவேண்டுமென்று சொல்வது எப்படி?

சித்தா : ஸ்வரூப ப்ரகாசத்திற்காக தத்வஞானம் வேண்டுமென்று சொல்லப்படவில்லை. ப்ரத்யக் சைதன்யமே ப்ரஹ்மமென்று ஸ்வஸ்வரூபேண ப்ரகாசிக்காமல், அஞ்ஞானம் மறைக்கின்றதால், வேதாந்த விசார ஜன்யமான புத்தி ஆரூட வ்ருத்தி ப்ரதிபலத்தினுல், ஞான ஸ்வரூபமான அந்த சைதன்யம் அகண்டாகார வ்ருத்தியில் ப்ரதிபலிக்கின்ற போதே ஸ்வஸ்வரூப ஆகாரகமான அஞ்ஞானம் நாசத்தை அடைகின்றது. இவ்விதம் நித்ய சைதன்ய ஸ்வரூபத்தை மறைக்கின்ற அஞ்ஞானம் என்பதே அஸ்புரணம் என்று சொல்லப்படுகிறது. அதனுல் ஞான அபாவம் என்பதை அஸ்புரணமென்று சொல்லப்படவில்லை. ஆகவே பாவரூபமான அஞ்ஞான நாசத்திற்காகவே தத்வஞானம் என்பது அர்த்தவத்தாக (ப்ரயோஜனமுள்ளதாக) ஆகிறது என்று எங்கள் பக்ஷத்தில் சொல்லப்படுகிறது. அதனுல் உங்கள் பக்ஷத்தைப் போல் அபாவரூபம் என்பதை அஸ்புரணம் என்று சொல்லப்படாததால் விரோதம் ஏதுமில்லை.

ஸம்வித் என்பது ஸ்புரிக்கின்றது என்ருலும் அந்த ஸ்புரணம் என்பது நித்யமா, க்ஷணிகமா என்று உண்மையான ஸ்வரூபம் அறியப்படவில்லை. நித்யம் என்ருல், அகண்டாகார வ்ருத்தியினுல் ஆத்மஞானம் ஏற்படுகிறது என்று எப்படிச் சொல்லமுடியும்? என்ற சம்சயம் ஏற்படுகிறது.

ஆத்மா ஸ்வப்ரகாசம் ஸ்வரூபேணநித்யம் என்பதே உண்மை. அஞ்ஞானம் இருக்கின்றபோதும், இல்லாதபோதும், ஸ்வப்ரகாசமாக ஸர்வதா ப்ரகாசித்துக் கொண்டிருக்கிறது என்ருலும் அஞ்ஞானத்தினுல் க்ஷணிகம் என்றும் ஸ்திரம் என்றும் விவகாரம் செய்யப்படுகிறது. இவ்விதம் க்ஷணிகமாகவும், ஸ்திரமாகவும் அறியப்படும் ஸ்வரூபம் நித்யசைதன்யத்தைக் காட்டிலும் வேறுபட்டதல்ல. ஆனுல் ஸ்வஸ்வரூப ஆகாரகமான அஞ்ஞானம் உண்மையான ஸ்வரூபத்தை மறைக்கின்றதால், சாஸ்திராசார்ய உபதேசத்தினுல், தத்வஞானம் ஏற்படவேண்டும். ஆகவே அகண்டாகார வ்ருத்தி ஆரூடசைதன்யத்தினுல் அஞ்ஞானம் நிவர்த்திக்கின்றது என்றும், அதனுல் ஸ்வஸ்வரூபேண ப்ரகாசிக்கின்றதென்றும் சொல்லப்படுகிறது.

**215.** அவதாரிகை :

நித்யமுக்த ஸ்வரூபம் ப்ரஹ்மமென்றும், அஞ்ஞானத்தினுல் ஜீவபாவம் ஏற்பட்டு அதனுல் ஸம்ஸாரம் என்றும், அதன் பிறகு வித்யையினுல் ஜீவபாவம் நீங்கி முக்தியை அடைவதாகச் சொல்லப்படுகிறது. ஏகஜீவவாதம் என்பதை அனுசரித்து இவ்விதம் சொல்லப்படுமானுல், சுகர், வாமதேவர் முதலானேர் முக்தர்கள் என்றும் மற்றவர்கள் பத்தர்கள் என்றும் எப்படிச் சொல்லமுடியும்? அதனுல், பத்தன், முக்தன் என்ற விவகாரம் அனேக ஜீவவாதத்தைக் கொண்டே பரிகாரம் செய்யமுடியும் என்பதால் நானு ஜீவவாதமே ஒத்துக்கொள்ளப்பட வேண்டும்.

ச்லோகம் : नन्वेवं चेद्बन्धमोक्षव्यवस्थाशास्त्रं कुप्येन्नाऽऽप्रबोधात्प्रवृत्तेः ।
बद्धो मुक्तो ज्ञानवानज्ञ इत्यप्येतत्सर्वं यावदज्ञानमिष्टम्

ச்லோகார்த்தம் : இந்தவிதம் சொல்லப்படுமானுல் பந்தம் மோக்ஷம் என்ற வ்யவஸ்த்தா, சாஸ்திரம் பாதிக்கப்படுகின்றதே ?

சித்தா : இது சரியல்ல ஏனெனில் ஞானம் ஏற்படும் வரையில்தான் சாஸ்திரம் ப்ரவர்த்திக்கின்றது. பந்தன், முக்தன், ஞானி, அஞ்ஞானி என்பதெல்லாம் அஞ்ஞானம் இருக்கின்ற பர்யந்தமே ஒத்துக்கொள்ளப்படுகிறது.

வ்யாக்யானம் : இதுவரை இந்த க்ரந்தம் விசாரிக்கப்பட்ட முறையில், அஞ்ஞானம் என்பது ஜீவாச்ரயமுமில்லை, அத்வைத ப்ரஹ்மாச்ரயமுமில்லை என்றும், ப்ரத்யக் சைதன்யத்தையே ஆச்ரயமாகவும், விஷயமாகவும் கொண்டு இருக்கிறது என்று சித்தம் செய்யப்பட்டது.

மேலும், ஜீவன், ஈச்வரன் என்ற விபாகமே ப்ரத்யக்சைதன்யத்தை நிமித்தமாகக் கொண்டே ஏற்படுகிறது. அதனுல் அஞ்ஞானம் பாவம் அபாவம் என்பது காரணமில்லை. இரண்டுமே பாவரூபம் என்று சொல்லப்பட்டதால் விரோதம் ஏதுமில்லை என்றும் சொல்லப்பட்டது.

இப்போது ஏகஜீவவாதத்தில், சிலருக்கு பந்தமென்றும் சிலருக்கு முக்தியென்றும் பந்த முக்தா வஸ்த்தை எப்படிபொருந்தும் என்ற ஆக்ஷேபத்திற்கு பதில் சொல்லப்படுகிறது.

வித்வத் த்ருஷ்டியில் பந்த முக்தவ்யவஸ்த்தை என்பதே கிடையாது. அவித்வத் த்ருஷ்டியைக் கொண்டே ஸர்வ விவகாரமும் செய்யப்படுகின்றது. அதனுல் சாஸ்திரம் நிர்விஷயம் என்று சொல்லமுடியாது. வித்வான் என்பவனே அவித்வானுக்கு சாஸ்திரத்தை போதிக்கவேண்டும். வித்வானுக்கு அவித்யை நாசமானுலும் கூட அவித்யாலேசம் இருப்பதாகச் சொல்லப்படுவதால் ஆசார்யன் என்றும் சிஷ்யன் என்றும் உபதேசம் என்றும் பலவித விவகாரங்கள் ஏற்படுகிறது. அதனுல் பாதம் ஏதுமில்லை.

பூர்வ : அவித்வத் நிலையிலும் ஏக ஜீவன்தான் என்ருல், சிஷ்யன் ஆசார்யன் உபதேசம் என்ற விவகாரங்கள் எப்படி ஏற்படமுடியும் ?

சித்தா : சாஸ்திரம் ஆசார்யன் சிஷ்யன் முதலான அனேக விசித்ரமான உபாதிகளை அவித்யையினுல் சிருஷ்டிக்கப்படுகிறது என்றும் வ்யவஹாரதசையில் இவைகளுக்கு வ்யாவஹாரிக ப்ராமாண்யம் உண்டு என்றும் ஒத்துக்கொள்ளப்படுகிறது. அதனுல் இவ்வித ஆக்ஷேபத்திற்கு இடமே இல்லை. எப்படி ஸ்வப்னத்தில் அனேக ஜீவர்கள் இருப்பதாகவும் அதில் சிலர் ஞானி என்றும், சிலர் அஞ்ஞானி என்றும் விவகாரம் செய்யப்படுகிறதோ அதுபோல் ஜாக்ரத் காலத்திலும் அவித்யை உள்ள பர்யந்தம் சுகர், வாமதேவர் முதலானோர் முக்தர்கள் என்றும், மற்றவர்கள் பத்தர்கள் என்றும், சொல்லப்படுகிறது. ஒரேதத்வம்தான் ஸர்வத்திற்கும் சாக்ஷியாக இருக்கின்றது என்றாலும், விசித்ரமாக ஆவித்யகமான உபாதி வஸாத் ஸர்வ விவகாரமும் ஏற்படுகிறது. ஆகவே, ஸ்வப்னம் போல் கல்பிதம் என்பதால் வ்யவஹாரதசையில் வ்யாவஹாரிகப்ராமாண்யம் ஒத்துக்கொள்ளப்படுவதாலும், அவித்வத் நிலையில் சாஸ்திரத்திற்கு தேவை இல்லை. ஆகவே, ஏக ஜீவ வாதத்தில் அவித்வான்ஒருவனுக இருந்தபோதிலும், அவனுடைய கல்பனையில் அனேக ஜீவர்கள் இருக்கலாம். பந்தனென்றும் முக்தனென்றும் விவகாரங்களும் இருக்கலாம். அதனுல்பந்தமுக்த

அவஸ்த்தைகளைப் பற்றி சாஸ்திரமும் அனுவாதம் செய்யலாம். இவ்விதம் அவித்யை உள்ள பர்யந்தம் ஸர்வ விவகாரமும் இருக்கலாம் என்றும் வ்யாவகாரிக ப்ராமாண்யத்தை ஒத்துக்கொண்டு சொல்லப்படுவதால் இதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை. ப்ரத்யகாத்மா ஏகம்தான் என்றாலும், அவித்யையினால் அனேக ஜீவர்களும் விசித்ரமான அந்த:கரணம் என்ற அனேக உபாதிகளும் இருக்கின்றது. அதனால் ஞானி அஞ்ஞானி பத்தன் முக்தன் என்று பலவிதம் இருப்பதாக தோன்றுகிறது. இந்த அவித்யையென்பது வித்யையினால் நிவர்த்திக்கப்படுகின்றபோது ஸர்வ விவகாரங்களும் அற்ற ஸ்வரூப சாக்ஷாத்காரம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுவதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை.

**216.** அவதாரிகை :

சுகர் முதலானோர் முக்தர்கள் என்றும் அஞ்ஞானிக்கே பந்தம் என்றும் தெரிவிக்கின்ற ச்ருதி வாக்யங்களினால் ஏற்படும் வ்யவஸ்த்தையைக்கொண்டு அனேக ஜீவர்கள் இருக்கிறார்கள் என்று அறியப்படுகிறது. மோக்ஷம் என்ற புருஷார்த்தத்தை போதிக்கின்ற சாஸ்திரம், எவ்வித ப்ரயோஜனமும் அற்றதான ஒரு கதையை தெரிவிப்பதில் என்ன தாத்பர்யம் இருக்க முடியும்? அதனால் அந்த வாக்யங்கள் கதை என்று சொல்லமுடியாது. ஏனெனில் இப்போதும் அனேக ஜீவர்கள் ஸம்ஸாரியாக இருக்கிறார்கள் என்று அறியப்படுகிறதே? என்றால், சாஸ்திரம் பந்த முக்த வ்யவஸ்த்தையை தாத்பர்யத்துடன் போதிக்கவில்லை. ப்ரஹ்மமே ஆத்மா என்று ப்ரஹ்மாத்ம விஷயத்தை போதிப்பதில் தான் தாத்பர்யமுடையது என்பதை தெரிவிப்பதற்காக சித்தாந்தியே விகல்பம் செய்கின்றார். (இதன்மூலம் ஏக ஜீவவாதம் பற்றி தெரிவிக்கின்றார்)

ச்லோகம் :

किं चैतत्किं बन्धमोक्षव्यवस्थाशास्त्रं यत्नात्तत्परं सत्प्रवृत्तम् ।
किं चान्यस्मात्प्राप्तमेवानुभाष्य तस्या रूपं ब्रह्मतत्त्वं विदध्यात्

ச்லோகார்த்தம் : மேலும், பந்த மோக்ஷ வ்யவஸ்த்தா சாஸ்திரம் என்பது ப்ரயத்தன பூர்வகமாக தாத்பர்யத்துடன் ப்ரவர்த்திக்கின்றதா? அல்லது வ்ருத்தவிகாரத்தின் மூலம் அறியப்படும் மோக்ஷம் என்பதை அனுவாதம் செய்து, அந்த மோக்ஷஸ்வரூபமாக ப்ரஹ்மதத்வத்தை அறிவிக்கின்றதா?

வ்யாக்யானம் : சாஸ்திரமானது ஸ்வார்த்தபரமாக (தன் அர்த்தத்தை தெரிவிக்கின்றதற்காக) ப்ரவர்த்திக்கின்றதா? அல்லது மற்றவர்கள் முக்தி அடைந்தார்கள் என்று வ்ருத்த விவகாரத்தினால் எந்த விஷயம் முன்னால் ப்ராப்தமாக இருக்கின்றதோ அந்த விஷயத்தை அனுவாதம் செய்து தெரிவிக்கின்றதா என்று விகல்பம் செய்யப்படுகிறது.

சாஸ்திரம் என்பது பந்த முக்த வ்யவஸ்த்தையை தெரிவிக்கின்றதன் மூலம் அனேக ஜீவர்கள் என்று தெரிவிப்பதில்தான் அந்த வாக்யங்களின் தாத்பர்யம் என்று சொல்வதற்கு முடியாது. அதனால் பந்த மோக்ஷ வ்யவஸ்த்தையை தெரிவிக்கின்ற சாஸ்திரத்திற்கு ஏக ஜீவவாதம் என்பது விரோதம் என்று சொல்லப்படுவது சரியல்ல.

அதனுல் சாஸ்திரமானது, பந்தம் மோக்ஷம் என்பதை விசேஷமாக தெரிவிக்கின்றது அதனுல் அதுவே சாஸ்திரத்திற்கு தாத்பர்யமா? அல்லது வேறுகாரணம் இருக்கின்றதா? என்று விசாரிக்க வேண்டும்.

சுகர், வாமதேவர் முதலானோர் முக்தர்கள் என்று தெரிவிப்பதற்காக சாஸ்திரம் ப்ரவ்ருத்திக்கின்றது என்று சொல்வது பொருந்தாது. லோகவ்யவஹாரத்தில் அவித்வான்களால் சுகாதிகள் முக்தர்கள் என்று சொல்லப்படுகிறது. இந்த ச்லோகத்தில் 'தஸ்யா:ரூபம் ப்ரஹ்மதத்வம்' என்றுசொல்லப்பட்டிருக்கிறது. தஸ்யா:என்ற பதம் சாஸ்திரத்தை தெரிவிக்கினறது. ஆனுல் சாஸ்திரம் என்பது தஸ்ய என்ற பதத்தினுல் தான் சொல்லப்படவேண்டும். ஏனெனில், தஸ்யா என்பது ஸ்திரீலிங்கம். சாஸ்திரம் என்பது நபும்ஸகலிங்கமானதால் தஸ்யா:என்று எப்படிச் சொல்ல முடியும் என்ருல், வ்யவஸ்த்தையை சாஸ்திரம் தெரிவிக்கின்றது. வ்யவஸ்த்தை என்பது ஸ்திரீலிங்கம் - ஆகவே இந்த இடத்தில் வ்யவஸ்த்தை என்பதை கருத்தில் (புத்தியில்) கொண்டுதஸ்யா: என்ற பதம் சொல்லப்படுகிறது. 'தஸ்யா:ரூபம்' என்பதில் ரூபம் என்ற பதம் எதில் பலவித ரூபங்கள் விகல்பங்கள் இருக்கின்றதோ அந்த ரூபமே ப்ரஹ்மதத்வம் என்று தெரிவிக்கின்றது. அதாவது அவரவர் கல்பனைக்கு ஏற்ற விதம் செய்யப்படும் விகல்பங்களுக்கு எது காரணமாக இருக்கின்றதோ அவ்வித விகல்பரூபமான ப்ரஹ்மதத்வம் என்பதையே ரூபம் என்ற பதத்தினுல் குறிப்பிடப்படுகிறது.

**217.** அவதாரிகை :

முதல் விகல்பத்தை தெரிவித்து பதில் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

शास्त्रं तावत्तत्परं नेष्यते तदानर्थक्यात्तत्स्वरूपप्रतीतेः ।
ब्रह्मात्मैक्यप्रत्ययेनार्थवत्त्वं वक्तुं युक्तं तच्च नोऽभीष्टमेव

ச்லோகார்த்தம் : சாஸ்திரமானது, மஹான்களின் முக்தியைப் பற்றி தெரிவிப்பதில் தாத்பர்யமுடையது அல்ல. ஏனெனில் அவர்களின் மோக்ஷத்தைப் பற்றி அறிவதால் ப்ரயோஜனம் ஏதுமில்லை. ப்ரஹ்மாத்ம ஐக்யஞானம் மூலம் ப்ரயோஜனம் இருக்கின்றது என்பதை எங்களால் ஒத்துக்கொள்ளப்படுகிறது.

வ்யாக்யானம் : சுகர் முதலானோர்களின் முக்தியைப் பற்றி தெரிவிப்பதில் சாஸ்திரம் தாத்பர்யத்துடன் போதிக்கின்றது என்று சொல்வதற்கு முடியாது. ஏனெனில், சுகாதிகள் முக்தி அடைந்தார்கள் என்பதால்மற்றவர்களுக்கு ப்ரயோஜனம் ஏதுமில்லை. அதனுல் அந்த வாக்யம் அர்த்தவாதம் என்று சொல்லப்படுமானுல் அது எங்களுக்கும் இஷ்டமே.

ப்ரஹதாரண்யக உபநிஷத் வாமதேவருக்கு ஆத்மஞானம் ஏற்பட்டவுடன் நான்தான் மனு, நானே சூர்யன், ஸர்வமும் நானே என்று அறிந்தார் என்று தெரிவிக்கின்றது. இதன்மூலம் அவருக்கு ப்ரஹ்மபாவம் ஏற்பட்டது என்றே அந்த வாக்யம் தெரிவிகிக்கின்றது. இந்த வாக்யத்தைக் கேட்பதனுல் மற்றுமுள்ளவர்களும் தானும் ப்ரஹ்மபாவத்தை அடையவேண்டுமென்ற இச்சை ஏற்பட்டு சாஸ்திரத்தில்

ப்ரவர்த்திப்பார்கள் என்று உத்தேசித்தே இந்த கதையை சாஸ்திரம் தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமானல், அந்த வாக்யத்திற்கு ப்ரயோஜனம் இருக்கின்றது. அதனுல் எங்களுக்கும் அது இஷ்டம்தான். ஆகையால் பந்தமோக்ஷ வ்யவஸ்த்தையை போதிப்பதில் தாத்பர்யமில்லை என்றே சித்திக்கின்றது. அந்த வ்யவஸ்த்தையை தெரிவிப்பதால் மற்றவர்களுக்கு புருஷார்த்தம் ஏதுமில்லாததால் ப்ரயோஜனம் இல்லை. ஆகவே, சாஸ்திரமானது ப்ரஹ்மாத்ம ஐக்யவிஷயத்தை போதிப்பதில்தான் தாத்பர்யமுடையது என்றே அறியப்பட வேண்டும். ஆகவே மஹாவாக்யங்கள் ஸேஷி. அதற்கு அங்கமாகவே (ஸேஷமாக) அர்த்த வாத வாக்யங்கள் பந்தம் மோக்ஷம் என்ற வ்யவஸ்த்தையை தெரிவித்து அதன்மூலம் மஹாவாக்யத்துடன் ஏகவாக்ய ப்ரத்யயத்தில்தான் பர்யவஸானத்தை அடைகின்றது. இந்த முறையில்தான் சுகர் வாமதேவர் முதலானேர்களின் முக்தியைப் பற்றி தெரிவிக்கின்ற வாக்யம் ப்ரயோஜன முடையதாகிறது. மற்றவர்களும் நாமும் பந்தத்திலிருந்து விடுதலையடைவதால் விச்ராந்தி ஏற்படும் என்று அறிந்து சாஸ்திரத்தில் ப்ரவர்த்திப்பதில் இச்சை ஏற்படும் என்பதே இந்த வாக்யத்தின் உபகாரம். இதனுல் ப்ரஹ்மதத்வம் அறியப்படவேண்டும் என்ற உபதேசத்தை சாஸ்திரம் செய்வதற்கு இந்த அர்த்த வாதவாக்யத்தினுல் உபகாரம் ஏற்படுகிறது. அதனுல் சாஸ்திரத்தில் ப்ரவர்த்திக்கின்ருர்கள் என்பதே இதன் கருத்து.

பூர்வ : அர்த்தவாதம் என்பது மூன்றுவிதமாக இருக்கின்றதால் இந்த வாக்யம் குணவாதமா பூதார்த்தவாதமா அனுவாதமா?

சித்தா : சுகர் முதலானேர் முக்தர்கள் என்று தெரிவிக்கின்ற அர்த்தவாத வாக்யம் வேறு எந்த ப்ரமாணத்திற்கும் விரோதமாக இல்லை. அவர்கள் முக்தர்கள் இல்லையென்று எந்த ப்ரமாணமும் தெரிவிக்கவில்லை. அதனுல் குணவாதம் என்று சொல்லமுடியாது.

சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தையன்றி வேறு ப்ரமாணங்களினுல் அவர்கள் முக்தர்கள் என்று அறியப்படாததால் அனுவாதம் என்று சொல்லமுடியாது வ்ருத்த வ்யவஹாரத்தினுல் அனுவாதம் என்று சொல்லலாமே என்ருல், அவர்களும் ஆகம வாக்யத்தைக் கொண்டே தெரிவிக்கின்ருர்கள் என்பதால் வேறு ப்ரமாணத்தினுல் அறியப்பட்டதாகச் சொல்லமுடியாது இவ்விதம் குணவாதமுமில்லை. அனுவாதமும் இல்லையென்று சித்திப்பதால் பூதார்த்த வாதம் என்றே ஒப்புக்கொள்ளப்படவேண்டும். ஏனெனில் தேவதாதிகரணத்தில் சொல்லப்படும் ந்யாயத்தினைக் கொண்டு இதை தீர்மானிக்க வேண்டும். அதாவது பூதார்த்த வாதவாக்யத்தினுல் தெரிவிக்கப்படும் விஷயம் மற்ற ப்ரமாணங்களால் பாதிக்கப்படமுடியாது. ஏனெனில் மற்ற ப்ரமாணங்களுக்கு அது விஷயமாக ஆகாது. ஆகவே சுகர் வாமதேவர் முதலோனேர் இருந்தார்கள் என்றும் அவர்கள் முக்தியை அடைந்தார்கள் என்றும் தெரிவிக்கின்ற வாக்யம் ப்ரமாணம் என்றே ஒத்துக்கொள்ள வேண்டும். இந்த அர்த்தவாதவாக்யம் பந்த முக்த வ்யவஸ்த்தையை தெரிவிப்பதன்மூலம் ப்ரஹ்மாத்ம ஐக்ய விஷயத்தில் ப்ரயோஜனமாகிறது என்ற ஒரே காரணத்தினுல் இந்த வாக்யத்திற்கு ப்ராமாண்யம் சொல்லப்படுகிறது. அதனுல் இந்த முறையில்தான் அந்த வாக்யத்திற்கு ப்ராமாண்யம் சொல்லப்பட வேண்டுமேயன்றி இந்த வாக்யத்தைக் கொண்டு அனேக ஜீவர்கள் என்று நானுஜீவவாதத்திற்கு ப்ராமாண்யம் சொல்லப்படுவதுசரியல்ல. அதை ஒத்துக்கொள்ள

முடியாது. மஹாவாக்யத்திற்கு ப்ரஹ்மாத்ம ஞானம் ப்ரயோஜனம். அந்த ப்ரயோஜனத்திற்கு அர்த்தவாத வாக்யம் ப்ரயோஜனமாகின்றது என்ற காரணத்திற்காகவே சாஸ்திர ப்ரமாண்யம் உண்டு என்று சொல்லப்படுகிறது.

பூர்வ : அப்படியானால் முன் ச்லோகத்தில் 'அனுபாஷ்யம்' (அனுவாதம்) என்று சொல்லப்படுவதற்கு காரணம் என்ன? அனுவாதம் என்றால் பூதார்த்தவாதம் என்ற இந்தச் ச்லோகத்தில் முன்னுக்குப் பின் முரணாக எப்படிச் சொல்லப்படுகிறது?

சித்தா : இதில் முரண்பாடு ஏதுமில்லை. முன் ச்லோகத்தில் ஸாமான்யமாக அவித்வான்கள் வ்ருத்தவிவகாரமாக தெரிவிக்கின்றார்கள் என்பதை அனுவாதம் என்று சொல்லப்பட்டது. அதாவது சுகாதிகள் முக்தர்கள் என்று அவித்வான்களால் வ்யவஹாரத்தில் சொல்லப்படுகிறது என்று சாதாரணமாக அனுவாதம் என்று சொல்லப்பட்டது. இவ்விதம் அவித்வான்களின் வ்யவஹாரத்தினால் அறியப்படுவதெல்லாம் இப்படியும் இருக்கலாம் என்று காரணம் சொல்லப்படுகிறது. அதனால் இவைகள் ஸம்பாவனாஹேதுவாக ஆகலாமேயன்றி நிச்சயஹேதுவாகச் சொல்லப்படவில்லை. ஆகவே அனுவாதம் என்று சொல்வதற்கு முடியாது. பூதார்த்த வாதம் என்றே அறியவேண்டும். ஏனெனில் சுகாதிகள் பற்றிய வ்யவஹாரங்கள் நிச்சயமாக முன்னால் அறியப்பட்டதாக இருக்குமானால் சாஸ்திரம் தெரிவிப்பது அனுவாதம் என்று சித்திக்கும். ஆனால் இந்த விஷயம் சாஸ்திரம் ஒன்றினால் தான் அறியப்படுகிறது என்பதால் பூதார்த்தவாதம் என்றே சித்திக்கின்றது.

இதை அனுவாதம் என்று ஒத்துக்கொண்டபோதிலும் சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தினாலேயே பந்தம் மோக்ஷம் என்ற வ்யவஸ்த்தை சித்திக்கின்றது. ப்ரஹ்ம அவித்யையால் பந்தம், ப்ரஹ்ம வித்யையினால், மோக்ஷம் என்ற வ்யவஸ்த்தை 'யத்ர ஹித்வைதமிவபவதி,' 'யத்ர த்வஸ்ய ஸர்வம் ஆத்மைவாபூத்' என்ற வாக்யங்களினாலேயே அறியப்படுகிறது. இவ்விதம் சாஸ்திரமே பந்தமுக்த வ்யவஸ்த்தையைத் தெரிவிக்கின்றது என்பதால் முக்யதாத்பர்ய விஷயமான ப்ரஹ்மாத்ம விஷய ஞானத்திற்கு இந்த அர்த்த வாதவாக்யம் ஸேஷமாக இருப்பதால் ப்ரமாண்யமாகிறது என்பதே சித்தம்.

**218.** அவதாரிகை :

இவ்விதம் அவித்வானுடைய த்ருஷ்டியில்தான் பந்த, மோக்ஷ வ்யவஸ்த்தை சொல்லப்படுகிறது என்று சொல்லப்படுமானால், லோகத்தில் நான் ஒருவனே ஜீவன், மற்ற அனைவரும் அஞ்ஞான கல்பிதம் என்பதால் என்னையன்றி வேறாக பந்தனென்றோ முக்தனென்றோ வேறாக முக்காலத்திலும் எவருமில்லை என்ற அனுபவம் இருக்கவேண்டுமே? அவ்வித அனுபவம் இல்லையென்பது மட்டுமின்றி அதற்கு விரோதமாக வாமதேவர் முதலானவர்களைத்தவிர மற்றுமுள்ள நாம் எல்லோருமே பத்தர்களாக இருக்கிறோம் என்ற அனுபவந்தான் இருக்கின்றது. அதனால் ஏக ஜீவவாதமே சரி என்று சொல்லப்படுவதை எப்படி ஒத்துக்கொள்ள முடியும்?

ச்லோகம் : नन्वन्यो मद्बन्धमोक्षादिभागीभूतो भावी वर्तते वा न कश्चित् ।
इत्युक्तार्थं स्वानुभूत्या विरोधान्नाहं जातु प्रोत्सहे संग्रहीतुम्

ச்லோகார்த்தம் : என்னைக் காட்டிலும் வேருக பந்தமோக்ஷஸம்பந்தம் உடைய ஒருவன் கடந்த காலத்திலோ, எதிர்காலத்திலோ இல்லை என்பது ஸ்வானுபூதிக்கு விரோதமாக இருக்கிறது. இந்த விஷயம் என்னுல் ஏற்றுக்கொள்ளப்பட முடியாது.

வ்யாக்யானம் : அவித்வத் த்ருஷ்டியில்தான் பந்த மோக்ஷ வ்யவஸ்த்தையென்றும் அவித்யா நிலையில்தான் சாஸ்திரம் விஷயம் என்றும், வித்வத் த்ருஷ்டியில் முக்காலத்திலும் இந்த வ்யவஹாரமே கிடையாது என்று சொல்லப்படுவதை ஒத்துக் கொள்ளமுடியாது. ஏனெனில் அனுபவம், யுக்தி முதலியவைகளுக்கு விரோதமாக இருக்கிறது. இந்த விஷயம் பற்றி எவ்வளவு யுக்திகளைக் கொண்டு விசாரித்தாலும், அந்த விஷயம் சித்தம் செய்வதற்கு முடியாது. ஏனெனில் யுக்தி என்பதே அனுபவத்தைக் கொண்டு சாதிக்கப்படவேண்டும். அனுபவ விரோதமான விஷயமாக இருப்பதால் யுக்தியினுலும் சாதிக்கமுடியாது. அதனுல் இது ஒத்துக்கொள்ளக் கூடியதல்ல.

**219.** அவதாரிகை :

அனுபவ விரோதம் என்று சொல்லப்படுமானுல், எந்த அனுபவத்திற்கு விரோதமாக இருக்கிறது ?

ச்லோகம் :

किं द्वैतानुभवो विरोधपदभाक्किं वा परोऽस्मीत्ययं यद्वा कश्चिदिहापरोऽस्त्यनुभवो यस्ते विरोधावहः ।
नाद्वैतानुभवः क्षतिं वितनुते तस्येति युक्तं वचोनापि द्वैतमुपोल्लिखन्ननुभवस्तेनास्य बाधो यतः

ச்லோகார்த்தம் : என்னைத் தவிர வேறு யாரும் இல்லையென்ற ஞானத்திற்கு, த்வைத அனுபவம் விரோதமாக இருக்கிறதா, அல்லது நான் ப்ரஹ்மமென்ற ஞானத்திற்கு விரோதமாக இருக்கின்றதா, அல்லது இவை இரண்டிற்கும் வேறுபட்ட அனுபவம் விரோதமாக இருக்கிறதா? அத்வைதானுபவம் விரோதத்தை உண்டு பண்ணுகின்றது என்று சொல்ல முடியாது. த்வைதானுபவம் என்பதும் விரோதத்தை உண்டு பண்ண முடியாது- ஏனெனில் அது ஞானத்தினுல் பாதிக்கப்படுகிறது.

வ்யாக்யானம் : அத்யாத்மம், அதிதெய்வம், அதிபூதம் என்றும், கர்த்ருத்வம் போக்த்ருத்வம் என்பது போன்ற த்வைத அனுபவத்திற்கு விரோதமாக இருக்கிறதா ? அல்லது மஹாவாக்யத்தினுல் ஏற்படும் 'அஹம்ப்ரஹ்மாஸ்மி என்ற அத்வைத அனுபவத்திற்கு விரோதமாக இருக்கிறதா ?' அல்லது த்வைதாத்வைதம் என்ற அனுபவத்திற்கு விரோதமாக இருக்கின்றதா ? 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' என்ற அத்வைத அனுபவம் இருக்கின்றபோது பத்தன் என்றோ முக்தன் என்றோ எந்த வ்யவஹாரமும் பரமார்த்தமாக இருக்கமுடியாது. "ந நிரோதோ நசோற்பத்தி;" என்று ப்ரஹ்மத்தையன்றி வேறு எதுவுமில்லை என்ற அத்வைத அனுபவம் இருக்கின்றபோது அந்த நிலையில் அனுபவ விரோதம் இருப்பதாகச் சொல்லமுடியாது. அஹம் கர்த்தா, போக்தா, முதலானஅனுபவம் பந்தானுபவம். இந்த அவஸ்த்தை அஞ்ஞான தசையில்தான் தோற்றுவிக்கப்படுகிறது. அதனுல் ஸதாஸர்வதா ஆத்மாவில் த்வைதானுபவம் இருக்கின்றதென்று தெரிவிக்கக்கூடிய சக்தி உடையது அல்ல. இவ்விதம் ஏற்படும் த்வைதானுபவம் ஒரு ஸமயம் இருக்கிறது. மற்றொரு ஸமயம் இல்லை. அதனுல் த்வைத அனுபவம் என்பது அந்த நிலையில் உள்ள விஷயங்களை மட்டும் தெரிவிக்கின்றதால்

சுகர், வாமதேவர் முதலானவர்களின் முக்தியைப் பற்றிய விஷயத்தை த்வைத அனுபவம் தெரிவிப்பதாகச் சொல்லமுடியாது. அதுமட்டுமல்ல த்வைத அனுபவம் அத்வைத அனுபவத்தினுல் பாதிக்கப்படுகிறது. ஆகவே, இப்பேர்ப்பட்ட த்வைத அனுபவம், பந்த, முக்த அவஸ்த்தைகள் பற்றிய விஷயம் இல்லையென்று சொல்வதற்கு விரோதமாக இருக்கிறது என்று சொல்லமுடியாது.

**220.** அவதாரிகை :

பேதாபேத அனுபவம் (த்வைதாத்வைதம்) என்று சொல்லப்படும் மூன்ருவது பக்ஷமும் சரியல்ல.

ச்லோகம் :

द्वैताद्वैतनिवेशिनोऽनुभवनाद्बाधोभयस्येति चेत्तादृग्ज्ञानुभवोऽस्ति कस्यचिदपि स्थानत्रये जीवतः ।
भास्वच्छार्बरगोचरं ह्यनुभवं बिभ्रज्जनो दृश्यते नास्मिन्संसृतिमण्डले स न भवेत्कस्मादयं चेद्भवेत्

ச்லோகார்த்தம் : த்வைதம் அத்வைதம் என்ற இரண்டும் சேர்ந்திருக்கின்ற அனுபவத்தினுல் என்னையன்றி வேறுயாருமில்லை என்ற ஞானத்திற்கு விரோதம் ஏற்படுவதாகச் சொல்லப்படுமானுல் அது சரியல்ல. ஏனெனில் ஜீவனுக்கு ஏற்படுகின்ற மூன்று அவஸ்த்தைகளிலும் இவ்விதம் (த்வைதாத்வைத அனுபவம் என்ற) ஒரு அவஸ்த்தை ஏற்படுவதில்லை. சூர்யன், அந்தகாரம் என்ற இரண்டும் ஒரே ஸமயத்தில் விஷயமாகின்றதாக எவ்வித அனுபவமும் எவருக்கும் இந்த லோகத்தில் ஏற்பட்டதாக அறியப்படவில்லை. ஆகவே, (சூர்யனும் இருளும் போன்ற) இவ்வித அனுபவம் இருக்கமுடியாது என்ருல் த்வைதாத்வைத அனுபவம் எப்படி இருக்கமுடியும்?

வ்யாக்யானம் : த்வைதாத்வைத அனுபவம் என்று ஒன்று இருக்கின்றதாக சாஸ்திரத்திலிருந்து அறியப்படவில்லை. அதனுல் த்வைத அத்வைத அனுபவத்திற்கு விரோதம் என்று சொல்ல முடியாது. பேதாபேத அனுபவம் என்பது சாஸ்திரத்தினுலும் அறியப்படவில்லை, மூன்றுலோகத்திலும் ஜாக்ரத் முதலான மூன்று அவஸ்த்தைகளிலும் ஒரே ஸமயத்தில் பேதம் அபேதம் என்ற இரண்டும் அனுபவிக்கப்படுகிறது என்று சொல்வதற்கும் முடியாது. சூர்யன், இருள் என்ற இரண்டும் ஒரே ஸமயத்தில் ஒரே இடத்தில் எப்படி இருக்க முடியாதோ அதேபோல் ஒன்றுக்கொன்று விருத்தமான பேதா பேத அனுபவம் என்பதும் எவருக்கும் இருக்கமுடியாது. ஞானம் ஏற்படுவதற்கு முன்பு அத்வைத அனுபவம் இருக்கமுடியாது. த்வைதானுபவம்தான் இருக்கின்றது. வர்த்தமான காலத்திலும் த்வைத அனுபவம்தான் இருக்கின்றது. முக்தாவஸ்த்தையில் அத்வைத அனுபவமே இருக்கின்றது. ஆகவே த்வைதானுபவம் என்பதுபாரமார்த்திகமாக கிடையாது. சூர்யன் இருள் இரண்டும் எப்படி சேர்த்துப் பார்க்க முடியாதோ அதுபோல் த்வைதானுபவம், அத்வைதானுபவம் என்ற இரண்டையும் ஒன்ருகச் சேர்த்து அனுபவிக்க முடியாது.

பூர்வ : அனுபவத்தில் இல்லையென்றபோதிலும் 'த்த்வமஸி' போன்ற மஹாவாக்யங்கள் பேதாபேதத்தை தெரிவிக்கின்றதால், பேதாபேத அனுபவத்திற்கு சாஸ்திரமே ப்ரமாணம் என்று சொல்லலாமே?

சித்தா : சாஸ்திரமேயானாலும் பேதம் அபேதம் என்ற இரண்டும் ஒன்று என்று சொல்வதற்கு முடியாது. 'தத்வமஸி' மஹாவாக்யங்கள் அகண்டார்த்தத்தையே போதிக்கின்றது என்பது மட்டுமல்ல, ச்ருதிவாக்யம் பேதம் என்பதை நிஷேதம் செய்து ஏகமாகவும் அத்விதீயமாகவும் இருக்கின்ற தத்வத்தையே போதிக்கின்றது. ஆகையால் சாஸ்திரம் பேதாபேதத்தை தெரிவிக்கின்றது என்று சொல்வது முற்றிலும் பொருந்தாது. (அபத்தம்.)

**221.** அவதாரிகை :

ஆகவே, ப்ரஹ்மமென்பதே அவித்யையினால் ப்ரதிபிம்பாத்மனாக ஸம்ஸாரபாவத்தை அனுபவிக்கின்றது என்றும் வித்யையினால் ஸம்ஸார நிவர்த்தி ஏற்பட்டு முக்தனாகிறது என்றும் ஸம்ப்ரதாயமாக பெரியோர்களால் ஒத்துக்கொள்ளப்படுகிறது. அதனால் முமுக்ஷுக்களும் இதை ஒத்துக்கொள்ளவேண்டும்.

ச்லோகம் :

यत एवमत्र न विरोधलवोऽप्युपढौकते कथितनीतिवशात् ।
उपगृह्यतामतमिदं सुदृढं गुरुसंप्रदायवचनानुगतम्

ச்லோகார்த்தம் : முன்னால் சொல்லப்பட்ட ந்யாயத்தினால் எங்கள் பக்ஷத்திற்கு எவ்வித விரோதமும் கிடையாது. ஆகையால் குருஸம்ப்ரதாயம் மூலம் தொடர்ந்து வருகின்ற எங்கள் மதம் உன்னால் த்ருடமாக ஒப்புக்கொள்ளப்படவேண்டும்.

வ்யாக்யானம் : இவ்விதம் சொல்லப்பட்ட யுக்திகளைக் கொண்டும் எங்கள் பக்ஷத்தில் எவ்வித விரோதமும் அறியப்படவில்லை. அதனால் இந்த பக்ஷத்தை எவராலும் அசைக்க முடியாது.

பூர்வ : ஜீவன் முக்த நிலையிலும் அவித்யாலேசம் இருப்பதாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. அதனால் கல்பிதமான சிஷ்யனுக்கு கல்பிதமான ஆசார்யன் உபதேசிக்கலாம் என்று வ்யவஹாரம் செய்யப்படுகின்றதால் ஏகஜீவவாதம் என்பது எப்படி பொருந்தும்?

சித்தா : ஏகரூபமான சைதன்யத்தில் இருக்கின்ற ஒரே அவித்யையில் ப்ரதிபிம்பிக்கின்ற ஜீவன் ஒருவனே என்று சொல்லப்படுவதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை. ஒரே ஜீவன் அவனுடைய ஸ்வப்னத்தில் அனேக ஜீவர்களை கல்பிப்பது போல் ஜாக்ரத்திலும் அனேக ஜீவர்களை கல்பித்து, குருவென்றும் சிஷ்யனென்றும் உபதேசம் என்றும் கல்பிக்கலாம். அதனால் பந்தம், மோக்ஷம், குரு, சிஷ்யன் என்பதெல்லாம் ஸம்பவிக்கலாம் என்று சித்தாந்த சித்தி என்ற க்ரந்தத்தில் விச்வதீர்த்தர் என்பவரால் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த விஷயம் பற்றி மூன்றாவது அத்யாயத்தில் விசாரிக்கப் படுகின்றதால் இங்கு விஸ்தரிக்கப்படவில்லை. இந்த விதம் அனேக ச்ருதிகளிலும் அனேக ஆசார்யர்களாலும் இந்த விஷயம் விசாரிக்கப்பட்டிருக்கின்றதால் இதில் ஸந்தேஹத்திற்கு இடம் எதுமில்லை. ஏக ஜீவனென்றோ அனேக ஜீவன் என்றோ எந்த விதம் சொல்லப்பட்ட போதிலும் ஸர்வமும் வித்யையினால் நிவர்த்திக்கின்றது என்ற அபிப்ராயத்தில் விச்வதீர்த்தரால் சொல்லப்படுகிறது. (அதனால் இதுவும் ஒரு பக்ஷம் என்றே சொல்லப்படுகிறதேயன்றி இதுவே சித்தாந்தம் என்று சொல்லப்படவில்லை)

கேவலயுக்தியை மட்டும் கொண்டு இந்த பக்ஷம் சித்தம் செய்யப்படவில்லை. குரு ஸம்ப்ரதாயத்திலும் விவர்த்தவாதம் என்பதையே ஸம்ப்ரதாயம் என்று ஒத்துக்கொள்ளப்படு கின்றது. அதனுல் இந்த பக்ஷமே சரி என்று முன்பே ஒத்துக்கொள்ளப்பட்டிருப்பதால் இந்த பக்ஷமே ஒப்புக்கொள்ளப்படவேண்டும்.

**222.** அவதாரிகை :

ஜீவபரமாத்ம அபேத ஞானம் என்ற தத்வஞானம் ஏற்படுகின்ற போதே பேதம் நிவர்த்திக்கின்றது என்று சொல்லப்படுவது சரியே. ஆனுல் அபேத ஞானம் ஏற்பட்ட பிறகும் ப்ரபஞ்சம் பரமார்த்தமாகவே அறியப்படுகின்றது. அதனுல் ப்ரபஞ்சத் தோற்றம் பாதிக்கப்படுகின்றதாக ஏன் சொல்லவேண்டும்?

ச்லோகம் :

तव गाढमूढतमसा रचितं जगदीशजीववपुषा सकलम् ।
प्रतिभाति तावददृढं दृढवत्समुदेति यावदवबोधरविः

ச்லோகார்த்தம் : ஜீவேச்வர ரூபத்தில் இருக்கின்ற இந்த ப்ரபஞ்சம் பூராவும் ஆரோபிதமாகவும் காடமாகவும் இருக்கின்ற உன்னுடைய அஞ்ஞானத்தினுல் கல்ப்பிக்கப்பட்டிருக்கிறது. ஸ்திரமாக இல்லையென்றுலும் இந்த ப்ரபஞ்சம் என்பது ஞான சூர்யன் உதிக்கின்ற பர்யந்தம் ஸ்திரம்போல் தோன்றுகிறது.

வ்யாக்யானம் : அனுதிகாலமாக இருக்கின்ற காடமூடதமஸ் என்ற கும்மிருட்டான அஞ்ஞானத்தினுல் ஜீவன் ஈச்வரன் ஜகத் என்ற பேதங்கள் தோற்றுவிக்கப்படுகிறது. அநிர்வசனீயமான இந்த அஞ்ஞானத்தின் கார்யமான பேத தோற்றம் த்ருடமாக இருந்தபோதிலும் உபநிஷத் வாக்ய ஜன்ய ஞானம் என்ற சூர்யன் உதிக்கின்ற பர்யந்தமே இவைகள் தோன்றுகிறது. இவ்விதம் தோன்றுகின்ற ஸர்வபேதங்களும் உண்மையில் அத்ருடமாக இருந்தும் த்ருடமாக இருப்பதுபோல் தோன்றுகிறது. ஆனுல் ஸ்வப்னத்திலிருந்து விழித்தவுடன் எப்படி ஸ்வப்ன ப்ரபஞ்சம் உண்மையில் இல்லையென்று பாதிக்கப்படுகின்றதோ அதுபோல் ஞான சூர்யன் உதித்ததனுல் ஏற்பட்ட ப்ரபோதத்தினுல் ஸர்வபேதமும் அற்ற ஆத்மஸ்வரூப ஞானம் ஏற்படுவதால், அதன் பிறகு த்வைதம் என்பது சிறிதும் இருக்க முடியாது. ஆகவே ப்ரபஞ்சம் பரமார்த்தம் என்ற தோற்றம் இருப்பதற்கு முடியாது.

**223.** அவதாரிகை :

அனுதி காலமாக ஸர்வலோகங்களிலும் ஜீவஈச்வரஜகத் என்ற பேதம் தொடர்ந்து அனுபவிக்கப்படுகின்றதால் சுக்தியில் தோன்றும் ரஜதம் போல் ப்ரபஞ்சத் தோற்றம் அத்ருடம் என்று எப்படிச் சொல்வது?

ச்லோகம் :

प्रभुरेष सर्वविदहं कृपणो जगदेतदद्भुतवितानमिति ।
प्रतिपत्तयस्तिमिरलुप्तदृशो यदिहोद्भवन्ति न तदद्भुतकम्

ச்லோகார்த்தம் : ஈச்வரன் மஹான், நான் அல்பன், இந்த ப்ரபஞ்சம் அற்புத ரஸனை உடையது. இப்பேர்ப்பட்ட ஞானங்கள், அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்ட த்ருஷ்டி உடைய ஒருவனுக்கு ஏற்படுகிறது. இதில் ஆச்சர்யம் ஏதும் இல்லை.

வ்யாக்யானம் : அவித்யை என்பது அனுதியாக தொடர்ந்து இருக்கின்ற காரணத்தினுல் வஸ்து தத்வம் இன்னதென்று அறியமுடியவில்லை. இவ்விதம் அவித்யையினுல் மறைக்கப்பட்ட புத்தியை உடையவர்கள் தேஹமே ஆத்மா என்று ப்ராந்தியினுல் விவஹாரம் செய்கின்றுர்கள். அதேபோல், அபசப்தங்களை பிழை அற்ற சப்தம் என்று ப்ராந்தியினுல் ப்ரயோகம் செய்யப்படுகிறது. இந்த விதமே ஈச்வரன், ஜீவன், ஜகத் என்ற பேதங்கள் அனுதி காலமாக இருக்கின்றதாக அறியப்பட்ட போதிலும் சாஸ்திரார்த்தங்களை விசாரித்து அறியப்படுகின்றபோது அஞ்ஞானம் நிவர்த்திக்கப்படுகிறது. அதனுல் அஞ்ஞானத்தினுல் தோன்றிய ஸர்வ விவகாரங்களும் நிவர்த்திக்கின்றது. ஸ்வப்னுவஸ்த்தையில் தன்னுடைய சிரஸ்வெட்டப்பட்டது போல் காண்கிருன். எழுந்தவுடன் இது உண்மையல்ல என்று அறிகிருன். அதுபோல் இந்த ப்ரபஞ்சம் மஹா விசித்ரமாகவும், ஆத்மஸ்வரூபத்திற்கு விபரீதஸ்வரூபமாகவும் அறியப்படுகிறது. ஆனுல் வித்வான்களுக்கு, நிர்விசேஷமான அத்வைத ஆத்மஸ்வரூபத்தில் இந்த ப்ரபஞ்சம் அஞ்ஞானத்தினுல் கூட தோன்ற முடியாது என்ற உண்மை அறியப்படுகின்றதால் அவர்களுக்கு ஆச்சர்யம் ஏதுமில்லை. ஆனுல் அஞ்ஞானிகளுக்கே அஞ்ஞானத்தினுல் இந்த ப்ரபஞ்சம் எப்படி தோன்ற முடியும் என்று ஆச்சர்யமாக இருக்கின்றது.

**224.** அவதாரிகை :

ஸர்வ ஜனங்களின் அனுபவத்திற்கு விருத்தமாக ஜகத் என்பது அநிர்வசனீயம்தான் என்று எப்படி ஒத்துக் கொள்ள முடியும்?

ச்லோகம் :

अभयं सनातनमनातुरधीरवलोकयन्निजमनन्तसुखम् ।
न मुनिः प्रपश्यति किमप्यसुखं सकलं जिघत्सति जगत्स्वचिता

ச்லோகார்த்தம் : தன் வசமாக இருக்கின்ற மனதை உடைய ஒரு முனியானவர், அபயமாகவும், நித்யமாகவும், அனந்த சுகமாகவும் இருக்கின்ற தன் ஸ்வரூபத்தை அறிந்து கொண்டு எந்த விதமான துக்கத்தையும் அனுபவிப்பதில்லை. தன்னுடைய ஆத்ம ஞானத்தினுல் இந்த உலகம் அனைத்தையும் விழுங்குகின்றுன்.

வ்யாக்யானம் : அவித்யா அவஸ்த்தையில், இந்த ப்ரபஞ்சதர்சனம் உண்மையென்றே தோன்றுகிறது. ஆனுல் விக்ஷேபமில்லாத விவேக புத்தியுடையவன் பரமாத்மஸ்வரூபமே அனந்த சுகம் என்றும், ஸம்ஸாரம் என்பது துக்க ரூபம் என்பதையும் அறிந்து அபரிச்சின்னமான ப்ரஹ்மஸ்வரூபமே தன் உண்மையான ப்ரத்யக் ஸ்வரூபம் என்பது அபரோக்ஷமாக அறியப்படுகின்றபோது, அந்த புருஷனுக்கு துக்க ரூபமான ஸம்ஸார அனுபவம் ஏற்படுவதில்லை. தன் ப்ரத்யக் ஸ்வரூபமே அபயம், ஸனுதனம், நிர்விகாரம் என்று நித்ய சுகஸ்வரூபமாக தன்னை அறிகின்றுன். அதன் பிறகு துக்கானுபவம் என்பது லேசமும் இருக்க முடியாது. ஆகவே அதிஷ்ட்டானஸ்வரூப ஞானம்

ஏற்படுகின்றபோது, ஸர்வஜகத்தும் அதிஷ்ட்டானத்தையன்றி வேருக இல்லையென்பதால் அநிர்வசனீயம் என்று வித்வான்களால் அறியப்படுகின்றதால் ஆரோபிதமான அசுகமான இந்த ஜகத்தின் அனுபவம் நிவர்த்திக்கின்றது. அதனுல் இந்த ப்ரபஞ்சம் அநித்யம் அநிர்வசனீயம் என்பதில் எவ்வித ஸந்தேகத்திற்கும் இடமில்லை.

**225.** அவதாரிகை :

ஆத்மஸ்வரூபத்திற்கு அன்யமாக இருக்கின்ற ஸர்வமும் அவித்யாகல்பிதம் என்று சொல்லப்படுமானுல், வித்வத் அனுபவம் எப்படி ஏற்படமுடியும்? சாஸ்திரம் ஆசார்யன், உபதேசம் என்ற சாதனங்கள் எல்லாமே அவித்யா கார்யம் என்று சொல்லப்படுவதால், அதனுல் ஸம்யக் ஞானம் எப்படி ஏற்படமுடியும்? ஆகவே ப்ராந்தி ஞானத்திற்கும் ஸம்யக் ஞானத்திற்கும் அவித்யையென்பதே காரணம் என்று சொல்லப்படுவது பொருந்தாது.

ச்லோகாஂ :

तव चित्तमात्मतमसा जनितं परिकल्पयत्यखिलमेव जगत् ।
तव कल्पनाविरचितः स गुरुस्तव रूपमद्वयमुदाहरति

ச்லோகார்த்தம் : ஆத்ம அஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட உன்னுடைய மனதானது இந்த உலகம் அனைத்தையும் கல்பிக்கின்றது. உன்னுடைய கல்பனையில் தோன்றுகின்ற அந்த குருவானவர் உன்னுடைய அபயஸ்வரூபத்தை தெரிவிக்கின்றுர்.

வ்யாக்யானம் : ஆத்மஸ்வரூபத்தில் ஆரோபிதமான அஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட உன்னுடையசித்தத்தினுலேயே ஸர்வ ஜகத்தும் கல்ப்பிக்கப்படுகிறது என்று சாஸ்த்ரம் என்ற ப்ரமாணம் தெரிவிக்கின்றது. அவித்யையினுல் பூர்வ பூர்வ ப்ரமத்தினுல் ஏற்பட்ட ஸம்ஸ்காரம் சித்தத்தில் இருக்கின்றது. சூக்ஷமமான இந்த ஸம்ஸ்காரமானது அவ்வப்போது ஏற்படும் ஜன்மாக்களில் அபிவ்யக்தமாகின்றபோது ஸம்ஸாரத்தை தோற்றுவிக்கின்றது. இவ்விதம் அவித்யையினுல் ஏற்பட்ட அவரவர்களின் சித்தஸம்ஸ்காரத்தை அனுசரித்து, தத்வ ஞானம் என்பதை பெறவேண்டுமென்ற இச்சையை உண்டு பண்ணி தத்வ ஞானத்திற்கு சாதனமான குரு முதலானவர்களையும் உண்டு பண்ணி அதன் மூலம் உபதேசாதிகளைப் பெற்று ஸ்வஸ்வரூப சாக்ஷாத்காரம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது. அதனுல் இதில் விரோதம் ஏதுமில்லை.

**226.** அவதாரிகை :

குரு சாஸ்திரம் உபதேசம் என்பதெல்லாம் சுக்தி ரஜதம் போல் மித்யை என்று சொல்லும் பக்ஷத்தில் அர்த்தக்ரியா கார்யத்வம் என்பதே ஸம்பவிக்கமுடியாது. அதனுல் குரு உபதேசம் முதலானவைகள் ஸத்யம் என்றே சொல்லவேண்டும்.

ச்லோகம் :

न हि चित्तदृश्यमपि सत्यमिति प्रतिपन्नमस्ति भुवि किंचिदपि ।
रशनाभुजङ्गसदृशं सकलं जगदिन्द्रजालमिति सिद्धमतः

ச்லோகார்த்தம் : இந்த உலகத்தில் சித்த த்ருச்சமாக இருக்கின்ற எந்த வஸ்துவும் ஸத்யம் என்று ஒத்துக்கொள்ளப்படுவதில்லை. ஆகையால் ரஜ்ஜு ஸர்ப்பத்திற்கு ஸமானமாக இருக்கின்ற இந்த உலகம் அனைத்தும் இந்த்ரஜாலம் என்பது சித்தம்.

வ்யாக்யானம் : சுத்தி ரஜதம் மித்யை என்பதற்கு, அர்த்தக்ரியா காரியாக இல்லாதது காரணம் என்று சொல்லப்படவில்லை. அதேபோல் அர்த்தக்ரியா கார்யத்வம் உள்ளதாக இருப்பவைகளெல்லாம் ஸத்யம் என்றும் சொல்லப்படவில்லை. அர்த்தக்ரியா கார்யத்வம் என்பது மித்யைக்கு காரணமில்லை. அர்த்தக்ரியா கார்யமாக இருப்பதெல்லாம் மித்யையாகத்தான் இருக்கவேண்டும். மித்யை என்று சொல்லப்படும் ஸ்வப்ன பதார்த்தங்கள் அர்த்தக்ரியா கார்யத்வம் உடையதாகவே இருக்கிறது. மித்யையான சுக்திரஜதம் என்பதும், அதில் இச்சையை உண்டு பண்ணி புருஷனை ப்ரவர்த்திக்கும் படிச் செய்கிறது. ரஜ்ஜுஸர்ப்பம் புருஷனுக்கு பயம் நடுக்கம் முதலானவைகளை உண்டு பண்ணி அவனை (ஓடச் செய்கிறது) நிவர்த்திக்கச் செய்கிறது. ஆகவே ரஜ்ஜு ஸர்ப்பம், சுக்தி ரஜதம், ஸ்வப்னம் முதலானவைகள் எப்படி சித்தத்ருச்யமோ, (சித்தத்தினல் அறியப்படுகிறதோ) அதுபோல் ஜகத் என்பதும் சித்தத்ருச்யம்தான். எவையெல்லாம் சித்தத்ருச்யமோ அவையெல்லாமே மித்யைதான் அதனுல், "இந்த ஜகத் என்பது மித்யை என்றே சித்திக்கின்றது, த்ருச்யத்வாத், ரஸனுபுஜங்கவத், பாத்யத்வநியமாத்" என்று அனுமானத்தினுல் சித்திக்கின்றது. அதனுல் கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளிபோல் ஜகத் என்பது மித்யையென்றே சொல்லவேண்டும்.

பூர்வ : கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி என்பது உடனே பாதிக்கப்படுகிறது. அதேபோல் ஸ்வப்பனத்திலிருந்து விழித்தவுடன் ஸ்வப்ன ப்ரபஞ்சம் பாதிக்கப்படுகிறது. அதுபோல் ஜாக்ரத் ப்ரபஞ்சம் பாதிக்கப்படவில்லையே? அதனுல் மித்யை என்று எப்படிச் சொல்ல முடியும்?

சித்தா : ஸ்வப்ன ப்ரபஞ்சம் என்பதும், (ஜாக்ரத்) நித்ரையிலிருந்து விழிப்பு ஏற்படும் பர்யந்தம் பாதிக்கப்படுவதில்லை. ஆனுல் ஸ்வப்னகாலத்தில் ஜாக்ரத் ப்ரபஞ்சம் இல்லை. ஜாக்ரத் காலத்தில் ஸ்வப்ன ப்ரபஞ்சம் இல்லை. சுஷுப்தி நிலையில் ஜாக்ரத் ஸ்வப்னம் என்ற இரண்டு ப்ரபஞ்சங்களும் இல்லை. ஆகவே சித்த கல்பிதமான ஸர்வமும் அவித்யா கல்பிதம், மித்யை என்றே சொல்ல வேண்டும். இதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை.

**227.** அவதாரிகை :

ஸர்வம் அவித்யா கல்பிதம் என்று சொல்லப்படுமானுல் அவ்விதம் கல்பிக்கப்பட்ட குரு, ஸ்தாணுவில் கல்பிக்கப்பட்ட புருஷன் போல் மித்யை என்றே சொல்லவேண்டும். அதனுல், எப்படி ஸ்தாணுவில் கல்ப்பிக்கப்படும் புருஷன் உபதேசிக்க முடியும்?

ஏற்படுகின்றபோது, ஸர்வஜகத்தும் அதிஷ்ட்டானத்தையன்றி வேருக இல்லையென்பதால் அநிர்வசனீயம் என்று வித்வான்களால் அறியப்படுகின்றதால் ஆரோபிதமான அசுகமான இந்த ஜகத்தின் அனுபவம் நிவர்த்திக்கின்றது. அதனுல் இந்த ப்ரபஞ்சம் அநித்யம் அநிர்வசனீயம் என்பதில் எவ்வித ஸந்தேகத்திற்கும் இடமில்லை.

**225.** அவதாரிகை :

ஆத்மஸ்வரூபத்திற்கு அன்யமாக இருக்கின்ற ஸர்வமும் அவித்யாகல்பிதம் என்று சொல்லப்படுமானுல், வித்வத் அனுபவம் எப்படி ஏற்படமுடியும்? சாஸ்திரம் ஆசார்யன், உபதேசம் என்ற சாதனங்கள் எல்லாமே அவித்யா கார்யம் என்று சொல்லப்படுவதால், அதனுல் ஸம்யக் ஞானம் எப்படி ஏற்படமுடியும்? ஆகவே ப்ராந்தி ஞானத்திற்கும் ஸம்யக் ஞானத்திற்கும் அவித்யையென்பதே காரணம் என்று சொல்லப்படுவது பொருந்தாது.

ச்லோகாம் :

तव चित्तमात्मतमसा जनितं परिकल्पयत्यखिलमेव जगत् ।
तव कल्पनाविरचित: स गुरुस्तव रूपमद्वयमुदाहरति

ச்லோகார்த்தம் : ஆத்ம அஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட உன்னுடைய மனதானது இந்த உலகம் அனைத்தையும் கல்பிக்கின்றது. உன்னுடைய கல்பனையில் தோன்றுகின்ற அந்த குருவானவர் உன்னுடைய அபயஸ்வரூபத்தை தெரிவிக்கின்ருர்.

வ்யாக்யானம் : ஆத்மஸ்வரூபத்தில் ஆரோபிதமான அஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட உன்னுடையசித்தத்தினுலேயே ஸர்வ ஜகத்தும் கல்ப்பிக்கப்படுகிறது என்று சாஸ்த்ரம் என்ற ப்ரமாணம் தெரிவிக்கின்றது. அவித்யையினுல் பூர்வ பூர்வ ப்ரமத்தினுல் ஏற்பட்ட ஸம்ஸ்காரம் சித்தத்தில் இருக்கின்றது. சூக்ஷ்மமான இந்த ஸம்ஸ்காரமானது அவ்வப்போது ஏற்படும் ஜன்மாக்களில் அபிவ்யக்தமாகின்றபோது ஸம்ஸாரத்தை தோற்றுவிக்கின்றது. இவ்விதம் அவித்யையினுல் ஏற்பட்ட அவரவர்களின் சித்தஸம்ஸ்காரத்தை அனுசரித்து, தத்வ ஞானம் என்பதை பெறவேண்டுமென்ற இச்சையை உண்டு பண்ணி தத்வ ஞானத்திற்கு சாதனமான குரு முதலானவர்களையும் உண்டு பண்ணி அதன் மூலம் உபதேசாதிகளைப் பெற்று ஸ்வஸ்வரூப சாக்ஷாத்காரம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது. அதனுல் இதில் விரோதம் ஏதுமில்லை.

**226.** அவதாரிகை :

குரு சாஸ்திரம் உபதேசம் என்பதெல்லாம் சுக்தி ரஜதம் போல் மித்யை என்று சொல்லும் பக்ஷத்தில் அர்த்தக்ரியா கார்யத்வம் என்பதே ஸம்பவிக்கமுடியாது. அதனுல் குரு உபதேசம் முதலானவைகள் ஸத்யம் என்றே சொல்லவேண்டும்.

ச்லோகம் :

न हि चित्तदृश्यमपि सत्यमिति प्रतिपन्नमस्ति भुवि किंचिदपि ।
रशनाभुजङ्गसदृशं सकलं जगदिन्द्रजालमिति सिद्धमतः

ச்லோகார்த்தம் : இந்த உலகத்தில் சித்த த்ருச்சமாக இருக்கின்ற எந்த வஸ்துவும் ஸத்யம் என்று ஒத்துக்கொள்ளப்படுவதில்லை. ஆகையால் ரஜ்ஜு ஸர்ப்பத்திற்கு ஸமானமாக இருக்கின்ற இந்த உலகம் அனைத்தும் இந்த்ரஜாலம் என்பது சித்தம்.

வ்யாக்யானம் : சுத்தி ரஜதம் மித்யை என்பதற்கு, அர்த்தக்ரியா காரியாக இல்லாதது காரணம் என்று சொல்லப்படவில்லை. அதேபோல் அர்த்தக்ரியா கார்யத்வம் உள்ளதாக இருப்பவைகளெல்லாம் ஸத்யம் என்றும் சொல்லப்படவில்லை. அர்த்தக்ரியா கார்யத்வம் என்பது மித்யைக்கு காரணமில்லை. அர்த்தக்ரியா கார்யமாக இருப்பதெல்லாம் மித்யையாகத்தான் இருக்கவேண்டும். மித்யை என்று சொல்லப்படும் ஸ்வப்ன பதார்த்தங்கள் அர்த்தக்ரியா கார்யத்வம் உடையதாகவே இருக்கிறது. மித்யையான சுக்திரஜதம் என்பதும், அதில் இச்சையை உண்டு பண்ணி புருஷனை ப்ரவர்த்திக்கும் படிச் செய்கிறது. ரஜ்ஜுஸர்ப்பம் புருஷனுக்கு பயம் நடுக்கம் முதலானவைகளை உண்டு பண்ணி அவனை (ஓடச் செய்கிறது) நிவர்த்திக்கச் செய்கிறது. ஆகவே ரஜ்ஜு ஸர்ப்பம், சுக்தி ரஜதம், ஸ்வப்னம் முதலானவைகள் எப்படி சித்தத்ருச்யமோ, (சித்தத்தினுல் அறியப்படுகிறதோ) அதுபோல் ஜகத் என்பதும் சித்தத்ருச்யம்தான். எவையெல்லாம் சித்தத்ருச்யமோ அவையெல்லாமே மித்யைதான் அதனுல், "இந்த ஜகத் என்பது மித்யை என்றே சித்திக்கின்றது, த்ருச்யத்வாத், ரஸனுபுஜங்கவத், பாத்யத்வநியமாத்" என்று அனுமானத்தினுல் சித்திக்கின்றது. அதனுல் கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளிபோல் ஜகத் என்பது மித்யையென்றே சொல்லவேண்டும்.

பூர்வ : கிளிஞ்சலில் தோன்றும் வெள்ளி என்பது உடனே பாதிக்கப்படுகிறது. அதேபோல் ஸ்வப்பனத்திலிருந்து விழித்தவுடன் ஸ்வப்ன ப்ரபஞ்சம் பாதிக்கப்படுகிறது. அதுபோல் ஜாக்ரத் ப்ரபஞ்சம் பாதிக்கப்படவில்லையே ? அதனுல் மித்யை என்று எப்படிச் சொல்ல முடியும் ?

சித்தா : ஸ்வப்ன ப்ரபஞ்சம் என்பதும், (ஜாக்ரத்) நித்ரையிலிருந்து விழிப்பு ஏற்படும் பர்யந்தம் பாதிக்கப்படுவதில்லை. ஆனுல் ஸ்வப்னகாலத்தில் ஜாக்ரத் ப்ரபஞ்சம் இல்லை. ஜாக்ரத் காலத்தில் ஸ்வப்ன ப்ரபஞ்சம் இல்லை. சுஷுப்தி நிலையில் ஜாக்ரத் ஸ்வப்னம் என்ற இரண்டு ப்ரபஞ்சங்களும் இல்லை. ஆகவே சித்த கல்பிதமான ஸர்வமும் அவித்யா கல்பிதம், மித்யை என்றே சொல்ல வேண்டும். இதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை.

**227. அவதாரிகை :**

ஸர்வம் அவித்யா கல்பிதம் என்று சொல்லப்படுமானுல் அவ்விதம் கல்பிக்கப்பட்ட குரு, ஸ்தாணுவில் கல்பிக்கப்பட்ட புருஷன் போல் மித்யை என்றே சொல்லவேண்டும். அதனுல், எப்படி ஸ்தாணுவில் கல்ப்பிக்கப்படும் புருஷன் உபதேசிக்க முடியும் ?

ச்லோகம் :

परिकल्पितोऽपि सकलज्ञतया गुरुरेव पूर्णमवबोधयति ।
परिकल्पितोऽपि मरणाय भवेदुरगो यथा नतु नभो मलिनम्

ச்லோகார்த்தம் : கல்பிதமாக இருந்தபோதிலும், ஸர்வஞ்ஞனுக இருக்கின்றதால் குரு என்பவரே பூர்ண வஸ்துவை தெரிவிக்கின்ருர். ரஜ்ஜு ஸர்ப்பம் என்பது கல்பிதம்தான் என்ருலும், அதுவே மரணத்திற்கு காரணமாக இருக்கிறது, அதேபோல் ஆகாச மலம் என்பதும் கல்பிதமாக இருந்தபோதிலும் அது மரணத்திற்கு காரணம் ஆகிறதில்லை.

வ்யாக்யானம் : ஸர்வமும் அவித்யா கல்பிதம்தான் என்பதில் ஸந்தேஹத்திற்கே இடமில்லை. இவ்விதம் கல்ப்பிதமான வஸ்துக்களில் வித்யாஸம் இருக்கின்றது. ஸ்தாணு புருஷன் என்பது ப்ராதி பாஸிகம், குரு சாஸ்திரம் உபதேசம் முதலான கல்ப்பனை வ்யாவகாரிகம் என்ற வித்யாஸம் இருக்கின்றது. இவ்விதம் வ்யாவகாரிக ஸத்யத்வமுடைய குரு, சிஷ்யன் முதலானவர்களின் சரீரம் அந்த:கரண அவச் சின்ன சைதன்யத்துடன் கூடியதாக இருக்கின்றது. அதனுல் சேதன ஸ்வரூபமான ஜீவன் என்றம் மற்றுமுள்ள கடபடாதி போன்ற ஜடவஸ்துக்களை அசேதனம் என்றும் விவகாரம் செய்யப்படுகிறது. கடபடாதி ஜடவஸ்துக்கள் சேதனனுன ஜீவனுல் அறியப்படுகிறது. அதுபோல் கடபடாதிகள், தன்னையோ, தனக்கு வேருன வஸ்துகளையோ அறியக் கூடிய தன்மையில் இல்லை. இந்த விதம் கல்ப்பிதமான ப்ரபஞ்சத்தில் உள்ள வஸ்துக்களில், சில வஸ்துக்கள் ஸர்வத்தையும் அறியக் கூடிய தன்மை உடையதாகவும் (ஸாமர்த்யம் உடையதாக) சிலவற்றிர்க்கு அவ்வித ஸாமர்த்யம் இல்லாததாகவும் கல்ப்பிக்கப்படலாம். சிலவற்றில் ப்ரமாத்ருத்வ விவகாரம் இருக்கலாம். சிலவற்றில் ப்ரமாத்ருத்வ விவகாரம் இல்லாமல் இருக்கலாம். இதில் அஸம்பாவிதம் ஏதுமில்லை. உதாரணமாக கயிற்றில் தோன்றும் ஸர்ப்பம் என்பது கல்ப்பிதமென்ருலும், அதை உண்மையான ஸர்ப்பம் என்று நினைத்து ஏற்படும் பயத்தினுல் அந்த புருஷன் மரணத்தை அடைகிருன் என்று அறிகிறோம். அதேபோல் ஆகாசம் நீலம் என்று தோன்றுவதும் கல்ப்பிதம்தான். ஆனுல் அதைக்கண்டு பயத்தினுல்மரணம் ஏற்படுவதில்லை. இந்த விதம் இரண்டும் கல்பிதமே என்ருலும் ஒன்று உண்மையான பலனை கொடுக்கின்றது. மற்ருென்று அவ்விதம் பலனைக் கொடுப்பதில்லை. இவ்விதம் ஸர்வமும் கல்ப்பிதம்தான் ஸ்தாணு புருஷனும் கல்ப்பிதம்தான், குரு என்பவரும் கல்ப்பிதம்தான் ஆனுல் குரு என்று கல்ப்பிக்கின்றவரிடம் தான் உபதேசம் செய்யக் கூடிய ஸாமர்த்யம் இருக்கிறது. இதேபோல் ஸர்வஞ்ஞத்வம் என்பதும் கல்ப்பிக்கப்பட்ட ஸர்வத்திலும் இருப்பதாகச் சொல்லப்படவில்லை. கல்ப்பிக்கின்றபோதே சிலர் ஸர்வஞ்ஞரென்றும் சிலர் அல்ப்பஞ்ஞர் என்றும் கல்ப்பிக்கப்படுகிறது. ஸர்வஞ்ஞத்வ முள்ளவர் குருவாக இருந்து சிஷ்யனுக்கு உபதேசிப்பதாகச் சொல்லாம். ஆகையால் ஸர்வமும் ஆத்ம ஸ்வரூபத்தில் கல்ப்பிதம் என்று சொல்லப்பட்ட போதிலும், சிலவற்றில் ப்ரமாத்ராதி விவகாரங்கள் உள்ள சேதனனுகவும், சிலவஸ்துக்கள் அசேதனமாகவும் கல்ப்பிக்கப்படுவதால் அசேதனமான ஸ்தாணுவில் தோன்றும் புருஷன் உபதேசிக்கலாமே என்ற ஆக்ஷேபம் சரியல்ல.

**228.** அவதாரிகை :

குரு, சாஸ்திரம் என்பவகைள் எல்லாமே அவித்யா கல்ப்பிதம்தான் என்று சொல்லப்படுமானுல் ஸர்வமும் ஸத்விலக்ஷணம் என்றே சொல்லப்பட்டதாக ஆகிறது. அப்படியானுல் ஸத்விலக்ஷணமான குரு உபதேசாதிகளுக்கு காரணம் என்று எப்படிச் சொல்வது? இருக்கின்ற குரு என்பவரால் தானே உபதேசம் செய்யமுடியும்? இந்த ஆக்ஷேபத்திற்கு ஸத்வம் என்ற தன்மை ஒன்றே உபதேசத்திற்கு காரணமா? அல்லது உபதேசத்தை செய்யக் கூடிய ஸாமர்த்யமும் இருக்கவேண்டுமா? என்று விகல்பம் செய்து, முதல் விகல்பத்திற்கு பதில் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

यदि सत्यमित्यवगतिं कुरुते घटते घटादपि हुताशनधीः ।
यदि चानृतं न जनयेत्प्रमितिं ननु चोदनाऽपि जनयेन्न धियम्

ச்லோகார்த்தம் : ஸத்யம் என்பதற்காக மட்டும் ஞானத்தை உண்டு பண்ணுகிறது என்று சொல்லப்படுமானுல், ஸத்யமான படத்திலிருந்து (வஸ்திரத்திலிருந்து) அக்னி ஞானம் ஏற்படக் கூடும். ஆகவே அஸத்யமாக இருப்பதால் குரு, ஞானத்தை உண்டு பண்ண முடியாது என்று சொல்லப்படுமானுல் வேத விதியும் ஞானத்தை உண்டு பண்ணமுடியாது.

வ்யாக்யானம் : ஸத்யமாக இருந்தால்தான் ஸத்யார்த்த போதத்தை உண்டு பண்ணும் என்று சொல்லும் பக்ஷத்தில் தூமத்தைக் கொண்டு எப்படி வன்னி அனுமானிக்கப்படுகிறதோ அதுபோல் கடம் என்பதைக் கொண்டும் வன்னியை அனுமானிக்கலாம் என்று சொல்ல நேரிடும். ஆகையால் ஒரு வஸ்து, வேறெருவஸ்துவை அறிவிக்க வேண்டுமானுல் அந்த வஸ்து ஸத்தாக இருக்க வேண்டுமென்பது நியமமா? அல்லது அந்த வஸ்துவை அறிவிக்கக் கூடிய ஸாமர்த்ய சக்தி இருக்க வேண்டுமென்பது நியமமா என்று விசாரிக்க வேண்டும். வன்னி என்பதை போதிக்கக் கூடிய வ்யாப்தி தூமத்தில் இருப்பதே வன்னி போதம் ஏற்பட காரணம் என்றே சொல்லவேண்டும். தூமம் ஸத் என்பதால் மட்டும் வன்னிபோதத்திற்கு காரணமாகாது. ஆகவே, மித்யா பூதவஸ்துவாக இருந்த போதிலும், வஸ்துவை போதிக்கக் கூடிய ஸாமர்த்ய சக்தி இருக்குமானுல் வஸ்து போதத்தை உண்டு பண்ண முடியும். அதனுல் ஸத்யம், மித்யை என்பது (ஞானம் என்பதை உண்டு பண்ண காரணமாகாது) ஞானம் ஏற்பட காரணமாக ஆகாது.

**229.** அவதாரிகை :

இதே விஷயம் வேறெருத்ருஷ்டாந்தம் மூலம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

जनयत्यसाविह मृषावपुषा करणीयवस्तुनि मतिं सुदृढाम् ।
ध्वनिधर्मभेदघटितोऽपि मृषा स्वरसेन सन्नपि तु वर्णगणः

**ச்லோகார்த்தம் :** வேத விதியானது அஸத்யரூபமாக இருந்து கொண்டே அனுஷ்ட்டிக்க வேண்டிய விஷயத்தில் த்ருடஞானத்தை ஏற்படுத்துகின்றது. வர்ணஸமூகங்களானது ஸ்வரூபமாகவே ஸத்யமாக இருந்த போதிலும் த்வனிவிசிஷ்ட்டமாக இருக்கின்றபோது அஸத்யமேயாகும்.

**வ்யாக்யானம் :** லோகம், வேதம் இரண்டிலும் அக்ஷரங்கள் ப்ரயோகம் செய்யப்படுகிறது. வேதங்களில் உள்ள அக்ஷரம் ஸத்யமாக (நித்யம்) இருந்தபோதிலும் அந்த அக்ஷரங்கள் முறைப்படி க்ரமமாக அமைந்திருந்தால்தான் அர்த்தபோதகமாகும். (வனம்-நவம்) (இவ்விதம் முறைப்படி அமைப்பதற்கு ஆனுபூர்வி என்று பெயர்) குறிப்பிட்ட முறைப்படி வர்ணம், ஸ்வரம், மாத்ரை என்பதெல்லாம் சொல்லப்படவேண்டும். ஸ்வரம், மாத்ரை என்று சொல்லப்படுவதெல்லாம் த்வனிதர்மம் (வர்ணதர்மமல்ல) ஹ்ரஸ்வம், தீர்க்கம், என்ற த்வனிதர்மத்தை வர்ணத்தில் ஏற்றி சொல்லப்படுவதால், வர்ணம் என்பது மித்யை என்ருகிறது. மித்யா பூதமான வேதத்தில் இருந்தே யஞ்ஞாதி கர்மாக்களும் ஸ்வர்க்காதி பலன்களும் போதிக்கப்படுகிறது. இவ்விதம் வேதம் என்பது மித்யை என்ருலும் அதனுல் வஸ்துபோதம் ஏற்படுகிறது. அதேபோல் குரு என்பவர் மித்யையாக இருந்தபோதிலும், தத்வத்தை போதிக்கக் கூடிய ஸாமர்த்யம் இருக்கின்றதால் ஸத்யமான வஸ்து போதம் ஏற்படுகிறது என்றே சொல்லவேண்டும். அதனுல் குரு ஸத்யமா? மித்யையா? என்ற சர்ச்சைக்கே இடமில்லை.

பூர்வ : ஸ்வரம் முதலானவைகள் த்வனிதர்மம் என்றும் அவைகளை அக்ஷரத்தில் ஏற்றி சொல்லப்படுவதால் அவைகள் மித்யை என்றும் ஏன் சொல்லவேண்டும்? அக்ஷரம் முதலானவைகளிலேயே அந்த தர்மம் இருப்பதாகச் சொல்லலாமே?

சித்தா : அக்ஷரங்களின் கூட்டமே சோதனை (வேதம்) என்று சொல்லப்படுகிறது. ஸ்வரூபேண அக்ஷரங்கள் ஸத் என்று சொல்லப்பட்ட போதிலும் வாக்கினுல் உச்சரிக்கப்படுகின்றபோது வாயுவினுல் ஏற்படும் த்வனி என்ற தர்மங்கள் உதாத்தம், அனுதாத்தம் என்பது முதலான ஸ்வரங்கள் எல்லாம் அக்ஷரத்தின் அமைப்பின் க்ரமத்துடன் சேர்ந்தே அதன் அர்த்த போதத்தை உண்டு பண்ண முடியும். அதனுல் அக்ஷராதிகளில் அந்த தர்மம் இருப்பதாகச் சொல்லமுடியாது.

பூர்வ : வேதம் ஸத்யம் என்றே சொல்லவேண்டும். ஏனெனில் வர்ணங்கள் நித்யமென்றும் விபு என்றும் சொல்லப்படுகின்றதால் வேதம் என்பதும்மித்யை என்று எப்படிச் சொல்வது?

சித்தா : வர்ணஸமூகம் என்பது ஸ்வரூபத:ஸத்தாக இருந்தபோதிலும் வாயுவைச் சேர்ந்த த்வனியின் தர்மந்தான் உதாத்தம் அனுதாத்தம் முதலான ஸ்வர பேதங்களுடன் கூடியதாக இருக்கின்றது. அதனுல்தான் அதைத் மித்யை என்று சொல்லப்படுகிறது. வேதம் என்பதில் உள்ள ஸ்வரங்கள்தான் அர்த்தத்தை போதிக்கின்ற ஸாமர்த்யமுடையதாக இருக்கின்றது. ஸ்வராதிகள் உண்மையில் அக்ஷரத்தில் (வர்ணத்தில்) கிடையாது. 'அ' என்ற அக்ஷரத்தில் ஹ்ரஸ்வம்தான் இருக்கிறது தீர்க்கம் இல்லை. ஆ என்று ப்ரயோகிக்கின்றபோது தீர்க்கம்தான் இருக்கின்றது ஹ்ரஸ்வமில்லை. அதனுல் அக்ஷரம் வ்யபிசரிதம் (தொடர்ந்து இருப்பதில்லை) ஆகவே ஆரோபிதமான அக்ஷரங்கள் நித்யம் என்று சொல்லமுடியாது. த்வனிதர்மங்களைக்கொண்டே அக்ஷரங்கள் அர்த்த போதத்தை

உண்டு பண்ணுகின்றதால் சோதனு (வேதம்) என்பது ம்ருஷா என்றே சொல்லப்படுகிறது. ஆகவே உண்மையில், அக்ஷரத்தில் இந்த தர்மங்கள் கிடையாது என்று அறியவேண்டும்.

**230.** அவதாரிகை :

ஸ்வரம், க்ரமம் என்பவைகள் இல்லாமலேயே வர்ண ஸமூகமே (சப்தமே) அர்த்தத்தை தெரிவிக்கலாமே ? ஸ்வரம் க்ரமம் இவைகளுடன்கூடியவர்ண ஸமூகம்தான் அர்த்த ஞானத்தை உண்டு பண்ணுகின்றது ஏன் சொல்லவேண்டும் ?

ச்லோகம் :

मन्त्रो हीनः स्वरतो वर्णतो वा मिथ्याप्रयुक्तो न तमर्थमाह ।
स वाग्वज्रो यजमानं हिनस्ति यथेन्द्रशत्रुः स्वरतोऽपराधात्

ச்லோகார்த்தம் : ஸ்வரங்களும் அக்ஷரங்களும் சரியாக இல்லாமல் தவருக உச்சரிக்கப்படுகின்றபோது மந்த்ரங்கள் அதனுடைய அர்த்தத்தை வெளிப்படுத்துவதில்லை. அந்த சப்தரூபமான வஜ்ராயுதமானது யஜமானனை நாசம் செய்கின்றது. எவ்விதம் இந்த ரசத்ரு என்ற பதமானது ஸ்வர தோஷத்தினுல் நாசத்தை உண்டு பண்ணிற்ருே அதுபோலாகும்.

வ்யாக்யானம் : மந்த்ரங்கள்அந்தந்தக்ரமத்தில் இருக்க வேண்டும். ஸ்வரம் என்பதும் அதற்கு தக்கவாறு இருக்க வேண்டும். அவ்விதமின்றி எந்த இடத்தில் எந்த ஸ்வரத்தை ப்ரயோகிக்க வேண்டுமோ அவ்விதம் செய்யாமல் மாற்றி ப்ரயோகம் செய்யப்படுமானுல் அந்த மந்த்ரங்களுக்கு வேண்டிய அர்த்தம் கிடைக்காது. இஷ்டமான அர்த்தம் கிடைக்காது என்பது மட்டுமல்ல, அனிஷ்டமான அர்த்தமே கிடைக்கும். ஆகவே இந்த விஷயத்தில் நமது சித்தாந்மே சரி என்பதற்கு ப்ரமாணமாக வேதவாக்யங்களுக்கு வ்யாகரணம் செய்கின்ற நிருக்தம் முதலான க்ரந்தங்களை செய்த பெரியோர்களாலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது என்பதை ப்ரமாணமாக தெரிவிக்கப்படுகிறது.

அதாவது மந்த்ரங்கள்க்ரமத்துடனும் ஸ்வரத்துடனம் ப்ரயோகம் செய்யப்படவில்லை என்ருல், இஷ்டமான அர்த்தம் கிடைக்காது என்பது மட்டுமல்ல, மாறுபட்ட முறையில் உச்சரிக்கப்படுமானுல் வாக் என்பது வஜ்ராயுதமாக ஆகிறது. அதனுல் எஜமானனுக்கு அநிஷ்டம் ஏற்படும் என்றும் தெரிவிக்கின்றது. இந்த விஷயம் ஒரு உதாகரணத்தின் மூலம் சாஸ்திரங்களில் சொல்லப்படுகிறது.

அதாவது, ஒரு ஸமயம் இந்த்ரனுடைய குருவானவர் அவசர கார்யமாக வேருரிடம் செல்ல வேண்டி இருந்தது. அதனுல் அவருக்கு பதிலாக த்வஷ்டா என்ற தேவதச்சனின் புத்ரன் விச்வரூபன் என்பவனை இந்த்ரனுக்கு குருவாக நியமிக்கப்பட்டிருந்தது. விச்வரூபன் அசுர குலத்தைச் சேர்ந்தவன். இந்த ஸந்தர்ப்பத்தில் இந்த்ரனுடைய நலனை உத்தேசித்து ஏதோ ஒரு கர்மாவை செய்கின்றபோது விச்வரூபன் அறியாமையினுல் மந்த்ரத்தை தவருக உச்சாடணம் செய்தான். இதை அறிந்த இந்திரன், அவன் அறியாமல் செய்திருக்கிருன் என்பதை அறியாமல்,

வேண்டுமென்றே தனக்கு விரோதமாக மந்த்ர உச்சாடணம் செய்கிறுன் என்று நினைத்து அவனை கொன்றுவிட்டான். இதை அறிந்த விச்வரூபனின் பிதாவிற்கு கோபம் ஏற்பட்டது. அதனுல் இந்திரனை கொல்லக் கூடிய புத்ரன் தனக்கு வேண்டுமென்று ஸங்கல்பம் செய்து புத்ரகாமேஷ்டியாகம் செய்தான். இவ்விதம் த்வஷ்ட்டாவானவன் இந்திரனை கொல்லக்கூடிய புத்ரனை வேண்டி அபிசாரகர்மாவைச் செய்கின்றபோது இந்த்ர சத்ரு; என்று தத்புருஷஸ்வரம் ப்ரயோகம் செய்வதற்கு பதிலாக, தவருக கவனக்குறைவினுல் பஹுவ்ரீஸமாஸத்தில் ஸ்வரப்ரயோகம் செய்யப்பட்டது. அதாவது இந்திரசத்ரு என்று உச்சரிக்கின்ற போது, முதலில் இருக்கின்ற 'இ' என்ற அக்ஷரம் உதாத்தமாக (ஆதிஉதாத்தம்) இருக்கவேண்டும். இவ்விதம் தத்புருஷஸமாஸத்தில் ஸ்வரம் ப்ரயோகம் செய்வதற்கு பதில் தவருக இந்த்ரசத்ரு; என்பதிலுள்ள கடைசீ அக்ஷரமான 'ரு'வில் இருக்கின்ற 'உ' என்ற 'அந்த உதாத்தமான' பஹுவ்ருஹிஸ்வரம் ப்ரயோகம் செய்யப்பட்டது. இந்த்ரசத்ரு; என்று தத்புருஷஸ்வரம் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்குமாஞல் இந்திரனை தனக்கு சத்ருவாகக் கொண்டவன் என்ற அர்த்தம் கிடைத்திருக்கும். அவ்விதமின்றி 'இந்திர: சத்ரு: யஸ்ய' என்று பஹுவ்ருஹி ஸமாஸத்தில் ப்ரயோகம் செய்யப்பட்டால் எவனுக்கு இந்திரன் சத்ருவோ' என்ற அர்த்தத்தில் ஸ்வரப்ரயோகம் செய்யப்பட்டதால் இந்த்ரனே அந்த புத்ரனுக்கு சத்ருவாக ஏற்பட்டு அவனைக் கொன்றுவிட்டான். இந்த உதாகரணத்திலிருந்து ஸ்வரம்தான் அர்த்த போதத்தை உண்டு பண்ணுகிறது என்றும், அதேபோல் அக்ஷரம் என்பது க்ரமமாக இருக்கவேண்டுமென்பதும் அறியப்படவேண்டும்.

'ராஜா' என்ற பதத்தில் உள்ள அக்ஷரத்தை ப்ரயோகம் செய்கின்றபோது அரசன் என்ற அர்த்தம் கிடைக்கின்றது. அதே இரண்டு அக்ஷரக்ரமத்தையும் மாற்றி 'ஜாரா' என்று ப்ரயோகம் செய்யப்படுமாஞல் விபசாரி என்ற அர்த்தம் கிடைக்கும். அதனுல் ஸ்வரம், அக்ஷரம், என்பவைகள் முறைப்படி ப்ரயோகம் செய்யப்படவில்லையென்ருல் விபரீதமான அர்த்தம்தான் கிடைக்கும் என்று வேத வேதாந்த வாக்யங்களுக்கு வ்யாக்யமானமாக நிருக்தம் வ்யாகரணம் என்பவகைளை இயற்றிய க்ரந்தக் காரர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் தெரிவிக்கப்பட்ட விஷயங்கள்நமது சித்தாந்தமே சரி என்பதற்கு ப்ரமாணமாக ஆகின்றது.

**231.** அவதாரிகை :

எந்த ஸ்வரம் ப்ரதானம் என்று சொல்லப்படுகிறதோ அந்த ஸ்வரத்திற்குரிய த்வனி என்பதே அர்த்த போதகம் என்றும் சப்தம் என்ற அக்ஷரம் அர்த்த போதகமில்லை என்று சொல்லலாமே? என்ருல்,

**ச்லோகம் :**

न च वर्णपूगमपहाय भवेदिह चोदनेत्यभिमतं विदुषाम् ।

यदि सत्यमेव गमकं भवति स्फुटमप्रमाणमियमप्युदिता

**ச்லோகார்த்தம் :** வர்ணஸமூகத்திலிருந்து வேருனவேதவிதி என்பது மீமாம்ஸகர்களால் ஒத்துக் கொள்ளப்படுவதில்லை. ஸத்யவஸ்துவே ப்ரமாணம் என்று சொல்லப்படுமாஞல் வேத விதியென்பதும் அப்ரமாணம் என்று ஸ்பஷ்ட்டமாக சொல்லப்பட்டதாக ஆகும்.

வ்யாக்யானம் : உதாத்தம் முதலானவை த்வனியின் தர்மமாக இருந்த போதிலும், அதையே சோதனை (வேதம்) என்று சொல்லலாமே என்று சொல்வது சரியல்ல. சப்தங்கள் என்ற வர்ணங்கள் (அக்ஷாரங்கள்) இல்லாமல் ஸ்வரங்கள் என்பது த்வனியினுல் உச்சரிக்கமுடியாது. வேதம் (சோதனை) என்பது அந்ருதமாக இருந்து அதன் அர்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுவதற்காக ஸ்வரங்களே அர்த்தபோதகம் என்று சொல்வது சரியல்ல என்று மீமாம் ஸகர்களாலும் சொல்லப்படுகிறது. ஆகவே வாக்யங்களே சோதனை என்று சொல்லப்படுகிறது. அதையன்றி வேருனத்வனியை சோதனை என்பது ஸத்யமில்லை (மித்யை) என்று சொல்லப்படுகிறது என்பதற்காக அதன் அர்த்தத்தை போதிக்கவில்லை என்று சொல்லமுடியாது. அதன் அர்த்தத்தை போதிக்கவில்லையென்று சொல்லப்படுமானுல் சப்தம் ப்ரமாணமென்றே சொல்லமுடியாது.

**232.** அவதாரிகை :

மீமாம்ஸகர்கள் சொல்வதுபோல் வர்ணங்கள் அநித்யம்தான் நித்யமில்லை. இந்த வர்ணங்களின் வ்யக்தி அனந்தம். அந்த வர்ணங்களின் தர்மம்தான் உதாத்தம் முதலானஸ்வரங்கள். அதனுடைய க்ரமத்துடன் கூடியதுதான் வர்ணம். அதனுல் ஸ்வரம், க்ரமம், இவைகளுடன் கூடி வர்ணம் தன் அர்த்தத்தை போதிக்கின்றது என்பதால் அது ஸத்யமென்றே சொல்லலாம். ஆகையால் உங்களால் சொல்லப்பட்ட த்ருஷ்டாந்தம் ஒத்துக்கொள்ளத் தக்கது அல்ல என்று வைசேஷிகர்கள் ஆக்ஷேபிக்கின்ருர்கள். அதற்காக இந்த விஷயம் பற்றி மேலும் விளக்குவதற்காக மற்ரெரு த்ருஷ்ட்டாந்தம் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

श्रवणेन्द्रियं च किल कर्णगतं परिकल्पनोपरचितं नभसः ।
वलयं प्रकाशयति शब्दगणं परमार्थमित्यपि कणादमतम्

ச்லோகார்த்தம் : கர்ண கோளகத்தில் அவச்சின்னமான ஆகாச வளையமே ச்ரவணேந்த்ரியம் என்று கல்பிக்கப்படுகிறது. இந்தகல்பிதமான ச்ரவணேந்த்ரியம் என்பது ஸத்யமான சப்தஸமூகத்தை ப்ரகாசம் செய்கின்றது என்று கணுத மதத்தினரால் சொல்லப்படுகிறது.

வ்யாக்யானம் : வர்ணங்கள் உற்பத்தி உடையதால் நித்யமில்லை. உதாத்தம் முதலான ஸ்வரங்கள், க்ரமம் என்பவைகள் வர்ணங்களின் தர்மம்தான் அதனுல் சோதனை என்பது அந்ருதம் என்று சொல்வது சரியல்லவென்று தார்க்கிகர்களால் சொல்லப்படுகிறது. இந்த விஷயம் பற்றி வேறு ஒரு உதாகரணத்தின்மூலம் பதில் சொல்லப்படுகிறது.

அதாவது, கர்ணஸஷ்குளி அவச்சின்ன ஆகாசம் எதுவோ அதுவே ச்ரவணேந்த்ரியம் என்றும் அதனுலேயே சப்தம் ப்ரகாசப்படுத்தப்படுகிறது என்றும் கணுதமதஸ்த்தர்களால் சொல்லப்படுகிறது. ஆகாசம் என்பது நிரவயவம். வேரொருவஸ்துவினுல் அவச் சேதகமாகிறது என்று சொல்லமுடியாது. இவ்விதம் இருந்தும் கல்பிதமான இந்தச் ரோத்ரேந்த்ரியத்தினுல் அர்த்தபோதம் ஏற்படுவதாக உங்களால் ஒத்துக்கொள்ளப்படுகிறது.

ஸ்வரூபத:வ்யாபகமான ஆகாசமும்சப்த குணகமாக இருக்கின்றதால் அதுவே ச்ரோத்ரேந்த்ரியம் என்று சொல்லப்படுமானுல் எல்லா வித சப்தங்களும் எப்போதும் கேட்க்கப்படவேண்டும். அவ்வித அனுபவம் ஒருவருக்கும் இல்லே. ஆகையால் உங்களால் கல்பிக்கப்படுகின்ற கர்ண ஸஷ்குளி அவச்சின்ன ஆகாசம் என்ற ச்ரோத்ரேந்த்ரியத்திளுல் அர்த்தபோதம் ஏற்படுகிறது என்ருல், வேதம் என்பது மித்யை என்ருலும் அர்த்தபோதம் ஏற்படலாம் என்பதில் ஆக்ஷேபத்திற்கு இடமில்லே.

**233.** அவதாரிகை :

இந்தவிதம் இந்த்ரியங்கள் அஸத்யமாக இருந்தபோதிலும் ஸத்யபோதம் ஏற்படலாம் என்று ஒத்துக் கொள்ளப்படுவதால் கல்பிதமான குரு சாஸ்திரம் முதலானவைகளால் ஏற்படும் வித்யையினுல் பவபந்த நிவர்த்தி ஏற்படலாம் என்பதில் விரோதம் ஏதுமில்லே என்று தெரிவித்து இந்த விஷயம் முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

ச்லோகம் :

त्वमतः स्वमोहरचितं गहनं भवसागरं तर परावगतेः ।
परिकल्पितद्वयनिबन्धनतः परमार्थसंविदुदये सति भोः

ச்லோகார்த்தம் : ஆகையால் கல்பிதமான (குரு, சாஸ்திரம்) இவை இரண்டையும் அபேக்ஷித்து பரமார்த்த ஞானம் ஏற்படுவதன் மூலம் பரமாத்மாவை நீ அறிகின்ருய். அதன்மூலம் ஆத்ம அஞ்ஞானத்திளுல் ஏற்பட்டதான இந்த ஆழமான ஸம்ஸாரத்தை நீதாண்டுவாயாக.

வ்யாக்யானம் : குரு, சாஸ்திரம் என்பதெல்லாம் கல்பிதமே என்ருலும், அதனுல் ஏற்படும் ஞானம் பரமார்த்த வஸ்துவைத் தெரிவிக்கலாம். மித்யையான குரு முதலான த்வைதப்ரதீதி இருந்தபோதிலும் யதார்த்த வஸ்து ஞானம் ஏற்படுகின்றபோது பரப்ரஹ்ம ஸ்வரூபம், ஸ்வஸ்வரூபத்தில் ப்ரகாசிக்கின்றதால் மோஹத்திளுல் ஏற்பட்ட பவசாகரம் நீங்கி ஸ்வஸ்வரூப அவஸ்த்தானம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுவதில் விரோதம் ஏதும் கிடையாது.

**234.** அவதாரிகை :

மீமாம்ஸகர், நையாயிகர் முதலான பரமதஸ்த்தர்கள் அநிர் வசனீயமாக எந்த ஒரு வஸ்துவும் இருப்பதாக ஒத்துக் கொள்வதில்லே. இவ்விதம் இருந்தும்கூட சோதனே என்பதும், ச்ரோத்ரம் போல் மித்யை என்று தெரிவித்து த்ருஷ்ட்டாந்தம் சொல்லப்படுவது எப்படிப் பொருந்தும்? ஆகவே கைமுதிக ந்யாயேன எங்கள் சித்தாந்தமே சரி என்று சாதிக்கப்படுகிறது.

ச்லோகம் :

भ्रान्तं तथोपचरितं च यथाविभागमङ्गीकृतं कणभुगादिमुनीन्द्रमुख्यैः ।
यत्रास्ति तत्फलनिबन्धनमस्मदीये तन्त्रे तमोविरचितं न फलाय कस्मात्

ச்லோகார்த்தம் : கல்பிதமான வேதவிதியும், ஔபசாரிகமான ச்ரவணேந்திரியமும் கணுதர் முதலான முனிகளால் ஒத்துக்கொள்ளப்படுகிறது. எது ஸத்யமாக இல்லேயோ

அது பலத்தை உண்டு பண்ணுகிறது என்று சொல்லப்படுமானுல் எங்கள் மதத்திலும் அஞ்ஞானத்திஞல் கல்பிக்கப்பட்ட ஸாதனமானது ஏன் பலத்தை உண்டு பண்ணுது.

வ்யாக்யானம் : உதாத்தம் முதலான பேதங்கள் த்வனியில்தான் இருக்கிறது என்ருலும், அவைகள் எல்லாம் வர்ணத்திலிருப்பதாக ஆரோபம் செய்யப்படும் சப்தம் என்பது ப்ராந்தி என்று மீமாம்ஸகரால் சொல்லப்படுகிறது. ச்ரோத்ரேந்த்ரியமாக இல்லாத ஆகாசம் என்பது உபசாரமாக ச்ரோத்ரேந்திரியம் என்றுகல்பிக்கப்படுகிறது என்றுநையாயிகரால் சொல்லப்படுகிறது. இந்தவிதம் மீமாம்ஸகரான ஜைமினி நையாயிகரானகண புகாதிகள் முதலானவர்கள், மித்யாபூதமான கரணங்கள் ஸத்யமான அர்த்தத்தை போதிக்கின்றது என்று தெரிவிக்கின்ருர்கள். அதாவது ஸ்வரம் முதலான விசிஷ்ட்ட ரூபேண இல்லாமல் ஸ்வரூபத:வர்ணம் ஸத்யம் என்றும் அதேபோல் ச்ரோத்ரேந்த்ரிய ரூபேண ஆகாசத்திற்கு ஸத்யத்வமில்லை என்று ஆரோபிதவஸ்துவின் ஸம்ஸர்க்கம் அதிஷ்ட்டானத்தில் இருப்பதாக ஒத்துக் கொள்ளாமல் ஸ்வரூபேணஸத்யம் என்றும் சொல்கிருர்கள். இந்தவிதம் அஸத்தாக இருந்த போதிலும் அர்த்த ப்ரதிபத்தி ஏற்படலாம் என்று சொல்லப்படுமானுல் (ஸத் அஸத்விலக்ஷணம் அநிர்வசனீயமாக இருக்கின்ற வஸ்துவினுல் அர்த்த ப்ரதிபத்தி ஏன் ஏற்படமுடியாது? ஆகவே அஞதியாகவும் ஸதஸத் விலக்ஷணமான அநிர்வசனீயமான அஞ்ஞானத்திஞல் ஏற்பட்ட குரு, சாஸ்திரம் முதலானவைகள் அஸத் விலக்ஷணமாகவும், ப்ரதீதியோக்யமாகவும் இருக்கின்றது என்று சொல்லப்படுகின்றதால், பரமதங்களைக் காட்டிலும் நம்முடைய மதத்தில் தான் விசேஷம் இருக்கின்றது என்று நிரூபணம் செய்யப்பட்டது.

**235.** அவதாரிகை :

ப்ராந்திஸ்தலத்தில் எந்த ஒரு வஸ்து இல்லை என்று சொல்லப்படுகிறதோ, ப்ரமவிஷயகமான அந்த வஸ்து, அந்த ப்ரமஸ்தலத்தில் இல்லையென்ருலும் வேருரிடத்தில் அந்த வஸ்து இருக்கின்றது. அதுபோல் குரு சாஸ்திரம் என்பவைகள் வேருெரு இடத்தில் (அன்யத்ரஸத்வாத்) இருக்கின்றதென்று சொல்லமுடியாதோ? என்ருல்,

ச்லோகம் :

असदपि फलवत्तामश्नुते युष्मदिच्छामनुसरदथ कस्मान्मायया निर्मितं सत् ।
न भवति फलवत्ताभाजनं चित्रमेतद्द्वयमिह न समर्था यूयमत्यन्तशक्ताः

ச்லோகார்த்தம் : உங்கள் இச்சையை அனுசரித்து அஸத்வஸ்துவும் பலத்தை உண்டு பண்ணக் கூடியதாக இருக்கிறது. அஞ்ஞானத்திஞல் கல்பிதமான ஸாதனமானது பலத்தை உண்டு பண்ணக் கூடயதாக ஏன் இருக்காது? (அதனுல்) உண்டு பண்ணுகிறது என்று சொல்வது ஆச்சர்யம்தான். இவ்விதம் சொல்லக்கூடிய சக்தி உங்களுக்கே இருக்கிறது. எங்களுக்கு அவ்வித சக்தி கிடையாது.

வ்யாக்யானம் : ஸ்வரம் ஆனுபூர்வி (க்ரமம்) என்பதெல்லாம் உண்மையில் த்வனியென்பதில்தான் இருக்கின்றது. இவ்விதம் இருந்தபோதிலும் வுர்ணம் என்ற சப்தத்தில் இருப்பதாக ஞானம் ஏற்படுகிறது. இந்த விதம் வர்ணத்தில் இல்லாத ஸ்வராதிகளில் இருப்பதாக அறியப்படுவதே ப்ரமம். சப்தத்தில் ஸ்வராதிகள் இல்லையென்று

சொல்லாவிடில் அந்த ஞானம் ப்ராந்தி ஞானம் என்றே சொல்லமுடியாது. இதேபோல் நையாயிகமதத்திலும் ஆகாசம் என்பது நிராகாரம். ச்ரோத்ரேந்த்ரியத்தில் வலியாகாரமாக நபஸ் இருப்பதாகச் சொல்லப்படுவதும் ப்ராந்தி ஞானம்தான். (ஆகாரம் ச்ரோத்ரத்தில் இருந்தாலும் ஆகாசத்தில் இல்லை) இவ்விதம் இல்லாத ஒன்றினுல் அர்த்தக்ரியா கார்யத்வம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. முயல் கொம்பு போல் அஸத்தாக இருக்குமானுல் அர்த்தக்ரியாகார்யத்வம் சொல்ல முடியாது. அதனுல் அஸத்தான ஒன்று அர்த்தக்ரியாகாரியாக இருக்கின்றதென்று சொல்வது பொருந்தாது. அதனுல் அர்த்தக்ரியா கார்யத்வமுள்ளதாக இருக்குமானுல் (ஸதஸத்விலக்ஷம்) அஸத்வில க்ஷணமாகத்தான் இருக்க வேண்டும். அஸத்திலிருந்தே அர்த்தபோதம் ஏற்படலாம் என்ருல் அநிர்வசனீயமான (ஸ்தஸத்விலக்ஷணமாக) குருசாஸ்திரங்களால் அர்த்தபோதம் ஏற்படமுடியாது என்ற வாதம் ந்யாய விரோதம். இந்த விதம் அவரவர் இஷ்டப்படி வாதம் செய்யப்படும் விஷயத்தில் ப்ரமாணமும் கிடையாது, யுக்தியும் கிடையாது. ஆனுலும் பிடிவாதமாக வாதம் செய்வது மிக்க ஆச்சர்யம்.

**236.** அவதாரிகை :

பரமதரீதியாக அஸத்யமான வஸ்து அர்த்தபோகத்தை உண்டு பண்ண முடியாது என்று சொல்லப்பட்டாலும் கூட மாயையென்பதே குரு சாஸ்திரம் முதலானவைகளுக்கு காரணம் என்று சொல்லப்படும் ச்ருதி பலத்தினுல் குரு முதலானவைகள் ஸ்வரூபேண அஸத்யமானுலும் அதிஷ்டான ரூபேண ஸத்யமானதால் அதிஷ்டானஸத்வத்தின் மூலம் ஸத்திலிருந்தே அர்த்த போதம் ஏற்படுகிறது என்றே சொல்லலாம்.

ச்லோகம் :

परमेव तत्त्वमगृहीतमभूदखिलस्य कारणमनर्थकरम् ।
परमेव तत्त्वमवबुद्धमतः परितृप्तये भवति पुष्कलतः

ச்லோகார்த்தம் : அஞ்ஞானத்தினுல் அறியப்படாத பரமாத்ம தத்வமே எல்லாவற்றிர்க்கும் காரணம். ஸம்ஸாரத்திற்கும் அஞ்ஞானமே காரணம் பூர்ணமாக அறியப்பட்ட பரமாத்மத்தவமே பரிபூரண திருப்திக்கு காரணமாக இருக்கின்றது.

வ்யாக்யாம் : கல்பிதவஸ்து கல்பித ஆகாரத்தினுலேயே உண்மையான வஸ்து போதத்தை உண்டு பண்ணலாம் என்று முன்னுல் சொல்லப்பட்டது. இதில் எவ்வித் தோஷமும் கிடையாது. ஆனுலும், இப்போது நம்முடைய சித்தாந்தத்தை அனுசரித்து விசாரிக்கின்றபோது இவ்வித ஆக்ஷேபத்திற்கு இடமே இல்லை. அவித்யா ஆச்ரயமாகவும், அவித்யா விஷயமாகவும் இருக்கின்ற ப்ரஹ்ம சைதன்யமே ஸம்ஸாரம் என்ற ஸர்வ அனர்த்தத்திற்கும் காரணம். ஸ்வயம் ஜடமான அவித்யை ஸ்வயமாக எந்த கார்யத்தையும் செய்யமுடியாது. அதிஷ்டான சைதன்ய ஸாமர்த்யத்தினுல்தான் அவித்யைக்கு இவ்வித ஸாமர்த்ய பலம் இருக்கின்றது என்ற விஷயம் பற்றி 'ஆச்ரயத்வ விஷயத்வ பாகினி நிர்விபாக சிதிரேவகேவல' என்று முன்பே சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே ப்ரஹ்மசைதன்யமே உபாதியில் ப்ரதிபலித்த காரணத்தினுல் சிதாபாஸன் மூலமாக ஸர்வ அனர்த்தத்திற்கும் காரணமாகின்றது.

ஸர்வ அதிஷ்ட்டானமான ப்ரஹ்மசைதன்யமே தன்னிடத்தில் கல்பிதமான அநிர்வசனீயமான வேதத்திலிருந்து ஏற்பட்ட அகண்டகார வ்ருத்திக்கு விஷயமாக புத்தியில் ப்ரகாசிக்கின்ற போது (அறியப்படுகின்ற போது) அகண்ட பரிபூரண சிதானந்த ஆத்மஸ்வரூபத்தின் உண்மையான தத்வம் ப்ரகாசிக்கின்றதால் மோக்ஷமென்ற புருஷார்த்தம் சித்திக்கின்றது. இதுவே ஸர்வ அவஸ்த்தானமான மோக்ஷமென்ற புருஷார்த்தத்திற்கும், இந்த ப்ரஹ்மசைதன்யமே அகண்டாகார வ்ருத்தி மூலகாரணமாக ஆகின்றது. அதனால் ஸத் என்பதே அர்த்தபோதத்திற்கு காரணம். (அஸத் என்பது காரணமில்லை) வேதவாக்ய ஜன்யவ்ருத்திக்கும் பரமாத்மதத்வமே மூலகாரணம். பரிகல்பிதமான வித்வான்களின் சரீரத்வாரா ஆசார்யபாவேன கல்பித வர்ணஸமூகமான வேதங்களின் மூலமாக அகண்டாகார வ்ருத்திக்கு பரமாத்ம தத்வம் விஷயமாக ஆகின்றது.

**237.** அவதாரிகை :

ஒரே பரமார்த்த தத்வம்தான் அஞ்ஞாதமாக இருக்கின்றபோது அனர்த்தத்திற்கு காரணமாகிறது என்றும் ஞாதமாக ஆகின்றபோது புருஷார்த்தத்திற்கு காரணமாகிறது என்றும் சொல்லப்படுமானால் எப்போதும் ஒரே விதமாக இருக்கின்ற ஆத்மத்வம் ச்ரவணாதிகளை செய்கின்ற போதே நமக்கு த்ருப்தியை ஏன் ஏற்படுத்தவில்லை. இதற்கு என்னுடைய முயற்சி எதற்கு? நான் என்ன அபராதம் செய்தேன்?

ச்லோகம் :

तव रूपमेव तव दुःखकरं यदि तन्न पश्यसि बहिर्मुखधीः ।
तव रूपमेव तव तृप्तिकरं यदि तत्प्रपश्यसि निवर्त्य तमः

ச்லோகார்த்தம் : பஹிர்முகமாக இருக்கின்றதால் தான் உன்ஸ்வரூபத்தை நீ அறிந்து கொள்ளவில்லை. அதனால்தான் உன்னுடைய ஸ்வரூபமே உனக்கு துக்கத்திற்கு காரணமாக ஆகின்றது. அஞ்ஞானத்தை நீக்கிவிட்டு உன் ஸ்வரூபத்தை நீ அறிவாயானால் உன்னுடைய ஸ்வரூபமே உனக்கு த்ருப்திக்கு காரணமாக இருக்கின்றது.

வ்யாக்யானம் : பரமாத்ம தத்வம் என்பது உன்ஸ்வரூபத்தையன்றி வேறாக இல்லை என்றே 'தத்வமஸி' முதலான வாக்யங்கள் தெரிவிக்கின்றது. அஞ்ஞானத்தினாலேயே உன் உண்மையான ஸ்வரூபம் அறியப்படவில்லை. அதனால் அனாத்மாவான தேஹாதிகளையே ஆத்மா என்று நினைத்து அறியாமையினால் விவகாரம் செய்யப்படுகின்ற காரணத்தினாலேயே ஸர்வ அனர்த்தங்களும் ஏற்படுகின்றது. உன் புத்தியானது பாஹ்ய விஷயங்களில் ஈடுபடுத்தப்படுவதே நீ செய்கின்ற அபராதம். ஆகையால் இந்த கஷ்ட்டங்கள்நிவர்த்திக்கப்பட வேண்டுமானால் பாஹ்ய விஷயங்கள் அனர்த்தகரம் என்று அறிந்து அவைகளில் வைராக்யத்தை அடைந்து உன் புத்தியை அந்தர்முகமாகச் செய்து சாஸ்திராசார்ய உபதேசங்களைக் கேட்டு அஞ்ஞானத்தை நிவர்த்திக்க வேண்டும். போதஸ்வரூபமான (ஞானஸ்வரூபம்) உன் உண்மையான ஸ்வரூபத்தை அறியாமல் உன் புத்தியை பஹிர்முகமாக அனாத்மவஸ்துக்களில் ஈடுபடச் செய்வதால்தான்(இந்த ஸம்ஸாரமென்று) துக்கம் என்று அறிய வேண்டும். இதை அறியாமல் இருப்பதே உன் அபராதம் - இந்த விஷயத்தையே 'ஆத்மைவ பந்து;

ஆத்மைவரிபு':என்று உனக்கு நீயே சத்ரு, நீயே மித்ரன் என்று பகவான் அர்ஜுனனுக்கு தெரிவிக்கின்றுர். ஆகவே பூர்வ புண்ய வஸத்தினுல் சாஸ்திரா சார்யன் மூலம் அனுதி அவித்யை நீங்கி தத்வபோதம் ஏற்படுமாஞல் ஸ்வஸ்வரூப் சாக்ஷாத்காரத்தினுல் ஆனந்தம் ஏற்படும். அதுவே மோக்ஷ புருஷார்த்தம், அதுவே சுகம்.

**238.** அவதாரிகை :

அவ்விதம் இருந்த போதிலும் ஸ்வரூப ஞானத்தினுல் மட்டுமே பூர்ணத்ருப்தி ஏற்படும் என்று ஏன் சொல்ல வேண்டும்? "கர்மணைவ ஹிஸம்சித்திம் ஆஸ்திதா:" என்று பகவானுல் சொல்லப்பட்டிருக்கின்றதால் கர்மாவே முக்திக்கு காரணம் என்று சொல்லலாமே?

ச்லோகம் :

तव बोधमात्रमुपनेयमतस्तव मोहमात्रमपनेयमपि ।
तब बोधमोहजनिहानिकरं वचनं त्रयीशिरसि तत्त्वमिति

ச்லோகார்த்தம் : ஆகையால் உன்னுடைய ஞானம் ஒன்றே அடையத்தக்கதாக ஆகும். உன் அஞ்ஞானம் ஒன்றே தள்ளத்தக்கதாக ஆகிறது. வேதாந்தத்தில் இருக்கின்ற தத்வமஸ்யாதி வாக்யங்கள் உனக்கு போதத்தை உண்டு பண்ணக்கூடியதாகவும், உன் அஞ்ஞானத்தை நீக்கக் கூடியதாகவும் இருக்கின்றது.

வ்யாக்யானம் : முன்னுல் சொல்லப்பட்டபடி ஸர்வத்வைதங்களும், அவைகளை தெரிவிக்கின்ற ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களும், எல்லாமே அவித்யாகார்யம்தான் என்று சித்தம் செய்யப்பட்டதால், ப்ரத்யகாத்மஸ்வரூபம் உண்மையில் ஹேயமுமில்லை உபாதேயமுமில்லை என்பது சித்திக்கின்றது. ஆத்மஸ்வரூபத்தையன்றி வேருக எதுவுமே இல்லை என்றும் ஸர்வ அனர்த்தங்களும் அவித்யாகார்யம் என்பதும் அறியப்படவேண்டும். நித்ய முக்த, புத்த, சுத்தஸ்வபாவமான ஆத்மாவை ஆசார்ய உபதேசத்தின் மூலமாக அறிந்து கொள்வதற்கு உன்ப்ரயத்னம் அவஸ்யம் தேவை. 'தத்வமஸி' முதலான வாக்யங்களினுல் ஆத்மஸ்வரூபத்தில் இல்லாத ஒன்றை அபூர்வமாக உண்டு பண்ணப்படவில்லை. ப்ரமாணமானது அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்றது. அஞ்ஞான நிவர்த்தி என்பதே சாஸ்திராசார்ய உபதேசத்தின் மூலம் ஸம்பாதிக்கப்படவேண்டும். ஆகவே ஞானத்தினுல்தான் முக்தி,கர்மா என்பது அந்த:கரண சுத்திக்கே காரணமாகிறது. மோக்ஷத்திற்காக ஞானம் தான் வேண்டும் என்பதையே 'தமேவம் விதித்வா' என்ற (ச்வேதாச்வர) வாக்யம் தெரிவிக்கின்றது.

**239.** அவதாரிகை :

ஞானம் ஏற்படுவதற்கு முன்பு ஆத்மஸ்வரூபத்தில் அனர்த்தம் இருப்பதாகவும் ஞானம் ஏற்பட்ட பிறகு அனர்த்த நிவர்த்தி ஏற்படுகிறது என்றும் சொல்லப்படுமாஞல் ஆத்மாவில் அதிசயம் ஏற்படுகிறது என்றுதானே சொல்லவேண்டும்? (ஏதோ ஒன்று விசேஷமாக அதிகமாக ஏற்படுகிறது)

ச்லோகம் :

तव बोधजन्मनि पुरा न पुनस्तव कश्चिदप्यतिशयो भवति ।
तम एव पूर्वमभवन्न भवत्यवबोधजन्मनि ततो न परम्

ச்லோகார்த்தம் : உன்னுடைய ஞானம் ஏற்படுவதற்கு முன்பும் பின்பும் உன்னிடத்தில் எவ்விதமான விசேஷமும் கிடையாது. ஞானத்திற்கு முன்பு அஞ்ஞானம் இருந்தது, ஞானம் ஏற்பட்ட பிறகு அஞ்ஞானம் இல்லையென்பதைத் தவிர வேறு விசேஷம் ஏதும் கிடையாது.

வ்யாக்யானம் : முன் ச்லோகத்தில் 'போத மாத்ரம் உபனேயம்' என்று 'மாத்ர' என்று சொல்லப்பட்டதன் விசேஷம் என்னவென்ருல், ப்ரத்யகாத்ம ஸ்வரூபபோதம் ஏற்படுவதற்கு முன்ஞலோ அல்லது பின்ஞலோ நிரவயமான உன்ஸ்வரூபத்தில் எந்த அதிசயமும் யாராலும் உண்டு பண்ண முடியாது என்பதே சொல்லப்பட்டிருக்கிறது. வித்யோற்பத்திக்கு முன் ஸ்வரூப அஞ்ஞானம் இருந்தது. அதுவே அனர்த்தகரம் ஞானம் ஏற்பட்டவுடன்அஞ்ஞான நிவர்த்தி ஏற்படுகிறது என்பதைத் தவிர வேறு எதுவும் எடுப்பதற்கோ, விடுவதற்கோ ஒன்றும் கிடையாது. அதஞல் ஞானத்திஞல் எவ்வித அதிசயமும் ஏற்படுவதாகச் சொல்லப்படவில்லை.

240. அவதாரிகை :

ஞானம் ஏற்படுவதற்கு முன்பு அஞ்ஞானத்துடன் கூடி ஆத்மா ஸத்விதியமாக இருந்தது என்றும் ஞானம் ஏற்பட்ட பிறகு, அஞ்ஞானம் நிவர்த்திக்கின்றது என்றும் அதிசயம் இருப்பதாகச் சொல்லலாமே?

ச்லோகம் :

न तमोऽपि पूर्वमभवन्न भवत्यवबोधजन्मनि तमोभिभवः ।
तम एव केवलमिदं सकलं न तमो विनाऽत्मनि किमप्यभवत्

ச்லோகார்த்தம் : ஞானத்திற்கு முன்பாக அஞ்ஞானம் என்பதும் யதார்த்தமாக இருக்கவில்லை. ஞானத்திற்குப் பிறகு அஞ்ஞான நாசம் என்பதும் யதார்த்தமாக இல்லை. (ஆகவே) அஞ்ஞானம் இருந்தது என்பதும் நாசம் அடைந்தது என்பதும் அஞ்ஞானமேயாகும். அஞ்ஞானத்தையன்றி வேறு எதுவும் இருக்கவில்லை.

வ்யாக்யானம் : வித்யை ஏற்படுவதற்கு முன்பும் தமஸ் என்பது உண்மையில் கிடையாது. அதஞல் ஸ்வரூபபோதத்திற்குப் பிறகு தமோ நிவர்த்தி என்பதும் கிடையாது. தமஸ் என்பதை வஸ்துவென்றும் சொல்லமுடியாது. அவஸ்து என்றும் சொல்ல முடியாது. அதஞல் அநிர்வசனீயம் என்றே சொல்லப்படுகிறது. அதஞல் தமஸ் என்பதன் ஸம்ஸர்க்கம் ஆத்மாவிற்கு இருந்தது என்றும் பிறகு அது நிவர்த்திக்கின்றது என்றும் சொல்வதற்கு முடியாது.

அப்படியாஞல் க்ருதக்ருத்யஞனேன் என்ற வ்யவஹாரம் இருக்கிறதே என்ருல், அந்த வ்யவஹாரமும் அஞ்ஞானத்திஞல் ஏற்பட்டது என்பதால் ஆத்மா எப்போதும் ஏகரூபம்தான், அதில் பந்த்மும் இல்லை மோக்ஷமும் இல்லை. ந நிரோதோ ந சோத்பத்தி; என்று சொல்லப்படுவதால் எதுவும் உண்டாகவுமில்லை, நிவர்த்திக்கவுமில்லை.

**241.** அவதாரிகை :

ஸர்வம் தமோகார்யம் என்று சொல்வது போல் தமோ நிவர்த்தியும் தமோ கார்யம் என்று எப்படிச் சொல்வது ?

(அவித்யாகார்யமாக இருப்பதை அவித்யாமயம் என்று சொல்லலாம். அவித்யா நிவர்த்தியை அவித்யாமயம் என்று எப்படிச் சொல்வது)

ச்லோகம் :

न तमः परिहृत्य लभ्यते तमसो हानिगता निरूपणा ।
इति सा तम इत्युदीरिता न निवृत्तिस्तमसस्तमोमयी

ச்லோகார்த்தம் : அஞ்ஞான நிவர்த்தியை நிரூபணம் செய்வது என்பதும் அஞ்ஞானத்தை அபேக்ஷிக்காமல் முடியாது. அதனல் அஞ்ஞான நிவர்த்தியும் அஞ்ஞானமென்றே சொல்லப்படுகிறது. உண்மையில் அஞ்ஞான நிவர்த்தி என்பது அஞ்ஞானமயமாக இருக்க முடியாது.

வ்யாக்யானம் : அஞ்ஞான தசையில்தான் அஞ்ஞானம் இருக்கின்றது என்றும் அஞ்ஞானம் இல்லையென்றும் வ்யவஹாரம் செய்யப்படுகிறது. நிவர்த்தி என்று சொல்லப்படுகின்றபோது, எதனுடையநிவர்த்தி என்று ப்ரதியோகி என்னவென்று சொல்லப்படவேண்டும். அதனல் இந்த சமயத்தில் மட்டுமே 'தமஸ்' என்பது அபேக்ஷிக்கப்படுகிறது. உண்மையில் தமோ நிவர்த்தி என்பது தமஸின் கார்யமில்லை என்று சொல்லப்படுவதால் தமோமயி என்று சொல்லமுடியாது. ஆனாலும் உபசாராத் அவ்விதம் சொல்லப்படுகிறது. உண்மையில் தமோ நிவர்த்தி என்பது அதிஷ்ட்டான ஸ்வரூபத்தான் கட நிவர்த்தி என்பது கடமயி அல்ல ம்ருண்மயி என்றே சொல்லவேண்டும். இந்த விதம் ஆரோபித நிவர்த்தி என்பது அதிஷ்ட்டான மயி என்றே சொல்லவேண்டும். அஸங்க கூடஸ்த்த ஸ்வப்ரகாச ஆத்மஸ்வரூபத்தில் அதற்கு நேர்விருத்தமான தமஸ் என்பதோ அதன் ஸம்பந்தமென்பதோ உண்மையில் இருக்கமுடியாது என்பதால் தான் ச்ருதிகள்எல்லாம் ஆரோபிதமான அஞ்ஞானத்தையே நிஷேதம் செய்கின்றது. (இல்லையென்று தெரிவிக்கின்றது) எந்த வஸ்து நிஷேதம் செய்யப்படுகிறதோ அந்த வஸ்து அநிர்வசனீயம் என்பது சித்தம். ஆகவே மித்யாபூதமான அஞ்ஞான நிவர்த்தியென்பதும் ஸத்யமாக இருக்கமுடியாது கயிற்றில் ஆரோபிதமாக தோன்றுகின்ற ஸர்ப்பம் என்பது (உண்மையில்) இல்லையென்று நிஷேதம் செய்யப்படுகின்றபோது ஸர்ப்பம் உண்மையில் இல்லையென்பதால் அதன் நிவர்த்தி என்பதும் உண்மையில் இல்லை.

உதாரணமாக - வேதத்தில், ஓரிடத்தில் அக்னியென்பதை பூமியில் வைத்தோ அல்லது ஆகாசத்தில் வைத்தோ ஹோமம் செய்யக்கூடாது என்று தெரிவிக்கப்படுகின்றது. ஆகாசத்தில் அக்னியை வைக்கமுடியாது என்ருலும் கூட கல்பனையாகவே அவ்விதம் செய்யக்கூடாது என்று நிஷேதம் செய்கின்றது. இதேபோல் தமோ நிவர்த்தி என்பதும் கல்பனையாகவே சொல்லப்படுகிறது.

**242. அவதாரிகை :**

எப்படி இருந்தபோதிலும் யாவத் ஜீவம் அக்னிஹோத்ரம் ஜுஹோதி என்ற வாக்யம் நித்யநைமித்திககர்மாவைவிடக்கூடாது என்று தெரிவிக்கின்றதாலும் வித்வான்களுக்கும் நித்யாதிகர்மாக்களில் ப்ரவ்ருத்தி இருப்பதாக அறியப்படுகின்றதாலும் போதம் ஒன்றே மோக்ஷஸாதனம் என்று எவ்விதம் சொல்லமுடியும்?

ச்லோகம் :

विधयश्च कर्मविषयाः स्वतमः पटलावृत्ते त्वयि बहिर्मनसि ।
कुत एव सम्यगवबोधहते तमसि प्रवृत्तिरिति संभवति

ச்லோகார்த்தம் : ஆத்ம அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்ட ஸ்வரூபத்துடன் கூடினவனும், பஹிர் முகமான மனதை உடையவனுமான உன்னுடைய விஷயத்தில்தான் கர்மவிஷயமானவிதிகள் ப்ரவர்த்திக்கின்றது. ஸம்யக் ஞானத்தினுல் அஞ்ஞானம் நாசம் அடைந்த பிறகு அந்த கர்மங்கள் உன்னிடம் எப்படி ஸம்பவிக்கும்?

வ்யாக்யானம் : இதுவரை, வேதாந்தம் தெரிவிக்கின்ற விஷயத்தில் மற்ற மதஸ்த்தரகளின் கொள்கைகளுக்கும், ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களுக்கும் விரோதம் ஏற்படுகிறதே என்று ஆக்ஷேபம் செய்யப்பட்டதற்கு எவ்வித விரோதமும் கிடையாது என்று அவைகளுக்கு பரிகாரம் சொல்லப்பட்டது. இப்போது கர்ம காண்ட விஷயத்திற்கு விரோதமாக இருக்கிறதே என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது. அதற்கு இப்போது பதில் சொல்லப்படுகிறது.

தன் உண்மையான ஸ்வரூபம் என்னவென்று அறியாத அஞ்ஞானிகளிடமே பாஹ்ய விஷயங்களில் ஈடுபடவேண்டும் என்ற புத்தி இருக்கின்றது. அதனுல் ஆத்ம ஸ்வரூபத்திற்கு வேருன பாஹ்யவஸ்துக்களில் அபிமானம் உடையவனும் கர்த்ருத்வ போக்த்ருத்வாதிகளுடன் கூடினவனுமே கர்ம காண்ட விதிகளில் ப்ரவ்ருத்திக்க முடியும். ப்ராந்தி சித்தமான கர்த்ருத்வாதிகள் அவித்யை உள்ள பர்யந்தம் இருக்கின்றது. அதனுல் கர்ம காண்டவிதிகள் அஞ்ஞானிகளிடம் ப்ரவர்த்திக்க முடியும். அவித்யை என்பது நிவர்த்திக்குமானுல் தமஸ் என்பதே இருக்கமுடியாது. அதனுல் வித்வான்களிடம் கர்ம விதிகள் ஸம்பவிக்கமுடியாது ஏனெனில் வித்வானுக்கு அகர்த்தா அபோக்தா என்ற ஞானம் ஏற்பட்ட பிறகு கர்மா, க்ரியை, அதன் பலன் என்ற பேத விவகாரமே இருக்க முடியாது. அதனுல் கர்மகாண்ட விஷயத்தில் வித்வான்களுக்கு ப்ரவ்ருத்தி என்பதே இருக்கமுடியாது. வித்வானுவன் கர்மாவிற்கே அதிகாரியாக இல்லாததால் வித்யைக்குப் பின் கர்ம காண்ட விஷயம் அப்ரமாணமாகின்றது.

**243. அவதாரிகை :**

வித்வானுக இருந்த போதிலும் பிக்ஷாடனுதிகளில் ப்ரவ்ருத்தி இருக்கின்றது என்பதால் ப்ரத்யக்ஷம் முதலானப் ப்ரமாண ப்ரவ்ருத்தி இருப்பதாகவே அறியப்படுகிறது. பிக்ஷாடனுதிகளில் ப்ரவ்ருத்தி இல்லையென்ருல் ஜீவித்திருக்க முடியாது. அதேபோல் தேஹதாரண காலத்தில் வித்வானுக இருந்தாலும் நித்யாதி கர்மாக்களேச் செய்ய வேண்டுமென்று விதிக்கலாமே?

ச்லோகம் :

विदिते पदे भगवतः परमे परिपुष्कले परमतृप्तिमतः ।
तव तृष्णया विरहितस्य कथं विधिषु प्रवृत्तिरपवर्गवतः

ச்லோகர்த்தம் : பகவானுடைய பரிபூர்ணமான பரமபதத்தை அறிந்த பிறகு பரமத்ருப்தி உடையவனும் மோக்ஷத்தை அடைந்தவனும் ஆசை அற்றவனுமான உனக்கு கர்மத்தில் எப்படி ப்ரவர்த்தி ஏற்படும் ?

வ்யாக்யானம் : தேஹதாரணம் இருந்தாலும் பரலோக பலங்களில் இச்சை இல்லாததால் கர்மாக்களில் ப்ரவ்ருத்திக்க மாட்டான். பிக்ஷாடணம் முதலானவை பாதித அனுவ்ருத்தி மாத்ரமாக இருக்கின்றது. அதனுல் கர்மவிதி வித்வானே கட்டுப்படுத்தமுடியாது. க்ர்யா காரகபலம் என்ற ஸர்வ விவகாரங்களுக்கும் அதீதமாய் ஸர்வோத்தமமான பரிபூரண நிலேயை அடைந்த காரணத்தினுல் ஸர்வகாமங்களும் அடையப் பெற்று பரமத்ருப்தனுக இருக்கின்ருன். வசனிக்க முடியாத ஆனந்தத்தை அடையப் பெற்றவன். மற்ற அநித்யமான ஸவர்க்காதி பலங்களில் வைராக்யத்தை உடைய வித்வான் என்ன காரணத்தினுல் கர்மாவில் ப்ரவ்ருத்திக்க வேண்டும் ? (ப்ரவர்த்திக்க மாட்டான்)

**244.** அவதாரிகை :

கர்மவிதியானது ஒரே புருஷனிடத்தில் ப்ரவர்த்திக்கின்றது என்றும் ப்ரவர்த்திக்கவில்லேயென்றும் எப்படிச் சொல்வது ? என்ருல், அதற்கு ஒரு த்ருஷ்ட்டாந்த மூலம் பதில் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

अभिचारकर्मविधयो हि यथा फलभागबाधमनु बाधयुजः ।
करणादिभागनिरुपाख्यतया विधयस्तथैव परमात्ममतेः

ச்லோகார்த்தம் : ஆபிசாரகர்மாவை தெரிவிக்கின்ற விதிவாக்யங்கள் பலாம்ஸத்தை பாதிக்கின்ற மற்ற விதிவாக்யங்களால் பாதிக்கப் படுகின்றது. அதேபோல் பரமாத்மஞான விஷயத்திலும் காரணம் முதலான அம்ஸங்கள் பாதிக்கப்படுகின்றதால் கர்ம விதிகள் பாதிக்கப்படுகின்றது.

வ்யாக்யானம் : சத்ருவை வதம் செய்யவேண்டும் என்றும் விரும்புகின்ற ஒருவன், க்ரோதத்தினுல் ப்ராஹ்மணனை கொல்ல நினேக்கின்ருன். அவனுக்கு, ச்யேனயாகம் செய்தால் சத்ருவை வதம் செய்யலாம் என்று கர்மவிதி தெரிவிக்கின்றது. ஆனுல் அதே புருஷனுக்கு, ப்ராஹ்மணனேக் கொன்ருல் நரகப்ராப்தி ஏற்படும் என்று ச்ருதிவாக்யம் தெரிவிப்பதன் மூலம் ஜீவஹிம்ஸை என்பது இஷ்ட்டபலமில்லே அநிஷ்ட்ட பலம் என்று தெரிவிக்கின்றது. ப்ராஹ்மணனேக் கொல்வதால் அநிஷ்ட்ட பலமே ஏற்படும் அதனுல் ஜீவ ஹிம்ஸை செய்யாதே என்ற நிஷேத ச்ருதிவாக்யங்களேக் கேட்டு அந்த புருஷன், சத்ருவதம் செய்ய வேண்டுமென்ற எண்ணத்தை விட்டுவிடுகின்ருன். அதனுல்சத்ருவதத்தினுல் ஏற்படும் பலத்திலுள்ள இச்சை நிவர்த்திக்கின்றது என்பதால் அதன்பிறகு எப்படி அந்த புருஷன் ச்யேனயாகத்தில் ப்ரவர்த்திக்க முடியும் ?

'ந ஹிம்ஸ்யாத்ஸர்வாபூதானி' என்றும் 'நாபிசரேத்' என்பது போன்ற வாக்யங்களினுல் முன்னுல் ஏற்பட்ட க்ரோதம் நீங்கிவிடுகிறது. அதனுல் ஏற்படும் பல பாகம் பாதிக்கப்படுவதால் விதியென்பதும் பாதிக்கப்படுகிறது. இந்தவிதம் பலத்தில் இச்சை இல்லையென்ருல் விதி என்பது ப்ரயோஜன மாகாது. இதேபோல் பரமாத்ம ஸ்வரூப சாக்ஷாத்காரம் ஏற்பட்ட வித்வானுக்கு அத்வைத ஆத்மசாக்ஷாத்காரத்தினுல் கர்த்தா கர்மாகரணம் பலம் என்ற ஸர்வபாகமும் பாதிக்கப்படுகின்றதால் அவனிடம் எந்த விதியும் ப்ரவர்த்திக்க முடியாது.

இவ்விதம் விசாரிக்கப்பட்ட காரணம் என்னவென்ருல், ப்ரத்யக்ஷாதிகள் போல் கர்ம காண்டம் என்பது ப்ரமத்தை உண்டு பண்ணக்கூடியது. அல்ல எப்படிவேதாந்தம் ஸ்வார்த்தத்தை போதிக்கின்றதோ அதுபோல் கர்ம காண்டம் என்பதும் நிர்த் தோஷமான ப்ரமாணம்தான். ஆனுலும் ப்ராந்தி சித்தமான க்ரியாகாரக பல பேதங்களைக் கொண்டு கர்ம காண்டம் அதன் விஷயத்தை போதிக்கின்றது. அதனுல் வேதபாகமும் ப்ரமாணம்தான். ப்ரத்யக்ஷாதிகள் போல் ப்ரமத்தை உண்டு பண்ணுவதில்லை. இந்த கர்மாவிற்கு இதுபலம் என்று தன் அர்த்தத்தை மட்டுமே போதிக்கின்றது. கர்த்தா போக்தா என்ற விஷயங்கள், கர்மகாண்டத்தினுல் போதிக்கப்படவில்லை. ஏற்கனவே கர்த்ருத்வ போக்த்ரு த்வங்கள் உள்ளவனுக்கே கர்மாவையும், அதற்குரிய பலன்களையும் தெரிவிக்கின்றது. அவித்யாவஸாத் கர்த்ருத்வாதிகள் உள்ளவன், கர்மாவில் ப்ரவர்த்தித்து அதன் பலனை அனுபவிக்கக்கூடிய பேத த்ருஷ்டி இருக்கின்ற வரையில் கர்ம காண்டத்திற்கு ப்ராமாண்யம் உண்டு. எப்படி ஆபிசாரகர்மாவை விதிக்கின்ற வாக்யம், ப்ராஹ்மணஹிம்ஸை அநிஷ்டகரம் என்பதால் அதைச் செய்யக் கூடாது என்று போதிக்கின்ற வாக்யத்தை அறியாத பர்யந்தம் ப்ரமாணமாக இருக்கின்றதோ அதுபோல் பரமாத்ம ஸ்வரூப போதம் ஏற்படும் வரையில் கர்ம காண்ட வாக்யங்களுக்கு ப்ராமாண்யம் உண்டு. ஆத்ம சாக்ஷாத்காரம் ஏற்பட்ட வித்வானுக்கு ஸர்வ பேதவ்யவஹாரங்களும் பாதிக்கப்படுவதால் கர்மகாண்ட விதிகளுக்கு வித்வானிடம் ப்ரவர்த்திக்கக் கூடிய ஸாமர்த்தியம் கிடையாது.

**245.** அவதாரிகை :

முன்னுல் சொல்லப்பட்ட ச்லோகத்தில் சூசனையாக சொல்லப்பட்ட கைமுதிக ந்யாயம் என்னவென்ருல்,

ச்லோகம் :

यदि भाव्यभागविलये न भवेत्फलभावना कथमिहोत्सहते ।
करणादिभागविलये भवितुं विधिरन्तरेण घटते न च ताम्

ச்லோகார்த்தம் : பாவ்யாம்ஸத்தில் பாதை ஏற்படுகின்றபோதே பல பாவனை ஏற்படாது. அவ்விதம் இருக்கின்றபோது வித்வானிடத்தில் காரணம் முதலான ஸர்வ அம்ஸமும் பாதிக்கப்படுவதால் பாவனை என்பது எப்படி ஏற்படமுடியும்? பாவனை என்பது இல்லாமல் விதியென்பதும் ஸம்பவிக்காது.

வ்யாக்யானம் : 'இதைச் செய்' என்ற லிஙாதி வ்யாபாராத்மிகமான நியோகம் என்பது சப்தபாவனை, அர்த்த பாவனை என்பது இல்லாமல் ஸம்பவிக்கமுடியாது.

விதி என்பது பாவனாத்ரயம் இல்லாமல் ஸம்பவிக்க முடியாது. பாவனை ப்ரவ்ருத்தி இரண்டிற்கும் நடுவில் மத்ய மணிபோல் விதி ஸம்பந்தமுடையதாக இருக்கிறது. விதிப்ரவர்த்திக்க வேண்டுமானால் கரணம் இதிகர்த்தவ்யதா என்ற பாவ்யரூபமான ஸகல அம்ஸமும் இருக்கவேண்டும். ஆகவே, ஆபிசாரகர்மாவில் பல இச்சையென்ற பல பாகபாவனை இல்லையென்பதால் விதிஸம்பவிக்காது என்று சொல்லப்படுமானால், வேதாந்த விசாரத்தினால் வித்வானுக்கு பாவனாத்ரயங்களும் பாதிக்கப்படுகிறது என்பதால் விதி எப்படி ஸம்பவிக்க முடியும்? ஆகவே க்ரியாகாரக பலபேதம் என்பது இல்லாமல் விதிஸம்பவிக்கமுடியாது.

**246.** அவதாரிகை :

பாவனாவாத த்ருஷ்டியை அனுசரித்து விதிஸம்பவிக்காது என்று சொல்லப்பட்டாலும், நியோக வாத த்ருஷ்டியைக் கொண்டுவிதி ஸம்பவிக்கலாமே?

ச்லோகம் :

अधिकारिणं च विषयं च विना न नियोगबुद्धिरुपपत्तिमती ।
न विना तमस्तदुभयं घटते विदितात्मनश्च न तमो घटते

**ச்லோகார்த்தம் :** அதிகாரி, விஷயம் இவை இரண்டும் இன்றி நியோகபுத்தி என்பது பொருந்தாது. அஞ்ஞானம் என்பது இல்லாமல் அதிகாரிவிஷயம் என்ற இரண்டும் இருக்க முடியாது. ஆத்ம ஞானியினிடம் அஞ்ஞானம் இருக்க முடியாது.

**வ்யாக்யானம் :** நியோஜ்யனான அதிகாரியோ, விஷயமோ இல்லாமல் நியோக புத்தி என்பது ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. அஹம் ப்ராஹ்மணன் என்ற ஆத்மாபிமான முடையவனேநியோஜ்யன். அவனுக்குத்தான் நான் இதைச் செய்ய வேண்டுமென்ற கர்த்தவ்யபுத்தி இருக்கும். ஆத்ம ஞான சாக்ஷாத்காரம் ஏற்பட்ட வித்வானுக்கு ப்ராஹ்மணத்வ அபிமானமோ இதைச் செய்ய வேண்டும் இந்த பலனை அடையவேண்டும் என்ற பாவனைகள் எல்லாமே தத்வஞானத்தினால் பாதிக்கப்படுகின்றதால் ந்யோகத்தினால் எப்படி ப்ரவர்த்தி ஏற்பட முடியும்? அதனால் ந்யோகவாத த்ருஷ்டியை அனுசரித்து விதி ஸம்பவிக்கின்றது என்று சொல்லமுடியாது.

**247.** அவதாரிகை :

கர்மகாண்ட விதிகள் எல்லாம் அவித்வத் விஷயம் என்று சொல்லப்படுமானால், பாதிதார்த்தத்தை தெரிவிக்கின்ற கர்மகாண்டம் அப்ரமாணம் என்று சொல்லநேரிடுமே? என்றால்,

ச்லோகம் :

व्यवहारगोचरमतः सकलं विधिवाक्यमित्यवगतिं मनसि ।
उपनीय वेदशिरसो विधिभिर्न विरोध इत्यपि समाकलय

**ச்லோகார்த்தம் :** ஆகவே, எல்லாவிதிவாக்யங்களும்வ்யவஹார விஷயம் என்ற ஞானத்தை மனதில் தீர்மானமாகக் கொண்டு, வேதாந்தத்திற்கு விதியுடன் விரோதம் கிடையாது என்று அறிந்துகொள்.

வ்யாக்யானம் : கர்மகாண்டம் என்பதற்கு பாரமார்த்திக ப்ராமாண்யம் கிடையாது என்று சொல்லப்படுகிறதேயன்றி வ்யாவகாரிக ப்ராமாண்யமும் கிடையாது என்று சொல்லப்படவில்லை. ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்களுக்கு எப்படி வ்யவஹார விஷய கோசரமாக இருக்கின்றதால் வ்யாவகாரிக ப்ராமாண்யம் சொல்லப்படுகிறதோ அதுபோல் கர்மகாண்ட விஷயங்களை போதிக்கின்ற விதிவாக்யங்களுக்கும் வ்யவஹாரம் இருக்கின்ற பர்யந்தம் ப்ரமாண்யம் உண்டு. ஆகவே உபநிஷத் என்ற வேதசிரஸ் பரமார்த்தமான தத்வத்தை போதிக்கின்றது என்பதால் அதற்கு பாரமார்த்திகப்ராமாண்யம் சொல்லப்படுகிறது. அதனால் ப்ராந்தி சித்தமானக்ரியாகாரக பலத்தை அனுசரித்து கர்ம காண்டம் போதிக்கின்றது என்பதால் வேதாந்தத்தை பாதிக்கக் கூடிய தன்மை கர்ம காண்டத்திற்கு கிடையாது. கர்ம காண்டத்திற்கு வ்யாவஹாரிக ப்ராமாண்யம் தான் ஒத்துக்கொள்ளப்படுகின்றது. அதனால் இரண்டிற்கும் விரோதமும் கிடையாது.

**248.** அவதாரிகை :

இந்தவிதம் 'இரண்டாவது அத்யாயத்தில் (சூத்ரபாஷ்யத்தின்) அவிரோத அத்யாயத்தின் சாரம் சொல்லப்பட்டது. இந்த அத்யாயத்தின் முதல் பாதத்தில் ப்ரயக்ஷாதிகளுக்கும், ச்ருதி ஸ்ம்ருதிகளால் தெரிவிக்கப்படும் விஷயத்திற்கும் விரோதம் இருக்கின்றதே ? என்று செய்யப்பட்ட ஆக்ஷேபத்திற்கு எவ்வித விரோதமும் கிடையாது என்று ஸமன்வயம் என்ற ச்லோகத்திலிருந்து ஆரம்பித்து பதில் சொல்லப்பட்டது. அதன்பிறகு சாங்க்யர் முதலான மற்ற மதஸ்த்தர்களின் கொள்கைக்கு விரோதமாக இருக்கிறதேஎன்று ஆக்ஷேபம் செய்யப்பட்டது. அதற்கு அவர்களால் சொல்லப்படும் விஷயத்தில் ப்ரமாணம் ஏதும் இல்லையென்று பதில் சொல்லப்பட்டது. சிருஷ்டியைப் பற்றி தெரிவிக்கின்ற உபநிஷத் வாக்யங்களும் ஒன்றுக்கொன்று விரோதமாக இருக்கிறதே என்ற ஆக்ஷேபத்திற்கு அவ்வித விரோதம் ஏதுமில்லையென்பதை தெரிவித்து மூன்றும் பாதத்தில் பதில் சொல்லப்பட்டது. ஜீவனுக்கு உற்பத்தி இருக்கிறதென்றும் இல்லையென்றும் ஒன்றுக்கொன்று முரண்பட்டதாகச் சொல்லப்படுகிறதே என்ற ஆக்ஷேபத்திற்கு நான்காவது பாதத்தில் விசாரித்து பதில் சொல்லப்பட்டாலும் கூட அந்த விஷயம் பற்றியும் இந்த அத்யாயத்தில் பதில் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் நான்கு விதமாக அவிரோதாத்யாயத்தில் விசாரிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அத்வைதமேதத்வம் என்றுபோதிக்கின்ற வேதாந்தித்திற்கு எந்த விதமான விரோதமும் கிடையாது.

'ஸமன்வயே' என்று ஆரம்பமாகின்ற ச்லோகம் முதல் பலச்லோகங்களில் அந்தந்த மதஸ்தர்களின் அபிப்ருயங்கள் சரியல்ல என்று நிராகரணம் செய்யப்பட்டது. 'ஆரம்பணஞுதி' என்று ஆரம்பிக்கப்பட்ட ச்லோகத்திலிருந்து இரண்டாவது பாதார்த்தத்தையும், சிருஷ்டி முதலான ச்ருதி- ஜீவ ச்ருதி முதலானவைகளுக்கும் வேறு எந்த விதமான ச்ருதி ஸ்ம்ருதிகளுக்கும் விரோதம் ஏதுமில்லை என்ற மூன்ருவது பாதார்த்தத்தையும் 'அஞ்ஞானம் தஜ்ஜ' என்று ஆரம்பிக்கின்ற ச்லோகம் முதல் பலச்லோகங்களில் அஞ்ஞானம் ஏகம் என்றும், அவ்விதம் சொல்லப்படுவதால் ஏற்படும் விரோதங்களுக்கும் பரிகாரம் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த்ரியம் முதலானவைகள் பற்றி விசாரித்து அதிலுள்ள முரண்பாடுகளை நான்காவது பாதத்தில் விசாரித்து பதில் சொல்லப்பட்டிருக்கின்றது.

இந்தவிதம் இரண்டாவது அத்யாயம் இத்துடன் முடிவு பெறுகிறது.

ச்லோகம் :

एवं वेदान्तवाक्यैरवगतिपदवीमद्वये नीयमाने प्रत्यक्तत्त्वे समस्तद्वयकृति तमसि क्षीयमाणे च सद्यः ।
स्वाराज्ये त्वय्यवाप्ते परमसुखभुजि स्वच्छचैतन्यमात्रे शेषो मानान्तराणामपि दुरवगमस्तत्र दूरे विरोधः

ச்லோகார்த்தம் : இவ்விதம் வேதாந்த வாக்யங்களினுல் அத்வயம்ப்ரத்யகாத்மா என்று அறியப்படுமானுல் அந்த க்ஷணத்திலேயே எல்லா த்வைதங்களுக்கும் காரணமாக இருக்கின்ற அஞ்ஞானம் நாசத்தை அடைகின்றது. இவ்விதம் பரமானந்தத்தை அனுபவிக்கின்றவனும் சுத்த சைதன்யமாத்ரமாக இருக்கின்றவனுமான உன்னுல் எப்போது மோக்ஷஸாம் ராஜ்யம் அடையப்படுகிறதோ அப்போது ப்ரமம் முதலானவைகளால் அறியப்படும் த்வைதம் என்பது சிறிதும் அறியப்படாது. அதனுல் வேதாந்தத்திற்கு (மற்ற ப்ரமாணுதிகளால்) அவைகளுடன் விரோதம் என்பது வெகுதூரம்.

வ்யாக்யானம் : வேதாந்த வாக்யங்களிலிருந்து அத்வைத ஆத்மஞானம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுவதால் மற்ற ப்ராமணங்களுக்கு விரோதம் ஏற்படுகிறது என்று சொல்வதற்கு இடமேயில்லே. த்வைத ப்ரதீதியும், அதனுல் ஏற்படும் பயம் என்பதெல்லாமே அவித்யாகார்யம். அதனுல் மித்யாபூதமான விஷயங்களுக்கும் அதைக்ரஹிக்கின்ற ப்ரமாணங்களுக்கும் ஸமன்வயத்திற்கும் விரோதம் என்பதே கிடையாது. அத்வைத தத்வ சாக்ஷாத்காரபலத்தினுல் ஸர்வத்வைதங்களும் அதற்கு காரணமான அஞ்ஞானமும் நாசத்தை அடைகின்றது. அதனுல் ஆத்மா என்பது ஸ்வஸ்வரூபத்தில் ப்ரகாசிக்கின்றது. ஆகவே தத்வத்தை அறிந்த நிலேயில் ஸர்வ விஷயங்களும் அதை தெரிவிக்கின்ற ப்ராமணங்களும் கிடையாது என்று சொல்லப்படுவதால் ச்ருதி என்ற ப்ரமாணத்திற்கும் மற்ற ப்ரமாணத்திற்கும் எப்படி விரோதம் ஏற்பட முடியும் என்று கை முதிக ந்யாயத்தைக் கொண்டு விளக்கப்பட்டது. வேதாந்த வாக்யங்களால் அத்வைத போதம் ஏற்படுகின்றபோதே ஸமஸ்த்த த்வைதங்களும் அதற்கு உபாதானமானதமஸ் என்பதும் க்ஷயத்தை அடைகின்றது. பரமானந்த சுகானுபவம் என்ற ஸ்வராஜ்ய நிலேயில் நிலேத்திருக்கின்றபோது ப்ரமாணப்ரமேய வ்யவஹாரம் என்பதே கிடையாது. ஆத்மானுபவமே இருக்கின்றதால் ஸமன் வயத்திற்குஎவ்வித விரோதமும் கிடையாது என்பதை இந்த இரண்டாவது அத்யாயத்தில் தெரிவிக்கப்பட்டது. இத்துடன் இரண்டாவது அத்யாயம் முடிவுபெறுகிறது.

## ஸம்க்ஷேபசாரீரகம் - மூன்ருவது அத்யாயம்

1. அவதாரிகை : முன்னுல் விசாரிக்கப்பட்ட அத்யாயம் இரண்டினுலும் ஞானம் பூர்ணமாக ஏற்படுகின்றது என்பதால், இதற்குமேல் மூன்ருவது அத்யாயம் ஆரம்பிக்கப்படவேண்டிய அவஸ்யம்என்ன? என்ருல், அத்வைத சித்தாந்தத்திற்கு, மற்றப்ரமாணங்களின் விரோதம் ஏதும் இல்லை என்ற த்ருடநிச்சயம் ஏற்பட்டபோதிலும், அந்த ஞானம் ஏற்படுவதற்குரிய ஸாதனங்கள் சொல்லப்படாவிடில்பூர்ணமாக சொல்லப்பட்டதாக ஆகாது. அதனுல் பூர்ணஞானம் ஏற்படுவதற்கு ஸாதனம் என்னவென்பதை நிரூபணம் செய்வதற்காக மேலே ஆரம்பிக்கப்படுகிறது.

ச்லோகம் :

श्रुत्वाऽविरोधमुपपन्नसमन्वयोऽथब्रह्मात्मतामतिरयं पुनरप्युवाच ।
ब्रह्मात्मताफलशिरस्कमतिं प्रसूते यत्साधनं तदखिलं प्रतिपित्समानः

ச்லோகார்த்தம் : அவிரோதாத்யாயத்தை விசாரம் செய்யப்படுவதன் மூலம் ஸமன்வய அத்யாயத்திலிருந்து ஏற்பட்ட ப்ரஹ்மாத்ம ஐக்ய ஞானம் என்பது பொருந்தக்கூடியதே என்ற ஞானம் ஏற்பட்டது. எந்த ஸாதனமானது இப்பேர்ப்பட்ட ப்ரஹ்மாத்ம ஐக்ய பலமுடைய ஞானத்தை ஏற்படுத்துகின்றதோ அந்தஸாதனத்தை பூர்ணமாக அறிய வேண்டுமென்று சிஷ்யன் மேலும் ப்ரச்னம் செய்கிருன்.

வ்யாக்யானம் : இவ்விதம் ப்ரத்யக்தத்வமான பரப்ரஹ்ம ஸ்வரூபத்தினிடம் ஸமன்வயம் சொல்லப்பட்ட விஷயத்தில் விரோதம் ஏதுமில்லை என்று அவிரோதத்தை தெரிவித்தபிறகு இப்பேர்ப்பட்ட ப்ரஹ்மஞானம் ஏற்படுவதற்கு ஸாதனம் என்னவென்பதை தெரிவிப்பதற்காக இந்த மூன்ருவது அத்யாயம் ஆரம்பிக்கப்படுகிறது. ஜீவபரமாத்ம ஐக்யமே பரமார்த்த தத்வம் என்ற விஷயமே வேதாந்த சாஸ்திரத்தினுல் போதிக்கப்படுகிறது என்றும் அதுவே பரமபுருஷார்த்தம் என்றும் அறிந்த ஜிஞ்ஞாஸுவான சிஷ்யன், இப்பேர்ப்பட்ட ஞானத்தை அடைவதற்குரிய ஸாதனம் (மோக்ஷஸாதனம்) என்னவென்பதை எனக்கு உபதேசித்தருளவேண்டுமென்று ப்ரார்த்திக்கின்ருன்.

2. அவதாரிகை : இவ்விதம் ப்ரார்த்திக்கின்ற சிஷ்யனுடைய ஜிஞ்ஞாஸை என்னவென்பதை மேலும் ஸ்பஷ்டமாக விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

ऐदंपर्यमखण्डवस्तुविषयं वेदान्तवाक्यस्य यत्पूर्वं वर्णितमस्य भूदपहतिर्मा नाम मानान्तरैः ।
किं त्वस्याः परिनिष्ठितस्वविषयध्वान्तच्छिदो जन्मने विद्याया वचनादृते किमपरं कृत्यं भवेत्साधनम्

ச்லோகார்த்தம் : வேதாந்த வாக்யங்களின் தாத்பர்யம் அகண்ட வஸ்துதான் என்பதை முதல் அத்யாயத்தில் சொல்லப்பட்டது. ப்ரமாணுந்தரவிரோதம் அதற்கு கிடையாதுஎன்று இரண்டாவது அத்யாயத்தில் சொல்லப்பட்ட விஷயமும் ஒத்துக்கொள்ளப்பட்டது. சித்தவஸ்து விஷயகமான அஞ்ஞானம் என்பதை நாசம் செய்கின்ற இந்த ஞானம் ஏற்படுவதற்கு வேதாந்த வாக்யங்களைத் தவிரவேறு எந்த ஸாதனத்தை அனுஷ்டிக்க வேண்டும்?

வ்யாக்யானம் : முதல் அத்யாயத்திலிருந்து இரண்டாவது அத்யாயத்திற்கும், மூன்ருவது அத்யாயத்திற்கும் ஹேது ஹேதுமத்பாவஸம்பந்தம் அறியப்படுகிறது. முதல் அத்யாயத்தில் வேதாந்த வாக்யங்களின் தாத்பர்யம் 'அகண்டவஸ்து' என்று சொல்லப்பட்டது. இரண்டாவது அத்யாயத்தில், இவ்விதம் தாத்பர்யமாக சொல்லப்பட்ட விஷயத்திற்கு மற்ற ப்ரமாணங்களின் விரோதம் ஏதுமில்லை என்று சொல்லப்பட்டது. அதனுல் இந்த விஷயத்தில் சிஷ்யனுக்கு அஸம்பாவனை ஏதும் கிடையாது. ஆனுல், அகண்டவஸ்து விஷயகமான அஞ்ஞானம் நிவர்த்திப்பதற்கு மஹாவாக்யத்தையன்றி வேறு ஏதாவது ஸாதனம் இருக்கின்றதா இல்லையா என்று அறிய வேண்டுமென்பதே சிஷ்யனுடைய விருப்பம். இதுவரை விசாரிக்கப்பட்ட விஷயங்களிலிருந்து அகண்டவஸ்து ஞானமே ஸம்யக்ஞானம் என்ற நிச்சயம் ஏற்பட்டிருந்தும் கூடத்ருடநிச்சயம் (த்ருடஞானம்) ஏற்படாத காரணத்தினுல், இந்த வித்யை பலவத்தாக ஆவதற்கு வேறு ஸாதனம் ஏதாவது இருக்கின்றதா என்பதை அறிய விரும்புகின்ருன்.

3. அவதாரிகை : ஆகவே குருவானவர் மூன்ருவது அத்யாயத்தின் ஒவ்வொரு பதார்த்தங்களையும் ஸங்க்ரஹம் செய்துக்ரமமாக தெரிவிக்கின்ருர்.

ச்லோகம் :

वैराग्यस्य दृढत्वमेकमपरं तत्त्वंपदार्थज्ञता वाक्ये निर्गुणनिष्ठिते च सकले न्यायादियत्तामतिः ।
सम्यग्ज्ञानसमीपदूरभवयोर्हेत्वोर्विवेक्तृता वाक्यार्थप्रतिपत्तिसाधनमिदं यत्नेन कृत्यं यतेः

ச்லோகார்த்தம் : வாக்யார்த்தஞானம் ஏற்படுவதற்கு மேலே சொல்லப்போகின்ற ஸாதனங்கள் நான்கையும் யதியினுல் அனுஷ்டிக்கப்படவேண்டும். 1. வைராக்யம் த்ருடப்படவேண்டும். 2. தத்பதார்த்தம், த்வம்பதார்த்தம் என்ற இவைகளின் ஞானம் ஏற்படவேண்டும். 3. நிர்க்குணபரமான எல்லா வாக்யங்களின் தாத்பர்யம் (என்னவென்று) ந்யாய பூர்வகமாக அறிந்து கொள்ளவேண்டும். 4. ஸம்யக்ஞானம் ஏற்படுவதற்குரிய காரணமான அந்தரங்க பஹிரங்க ஸாதனங்களை விவேகித்து அறியவேண்டும்.

வ்யாக்யானம் : ஜீவனுடையகமனுகமனங்களை நிரூபணம் செய்வதன்மூலம் த்ருட வைராக்யம் என்ற ஸாதனம் பற்றி முதல் பாதத்தின்மூலம் அறிந்து கொள்ளவேண்டும். தத் த்வம்பத சோதனம் என்பது பற்றி விசாரித்து அறியப்படவேண்டும்.

ஸகுண ப்ரஹ்ம விஷயம் என்பதிலும், நிர்க்குண ப்ரஹ்மவிஷயம் என்பதிலும் ஒரு உபநிஷத்தில் சொல்லப்படாத விஷயங்கள் பற்றி வேறொரு உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்குமானுல் அதையும் சேர்த்து க்ரஹிக்கப்பட வேண்டும் என்ற நியாயத்தை அறிந்து க்ரஹிக்கப்பட வேண்டும் என்று மூன்ருவது பாதத்தின் மூலம் அறியப்படுகின்றது. நான்காவது பாதத்தில் அந்தரங்கஸாதனமான ஸமதமாதிகள் பஹிரங்க ஸாதனமான யஞ்ஞாதிகள் இவைகளுக்கு இடையே உள்ள விவேகம் என்ன என்பதை அறிந்து கொள்ளவேண்டும்.

யதி என்ற பதப்ரயோகம் செய்யப்பட்டிருப்பதால் ஸன்யாசியினுல் யத்னத்துடன் அனுஷ்டிக்கப்படவேண்டும் இல்லையானுல் ப்ரத்யவாயம் ஏற்படும் என்று அறியப்படுகிறது. குறிப்பிட்டு ஸன்யாஸி என்று விசேஷமாக சொல்லப்படுகின்றதால், ஸன்யாஸியினுல் தான் நன்கு அனுஷ்டிக்க முடியும் என்பதும், வேறு ஆச்ரமிகளுக்கு அந்தந்த

ஆச்ரமகர்மாக்களை அனுஷ்ட்டிக்கவேண்டி இருப்பதால் நன்கு அனுஷ்ட்டிக்க முடியாது என்பதையே இதன் மூலம் தெரிவிக்கப்படுகிறது.

4. அவதாரிகை : ஸம்ஸாரம் என்பது சுகத்திற்கு ஸாதனமான அனேக விஷயங்களைக் கொண்டதாக இருக்கிறது. அதனுல் இந்த விஷயங்களில் வைராக்யம் எப்படி யாருக்கு ஏற்படமுடியும்? அவ்விதம் யாருக்காவது வைராக்யம் ஏற்பட்ட போதிலும், இந்த வைராக்யம் எப்படி ஞானத்திற்கு ஸாதனமாக ஆகிறது?

ச்லோகம் :

संसारदोषमवधारयतो यथावद्वैराग्यमुद्भवति चेतसि निष्प्रकम्पम् ।
वैराग्यजन्मनि दृढे च सति प्रवृत्तिस्तत्त्वंपदार्थपरिशोधनकर्मणि स्यात्

ச்லோகார்த்தம் : ஸம்ஸார தோஷங்களை விசாரம் செய்வதனுல் மனதில் த்ருடமான வைராக்யம் ஏற்படும். த்ருட வைராக்யம் ஏற்பட்டவுடன், தத்வம்பதார்த்தங்களை விசாரம் செய்வதற்கு ப்ரவர்த்திக்க வேண்டும்.

வ்யாக்யானம் : அசைக்க முடியாத த்ருடமான வைராக்யம் என்பதே பதார்த்த விசாரத்திற்கு முக்யகாரணம். அதனுல்தான் வித்யைக்கு வைராக்யம் ஸாதனம் என்று சொல்லப்படுகிறது. ராகாதிகளினுல் பீடிக்கப்பட்ட சித்தமுடையவனுக இருப்பானுகில் தத், த்வம் பதார்த்தத்தை விசாரிக்கக் கூடிய புத்தி சக்தி இருக்க முடியாது. ஆகையால் வாக்யார்த்த ஞானத்திற்கு வைராக்யம் ஸாதனம். வைராக்யமுடைய வனே, ச்ரவணுதிகளில் ப்ரவ்ருத்திப்பான். ச்ரவணுதிகளினுல்தான் ஞானம் சித்திக்கவேண்டும்.

5. அவதாரிகை : இந்தவிதம் ஸம்ஸாரத்தில் தோஷம் இருக்கிறதென்பதை நிச்சயித்து அறிவது எப்படி?

ச்லோகம் :

संसाररूपमवगच्छ विविच्यमानं यस्मिञ्श्रुते भवति तद्विषया जुगुप्सा ।
वेदः प्रकाशयति संसरणं यथाऽस्य जीवस्य जन्ममरणे व्रजतः क्रमेण

ச்லோகார்த்தம் : ஸம்ஸாரத்தின் ஸ்வரூபம் என்ன என்று விவேசனம் செய்து மேலே சொல்லப்போகின்ற விஷயத்தை அறிந்து கொள்வாயாக. அவ்விதம் அறிவதன் மூலம் ஸம்ஸார விஷயத்தில் த்யாகபுத்தி ஏற்படுகிறது. ஜனனம் மரணம் என்பதைக்ரமமாக அடைகின்ற ஜீவனுடைய ஸம்ஸாரத்தைப் பற்றி வேதம் மிகவும் நன்ருக விளக்குகின்றது.

வ்யாக்யானம் : ஸம்ஸாரத்தில் வெறுப்பு ஏற்படுவதற்கு ஜனனம் மரணம் என்பவைகளை விவேகித்து அறிவதே உபாயம். எப்படியெனில், "பஞ்சம்யாமாஹுூதா வாப : புருஷவசஸோபவந்தி" என்ற (சாந்தோக்ய 5.9.1) 'தத்யதாஸ்நःஸுூஸமாஹிதம்' (ப்ரஹ - 4 - 3 - 35) என்ற வாக்யங்களும் தெரிவிக்கின்றபடி த்யு, பார்ஜன்ய, ப்ருதிவீ, ஒஷதயःபுருஷःயோஷித் என்ற ஐந்தாவது இடத்தில் ஜீவனுக்கு சரீரம் ஏற்படுகிறது என்று பஞ்சாக்னிவித்யையைப் பற்றி வேதவாக்யங்கள் தெரிவிக்கின்றது. இதேபோல் மரணுவஸ்த்தையைப் பற்றியும் தெரிவிக்கின்றது. அதாவது மரண காலத்தில் தாங்க முடியாத பாரத்தை ஏற்றிய பாரவண்டியில் பூட்டப்பட்ட மாடுகள் அதை இழுக்க

முடியாமல் எப்படி அவஸ்த்தைப்படுகிறதோ அது போலவும் வண்டிசக்ரத்தில் பசை இன்றி இழுக்கமுடியாமல் இழுக்கின்றபோது அவைகளில் ஏற்படும் சப்தம்போல், மரணுவஸ்த்தையிலும் ஏற்படுகிறது என்று 'தத்யதான:ஸ¬ஸமாஹிதம்' என்ற ப்ரஹதாரண்யகவாக்யம் தெரிவிக்கின்றது. இந்தவிதம் ஜனனமரணங்களில் சுழன்று கொண்டிருக்கின்றதை அடிக்கடி சிந்தனை செய்வதனுலேயே வைராக்யம் ஏற்படும்.

6. அவதாரிகை : நித்யமுக்தஸ்வரூபமான ப்ரஹ்மமென்பதற்கு ஸம்ஸாரித்வம் எப்படி ஏற்படமுடியும்? என்ருல், உண்மையில் ப்ரஹ்மத்திற்கு ஸம்ஸாரித்வம் என்பது ஸ்வாபாவிகமாக கிடையாது. ஆனுல் அனுதி அவித்யையினுல் கல்பிதமான லிங்கசரீர உபாதியினுல் ஜீவபாவம் ஏற்படுகிறது. அதனுல் ஸம்ஸாரம் ஏற்படுகிறது.

ச்லோகம் :

शुद्धः परो न खलु वाङ्मनसव्यतीतः संसारदुःखमतिदुः सहमश्नुवीत ।
स्वाविद्यया हि पर एव स जीवभावमागत्य संसरति लिङ्गसमागमेन

ச்லோகார்த்தம் : வாக்கிற்கும், மனதிற்கும், எட்டாத சுத்தமான பரமாத்ம ஸ்வரூபம் ஸஹிக்கமுடியாத ஸம்ஸாரதுக்கத்தை அடைவதில்லை. தன்னுடைய அவித்யையினுல் ஏற்படும் லிங்க சரீரஸம்பந்தத்தின் மூலமாக அந்த பரமாத்மாவே ஜீவபாவத்தை அடைந்து ஸம்ஸாரத்தை அடைகின்றது.

வ்யாக்யானம் : வாக், மனஸ் என்பவைகளுக்கு அதீதம் ப்ரஹ்மஸ்வரூபம் என்பதால் ப்ரஹ்ம ஸ்வரூபத்திற்கு உண்மையில் ஸம்ஸாரித்வம்கிடையாது. ஆனுல் அனுதி அவித்யா உபாதி வஸாத்ப்ரஹ்மத்திற்கு ஜீவபாவம் ஏற்படுவதால் ஜீவனுக்கே ஸம்ஸாரித்வம் சொல்லப்படுகிறது. ஸர்வ விவகார அகோசரமான சுத்த சைதன்யஸ்வரூபத்திற்கு எதனுடனும் ஸம்பந்தமே கிடையாது. வ்யவகார அதீதமானஸ்வரூபத்திற்கு வ்யாவகாரிகமானதுக்கம் என்பதே ஏற்படமுடியாது. ப்ரஹமத்தையன்றி வேருனஜீவனுக்கு ஸம்ஸாரம் என்று சொல்லப்படுமானுல் அத்வைத ஹானி ஏற்படுமே? என்ருல், ப்ரமாத்மஸ்வரூபமே தன்னை ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்ட அஞ்-ஞானத்தினுல் கல்பிக்கப்பட்ட லிங்க சரீரஸம்பந்தத்தினுல் ஆத்மாவிற்கும் அனுத்மாவிற்கும் தாதாத்ம்யஸம்பந்தம் ஏற்படுகிறது. அதனுல்ஸம்ஸாரம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுவதால் உண்மையில் ஜீவனும் ப்ரஹ்மமும் வேறல்ல. ஆகையால், அத்வைத ஹானி ஏற்படாது. 'இதையே இந்த்ரோமாயாவி:புருரூபாயதே' போன்ற பலச்ருதிவாக்யங்கள் தெரிவிக்கின்றது.

7. அவதாரிகை : உபாதியுடன் கூடினவனுக்கே பந்தம் என்ருல், முக்தியும் உபாதிஸம்பந்தமுள்ளவனுக்குத்தானே சொல்லவேண்டும்?

ச்லோகம் :

ब्रह्मैव संसरति मुच्यत एतदेव दौवारिकं भवति संसरणं तु तस्य ।
मुक्तिः पुनर्भवति चिद्वपुषैव तस्य स्वाज्ञानतः स्वमहिमप्रतिबोधतश्च

ச்லோகார்த்தம் : ப்ரஹ்மமே ஸம்ஸாரத்தை அனுபவிக்கின்றது. ப்ரஹ்மமே மோக்ஷத்தை அடைகின்றது. இவ்விதம் ப்ரஹ்மத்தின் ஸம்ஸாரமானது அஞ்ஞானம் என்ற (லிங்க சரீரமென்ற) நிமித்தத்தின் மூலம் ஏற்படுகிறது. அதன் முக்தி என்பதோ ஸ்வஸ்வரூப ஞானத்தினுல் சித்ஸ்வரூப நிமித்தமாகவே ஏற்படுகிறது.

வ்யாக்யானம் : (பூர்வ) லோகத்தில் பந்தம் இருப்வனுக்குத்தான் முக்தி என்று சொல்லவேண்டும் என்பதுதான் ந்யாயம். அதனுல் நிர்விசேஷ ப்ரஹ்மத்திற்கே பந்தம் என்றும் அந்த ப்ரஹ்மத்திற்கே முக்தி என்றும் சொல்லப்படவேண்டும். அவ்விதமின்றி ஸோபாதிகத்திற்கே பந்தமென்றும் அதற்கே முக்தி என்றும் சொல்லப்படுமானுல், உபாதியென்பதும் முக்தநிலேயில் இருக்கிறதென்று சொல்லப்படுமானுல் அதை மோக்ஷமென்றே சொல்லமுடியாது. உபாதியிலிருந்து விடுபடுவதே முக்தி. ஆகவே இந்த ஆக்ஷேபத்திற்கு என்ன ஸமாதானம்?

சித்தா : உபாதி விசிஷ்டத்திற்கு பந்தம் என்று எங்களால் சொல்லப்படவில்லே. ப்ரஹ்மத்திற்கே உபாதிவஸாத்பந்தம் என்றும் அதற்கே முக்தி என்றும் சொல்லப்படுகிறது. ப்ரஹ்மஸ்வரூபத்திற்கு ஸம்ஸாரம் ஏற்பட லிங்க சரீரஸம்பந்தம் உபாயமாக இருக்கிறது. இவ்விதம் சொல்லப்படும் உபாதியும் அதன் ஸம்பந்தமும் ஆரோபிதம் என்பதால் ப்ரஹ்மத்தில் ஸம்ஸாரம் என்பது வாஸ்த்தவமாக இல்லே. அஸங்கஸ்வரூபமென்றும் விசிஷ்ட்டம் என்றும் சொல்லப்படுவது பொருந்தாது. ஆகவே பந்தத்திற்கு உபாதி தேவை என்பதற்காக முக்திக்கும் உபாதி தேவை என்று சொல்ல முடியாது. சித்ஸ்வரூபம் நித்யமுக்தம். ஆரோபிதமான அஞ்ஞானதிற்கும் சைதன்யத்திற்கும் எவ்விதஸம்பந்தமும் கிடையாது. அதனுல் அதிஷ்ட்டான ஸ்வரூபத்தில் எவ்வித விகாரத்தையும் உண்டுபண்ண முடியாது. அதேபோல் அஞ்ஞானகார்யமான லிங்க சரீரத்திற்கும் அஞ்ஞானத்தினுல்தான் ஸம்பந்தமேயன்றி ஸ்வயம் ஸம்பந்தம் ஏதுமில்லே, நிர்விசேஷமான தன் உண்மையானஸ்வரூபத்தை அறிவதே முக்தி. நிர்விசேஷஸ்வரூப ஞானம் ஏற்படுவதற்கு உபாதி அபேக்ஷையில்லே. இருக்கின்ற வஸ்துவை இருக்கின்றபடி தெரிவிப்பதே ஞானம். முக்தி என்று சொல்லப்படுகின்ற நிலேயில் அஞ்ஞான நிவர்த்தி என்பது ஒரு அம்ஸம். ஆனந்த ப்ரகாசம் என்பது மற்றொரு அம்ஸம் இதில் அஞ்ஞான நிவர்த்தி என்பது மஹாவாக்யவ்ருத்தியை அபேக்ஷித்து ஏற்படுகிறது. ஆனந்த அபிவ்யக்தி என்பது (ப்ரகாசம்) ஸ்வரூபமாகவே இருக்கின்றதால் அதற்கு எவ்வித அபேக்ஷையும் கிடையாது.

8. அவதாரிகை : கல்பிதவஸ்து என்பது ஒரு உபாதி மூலமாகவே ஏற்படுகிறது என்று சொல்லப்படுமானுல், ஸம்ஸாரம் போல் ஸ்பாவமாக இல்லாத அஞ்ஞானம் என்பதும் உபாதி மூலமாகவே ஆத்மஸ்வரூபத்தில் இருப்பதாகத்தானே சொல்லவேண்டும்? மேலும் வஸ்து எவ்விதம் இருக்கின்றதோ அதை அனுசரித்தே ஞானம் ஏற்படுகிறது என்ருல், அதற்கு அந்த:கரணம் என்ற உபாதியை அனுசரித்தே ஏற்படவேண்டும் என்று சொல்லவேண்டிய அவஸ்யம் என்ன? (அஞ்ஞானத்திற்கு உபாதி தேவை இல்லேயென்ருல், ஞானத்திற்கும் உபாதிதேவையில்லேயென்றே சொல்லலாமே?)

ச்லோகம் :

स्वाज्ञानान्वयिनी चिदेव भवति स्वज्ञानमस्याः पुनर्नास्त्यन्तःकरणोपरागशबलीभावं विना युक्तितः ।
कूटस्थे न तमस्विता न घटते नो विक्रिया तत्र नस्तस्मादेष विशेष ईषदुचितः स्वीकर्तुमेते प्रति ॥

ச்லோகார்த்தம் : சுத்த சைதன்யம் என்பதே அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகவும், விஷயமாகவும் இருக்கின்றது. ஆனுல் சுத்த சைதன்யத்தில் அந்த:கரணஸம்பந்தமின்றி ஸ்வரூப ஞானம் ஏற்படாது என்று விசாரிக்கின்றபோது அறியப்படுகிறது. கூடஸ்த்த சைதன்யத்தில் உண்மையில் அஞ்ஞானம் இருக்கமுடியாது என்ருலும், அஞ்ஞானம் இருக்கின்றதென்றே சொல்லப்படுகிறது. ஆனுல் அஞ்ஞானத்தினுல் கூடஸ்த்தசைதன்யத்தில் எவ்வித விகாரமும் ஏற்படமுடியாது என்பதே எங்கள் மத சித்தாந்தம். அதனுல் அஞ்ஞான ஆச்ரயம், ஞானுச்ரயம் என்ற இரண்டிற்கும் சிறிது பேதம் ஒத்துக்கொள்ளப்படவேண்டும்.

வ்யாக்யானம் : சுத்த சைதன்ய ஸ்வரூபத்தில்தான் அஞ்ஞான ஸம்பந்தம் என்றும், ஸபளஸ்வரூபத்தில்தான் விஞ்ஞான ஸம்பந்தம் என்றும் யுக்தியைக் கொண்டு ஒத்துக்கொள்ளப்படவேண்டும். ஏனெனில் அஞ்ஞானம் என்பது ப்ரஹ்ம சைதன்யத்தில் ஆரோபிதம் (கல்பிதம்) என்று சொல்லப்படுவதால் கூடஸ்த்தமாகவும், சுத்தமாகவும் இருக்கின்றப்ரஹ்மஸ்வரூபத்திற்கு எவ்வித ஹானியுமில்லே. அதனுல் அஞ்ஞானம் என்பது சுத்த சைதன்யத்தில் இருப்பதற்கு உபாதி அபேக்ஷையில்லே ஸுஷுப்தியில் அஞ்ஞானம் என்பது அந்த:கரண ஸம்பந்தம் இன்றியே இருக்கிறது என்பதை அறியலாம். ஆனுல் ப்ரஹ்ம சைதன்ய ஆவாரகமான அஞ்ஞான நிவர்த்தி என்பது ப்ரஹ்மஸ்வரூப ஞானத்தினுல்தான் ஏற்படவேண்டும். ஞானம் ஏற்படவேண்டுமானுல் அதில்ஒரு விக்ரியை ஏற்படவேண்டும். (நிர்விகாரமான) கூடஸ்த்தசைதன்யத்தில் எவ்வித விகாரமும் ஏற்படமுடியாகையால், விகாரத்தை (பரிணுமத்தை) அடையக்கூடிய அந்த:கரணமூலமாகவே ஏற்படவேண்டி இருக்கிறது. அதனுல் புத்தி என்ற உபாதி மூலமாகவே ஞானம் (போதம்) ஏற்படுகிறது என்று சொல்லவேண்டும்.

பூர்வ : இவ்விதம் சொல்லப்படுமானுல் அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் ப்ரஹ்மசைதன்யம் என்றும், ஞானுச்ரயம் அந்த:கரணம் என்றும் இரண்டிற்கும் ஆச்ரயம் வேறு என்று சொல்லப்படுமானுல் இரண்டிற்கும் பாத்யபாதகத்வம் எவ்விதம் சொல்லமுடியும் ?

சித்தா : நிர்விகாரமான கூடஸ்த்த சைதன்யத்தில் கல்பித அஞ்ஞானஸம்பந்தம் இருக்கின்றது என்று சொல்லப்படுவதற்காக, கூடஸ்த்தத்வத்திற்கு ஹானி ஏதும் கிடையாது. அஞ்ஞானம் இருக்கின்றது என்பதே சிதாத்மாவினுல்தான் ப்ரகாசிக்கின்றது. அதற்காக அஞ்ஞானத்தினுல் சிதாத்மஸ்வரூபம் பாதிக்கப்படுவதில்லே. அவ்விதம் பாதிக்கப்படுமானுல் சித்ஸ்வரூபம் ஜடமென்று சொல்ல நேரிடும். ஜடமாக இருக்குமானுல் அஞ்ஞானம் விரோதியல்ல. ஆனுல் அவிரோதியாக இருந்தபோதிலும் சைதன்யத்தின் சுத்தம், முக்தம், ஆனந்தம் முதலான ஸ்வாபாவிகமான தன்மைகளே மறைக்கின்றது. அதனுல் ஸத், சித் என்ற ஸாமான்யாம்ஸத்திற்கு விரோதமில்லேயென்ருலும், விசேஷாம்ஸத்திற்கு விரோதி என்றே சொல்லவேண்டும். ஆகையால் சைதன்யத்தில்

கல்பித அஞ்ஞானஸம்பந்தத்தினுல் அசுத்தி முதலானவைகள் இருப்பதாக அறியப்பட்டபோதிலும், கூடஸ்த்தத்வத்திற்கு எவ்வித ஹானியும் இல்லாததால் உபாதி மூலம் அஞ்ஞான ஸம்பந்தம் சொல்லப்பட வேண்டிய தேவைஇல்லை. சைதன்ய ஸ்வரூபத்தில் அஞ்ஞான ஸம்பந்தம் இருப்பதற்காக எவ்வித விக்ரியையும் ஏற்படுவதில்லை என்பதை சுஷுப்தி அவஸ்த்தையைக் கொண்டே அறிந்து கொள்ளலாம். ஆனுல் அஞ்ஞானநாசம் என்ற ஸ்வரூபபோதம் ஏற்படவேண்டுனுல் பரிணுமத்தை அடையக்கூடிய அந்த : கரணத்தின் மூலமாகவே ஏற்படவேண்டும். ஆகையால் 'அஹம்ப்ரஹமாஸ்மி' என்ற ஞானம் ஏற்படுவதற்கு அந்த:கரணம் என்ற (புத்தி) உபாதி அபேக்ஷிக்கப்படுகிறது. இவ்விதம் சொல்லாவிடில் ஆத்மாகாரவ்ருத்தி ஆத்மஸ்வரூபத்தினுலேயே ஏற்படுகிறது என்று சொல்லப்படுமானுல் கூடஸ்த்தத்வத்திற்கு ஹானி ஏற்படும். இவ்விதம் அந்த:கரண உபாதி மூலமாக ஞானம் ஏற்படவேண்டும் என்று சொல்வதற்காக அஞ்ஞானத்திற்கு ஆச்ரயம் வேறு ஞானத்திற்கு ஆச்ரயம் வேறு என்று சொல்லத்தேவைஇல்லை. அந்த:கரணம் என்பதும் அஞ்ஞானத்வாரா சைதன்யாச்ரயம் என்றே சொல்லவேண்டும் என்பதால் ஆச்ரயபேதமில்லை. ஆனுல் ஞானேற்பத்திக்கு விகாரத்தை அடையக்கூடிய புத்திவ்ருத்தி அபேக்ஷை இருக்கிறது என்றே சொல்லவேண்டும். இவ்விதம் ஞானம் ஏற்படுவதற்கு அந்த:கரண அபேக்ஷை இருக்கின்றது என்ருலும் அந்த ஞானத்தின் விஷயத்திற்கு அந்த:கரண அபேக்ஷை இல்லை. ஏனெனில்ஞானம் என்பது வஸ்து (தந்த்ரமாகவே) எவ்விதம் இருக்கிறதோ அவ்விதமே (வஸ்துஸ்வபாவத்தை அனுசரித்தே) ஏற்படுகின்றதால் ஆத்மஸ்வரூபபோதம் என்பது ஆத்மசைதன்யாகாரமாகவே ஏற்படுகின்றதால் ஸ்வயம்ப்ரகாஸமான விஷயம் ப்ரகாசிப்பதற்கு அந்த:கரண அபேக்ஷை கிடையாது.

**9.** அவதாரிகை : ஸம்ஸாரம் என்பது எந்த உபாதியினுல் ப்ரஹ்மஸ்வரூபத்தில் ஸம்பந்தப்படுகிறது என்ருல்,

ச்லோகம் : पुर्यष्टकं भवति तस्य परस्य मोहात्तेनान्वितस्य तु नभोमलवद्वयलीकम् ।
दुःखं त्रिधा भवति संसरणाभिधानं नान्यः परादधिकरूपभृदस्ति जीवः

ச்லோகார்த்தம் : அஞ்ஞானத்தினுல் அந்த பரமாத்மாவினிடம் புர்யஷ்ட்டகம் என்ற உபாதி ஏற்படுகிறது. அதன் ஸம்பந்தத்தினுல் பரமாத்மாவினிடம் ஸம்ஸாரம் என்ற மூன்று விதமான துக்கங்கள் ஆகாசமலம்போல் மித்யையாக ஏற்படுகிறது. ஜீவாத்மா என்பது பரமாத்மாவினிடமிருந்து வேருன ஸ்வரூபம் அல்ல.

வ்யாக்யானம் : ஆதி ஆத்மிகம், ஆதிதெய்விகம், ஆதிபௌதிகம் என்ற மூன்று விதமான துக்கங்களே, ஸம்ஸாரம். சைதன்யஸ்வரூபமான ஆத்மாவிற்கு அஞ்ஞான ஸம்பந்தம், அஞ்ஞான மூலமாகவே ஏற்படுகிறது. ஆனுல், அஞ்ஞான ஸம்பந்தமுள்ள ஆத்மாவிற்கு ஸம்ஸாரம் என்பது, அஞ்ஞான கார்யமான லிங்க சரீரத்தின் மூலமாக ஏற்படுகிறது. அதேபோல் தத்வ ஞானம் என்பதும் லிங்க சரீரத்தின் மூலமாகவே ஏற்படுகிறது என்றும் ஆத்மஞானம் என்பது (மோக்ஷம்) வஸ்துஸ்வபாவத்தை அனுசரித்து ஏற்படுகிறது என்றும் இதுவரை சொல்லப்பட்டது. இப்போது லிங்க சரீரம் ஸம்ஸாரத்திற்கு எப்படி காரணமாகிறது என்று சொல்லப்படுகிறது. சிதாத்ம ஸ்வரூபம் கார்யகாரண ஸங்காதங்களுக்கு விலக்ஷண ஸ்வரூபம். புரியஷ்ட்டகம் என்ற லிங்க

சரீரமே கர்மவாஸனைகளுடன் கூடி இருப்பதால் லிங்க சரீரம் ஸம்ஸாரகாரணம் என்று சொல்லப்படுகிறது. ஆனுல் ஸ்தூலசரீரமும் சேர்ந்தே காரணமாகின்றது. இந்த லிங்க சரீர ஸம்பந்தம் ஆத்மாவிற்கு தாதாத்ம்ய அத்யாஸத்தினுல் சொல்லப்படுகிறது. ஆத்மாவில் உண்மையில் தனிப்பட்ட முறையில் துக்கத்ரயஸம்பந்தம் கிடையாது. ஜீவன் என்பவன் பரமாத்மாவையன்றிவேருக இல்லாததால், ஜீவனுக்கும் ஸம்ஸாரம் இருப்பதாகச் சொல்லமுடியாது.

**10.** அவதாரிகை : ஜீவன் பரமாத்மாவைக் காட்டிலும் வேறு என்று சொல்லப்படும்பக்ஷத்தில், பரமாத்மாவின் அம்ஸம் ஜீவன் என்று சொல்லப்படுகிறதா? அல்லது பரமாத்மாவின் விகாரமா? அல்லது பரமாத்மாவைக் காட்டிலும் அத்யந்தபின்னமா? என்று விசாரிக்கப்படுமானுல் எந்த விதமும் சொல்லமுடியாது. ஏனெனில்,

**ச்லோகம் :**

नांशः परस्य न च तस्य विकार एष नात्यन्तमेव च विभिन्नवपुः परस्मात् ।
जीवोऽयमभ्युपगतः कुत एतदेवं ब्रह्मात्मतावचनजातविरोधहेतोः

**ச்லோகார்த்தம் :** ஜீவாத்மா என்பது பரமாத்மாவின் அம்ஸமென்ருே விகாரம் என்ருே சொல்லமுடியாது, அல்லது பரமாத்மாவைக் காட்டிலும் முற்றிலும் வேறுபட்ட ஸ்வரூபம் என்றும் சொல்லப்படவில்லை. ஏனெனில் இவை மூன்றும் பரமாத்ம ஐக்ய வாக்யங்களுக்கு விரோதமாக இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஜீவன், பரமாத்மாவின் அம்ஸம் என்று செல்லப்படுமானுல், நிரவயவம், நிஷ்கள ஸ்வரூபமான பரமாத்மாவிற்கு, சரீரத்திலுள்ள ஹஸ்தம் முதலான அம்ஸங்களைப் போல் ஜீவன் பரமாத்மாவின் அம்ஸம் என்று சொல்வதற்கு முடியாது. ஜீவன் என்பவனே, பரமாத்மாவினுல் சிருஷ்டிக்கப்பட்ட தேஜஸ் முதலான பூதங்களைப் போல் சிருஷ்டிக்கப்பட்டவன் என்று ச்ருதிவசனம் தெரிவிக்கவில்லை. அதனால் விகாரம் என்றும் சொல்லமுடியாது. விஸ்புலிங்கம்போல் ஜீவன் உண்டாகின்ருன் என்று முண்டகோபநிஷத்வாக்யம் தெரிவிக்கின்றதே என்ருல் அக்னியிலிருந்து விஸ்புலிங்கம் உண்டாகிறதாகச் சொல்லப்படவில்லை. ஒரே அக்னியானது அக்னியென்றும் விஸ்புலிங்கம் என்றும் உபாதியினுல் பேதம் அறியப்படுகிறது என்றே அந்த வாக்யம் தெரிவிக்கின்றது. ஆகவே ச்ருதிவாக்யம் ஜீவனுக்கு உற்பத்தியை தெரிவிக்கவில்லை. உற்பத்தி சொல்லப்படுமானுல் நாசமும் சொல்ல நேரிடும். ஜீவனுக்கு நாசம் சொல்லப்படுமானுல் க்ருதஹானி, அக்ருதப்ராப்தி என்ற தோஷம் ஸம்பவிக்கும். அதாவது ஜீவனுல் செய்யப்பட்ட பாபபுண்யபலன்களை அனுபவிக்கவில்லையென்றாகும். அதனுல் புண்யபாபபலனை அனுபவிக்க கூடியவனுக நித்யமாகவே ஜீவனை ஒத்துக் கொள்ளப்படவேண்டும். ந அன்யோ அஸ்தி த்ரஷ்ட்டா என்று ச்ருதிவாக்யமே தெரிவிக்கின்றது. ப்ரஹ்மத்தையன்றி வேருனத்ரஷ்ட்டா என்பவன் வேறுயாரும் இல்லை என்றே தெரிவிக்கின்றது. அவ்விதம் தெரிவிக்கவில்லை என்ருல், ஜீவபரமாத்ம ஐக்யத்தை தெரிவிக்கின்ற மஹாவாக்யார்த்தத்திற்கு பாதம் ஏற்படும். ஆகவே எந்த விதமாகவும் பரமாத்மாவைக் காட்டிலும் ஜீவன்வேறு என்று சொல்லமுடியாது.

**11.** அவதாரிகை : இதுமட்டுமல்ல, ஜீவபரமாத்மபேதம் சொல்லப்படுமானுல் வேறு சில தோஷங்களும் ஸம்பவிக்கும்.

ச்லோகம் :

अपि च विश्वमनुप्रविवेश तत् परममेव पदं परमात्मनः ।
इति वदत्सु सुहृत्स्विव तत्परश्रुतिवचःसु कथं स ततोऽधिकः

ச்லோகார்த்தம் : மேலும் "பரமாத்மாவின் ஸர்வ உத்க்ருஷ்ட்ட ஸ்வரூபமே இந்த ப்ரபஞ்சத்தில் ப்ரவேசித்தது" என்று அத்யந்தம் ஹிதத்தைச் செய்கின்ற மித்ரன் போன்று, ச்ருதி வாக்யங்கள் தாத்பர்யத்துடன் தெரிவிக்கின்றபோது, பரமாத்மாவிலிருந்து ஜீவாத்மா என்பது எப்படி வேருக இருக்க முடியும்?

வ்யாக்யானம் : நிர்விசேஷபரமாத்மஸ்வரூபமே மாயை என்ற உபாதியைக் கொண்டு சிருஷ்டிக்கின்றபோது 'பஹு ஸ்யாம்ப்ரஜாயேயேதி' என்று அனேகமாக ஆகவேண்டுமென்று ஸங்கல்பம் செய்தது. முதலில் ரூப, ரஸம் முதலான பஞ்ச சூக்ஷ்ம பூதங்களை சிருஷ்டித்து, இதனுல் மட்டும் ப்ரபஞ்சம் வ்யவஹாரயோக்யமாக ஆகாது என்று யோஜித்து சிருஷ்டிக்கப்பட்ட பஞ்ச பூதங்களின் பஞ்சீகரணம் செய்து (அல்லது த்ரிவித்கரணம் செய்து) அந்த பூதங்களில் ப்ரவேசித்து, 'அனேன ஜீவனே ஆத்மனு அனுப்ரவிச்ய நாமரூபவ்யாகரவாணி' என்று நாமரூபமாகஆகப்போகிறேன் என்று தெரிவித்து, தன்ஸ்வரூபத்திற்கு வேருக இல்லாத ஜீவஸ்வரூபத்தில் அனுப்ரவேசம் செய்தது என்று இந்த ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. அதனுல் ஜீவன் ப்ரஹ்மத்தின் அம்ஸமென்ருே அவயவமென்ருே, அல்லது அத்யந்தம் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் பின்னம் என்ருே சொல்லமுடியாது. 'தத் ச்ருஷ்ட்வா ததேவானுப்ராவிஸத்' என்று ப்ரவேச ச்ருதியும் தெரிவிக்கின்றது. மேலும்நிர்விசேஷமான ப்ரஹ்மமானது ச்ருஷ்டியாதிகளைச் செய்தது என்று சொல்வதே பொருந்தாது. அவ்விதம் பொருந்தாமல் இருந்தும் சிருஷ்டியை தெரிவிப்பதற்கு என்ன காரணம் என்ருல், அத்வைதமே தத்வம் என்பதை தெரிவிப்பதில்தான் சிருஷ்டி முதலான வாக்யங்களுக்கு தாத்பர்யம். ஆகவே சிருஷ்டி வாக்யங்களைக் கொண்டு ப்ரஹ்மம் ஸாவயவமென்ருே சொல்லமுடியாது. அதற்காக சிருஷ்டி வாக்யங்கள் அர்த்தவர்தம் என்றும் தள்ள முடியாது. ஆகவே அத்வைதம் தத்வம் என்று போதிப்பதில்தான் தாத்பர்யம் என்றே சொல்லவேண்டும். யாகம், யக்ஞம் முதலானவைகளை விதிக்கின்ற கர்மகாண்ட வாக்யங்களே யாகாதிகளை விதிப்பதில் தாத்பர்யம் இல்லையென்றும் அத்வைத தத்வத்தை போதிப்பதில்தான் தாத்பர்யம் என்றும் கர்மகாண்டச்ருதிகளுக்கே அர்த்தம் செய்யப்படுகிறது என்ருல் சிருஷ்டி முதலான அர்த்தவாத வாக்யங்களுக்கு பேதத்தை தெரிவிப்பதில் தாத்பர்யம் என்று எப்படிச் சொல்லமுடியும்? 'தத்பரம்' என்ற தத்பரச்ருதிவாக்யங்கள் அபேதம் என்பதையே தாத்பர்யமாகக் கொண்டு போதிக்கின்றது. ஆகவே, ஜீவன் ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறு என்று எந்தவிதமாகவும் சொல்லமுடியாது.

**12.** அவதாரிகை : புரியஷ்ட்டகம் என்பது அஞ்ஞானகார்யம் என்று சொல்லப்படுவதில் ப்ரமாணம் என்னவென்ருல்,

**ச்லோகம் :**

प्रच्यावि वस्तु यदिहास्ति निजस्वरूपादप्रच्युतैकरससंविदधीनमस्य ।
प्रच्यावितास्फुरणमित्यवगत्य तत्र तत्कल्पितं सकलमाकलयानुमानात्

**ச்லோகார்த்தம் :** தன்னுடைய ஸ்வரூபத்திலிருந்து எந்த வஸ்து பின்னமாக இருக்கின்றதோ அந்த வஸ்து பேதமற்ற ஏகரஸமான சைதன்யத்தின் அதீனத்திலுல்தான் பின்னமாக ஸ்புரிக்கின்றது என்று அறிந்து கொள்ளவேண்டும். இதேபோல் ஸர்வ வஸ்துக்களும் இவ்விதமே சைதன்யத்தில் கல்பிதம் என்பதை அனுமானத்திலுல் அறிந்து கொள்வாயாக.

**வ்யாக்யானம் :** ஆத்மவஸ்துவிற்கு விலக்ஷணமாக இருக்கின்ற ஸர்வமும் ஆத்மஸ்வரூபத்தில் அஞ்ஞான கல்பிதம் என்றே சொல்லவேண்டும். அதாவது அனுத்மவஸ்துக்குள் எல்லாமே ஆத்ம ப்ரகாசத்திலுல்தான் ப்ரகாசிக்க வேண்டும். ஜடமான வஸ்த்துக்கள் ஸ்வயமேப்ரகாசிப்பதாகச் சொல்லமுடியாது. இவ்விதம் ஸம்வித்ஸ்வரூபத்திலுல்தான் ஸர்வமும் ஸ்புரிகின்றதால், ஸ்வப்னபதார்த்தம் போல் ஸர்வமும் ஆத்மஸ்வரூபத்தில் ஆரோபிதம் என்றே அனுமானத்தைக் கொண்டு அறியப்படவேண்டும்.

**பூர்வ :** ஜீவன், பரமாத்மா என்ற இரண்டுமே சித்ரூபம் என்ற அம்ஸத்தில் ஸமானமே என்றும், கார்யமானதேஹத்தில் ப்ரவேசித்தசைதன்யமே ஜீவபாவேன இந்த சரீரத்தில் இருப்பதாகச் சொல்லப்பட்டபோதிலும், இரண்டும் ஒன்றே என்று அபேதம் சொல்வது பொருந்தாது. ஏனெனில் ப்ரஹ்மஸ்வரூபத்தில் இல்லாத கர்த்ருத்வாதி தர்மங்கள் ஜீவனிடம் இருக்கின்றது. அதனுல் இரண்டும் ஒன்று என்று சொல்வது சரியல்ல.

**சித்தா :** கர்த்ருத்வாதிகள் ஜீவனிடம் ஸ்வாபாவிகமாக இருக்கிறதென்று சொல்லமுடியாது. முன்னுல் சொல்லப்பட்ட அனுமானத்தின்மூலம் கர்த்ருத்வாதிகள் மித்யை என்றே தீர்மானிக்கப்பட்டிருக்கின்றது. ஜீவனுடைய உண்மையான ஸ்வரூபம் சைதன்யாத்மத்வம்தான். ஆத்மஸ்வரூபத்தையன்றி வேருக அறியப்படுபவைகள் அவ்வப்போது வந்து போகக் கூடியதாக இருக்குமானுல் அவை எல்லாமே ஆரோபிதம். ஆகவே சைதன்யத்தையன்றி வேருகவும், அதிகமாகவும், அறியப்படுவதாகவும் இருக்கின்ற புத்தி முதலானவைகள் போல கர்த்ருத்வாதிகளும் ஆரோபிதம். த்ருக்ஸ்வரூபமான கூடஸ்த்தமான சாக்ஷிசைதன்யத்தின் ப்ரகாசத்திலுலேயே அவைகள் ப்ரகாசிக்கின்றது. இவ்விதம் ஆத்ம சைதான்யத்திலுல் ப்ரகாசிப்பது எல்லாமே ஜடம். அனுத்ம வஸ்துக்கள் எல்லாம் அநித்யம். சுஷுப்தி நிலையில் கர்த்தருத்வாதிகள் ப்ரகாசிக்கவில்லை. ஆத்மசைதன்யப்ரகாசம் ஒன்றே ப்ரகாசிக்கின்றது. அதனுல் கர்த்த்ருத்வம் முதலானவைகள் ஆத்மஸ்வரூபமில்லை. 'யத் த்ருச்யம் தத்கல்பிதம்' என்ற ந்யாயத்தின்படி அவைகள் மித்யை என்றே சித்திக்கின்றது. இந்தவிதம் ஜீவனிடம் அறியப்படும் கர்த்ருத்வம் முதலானவை, ஆரோபிதம் என்பதால் சைதன்ய ஸ்வரூபமான ஜீவனும் ப்ரஹமமும் ஒன்றே என்று அபேதம் சொல்லப்படுவதில் பொருந்தாதது ஏதுமில்லை.

**13.** அவதாரிகை : நித்யசுத்தமான ப்ரஹ்மம், ஸ்வஅவித்யையினுல் ஸம்ஸாரபாவத்தை அடைகின்றது என்று சொல்லப்படுமானுல், அஞ்ஞானம் ப்ரஹ்மாச்ரயம் என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அவ்விதம் சொல்லப்படுமானுல் அஞ்ஞானம் ஜீவாச்ரயமாக அறியப்படுகின்ற அனுபவத்திற்கு விரோதமாக இருக்கின்றதே? என்ருல்,

ச்லோகம் :

चैतन्यवस्तुविषयाश्रय एव मोहो नाद्वैतवस्तुविषयाश्रयकोऽप्रतीतेः ।
बुद्ध्यादिवेष्टितचितो न तमस्वितेति ब्रह्माश्रयत्वमुदितं तमसः पुरस्तात्

ச்லோகார்த்தம் : நித்யசுத்தமான ப்ரஹமம் ஸ்வஅவித்யையினுல் ஸம்ஸார பாவத்தை அடைகின்றது என்று சொல்லப்படுமானுல் அஞ்ஞானம் ப்ரஹ்மாச்ரயம் என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அவ்விதம் சொல்லப்படுமானுல் அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்று அறியப்படுகின்ற அனுபவத்திற்கு விரோதமாகிறதே? என்ருல்

வ்யாக்யானம் : அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகவும் விஷயமாகவும் சுத்தசைதன்யமே என்று 'ஆச்ரயத்வ விஷயத்வ பாகினி நிர்விபாக சிதிரேவகேவல' என்று சொல்லப்படுகிறது. ப்ரஹ்மமென்பது அஞ்ஞானி என்று ஆகமத்தினுலோ அனுபவத்தினுலோ அறியப்படவில்லை. ஆனுல் அஞ்ஞானம் என்ற கேவல ஜடத்திற்கும் அஞ்ஞான ஆச்ரயத்வம் சொல்லமுடியாது. ப்ரஹ்மசைதன்யத்திற்கும் அஞ்ஞான ஆச்ரயத்வம் சொல்லமுடியாது. அஞ்ஞான கார்யமான ஜீவனுக்கும் அஞ்ஞான ஆச்ரயத்வமோ அஞ்ஞான விஷயத்வமோ சொல்லமுடியாது. "பூர்வ சித்த தமஸோஹி பச்சிம; நஆச்ரயோபவதி நாபிகோசர;" என்று சொல்லப்படுகின்றதால் அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்றும் சொல்லமுடியாது என்ற காரணத்தினுல் ப்ரஹ்மாச்ரயம் என்று சொல்லப்பட்டதேயன்றி அதுவே தாத்பர்யமாக சொல்லப்படவில்லை. ஆகையால் கேவல ப்ரத்யக்சைதன்யத்திற்கே ஆச்ரயத்வம், விஷயத்வம் என்ற இரண்டும் ஸம்பவிக்கின்றது என்பதையே 'கேவல நிர்விபாக சிதிரேவ' என்று தெரிவிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**14.** அவதாரிகை : அஞ்ஞானம் ப்ரஹ்மாச்ரயம் என்று சொல்லலாமே என்ருல், அவ்விதம் சொல்வதற்குரிய ப்ரமாணம் ஏதுமில்லை.

ச்லோகம் :

ब्रह्माश्रयं न हि तमोऽनुभवेन लभ्यं नाप्यागमात्र च किमप्यपरं प्रमाणम् ।
ब्रह्माश्रयत्वविषयं तमसस्ततश्च प्रत्यक्प्रकाशविषयाश्रयमेतदस्तु

ச்லோகார்த்தம் : ப்ரஹ்மாச்ரயமான அஞ்ஞானம் என்பது அனுபவத்தினுலோ ஆகமத்தினுலோ சித்திப்பதில்லை. அஞ்ஞானம் ப்ரஹ்மாச்ரயம் என்று சாதிப்பதற்கு வேறு எந்தப் ப்ரமாணமும் கிடையாது. ஆகையால் அஞ்ஞானம் என்பது ப்ரத்யக்சைதன்யத்தையே ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்டிருக்கின்றதென்றே ஒத்துக்கொள்ளப்பட வேண்டும்.

வ்யாக்யானம் : ப்ரஹ்மமென்பது அஞ்ஞானி என்று ஆகமமும் தெரிவிக்கவில்லை அனுபவமும் இல்லை. வேறு எந்த ப்ராணத்தினுலும் அறியப்படவுமில்லை. ஸ்வஸ்வரூபேண சைதன்யம் அறியப்படவில்லை. என்பதாலேயே சைதன்யம் ஆவ்ருதம் என்று

சொல்லப்படுகிறது. அறியப்படுகிறது. கேவல ஜடத்திற்கு அஞ்ஞான ஆச்ரயத்வம் ஸம்பவிக்காது என்பதால் ஜீவனென்னும், பரமாத்மாவென்றும் விபாகம் அற்ற கேவல ப்ரத்யக்சைதன்யத்திற்கே அஞ்ஞான ஆச்ரயத்வம், அஞ்ஞான விஷயத்வம் இரண்டும் ஸம்பவிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**15.** அவதாரிகை : அஞ்ஞானம் ப்ரஹ்மாச்ரயம் இல்லையென்றால் ஜீவாச்ரயம் என்றே சொல்லலாமே ?

ச்லோகம் :

जीवत्वमेव तु तदाश्रयमध्यपाति नेच्छन्ति युक्तिकुशला न हि युज्यते तत् ।
अज्ञानमेव खलु तन्न तमस्तमस्वि चैतन्यवस्तु पुनरस्तु न तद्विरोधः

ச்லோகார்த்தம் : ஜீவன், அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமென்று யுக்தி குசலர்கள் ஒத்துக்கொள்வதில்லை. ஏனெனில் அது யுக்திக்கு பொருந்தாது. ஜீவத்வம் என்பதே அஞ்ஞானம்தான். அதனால் அஞ்ஞானம் என்பதே அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாக இருக்க முடியாது. ஆகையால் சைதன்ய வஸ்துவே அஞ்ஞான ஆச்ரயம் என்று சொல்லவேண்டும். அதனால் விரோதம் ஏதுமில்லை.

வ்யாக்யானம் : அஞ்ஞான கார்யமான ஜீவத்வத்வம் என்ற தன்மையுடனன்கூடிய சைதன்யம் அஞ்ஞான ஆச்ரயம் என்று சொல்லமுடியாது. அஞ்ஞானத்தினால் உண்டாக்கப்பட்ட ஜீவனே தனக்கு ஆச்ரயம் என்று சொல்லப்படுமானால் ஆத்மாச்ரயம் என்ற தோஷம் ஸம்பவிக்கும். அதனால் அஞ்ஞான கார்யமான ஜீவனை உபலக்ஷிதமாகக் கொண்ட ப்ரத்யக்சைதன்யமே, அஞ்ஞானத்திற்கு ஆச்சரயமாகவும் இருக்கின்றது என்று சொல்வதே ந்யாயத்திற்கும் அனுபவத்திற்கும் விரோதம் இல்லாமல் இருக்கும். ஆகையால் அஞ்ஞானகார்யமான ஜீவன், காரணமான அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமென்று சொல்வது சரியல்ல.

**16.** அவதாரிகை : புரியஷ்டகம் என்பதே ஸம்ஸாரத்திற்கு காரணம் என்று முன்னால் சொல்லப்பட்டது. புரியஷ்டகம் என்றால் என்ன என்று விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

कर्मेन्द्रियाणि खलु पञ्च तथा पराणि बुद्धीन्द्रियाणि मनआदिचतुष्टयं च ।
प्राणादिपञ्चकमथो वियदादिकं च कामश्च कर्म च तमः पुनरष्टमी पूः

ச்லோகார்த்தம் : கர்மேந்த்ரியம் ஐந்து, ஞானேந்த்ரியம் ஐந்து, அந்த:கரணம் நான்கு, ப்ராணன் ஐந்து, ஆகாசம் முதலான பூதங்கள் ஐந்து, காமம், கர்மம் இவைகளுடன் அஞ்ஞானம் என்பது எட்டாவது புரமாக (உபாதியாக) இருக்கிறது.

வ்யாக்யானம் : சைதன்யம் என்பதை ஆச்ரயமாகவும், விஷயமாகவும் கொண்ட அஞ்ஞானமே ஸம்ஸாரம் என்பதற்குக் காரணம். அஞ்ஞான கார்யமே ஸம்ஸாரம் புர்யஷ்டகம் என்ற லிங்க சரீர விசிஷ்டத்திற்கும் ஸம்ஸாரம் சொல்லப்படவில்லை. புர்யஷ்டகம் என்பது ஸம்ஸாரம் ஏற்படத்வார மாத்ரமாக இருக்கின்றது. பூதபஞ்சகம் ஒன்று வாக், பாணி, பாதம், பாயுரு, உபஸ்த்தம் என்ற கர்மேந்தரியம் ஐந்தும் ஒன்று.

சக்ஷுஸ் முதலான ஞானேந்த்ரியம் ஐந்தும் ஒன்று. மனஸ், புத்தி, சித்தம் அஹங்காரம் என்ற நான்கும் சேர்ந்து ஒன்று. காமம் கர்மா அவித்யை மூன்றும் சேர்ந்து ஒன்று. ஆக இந்த எட்டும் சேர்ந்ததே புர்யஷ்டகம். கர்மா என்பது தர்மாதர்ம லக்ஷணம், தமஸ் என்பது ப்ராந்தி ஞானம். மற்றவைகளின் அர்த்தம்ப்ரசித்தம்.

**17.** அவதாரிகை : புர்யஷ்டகம் என்பதையன்றி வேருக, வித்யை, பூர்வப்ரஞ்ஞை என்ற இரண்டும் கூட ஸம்ஸார காரணம் என்று சொல்லப்படலாமே?

ச்லோகம் :

विद्या च विश्वविषयानुभवोत्थपूर्वप्रज्ञा च कर्मवचसैव तु संगृहीते ।
बन्धप्रयोजकतया सदृशत्वहेतोरेकत्र च श्रुतिवचस्युपसंग्रहेण

**ச்லோகார்த்தம் :** ப்ரபஞ்ச விஷயமான ஞானமும், விஷய அனுபவத்தினுல் ஏற்படும் பூர்வ ப்ரஞ்ஞை என்பதும் (வாஸனே) கர்ம மென்ற பதத்தினுல் புர்யஷ்டகத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஏனெனில் இவை இரண்டுமே பந்த ஹேதுவாக இருக்கின்றதால், கர்மாவிற்கு ஸமானமாகவே இருக்கின்றது. ச்ருதியிலும் இவை இரண்டையும் கர்மாவுடன் சேர்த்தே சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** லோகத்தில் அனேக ஜன்மாக்களில் அனுபவித்த விஷயவாஸனைகளேயே பூர்வப்ரஞ்ஞையென்றும், வாஸனை முதலானவைகளை வித்யை என்றும் சொல்லப்படுகிறது. அதனுல் கர்மா என்பது எப்படி பந்தத்திற்கு காரணமாகின்றதோ அதுபோல் இவைகளும் பந்த காரணமாக ஆகின்றதால் எல்லாவற்றையும் சேர்த்தே 'கர்மா' என்ற ஒரே பதத்தினுல் சொல்லப்பட்டிருக்கின்றது. "தம்வித்யா, கர்மணி, ஸமன்வாரபதே பூர்வ ப்ரஞ்ஞாச்ச" என்று மூன்றையும் சொல்லப்படுகிறது என்ருலும் சுருக்கமாக 'கர்மா' என்றே ஒரே பதத்தினுல் இவைகளைச் சேர்த்தே தெரிவிக்கின்றது. தனித்தனியாகச் சொல்ல வேண்டுமானுல் புரிதசகம் என்றே சொல்லவேண்டும். ஆகவே, எல்லாம் பந்த காரணம் என்ற சாத்ருச்யத்தைக் கொண்டு உபலக்ஷணமாக கர்மா என்ற ஒரே பதத்தினுல் சொல்லப்படுகிறதால், இதை புர்யஷ்டகம் என்று சொல்லப்படுகிறது. அதாவது பந்தகாரணம் சாத்ருச்யம் என்ற இரண்டு காரணங்களைக் கொண்டு புர்யஷ்டகம் என்றுசொல்லப்படுகிறது.

**18.** அவதாரிகை : இதே விஷயம், மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

तं विद्येति हि वाक्यमेकमिह च स्पष्टं त्रयं कीर्तितं तस्मात्कर्मवचस्तयोरपि भवेत्संग्राहकं कारणात् ।
विद्या चात्र चतुर्विधाऽप्यभिमतैवाऽऽरम्भिका कर्मवत् संस्कारोऽपि तथा चतुर्विध इति ज्ञेयस्तथा संभवात्

**ச்லோகார்த்தம் :** 'தம் வித்யாகர்ம்மணீஸமன்வாரபேதே பூர்வப்ரஞ்ஞாச்ச' என்று ப்ரஹதாரண்யகத்தில் ஒரே வாக்யத்தில் இந்த மூன்றும் ஸ்பஷ்டமாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் கர்மமென்ற பதத்தினுல்வித்யை பூர்வப் பிரஞ்ஞை என்ற இரண்டையும் புர்யஷ்டகத்தில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதில் வித்யை என்பது நான்கு விதமாக ஒத்துக் கொள்ளப்படுகிறது. இந்த வித்யை என்பதும் கர்மாவைப் போல் ஸம்ஸாரத்திற்கு காரணமாகின்றது. அதேபோல் ஸம்ஸ்க்காரம் என்பதும் நான்கு

விதம் என்று அறிய வேண்டும். ஏனெனில் அதுவும் ஸம்பவிக்கக் கூடியதேயாகும். அவிஹிதமான உபாஸனம், அப்ரதிஷித்தமான உபாஸனம் என்றும் இரண்டுவிதம். இந்த விதம் உபாஸனம் என்பது நான்கு விதம்.

இதேபோல் கர்மா என்பதும், விஹிதம், ப்ரதிஷித்தம், அவிஹிதம், அப்ரதிஷித்தம் என்று சொல்லப்படுகிறது. அதாவது யாகம் விஹிதம், வதம் முதலானவைஹிம்ஸை ப்ரதிஷித்தம். ஆகாரம் அவிஹிதம், விகாரம் விளையாட்டுகள் அப்ரதிஷித்தம் என்று நான்கு விதம் சொல்லப்படுகிறது. இதேபோல் பூர்வ ப்ரஞ்ஞை என்பதும் நான்குவிதம். ஏனெனில் ஸம்ஸ்க்காரம் என்பது நான்குவித உபாஸனைகளினுலும் நான்குவித கர்மங்களினுலும் ஏற்படுகிறது. இவ்விதம் வித்யா, கர்ம, பூர்வப்ரஞ்ஞை என்ற மூன்றும் சேர்ந்து ஒருபுரி என்றும் கர்மாவில் தூண்டுகின்ற காமம் என்பது ஒன்று, காமத்திற்கு காரணமான தமஸ் என்ற மோஹம் என்பது ஒன்று ஆக இந்த மூன்று புரிகளைப் பற்றி இங்கு விளக்கப்பட்டது. மற்ற ஐந்து புரிகள் ப்ரசித்தமானதால் அதுபற்றி விளக்கம் தேவை இல்லை.

**19.** அவதாரிகை : ஜீவனுக்கு லிங்க சரீரமே பந்தகாரணம் என்று ஒருசிலரும், வேறு சிலர் புர்யஷ்டகம் பந்த காரணம் என்றும் சொல்கிறுர்கள். இந்த இரண்டில் எது த்வம்பத உபாதி என்று சொல்லப்படுகிறது ?

ச்லோகம் :

पुर्यष्टकं तदिदमप्यभवद्धि लिङ्गं तेनोच्यते तदपि लिङ्गगिरा क्वचितु ।
पुर्यष्टकं न खलु लिङ्गगिरोऽभिधेयं मुख्यं तु सप्तदशकं प्रथितं हि लिङ्गम्

ச்லோகார்த்தம் : ஜீவனுக்கு லிங்க சரீரமே பந்த காரணம் என்று ஒருசிலரும் வேறுசிலர் புர்யஷ்டகமே பந்த காரணம் என்றும் சொல்கிறுர்கள். இந்த இரண்டில் த்வம்பத உபாதி என்று எதைச் சொல்லப்படுகிறது ?

வ்யாக்யானம் : கடோப நிஷத்தில் "ஆத்மேந்த்ரிய மனேயுக்தம் போக்தேத்யாஹு: மனீஷிண:" என்றும் ப்ரஹதாரண்யகத்தில் "லிங்கம் மனேயத்ரநிஷக்தமஸ்ய" என்றும் தெரிவிக்கின்றது. லிங்கம் என்ற சப்தம் புர்யஷ்டகம் என்பதையே தெரிவிக்கின்றது. ஆத்ம ஸம்பந்தம் இந்தசரீரத்தில் இருக்கிறது என்பதற்கு சமமாக இருப்பதால் லிங்க சரீரம் என்று சொல்லப்படுகிறது. அதேபோல் புர்யஷ்டகம் என்பது கமகமாக இருக்கின்றதால் அதையும் லிங்கம் என்று லக்ஷணையாகச் சொல்லப்படுகிறது. அதனுல் புர்யஷ்டகம் என்ற சப்தத்திற்கு லிங்கம் என்று அர்ததமில்லை. கர்மேந்த்ரியம், ஞானேந்த்ரியம், ப்ராணபஞ்சகம், புத்திமனஸ் என்ற பதினேழும் சேர்ந்தே இந்த சரீரத்தில் ஆத்மா இருக்கிறதென்பதற்கு லிங்கமாக ஆகிறது. இந்தக் காரணத்தினுலேயே சப்தசகத்தையும் லிங்கம் என்றுமுக்யார்த்தமாகச் சொல்லப்படுகிறது. எந்த ஜன்மாவிலும் சப்தசகம் என்றலிங்க சரீரம் நியதமாக இருக்கிறது என்பதால் லிங்கம் என்பதே முக்யார்த்தம். வித்யா, கர்மா, பூர்வப்ரஞ்ஞா, ப்ராந்தி, பூதசூக்ஷ்மம் என்பதெல்லாம் ஒவ்வொரு ஜன்மாவிலும் மாறுதலை அடைகின்றது. (ச்க்ஷுராதிகள் என்ற சப்தசகம்போல் மாருமல் இருப்பதில்லை) அதனுல் புர்யஷ்டகம் என்பதற்கு லிங்கம் என்பது முகயார்த்தமில்லை. ஆனுல் சப்த தசகம்

என்பதுபுர்யஷ்ட்டகத்தில் சேர்ந்திருப்பதால் லக்ஷணையாக புர்யஷ்ட்டகத்தை லிங்கம் என்றும் ஜீவ உபாதி என்றும் உபசாரமாகச் சொல்லப்படுகிறது.

**20.** அவதாரிகை : சப்த தசகம் என்றால் என்ன?

ச்லோகம் :

इह तावदक्षदशकं मनसा सह बुद्धितत्त्वमथ वायुगणः ।
इति लिङ्गमेतदमुना पुरुषः खलु संगतो भवति जीव इति

ச்லோகார்த்தம் : இந்தவிதம், இந்த்ரியங்கள் பத்து, மனஸ், புத்தி ப்ராஷணன் ஐந்து என்ற இந்த பதினேழும் சேர்ந்ததே லிங்கம் என்று சொல்லப்படுகிறது. இவைகளுடன் சேர்ந்த பரமாத்மாவே ஜீவன் என்று சொல்லப்படுகிறது.

வ்யாக்யானம் : லிங்க சரீரஸம்பந்தமே சைதன்யத்திற்கு ஜீவபாவம் ஏற்பட காரணமாகிறது என்றாலும், அந்த லிங்க ஸம்பந்தத்துடன், புர்யஷ்ட்டகஸம்பந்தமும் சேர்ந்ததுதான் ஸம்ஸாரம். காமம், கர்மா இவைகள்இன்றி ஸம்ஸாரம் கிடையாது. புத்தி முதலான பதினேழும் சேர்ந்தேலிங்க சரீரம். இந்த லிங்க சரீரத்தில் தாதாத்ம்ய அத்யாஸமுடைய ஆத்மா என்பதே ஜீவன் என்று வ்யவஹாரம் செய்யப்படுகிறது.

**21.** அவதாரிகை : எப்படியெனில்,

ச்லோகம் :

न पुराष्टकेन रहितस्य तव क्वचिदस्ति संसरणदुःखयुजा ।
न पुराष्टकेन सहितस्य तथा क्वचिदस्ति दुःखविगमश्च तव

ச்லோகார்த்தம் : புர்யஷ்ட்டகம் என்பது இல்லாமல், உனக்கு ஸம்ஸாரதுக்கம் என்பதுடன் ஸம்பந்தம் என்பதே ஒரு காலத்திலும் ஏற்படமுடியாது. அதேபோல் புர்யஷ்ட்டகத்துடன் இருக்கின்ற உனக்கு துக்கமோசனம் என்பதும் ஒரு காலத்திலும் கிடையாது.

வ்யாக்யானம் : ஸம்ஸாரம் என்பதே துக்கம். புர்யஷ்ட்டக ஸம்பந்தமில்லாமல் துக்கம் என்பது ஸம்பவிக்க முடியாது என்ற விஷயம், அன்வயவ்யதிரேகத்தினால் அறிந்து கொள்ளலாம். 'அசரீரம் வாவஸந்தம்' என்ற வாக்யம் இதே கருத்தை தெரிவிக்கின்றது. லிங்க சரீர ஸம்பந்தம் உள்ள பர்யந்தம் "ந ஹ வை ஸசரீரஸ்யஸத ப்ரியாப்ரியயோ: அபஹதி : அஸ்தி" என்றும், "அசரீரம் வாவஸந்தம் நப்ரியா ப்ரியுயே ப்ருசத:" என்று உபநிஷத் வாக்யங்கள் தெரிவிக்கின்றது. ஆகவே புர்யஷ்ட்டக ஸம்பந்தம் இருந்தால்தான் ஸம்ஸாரம் ஏற்படுகிறது என்றும் லிங்க சரீரம் ஸம்ஸார காரணமில்லை என்பதும் அன்வயவ்யதிரேகத்தினால் அறியப்படுகிறது.

**22.** அவதாரிகை : ஜீவனுக்கு ஸம்ஸார அனுபவம் ஏற்படுவதற்கு புர்யஷ்ட்டகம் காரணம் என்றும், லிங்கசரீர ஸம்பந்தம் ஸ்வாபாவிகம் என்றும் சொல்லப்படுமானால் முக்தி என்பதே ஸம்பவிக்கமுடியாதே

ச்லோகம் :

तव नित्यमुक्तसुखाचिद्वपुषो न कदाचिदस्ति पुरसंगमनम् ।
तव मायया विरचितं सकलं पुरसंगतिप्रभृतिकं वितथम्

ச்லோகார்த்தம் : நித்ய முக்த சிதானந்த ஸ்வரூபஞன உனக்குபுரஸம் பந்தம் என்பது ஒரு காலத்திலும் கிடையாது. உன்னுடைய அவித்யையினுல் கல்பிதமான புரஸம்பந்தம் முதலான அனைத்துமே மித்யையே யாகும்.

வ்யாக்யானம் : ஆத்மஸ்வரூபத்தில் சரீரஸம்பந்தம் ஆரோபிதம் என்று சொல்லப்படுவதால் முக்காலத்திலும் உண்மையில் ஸம்பந்தம் என்பதே கிடையாது. இவ்விதம் ஆத்மா, அஸங்கம் என்று சொல்லப்படவில்லை யென்ருல் ஆத்மா நித்ய முக்த ஸ்வரூபம் என்று தெரிவிக்கின்ற ஆகமம், ப்ரமாணம் என்றே சொல்லமுடியாது. ஆகவே ஸம்ஸாரம் என்பது அஞ்ஞானத்தினுல் ஆத்மாவில் கல்ப்பிதம். ஸர்வமும்ஸ்வ அஞ்ஞானகல்பிதம் என்றவிஷயம் முன்பே சொல்லப்பட்டிருக்கிறது.

23. அவதாரிகை : இந்தவிஷயம் த்ருஷ்டாந்தத்தின்மூலம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

मलिनं नभो न हि कदाचिदभूद्विमले कदाचिदभवन्न नभः ।
उभयं नभस्यभवदेवमिह त्वयि नित्यमुक्तचिति संसरणम्

ச்லோகார்த்தம் : ஆகாசம் என்பது எக்காலத்திலும் அசுத்தமாக இல்லை. அதேபோல் ஆகாசம் என்பது ஒருபோதும் சுத்தமாகவும் இல்லை. ஆனுலும் இவை இரண்டும் எப்படி ஆகாசத்தில் ஏற்படுகிறதோ அதேபோல் நித்யமுக்தசைதன்யஞன உன்னிடத்தில் ஸம்ஸாரம் என்பது ஏற்படுகிறது.

வ்யாக்யானம் : ஆபாஸதர்மங்கள் அதிஷ்டானஸ்வரூபத்தில் எவ்விதஹானியும் ஏற்படுத்தமுடியாது. ஆகாசம் என்பது ஸ்வபாவத்தில் அஸங்கம், நிரவயவம் என்பதால் எந்தவிதமான மலங்களும் ஆகாசம் என்பதை ஸ்பர்ஸிக்க முடியாது. ஆனுல் ஆகாசம் நீலம் என்ற (ஞானம்) ப்ரதீதி ஏற்படுகிறது. ஆனுல் உண்மையில் மலம் என்பதே ஆகாசத்தில் இல்லாததால் மலநிவர்த்தி என்பதும் உண்மையில் கிடையாது. ஆனுல் மேகங்கள் இல்லாதபோது நிர்மலம் என்று தோன்றுகிறது. இந்தவிதம் நிர்மலமாக இருக்கின்ற ஆகாசம் என்பது மலமென்பதே இல்லாமல் இருந்தும், மலம் இருந்து நிவர்த்தியானது போல் காணப்படுகிறது. அதேபோல் பந்தம், மோக்ஷம் என்ற இவைகளின் ஸம்பந்தம் அற்ற சைதன்யம் நித்யமுக்த ஸ்வரூபமாக ஏகமாகவே இருந்தபோதிலும் பந்த முக்தி விவகாரம் இருப்பது போல் கல்பிக்கப்படுகிறது. இவ்விதம் அறியப்படுவது ப்ரம்மேயன்றி உண்மையில் இல்லை.

24. அவதாரிகை : இந்த த்ருஷ்டாந்தம் ஒத்துக்கொள்ளக்கூடியது அல்ல. ஏனெனில், ஜைனமதத்தினர் (ஸப்தபங்கிநயம்) ஒருவஸ்து எப்படி வேண்டுமானுலும் இருக்கலாம் என்றும், வஸ்து என்பது மாறுகின்ற தன்மையுடையதாக இருப்பதென்பது ஸ்வபாவந்தான் என்று (அனேகாந்தவாதம்) சொல்கிருர்கள். அதனுல் எல்லாதன்மைகளும் வஸ்துவிற்கு பரமார்த்தமாகஇருப்பதாகவே ஒத்துக்கொள்ளலாமே இதில் என்னதோஷம்?

ச்லோகம் :

न हि कल्पनाविरचितं वितथं परमात्मवस्त्ववितथं स्पृशति ।
परमात्मवस्तु च तथा तमसा परिकल्पितं न किमपि स्पृशति

ச்லோகார்த்தம் : கல்பனையினுல் ஏற்பட்ட மித்யையான ஒருவஸ்து, மித்யையாக இல்லாத ஸத்ய வஸ்துவை தீண்டுவதில்லை. அதேபோல் அவித்யையினுல் கல்பிதமான எந்தவஸ்துவும் பரமாத்மாவை தீண்டுவது இல்லை (ஸ்பர்ஸிப்பதில்லை)

வ்யாக்யானம் : அனேகாந்த வாதம் என்பது அனுபவத்திற்கும் யுக்திக்கும் பொருந்தாது. ஆகாசத்தில் நீல நிறம் என்பது கல்பிதம்தான். எந்த இடத்தில் எதுகல்பிதமோ, அந்த கல்பிதவஸ்து பரமார்த்த வஸ்துவுடன் ஸம்பந்தப்படுகிறதது என்று சொல்வதற்கே முடியாது. ஆத்மஸ்வரூபம் என்பது மாயை என்பதுடனே அல்லது மாயை என்பது ஆத்மஸ்வரூபத்துடன் ஸம்பந்தப்படுவதில்லை. கல்பிதம் என்றுலே அது ஜடமாகத்தான் இருக்கவேண்டும். அதனுல் ஜடவஸ்து, ஸத்யமான சைதன்யஸ்வரூபத்தை ஸ்வயம் ஸ்பர்ஸிக்க முடியாது.

அப்படியானுல், நித்ய சைதன்யம் என்பது சேதனனுக இருக்கிறது என்பதால் சேதனனுக்கும் ஜடவஸ்துவிற்கும் ஸம்பந்தம் இருக்கலாமே?

அவ்விதம் சொல்லமுடியாது. கல்பிதவஸ்துவிற்கும் பரமார்த்தவஸ்துவிற்கும் விரோதம் இருப்பதால் அன்யோன்யஸம்ஸர்க்கம் என்பதே ஸம்பவிக்கமுடியாது.

**25.** அவதாரிகை : கல்பிதத்திற்கும், பரமார்த்த வஸ்துவிற்கும் ஸம்பந்தம் கிடையாது என்பதை த்ருஷ்ட்டாந்தம் மூலம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

न हि भूमिरूषरवती मृगतृड्जलवाहिनीं सरितमुद्वहति ।
मृगवारिपूरपरिवारवती न नदी तथोषरभुवं स्पृशति

ச்லோகார்த்தம் : ஊஷர பூமியானது கானல் நீருடைய நதியை உடையதாக ஆகாது. அதேபோல் கானல் நீருடைய நதியானது ஊஷரபூமியை தீண்டுவதில்லை.

வ்யாக்யானம் : பாலைவனத்தில் (ஊஷரபூமியில்) கானலினுல் தோன்றும் நதியுடன் பூமிக்கும் ஸம்பந்தமில்லை. பூமியுடன் அந்த நதிக்கும் ஸம்பந்தமில்லை. ஆகவே கல்பிதவஸ்துவிற்கும், பரமார்த்த வஸ்துவிற்கும் ஸம்பந்தம் இருப்பதுபோல் அறியப்பட்ட போதிலும் உண்மையில் ஸம்பந்தம் என்பதே கிடையாது.

**26.** அவதாரிகை : "தம் உத்க்ராமந்தம் ப்ராணே஽த்க்ராமதி" என்ற (ப்ரஹ (4-4.2) வாக்யமும், "ததந்தர ப்ரதிபத்தௌரம்ஹதி" என்ற (ப்ரஹ்மசூத்ரம் 3-1-1) சூத்ரமும் ஜீவனுக்கு ஸம்ஸாரகதி இருப்பதாகவே தெரிவிக்கின்றது. அதாவது மரண காலத்தில் இந்த சரீரத்தைவிட்டு ஜீவன் புறப்படுகின்றபோது ப்ராணனும் அவனைதொடர்ந்து செல்கிறது என்று உபநிஷத்வாக்யம் மரணத்திற்குப் பின் இந்த ஜீவன் லிங்க சரீரத்துடனேயே சென்றுவேறு ஜன்மாவை அடைகிருன் என்று தெரிவிக்கின்றதால் ஸம்ஸாரம் என்பது உண்மையில் இல்லையென்று எப்படிச்சொல்வது?

ச்லோகம் :

न तव क्वचिद्गमनमस्ति विभोर्न पुराष्टकस्य जडरूपभृतः ।
न च मध्यवर्तिजडचिद्वपुषोर्गमनक्षमं किमपि संभवति

ச்லோகார்த்தம் : ஸர்வவ்யாபியான உனக்கு கமனம் என்பது ஸம்பவிக்காது. ஜடமான புர்யஷ்ட்டகம் என்பதற்கும் கமனம் ஸம்பவிக்காது. ஜடரூப மாகவும் சித்ரூபமாகவும் இருக்கின்ற இந்த இரண்டிற்கும் நடுவில் கமனம் ஸம்பவிக்கக்கூடியதான வேறு மிச்ரரூபமாக எதுவும் கிடையாது.

வ்யாக்யானம் : ஆத்மாவிற்கு ஸம்ஸாரம் என்பது உண்மையாகவே இருக்கிறது என்று வாதம் செய்பவர்கள், மேலே கேட்க்கப்படும் கேள்விகளுக்கு பதில் சொல்லவேண்டும். அதாவது கமனம் (செல்வது) என்பது சைதன்யத்திற்கு சொல்லப்படுகிறதா ? அல்லது ஜடத்திற்கு சொல்லப்படுகிறதா ? அல்லது இரண்டும் சேர்ந்தே போகின்றது என்று சொல்லப்படுகிறதா ? சைதன்யம் என்பது விபு என்று (வ்யாபகம்) சொல்லப்படுவதால் அதற்கு கமனம் ஸம்பவிக்கமுடியாது. புர்யஷ்ட்டகம் என்பது ஜடமானதால் அதற்கும் தனியாக கமனம் ஸம்பவிப்பதாகச் சொல்லமுடியாது. ஜடமும் சைதன்யமும் சேர்ந்துபோகின்றது என்று சொல்வதற்கும் முடியாது. ஏனெனில் ஒன்று ஜடம், மற்றொன்று அஜடம் இரண்டும் விருத்தஸ்வபாவமாக இருப்பதால் ஒன்றுக்கொன்று உண்மையானஸம்பந்தம் இருக்கமுடியாது. ஆகவே ஆத்மஸ்வரூபம் விபுவானதால் பரலோக கமனம் என்பது ஸம்பவிக்க முடியாது. வ்யாபகமான சைதன்யத்தில் விக்ரியை என்பதே ஸம்பவிக்காது என்பதாலும் ஜடத்திலும் ஸம்பவிக்கமுடியாது என்று சொல்லப்பட்டதாலும், சித்திற்கும் அசித்திற்கும் ஸம்பந்தம் என்பதே ஏற்படமுடியாது. ஆகையால் உண்மையில் ஜீவனுக்கு கமனகமனம் என்பதே கிடையாது.

27. அவதாரிகை : வ்யாபகமான ஆகாசம் கடத்தினால் அவச்சேதகமாகின்ற போது, அதைகடாகாசம் என்று சொல்கிறோம். அந்த கடம் என்பது அந்த இடத்திலிருந்து வேறு இடத்திற்கு செல்கின்றபோது அதிலுள்ள கடஅவச்சின்ன ஆகாசம் எப்படி போகின்றதோ அதுபோல் சரீர அவச்சின்ன ஆத்மாவிற்கு கமனம் ஸம்பவிக்கலாமே ?

ச்லோகம் :

पुरवेष्टितं न तव चिद्वलयं परलोकमार्गमनुसर्तुमलम् ।
घटवेष्टितं न हि नभोवलयं व्रजति व्रजत्यपि घटे वितते

ச்லோகார்த்தம் : புரம் என்பதால் சூழப்பட்ட அவச்சின்ன சைதன்யம் என்பதும் பரலோகமார்ர்க்கத்தில் செல்வதற்கு தகுதி உடையது அல்ல. பரிச்சின்னமான கடம் எங்கு சென்றாலும் கடத்தினால் சூழப்பட்ட அவச்சின்ன ஆகாசம் என்பது செல்வதில்லை.

வ்யாக்யானம் : சொல்லப்பட்ட த்ருஷ்ட்டாந்தம் என்பதே பொருந்தாது. ஆகையால் ஆத்மா வ்யாபகமென்றாலும் புரியஷ்ட்டகத்தினால்பரிச்சேதகம் ஏற்படுவதால் வ்யாபகத்தன்மையை விட்டு பரிச்சின்னதன்மையை அடைவதால் கமனகமனம் ஏற்படலாமே என்ற ஆக்ஷேபம் சரியல்ல. ஏனெனில் உதாரணமாகச் சொல்லப்பட்ட

கடாகாசம் என்பது கடம் போகின்றபோது கடத்தில் அவச்சின்னமான ஆகாசமும் போவதாகச் சொல்லப்படுவது சரியல்ல. கடத்தைக் கொண்டுபோகின்றபோது அதிலுள்ள ஆகாசமும் வருவது போல் அறியப்பட்டாலும் கூட உண்மையில் அவ்விதம் இல்லை. தோற்றம் தான் கடம்போகின்றபோது கடாகாசமும் போகுமானால் முன்பு கடம் இருந்த இடத்தில் ஆகாசம் இல்லாமல் இருக்கவேண்டும். ஆனால் அவ்விதமின்றி ஆகாசம் அங்கேயே இருப்பதாகவும் அறியப்படுகிறது. ஆகவே வ்யாபகமான ஆகாசத்திற்குகமனுகமனம் சொல்லமுடியாது என்பதால் த்ருஷ்ட்டாந்தமேபொருந்தவில்லை. ஆகவே உபாதிக்கு கமனம் இருந்தாலும் ஔபாதிகமானவஸ்துவிற்கு கமனம் ஏற்படாது. உபாதியான கடத்துடன் கூடி இருக்கின்றபோது கடாகாசம் என்று சொல்லுகிறோம். உபாதி போனபிறகு ஆகாசம் என்று சொல்கிறோம். அதனால் உபஹித வஸ்துவிற்கு கமனுகமனம் என்பதே ஸம்பவிக்காது.

**28.** அவதாரிகை : கட அவச்சின்ன ஆகாசம் கடத்துடன் சென்றாலும் அதன் பிறகு வேறு ஒரு ஆகாசம் அங்கு உண்டாகிறது என்று சொல்லலாமே?

**ச்லோகம் :**

घट एव गच्छति नभस्त्वचलं व्रजता घटेन तु ततश्च ततः ।
परिवेष्टनेन घटखं क्रियते घटखानि तत्र सुबहूनि ततः

**ச்லோகார்த்தம் :** கடம்தான் செல்கின்றதேயன்றி ஆகாசம் என்பது அசலமாகவே இருக்கின்றது. ஆங்காங்கே செல்கின்ற கடத்தினால் சூழப்பட்டு கடாகாசம் ஏற்படுகிறது. அதனால்தான் கடாகாசம் என்பது அனேகம் இருக்கிறது. (பலவாக இருக்கிறது)

**வ்யாக்யானம் :** ஆகாசம் நிரவயவம் என்பதால் நித்யமென்றும் அசலமென்றும் சொல்லப்படுகின்ற பக்ஷத்தில் ஆகாசத்திற்கு உற்பத்தி விநாசம் சொல்வது சரியல்ல. பரிச்சின்னமான கடம் செல்கின்றபோது ஆகாசமும் பரிச்சேதம் போல் தோன்றுகிறது. இதுப்ராந்தி. ஆகவே நிரவயவமான ஆகாசம் எங்கும் வ்யாபகம் அபரிச்சின்னம் என்பதால் கடாதி உபாதியினால் பரிச்சின்னம் போல் தோன்றினாலும் ஆகா சஸ்வரூபத்தில் எவ்விதபேதமும் கிடையாது. அதனால் வேறொரு ஆகாசம் உண்டாவதாகச் சொல்வதும் பொருந்தாது.

**29.** அவதாரிகை : இந்த த்ருஷ்ட்டாந்தத்தின்படி தார்ஷ்ட்டாந்தத்திலும் அர்த்தம் க்ரஹிக்கப்பட வேண்டும்.

**ச்லோகம் :**

पुरमेव गच्छति चितिस्त्वचला व्रजता पुरेण यदि साऽपि चितिः ।
परिवेष्टचते तु सुबहूनि तदा वलयानि पूर्ववदुपाश्रयसे

**ச்லோகார்த்தம் :** முன்பு சொல்லப்பட்ட விஷயங்களைக் கொண்டு விசாரிக்கின்றபோது புரம் என்பதே செல்கின்றது. சைதன்யம் என்பது அசலமாக இருக்கிறது என்று அறியப்படுகிறது. அந்த சைதன்யம் என்பதும் புரம் என்பதால் சூழப்படுகின்றபோது பலவாக (அனேகமாக) ஆகின்றது.

வ்யாக்யானம் : நிரவயவமாகவும் விபுவாகவும் ஏகமாகவும் இருக்கின்ற சைதன்யஸ்வரூபம் சரீரம் என்ற உபாதிவஸாத் பரிச்சின்னமாக அனேகமாக இருப்பதாகவும் அதற்கு லிங்க சரீரகமனுகமனம் ஏற்படும்போது சைதன்யத்திற்கும் கமனுகமனம் இருப்பதுபோல் தோன்றுகிறது. இது உண்மையல்ல ப்ராந்தி என்றே அறியவேண்டும்.

**30.** அவதாரிகை : சித்ஸ்வரூபமே அந்தந்த உபாதியில் புதிதாக உண்டாகிறது என்று சொல்லலாமே ?

ச்லோகம் :

अकृतागमश्च कृतनिष्फलता फलतः समापतति कर्तृगतेः ।
अपरस्य भोक्तुरुदयाच्च दिवि व्यसनस्य संततिरहो विषमा

ச்லோகார்த்தம் : கர்த்தா நாசம் அடைகின்றது என்றும் வேறு ஒருபோக்தர ஸ்வர்க்கத்தில் உண்டாகிறது என்றும் சொல்லப்படுவதால் கர்மபல த்ருஷ்டியில் அக்ருதாகமம், க்ருதநாசம் என்ற இரண்டு தோஷங்கள் ஸம்பவிக்கின்றது. இதேபோல் பரிகாரம் செய்யமுடியாத பல தோஷங்கள் ஸம்பவிக்கின்றது.

வ்யாக்யானம் : வ்யாபகமாகவும் நித்யமாகவும் இருக்கின்ற சைதன்யம் அந்தந்த சரீரங்களில் தொடர்ந்து இருப்பதாகச் சொல்லாமல், சரீரவ்யோகம் ஏற்படும்போது ஜீவனே (சைதன்.யமே) நாசத்தை அடைகிறது என்றும் வேறு சரீரத்தில் புதிதாக சைதன்யம் உண்டாகிறதென்றும் சொல்லப்படுவது சரியல்ல. க்ருதஹானி, அக்ருதாகமம் என்றதோஷம் ஸம்பவிக்கும். அதாவது இந்த சரீரத்துடன் கூடிய (சைதன்யம்) ஜீவனுல் செய்யப்பட்ட பாபம் புண்யம் என்றகர்மாவின் பலன், இவன் மரணமடைகின்றபோது சைதன்யமே நாசத்தை அடைவதாகச் சொல்லப்படுமானுல் அவனுல் செய்யப்பட்ட கர்ம பலனே அவன் அனுபவிக்கமுடியாமல் வீணுகிறது. புதிதாக ஏற்படும் சரீரத்தில் வேருெரு ஜீவன் உண்டாகிருன் என்ருல் அவனுல் செய்யப்படாத கர்மபலன்களே அவன் அனுபவிக்கின்ருன் என்று சொல்ல நேரிடும். இது அனர்த்தகரம் என்பது மட்டுமல்ல, இதில் ப்ரமாணமும் கிடையாது. செய்யாத கார்யத்திற்கு அதன் பலனே அனுபவிப்பது என்பது அக்ருதாகமம். செய்த கார்யத்திற்கு பலன் இல்லே என்பது க்ருதவிநாசம். ஆகவே, இது இரண்டுமே தோஷம். இந்த ஜன்மாவில் யாகத்தைச் செய்த ப்ராஹ்மணன் மரண மடைவானுகில் அந்த யாகபலனே அவன் அனுபவிக்கமுடியாது என்ருகும். யாகம் செய்த இந்த கர்த்தாவைக் காட்டிலும் வேருன ஒருவன், ஸ்வர்க்கத்தில் உண்டாகி, அவன் அந்த ஸ்வர்க்க போகத்தை அனுபவிக்கின்ருன் என்ருல், போகத்திற்குரிய கர்மாவைச் செய்யாமலேயே அவனுக்கு அந்த போகம் ஏற்படுவதாகச் சொல்லநேரிடும். அதனுல் கர்த்தாவிற்கு நாசம் சொல்லப்படுவது ப்ரமாணவிரோதம் என்பது மட்டுமல்ல, ந்யாயத்திற்கும் விரோதம். அனர்த்தகரம் என்றே சொல்லவேண்டும்.

**31.** அவதாரிகை : சரீரம் என்ற இந்த உபாதிக்கு சலனம் ஏற்பட்டபோதிலும் ஒரேசைதன்யம் ஆங்காங்கே இருக்கின்ற சரீரத்தினுல் பரிச்சின்னமாகின்றபோதும்

சைதன்யம் என்பது ஒன்ருகவே இருக்கின்றதால் கர்த்தா வேறு, போக்தாவேறு என்று சொல்லவேண்டிய அவஸ்யம் ஏற்படாதே ?

ச்லோகம் :

चलने ह्युपाध्यभिमतस्य भवेज्जनितस्य तेन विगमः सुदृढम् ।
ननु कुण्डलापसरेण पुरुषादथ न प्रणश्यति न कुण्डलिता

ச்லோகார்த்தம் : சரீரம் என்ற இந்த உபாதிக்கு சலனம் ஏற்பட்டபோதிலும் ஒரேசைதன்யம் ஆங்காங்கே இருக்கின்ற சரீரத்திஞல் பரிச்சின்னமாகின்றபோதும், சைதன்யம் என்பது ஒன்ருகவே இருக்கின்றது என்பதால் கர்த்தா வேறு, போக்தாவேறு என்று சொல்லவேண்டிய அவஸ்யம் ஏற்படாதே ?

வ்யாக்யானம் : உபாதிநாசத்திஞல் ஔபாதிகத்திற்கு நாசம் ஏற்படாது என்று சொல்வது சரியல்ல. உபஹிதத்திற்கு கமனம் சொல்வது என்பதும் யுக்திக்கு பொருந்தாது. குண்டலம் தரித்திருக்கின்ற போதுதான் அவனே குண்டலீ என்று சொல்லலாம். குண்டலம் போனபிறகும் குண்டலீ என்று சொல்லமுடியாது. கடம் உடைந்தபிறகும் கடாகாசம் என்று விவகாரம் செய்யப்படுவதில்லை. இந்த சரீரத்திஞல் அந்த ஜீவனுக்கு எந்த கர்த்ருத்வம் ஏற்பட்டதோ அந்த சரீரம்நாசமாகுமாஞல் அந்த கர்த்ருத்வமும் நாசமாகின்றது. ஆகவே, சைதன்யம் என்பது இருந்த போதிலும் உபாதிநாசத்திஞல், உபாதியிஞல் ஏற்பட்ட கர்த்ருத்வமும் நாசமாகின்றது. அதஞல் முன்ஞல் சொல்லப்பட்ட க்ருதஹானி, அக்ருதாகமம் என்ற தோஷம் ஸம்பவிக்கின்றது.

**32.** அவதாரிகை : உபாதிஸம்பந்தம் என்பதும் சைதன்யத்தில் உண்மையில் இருக்கிறதா என்று விசாரிக்கப்படுமாஞல், அதையும் நிரூபணம் செய்யமுடியாது. அதஞல் உபாதி என்பதும் துர்நிரூபம்.

ச்லோகம் :

न पुरान्वयश्च तव चिद्वपुषः परमार्थतो भवति तर्कसहः ।
नभसो यथा घटसमागमनं न ततोऽपि लिङ्गघटितो व्रजसि

ச்லோகார்த்தம் : எவ்விதம் ஆகாசத்திற்கு கடஸம்பந்தம் ஏற்படாதோ அதுபோல், சித்ரூபஞன உனக்கு பரமார்த்தமான புரஸம்பந்தம் என்பது யுக்தியுக்தமாக ஆகாது. ஆகையால் நீ லிங்கஸம்பந்தத்துடன் பரலோகம் செல்வதில்லை.

வ்யாக்யானம் : ஆகாசம் என்பதற்கு கடஸம்பந்தம் என்பது உண்மையில் ஏற்படுகிறது என்று சொல்வது எப்படியுக்திக்கு பொருந்தாதோ அதுபோல் ஆத்மாவிற்கும் லிங்கசரீரத்திற்கும் ஸம்பந்தம் இருப்பதாகச் சொல்லப்படுவதும் யுக்திக்கு பெருந்தாது. இதற்குமுன் ஆத்மாவிற்கும் லிங்கசரீரத்திற்கும் ஸம்பந்தம் இருப்பது போல் தெரிவித்து அதை விசாரிக்கப்பட்டது. இப்பேது உண்மையில் லிங்கசரீரஸம்பந்தம் ஆத்மாவிற்கு இருக்கமுடியாது என்பதை விளக்கப்படுகிறது

ஆத்மாவிற்கும், லிங்கசரீரத்திற்கும் ஸம்பந்தம் என்பது, கர்ணஷட்குலி அவச்சின்ன ஆகாசம் ச்ரோத்ரேந்த்ரியம் என்று சொல்லப்படுவதுபேல் மித்யை என்றே

சொல்லவேண்டும். அதனுல் ஆத்மா லோகாந்தர பலனை அனுபவிக்கின்றது என்று சொல்லப்படுவதும் உண்மையல்ல. (பரமார்த்தமாக அனுபவிக்கிறதென்று சொல்வது சரியல்ல)

**33.** அவதாரிகை : சைதன்யம் என்பதற்கு லிங்கசரீரத்தினுல் கமனுகமனம் சொல்வது பொருந்தாது என்பதை தர்க்கத்தினுல் விளக்கப்பட்டது எப்படிஎன்பதை மேலும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

नभसः प्रदेशविरहान्नभसो न घटः प्रदेशपरिवेष्टनकृत् ।
न नभः समस्तमपि वेष्टयते नभसोऽवशेषविरहापतनात्

**ச்லோகார்த்தம் :** சைதன்யத்திற்கு லிங்க சரீரத்தினுல் கமனுகமனம் சொல்வது பொருந்தாது என்பதை தர்க்கத்தினுல் விளக்கப்பட்டது எவ்விதம் என்பதை மேலும் விளக்கப்படுகிறது.

**வ்யாக்யானம் :** நிரவயவமான ஆகாசத்தில் ஒரு அம்ஸம் பரிச்சேதம் என்று சொல்லமுடியாது என்பதற்காக, ஆகாசம் பூரா பரிச்சேதம் செய்யப்படுவதாகச் சொல்லப்படுமானுல் ஒரே கடந்தான் இருக்க முடியும் அல்லது ஒரேபடம்தான் இருக்க முடியும். வேறு ஒரு வஸ்துவும் இருப்பதாகச் சொல்லமுடியாது. அதனுல் கடம் என்பது ஆகாசத்தை ஏகதேச பரிச்சேதம் செய்கிறது என்ருே பூராவும் பரிச்சேதம் செய்கின்றது என்ருே சொல்லமுடியாது. பூராவும் பரிச்சேதம் என்ருல் அந்த வஸ்துவிற்கு வெளியில் ஆகாசம் இருப்பதாகவே சொல்லமுடியாது. அதனுல் எந்தவிதமும் கமனம் ஏற்படுவதாகச் சொல்வதற்கு முடியாது.

**34.** அவதாரிகை : சொல்லப்பட்ட விஷயத்தை தார்ஷ்ட்டாந்தத்தில் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

परमात्मभागपरिवेष्टनकृन्न पुरं तथाऽनवयवो हि परः ।
न च कृत्स्नमेव परमं पुरुषं पुरवस्तु वेष्टयितुमुत्सहते

**ச்லோகார்த்தம் :** அதேபோல் புரம் என்பது பரமாத்மாவின் அம்ஸத்தை அவச்சேதம் செய்கின்றது என்று சொல்லமுடியாது. ஏனெனில் அம்ஸங்கள் அற்ற பரமாத்ம ஸ்வரூபம் என்பதை, தேஹமாகிய புரம் என்பது ஸம்பூர்ணமான ஸ்வரூபத்தையும் பரிச்சேதம் செய்வதற்கு ஸாமர்த்யமுடையதாகாது.

அபரிச்சின்னமான புருஷனை லிங்கசரீரம் பூரணமாக பரிச்சேதம் செய்வதாகச் சொல்லமுடியாது. பூர்ணஸ்வரூபத்தை பரிச்சின்னமானலிங்க சரீரம் பரிச்சின்னமாக்கு கிறது என்பது ஸாத்யமில்லை. யுக்திக்கு பொருந்தாது.

**35.** அவதாரிகை :

சூர்யன் பெரிதாக இருந்தபோதிலும் அங்குலி என்ற சிறு விரலினுல் மறைக்கப்படுவது போல் அபரிச்சின்னமாக இருந்தாலும் பரிச்சின்னவஸ்துவால் மறைக்கப்படலாமே என்ருல்,

ச்லோகம் :

यदि कुत्स्न एव परमः पुरुषः पुरवेष्टितो भवति जीवतया ।
न तदेश्वरो भवितुमुत्सहते न च जीवजातमपरं सकलम्

ச்லோகார்த்தம் : பரமாத்மா புரத்திஞல் பூர்ணமாக அவச்சேதம் செய்யப்பட்டு ஜீவபாவத்தை அடைகின்றது என்று சொல்லப்படுமாஞல்ஈச்வரனும் மற்றுமுள்ள ஜீவஸமூகங்கள் முதலான ஸர்வமும் இருக்கமுடியாது.

வ்யாக்யானம் : பெரிதுக்கெல்லாம் பெரிதான சிதாத்மஸ்வரூபம் என்பதை மிகச் சிறிதான சரீரம் பரிச்சேதம் செய்யப்படுவதாகச் சொல்வது அஸம்பாவிதம். ஒரே உபாதியானலிங்க சரீரம் பூர்ணமாக ஆத்மஸ்வரூபத்தை பரிச்சின்னமாகச் செய்கிறது என்று சொல்லப்படுமாஞல் ஒரே ஜீவன் தான் இருப்பதாகச் சொல்ல முடியுமேயன்றி வேறு ஜீவர்களோ, ஈச்வரனோ இருப்பதாகச் சொல்லமுடியாது.

36. அவதாரிகை : வேறு ஜீவர்களோ, ஈச்வரனோ இல்லையென்று சொல்வதால் என்ன தோஷம் ?

ச்லோகம் :

गुरुशिष्यसंगतिरतो न भवेन्न च बन्धमोक्षनियमो घटते ।
विषयं विना सकलमापतति स्फुटमत्र वेदवचनं च वृथा

ச்லோகார்த்தம் : குரு, சிஷ்யன் என்ற இவர்களின் ஸம்பந்தம் என்பதும் இருக்கமுடியாது. பந்தம், மோக்ஷம் என்றவ்யவஸ்த்தையும் பொருந்தாது குரு சிஷ்யன் முதலான விஷயமே ஏதும் இல்லையென்ருல் ஸர்வவேத வாக்யங்கள் எல்லாமே வ்யர்த்தம் என்று சொல்ல நேரிடும்.

வ்யாக்யானம் : புரத்திஞல் வேஷ்டிதஞன (சரீரத்தில்வளை பட்டிருக்கின்ற) ஜீவனைத் தவிர வேறு ஜீவர்களோ அல்லது ஈச்வரனோ இல்லையென்று சொல்லப்படுமாஞல், குருவென்றும், சிஷ்யனென்றும் ப்ரசித்தமாகச் சொல்லப்படும் விவகாரம் எதுவுமே இருக்க முடியாது. முக்தஞன குரு, பத்தன் என்ற சிஷ்யன் முதலான அனேக ஜீவர்களை அவஸ்யம் ஒத்துக் கொள்ளத்தான் வேண்டும். பந்தம், மோக்ஷம் என்ற வ்யவஸ்த்தை இல்லையென்ருல் வேதவசனங்களுக்கு விஷயமே இல்லையென்பதால் வேதம் அப்ரமாணமென்ருகும். அதேபோல் ஈச்வரன் என்று ஒருவன் இல்லையென்ருல், அந்தர்யாமிப்ராஹ்மணத்தில் சொல்லப்பட்ட ஈச்வரன் என்பவன் சித்திக்க முடியாது. ஈச்வரன்ஸர் வலோகத்தையும் தரிக்கின்ருர், ஸர்வலோகத்திற்கும் அப்பாற்பட்டவர், ஸர்வ ஜீவர்களின் கர்மாவெல்லாம் ஈச்வரஞல்தான் நடக்கின்றது என்றும் அவரேகர்ம பலதாதாவென்றும் ச்ருதி ஸ்ம்ருதிவாக்யங்கள் தெரிவிக்கின்றதால் ஈச்வரன் இல்லையென்ருே சாஸ்திரம் அப்ரமாணம் என்ருே சொல்வதற்கு முடியாது.

இந்த விஷயத்தில் ப்ரகடகாரர் தெரிவிப்பது என்னவென்ருல், பூதங்களுக்கெல்லாம் காரணமாக இருக்கின்ற ஏகமானமாயை சைதன்யத்தில் இருக்கின்றது, அதில் ஏற்படுகின்ற சித்ப்ரதிபிம்பமே ஈச்வரன். சைதன்யஸம்பந்தமுள்ள மாயா பரிணமத்திஞல் ஈச்வரன் ஸர்வஞ்ஞஞக இருக்கின்ருர். அந்த மாயையில் அநிர்வாச்யமான அஞ்ஞானம்

என்று சொல்லப்படும் உபாதி அனந்த ப்ரதேசங்களில் ஏற்படுகின்ற சித்ப்ரதிபிம்பங்களே ஜீவர்கள் என்று சொல்லப்படுகிறது. நிரம்ஸமாக இருக்கின்ற ஆகாசத்திலும் அனந்த ப்ரதிபிம்பங்கள் இருப்பதாக காணப்படுகிறது. இதுபோல் பந்த முக்தாவஸ்த்தைகளின் விபாகம் இருக்கலாம். இவ்விதம் அனந்தமான ஜீவர்களில் எந்த ஜீவன் பிம்ப ஸ்வரூபமான ப்ரஹ்மஸ்வரூபமே நான் என்று அறிகின்ருனே அவனுடைய அஞ்ஞான உபாதி நாசத்தை அடைகின்றது. அதனுல் ஸ்வரூப அவஸ்த்தானத்தை அடைந்து முக்தனுகிருன். இதுவே விச்வ மாயாநிவர்த்தி இவ்விதம் பந்த முக்த விவகாரம் ஏற்படுகிறது என்று சொல்கிருர்கள்.

**37.** அவதாரிகை : இதன்சாரம் என்ன வென்று தெரிவித்து முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

न पुरान्वयोऽत्र उपपत्तिसहः परमार्थतोऽस्ति परमात्मदृशेः ।
वियतो घटान्वयवदेव ततः परिकल्पितं पुरसमागमनम्

**ச்லோகார்த்தம் :** ஆகையால், எவ்விதம் ஆகாசத்திற்கு கடஸம்பந்தம் என்பது பொருந்தாதோ அதேபோல் பரமாத்மசைதன்யத்திற்குபாரமார்த்திகமான புரஸம்பந்தம் என்பதும் யுக்தியுக்தமாக ஆகாது. அதனுல் புரஸம்பந்தம் என்பது கல்பிதம் என்றே அறியவேண்டும்.

**வ்யாக்யானம் :** பரமாத்மஸ்வரூபமே அவித்யையினுல் ஜீவ பாவத்தை அடைகின்றது என்றும், எவருக்கு ஞானம் ஏற்படுகிறதோ அவருக்கே முக்தி என்றும், ஞானம் ஏற்படாவிட்டால் பந்தம் என்றும் சொல்லப்படுகிறது. இந்த பக்ஷமே ஆசார்யரால் ஒத்துக் கொள்ளப்படுகிறது. இந்தவிதம் ஏகமான ப்ரஹ்மமே, அவித்யை அதன்கார்யம் என்பதனுல் அனேக ஜீவ பாவத்தை அடைகின்றதாலேயே, பந்த முக்தவ்யவஸ்த்தை சொல்லப்படுகிறது என்பதே ஆசார்யரின் அபிப்ருயம்.

இதற்குமுன், ஏக ஜீவவாதமே சரி என்றும், குருசிஷ்யர் என்பதெல்லாம் அவித்யா கல்பிதம் என்றும், ஞானத்தினுல், அறியப்படும் த்வைதம் நிவர்த்திக்கப்படுகிறது என்றும் பரமார்த்த த்ருஷ்டியைக் கொண்டுநிச்சயம் செய்யப்பட்டது. அதேபோல் அனேக ஜீவவாதம் என்பது, வ்யவஹாரத் ருஷ்டியைக் கொண்டு, குருசிஷ்ய பேதங்கள், சிதாத்மஸ்வரூபத்தைஆச்ரயமாகக் கொண்ட அஞ்ஞானகல்பிதம் என்பதால் அதுமித்யை என்றுநிரூபணம் செய்து அத்வைதமே தத்வம் என்று (ஸத்யம்) தெரிவிக்கப்பட்டது. எந்த பக்ஷத்தை ஒப்புக்கொண்டாலும் பரமாத்மஸ்வரூபத்திற்கும் லிங்க சரீரத்திற்கும் ஸம்பந்தம் உண்மையில் கிடையாது. அதற்குரிய யுக்தியும் கிடையாது. கடஸம்பந்தம் ஆகாசத்திற்கு எப்படி இருக்கமுடியாதோ அதுபோல் சைதன்யத்திற்கு புரஸம்பந்தம் என்பது கிடையாது என்பதே கருத்து. இந்த இடத்தில் இந்தக்ரந்தக்காரர் வ்யவஹாரத்ருஷ்டியை அனுசரித்து இந்த விஷயம் பற்றி அனேக ஜீவவாதம் என்பதை தெரிவிக்கின்ருர்.

**38,39.** அவதாரிகை : சைதன்யத்திற்கு லிங்க சரீரஸம்பந்தம் என்பதே கிடையாது என்று சொல்லப்பட்டதால் லிங்கசரீரம் என்ற உபாதியைக்கொண்டு ஆத்மாவிற்கு பரலோக கமனம் சொல்லப்படுவது உண்மையில் பொருந்தாது. என்பதால் புரஸம்பந்தம் கல்பிதம் என்றே அறியவேண்டும்.

ச்லோகம் : यत एवमेतदुपपत्तिपथं न तव प्रयाति विरह्य तमः ।




परलोकमार्गगमनं स्वतमःपरिकल्पितं चलनवन्नभसः
पुरधर्ममात्मनि विकल्प्य तथा स्वचिदात्मतां च पुरधर्मतया ।
स्वपुरं स्वयं च दृढमेकतया परिकल्पयन्व्रजसि मूढमतिः

ச்லோகார்த்தம் : ஆகையால் ஆகாசத்தினுடைய சலனம் போல் உன்னுடைய பரலோக கமனம் என்பது அவித்யையைத்தவிர வேறு எந்த காரணத்திஞலும் யுக்திக்கு பொருந்தாது. புரதர்மத்தை ஆத்மாவினிடம் கல்பித்து தன்னுடைய சேதனஸ்வரூபத்தை புரதர்மமாக கல்பித்து, தன்னுடைய புரதர்மத்தையும் தன்னையும் ஒன்று என்று த்ருடமாக கல்பித்து அஞ்ஞானி பரலோகம் செல்கிறுன்.

வ்யாக்யானம் : ஆத்மாவிற்கும் லிங்கசரீரத்திற்கும் உள்ள பரஸ்பர தாதாத்ம்ய அத்யாஸம் இருப்பதனுலேயே புரம் என்பதைக்காட்டிலும் நான் வேருனவன் என்று அறியப்படவில்லை. ஸ ஸமான ஸன் உபௌலோகௌ அனுஸஞ்சரதி என்றவாக்யம், தர்மி அத்யாஸம், தர்ம அத்யாஸம் என்ற இரண்டிற்கும் அன்யோன்ய அத்யாஸம் இருக்கின்றதனுல்தான் ஆத்மத்வம் இல்லாத புரம் என்பதே ஆத்மாஎன்றும், புரத்தில் இருக்கின்ற கமனுதிகளை ஆத்மாவில் இருப்பதாகவும் அவிவேகத்திஞல் இரண்டும் ஒன்ருகவே அறியப்படுகிறது. ஆகவே, புத்தி என்ற உபாதியின் கமனத்தைக்கொண்டே ஜீவனும் போகிருன் என்று சொல்லப்படுகிறதேயன்றி உண்மையில் ஜீவனுக்கும் கமனம் கிடையாது. புத்தியுடன் ஸமானமாக இருக்கிருன் என்பதையே ஸமான:ஸன் என்ற வாக்யம் தெரிவிக்கின்றது.

**40.** அவதாரிகை : சொல்லப்பட்டயுக்திகளிஞல் ஆத்மாவில் ஸம்ஸாரித்வ ஸம்பந்தம் உண்மையில் கிடையாது என்பதை சாதிக்கப்பட்டது. இதனுலேயே ஆத்மா அஸம்ஸாரி என்று அறியப்படுவதால், அதன்பிறகு மஹாவாக்ய உபதேசம் என்பது எதற்காக ?

ச்லோகம் :

परिपूर्णचिद्रसघनः सततं स्वमहिम्नि तिष्ठसि निरस्तमले ।
न तथाऽपि तत्त्वमितिवाक्यकृतां मतिमन्तरेण तव केवलता

ச்லோகார்த்தம் : பரிபூரண சித்ரஸமாக இருக்கின்ற நீ எப்போதும் உன்னுடைய தோஷமற்ற மஹிமையில் இருக்கின்ருய் என்ருலும் 'தத்வமஸி' என்ற வாக்யத்திஞல் ஏற்படுகின்ற ஞானம் இல்லாமல் உனக்கு கைவல்யம் என்பது கிடைக்காது.

வ்யாக்யானம் : ஆத்மா நித்யமுக்தம் என்று யுக்தியிஞல் சித்தம் செய்யப்பட்ட போதிலும், அதனுல் ஏற்படும் ஞானம் பரோக்ஷமாகவே ஏற்படும். அதனுல் ஆத்மஸ்வரூபத்தில் அபரோக்ஷமாக அறியப்படுகின்ற ஸம்ஸாரம் என்றப்ரமம் பரோக்ஷ ஞானத்திஞல் நீங்காது ஆகவே, ஆத்மா நித்யமுக்தம் என்பது உண்மையே என்ருலும்,

சாஸ்திரம் 'தத்வமஸி' என்ற வாக்யத்தினுல்தான் ஜீவப்ரஹ்ம ஐக்யத்தை போதிக்கவேண்டும். அவ்விதம் ஐக்யம் போதிக்கப்படாவிட்டால், அவித்யையோ, அதன்கார்யமான ஸம்ஸாரம் என்பதோ நிவர்த்திக்காது. அதனுல் மஹாவாக்யத்தினுல்தான் அபரோக்ஷமான ஸ்வஸ்வரூப சாக்ஷாத்காரம் ஏற்படவேண்டும்.

**41.** அவதாரிகை : இந்த்ரியங்களால்தானே அபரோக்ஷஞானம் ஏற்படவேண்டும். சாஸ்திரத்தினுல் ஏற்படுவதாக எப்படிச் சொல்வது ?

ச்லோகம் :

त तव प्रतीचि करणानि बहिर्विषयाणि येन करणानि सदा ।

सहजं च गाढमतिमूढतमं तम इत्यतः पुरमनुव्रजसि

ச்லோகார்த்தம் : உன்னுடைய கரணங்கள் ஆத்மவிஷயத்தில் ப்ரவர்த்திக்காது. ஏனெனில் கரணங்கள் எப்போதும் பஹிர்விஷயமாகவே இருக்கிறது. ஸஹஜமாகவும், காடமாகவும் (கும்மிருட்டு) இருக்கின்ற அவித்யையானது ஆத்மஸ்வரூபத்தை நன்ருக மறைக்கின்றது. அதனுல் நீபுரத்துடன் பரலோகம் செல்கின்ருய்.

வ்யாக்யானம் : ப்ரத்யகாத்மாவான உன்ஸ்வரூபம், பாஹ்யவிஷயங்களை தெரிவிக்கின்ற இந்த்ரியங்களால் அறியமுடியாது. ஆத்மஸ்வரூபம் ஸ்வப்ரகாசம் தான் என்ருலும், தமஸ் என்பதால் மறைக்கப்பட்டிருப்பதால் உண்மையான ஸ்வரூபம் ப்ரகாசிக்கவில்லை. கும்மிருட்ரு போன்ற அதி தாட்யமான தமஸ் என்பது அனுதிகாலமாக ஆத்மாவை ஸ்வஸ்வருபேணப்ரகாசிக்க வொட்டாமல் மறைக்கின்றது. குருஉபதேசத்தினுல் மஹாவாக்ய ஜன்யமானஞானம் ஏற்பட்டால் தான் ஸ்வஸ்வரூப சாக்ஷாத்காரம் ஏற்பட்டு ஸம்ஸாரநிவர்த்தி ஏற்படும்.

**42.** அவதாரிகை : ஆத்மா புரத்துடன்கூடியே கமனம் செய்வதாகச் சொல்வதற்கு என்னப்ரமாணம் ?

ச்லோகம் :

स समान इत्युपनिषद्वचनं प्रतिपादयत्युदितमर्थमतः ।

स्वमनीषिकेति न कदाचिदपि प्रतिपत्तिरत्र भवतो भवतु

ச்லோகார்த்தம் : முன்னுல் சொல்லப்பட்ட அர்த்தத்தையே "ஸஸமான; ஸன்உபௌலோகே அனுசஞ்சரதி" என்ற உபநிஷத் வாக்யம் தெரிவிக்கின்றது. ஆகையால் என்னுடைய கல்பனையென்ற அபிப்ருயம் உனக்கு ஒருபோதும் ஏற்படக்கூடாது.

வ்யாக்யானம் : 'ஸஸமான:ஸன்உபௌ லோகௌ அனுஸஞ்சரதி' என்ற உபநிஷத் வாக்யத்தினுலும் (ப்ரஹ 4.3.7), 'த்யாயதீவ' என்று 'இவ' சப்தத்தினுல் புத்தியின் கமனுத்தினுல் ஆத்மாவிற்கும் கமனம் இருப்பது போல் தோன்றுகிறது என்பது இந்த வாக்யங்களால் அறியப்படுகிறது. இந்தவிதம் ச்ருதிப்ரமாணத்தினுலும் யுக்தியினுலும் ஆத்மாவிற்கு கமனுகமனம் கிடையாது என்று அறியப்படுகிறது. அதனுல் இந்தவிஷயம் என்கபோல கல்பிதம் இல்லை.

**43.** அவதாரிகை : ஆத்மாவிற்கு, அஞ்ஞானத்தினுல்தான் கமனம் இருப்பது போல் தோன்றுகிறது என்று இதுவரைசொல்லப்பட்டது. வேறு சிலர் சைதன்யப்ரதிபிம்பத்திற்கு கமனம் இருப்பதாக சொல்லுகிருர்களே என்ருல்.

ச்லோகம் :

पुरहेतुकं यदभवच्च विभोः परिकल्पितं किमपि चित्सदृशम् ।
जलपात्रहेतुकमिव द्युमणेस्तदसततं भवति तद्व्रजति

ச்லோகார்த்தம் : ஜலபாத்ரத்தினுல் ஏற்படும் சூர்ய ஆபாஸம் போல் புரத்தினுல் ஸர்வகதமான சைதன்யத்தினுடைய கல்பிதமான ஆபாஸம் என்பது பரிச்சின்னமாக இருக்கின்றது. இதுவே பரலோக கமனுதிகளை உடையதாக ஆகிறது. (பரலோகாதிகளுக்கு செல்கிறது.)

வ்யாக்யானம் : சைதன்யஸ்வரூபத்தில் கல்பிதமான புரம் என்ற உபாதியில் ஏற்படுகின்ற சைதன்யப்ரதிபிம்பம் என்பது, சைதன்யம்போலவே (சைதன்யசத்ருசமாக) இருக்கின்றது. மித்யாபூதமாக ஏற்படும் இந்தப்ரதிபிம்பம் பரிச்சின்னமாக இருக்கின்றதால் கமனுகமனம் ஏற்படலாம், எப்படி சூர்யன் ஜலபாத்ரத்தில் ப்ரதிபிம்பிக்கின்றபோது சூர்யசத்ருசமாகவே ஏற்படுகிறதோ அதுபோல் சித்சத்ருசமாக, சித், ஜடம் என்ற இரண்டிற்கும்வேருக அநிர்வசனீயமான ஒருஸ்வரூபம் இருக்கின்ற தென்றும் அதுவே சைதன்யப்ரதிபிம்பம் என்றும் சொல்லப்படுகிறது. ஜாக்ரத், ஸ்வப்னம் என்ற இரண்டு அவஸ்த்தைகளில் சைதன்ய ப்ரதிபலனம் இருந்தபோதிலும், சுஷுப்தி அவஸ்த்தையில் ப்ரதிபலனம் இல்லைஎன்று சொல்கிருர்கள். இதனுல் க்ருதஹானி அக்ருதாகமம் என்ற தோஷங்கள் ஸம்பவிக்கும். ப்ரதிபிம்பம் தொடர்ந்து இல்லாமல் வ்யாவ்ருத்தமாக இருக்கிறது என்று சொல்வது சரியல்ல. சுஷுப்தியில் சூக்ஷ்மபாவேனப்ரதிபிம்பம் இருப்பதாகவே சொல்லவேண்டும். லிங்க உபாதி ஸ்தூலமாக இல்லை. அதனுல் வித்யை ஏற்படும் பர்யந்தம் சுஷுப்தி அவஸ்த்தையிலும் சிதாபாஸனுக்கு நாசம் இல்லையென்று சொல்லப்படவேண்டும். அவ்விதம் சொல்லப்பட்டால்தான் ஸம்ஸ்க்காராத்மனுஉபாதி தொடர்ந்து இருக்கின்றதால், க்ருதஹானி அக்ருதாகமம் என்பது முதலானதோஷங் கள்ஸம்பவிக்காது.

**44.** அவதாரிகை : புரம் என்பதற்கோ அல்லது அதில் ஏற்படும் ப்ரதிபிம்பத்திற்கோ ஸ்வயமே கமனுகமனம் ஏற்படமுடியாது. ஏனெனில் அஸங்கமாகவும், சைதன்யஸ்வரூபமாகவும் இருக்கின்ற ஆத்மாவிற்கு, ஜடமான புரஸம்பந்தம் என்பதால் கமனம் ஸம்பவிக்கமுடியாது. சைதன்யம், ஜடமானபுரம் என்ற இரண்டையன்றி வேறு எதுவும் இல்லாததால் கமனம் ஏற்படுவதற்கு வேறு என்னகாரணம் சொல்லமுடியும்? மரணகாலத்தில் லிங்கசரீரத்திலுள்ள புத்திலீனத்தை அடைகின்றதால் அதில் சித்ப்ரதிபம்பம் ஏற்படமுடியாது. ஆகவே கமனம் எப்படிஸம்பவிக்கமுடியும்?

ச்லோகம் :

जडशक्तिरस्ति च परस्य विभोः परमात्मनस्तम इति प्रथिता ।
पुरमष्टकं तव यथा भवति श्रुतितः प्रसिद्धमिदमप्यखिलम्

ச்லோகார்த்தம் : உனக்கு எவ்விதம் புர்யஷ்ட்டகம் என்பது உபாதியாக இருக்கிறதோ அதேபோல் பரமாத்மாவிற்கு ஜடசக்தியான அவித்யை என்பது உபாதியாகச் சொல்லப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படுகிறது என்பது ச்ருதிப்ரசித்தமாக இருக்கிறது.

வ்யாக்யானம் : ஜீவன், ஈச்வரன் என்ற விபாகம் ஏற்படுவதற்குமுன்பு நிர்விபாகமான கேவல சித்ஸ்வரூபத்தை ஆச்ரயமாகக்கொண்ட அவித்யை என்ற ஜடசக்தியிலிருந்து ஜீவனுன உன்னுடைய உற்பத்தி எப்படிஏற்பட்டதோ அது போல் ஈச்வரனுடைய உற்பத்தியும் ஏற்பட்டதாகச் சொல்லப்படுகிறது. இவ்விதம் ஜீவபாவத்தில் இருக்கின்ற உன்னை, லிங்க சரீரத்தை காரணமாகக் கொண்டு எப்படி ஜீவன் என்று விவகரிக்கப்படுகிறதோ அதுபோல் அதேஜடசக்தியான மாயையைக்கொண்டு ஈச்வரனென்று விவகரிக்கப்படுகிறது. தத்யதாSன: ஸுஸமாஹித முத்ஸர்ஜத்யாயாத்' என்ற (ப்ரஹ 4-3-35) வாக்யம், மரணகாலத்தில் இந்த ஜீவன் சரீரத்தை விட்டு கிளம்புகின்றபோது, எப்படி ஒரு பாரவண்டியில் வீட்டிலுள்ள அனைத்துப் பொருள்களையும் ஏற்றினுல் அந்த பாரத்தை, அதில் பூட்டியிருக்கின்ற மாடுகள் இழுக்கமுடியாமல் கஷ்ட்டப்பட்டு இழுத்துக் கொண்டு போகின்றபோது, மசை இல்லாத அந்த வண்டிச்சக்கரங்கள் எவ்விதம் சப்தம் செய்கின்றதோ அதுபோல் அந்த ஜீவன் லிங்கசரீரத்தில் இருக்கின்ற ஸர்வபாரத்தையும் சுமந்து கொண்டு போகின்றபோது கஷ்ட்டப்படுகிறது என்றும், பரமாத்மாவான இந்த வண்டிக்காரன் என்ற ஈச்வரன் லிங்கசரீரம் செல்லவேண்டிய இடத்திற்கு கொண்டுபோகிருன் என்றும் இந்தச்ருதிவாக்யத்திலுல் அறியப்படுகிறது. இதேபோல் "ப்ராஞ்ஞேனுSSத்மனுSன்வாரூட உத்ஸர்ஜன்யாதி" என்ற (ப்ரஹ 4-3-35) வாக்யம் ஈச்வர அதீனமாகவே லிங்க சரீரகமனம் ஏற்படுவதாக தெரிவிக்கின்றது.

சைதன்யம் ஏகம் என்ருலும், புர்யஷ்ட்டகத்தில் ப்ரதிபிம்பிக்கின்ற சைதன்யம் ஜீவன் என்றும் அதற்கு காரணமான மாயாப்ரதிபிம்ப சைதன்யம் ஈச்வரன் என்றும் விவகாரம் செய்யப்படுகிறது. இதில் ப்ரத்யக்ஸ்வரூப ஆவாரகமான அஞ்ஞானம் என்பது ஜடசக்தி என்று சொல்லப்படுகிறது. இந்த நிலையில் இந்த ஜடசக்தியை பரமேச்வரனுக்கு உபாதி என்று சொல்லப்படுகிறது. இந்தவிதம் காரணமாத்ரமான ஜடசக்தியை மாயை என்றும் அதுவே கார்யமாக ஆகின்றபோது அவித்யை என்றும், அஞ்ஞானம் என்றும் சொல்லப்படுகிறது. இந்த அஞ்ஞானமே ஜீவ உபாதி. இவ்விதம் அஞ்ஞானியான ஜீவன்புர்யஷ்ட்டகத்துடன் கூடினவனென்றும் ஜடசக்தி என்ற காரண உபாதி மாத்ரமாக இருப்பவன் ஈச்வான் என்றும் சொல்லப்படுவதற்கு ச்ருதிவாக்யங்களே ப்ரமாணம்.

**45.** அவதாரிகை : இதனுல் ஏற்படும் பலன் என்னவென்ருல்,

ச்லோகம் : पुरहेतुकं तव यथा च वपुर्भवतीह जीववचसो विषयः ।
जडशक्त्युपाधिकममुष्य तथा परमेश्वरत्ववपुरुद्भवति

ச்லோகார்த்தம் : புரத்தினுல் ஏற்பட்ட உன் ஸ்வரூப மானது ஜீவன் என்ற பதத்திற்கு விஷயமாக இருக்கிறது. அதேபோல் ஜடசக்தியான அவித்யை என்ற உபாதியினுல் பரமேச்வர ஸ்வரூபம் ஏற்படுகிறது.

வ்யாக்யானம் : அஞ்ஞுன உனக்கு, புர்யஷ்ட்டகத்துடன் கூடியவனுக இருப்பதால் ஜீவன் என்ற விவகாரம் ஏற்படுகிறது. சரீராகாரமாக இருப்பதே விசேஷம். ஆகவே, மரணகாலத்தில் அந்த:கரணம் என்ற உபாதி இல்லாததால் உபாதி ப்ரதிபலனம் ஏற்பட முடியாது என்பதால் சிதாபாஸனும் இல்லே. இவ்விதம் கார்ய உபாதி இல்லே என்ருலும் காரணமான அஞ்ஞான (அவித்யை) உபாதி இருக்கின்றது. அவித்யை என்பதும் இல்லாவிடில் லிங்க சரீரம் என்பதே இருக்கமுடியாது. அதனுல் சிதாபாஸனுக்கு லயம் ஏற்பட்டபோதிலும் அதற்கு காரணமான ஈச்வரசைதன்யத்தினுல் கமனம் ஏற்படுகிறது.

**46.** அவதாரிகை : இவ்விதம் லிங்க சரீரகமனத்திற்கு ஈச்வரன் நிமித்தம் என்று சொல்லப்படுவதில் ப்ரமாணம் என்ன?

ச்லோகம் :

पुरहेतुरूपघटितस्य दृशोर्जडशक्त्युपाधिपरमेश्वरतः ।
भयमुद्भवत्यनवबोधवशादिति च त्रयीशिरसि राजपथः

ச்லோகார்த்தம் : புரத்தினுல் ஏற்பட்ட ஸ்வரூபத்தையுடைய ஜீவசைதன்யத்திற்கு, ஜடசக்தியான அவித்யோபாதியைக் கொண்ட பரமேச்வரனிடத்தில் அஞ்ஞானத்தினுல் பயம் ஏற்படுகிறது. இதுவே உபநிஷத் என்பதனுல் தெரிவிக்கப்படும் (போதிக்கப்படும்) ராஜமார்க்கம்.

வ்யாக்யானம் : பரலோக கமனம் என்பது, பரமேச்வர அதீனமாகவே ஏற்படுகிறது என்பதற்கு ச்ருதிவாக்யமேப்ரமாணம் "பீஷாSஸ்மாத்வாத: பவதே" என்ற (தைத்ரீய 2-8-1 வாக்யமும், "ஏஷஏவ ஸாதுகர்மகாரயிதி யமுன்நி நீஷிதே ஏஷஹ்யேவா ஸாதுகர்ம காரயிதியமதோநி நீஷதே" என்ற (கௌஷி 0-3-8) வாக்யம் போன்ற பலவாக்யங்கள் இதற்கு ப்ரமாணமாக இருக்கின்றது. புண்யம், பாபம் என்ற கர்மபலனேக் கொடுக்கின்றவர் ஈச்வரன் என்பதால் கர்ம பலதாதா என்று தெரிவிக்கின்றது. நல்லகர்மா, கெட்ட கர்மா என்பவைகளில் (அவரவர் வாஸனேயின்படி) அவர்களே ப்ரவர்த்திக்கும்படிச் செய்பவர் ஈச்வரன் என்று சொல்லப்படுகிறது. பரலோக கமனம் என்பதும் பந்த மோக்ஷம் என்பதும் ஈச்வராதீனம் என்று இந்த விதம் முன்னுல் சொல்லப்பட்ட முறையில் சொல்லப்படுகிறது. "யதிதம் கிஞ்ச ஜகத்ஸர்வம் ப்ராண ஏஜதி நி : ச்ருதம் மஹத்பயம் வஜ்ரமுத்யதம்" என்ற (கடோ 2-3-2) மந்த்ரமும், "யதாஹ்யே வைஷ ஏதஸ்மின் உதரமந்தரம்குருதே: அததஸ்யபயம் பவதி' என்ற தைத்ரீய (2-7-1) ச்ருதிவாக்யங்கள் எல்லாம், லோகத்திலுள்ள ப்ராணிவர்க்கங்கள் அனேத்தும் பரமாத்ம ஸ்வரூபமான தத்வத்திலிருந்தே உண்டாகி, அதிலேயேஸ்திதிபெற்று, அதனுலேயே ஜீவித்திருக்கின்றது என்றும், இப்பேர்ப்பட்ட ஜகத் காரணமான வஸ்துவே வஜ்ராயுதத்தை சிரஸிற்கு மேல் தூக்கினுல் எப்படி பயம் ஏற்படுகிறதோ அப்பேர்ப்பட்ட மஹத்தானபயத்திற்கும் காரணம் என்றும், பேததர்சனம் உள்ளவனுக்கே இப்பேர்ப்பட்ட பயத்தை கொடுக்கின்றது என்றும் பலச்ருதிவாக்யங்கள் தெரிவிக்கின்றது. அதனுல் ச்ருதிவாக்யமே இதில் ப்ரமாணம்.

**47.** அவதாரிகை : இதேவிஷயம் மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

परमेश्वरेण विभुना रणयन् परिबृंहितः शकटवद्व्रजसि ।
शकटं हि शाकटिकयोगवशाद्व्रजति स्वयं न परतन्त्रतया

ச்லோகார்த்தம் : பரமேச்வரனுல் (அதிஷ்டிதனுகி - ஆச்ரயிக்கப்பட்டவனுன நீ (வண்டியின்) சகடம் போல் சப்தம் செய்து. கொண்டு பரலோகம் செல்கிருய். சகடம் என்பது வண்டிக்காரன் ஸம்பந்தம் இன்றி தானுக செல்வதில்லே. ஏனெனில் அதுபரதந்த்ரமாக இருக்கின்றது.

வ்யாக்யானம் : ப்ராஞ்ஞுன ஆத்மாவே ஈச்வரன், இந்த ஈச்வரனே லிங்க சரீர ஆரூடனுகிருன் என்று "ப்ராஞ்ஞேனு ஆத்மனுSன்வாரூட: என்ற ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. "ரணயன் துக்க வஸாத் சப்தம் குர்வன் சகடமிதி" என்ற வாக்யம், வண்டிக்காரனுல் அதிஷ்ட்டிதமான வண்டி, எப்படி சப்தத்துடன் போகின்றதோ, ஸ்வயமே வண்டி எப்படிப் போவதில்லேயோ அதுபோல் மரணுவஸ்த்தையில் இந்த லிங்கசரீரம், இந்த சரீரத்தை விட்டு கிளம்புகின்றபோது கஷ்ட்டம் பொறுக்கமுடியாமல் சப்தம் போடுகிருன் என்பதை 'ரணயன்' என்றபதம் தெரிவிக்கின்றது. "தத்யதாSன" ஸுஸமாஹிதம்" என்ற (ப்ரஹ 4-3-35) ச்ருதிவாக்யத்திலுல் அறியப்படுகிறது. ஆகையினுல் பரமேச்வர அதீனமாகவே மரணகாலத்தில் புர்யஷ்ட்டகத்துடன் ஜீவனுக்கு கமனம் சொல்லப்படுகிறது.

**48.** அவதாரிகை : பரமேச்வர அதீனமாகவே கமனுகமனம் ஏற்படுவதாகச் சொல்லப்படுமானுல் கர்மபலமான ஜன்மாவில் வைராக்யம் எப்படி ஏற்படும்.(கர்மணி வைராக்யம் என்பதை ஜன்மனிவைராக்யம் என்று அறியவேண்டும்) மேலும், சேதனனுன ஜீவனுடைய கமனு கமனத்திற்கு அசேதனமான வண்டி என்பதை உதாரணமாகச் சொல்வது எப்படி பொருந்தும்? சேதனனுன ஜீவனுடைய கமனுகமனம் ஈச்வர அதீனமாக ஏற்படுகிறது என்று சொல்லவேண்டிய அவஸ்யம் என்ன?

ச்லோகம் :

पुरवेष्टितः पुरवशानुगतः पुरतन्त्रचिन्निभविभिन्नवपुः ।
दिवि यातनाभुवि च कर्मफलान्यनुभूय भूय इह संभवति

ச்லோகார்த்தம் : புரவேஷ்டிதனுகவும் புரத்தின் வசப்பட்டவனுகவும், புராச்ரயனுகவும் சிதாபாஸ விசிஷ்ட்டனுகவும் இருக்கின்ற ஜீவன் (பரதந்தான்) ஸ்வர்க்கம், நரகம் முதலான பலன்களே (கர்மாவிற்கு தக்கவாறு) அனுபவித்து மீண்டும் இங்கு பிறக்கின்ருன்.

வ்யாக்யானம் : சிதாபாஸன், புத்தி என்ற உபாதி ஒடுங்கி மரணத்தை அடைந்தபிறகு, ஜாக்ரத் முதலான அவஸ்த்தைகளில் இருப்பது போல் ப்ரஞ்ஞை உடையவனுக இருக்கமாட்டான். மூர்ச்சிதனுக இருக்கின்றதால் ஸ்வதந்தரமாக எந்த கார்யத்தையும் செய்ய முடியாது. சூக்ஷ்மாவஸ்த்தையில் இருக்கின்ற புத்தியின் ப்ரதிபிம்பமும் சூக்ஷ்மமாக இருக்கின்றதால் சிதாபாஸன் அவிவேக நிலேயில் இருக்கின்ருன். அதனுல் சேதனனுக இருந்த போதிலும் புரத்திற்குவசப்பட்டவனுகவே

இருக்கிருன். சிதாபாஸன் என்பது சித்ப்ரதிபிம்பமே யென்ருலும், தன் உண்மையான ஸ்வரூபம் விபு என்ரூே, ஸர்வசக்தி உள்ளது (ஸர்வசக்திமான்) என்ரூே அறியாமல் பரிச்சின்னத்வம் முதலான தர்மங்களையுடையவனுக தன்னை அறிவதால் ஈச்வனுக்கு அதீனம் என்று சொல்லப்படுகிறது. கமனமே இல்லாத தன்ஸ்வரூபம், அவித்யையினுல் கமனம் இருப்பதுபோல் அறியப்படுகிறது. ஸ்வதந்த்ரமாக இருக்கின்ற நமக்கு அவித்யையினுல் தான் பாரதந்த்ரியம் ஏற்படுகிறது. இவ்விதம் உண்மையில் கமனுகமனம் அற்ற வனுகவும் ஸ்வதந்த்ரமாகவும் இருக்கவேண்டிய நமக்கு (அவித்யையினுல் ஏற்பட்ட) கமனுகமனத்தினுலும் அஸ்வதந்தரத்தினுலும் துக்கம் ஏற்படுகிறது என்று இந்த விஷயங்களை நன்கு விசாரித்து அறியப்படுகின்றபோது அவனுக்கு வைராக்யம் முதலான ஸம்பத்தி ஏற்படும். புண்யகர்மாவினுல் ஸ்வர்க்காதிலோகப்ராப்தி ஏற்படுவது போலவே பாபகர்மாவினுல் வைதரண்யம் முதலான நரகாதிலோகப்ராப்தி ஏற்படும். இவ்விதம் ப்ராரப்தத்திற்கு தக்க போகங்களை அனுபவித்து அதன்பிறகு மனுஷ்யலோகத்தில் ஜன்மாவை அடைகிருன் என்று ச்ருதிவாக்யங்கள் தெரிவிக்கின்றது. அதில் கர்மாதீனமாக லோகாதிகளில் சுற்றிக் கொண்டிருப்பதை விட்டு வைராக்யம் அடையவேண்டும் என்பதையே சாஸ்திரம் போதிக்கின்றது.

**49.** அவதாரிகை : 'யே கேசஅஸ்மால்லோகாத் ப்ரயாந்தி சந்த்ரமஸமேவதே கச்சந்தி' என்ற (கௌ 1-2) வாக்யம் புண்யபோகங்களை அனுபவிப்பதற்காகச் சொல்லப்பட்டது என்று எப்படிச் சொல்வது யாராக இருப்பினும் மரணத்திற்குப்பின் சந்த்ரலோகம் போகிருன் என்று தானே இந்த வாக்யம் தெரிவிக்கின்றது? ஆகவே பாபத்தைச் செய்பவன் நரகத்தை அடைகிருன் என்று எவ்விதம் சொல்லப்படுகிறது?

ச்லோகம் :

सुकृतदुष्कृतकर्मवशादयं दिवमथो यमसादनमेव वा ।
अनुभवेन समाप्य पुनर्महीतलमबोधवशादवरोहति

ச்லோகார்த்தம் : புண்ய, பாபகர்மாக்களினுல் இந்த ஜீவன் ஸ்வர்க்கம் என்பதையோ, நரகம் என்பதையோ அனுபவித்து அதன்பிறகு மீண்டும் பூலோகத்தில் வந்து பிறக்கின்ருன்.

வ்யாக்யானம் : "புண்ய:புண்யேன கர்மணுபவதி பாப: பாபேன". என்ற (ப்ரஹ 4-4.5) ச்ருதி வாக்யம் புண்யபாப கர்மாக்களினுல் ஸ்வர்க்காதிலோகங்களுக்கோ நரகாதி லோகங்களுக்கோ செல்கிருன் என்று தெரிவிக்கின்றது. இந்த ஸ்வர்க்கம் முதலான புண்யபாப பலன்களை அனுபவித்து தீர்ந்தவுடன் விதம் ஜன்மாக்களில் செய்யப்பட்ட புண்ய பாபபலன்கள் ஸஞ்சிதகர்மபலனுக அனேக இருக்கின்றதால் அதை அனுபவிப்பதற்காக மறுபடி பிறக்கிருன் "ரமணீயசரணுரமணீயாம் மிச்சம் யோனிம் ஆப்த்:யந்தே" என்று "தத் தேஹ கபூய சரணு: கபூயாம் யோனிம் ஆபத்யந்தே" என்றும் (சாந்தோ 510.7) முதலான ச்ருதி வாக்யங்கள் தெரிவிக்கின்றது. நரகபூமி என்பதே ச்லோகத்தில் 'யமஸாதனம்' என்று சொல்லப்படுகிறது. ஆகையால் கௌஷிதகீவாக்யத்தில் ஏகாச என்ற பதத்திற்கு புண்யம் செய்தவர்கள் என்று ஸங்கோசம் செய்து அர்த்தம் செய்யவேண்டும்.

**50.** அவதாரிகை : கர்மா என்பதனுலேயே அது ஸம்ஸாரகாரணம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் ப்ரஹ்மலோகம் சென்றவன் இந்த மனுகல்பத்தில் திரும்ப வரமாட்டான் என்று "இமம் மானவம் ஆவர்த்தம் நாSSவர்த்தந்தே" என்ற (சாந்தோ 4-15.6) ச்ருதி வாக்யம் வித்யாகர்மஸமுச்சயத்தின் பலமாக அவர்களுக்கு புனராவ்ருத்தி இல்லை என்று தெரிவிக்கிறதே ?

**ச்லோகம் :**

यदि वा समुच्चयवशात्पुरुषः कमलासनं व्रजति कामुकधीः ।
पुनरेव मानवमिमं तु विना परिवर्तमाव्रजति मूढमतिः

**ச்லோகார்த்தம் :** அல்லது ஸகாமனுக (கர்மா, உபாஸனம்) என்ற) இரண்டையும் சேர்த்து செய்தனுவக இருக்கின்ற ஜீவன் ப்ரஹ்மலோகம் செல்கிருன். இந்த அஞ்ஞானி யானவன் நிகழ்கின்ற மனு கல்பத்தில் திரும்ப வரமாட்டான் என்ருலும் அடுத்த கல்பத்தில் திரும்ப (பூலோகம்) இங்கு வருகிருன்.

வ்யாக்யானம் : சொல்லப்பட்ட ச்ருதிவாக்யம் இந்த மனுகல்பத்தில் திரும்ப வரமாட்டான் என்று தெரிவிக்கின்றதேயன்றி எப்போதுமே வரமாட்டான் என்று தெரிவிக்கவில்லை. வித்யை என்பது மானஸகர்மா, கர்மாஉபாஸனம் என்ற இரண்டுமே க்ரியைதான். வித்யை என்பதற்கு ஆத்மஞானம் என்று அர்த்தம் செய்ப்படுமானல் அந்த ஞானத்திற்கு கர்மாவுடன் ஸமுச்சயம் சொல்லமுடியாது. அதனுல் உபாஸனை என்ற மானஸக்ரியை என்பதும் பலத்தில் இச்சையுடன் செய்தால் ப்ரஹ்மலோக ப்ராப்தி ஏற்படும். அதனுல் அந்தலோக போகங்களை அனுபவித்த பிறகு அந்த கர்ம பலன்முடிந்து விடுவதால் அடுத்த கல்பத்தில் திரும்பிவருகிருன். அதனுல் அந்த பலன்ஸம்ஸாரத்திற்குஹேது என்றே சொல்லப்படவேண்டும். ஆகவே ஸம்ஸாரஹேது இல்லையென்று சொல்வது வ்யபிசரிக்கின்றது. பலத்தில் இச்சையின்றி கர்மா உபாஸனங்களை செய்வானுகில் சித்த சுத்தித்வாரா ஞானத்தை அடைந்து மோக்ஷத்தை அடைகிருன். ஆகவே ப்ரஹ்மலோகம் சென்றவனும் ப்ரஹ்மாவினிடம் ஜீவப்ரஹ்ம ஐக்யஞானத்தை நீ அடையாமல் அந்த லோகானுபவங்களிலேயே ஈடுபட்டிருப்பானுகில் மறுபடியும் ஸம்ஸாரத்தை அடைந்தேயாகவேண்டும். ஸ்வர்க்கலோகம் போல் அதிசீக்ரம் திரும்பவில்லை யென்ருலும் அடுத்த மனுகல்பத்தில் திரும்ப வந்தேயாகவேண்டும் என்பதே அந்த வாக்யத்தின் கருத்து. 'இமம் மானவம் ஆவர்த்தம் நாSSவர்த்தந்தே' என்றே தெரிவிக்கின்றது.

**51.** அவதாரிகை : "ப்ரஹ்மணுஸஹ தேஸர்வே ஸம்ப்ராப்தேப்ரதிஸம்சரே பரஸ்யாந்தே க்ருதாத்மான: ப்ரவிசந்தி பரம்பதம்." என்றஸ்ம்ருதிவாக்யத்தையும், ச்ருதிவாக்யத்தையும் சேர்த்து அர்த்தம் செய்யப்படுமானுல், அனுவ்ருத்திச்ருதியானது ஞானகர்மஸமுச்சய பலத்தினுல் ப்ரஹ்மலோகம் சென்றவர்கள் ப்ரஹ்மாவிற்கு முடிவு ஏற்படும்போது அவர்கள் எல்லோரும் பரமாத்ம பதத்தை அடைகிருர்கள் என்று 'பரம்பதம்ப்ரவிசந்தி' என்று தெரிவிக்கின்றதே ?

ச்லோகம் :

अथ वा स तत्र परमात्ममतिः परिमुच्यते सकलबन्धनतः ।
क्रमयोगमुक्तिरुदिता श्रुतिषु प्रतिशाखमेवयुपपन्नतरा

ச்லோகார்த்தம் : அல்லது, இந்த ஜீவன், பரமாத்ம ஸ்வரூப ஞானத்தினுல் ஞானி ஆகி ஸர்வ பந்தங்களிலிருந்தும் விடுபடுகிருன். இவ்வித க்ரமமுக்தி என்பது பல சாகைகளேச் சேர்ந்த எல்லா உபநிஷத்துக்களிலும் சொல்லப்படுகிறது. இந்த விஷயம் யுத்தி யுக்தமாகவும் இருக்கிறது.

வ்யாக்யானம் : இந்த ஸ்ம்ருதிவாக்யத்தில் "க்ருதாத்மான": என்ற பதம், ப்ரஹ்மலோகத்தில் எவன் ஞானத்தை அடைகிருனே அவன் பரமபதத்தை அடைகிருன் என்றே தெரிவிக்கின்றது. கர்மா உபாஸனம் இவைகளின் பலன் ப்ரஹ்மலோகப்ராப்திதான். ப்ரஹ்மலோகம் சென்ருலும் மோக்ஷத்திற்கு ஸாதனம் ஞானம்தான். கர்மஞானஸமுச்ச அனுஷ்டானம் எதற்காக விதிக்கப்படுகிறது என்ருல், மந்த மத்திம அதிகாரியாக இருப்பவனுக்கு இதனுல் ப்ரஹ்மலோகப்ராப்தி ஏற்பட்டு அதை அனுபவித்த பிறகாவது ஒருஸமயம் வைராக்யம் ஏற்படுமானுல் ப்ரஹ்மாவின் உபதேசத்தினுல் ஞானத்தை அடைந்து முக்தியை அடைவான் என்பதால் விதிக்கப்படுகிறது. அவ்விதம் இல்லாவிடில் திரும்பவருகிருன் என்றே வாக்யங்கள் தெரிவிக்கின்றது. ஆகவே, 'யத்க்ருதகம்தத் அநித்யம்' என்று சொல்லப்பட்ட படிஞானம் என்ற உபாஸனேயும் மானஸக்ரியைதான் என்பதால் ப்ரஹ்மலோகப்ராப்திதான் கிடைக்கும். அதுநித்யபலனுக ஆகமுடியாது. ஞானம் என்பதே முக்திக்கு ஸாதனம் என்பதால் ப்ரஹ்மலோகத்திலும் ஞானத்தை அடைபவனே முக்தி அடைகிருன் என்று ஸர்வசாகைகளிலுமுள்ள ச்ருதிவாக்யங்கள் தெரிவிக்கின்றது. ஆகவே ஞானத்தை அடையாதவன் திரும்ப வந்தேயாகவேண்டும்.

52. அவதாரிகை : கர்மாதான் பந்தஹேது என்று சொல்லப்படுமானுல் கர்மாவைச் செய்யஅதிகாரம் இல்லாதவர்களுக்கும் ஸ்தாவரம் பசு பக்ஷியாதிகளுக்கும் முக்திஸம்ப விக்கின்றது என்று சொல்லவேண்டுமே?

ச்லோகம் :

देवयानपितृयाणयोः पथोर्ज्ञानकर्मरहितत्वकारणात् ।
नैकमप्यनुसरन्ति ये पुनः क्षुद्रजन्तव इहोद्भवन्ति ते

ச்லோகார்த்தம் : கர்மா, உபாஸனம் என்ற இரண்டு ஸாதனங்களேயும் எவர்கள் அனுஷ்டிப்பதில்லேயோ, அவர்கள் தேவயானம், பிதுர்யானம் இவைகளில் எந்த மார்க்கத்தையும் அனுசரிக்காமல் அல்ப ப்ராணிகளாக இங்கு பிறக்கின்ருர்கள்.

வ்யாக்யானம் : "அதைதயோ : பதோர்நகதரேணசன தானி மானீ க்ஷுத்ராண்ய ஸக்ருதாவர்த்தீனிபூதானி" என்ற (சாந்தோ 5-10.8) வாக்யமானது ஸ்வர்க்க பலனுக்காக கர்மாவைச் செய்தவன் பிதுர்லோக மார்க்கமாகச் செல்லவேண்டும் ப்ரஹ்மலோக பலனுக்காக (ஞானகர்மஸமுச்சயமான) கர்மாவைச்செய்பவன் தேவலோகமார்க்கமாகச் செல்லவேண்டும் என்றும், இந்த இரண்டுமார்க்கங்களில் செல்வதற்குரிய ஞானம், கர்மா என்ற புண்ய கர்மாவைச் செய்யாதவர்கள் அவரவர்கள் செய்த கர்மாவிற்கு

தக்கபடி க்ஷுத்ரஜென்மாவை (பசுபக்ஷ்யாதி) அடைகிருன் என்றே சாஸ்திரம் தெரிவிக்கின்றது. மேலும், 'அதைதயோ' என்ற சாந்தோக்யச் ருதி கர்மா உபாஸனம் செய்தவனும் ஜனனமரண ஸம்ஸாரத்தை அடையத்தான் வேண்டும். ஆனுல் அவர்கள் நல்ல ஜன்மாவை அடைந்து முக்திக்கு முயற்சி செய்யலாம் என்றும் இவ்விதம் கர்மா, உபாஸனம் என்ற இரண்டு மார்க்கத்திலும் ப்ரவர்த்திக்காதவர்கள் கீழ்ப்பட்ட ஜன்மாவையே அடைந்து கஷ்ட்டத்தை அடைவார்கள். ஆகவே ஞானிக்கும் கர்மாவில் அதிகாரம் கிடையாது. நாஸ்திகனுக்கும் கர்மாதிகாரம் கிடையாது. பசுயக்ஷ்யாதிகளுக்கும் கர்மாதிகாரமில்லே. அதனுல் முக்தி ஏற்படலாமே ? என்று ஆக்ஷேபம் செய்வது சரியல்ல. மோக்ஷம் என்ற பலன் ஏற்படுவதற்கு ஞானம் தான் காரணமேயன்றி கர்மாவை செய்யாதது காரணமில்லே. ஞானம் ஏற்படவில்லே யென்ருல் ஜன்மாவை அடைந்தேயாக வேண்டும். கர்மா உபாஸனம் என்பதெல்லாம் முக்திக்கு ஸாதனமில்லே என்று அறிவானுகில் வைராக்யத்தை அடைந்து ஞானத்தை அடைய முயற்சிப்பான். தேவயாணம் என்பது அர்ச்சிராதிமார்க்கம் உபாஸனுபலம், பிதுர்யாணம் என்பது கர்மபலன், தூமாதிமார்க்கம். இந்த இரண்டுமார்க்கத்திலும் செல்லாதவர்கள் பூலோகத்தில் க்ரீட, பதங்கம் முதலான க்ஷுத்ர ஜன்மாவை அடைந்து கஷ்ட்டத்தை அடைகிருர்கள்.

**53.** அவதாரிகை : இதுவரை ஸம்ஸார கதி என்பதைப் பற்றி விசாரிக்கப்பட்டது, இந்த விஷயம் முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது.

ச்லோகம் :

इति कामुकस्य तव संसरणं शतशो बभूव बत मूढमतेः ।
इह विप्रजन्मनि विरक्तमतिः कुरु साधनं यदपवर्गकरम्

ச்லோகார்த்தம் : இவ்விதம் ஸகாமனுகவும், அஞ்ஞானியாகவும் இருக்கின்ற உனக்கு, நூற்றுக்கணக்கான ஜன்மங்கள் ஏற்பட்டது. இந்த விப்ரஜன்மத்தில், விரக்த அந்த:கரணத்துடன் கூடினவனுக இருந்து மோக்ஷ ஸாதனத்தை அனுஷ்டிப்பாயாக.

வ்யாக்யானம் : விஷயங்களில் ஏற்பட்ட இச்சையினுல் செய்யப்பட்டகர்ம பலனுக ஸம்ஸாரம் தான் ஏற்படுகிறது என்று அறிந்து அதில் வைராக்யம் ஏற்பட்டால்தான் முக்தி ஏற்படும் என்ற விஷயம் தெரிவிக்கப்பட்டது.

**54.** அவதாரிகை : மோக்ஷத்திற்கு ஸாதனம் என்ன ? என்ருல்,

ச்லோகம் :

श्रवणादिकं शमदमादिपरः परमात्मनः परमभागवतः ।
कुरु तावता परममेव पदं परमात्मनस्त्वमवलोकयसि

ச்லோகார்த்தம் : ஸமதமாதிகளே உடையவனுகவும், பரமாத்மாவின் பரமபக்தனுகவும் இருந்துகொண்டு ச்ரவணுதிகளேச் செய்வாயாக அதனுல். பரமபதம் என்பதை அறிந்து கொள்வாயாக.

வ்யாக்யானம் : அபவர்க்கம் என்று சொல்லப்படும் மோக்ஷத்திற்கு ஸமதமாதிகளை அனுஷ்டித்து, ஏஷணாத்ரய பரித்யாகம் செய்து, பரமாத்ம ஸ்வரூபத்திலேயே அர்ப்பித்தமனஸை உடையவனாக இருக்கின்றவன், ஆத்மஸ்வரூபத்தைப்பற்றிய வேதாந்த ச்ரவணாதிகளைச் செய்வானாகில் அதுவே ஆத்மஞானத்திற்கு ஸாதனம். அதுவே மோக்ஷஸாதனம். ஆகவே பரமாத்மஸ்வரூபம் என்ற பரமபதத்திற்குச்ரவணாதிகளால் ஏற்படும்ஞானத்தையன்றி வேறு எதுவும் அபேக்ஷிக்கப்படவில்லை.

**55.** அவதாரிகை : ஆத்மஞானம் இல்லாவிடில் ஏற்படும் நஷ்டம் என்ன ? என்றால்

ச்லோகம் :

यदि तत्र पश्यसि हरेः परमं पदमम्बुशीतलमिवेद्धशिराः ।
न खलु प्रदीप्तशिरसोऽस्ति सुखं तव दुःखपावकशिखाभिरहो

ச்லோகார்த்தம் : இவ்விதம் அஞ்ஞானத்தினால் ஏற்படுகின்ற தாபத்ரயம் என்பது அதிசூக்ஷ்மமானது என்று அறிந்துகொண்டு ஸ்வப்ரகாசமாகவும், பரமானந்த ஸ்வரூபமாகவும் நிஷ்களமாகவும், நிஷ்களங்கமாகவும் ஸத்யமாகவும், நித்யமாகவும், த்வைதஸமூகங்கள் அற்றதுமான பரமாத்மாவைப் பற்றிய ஜிஞ்ஞாஸையை ஏற்படுத்திக் கொள்வாயாக.

வ்யாக்யானம் : ஸம்ஸாரம் என்ற தீயினால் தாபத்தை அடைந்திருக்கின்ற உனக்கு, ஆத்மஞானம் ஏற்படவில்லையென்றால் ஆத்யந்ததுக்க நிவர்த்தி என்பதே ஏற்படாது. குளிர்ந்த ஜலம் போன்ற ஆத்மஞானத்தினால்தான் ஸம்ஸாரம் என்ற அக்னியின்தாபம் நீங்கி ஆத்யந்திக துக்கநிவர்த்தி ஏற்படவேண்டும். ஆத்ம ஞானத்தினால் தான் சுகப்ராப்தி ஏற்படும்.

**56.** அவதாரிகை : வைராக்யம் பற்றியும், அதனை அடைவதால் ஏற்படும் ப்ரயோஜனம் பற்றியும் சொல்லப்பட்ட விஷயம், இப்போது முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

ச்லோகம் :

एवं विज्ञाय तापत्रयमतिगहनं मोहमूलं परस्मिन्नात्मन्यात्मप्रकाशे त्वयि परमसुखे निष्कले निष्कलङ्के ।
सत्ये नित्यस्वभावे परिहृतसकलद्वैतकूटानुषङ्गे सम्यग्ज्ञानानुरागं कुरु विषयगतं भिन्धि निर्बन्धमेनम्

ச்லோகார்த்தம் : இவ்விதம் அஞ்ஞானத்தினால் ஏற்படுகின்ற தாபத்ரயமானது மிக்க ஆழமானது என்று அறிந்து, ஸ்வப்ரகாசமாகவும், பரமானந்த ஸ்வரூப மாகவும் நிஷ்களமாகவும் நிஷ்களங்கமாகவும் ஸத்யமாகவும், நித்யமாகவும், த்வைதஸமூகம் அற்றதுமான பரமாத்மாவைப்பற்றிய ஜிஞ்ஞாஸையை ஏற்படுத்திக்கொள்வாயாக விஷயங்களிலுள்ள பற்றை (ஆசையை) விட்டு ஒழிப்பாயாக.

வ்யாக்யானம் : ஸம்யக்ஞானம் ஏற்படாமல் ஸம்ஸாரம் என்ற அனர்த்தத்திற்கு பரிகாரம் ஏற்படமுடியாது. ஆதியாத்மிகம் முதலான துக்கம் மூன்றையும் அனுபவிப்பதென்பது யாராலும் முடியாது. அதனால் சொல்லப்பட்ட முறையில் ஸம்ஸாரம் என்பது என்ன என்று தீரவிசாரிக்க வேண்டும். அதன்பிறகு அதற்கு விலக்ஷணமாகவும், கேவல சுகஸ்வரூபமாகவும் இருக்கின்ற ஆத்ம ஸ்வரூபஞானம் என்பதை அடைவதற்கு

மனதை அனாத்மவிஷயங்களில் ஈடுபடாமல் செய்து ஏகாத்ரதையுடன் வேதாந்த ச்ரவணாதிகளை செய்யவேண்டும். ஸம்யக்ஞானத்தை அடையாமல் தாபத்ரயங்களை பரிகாரம் செய்ய முடியாது. பரமாத்மஸ்வரூபமே நான் என்று அறிந்து கொள்வதற்கு உரிய ஸாதனங்களைச் செய்யவேண்டும். அனாத்மவஸ்துகள் அனைத்தும் அஞ்ஞானகார்யம் என்பதை அறிந்து, ச்ருதிவாக்யத்தினால் ப்ரஹ்மஸ்வரூப விசேஷணங்களை அறிந்து ஆத்மஸ்வரூபத்திலேயே நிலைபெற்றிருக்கவேண்டும். இவ்விதம் ஸம்யக் ஞானத்தை பெறவேண்டுமென்ற தீவிர இச்சையுடன் இருக்கவேண்டும். ஐஹிக ஆமுஷ்மிக விஷயங்களில் வைராக்யம் இல்லையென்றால் விநாசம் தான் ஏற்படும்.

**57.** அவதாரிகை : வைராக்யம் ஏற்பட்டால்தான் தத்த்வம்பதார்த்த விசாரத்தில் தீவிர இச்சை ஏற்படும் என்பதால் மேலும் சிஷ்யனுக்கு ஜிஞ்ஞாஸையைப் பற்றி தெரிவிக்கின்றார்.

**ச்லோகம் :**

इत्युक्त्वोपरते गुरौ पुनरयं जिज्ञासया प्रेरितस्तत्त्वंशब्दनिगद्यलक्ष्यविषयं शिष्यो गुरुं पृच्छति ।
वैराग्येऽतिदृढीकृते सति यतः प्राज्ञो यतिर्मन्यते संदीप्तं शिरसीव पावकमिदं संसारदुःखं महत्

**ச்லோகார்த்தம் :** இவ்விதம் குருவினால் உபதேசிக்கப்பட்ட விஷயங்களை கேட்டபிறகு ஜிஞ்ஞாஸையால் தூண்டப்பட்ட சிஷ்யன், தத்த்வம் பதார்த்தங்களின் லக்ஷ்யார்த்தங்களை அறியவிரும்பி மேலும் கேட்க்கிறான். ஏனெனில் வைராக்யம் த்ருடமாகின்ற போது விவேகியான யதியானவன் மஹத்தான ஸம்ஸாரதுக்கத்தை சிரஸில் பற்றிஎரிகின்ற அக்னியைப் போன்றது என்று ஸமமாக பார்க்கின்றான்.

**வ்யாக்யானம் :** வைராக்யம் ஏற்பட்ட பிறகே தத்த்வம்பதார்த்த விசாரத்தில் இச்சை ஏற்பட்டு அதில் ப்ரவர்த்திப்பான் என்று ஸம்ஸாரத்தைப் பற்றியும், அதை நிவர்த்திப்பதற்குரிய ஸாதனங்களையும் தெரிவிக்கப்பட்டதால் சிஷ்யன் வைராக்யத்தை அடைந்து, குருவினிடம் மேலும் தன்ப்ரச்னையைத் தெரிவிக்கின்றான்.

**58.** அவதாரிகை : சிஷ்யனின் ப்ரச்னையை வைராக்யம் என்ற ஸாதனையைக் காரணமாகக் கொண்டு தெரிவிக்கின்றார்.

**ச்லோகம் :**

वैराग्यं विषयेषु पूर्वमपि मे जातं हरेरर्चनाद्यज्ञादिक्रियया निरस्तफलया किं त्वद्य दार्ढ्यं गतम् ।
संसारस्य निरूपणेन धिगिदं कर्मादिजन्यं फलं विश्वं नश्वरमम्बुबुद्बुदसमं पद्मासनान्तं जगत्

**ச்லோகார்த்தம் :** பலத்தில் இச்சையின்றி யஞ்ஞாதி அனுஷ்ட்டானங்களினால் ஹரியை பூஜிக்கின்றதன் மூலமாக ஏற்கனவே எனக்கு விஷயங்களில் வைராக்யம் ஏற்பட்டிருக்கிறது. ஸம்ஸாரஸ்வரூபத்தை விசாரிப்பதன் மூலம் வைராக்யம் மேலும் த்ருடமாக இருக்கிறது. கர்மாதிகளினால் ஏற்படும் பலமாக இருப்பதும், நீர்குமிழி போல் நச்வரமாக இருப்பதும் ப்ரஹ்மலோக பர்யந்தம் நீடித்திருப்பதுமான இந்த ஸமஸ்தப்ர பஞ்சமும் வெறுக்கத்தக்கதேயாகும்.

வ்யாக்யானம் : பலத்தில் இச்சையின்றி யஞ்ஞாதிகர்மாக்களை ஈச்வரார்ப் பணமாகச்செய்யப்பட்ட காரணத்தினாலும், ஸம்ஸாரகதிபற்றி நிருபணம் செய்யப்பட்டதாலும் எனக்கு த்ருடமானவைராக்யம் ஏற்பட்டிருக்கிறது.

**59.** அவதாரிகை : இந்தவிதம் ஸம்ஸாரநிரூபணத்தினால் ஏற்பட்ட பலன் என்னவென்று தெரிவித்தபிறகு, த்வம்பதலக்ஷ்யார்த்தத்தை அறிவதற்குரிய விசாரத்தை தெரிவிக்கின்றார்.

**ச்லோகம் :**

किं तु त्वंपदलक्ष्यमर्थमधुना कर्तुत्वभोक्तृत्वयोर्जाग्रद्भूगतयोरपोहमुखतो वाञ्छाऽवगन्तुं मम ।
कर्तृत्वादिकमस्य किं निजमभूत्स्वाभाविकं जाग्रत: किं वा तत्परत: कुतश्चिदभवच्चैतन्यधातोरिति

**ச்லோகார்த்தம் :** ஜாக்ரத் அவஸ்த்தையில் இருக்கின்ற கர்த்ருத்வம், போக்த்ருத்வம் இவைகளை நிஷேதிப்பதன் மூலம் த்வம்பதத்தின் லக்ஷ்யார்த்தத்தை அறிந்துகொள்வதற்கு நான் இப்போது இச்சிக்கிறேன். சைதன்யவஸ்துவிற்கு ஜாக்ரத் அவஸ்தையில் தோன்றுகின்ற தனது கர்த்ருத்வம் முதலானவைகளை ஸ்வாபாவிகமா அல்லது வேறு ஏதாவது நிமித்தத்தினால் ஏற்பட்டதா ?

வ்யாக்யானம் : சாஸ்திர ஆரம்பத்தில் ஜீவப்ரகரணம் ஆரம்பிக்கின்றபோதே, ஆத்மாவிற்கு கர்த்ருத்வாதிகள் ஆத்யாஸிகமேயன்றி ஸ்வாபாவிகம் இல்லை யென்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆயினும், அந்த விஷயம் பற்றி சிஷ்யன் மேலும் அறிய விரும்புகின்றான். அதாவது ஜாக்ரத் முதலான அவஸ்த்தைகளில் அறியப்படும் கர்த்ருத்வம் முதலானவைகள் ஸ்வாபாவிகம் என்றால் அதை விலக்கமுடியாது. ஸ்வாபாவிக மாக இல்லாமல் வேறு ஏதாவது ஒருகாரணத்தினால் ஏற்பட்டிருக்குமானால் அந்த காரணத்தை பரிகாரம் செய்யப்படுமானால் அதனால் ஏற்பட்ட கர்த்ருத்வாதிகளை நிஷேதம் செய்யலாம். ஔபாதிகம் என்று சொல்படுமானால் எந்த உபாதியைக் கொண்டு எவ்விதம் ஏற்படுகிறது என்பதை தெரிவிக்க வேண்டுகிறேன்.

**60.** அவதாரிகை : மேலும், ப்ரஹ்மாத்ம ஐக்யத்தை அறியவிரும்புகின்றவனுக்கு வாக்யார்த்தம் என்பதே அறியப்படவேண்டும் என்பதால் பதார்த்த ஜிஞ்ஞாஸை எதற்கு ?

**ச்லோகம் :**

यावत्त्वंपदलक्ष्यवस्तुविषयो बोधो न मे वर्तते तावन्मे बधिरेषु गीतमिव तच्छ्रौतं वचोऽनर्थकम् ।
तस्मात्त्वं पदलक्ष्यवस्तुविषय: कर्तृत्वभोक्तृत्वयोर्जाग्रद्भूगतयोरपोहमुखतो बोधो ममोत्पाद्यताम्.

**ச்லோகார்த்தம் :** எதுவரையில் த்வம்பதலக்ஷ்யார்த்தம் பற்றிய அறிவு எனக்கு ஏற்படவில்லையோ அதுவரை செவிடனால் கேட்க்கப்படும் ஸங்கீதம் போல்ச்ருதிவாக்யம் எனக்கு அர்த்தமற்றதாகவே இருக்கும். ஆகையால் ஜாக்ரத் அவஸ்தையில் இருக்கின்ற கர்த்ருத்வம், போக்த்ருத்வம் இவைகளை நிஷேதம் செய்வதன் மூலம் த்வம்பத லக்ஷ்யார்த்தம் பற்றிய ஞானம் உங்களால் எனக்கு ஏற்படவேண்டும்.

வ்யாக்யானம் : ப்ரஹ்மாத்ம ஐக்யத்தை வாக்யார்த்தம் தான் போதிக்கின்றது. ஆனால், அந்த பதங்களின் வாச்யார்த்தத்தினால் கிஞ்சிக்ஞத்வம், ஸர்வஞ்ஞத்வம்

முதலான விரோதம் ஸம்பவிக்கின்றது. அதனுல் லக்ஷணேயினுல் கேவல அத்விதீய ஸ்வரூப போதம் என்பது ஏற்படுவதற்கு பதார்த்த விசாரம் இல்லாமல் மஹாவாக்யங்களின் அர்த்தம் அறிந்து கொள்வதற்கு முடியாது. அதனுல் த்வம்பதலக்ஷ்யார்த்தம் பற்றி அறியவிரும்புகின்றேன்.

**61.** அவதாரிகை : இவ்வித ப்ரச்னங்களுக்கு குருவினுல் பதில் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

कर्त्रादेरवभासकत्वमगमः शुद्धः स्वयंभास्वरश्चैतन्येन निजेन तेन भवतः कर्त्रादिबुद्धिभ्रमः ।
कूटस्थस्य चिदात्मनस्तव कुतः कर्तृत्वभोक्तृत्वयोः शङ्का जागरितेऽपि कारकगणं कर्त्रादिकं पश्यतः

**ச்லோகார்த்தம் :** சுத்தமாக இருக்கின்ற நீ உன்ஸ்வயம்ப்ரகாச சைதன்யத்தினுல் கர்த்ருத்வம் முதலானவைகளே ப்ரகாசம் செய்பவனுக இருக்கின்ருய் ஆகையால் நான் கர்த்தா என்ற எண்ணம் ப்ரமமேயாகும். கூடஸ்த்த சைதன்யஸ் வரூபனுகவும் கர்த்ராதிகாரகஸ மூகத்தைப் ப்ரகாசப்படுத்துகின்றவனுமான உனக்கு ஜாக்ரத் அவஸ்த்தையிலும் கர்த்ருத்வாதி ஸங்கை எப்படி ஏற்படமுடியும்?

**வ்யாக்யானம் :** கர்த்ருத் வாதிகள் ஆத்மாவிற்கு இருப்பதாக அறியப்படுவதாலேயே கர்த்ருத்வாதிகள் த்ருச்யம் என்பது அறியப்படுகிறது. அதனுல் அஹம் கர்த்தா என்பது ப்ராந்தி என்றே அறிந்துகொள்ளவேண்டும்.

**சிஷ்யன் :** ஆத்மஸ்வரூபமானது கர்த்ருத்வாதி தர்மங்கள் உள்ளது என்றே சொல்லவேண்டும். ஏனெனில் க்ரியை, கர்மா, கரணம் என்ற போகஸாதனங்களும், அவைகளே அனுபவிக்கின்ற ப்ரமாதா ப்ரமேயம் என்பது முதலானவைகளும் இருப்பதாகச் சொல்லப்படுமாஞல், எந்த ஸமயத்திலும் இவைகளுக்கு பாதம் ஏற்படுவதாக அறியப்படவில்லேயே? அதனுல் இவைகள் ப்ரமம் என்று எப்படிச் சொல்லமுடியும்?

**சித்தா :** கர்த்ருத்வாதிகள் ஆத்மதர்மமல்ல, த்ருச்யமாக இருப்பதால் சுக்திரஜதம்போல் விசாரத்தை ஸஹிக்காது என்று யுக்தியுடன் கூடியச்ருதியினுல் கர்த்ருத்வாதிகள் பாதிக்கப்படுகிறது. 'கர்த்ருவாதிகள் இருக்கின்றது' என்று ஸ்வயம்ப்ரகாச ஸ்வரூபமான ஆத்மாவினுல்தான் ப்ரகாசிக்கின்றது. எது ப்ரகாச்யமோ அதன்தர்மம் ப்ரகாசத்தில் இருக்கமுடியாது. ஆகவே அஹம், கர்த்தா என்ற கர்த்ருத்வ அனுபவம் எங்கு ஏற்படுகிறது என்று அறியப்படாத காரணத்தினுல், ஆத்மாவில் இருப்பதாக ப்ரமம் ஏற்படுகிறது.

**பூர்வ :** கர்த்ருத்வாதிகள் த்ருச்யம் என்பதால் ஆத்மதர்மமில்லே என்று 'த்ருச்யத்வாத்' என்பதை ஹேதுவாகச் சொல்லப்படுகிறது. அவ்விதம்சொல்லப்படுமானுல் 'இந்தகடத்தைநான் அறிகிறேன்' என்று சொல்லப்படுகின்றபோது, ஆத்மா அறியப்படுகிறது என்றுதானே சொல்ல வேண்டும்? அதனுல் சொல்லப்படும் ஹேது வ்யபிசரிதமாக இருக்கிறது.

**சித்தா :** உபாதியுடன் கூடின சைதன்யமே த்ருச்யம் போல் தோன்றுகிறது. ஆனுல் கூடஸ்த்தமான சிதாத்மஸ்வரூபம் என்பது அறியப்படும் ஸ்வரூபமல்ல. ஞாத்ருத்வம் முதலான எந்த விகாரங்களும் அற்றதான கூடஸ்த்தஸ்வரூபம். 'அஹம்கர்த்தா' என்ற

புத்தி ப்ரமத்திஞல் ஏற்பட்டது. நிர்விகாரமான சிதாத்மஸ்வரூபத்திஞல்தான், கர்த்ருத்வாதி காரங்களின் கூட்டம் இருக்கின்றதென்று உன்ஞல் அறியப்படுகிறது. த்ரஷ்ட்டாவான உன்ஸ்வரூபத்தில் த்ருச்யதர்மங்கள் எப்படி இருக்கமுடியும் ? ஆகவே ஜாக்ரத் முதலான அவஸ்த்தைகளில் அறியப்படுவதெல்லாம் (மித்யை என்றே) ப்ராந்தி என்றே அறியவேண்டும்.

**62.** அவதாரிகை : பாஸகம் என்ருல் அதில் பாஸ்யதர்மம் இருக்கமுடியாது என்ற விஷயம், த்ருஷ்ட்டாந்த மூலம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் : व्यापारं सकलस्य भासयति यो भास्वत्करो भास्करो
नासौ कर्तृतया जनस्य विदितो भूमौ द्युलोकस्थितः ।
एवं स्वे महिमन्यवस्थितवतः संघातमुत्पश्यतः
स्वव्यापारसमन्वितं तव कुतः कर्तृत्वमुत्प्रेक्षते

ச்லோகார்த்தம் : ஆகாசத்தில் இருக்கின்றவனும், ப்ராகாசமான கிரணங்களை உடையவனுமான சூர்யன் எல்லோருடைய வ்யாபாரங்களையும்ப்ரகாசிக்கச் செய்கிருன். ஆஞல் பூலோகத்தில் இருக்கின்ற ஜனங்கள் சூர்யனை கர்த்தா என்பதாக பாவிக்கவில்லை. அதேபோல் தன்னுடைய மஹிமையில் இருக்கின்றவனும் ஸங்காதத்தை ப்ரகாசம் செய்கின்றவனுமான உனக்கு வ்யாபாரத்துடன் கூடிய கர்த்ருத்வம் எப்படிஸம்பவிக்க முடியும் ?

வ்யாக்யானம் : கூடஸ்த்தமான ஆத்மா, கர்த்தா முதலான காரக கணங்களை ப்ரகாசப்படுத்துகின்றது என்று சொல்லப்படுமாஞல் ஆத்மாவிற்கு த்ரஷ்ட்ருத்வம் சொல்லப்பட்டதாக ஆகிறது. அதஞல் த்ரஷ்ட்டாவினிடம் தர்சனக்ரியை இருக்கின்றது என்றுதானே சொல்லவேண்டும்.

சித்தா : தர்சன க்ரியை, த்ரஷ்ட்டாவினிடம் ஏற்படவேண்டுமென்ற அவச்யம் ஏதுமில்லை. சூர்யன் த்யுலோகத்தில் தான் இருக்கிருன். ஆஞல் பூலோகத்திலுள்ள ஸர்வ விஷயங்களையும் (வ்யவஹாரங்களையும்) ப்ரகாசப் படுத்துகின்ருன். ஆஞல் அதற்காக சூர்யனை விஞ்ஞாதா என்று, அதாவது சூர்யன் பார்க்கிருன், இந்த வ்யவஹாரங்களைச் செய்கிருன் என்று ஒருவராலும் சொல்லப்படவில்லை. ஸர்வப்ரகாசமாக இருக்கிறது என்பதற்காக தர்சனக்ரியை இருப்பதாக சொல்லப்படுவதில்லை. எந்தவிதமான விக்ரியையும் இன்றி சூர்யன் ப்ரகாசப்படுத்துவதுபோல் ஆத்மா என்பதும் சாக்ஷாத் த்ரஷ்ட்டரி ஸம்ஞாயா' என்று விவகார ஸம்பந்த மின்றி சாக்ஷிமாத்ரமாக ப்ரகாசிக்கின்றதால்தான் சாக்ஷி என்றே சொல்லப்படுகின்றது. ஆகவே, ஸர்வத்தையும் ப்ரகாசிக்கச் செய்கின்ற உன்னிடத்தில் கர்த்ருத்வாதிகள் எப்படிஸம்பவிக்க முடியும் ?

**63.** அவதாரிகை : கர்த்ருத்வாதிகள் ஆத்மதர்மம் இல்லையென்ருல், வேறுஎதனுடைய தர்மம் ?

ச்லோகம் : भूतानि पञ्चतव मोहसमुद्भवानि संघातरूपपरिणाममुपागतानि ।
कुर्वन्ति कर्म फलमश्नुवते च तेषां साक्षी त्वमन्तरविलुप्तचिदेकरूपः

**ச்லோகார்த்தம் :** உன்னுடைய அவித்யையினுல் ஏற்பட்டதும், ஸங்காத ரூபமாக பரிணமத்தை அடைந்திருக்கின்றதுமான ஐந்து பூதங்கள் கர்மாவைச் செய்கின்றது. அதன் பலத்தை அனுபவிக்கிறது. நித்யப்ரத்யக்சைதன்யரூபமாக இருக்கின்ற நீ, அவைகளுக்கு சாக்ஷியாகவே இருக்கின்றாய்.

**வ்யாக்யானம் :** ஸ்தூலம், சூக்ஷ்மம் என்ற இரண்டு தேஹாகாரமாக பரிணமத்தை அடைந்திருக்கின்ற பூதங்களின் தர்மம் என்றே சொல்லவேண்டும். சிதாபாஸ ஸம்பந்தத்தினுல் கார்ய கரணஸங்காதமே கர்த்ருத்வம் முதலான தர்மங்கள் உடையதாக இருந்து கார்யங்களைச் செய்கின்றது. இவ்விதம் கார்ய கரணஸங்காதத்தினுல் செய்யப்படுகின்ற கார்யத்தை அவிவேகத்தினுல், ஆத்மாவான, தானே செய்வதாக நினைக்கின்றான். ஸர்வப்ரகாசகனுகவும், ஸர்வப்ரத்யக்ஸ்வரூபமாகவும் நித்யசைதன்ய ஸ்வரூபமாகவும் இருக்கின்ற உன்னிடத்தில் உண்மையில் எந்தவிக்ரியையும் ஏற்படமுடியாது.

**64, 65.** அவதாரிகை : கார்யகரணஸங்காதம் ஜடமானதால் அவைகளின் கர்த்ருத்வம் முதலான விக்ரியை எப்படி ஏற்படமுடியும்?

**ச்லோகம் :** क्षीरस्य पूर्णे चषके नियुक्तो मणिर्यथा मारकतो महार्हः ।
क्षीरं समस्तं क्षणमात्रतस्तत्करोति तच्छायमनूनतेजाः
तथा तमः संभवमच्छमन्तर्बहिर्जडिम्नाऽन्वितमन्तरात्मा ।
जगच्चिदेकच्छवि चित्स्वरूपः करोति सांनिध्यवशेन विश्वम्

**ச்லோகார்த்தம் :** ப்ரகாசிக்கின்ற உயர்ந்த மரகத மணியானது, க்ஷீரம்நிறைந்த பாத்திரத்தில் போடப்படுகின்றபோது, ஒரேக்ஷணத்தில் அந்தபால் பூராவையும் தன்னுடைய நிறமுடையதாகச் செய்கின்றது. அதேபோல் அவித்யையினுல் ஏற்பட்டதும் உள்ளே ஸ்வச்சமாகவும் வெளியே ஜடமாகவும் இருக்கின்றதான இந்த ப்ரபஞ்சம் என்பதையும் சித்ரூபமான அந்தராத்மாவானது தன்னுடைய ஸான்னித்யத்தினுல் சேதனமாகச் செய்கின்றது.

**வ்யாக்யானம் :** கார்யகரணஸங்காதத்தில் ஏற்படும் சித்ப்ரதிபிம்பத்தினுல் தான், கர்த்ருத்வாதி விக்ரியை ஏற்படுகிறது. பஞ்சபூதங்கள், அதன்கார்யம் என்ற ஸர்வத்திற்கும் அதிஷ்ட்டானமான சைதன்யம் ஸன்னிஹிதமாக இருக்கின்ற காரணத்தினுல் ஸ்வச்சமான அந்த:கரணத்தில் சைதன்யஸம்பந்தம் ஸ்புடமாக அறியப்படுகிறது. அதேபோல் ஸர்வ பூதங்களும் சைதன்யத்தில் ஆரோபிதமாக இருக்கின்றதால் அவைகளிலும் சைதன்யம் ஸன்னிஹிதமாக இருக்கின்றது. அதனுல் அவைகளும் சைதன்யஸம்பந்த முள்ளதாகவே இருக்கின்றது. ஆனுல் பூதங்கள், மாயாம்ஸம், சைதன்யாம்ஸம் என்ற இரண்டும் கலந்திருந்த போதிலும் ஜடாம்ஸமேஸ்புடமாக அறியப்படுகிறது. எப்படி பாலில் போடப்பட்ட மரகதமணியின் பச்சைநிறம் பால்முழுவதும் பச்சை நிறமாகதோன்றும் படிச்செய்கின்றதோ அதேபோல் ஆத்மசைதன்யம், உண்மையில் ப்ரபஞ்ச ஸம்பந்தம் இல்லாமலிருந்தும், அதன்ஸன்னிதி மாத்ரத்தினுல், சிதாபாஸனுடன் கூடிய ஜடமான தேஹாதிகளும் சேதனம் போல் தோன்றுகிறது. அதேபோல் அந்த:கரணுதிகளுக்கும் சேதனத்வம் ஏற்படலாம். ஆகவே மரகதமணியின் சாயையினுல் பாலிலும் சாயை ஏற்படுவதுபோல். அந்தராத்மாவான சைதன்யம் அஞ்ஞான கார்யமான இந்தஜகத்திற்குள்

ப்ரவேசித்து, ஸ்வச்சமான உபாதிகளின் மூலம் ப்ரதிபிம்பாகாரமாக வஸ்துக்களில் வ்யாபிக்கின்றது. அதனுல் அசேதனமும் சேதனம் போல் ப்ரகாசிக்கின்றது. கார்ய கரணங்களின் கர்த்ருத்வாதி தர்மங்கள், சைதன்யத்தின் சாயையில் தோன்றுவதால் சைதன்யத்தில் விகாரம் ஏற்படுவதுபோல் தோன்றுகிறது. இதனுல் ஸன்னிதி மாத்ரேண ஸ்வப்ரகாசமாக இருக்கின்ற பிம்பஸ்வரூபமான கேவலசைதன்யத்தில் எவ்வித விக்ரியையும் கிடையாது.

**66.** அவதாரிகை : கார்ய கரணஸங்காதமான சரீராதிகளில் ஆத்மஸ்வரூபம் வெவ்வேருக இருப்பதாக அறியப்படுகிறது. அதனுல் அத்வைதம் ஆத்மதத்வம் என்று எப்படிச் சொல்வது ?

ச்லோகம் :

तान्येव कार्यकरणानि बहुप्रकारं भेदं च बिभ्रति भवानपि तत्र लग्नः ।
भेदेन भाति जलपात्रनिविष्टमूर्तिमार्तण्डमण्डलवदन्वयमन्तरेण

ச்லோகார்த்தம் : அந்த ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களே பலவிதமான பேதங்களுடன் இருக்கின்றது. ஜலபாத்ரத்தில் தோன்றுகின்ற சூர்யனைப்போல் நீஸம்பந்தம் இல்லாமலேயே அந்த சரீரங்களில் தோன்றிபேதம் உடையவனுக காணப்படுகின்ருய்.

வ்யாக்யானம் : ஸர்வஜீவராசிகளிடமும் கார்யகரணஸங்காதம் என்பது ஒரேவிதமாகவே இருக்கின்றது. ஆனுல், தேவன், மனுஷ்யன் த்ரியக் என்றபேதங்கள் வ்யஷ்டிரூபத்தில் அறியப்படுகின்றபோது பேதம் அறியப்படுகிறது. ஆனுலும் ஸமஷ்டிகார்ய கரணஸங்காதம் என்பது ஏகம்தான். ஸர்வஜகத்திற்கும் ப்ரகாசமாக இருக்கின்ற ஆத்மஸ்வரூபம் என்பதும் ஏகம்தான். ஆனுல் அந்தந்த உபாதி பேதத்தினுல், அவைகளில் ஏற்படும் அபிமானத்தினுல் அந்த உபாதியையே அஹம் என்று (நான் என்று) விவகாரம் செய்யப்படுகிறது. இந்த காரணத்தினுல் தான் ஆத்மா என்பதிலும் பேதம் கல்பிக்கப்படுகிறது. ஆகவே ஏகத்வம், அனேகத்வம் என்ற பேதங்கள் பரமார்த்தமில்லே. பஞ்ச பூதங்களேக்காட்டிலும் கார்யகரண ஸங்காதம் வேறல்ல. பஞ்சபூதங்களும் அதற்கு காரணமான அஞ்ஞானத்தைக் காட்டிலும் வேறல்ல. பஞ்ச பூதங்களும் அதற்குகாரணமான அஞ்ஞானத்தைக் காட்டிலும் வேறல்ல. அந்தஅஞ்ஞானம் என்பதும் ஆத்ம ஸ்வரூபத்தில் அத்யஸ்த்தம். ஆகையால் இவைகள் எதுவுமே பரமார்த்தமில்லே. அஸங்கமான ஆத்மஸ்வரூப ஸம்பந்தம் பரிச்சின்னமான ஸர்வ வஸ்துக்களிலும் இருக்கின்றதால் ஆத்மாவும் பரிச்சின்னம்போல் தோன்றுகிறது. ஆனுல் உண்மையில் ஆத்மஸ்வரூபம் அபரிச்சின்னம் ஏகம் என்றே அறியப்படவேண்டும்.

**67.** அவதாரிகை :

ஸமஷ்டி, வ்யஷ்டி என்றதேஹம் முதலானவைகளில் இருக்கின்றபேதம் ஆத்மாவில் ஆரோபிதமாக தோன்றுவதற்கு காரணம் என்ன ?

ச்லோகம் :

अध्यात्ममेवमधिभूतमथाधिदैवं सूत्रं विराजमपि पश्यसि साक्षिभूतः ।
साक्षित्वकारणमशेषजगन्निदानमज्ञानमात्मचिदवज्वलितं सदैव

ச்லோகார்த்தம் : அத்யாத்மம், அதிபூதம், அதிதெய்வம், சூத்ரம், விராட், இவைகள் எல்லாவற்றையும் நீ சாக்ஷியாக இருந்து கொண்டு பார்க்கின்றாய். ஆத்ம சைதன்யத்தினால் எப்போதும் ப்ரகாசம் செய்யப்படுகின்றதும் ஸமஸ்த்த ப்ரபஞ்சத்திற்கும் காரணமாக இருக்கின்றதுமான அஞ்ஞானம் என்பதே சாக்ஷித்வத்திற்கு காரணமாகிறது.

வ்யாக்யானம் : அத்யாத்மம், அதிதெய்வம், அதிபூதம் என்ற ஸர்வசரீரபேதங்கள் எல்லாவற்றிர்க்கும், காரணபூதமாக இருக்கின்ற அஞ்ஞானம் என்பது ஆத்மாவில் அத்யஸ்த்தமாக இருக்கின்றது. சைதன்யத்தினால்தான் ஆரோபிதமானவைகள் எல்லாம் ப்ரகாசிக்கின்றது. ஸர்வத்திற்கும் சாக்ஷியாக இருக்கின்ற ஆத்மசைதன்யம் அஸங்கம் ஏகம், அதுவே உன்ஸ்வரூபம். ஆகவே ஸமஷ்டிவ்யஷ்டிமுதலான பேதங்களுக்கு அஞ்ஞானமே காரணம்.

பூர்வ : ஸமஷ்டி வ்யஷ்டி என்ற ஜகத்திற்கும் சாக்ஷியாக இருக்கின்றது என்பதால் ஸர்வாத்மத்வம், ஏகத்வம் என்பது சித்திக்கின்றது. ஆனால் ஆத்மா எப்போது சாக்ஷி பாவத்தில் இருக்கின்றதோஅப்போது ஆத்மாவிற்கு சாக்ஷ்யமான பதார்த்தங்களுடன் ஸம்பந்தம் இருப்பதாகத்தானே சொல்லவேண்டும்? அதனால் சிதாபாஸனுக்கு அனாத்மஸம்பந்தம் இருப்பதாகவே சொல்லப்படவேண்டும்.

சித்தா : ஆத்மசைதன்யத்தினால் ப்ரகாசப்படுத்தப்படும் உபாதியில் சைதன்ய ப்ரதிபிம்பம் ஏற்படுகிறது. அஞ்ஞானமென்ற இந்த உபாதி மூலமாக வேசைதன்யத்திற்கு சாக்ஷித்வம் சொல்லப்படுகிறது. சைதன்யத்தில்அத்யஸ்த்தமான அவித்யையில் ப்ரதிபிம்பிக்கின்ற சைதன்யத்தினால், அவித்யை என்பது அந்தந்த பதார்த்தாகாரேண பரிணமிக்கின்றது. அதனால் சாக்ஷ்யங்களுடன் சாக்ஷிக்கும் ஸம்பந்தம் இல்லை, எப்படி பிம்பத்திற்கும் கண்ணாடிக்கும் ஸம்பந்தம் கிடையாதோ அதேபோல் ப்ரதிபிம்ப மானசிதாபாஸனுக்கும் ஸம்பந்தமில்லை. அதனால் சைதன்ய ஸன்னிதானத்தில் ஜடமான அவித்யை என்பதே ஸர்வ ப்ரபஞ்சதோற்றத்திற்கும் ஸர்வபேத ப்ரதீதிக்கும் காரணமாகிறது.

**68.** அவதாரிகை : ஆத்மா ஏகம் என்பதில் ப்ரமாணமே இல்லை. அதனால் பேதம் ஔபாதிகம், ஆரோபிதம் என்று எப்படிச் சொல்ல முடியும்?

ச்லோகம் :

देहव्यक्तिर्विप्रतीत्यास्पदत्वं याता सर्वा तावकी तावकीव ।
देहव्यक्तिर्देहताकारणेन तस्मादात्मा सर्वभूतस्थ एक:

ச்லோகார்த்தம் : விவாதத்திற்கு விஷயமாக இருக்கின்ற எல்லா சரீரங்களும் உன்னுடையதேயாகும், ஏனெனில் உன்னுடைய சரீரம் போலவே அவைகளும் சரீரமாகவே இருக்கின்றது. ஆகவே ஸர்வ சரீரங்களிலும் ஆத்மா ஏகம் என்றே சித்திக்கின்றது.

வ்யாக்யானம் : உன்னுடைய தேஹம் போலவே மற்றதேஹங்களும் உன்னைச் சேர்ந்ததுதான். ஏனெனில் அவைகளும் தேஹமாக இருப்பதால், உன்தேஹம் என்ற வ்யக்தி எப்படி உன்னைச் சேர்ந்ததோ அதுபோல் என்றுஅனுமானத்தினால் சித்திக்கின்றது. (மற்ற சரீரங்கள் என்பது பக்ஷம்; அவைகளும் உன்னைச் சேர்ந்ததே' என்பது ஸாத்யம்.

ஏனெனில் 'அவைகளும் சரீரமாக இருப்பதால்' என்பது ஹேது. 'உன் சரீரம் போல்' என்பது த்ருஷ்ட்டாந்தம்.

உன் சரீரம் எப்படி ஆத்மவத்தாக இருக்கின்றதோ அதுபோல் அவைகளும் உன்னுல் (ஆத்மாவினுல்) ஆத்மவத்தாகவே இருக்கின்றது. ஏனெனில் அதுவும் சரீரமாக இருக்கின்றதால், உன் சரீரம் எப்படி உன்னைச் சேர்ந்ததோ அது போல் மற்ற சரீரங்களும் சரீரமாக இருக்கின்றதால் உன்னைச் சேர்ந்தது தான். அதனுல் ஸர்வ சரீரங்களிலும் ஆத்மா ஏகம் என்பது அனுமானத்தினுல் சித்திக்கின்றது. ஆகவே, சரீரங்கள் வெவ்வேருக இருக்கின்றதால் ஒரே ஆத்மாவை சேர்ந்ததாக எப்படி இருக்கமுடியும் என்ற ஸந்தேஹத்திற்கு அவகாசம் இல்லை.

69. அவதாரிகை : இதேபோல் (மற்ற முள்ள கார்யகரணஸங்காதங்களும் உன்னைச் சேர்ந்ததே என்ற விஷயத்திலும்) அனுமானம் என்பதைக் கொண்டுமற்றவைகளும் சாதிக்கப்படுகிறது.

ச்லோகம் :

संविद्व्यक्तिर्विप्रतीत्यास्पदत्वं याता सर्वा तावकी तावकीव ।
संविद्व्यक्तिः संविदात्मत्वहेतोस्तस्मादात्मा सर्वभूतस्थ एकः

ச்லோகார்த்தம் : மற்ற சரீரங்களிலுள்ள ஸம்வித்வ்யக்தி என்பதெல்லாம் ஸந்தேஹத்திற்கு விஷயமாகின்றது. அவையெல்லாமே உன்ஸ்வரூபந்தான் உன்னுடைய சித்வ்யக்தி எப்படி ஸம்வித்ரூபமோ அதுபோல் சர்வரீரங்களிலும் இருப்பதும் ஸம்வித்தாக இருக்கின்றதால் ஆத்மா ஸர்வபூதங்களிலும் ஏகம் என்பது சித்திக்கின்றது.

70. ச்லோகம் :

बुद्धिव्यक्तिर्विप्रतीत्यास्पदत्वं याता सर्वा तावकी तावकीव ।
बुद्धिव्यक्तिर्बुद्धिताकारणेन तस्मादात्मा सर्वभूतस्थ एकः

ச்லோகார்த்தம் : மற்ற சரீரங்களிலுள்ள புத்தி என்பது நம்மைச் சேர்ந்ததா இல்லையா என்று ஸந்தேஹத்திற்கு விஷயமாகின்றது. அவைகளும் உன்னைச் சேர்ந்ததுதான். ஏனெனில் உன்னிடம் இருக்கின்ற புத்திபோலவே அவைகளும் புத்தியாக இருப்பதனுல் அவைகளும் (உன் ஸ்வரூபம்தான்) உன்னைச் சேர்ந்ததுதான் என்றே சித்திக்கின்றது.

71. ச்லோகம் :

अक्षव्यक्तिर्विप्रतीत्यास्पदत्वं याता सर्वा तावकी तावकीव ।
अक्षव्यक्तिस्त्वक्षताकारणेन तस्मादात्मा सर्वभूतस्थ एकः

ச்லோகார்த்தம் : மற்ற சரீரங்களிலுள்ள இந்த்ரியம் முதலானவைகளும் ஸந்தே ஹத்திற்கு இடமாக இருக்கிறது. அவைகளும் உன்னைச்சேர்ந்ததுதான். அவைகளும் இந்த்ரியமாக இருக்கின்றதால் உன்னைச்சேர்ந்தது என்றே அறியவேண்டும். அதனுல் ஸர்வபூதங்களிலும் ஆத்மா ஏகம் என்றே சித்திக்கின்றது.

**72. ச்லோகம் :**

ज्ञानव्यक्तिर्विप्रतीत्यास्पदत्वं याता सर्वा तावकी तावकीव ।
ज्ञानव्यक्तिर्ज्ञानताकारणेन तस्मादात्मा सर्वभूतस्थ एकः

**ச்லோகார்த்தம் :** ஞான வ்யக்தி (வ்ருத்தி ஞானம்) என்பதும் உன்னைச் சேர்ந்ததா இல்லையா என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. உன்ஞானம் போலவே அவைகளும் ஞானமாக இருப்பதால் அதுவும் உன்னைச் சேர்ந்தது தான் (வ்ருத்தி ஞானம்) ஆகவே ஆத்மா ஏகம் என்றே அறியவேண்டும்.

**73. ச்லோகம் :**

रागव्यक्तिर्विप्रतीत्यास्पदत्वं याता सर्वा तावकी तावकीव ।
रागव्यक्ती रागताकारणेन तस्मादात्मा सर्वभूतस्थ एकः

**ச்லோகார்த்தம் :** ராக வ்யக்தி என்பதும் உன்னைச் சேர்ந்ததா இல்லையா என்று ஸந்தேகத்திற்கு இடமாகின்றது. அதுவும் உன்னுடைய ராகம்போல் ராகாகாரமாக இருக்கின்றதால் மற்ற ராகவ்யக்திகளும் உன்னைச் சேர்ந்ததுதான். அதனுல் ஆத்மா ஏகம் என்றே சித்திக்கின்றது.

**74. ச்லோகம் :**

द्वेषव्यक्तिर्विप्रतीत्यास्पदत्वं याता सर्वा तावकी तावकीव ।
द्वेषव्यक्तिर्द्वेषताकारणेन तस्मादात्मा सर्वभूतस्थ एकः

**ச்லோகார்த்தம் :** த்வேஷவ்யக்தியும் உன்னைச் சேர்ந்ததா இல்லையா என்று ஸந்தேஹத்திற்கு விஷயமாகின்றது. அதுவும் உன்னைச் சேர்ந்ததுதான். உன்னுடைய த்வேஷம் போலவே ஸர்வ சரீரத்திலும் இருக்கின்றத் வேஷவ்யக்தியும் த்வேஷாகாரேண இருக்கின்றதால் அதுவும் உன்னைச் சேர்ந்ததே. அதனுல் ஆத்மா ஏகம் என்பது சித்திக்கின்றது.

**69 to 74 முடிய வ்யாக்யானத்தின் சாரம் :** ஸம்வித்வயக்தி என்ற பதத்திற்கு அனுவ்ருத சித்வ்யக்தி என்று அர்த்தம். வ்ருத்திஞானம் என்ற கடஞானம் படஞானம் போன்ற விசேஷஞானம் என்பது விஷயாகாரமாக ஏற்படுகின்றபோது அது அனுவ்ருத ஞானமாகவே இருக்கின்றது. இதேபோல் புத்தி வ்யக்தி, அக்ஷவ்யக்தி (இந்தரியாதிகள்) முதலானவைகளையும் அறிந்து கொள்ளவேண்டும்.

கார்ய கரணஸங்காதங்கள் வெவ்வேருக இருக்கின்றதால் அவைகள் ஒரே ஆத்மாவைச் சேர்ந்தது என்று எப்படிச் சொல்லமுடியும் என்று ஸந்தேஹம் ஏற்படுகிறது. எல்லா கார்யகரண ஸங்காதங்களும் சிஷ்யனுன உன்தேஹத்திலுள்ள ஆத்மாவையே அதிஷ்ட்டானமாகக்கொண்டிருக்கிறது. ஏனெனில் அவைகளும் ஸங்காதமாக இருக்கின்றதால் என்றுயுக்தியைக்கொண்டு ஆத்மா ஏகம் என்று (ஐகாத்ம்யம்) சாதிக்கப்படுகிறது.

ஆகவே இதுவரை சொல்லப்பட்ட முறையில் ஸ்தூலதேஹம், சூக்ஷ்மதேஹம் முதலான கார்ய கரணஸங்காதங்களின் பேதத்தினுல் ஆத்மாவில் பேதம் சொல்லமுடியாது என்பதை சரீராதிகளின் ஸாம்யத்தை தெரிவித்து அதனுல் அவைகளும் உன்னைச் சேர்ந்ததே என்றுஸர்வத்திற்கும் அதிஷ்ட்டானமாக இருக்கின்ற ஆத்மஸ்வரூபம் ஏகம் என்பதை அனுமானத்தினுல் சாதிக்கப்பட்டது.

**75.** அவதாரிகை : இதுவரை சொல்லப்பட்ட விஷயங்களினுல் என்ன சித்தமாயிற்று ? என்ருல்,

ச்லோகம் :

एवं सतीदमविवेकनिबन्धनं ते कर्तृत्वमात्मनि विभाति न वस्तुभूतम् ।
बालेन कल्पितमतीव विशुद्धरूपे व्योम्नीव भूम्नि मलिनत्वमबोधहेतोः

ச்லோகார்த்தம் : இவ்விதம் ஆத்மாவில் தோன்றுகின்ற கர்த்ருத்வம் அவிவேகத்தினுல் ஏற்பட்டதேயாகும். (அது யதார்த்தமல்ல) அத்யந்தம் சுத்தமான ஆகாசத்தில் பாலகனுல் எவ்விதம் மலம் என்பது கல்ப்பிக்கப்படுகிறதோ அவ்விதமே அஞ்ஞானத்தினுல் ஆத்மாவில் மலம் கல்ப்பிக்கப்படுகிறது.

வ்யாக்யானம் : முன்னுல் விசாரிக்கப்பட்ட முறையில் ஸர்வமும் உன்னைச் சேர்ந்ததுதான் என்பதால் ஸர்வத்திற்கும் சாக்ஷி ஆத்மா என்று சித்திக்கின்றது. சாக்ஷிஸ்வரூபமான ஆத்ம சைதன்யத்தில் கர்த்ருத்வாதிகள் என்பதோ அதனுல் ஸம்ஸாரித்வம் என்பதோ உண்மையில் கிடையாது. வ்யாபகமாகவும் நிர்மலமாகவும் இருக்கின்ற ஆகாசத்தில் எப்படி நீலம் முதலான தர்மங்கள் ஆரோபிதம் செய்யப்படுகின்றதோ அதுபோல் அஞ்ஞானத்தினுல் ஆத்மாவில் ஸர்வமும்ஆரோபிதம் என்பதும், ஸர்வத்திற்கும் சாக்ஷியான ஆத்மா ஏகம் என்பதும் இதனுல் சித்திக்கின்றது.

**76.** அவதாரிகை : கார்ய கரண ஸங்காதம் என்ற இந்த சரீரங்களின் வ்யவஹாரம், ஆதித்யன், சந்த்ரன், அக்னி முதலானபௌதிக ஜ்யோதிஸ்களின் ஸஹாயத்தினுலேயே ஏற்படுகிறது. அதுபோல் கர்த்ருத்வம் முதலானவைகளும் ஸம்பவிக்கலாம், அதனுல் சைதன்யமோ, அல்லது சிதாபாஸனே அபேக்ஷிக்கப்படுகிறது என்று சொல்லவேண்டிய அவச்யம் என்ன ?

ச்லோகம் :

बाह्यैरसौ रविनिशाकरवह्निवाग्भिर्ज्योतिर्गणैरुपकृतोऽपि हि कर्मजातम् ।
निर्वर्तयन्न खलु तावकमन्तरेण चैतन्यसंनिधिबलं पुरुषः करोति

ச்லோகார்த்தம் : சூர்யன், சந்திரன், அக்னி, வாக் முதலான பாஹ்ய ப்ரகாசங்களின் ஸஹாயத்துடன் கர்மங்களைச் செய்கின்றபோதும் சைதன்ய பலம் இல்லாமல் எந்த ஒரு புருஷனும் எதையும் செய்வதில்லை. (சைதன்ய ஸன்னிதி அதீனமான சிதாபாஸன் வலிமை இன்றி எதுவும் செய்யமுடியாது)

வ்யாக்யானம் : இந்த விஷயம் பற்றி ப்ரஹதாரண்யக உபநிஷத்தில் ஸ்வயம் ஜ்யோதிப்ராஹ்மணத்தில் ஜனக யாஞ்ஞவல்க்யர் ஸம்வாதத்தில் விசாரிக்கப்பட்டிருக்கிறது.

அதாவது "கிம் ஜ்யோதி ரேவாயம் புருஷ"; என்று ஜனகரால் கேட்க்கப்பட்ட கேள்விக்கு முதலில் சூர்யன் முதலான ஸர்வ பௌதிக ஜ்யோதிஸ்களேயும் தெரிவித்து கடைசீயாக "ஆத்மைவாஸ்யஜ்யோதிர்பவதி' என்று பௌதிகமான ஸர்வமும் ஆத்மஜ்யோதிஸ் என்பதனுலேயே வ்யவஹாரம் செய்கின்றது என்று தெரிவிக்கப்படுகிறது. இதன் கருத்து என்னவென்ருல், இந்த சரீரத்தில் ஏற்படும் வ்யஹாரங்கள் எல்லாம் எந்த ஜ்யோதிஸ்ஸினுல் ஏற்படுகிறது என்று விசாரிக்கப்படுகின்றபோது பகலில் சூர்யன் என்ற ஜ்யோதிஸ் என்பதால் நடக்கின்றது. இரவில் சந்த்ரன் என்றும், சந்த்ரன் இல்லாதபோது அக்னியென்றும் அக்னியும் இல்லாதபோது வாக் என்பதால் வ்யவஹாரம் நடக்கிறது என்றும் தெரிவிக்கப்பட்டது. இவ்வித ஜ்யோதிஸ்கள் எதுவும் இல்லாத போது வாகாதி இந்த்ரியங்களும் லயத்தை அடைகின்ற ஸ்வப்னுவஸ்த்தையில் எவ்வித ஜ்யோதிஸ்ஸுமின்றி எப்படி வ்யவஹாரம் நடக்கின்றது ? மனஸ் என்பதும் விஷயமாக இருக்கின்றதால் மனஸ் என்பதாலும் ஸ்வப்னவிவகாரங்கள் ப்ரசாசிக்கமுடியாது. அதேபோல் சுஷுப்தி அவஸ்த்தையிலும் 'சுகமஹம்ப்ஸ்வாப்ஸம் நகிஞ்சித் அவேதிஷம் என்ற சுகானுபவம், அஞ்ஞான அனுபவம் இவற்றின் ப்ரகாசம் என்பதும் மனஸ் என்பதும் லயத்தை அடைகின்ற காரணத்தினுல் மனஸினுல் ஏற்படுவதாகவும் சொல்லமுடியாது. ஆகவே, ஜாக்ரத் முதலான இந்த்ரியாதி கரணங்களுக்கு உபகாரமாக இருந்தபோதிலும் பௌதிக ஜ்யோதிஸ் என்பதும் ஆத்மஜ்யோதிஸ் என்பதால் தான்ப்ரகாசிக்க வேண்டும். ஆந்த்ரமான ஆத்மஜ்யோதிஸ் இல்லாமல் பாஹ்யஜ்யோதிஸ் இருந்தாலும் எந்தவிதமான வ்யவஹாரமும் நடக்காது. அந்த:கரணத்துடன் ப்ரத்யக் சைதன்ய ஸம்பந்தம் ஏற்பட்டபிறகேஅஹம் என்ற ஞானம் ஏற்படுகிறது. அதன்பிறகே சூர்யன் முதலான பாஹ்ய ஜ்யோதிஸ் இருக்கின்ற தென்றும், அதனுல் எல்லாம் ப்ரகாசிக்கின்றது என்றும் ஸர்வ வ்யவஹாரங்களும் ஏற்படுகின்றது. ஆகையால் கார்யகரண ஸங்காதமான அனுத்மதர்மமே கர்த்ருத்வாதிகள் என்பதால், ஆத்மதர்ம மென்று சொல்வது சரியல்ல. ஸர்வமும் ஆத்ம சைதன்யத்தினுல்தான் ப்ரகாசப்படுத்தப்பட வேண்டும்.

**77.** அவதாரிகை : ஸர்வ அவஸ்த்தைகளிலும் ஏற்படும் ஸர்வ வ்யவஹாரங்களும் ப்ரத்யக்சைதன்யத்தினுல்தான் ப்ரகாசிக்கின்றது என்று சொல்லப்படுமானுல், ஸ்வப்னுவஸ்த்தைபோலவே ஜாக்ரத்திலும் பாஹ்யஜ்யோதிஸ் இல்லாமலேயே வ்யவஹாரம் நடக்கலாமே ?

ச்லோகம் :

ज्योतिर्द्वयान्तरित एव हि कर्मजातं सर्वं करोति पुरुषोऽन्नमयः सदैव ।
कर्मादिकारणविनिर्मितमस्य बाह्यं ज्योतिस्त्वनित्यमनिमित्तकमान्तरं चित्

ச்லோகார்த்தம் : இந்த ஸ்தூலபுருஷன் எப்போதும் இரண்டு ப்ரகாசங்களின் ஸஹாயத்தைக் கொண்டே எல்லா கர்மாக்களேயும் செய்கிருன். இவனுக்கு பாஹ்யமாக இருக்கின்றதும், கர்மாவை நிமித்தமாகக்கொண்டதுமான ப்ரகாசமானது அநித்யமேயாகும். ஆந்த்ரமாக இருக்கின்ற ப்ரகாசமானது நிர்நிமித்தமாகவே இருக்கிறது. (நித்யமாக இருக்கிறது)

வ்யாக்யானம் : புருஷனுக்கு இந்த்ரியங்கள் மூலமாகவே பாஹ்யவிஷயங்களின் ஞானம் ஏற்படவேண்டும். இவ்விதம் விஷயஞானம் ஏற்படும் அவஸ்த்தைதான் ஜாக்ரத் அவஸ்த்தை என்று சொல்லப்படும். அதனுல் இந்த்ரியங்கள் அந்தந்த விஷயங்களை க்ரஹிப்பதற்கு பாஹ்ய ஜ்யோதிஸ்ஸின் ஸஹாயமும் அவஸ்யம் தேவைப்படுகிறது. அதுமட்டுமல்ல பாஹ்ய ஜ்யோதிஸ் என்பதும் ஆந்த்ரஜ்யோதிஸ் என்பதால்தான் ப்ரகாசிக்கவேண்டும். பாஹ்ய ஜ்யோதிஸ் இல்லாமலேயே ஸ்வப்னவ்யவஹாரங்கள் நடக்கின்றது. ஆகவே, அன்னமயத்துடன் கூடிய புருஷன் ஆந்த்ரஜ்யோதில் பாஹ்ய ஜ்யோதிஸ் என்ற இரண்டிற்கும்மத்தியில் இருந்தே வ்யவஹாரம் செய்யவேண்டும். அதுமட்டுமல்ல, பௌதிகமான இந்த்ரிய வ்யவஹாரங்களுக்கு பௌதிகதேஜஸ் என்பதும் தேவைப்படுகிறது. ஆந்த்ரமான சூக்ஷ்மசரீரம் என்பதும், ஸ்தூலசரீரம் போன்றே பௌதிகமாக இருந்த போதிலும், லிங்க சரீரம் என்பது ஸதா சைதன்யஜ்யோதிஸ்ஸுடன் ஸம்பந்தப்பட்டிருப்பதால் லிங்கசரீரவ்யவஹாரத்திற்கு பாஹ்ய ஜ்யோதிஸ் ஸம்பந்தம் தேவையில்லை. பாஹ்ய விஷயவ்யவஹாரத்திற்கே இந்த்ரியத்வாராப்ரகாசம் ஏற்படவேண்டி இருப்பதால் பாஹ்யஜ்யோதிஸ் தேவைப்படுகிறது. இந்த காரணத்தினுலேயே ஆந்தரமானஸ்வப்னவிவகாரத்திற்கு பாஹ்ய ஜ்யோதிஸ் தேவைப்படவில்லை.

பூர்வ : ஜாக்ரத் வ்யவஹாரத்தில் பாஹ்யமான ஆதித்யன்முதலான ஜ்யோதிஸ் என்பது மட்டுமே இருக்கிறது. ஆந்த்ரஜ்யோதிஸ் இருக்கின்ற தென்பதற்கும் ப்ரமாணம் ஏதுமில்லை. மேலும் ஆதித்யன் முதலான ஜ்யோதிஸ்புருஷனுடைய புண்யபாப பலத்தினுல் கர்மாதீனமாக ச்ருஷ்டிக்கப்பட்டிருக்கின்றது. அதனுல் அவைகள் அநித்யம். ஆனுல் ஆந்தரஜ்யோதிஸ் என்பது நித்யம், நிர்நிமித்தம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் காரணமே இல்லாமல் ஆந்த்ரஜ்யோதிஸ் எதனுல் சித்திக்கின்றது என்று எப்படிச் சொல்வது ?

சித்தா : பாஹ்ய ஜ்யோதிஸ் என்பது புருஷனுடைய கர்மாவினுல் சிருஷ்டிக்கப்பட்டிருக்கின்றது என்பதால் கர்மாவினுலேயே அந்த ஜ்யோதிஸ் சித்திக்கின்றது என்பதால் அது அநித்யம். லோக வ்யவஹாரம் என்ற கமனுகமனம் முதலானவை பாஹ்யஜ்யோதி ஸ்இல்லாமல் நடைபெற முடியாது. ஏனெனில் காரணங்களைக் கொண்டே அந்தவ்யவஹாரங்கள் நடைபெற வேண்டி இருக்கிறது. இந்தவிதம்பாஹ்ய ஜ்யோதிஸ் என்ற லிங்கத்தைக் கொண்டே ஜாக்ரத்முதலான ஸர்வவ்ய வஹாரங்களுக்கும் ஜ்யோதிஸ் அவஸ்யம் என்பது அறியப்படுகிறது. ஆனுல் ஸர்வ வ்யவஹாரங்களுக்கும் பாஹ்ய ஜ்யோதிஸ் என்பது அவஸ்யம் என்று சொல்லமுடியாது. ஸர்வவ்யவஹாரங்களுக்கும் ஆந்த்ரஜ்யோதிஸ் என்பது அவஸ்யம். ஆந்த்ரஜ்யோதிஸ் இல்லாமல் எந்த வ்யவஹாரமும் நடைபெறுமுடியாது. ஸ்வப்னம், சுஷுப்தி முதலான வ்யவஹாரங்கள் ஆந்த்ர ஜ்யோதிஸ் என்பதனுலேயே நடைபெறுகிறது என்பது அனுபவத்தைக்கொண்டே அறிந்து கொள்ளலாம். ஜாக்ரத் காலத்தில் இந்த்ரியம் முதலான கரணங்களைக்கொண்டே ஜாக்ரத்போகங்களை அனுபவிக்கவேண்டும். அதனுல் இந்த்ரியங்களினுல்தான் அவன் போகத்தை அனுபவிக்கின்றுன் என்பதால் அந்த இந்த்ரியங்களுக்குரிய அனுக்ராஹகமான தேவதைகளின் அனுக்ரஹத்துடன் கூடிய ஆதித்யன் முதலான ஜ்யோதிஸ் தேவைப்படுகிறது. ஜன்மாந்தரத்தில் செய்யப்பட்ட கர்மா, உபாஸனம், பூர்வப்ரஞ்ஞா,

என்பவைகளின் பலனுகவே போகத்தை அனுபவிக்க வேண்டும். அதனுல் புருஷனுடைய கர்மாதீனமாகவும், அந்தந்த இந்த்ரியங்களின் அனுக்ராஹகமான தேவதைகளின் அனுக்ரஹம் என்பதெல்லாமே பாஹ்ய ஜ்யோதிஸ் விவகாரங்களுக்கு காரணமாகின்றது. இந்தவிதம் பாஹ்யஜ்யோதிஸ் என்பது கர்ம நிமித்தமாக இருக்கின்றதால் ஒரு ஸமயம் இருந்தும். ஒரு ஸமயம் இல்லாமலும் இருப்பதால் அவை அநித்யம். ப்ரத்யக்சைதன்யம் நிர்நிமித்தமாக இருக்கின்றதால் ஸர்வ அவஸ்த்தைகளிலும், தொடர்ந்து ப்ரகாசிக்கின்றது. ஆத்மஜ்யோதிஸ் ஆகந்துமில்லே. நித்யம், மேலும் ஆதித்யன் முதலான பாஹ்ய ஜ்யோதிஸ்ரூப விஷயமான ஞானத்தையே ஏற்படுத்தமுடியும். ரஸம் முதலான மற்ற எந்த விஷயகமான ஞானமும் ஆதித்யாதி ஜ்யோதிஸ் என்பதால் ஏற்படமுடியாது. ஆனுல் ஆத்ம ஜ்யோதிஸ் என்பதால்தான் ரூபம், ரஸம், முதலான ஸர்வ விஷயஞானமும் ஏற்படுகிறது. இந்த விஷயம் பற்றி தெரிவிப்பதற்காகவே "ஆதித்யேனைவாயம் ஜ்யோSSஸ்த்தே" என்ற (ப்ரஹ 4-3-2) வாக்யம் ஆரம்பித்து கடைசீயில் அவை அனைத்தும் இல்லேயானுல் வாக் என்ற ஜ்யோதிஸ்ஸினுல் வ்யவஹாரம் நடக்கின்றது என்று முதலில் ஸாமான்யமாகத் தெரிவித்து இந்தவ்யாப்தியைக் கொண்டேசைதன்யம் தான் ஸர்வத்திற்கும் ஜ்யோதிஸ் என்பதை ஆத்மனைவாயம் ஜ்யோதி ஷாஸ்த்தே பல்யதே கர்மகுருதே விபல்யேதி என்று தெரிவிக்கின்றது. ஆகவே, அந்த கரணத்தில் சைதன்யஸம் பந்தம்ஏற்பட்டு அஹம் என்ற ஞானம் ஏற்பட்டபிறகுதான் மற்ற ஜ்யோதிஸ்கள் இருக்கின்றது என்றும் அதனுல் விவகாரங்கள் என்பதும் நடைபெறுகின்றது. மனஸ், இந்த்ரியம் பாஹ்யஜ்யோதிஸ் இவைகள் இல்லாதபோதும் சுஷுப்தியில் ஏற்படும் அனுபவம் சைதன்யத்தினுலேயே ப்ரகாசப்படுத்தப்படுகிறது. அதனுல் இந்த்ரிய விவகாரத்திற்குத் தான் பாஹ்ய ஜ்யோதிஸ்ஸின் அபேக்ஷை என்று சொல்லப்படுவதில் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லே. இந்த விதம் ஆத்மஜ்யோதிஸ் என்பது நிர்நிமித்தம், நித்யம் என்றும், அதனுல் தான்ஸர்வவிவகாரமும் நடக்கின்றது என்பதற்கும் ச்ருதி, யுக்தி, அனுபவம் என்ற எல்லா ப்ரமாணங்களும் இருக்கின்றது.

**78.** அவதாரிகை : ஆந்த்ரமாக இருக்கின்ற சைதன்யம் எப்படி பாஹ்யவ் யவஹாரங்களுக்கு உபயோகமாகிறது? என்ருல்,

ச்லோகம் :

श्रोत्रादिजन्यममतिवृत्तिषु बाह्यशब्दाद्यर्थाकृतिर्विशति कर्मवशेन कर्तुः ।
बोधाकृतिस्तु तव संनिधिमात्रहेतुर्धीवृत्तिषु प्रविशति स्वरसेन नित्यम्

ச்லோகார்த்தம் : ச்ரோத்ரம் முதலான கரணங்களினுல் ஏற்பட்ட வ்ருத்தியில் பாஹ்யமான சப்தாதி விஷயங்களின் ஆகாரம் (ஆக்ருதி) கர்த்தாவின் கர்மத்தினுல் (செய்கையினுல்) ஏற்படுகிறது. ஆனுல் புத்தி வ்ருத்தியில் சைதன்ய ஆக்ருதி என்பது உன்னுடைய (ஸன்னிதி மாத்திரத்தினுல்) சாத்யத்தினுல் எப்போதும் ஸ்வாபாவிகமாகவே ஏற்படுகிறது.

வ்யாக்யானம் : பாஹ்யம், ஆந்தரம் என்ற ஸர்வவ்யவஹாரங்களும் சைதன்யம் என்ற ஜ்யோதிஸ்ஸினுல் தான் நடக்கவேண்டும். ஆந்தரஜ்யோதிஸ் என்றசைதன்யம்

இல்லாமல் எந்த வ்யவஹாரமும் நடைபெருது. சைதன்யம் ஸ்வப்ரகாசம் நித்யம். அதன் ப்ரகாசத்திற்கு எந்த நிமித்தமும் தேவையில்லே. ஆந்தரஜ்யோதிஸ் ப்ரகாசிக்காத நேரமே கிடையாது. பாஹ்யஜ்யோதிஸ் என்பதே புருஷனுடையகர்ம நிமித்தமாக இருக்கின்றதால் ஆகந்துகம். அதனுல் அநித்யம் புத்தியில் அந்தந்த விஷயாகார பரிணமம் ஏற்படுவதற்குரிய காரணம் இருந்தால் தான், புத்தி பரிணமத்தை அடையும். புத்திவ்ருத்தி என்பதும் அநித்யம். இந்த விதம், புத்தி வ்ருத்தியும் அநித்யம், ஆதித்யாதிகளும் அநித்யம். ஆனுல் புத்திவ்ருத்திகள் விஷயாகாரமாக ஆவதற்கு உன் ஸன்னிதி மாத்ரம் போதுமானது. ஸர்வமும் ஸ்வஸ்வரூபத்தில் தான் அத்யஸ்த்தம் என்பதால் அதிஷ்டான சைதன்யத்தின் ஜ்யோதிஸ் எப்போதும் நித்யமாக இருக்கின்றது. அதனுல் ஸர்வ விவகாரங்களிலும் சைதன்யப்ரதிபலனம் ஏற்படுகிறது. சைதன்ய ப்ரதிபலனம் ஏற்படுவதற்கு இந்த்ரிய வ்யாபாரம் எதுவும் தேவை இல்லே. ஆகையால் சைதன்யம் ஒன்றே நித்ய ஜ்யோதிஸ் ஸ்வரூபம். அதனுல்தான் ஸர்வவ்யவஹாரமும் நடக்கின்றது. கர்மாவைக் காரணமாகக் கொண்ட இந்த்ரியவ்யவஹாரம் இந்த்ரியம் ஒடுங்குகின்றபோது இருக்கமுடியாது. ஆகவே ஆத்மஜ்யோதிஸ் ஒன்றே ஸர்வவ்யவஹாரத்திற்கும் காரணம்.

**79.** அவதாரிகை : ஆதித்யாதி ஜ்யோதிஸ் என்பதன் ஸம்பந்தம், புத்தி வ்ருத்திக்கு அநித்யமாகவே ஏற்படுகிறது. அதேபோல் ஆத்மஜ்யோதிஸ் என்பதின் ஸம்பந்தமும் புத்திவ்ருத்திக்கு ஆகந்துகமாகவே ஏற்படுகிறது என்று சொல்லவேண்டும். ஏனெனில் ஆத்மஜ்யோதிஸ்என்பதும் ஆதித்யாதிகள் போல் ஜ்யோதிஸ்ஸாக இருப்பதால் அநித்யமென்று தான் சொல்லவேண்டும். இந்த ஆக்ஷேபத்திற்கு ஒரு த்ருஷ்டாந்தத்தின்மூலம் பதில் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

स्वाभाविकी हि वियदन्वितता घटादेः क्षीरादिवस्तुघटना पुनरन्यहेतुः ।
एवं धियामपि चिदन्विततानिमित्तं शब्दादिवस्तुघटना खलु कर्महेतुः

ச்லோகார்த்தம் : கடாதிவஸ்துக்களில் ஆகாசஸம்பந்தம் ஏற்படுவதென்பது ஸ்வாபாவிகமாகவே இருக்கிறது. ஆனுல் க்ஷீரம் முதலானவைகளின் ஸம்பந்தம் என்பது வேறு காரணங்களினுல் ஏற்படுகிறது. இவ்விதமே புத்தி வ்ருத்திகளில் சைதன்யஸம்பந்தம் என்பது ஸ்வாபாவிகமாகவே இருக்கின்றது. ஆனுல் சப்தாதி விஷய ஸம்பந்தம் என்பது கர்மத்தினுல் (செய்கையினுல்) ஏற்படுகிறது.

வ்யாக்யானம் : கடாதிவஸ்துக்களில் ஆகாசஸம்பந்தம் என்பது எப்படி நித்யமோ அதேபோல் சைதன்யஸம்பந்தமில்லாமல் எந்த வஸ்துவும் இருக்கமுடியாது. அதனுல் புத்திவ்ருத்திக்கு சைதன்யஸம்பந்தம் என்பது நித்யஸம்பந்தம்தான். சைதன்யஸம்பந்தம் எந்த காரணத்தைக்கொண்டும் ஏற்படுவது அல்ல. நிருபாதிகத்வஸம்பந்தமே இருக்கின்றது. எந்தவஸ்துக்களும் எப்படி ஆகாசஸம்பந்தமுடையதாகவே உண்டாகிறதோ அதேபோல் ஸர்வப்ரபஞ்சமும் சைதன்யத்தில் அத்யஸ்த்தம் என்பதால் சைதன்யஸம்பந்தம் இன்றி எந்த வஸ்துவும் இருக்கமுடியாது. ஆனுல் கடாதிகளுக்கு க்ஷீரம் முதலான

வஸ்து ஸம்பந்தம் ஏதோ ஒரு காரணத்தினுல் ஏற்படுகிறது. அதனுல் சப்தம் முதலானவைகளும் அதன்ஸம்பந்தமும் அநித்யம். இந்தவிதம் வஸ்து ஸ்வபாவத்தை அனுசரித்தே அந்தந்த விஷயங்களை தீர்மானிக்கவேண்டும். ஆகையால் பாஹ்ய ஜ்யோதிஸ் என்பது எப்படி அநித்யமோ அதுபோல் ஆந்த்ர ஜ்யோதிஸ் என்பதும் ஜ்யோதிஸ்ஸாக இருப்பதனுல் அநித்யமாகத்தான் இருக்கவேண்டும் என்று அனுமானத்தினுல் சொல்லப்படும் ஆக்ஷேபம் பொருந்தாது.

**80. அவதாரிகை :** அந்த:கரணம் என்பதில் பாஹ்யவிஷய ஆகாரமும், ஆந்த்ர சைதன்யாகாரமும் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது. இதில் சைதன்ய ஆக்ருதி ஏற்படுகிறது என்பதில் ப்ரமாணம் என்ன?

**ச்லோகம் :**

संवेदनं यदिह मानफलं प्रसिद्धं तच्च प्रमातरि विकारिणि निष्ठितं नः ।
तस्य प्रमातुरपि साक्षितयाऽन्तरात्मा सर्वस्य तिष्ठति भवानविकाररूपः

**ச்லோகார்த்தம் :** ப்ரமாணபலமாக எந்தஞானம் ப்ரசித்தமாக இருக்கின்றதோ, அந்தஞானம் எங்கள் கொள்கையின்படி (மதப்படி) விகாரமுடைய ப்ரமாதாவில் இருக்கின்றது. நிர்விகாரமான அந்தராத்மாவாக இருக்கின்ற நீயோ ப்ரமாதா முதலிய அனைத்திற்கும் சாக்ஷியாகவே இருக்கின்ருய்.

**வ்யாக்யானம் :** லோகத்தில் கடஞானம், படஞானம் என்ற ஸர்வஷயஞானமும் ப்ரமாணபலம் என்றே சொல்லவேண்டும். அதாவது புத்தி வ்ருத்தியில் ப்ரதிபிம்பிக்கின்ற கூடஸ்த்த சைதன்யத்தின் ப்ரதிபிம்பமேவிஷய ஞானம் என்ற ப்ரமாண பலம் என்று சாஸ்திரம் தெரிவிக்கின்றது. இந்த விஷயத்தில் ஒரு சிலர் ஸம்வேதனம் என்ருல் ப்ராகட்யம் என்றும் இந்த ப்ராகட்யம் என்றதன்மை (ப்ரகாசிக்கின்றதன்மை) ஆத்மாவின் வ்யாபாரத்தினுல்(ப்ரகாசத்தன்மை) உண்டாகிறது என்றும், விஷயத்தில் ப்ராகட்யம் என்ற தர்மம் இருக்கின்றது என்றும் அதனுல் ஆத்மாவில் ப்ரகாசத்தன்மை இல்லை யென்றும் சொல்கிருர்கள். இவ்விதம் சொல்வது சரியல்ல.

ப்ராகட்யம் என்பது விஷயதர்மம் என்று சொல்லப்படுமானுல் ப்ரமாதாவின் வ்யாபாரம் இல்லையென்று சொல்ல நேரிடும் ப்ரமாதாவின் வ்யாபாரம் இல்லையென்ருல் விஷயப்ரகாசமே ஏற்படாது. ப்ரமாதாவின் வ்யாபாரம் இருக்கின்றது என்பதற்கும், ப்ரமாதாவின் வ்யாபாரம் இல்லை யென்பதற்கும் ப்ரகாசமாக சைதன்யம் இருக்கின்றதால், புத்தியில் ஏற்படும்ப்ரதிபிம்பமே ஞானம் என்று சொல்லவேண்டும். அவ்விதமின்றி விஷயத்தில் ப்ரகாசத்தன்மை இருப்பதாகச் சொல்வது சரியல்ல கூடஸ்த்தசைதன்யம் அந்த:கரணத்தில் ப்ரதிபிம்பிக்கின்ற போது. சைதன்யம்ப்ரமாத்ரு நிஷ்ட்டமாக இருக்கின்றது என்று சொல்லப்படுமானுல் அதை அனுத்மா (ஜடம்) என்றே சொல்லநேரிடும் (ப்ரமாதா ஜடம் என்ருல், அதன் தர்மமும் ஜடம் என்றே சொல்ல வேண்டும்.

சித்தா : ப்ரமாதாவின் புத்தி வ்ருத்தியில் சைதன்யம் ப்ரதிபலிக்கின்றது. புத்தி வ்ருத்தியில் ஏற்படும் ப்ரதிபிம்பம் அனுத்மாதான். பிம்பஸ்வரூபமான நிரூபாதிக சைதன்யமே ஆத்மா. மற்ற எல்லாமே அனுத்மாதான்.

பூர்வ : ப்ரமாணபலம் என்று சொல்லப்படும் ஞானம் என்பது ஆத்மநிஷ்ட்டம் என்றோ, அல்லது விஷய நிஷ்ட்டம் என்றோ சொல்லவேண்டுமே தவிர மத்தியில் உள்ள புத்திவ்ருத்தியில் ஞானம் இருக்கிறது என்று சொல்வது எப்படி பொருந்தும்?

சித்தா : ப்ரமாணவ்ருத்திக்கு ஆச்ரயமாக இருப்பவனே ப்ரமாதா என்று சொல்லப்படுகிறது. வ்ருத்தி என்பது பரிணாமத்தை அடையக் கூடியது விகாரி. கடம் என்பது எப்படிம்ருத்பரிணாமமோ அதுபோல் ப்ரமாதா என்பவனும் வ்ருத்தியின் விகாரம். அதனால் விகாரியான ப்ரமாதாவிடம் ஸம்வேதனம் என்பது கிடையாது. ஜடமான அந்த:கரணத்தில்தான் விகாரம் ஏற்படமுடியும்,. சைதன்யம் என்பதில் விகாரம் ஏற்படமுடியாது. ஆத்மா கூடஸ்த்தம். ஆகவே ப்ரமாண பலம் என்பது ப்ரமாதாவை ஆச்ரயித்து இருப்பதாகச் சொல்வதே பொருந்தும். விஷயாச்ரயம் என்று சொல்வது பொருந்தாது. (இதமஹம் ஜானாமி) இதைநான் அறிகிறேன். இந்த ஞானம் எனக்கு இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. இதனாலேயே ஞானம் என்பது விஷயத்தில் இல்லையென்ற அனுபவம் எல்லோருக்கும் இருக்கின்றது. ஆகவே சைதன்யம் என்பது ஆத்மஸ்வரூபத்தான். அந்த சைதன்யம் அந்த:கரணத்தில் ப்ரதிபலித்து ப்ரமாத்ருநிஷ்ட்டமாக ஆகின்ற போது ப்ரமாதா வேறு சைதன்யம் வேறு என்று வேறுபடுத்தி அறியமுடியவில்லை. ப்ரமாதாவின் அந்த:கரணத்தில் வ்ருத்தியில் தான் ப்ரதிபிம்பம் இருக்கின்றது. வ்ருத்தி ப்ரதிபலனம் ஏற்படுகின்றபோது தான், ஞானம் என்று விவகாரம் செய்யப்படுகிறது. தார்க்குச்சியின் நுனிபோல் ஏற்படும் இந்த வ்ருத்தி ஞானமே ப்ரமாணபலம் என்று சாஸ்திரங்களில் சொல்லப்படுகிறது. ஆகவே பரிணாமியான அந்த:கரணத்தில்தான் வ்ருத்திஞானம் ஏற்படுகிறது. அதனால் ப்ரமாணபலம்என்பது சுத்தசைதன்யம் என்ற சாக்ஷிஸ்வரூபமான ஆத்மாவினிடமும் இல்லை. ஜடமான விஷயத்திலும் இல்லை. சாக்ஷிசைதன்யமான ஆத்மா, விஷயம் என்ற இரண்டிற்கும்மத்தியில் உள்ள பரிணாமியான அந்த:கரணம் என்பதே சைதன்யாகாரமாகவும் விஷயாகாரமாகவும் ஆகின்றது. அதனால் ப்ரமாதாவை (ப்ரமிதிக்கு) ஞானத்திற்கு ஆச்ரயம் என்று சொல்லப்படுகிறது. அதனால் ப்ரமாணத்தினால் ஏற்படும் பலன்கள் எல்லாமே ப்ரமாதாவைச் சேர்ந்தது என்றே அறியவேண்டும்.

பூர்வ : பரிணாமியான அந்த:கரணமே ப்ரமாதா என்று சொல்லப்படுமானால் அதன் பலனை அனுபவிக்கின்றவனும் ப்ரமாதா என்றே சொல்லவேண்டும். அவ்விதம் சொல்லப்படுமானால் ப்ரமாதாவையன்றி ஆத்மா என்று ஒன்று இருப்பதாக விவகாரம் செய்யவேண்டிய அவஸ்யம் என்ன?

சித்தா : எந்த ப்ரமாதாவிற்கு சைதன்ய ஆச்ரயத்வமும் விஷய போக்த்ருத்வம் முதலானவைகளும் சொல்லப்படுகிறதோ அந்தப்ரமாதாவிற்கும் சாக்ஷியாக

ஆத்மசைதன்யம் இருப்பதாகவே ஒப்புக்கொள்ளவேண்டும். விகாரியான ப்ரமாதாவினிடம் காமம், க்ரோதம் முதலான பலவிகாரங்கள் ஏற்படுகின்றது. அதேபோல் கடபடாதி விஷயஞானமும் ஏற்படுகிறது. அவை எல்லாவற்றையும் ப்ரகாசப்படுத்துவதற்கு சாக்ஷியாக ஆத்மசைதன்யம் இருக்கின்றது. ஆத்மா அவிகாரி என்பதனுலேயே கூடஸ்த்தம். சாக்ஷி என்று சொல்லப்படுவதனுலேயே எந்த விவகாரத்திலும் ஸம்பந்தம் கிடையாது என்று அறியவேண்டும். ப்ரமாதாவிற்கு, விகாரங்களைப்ரகாசப் படுத்தக்கூடியதன்மை கிடையாது. அதனுல் ஸர்வமும் ஆத்ம சைதன்யத்தினுலேயே ப்ரகாசிக்கின்றது என்றே சொல்லவேண்டும்.

**81.** அவதாரிகை : அவிகாரியான ஆத்மாவில் அஹம்கர்த்தா, போக்தா என்ற அனுபவம் இருக்கின்றதால் கர்த்ருத்வாதி விகாரம் இல்லை என்று எப்படிச் சொல்லமுடியும்?

ச்லோகம் :

कर्त्रादिसंनिधिबलेन तवापि कर्तृभोक्तृप्रमातृवपुरापतति क्रमेण ।
तद्बुद्धिसंश्रयमनात्मगतं प्रतीचि शुद्धेऽपि पश्यसि तमः पटलावृताक्षः

ச்லோகார்த்தம் : கர்த்தாமுதலானவைகளின் ஸான்னித்யத்தினுல், ப்ராந்தியின் மூலமாக உன்னிடத்திலும், கர்த்ருத்வம், போக்த்ருத்வம், ப்ரமாத்ருத்வம், முதலானவைகள் ஏற்படுகின்றது. இவை புத்தியை ஆச்ரயித்ததாக இருக்கின்றதால் அனுத்மாவைச் சேர்ந்ததாகவும் இருக்கின்றது. அஞ்ஞானபடலத்தினுல் மறைக்கப்பட்டத்ருஷ்டியை உடையநீயோ சுத்தமான ப்ரத்யகாத்மாவினிடமும் இந்த தன்மைகள் இருப்பதாக பார்க்கின்ருய்.

வ்யாக்யானம் : கர்த்ருத்வாதிகள் அந்த:கரணத்தில் தான் இருக்கின்றது. ஆத்மாவில் இல்லை. அவிவேகத்தினுல் ஆத்மாவில் இருப்பதாக ஆரோபம் செய்யப்படுகிறது. கேவலம் சாக்ஷி என்றும் ஸ்வயம்ப்ரகாசம் என்றும் சொல்லப்படும் ஆத்மாவில் ப்ரமாத்ருத்வம் முதலானவைகள் ஸம்பவிக்கமுடியாது. ஆனுலும் ஜபாகுஸுமத்தின் ஸமீபத்தில் உள்ள ஸ்படிகத்தில் அந்தபுஷ்பத்தின் சிகப்பு நிறம் எப்படி தோன்றுகிறதோ அதுபோல் அந்த: கரணத்திற்கு சாக்ஷியாக ஸமீபத்தில் இருக்கின்ற ப்ரத்யகாத்மாவில் அவிவேகத்தினுல் அந்த:கரணதர்மங்கள் தோன்றுகிறது. அஞ்ஞானத்தினுல் ஆவ்ருதமான ஆத்மதத்வத்தில், கர்த்ருத்வம் முதலான தர்மங்கள் உள்ள புத்தி முதலானவை அத்யஸ்த்தமாக இருக்கின்றது. அதனுல்தான் கூடஸ்த்தன், சிதாபாஸன் என்ற இரண்டும் வேறு என்று அறியப்படவில்லை. அதனுல் கர்த்தருத்வாதிகள் ஆத்மாவில் இருப்பதாகத் தோன்றுகிறது. அது ப்ராந்தி ஞானமேதவிர பரமார்த்த ஞானமில்லை.

**82.** அவதாரிகை : ஆத்மாவில் கர்த்ருத்வாதிகள் பரமார்த்த மென்றே சொல்லலாமே ப்ராந்தி ஞானமென்று ஏன் சொல்லவேண்டும்?

ச்லோகம் :

कर्तृत्वादि च दृश्यवर्गपतितं द्रष्टुः स्वभावः कथं संभाव्येत तव प्रसन्न विमलस्वच्छप्रकाशात्मनः ।
यद्यद्दृश्यतया जगत्यभिमतं सर्वस्य तत्तद्भवेद्दूरं द्रष्टुरिति प्रसिद्धमखिलं भूभृत्समुद्रादिकम्

ச்லோகார்த்தம் : த்ருச்யஸமூகத்தைச் சேர்ந்த கர்த்ருத்வம் முதலானவைகள் சாந்த நிர்மல சுத்த ப்ரகாசமாகவும் த்ரஷ்ட்டாவாகவும் இருக்கின்ற உன்னுடைய ஸ்வபாவமாக எப்படி இருக்கமுடியும்? இந்த உலகத்தில் மலை ஸமுத்ரம் முதலான எந்தெந்த பதார்த்தங்கள் த்ருச்யமென்று ஒத்துக்கொள்ளப்படுகிறதோ அவை அனைத்தும், ஸர்வத்ரஷ்ட்டாவான ஆத்மாவிற்கு வேருகவே இருக்கின்றதென்பது ப்ரசித்தம்.

வ்யாக்யானம் : "கர்த்ருத்வாதிகள் த்ரஷ்ட்ருதர்மமில்லை. த்ருச்யத்வாத், ரூபாதிகள் போல்' என்று அனுமானத்தினுலேயே சாதிக்கலாம். ஆத்மா என்பது சைதன்யஸ்வரூபம். இந்த ஆத்மஸ்வரூபம் த்ருச்யமாக இருக்கிறதென்று யாராலும் அறியப்படவில்லை. அதனுல் கர்த்ருத்வாதிகள் த்ருச்யமாக இருக்கின்றதால், த்ரஷ்ட்டாவான ஆத்மதர்மமென்று சொல்லமுடியாது. மேலும் கர்த்ருத்வாதிகள் ஒருஸமயம் இருந்து ஒருஸமயம் இல்லாமல் இருப்பதால் (ஆகந்துகம்) நித்யஸ்வயம்ப்ரகாசமான ஆத்ம தர்மமாக இருக்க முடியாது. ஆத்மா சித்ஸ்வரூபம். எவ்வித மலங்களும் அற்ற ஸ்வரூபம், ஸ்வயம் ப்ரகாசம் அவிகாரி (கூடஸ்த்தம்) என்பதால் உற்பத்யாதி மலங்கள் இருக்கமுடியாது. ஸ்வச்சத்வம் அஸங்கத்வம் உள்ள ஸர்வசாக்ஷியான உன்ஸ்வரூபத்தில் பரிணுமத்தை உடையதும் ஆகமாபாயியாகவும் பராதீனமாகவும் இருக்கின்ற விருத்தமானதன்மைகள், (ஆத்மஸ்வரூபத்தில்) ஸம்பவிக்கமுடியாது. த்ரஷ்ட்டாவிற்கும் த்ருச்யவர்க்கத்திற்கும் ஸம்பந்தமே இருக்கமுடியாது. ஆகவே இந்த வ்யாப்தியைக் கொண்டே கர்த்ருத்வாதிகள் த்ரஷ்ட்ருதர்மமல்ல என்பதை நிரூபணம் செய்யலாம்.

**83.** அவதாரிகை : இதே விஷயத்தை வேறு காரணத்தைக் கொண்டும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

एतस्माच्च न जाग्रतस्तव भवेत्स्वाभाविकी कर्तृता यद्येषा स्वत एव किं न भवति स्वप्नेऽपि ते तिष्ठतः ।
यत्स्वप्ने परिपश्यसि त्वमखिलं तन्मायया निर्मितं कर्तृत्वादि न सत्यमत्र घटते कात्स्न्यानभिव्यक्तितः

ச்லோகார்த்தம் : மேலே சொல்லப்படும் காரணத்தினுலும் ஜாக்ரத் அவஸ்த்தையில் இருக்கின்ற உனக்கு, ஸ்வாபாவிக கர்த்ருத்வம் கிடையாது. இந்த கர்த்ருத்வமானது ஸ்வாபாவிகம் என்ருல் ஸ்வப்னத்திலும் அனுவ்ருத்திக்கின்ற உன்னிடத்தில் ஏன் இருப்பதில்லை. ஸ்வப்னத்தில் நீ எதைபார்க்கிருயோ அவை அனைத்தும் மாயா கல்பிதமேயாகும். அதனுல் இங்கு ஸ்வப்னத்தில் காணப்படும் கர்த்ருத்வாதிகள் ஸத்யமென்று ஏற்றுக்கொள்ளமுடியாது. ஏனெனில் அவை பூர்ணகாரணங்களுடன் தோன்றவில்லை.

**வ்யாக்யானம் :** இதற்குமுன், 'ஜ்யோதிர் த்வயாந்தரிதஏவ என்ற (77) ச்லோகத்திலிருந்து ஆரம்பித்து முன் ச்லோக பர்யந்தம் த்ருக்த்ருச்ய பாவம் சாக்ஷி-சாக்ஷ்ய பாவம் என்பவைகளையெல்லாம் விளக்கப்பட்டது. அன்வயவ்யதிரேகத்தைக் கொண்டு ஆத்மாதான் ஸர்வப்ரகாசகம் என்பதை "ஆத்மனைவாயம் ஜ்யோதிஷாSSஸ்தே" என்ற ச்லோகங்களின் தாத்பர்யத்தைக் கொண்டு விளக்கப்பட்டது. அதாவது ஜாக்ரத் அவஸ்த்தாவிவகாரங்கள் ஒடுங்கிய நிலையில் வாஸனாமயமான விஷயங்களை மட்டும் எடுத்துக்கொண்டு ஸ்வப்னவிவகாரங்களைச் செய்கிறான் என்றும் அதன்பிறகு அந்த வாஸனைகளும் ஒடுங்கிய நிலையில் சுஷுப்தி அவஸ்த்தைக்குச் செல்கிறான். அந்த நிலையில் ஆத்ம ப்ரகாசம் என்ற ஒன்றைத்தவிர கர்த்ருத்வம் முதலான எதுவும் ஆத்மாவில் இல்லை என்று அறிந்துகொள்ளலாம். ஸ்வப்னாவஸ்த்தையில் அறியப்படும் கர்த்ருத்வாதிகளும்அந்த விஷயங்களும் புதிதாக நிர்மாணம் செய்து அவைகளை அனுபவிக்கின்றான் என்று "ஸயத்ர ப்ரஸ்வபித்யஸ்ய லோகஸ்ய ஸர்வாவதோ மாத்ராமுபாதாய ஸ்வயம் விஹத்ய ஸ்வயம் நிர்மாய ஸ்வேனபாஸா ஸ்வேன ஜ்யோதிஷா" என்று ப்ரஹதாரணயக (4-3.9) வாக்யம் தெரிவிக்கின்றது.

**84.** அவதாரிகை : ஸ்வப்னாவஸ்த்தையைப் பற்றி தெரிவிக்கப்பட்ட பூர்வச்லோகத்தில் கார்த்ஸ்ன்யேய அனபிவ்யக்தித': என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த ஹேதுவிற்கு அர்த்தம் என்ன என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

कात्स्न्यं ह्यिष्टमबाधनं न खलु तत्स्वप्नस्य जाग्रद्धिया बाधाद्बाधितमेव सत्यमिति चेन्नैवं विरोधान्मिथः ।
सत्यत्वे नहि बाधितत्वघटना बाधे च सत्यं कुतः सत्यं बाधितमित्यतीव पदयोः संबन्धिता दुर्घटा

**ச்லோகார்த்தம் :** முன்ச்லோகத்தில் சொல்லப்பட்ட கார்த்ஸ்ன்யம் என்பது அபாதிதம் என்று ஒத்துக்கொள்ளப்படுகிறது. இது ஸ்வப்னத்திற்குகிடையாது. ஏனெனில் ஸ்வப்னம் என்பது ஜாக்ரத்ஞானத்தினால் பாதிக்கப்படுகிறது. எது பாதிக்கப்படுகிறதோ அது ஸத்யம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் ஸத்யத்வம் இருந்தால் அதற்கு பாதம் ஸம்பவிக்கமுடியாது. பாதம் ஏற்படுமானால் ஸத்யத்வம் ஸம்பவிக்காது. இரண்டும் பரஸ்பர விருத்தம். அதனால் ஸத்யம், பாதிதம் என்ற இரண்டுபதங்களுக்கும் எந்தவிதத்திலும் ஸம்பந்தம் இருக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** ஸ்வப்னாவஸ்த்தையில் அறியப்படும் விவகாரங்கள் விஷயங்கள் எல்லாமே உசிதமான தேசம், காலம், வஸ்துமுதலானவைகள் இருப்பதாகவே அறியப்படுகின்றதால் அதை அபாதிதம் என்றே சொல்லத் தோன்றுகிறது. ஆனால் நித்ரையிலிருந்து விழித்தவுடன் அவை எதுவுமே இல்லையென்பதால் அவைகள் உண்மையில் இல்லையென்று அறியப்படுகிறது. ஆகவே பாதிக்கப்படாமல் இருக்கின்ற விஷயத்தையே கார்த்ஸ்ன்யம் என்று சொல்லலாம். ஸ்வப்னம் என்பது பாதிக்கப்படாத தன்மை உடையது அல்ல என்பதால் அகார்த்ஸ்ன்யம் என்று சொல்லப்படுகிறது.

இவ்விதம் ஜாக்ரத்புத்தியினால் பாதிக்கப்படபோதிலும் கூட அதற்கு ஸத்யத்வம் சொல்லலாமே என்றால், பாதிதம் என்று சொல்லப்படுமானால் (அதற்கு ஸத்யத்வம் சொல்லமுடியாது) அதை ஸத்யமென்று சொல்லமுடியாது இரண்டும் விருத்தம்.

லோகத்தில் எது பாதிக்கப்படாமல் இருக்கிறதோ அதுவேஸத்யமென்றும், பாதிக்கப்படுவதெல்லாம் பாத்யம் என்றும் சொல்லப்படுகிறதென்பது ப்ரசித்தம். அதனால் பாத்யம் என்றால் அதுஸத்யம் என்று சொல்வது அபத்தம்.

அக்யாதி வாதியான பௌத்தன் இந்த விஷயம் பற்றி வேறுவிதமாகத் தெரிவிக்கின்றான். அதாவது, இரண்டு வஸ்துக்கள் இருக்கின்றபோது, அவை இரண்டையும் ஒன்று என்று முதலில் நினைக்கிறான். அதன்பிறகு அது ஒன்றல்ல, இரண்டு வஸ்த்துக்கள் என்று அவற்றில் உள்ள பேதத்தைக்ரஹிக்கின்றான். இதையே பாதம் என்று சொல்லப்படுகிறது. அதனால் அந்த வஸ்துஸத்யமாகவும் இருக்கலாம், பாதமும் இருக்கலாம் என்றும், இதில் விரோதம் என்ன இருக்கிறது என்று ஆக்ஷேபிக்கிறான்.

இந்த ஆக்ஷேபம் சரியல்ல. ஒருவஸ்துவைப் பற்றி முதலில் ஒரு ஞானம் ஏற்படுகிறது. அதன்பிறகு முன்னால் ஏற்பட்ட ஞானம் பாதிக்கப்படுகிறது. இவ்விதம் முதலில் ஏற்பட்ட ஞானம் பாதிக்கப்படுவதாலேயே அதைப் ப்ராந்தி ஞானம் என்று சொல்லப்படுகிறது. அந்த ஞானம் ஸத்யமாக இருக்குமானால் அது பாதிக்கப்படமுடியாது. பாதிக்கப்படுவது ஸத்யமல்ல. ஸத்யம், பாத்யம் என்ற இரண்டு பதங்களும் ஒன்றுக்கொன்று விருத்தம்.

**85.** அவதாரிகை : 'மாயாமாத்ரந்து கார்த்ஸ்ன்யேன அனபிவ்யக்தஸ்வரூபத்வாத்' என்ற ப்ரஹ்மசூத்ரம் (3-2.3) ஸ்வப்னம் மித்யை என்று சித்தம் செய்வதற்காக மணி மந்த்ர ஔஷதம் முதலானவைகளை த்ருஷ்டாந்தமாக தெரிவிக்கின்றது.

ச்லோகம் :

मायामेनां जागरे लोकसिद्धामुक्त्वा तद्वत्स्वप्नमायां विविच्य ।
शक्तिव्याप्ती तत्र सिद्धे गृहीत्वा मायासिद्धं जागरं साधयामः

ச்லோகார்த்தம் : முதலில் ஜாக்ரத் அவஸ்த்தையில் ப்ரசித்தமாக இருக்கின்றமாயையை (அவித்யை என்று) தெரிவிக்கின்றோம். அதன்பிறகு மாயாபதத்தின்சக்தி, (எது மாயாகார்யமோ அது அவித்யா கார்யம் என்ற) வ்யாப்தி என்ற இவை இரண்டையும் க்ரஹிக்கின்றோம் பிறகு ஜாக்ரத் அவஸ்த்தை என்பது மாயா கார்யம் என்று சாதிக்கின்றோம்.

வ்யாக்யானம் : ஸ்வப்னம் என்பது அவித்யாமயம் என்பதால் ப்ராந்தி என்று சொல்லலாம், ஆனால் அதை மாயாமயம் என்று சொல்வது சரியல்ல, ஏனெனில், அவித்யை யென்பதும் மாயை என்பதும் ஒன்றல்ல. மாயை இருக்கின்றவனிடம் மாயாமயமான ப்ராந்தி என்பது கிடையாது. மாயாவி என்பவன் ப்ராந்தனல்ல. அவித்யையுடைய புருஷனிடம் ஸ்வப்னம் என்றப்ராந்தி ஞானம் ஏற்படுகிறது. அதனால் அவித்யை என்பதும் மாயை என்பதும் இரண்டும் வேறு என்றே சொல்லவேண்டும் என்பதால் இவைகளைத்ருஷ்டாந்தமாகவும், தார்ஷ்டாந்தமாகவும் தெரிவித்து ஜாக்ரத் என்பது மித்யை என்று சாதிக்கமுடியாது என்ற ஆக்ஷேபத்திற்கு பதில் தெரிவிக்கப்படுகிறது. அதாவது அவித்யை, மாயை என்ற இரண்டும் ஒன்று என்றே சொல்லவேண்டும். ஏனெனில் இரண்டிற்கும் உள்ளஸ்வபாவம் ஒன்றாகவே இருக்கிறது. இந்த்ரஜாலம் என்று சொல்லப்படும் மாயை என்பதற்கும் ப்ராந்தி என்று சொல்லப்படும்

அவித்யாமயம் என்பதற்கும் எவ்வித அர்த்தபேதமும் சொல்லமுடியாது. இந்த பதங்கள் இரண்டும் எந்தசக்தியினுல் அநிர்வசனீயம் என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றதோ அதேகாரணத்தைக் கொண்டு இரண்டும் ஒன்று என்றே சொல்லப்படுகிறது. ஒருபதம் எந்த அர்த்தத்தை தெரிவிக்கின்றதோ அதே அர்த்தத்தையே மற்றபதமும் தெரிவிக்கின்றது என்ற வ்யாப்தியைக் கொண்டே இரண்டும் ஒன்றே என்று சொல்லப்படுகிறது. மேலும் அதற்குரிய காரணங்களைக் கொண்டுமேலே விளக்கப்படுகிறது. மாயை என்பது ஈச்வரசக்தி என்ற காரணத்திற்காக மாயை என்பது ஸத்யம் என்று சொல்லமுடியாது. மாயை என்பதும் மித்யைதான் என்று ப்ரதிஞ்ஞை செய்கிருேம்.

**86.** அவதாரிகை : முன்னுல் சொல்லப்பட்ட ப்ரதிஞ்ஞையை சித்தம் செய்வதற்குரிய ஸாதனம் பற்றி விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

लोके हि मायाऽधिगता न माया तमोतिरिक्ताऽस्ति निरूप्यमाणा ।
व्याप्तिश्च शक्तिश्च निरूप्यमाणा भविष्यतीहैव तु नेतरत्र

ச்லோகார்த்தம் : லோகத்தில் மாயாவியிடம் இருக்கின்ற மாயை என்பதைப்பற்றி விசாரிக்கின்றபோது அவித்யையைக் காட்டிலும் வேருக இல்லை என்று எது மாயாகார்யமோ அது அவித்யாகார்யம் என்று மாயாபதத்தின் சக்தி, வ்யாப்தி என்ற இரண்டையும் நிரூபணம் செய்கின்றபோது அவித்யையாகவே ஆகின்றது.

வ்யாக்யானம் : அவித்யை, மாயை என்ற இரண்டிற்கும் உள்ளஸமான லக்ஷணம் என்னவென்ருல், மாயாசப்தத்தின்சக்தி அதன் வயாப்தி இவைகளைக்கொண்டு, எவையெல்லாம் மாயாமயமோ அவைஎல்லாம் மித்யைதான் என்று மாயாமயத்வம் என்ற வ்யாப்தியைக் கொண்டு நிரூபணம் செய்கின்றது. அவித்யை என்பதே மாயாசப்தத்தினுல் சொல்லப்படுகிறது என்பது சித்திக்கின்றது. அதனுல் இரண்டும் வேறு என்று சொல்வதற்கு முடியாது.

**87.** அவதாரிகை : மணி, மந்த்ரம், ஔஷதம் என்பவைகளைத்தானே மாயை என்று சொல்கிருேம். அஞ்ஞானம் என்பதை மாயை என்று ஒருவராலும் சொல்லப்படவில்லையே?

ச்லோகம் :

मायाविनो न मणिमन्त्रमथौषधं वा मायेति शक्यमिह वर्णयितुं कुतश्चेत् ।
सत्यं हि तत्सकलमिष्टमियं त्वसत्या माया ततोऽन्यदिह किंचन वर्णनीयम्

ச்லோகார்த்தம் : மாயாவியினிடம் இருக்கின்ற மணி, மந்த்ரம், ஔஷதம் என்பவைகளைமாயை என்று சொல்லமுடியாது. ஏனெனில் இவையெல்லாம் ஸத்யம் என்றேசொல்லப்படுகிறது. மாயை என்பதோ அஸத்யம், ஆகையால் இவைகளையன்றி வேருக இருக்கின்ற ஒன்றையே மாயை என்று சொல்லப்படவேண்டும்.

வ்யாக்யானம் : லோகத்தில், எந்த ஒருவஸ்து எந்த இடத்தில், எந்தக்காலத்தில், எந்த காரணமும் இல்லாமல் இருக்கமுடியாதோ அந்த வஸ்து அங்கு இருப்பதாக தோன்றுமானுல் அதுவே மாயை என்ற சப்தத்தால் சொல்லப்படுகிறது. அதனுல் மாயை

என்று சொல்லப்படும் வஸ்துஸத்யமாக இருக்கலாமே என்று சொல்வதற்குமுடியாது. அஸத்யமான ஒன்றையே மாயாசப்தம் தெரிவிக்கின்றது. அதனுல் ஸத்யமான வஸ்துவையோ அல்லது முயல் கொம்பு போன்ற அத்யந்த அஸத்தானவஸ்துவையோ மாயா சப்தம் தெரிவிக்காது. பாரிசேஷாத் இந்த இரண்டைத் தவிர மிச்சமுள்ள அநிர்வசனீயமான ஒரு வஸ்துவையேமாயாசப்தம் தெரிவிக்கின்றது. இந்த விஷயம் பற்றி, மணிமந்த்ராதி த்ருஷ்ட்டாந்தத்தைக் கொண்டு சாதிக்கப்படுகிறது.

பூர்வ : மணி, மந்தரம், முதலானவைகளை வைத்திருக்கின்ற புருஷனை மாயாவி என்று சொல்வது ப்ரசித்தம்தான். அதனுல் மணிமந்தரம் முதலானவைகளையே மாயை என்று சொல்லவேண்டும். அவைகளை அவித்யை என்று எப்படிச் சொல்லமுடியும்?

சித்தா : மாயை என்ற சப்தம் மித்யா வஸ்துவையே தெரிவிக்கிறது என்பது லோகப்ரசித்தம். மணி முதலானவைகளை மாயை என்று ஒருவரும் சொல்வதில்லை மணிமுதலானவை ஸத்யமாகவே இருக்கின்றது. அதனுல் அவைகளைத் தவிரவேறு ஒன்றைத்தான் மாயாசப்தவாச்யமாக சொல்லப்படவேண்டும். மாயாவி என்பவன் அவனிடம் உள்ள எந்தமணி, மந்த்ரங்களைக்கொண்டு எந்தபதார்த்தத்தை சிருஷ்டிக்கின்ருனே, அந்த பொருளையே மாயாமயம் என்று சொல்லப்படுகிறது. மணிமந்தரம் முதலானவைகள் த்ருஷ்ட்ட நஷ்ட்டஸ்வபாவமுடையது அல்ல. அதனுல் அவைகளை மாயை என்று சொல்லமுடியாது.

**88.** அவதாரிகை : மணிமந்த்ரங்கள் மாயை என்று சொல்லவேண்டாம். மணி மந்த்ரம் என்பவைகளை ப்ரயோகம் செய்கின்ற புருஷனிடம் இருக்கின்ற சக்தியை மாயை என்று சொல்லலாமே ?

ச்லோகம் :

सामर्थ्यमस्य मणिमन्त्रनिमित्तमस्ति माया भविष्यति जनभ्रमहेतुरेषा ।
इत्युच्यते यदि तदप्यतिफल्गु कस्मात् सामर्थ्यमप्यवितथं हि तदिष्टमस्य

ச்லோகார்த்தம் : ஜனங்களுக்கு ப்ராந்தியை ஏற்படுத்துகின்ற இந்தமாயை என்பது, மணி, மந்த்ரம், முதலான நிமித்தங்களினுல் மாயாவியினிடம் இருக்கின்ற ஸாமர்த்யமேயாகும் என்று சொல்லப்படுமாஞல் அதுமிகவும் அல்பமானதாகவே ஆகும். ஏனெனில் இவனுடைய அபிப்ருயப்படி (மதத்தின்படி) இந்தஸாமர்த்யம் என்பது ஸத்யமேயாகும்.

வ்யாக்யானம் : மணி மந்த்ரங்களை செய்பவனிடம் இருக்கின்ற ஸாமர்த்யம் என்ற சக்தியும் ஸத்யம்தான். அந்த சக்தி என்பதும் த்ருஷ்ட்டநஷ்ட்ட ஸ்வபாவம் உடையது அல்ல. அதனுல் அந்தஸாமர்த்யம் என்பதும் மாயை அல்ல. ஆகவே அந்த சக்தியே மாயை என்று சொல்வது மிகவும் துர்பலமான காரணம்.

**89.** அவதாரிகை : மணி, மந்தரம் முதலானவைகளை ப்ரயோகிக்கக் கூடிய சக்தி மாயாவியினிடம் ஸ்வபாவமாகவே இருக்கின்றது என்றும் அந்த சக்தியை மணி மந்தரங்கள் அபிவ்யஞ்சகம் செய்கின்ற தென்று சொல்லப்படுகிறதா? அல்லது மாயாவியினிடம் அந்த சக்தி ஸ்வாபாவிகமாகஇல்லையென்றும் புதிதாக அந்தசக்தி

அவனிடம் உண்டாகிறது என்று சொல்லப்படுகிறதா? என்று விசாரிக்கப்படுமானுல் எந்தவிதமாகவும் பதில் சொல்லமுடியாது.

**ச்லோகம் :** न च शक्तिरस्ति सहजा यदि वा जनिताऽस्ति केनचिदिति ब्रुवतः ।
परिपुष्कलं स्वमतनिर्वहणं भवितुं क्षमं तदनिरूपणतः

**ச்லோகார்த்தம் :** மாயாவியின் சக்தி என்பது ஸஹஜமாகவே இருக்கின்றதா? அல்லது ஏதோ ஒரு நிமித்தத்திஞல் ஏற்படுகிறதா (என்று) யாராலும் பூர்ணமாக தன்னுடைய பக்ஷத்தை நிரூபணம் செய்யமுடியாது. ஏனெனில் இந்த இரண்டு பக்ஷங்களுமே நிரூபிக்கப்படவில்லை.

**வ்யாக்யானம் :** மணி, மந்த்ராதிகளும் மாயையல்ல. அவைகளை உபயோகிக்கின்ற ஸாமர்த்யமும் மாயையல்ல என்றும் சொல்லப்பட்டது. அதஞல் இதையன்றி வேருக மாயாவியினிடம் இருக்கின்ற ஏதோ ஒன்றை மாயை என்று சொல்லலாம் என்றும் ஆனுல் அது அவித்யையல்ல, அதைக்காட்டிலும் வேறுபட்டது என்று சொல்லப்படுமானுல் அது இன்னதென்று உன்னுல் சாதிக்கமுடியாது. மாயாவியினுடைய அந்த சக்தி ஸஹஜமா? அல்லது ஏதோ ஒரு காரணத்திஞல் உற்பத்தி ஆகின்றதா? என்று விசாரிக்கப்படுமானுல் எந்த பக்ஷமும் நிரூபணம் செய்யமுடியாது.

**90.** அவதாரிகை : ஏன் நிரூபணம் செய்யமுடியாது?

**ச்லோகம் :**

न च शुक्रशोणितसमागमने न च गर्भशायिन इयं विदिता ।
न च मातृयोनिविवरादुदरादपसर्पतो बहिरियं घटते

**ச்லோகார்த்தம் :** சுக்ர சோணிதஸம்பந்தம் ஏற்படுகின்றபோது இந்த சக்தி அறியப்படுவதில்லை. கர்ப்பத்தில் இருக்கின்றபோதும் இந்த சக்தி அறியப்படுவதில்லை. மாதாவின் உதரத்திலிருந்து யோனி வழியாக வெளியே வருகின்ற இந்த சக்தி (இருக்கின்ற தென்பதும்) பொருந்துவதில்லை.

**வ்யாக்யானம் :** மாயாவி என்ற புருஷன் பிறப்பதற்கு காரணமான கர்ப்பாதானம் செய்கின்றபோதே சுக்லச்ரோணிதங்களில் இந்தசக்தி இருக்கின்றதா? அல்லது மாதாவின் உதரத்தில் ப்ரவேசித்தபிறகு கர்ப்பவாஸம் செய்கின்றபோது இந்த சக்தி உண்டாகிறதா? அல்லது மாதவின் உதரத்தைவிட்டு வெளிப்படுகின்றபோது (பிறக்கின்றபோது) உண்டாகிறதா என்று விகல்பம் செய்யப்படுமானுல். இந்த மூன்று அவஸ்த்தைகளில் ஏதாவது ஒரு அவஸ்த்தையில் இந்த சக்தி இருப்பதாகச் சொல்லமுடியுமானுல் அதை ஸஹஜம் என்று சொல்லலாம். அவ்விதம் ஸஹஜமாக அந்தசக்தி இருக்குமானுல் எல்லோரிடமும் அந்தசக்தி இருக்கவேண்டும். ஆகவே எந்தவிதமாகவும் நிரூபணம் செய்யமுடியாது.

**91.** அவதாரிகை : முன்னுல் சொல்லப்பட்ட மூன்று அவஸ்த்தைகளிலும் அந்தசக்தி இல்லையென்றும் பிறந்த பிறகு ஏதோ ஒரு நிமித்தத்தால் உண்டாகின்றது என்று சொல்லலாமே என்ருல் அவ்விதமும் சொல்லமுடியாது.

ச்லோகம் :

मणिमन्त्रमौषधमितीदृशकं विरहय्य नापरमिहार्पयति ।
पुरुषोऽपि कश्चिदत एवमियं परतोऽपि नास्य घटना घटते

ச்லோகார்த்தம் : ஒரு புருஷன், மாயாவியினிடம் மணி மந்த்ரம் ஔஷதம் இவைகளைத் தவிரவேறு எதையும் கொடுப்பதில்லை. ஆகையால் வேறு நிமித்த மூலமாகவும் இந்தசக்தி ஏற்படுகிறது என்று சொல்வதற்கும் பொருந்தாது.

வ்யாக்யானம் : மணி, மந்தரம், முதலானவைகள் பதார்த்தம். அவைகள் சக்தியல்ல. மாயாசப்தவாச்யமல்ல. ஏனெனில் மணி, மந்த்ரங்கள் எல்லாமே ஸத்யம் என்று லோகத்தில் ப்ரசித்தமாக இருக்கிறது. அதேபோல் மாயை என்பதும் அந்ருதம் என்பதும் ப்ரசித்தம். அதனால் இவைகளில் எதுவும் மாயை அல்ல. மாயாவியானவன் தன்னுடைய சிஷ்யனுக்கு உபதேசிக்கின்றகாலத்திலும்மணி, மந்தரம் முதலானவைகளைத் தான் கொடுக்கின்றான். அதையன்றி அவனிடமுள்ள மாயாசக்தியை கொடுப்பதாக அறியப்படவுமில்லை. அதில் ப்ரமாணமும் கிடையாது. அதனால் அந்தசக்திவேறு ஒரு காரணத்தினால் உண்டாகிறது என்று சொல்லமுடியாது ஆகவே இதுவரை விசாரிக்கப்பட்ட விஷயங்களில் எதையும் மாயை என்று சொல்வதற்கு முடியாது.

**92.** அவதாரிகை : மணி, மந்த்ரம் முதலானவைகளின் அபேக்ஷை இல்லாமலேயே மற்றவர்களுக்கு வ்யாமோஹத்தை உண்டுபண்ணக்கூடிய சக்தி அந்தபுருஷனிடம் இருக்கின்றதென்றும், அந்த சக்தியே மாயை என்று சொல்லவேண்டும். ஏனெனில் அவனால் செய்யப்படும் கார்யங்களிலிருந்து இந்தசக்தி அவனிடம் இருப்பதாக அனுமானிக்கலாமே ? என்றால்,

ச்லோகம் :

अन्यस्य विभ्रमकरी पुरुषस्य शक्तिराकारमन्यमनपेक्ष्य मनीषिता चेत् ।
वाच्येह लौकिकजनव्यवहारभूमौ मायागिरस्तदपि दुर्घटमिष्टहानेः

ச்லோகார்த்தம் : வேறொரு அதிஷ்ட்டானத்தை அபேக்ஷிக்காமல் தனக்கு அன்யமான ஒருவனுக்கு ப்ராந்தியை உண்டுபண்ணக்கூடிய சக்தி, ஈச்வரனிடம் இருக்கின்றது. இந்தசக்தியே மாயை என்ற பதத்தின் அர்த்தமாகும் என்று ஒத்துக் கொள்ளப்படுமானால் அதுவும் ஸம்பவிக்கமுடியாது. ஏனெனில் அதனால் உன் இஷ்ட்டத்திற்கு ஹானி ஏற்படும்.

**93.** அவதாரிகை : ஏன் என்னுடைய இஷ்ட்டம் சித்திக்காது ?

ச்லோகம் :

मायामयत्ववचनादखिलं मृषेति यद्भाष्यकारवचनं तदसंगतं स्यात् ।
प्रत्यक्षमुत्सृजसि कारणमन्यदन्यद्यत्किंचिदानयसि कष्टमतः किमन्यत्

ச்லோகார்த்தம் : "மாயாமயம் என்று சொல்லப்பட்டிருப்பதால் எல்லாம்ம்ருஷாவே ஆகும்" என்ற பாஷ்யகாரரின் வசனமும் பொருந்தாது என்றாகும். ப்ரத்யக்ஷமான

காரணத்தைவிட்டுவிட்டு வேறு ஏதேதோ காரணத்தை சொல்கிறுய் இதற்குமேல் வேறு என்ன கஷ்ட்டம் இருக்கமுடியும்?

வ்யாக்யானம் : ஜகத்சிருஷ்டிக்கு மாயை என்ற அஞ்ஞானம், உபாதானம் என்று சொல்லப்படுகிறது. இந்தமாயை என்பது ஸத்யமா? அஸத்யமா? என்று விசாரிக்கின்ற போது எந்த விதமும் நிரூபணம் செய்யமுடியாது. "மாயாந்து ப்ரக்ருதிம் வித்தி மாயினந்து மஹேச்வரம்" என்று ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. மாயை என்பதும் ம்ருஷா மித்யை என்றே பாஷ்ய காரராலும் சொல்லப்படுகிறது, லோகப்ரசித்தமாகவும் இருக்கின்றது. மாயை என்பதற்கு இவ்விதம் அர்த்தம் செய்யப்படாமல், வேறு ஏதோ ஒரு அர்த்தம் கல்ப்பிக்கப்படுமாஞல் மாயாசப்தவாச்யம் என்னவென்றே நிரூபணம் செய்யமுடியாது. மூலப்ரமாணமானச்ருதிவாக்யத்தின் தாத்பர்யமேபாஷ்யகாரர் வசனங்களாக இருக்கின்றது. இதைத் தவிரவேறு எதுவும் இதற்கு ப்ரமாணமாக ஒத்துக்கொள்ளமுடியாது.

மாயை என்பது மாயாவியான புருஷனுக்கு மோஹத்தை உண்டு பண்ணுவதில்லை. மாயாவியானவன் தன் உண்மையான ஸ்வரூபத்தை மாயையினுல் மறைத்து, மற்றவர்களுக்கே மோஹத்தை உண்டுபண்ணுகின்ருன். அஞ்ஞானம் என்பது ஈச்வர உபாதி என்று சொல்கிரேம். அந்த அஞ்ஞானம் அஞ்ஞானமாத்ரமாக இருக்கின்றபோது விப்ரமத்தை உண்டுபண்ணுவதில்லை. அஞ்ஞானகார்யமான ஜீவனிடம் உள்ள அந்த:கரண த்வாராவிப்ரமத்தை உண்டுபண்ணுகின்றது. அந்த ஸமயம் அந்த:கரணத்தில் இருக்கின்ற அவித்யைஎன்பதில் க்ஷோபம் (கலக்கம்) ஏற்படுகிறது. அதனுல் ஜீவனுக்கு வ்யாமோஹம் இருக்கிறது ஈச்வரனுக்கு (மாயாவியினிடம்) வ்யாமோஹம் இல்லை. ஆனுல் மாயாவி ஜீவனிடமுள்ள அஞ்ஞானத்தில் கலக்கம் ஏற்படுபடிச் செய்கின்ருன். அந்த:கரண்ம் இருக்கின்றபோது தான்ப்ரபஞ்சம் தோன்றுகிறது. அதனுல் அஞ்ஞானம் என்பதே ப்ரபஞ்சத்திற்கு உபாதானம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, மாயாவியின் ஸ்வரூபம் என்னவென்று அவனைபார்க்கின்றவனுக்கு அறியப்படவில்லை. ஆனுல் அவனுல் தோற்றுவிக்கப்படுவது எல்லாம் மாயை என்பது லோகப்ரசித்தம். இவ்விதம் சொல்லாமல் வேறு எந்தவிதமான காரணங்கள் சொல்லப்பட்டாலும் அவைகள் மாயாசப்தார்த்தம் என்று நிரூபணம் செய்யமுடியாது. அதனுல் மணி மந்த்ரம் ஔஷதம் என்றும் அதன்சக்தி யென்றும் சொல்லப்படுவது எல்லாமே வ்யர்த்தம். இவைகளால் மாயாசப்தார்த்தம் என்னவென்று வ்யவஸ்த்திதமாக சொல்லவும் முடியாது. இவ்வித கல்ப்பனைகள் ப்ராமாணிகம் என்றும் சொல்லமுடியாது.

94. அவதாரிகை :

எந்த சக்தியைக்கொண்டு ஈச்வரன் இந்த ப்ரஞ்சத்தை சிருஷ்டிக்கிருரோ அந்த சக்தியைதான் 'பராSச்யசக்தி :' என்று பரமனுடைய சக்தியாக சொல்லப்படுகிறது. அதனுல் அந்த சக்தியையே மாயை என்று சொல்லப்படுகிறது. அவ்விதமின்றி வ்யாமோஹத்தை உண்டுபண்ணக்கூடிய அஞ்ஞானம் என்பதே ஈச்வரசக்தியான மாயை என்று எப்படிச் சொல்லமுடியும்? அவ்விதம் சொல்லப்படுமானுல் ஈச்வரனுக்கும் ப்ரமம் இருப்பதாகச் சொல்ல நேரிடும் மாயையே அஞ்ஞானம் என்று சொல்வதற்கு முடியாது.

ச்லோகம் :

अज्ञानमेव च भविष्यति शक्तिरेषा सर्वप्रपञ्चजननी परमेश्वरस्य ।
माया श्रुतिस्मृतिवचोभिरुदीर्यमाणा शक्तिग्रहो हि परविभ्रमहेतुशक्तौ

ச்லோகார்த்தம் : பரமேச்வரனுடைய சக்தியே ஸர்வஜகத்காரணம் என்றெல்லாம், ச்ருதி ஸ்ம்ருதி வாக்யங்களால் சொல்லப்படுகின்ற மாயை என்பது அஞ்ஞானமேயாகும். ஏனெனில் மாயை என்ற பதத்தினுடைய சக்திக்ரஹமானது. பரவ்யா மோஹ சக்தியில் தான் ஏற்படுகிறது. (அன்யர்களின் வீயாமோஹத்திற்கு காரணமான சக்தியே மாயாசப்த சக்தி க்ரஹணம்)

வ்யாக்யானம் : ச்ருதிஸம்ருதிகளில் சொல்லப்படும் பரமேச்வரசக்தியென்ற மாயை என்பதே அஞ்ஞானம் என்று சித்திக்கின்றது. ப்ரபஞ்சத்தை சிருஷ்ட்டிக்கக் கூடிய இந்த பரமேச்வரசக்தியை மாயையென்றும் அவித்யை என்றும் ப்ரக்ருதி என்றும் பலசப்தங்களால் சாஸ்திரங்களில் சொல்லப்படுகிறது. இல்லாத ஒருவஸ்துவை இருப்பது போல் சிருஷ்டிக்கின்ற சக்தியைத் தான் மாயை என்று சொல்லப்படுகிறது. ஈச்வரனுல் சிருஷ்டிக்கப்பட்ட ப்ரபஞ்சங்கள் எல்லாம் மித்யை என்றே ச்ருதிவாக்யங்கள் தெரிவிக்கின்றது. மேலும் ஈஸ்வரன் தன்னிடமுள்ளசக்தியைதன் வசமாகச் செய்திருப்பதால் ஈச்வரனுக்கு வ்யாமோஹத்தை உண்டுபண்ணுவதில்லை என்று முன்பே சொல்லப்பட்டிருக்கிறது. அதனுல் மாயாசப்தார்த்தம் அஞ்ஞானம் என்றே சொல்லவேண்டும்.

பூர்வ : மாயை என்பதை பகவானுடைய ப்ரஞ்ஞை என்று சொல்லப்படுவதால் மாயை என்பதை ஞானமென்று சொல்லவேண்டுமேதவிர அஞ்ஞானம் என்று எப்படிச் சொல்வது ?

சித்தா : பரனுக்கு விப்ரமத்தை உண்டுபண்ணுவதற்கு காரணமாக இருக்கின்ற சக்தியைத்தான் அஞ்ஞானம் என்று சொல்லப்படுவதால் இதில் விரோதம் ஏதுமில்லை. மாயாவி என்பவன் மணி மந்த்ராதிகளை உபயோகித்து அவனுல் சிருஷ்டிக்கப்படும் வஸ்துக்களை, பார்க்கின்றவன் சித்தத்தில் ஒருகலக்கத்தை உண்டுபண்ணுகின்றுன். இந்த கலக்கம் அஞ்ஞானத்தினுல் ஏற்படுகிறது. இதனுல் இல்லாதவஸ்துக்கள் இருப்பது போல் தோற்றுவிக்கப்படுகிறது என்பதால் அவைகள் மித்யை என்று சொல்லப்படுகிறது. ஸ்வப்னபதார்த்தங்கள் விழித்தவுடன் இல்லை என்ற காரணத்தினுல் தான் த்ருஷ்ட்ட நஷ்ட்ட ஸ்வபாவம் என்றும் சொல்லப்படுகிறது. இந்தவிதம் பார்க்கின்றவனுக்கே அஞ்ஞானம் மோஹத்தை உண்டு பண்ணுகின்றதேயன்றி அந்த கலக்கத்தை உண்டு பண்ணுகின்ற மாயாவியினிடம் அந்த அஞ்ஞானம் வ்யாமோஹத்தை உண்டுபண்ணுவதில்லை. அதனுல் ஈச்வரனுக்கு அஞ்ஞானம் கிடையாது என்று சொல்லப்படுகிறது. மாயையைதன் வசப்படுத்தியதால் ஈச்வரனிடமுள்ள அவித்யையை மாயை என்றும் ஜீவர்களிடம் கலக்கத்தை உண்டுபண்ணுகின்றபோது அதை அஞ்ஞானம் என்றும் ஒரே மாயைத்தான் அனேகவிதமாக குறிப்பிடப்படுகிறது. ஆகவே மாயை என்ற ஒன்றே விப்ரமத்தை உண்டுபண்ணக்கூடிய அநிர்வசனீயமான ஒரு சக்தியாக இருக்கிறது என்றே அறியவேண்டும். இந்தக் காரணத்தினுலேயே மாயாவி

என்று ஈச்வரனையும், ஜீவனை அஞ்ஞன் என்றும் ப்ராந்தன் என்றும் அப்ராந்தன் என்றும் பலவிதம் சொல்லப்படுகிறது. இதில் விரோதம் ஏதுமில்லை.

**95.** அவதாரிகை : 'மாயா' என்றபதம் வேதத்தில் உபயோகிக்கப்படுகிறது. அந்த மாயா சப்தம் லோகத்தில் என்ன அர்த்தத்தை தெரிவிக்கின்றதோ அந்த அர்த்தம் வைதிக சப்தமான மாயைக்கு பொருந்தாது. ஏனெனில் வேதத்திலுள்ள சிலசப்தங்கள் அதன் ஸமீபத்திலுள்ள பதங்களைக் கொண்டே அர்த்தம் செய்யப்படுகிறது. அதாவது 'யூபம்' என்ற பதத்திற்கு அதன் ஸமீபமுள்ள 'எட்டுபட்டைகளுடையமரம்' என்ற வாக்யத்தினுல் அறியப்படுகிறது. அதேபோல் இந்த இடத்தில் வேதசப்தமான 'மாயை' என்பதற்கு அர்த்தம் வேறு என்றே சொல்லவேண்டும்.

ச்லோகம் :

न च प्रसिद्धार्थपदान्तराणां प्रयोगसांनिध्यवशेन शक्तिः ।
ग्रहीष्यतेऽस्येति समञ्जसं स्यादलौकिके शब्द इदं हि युक्तम्

ச்லோகார்த்தம் : ப்ரசித்தமான அர்த்தமுடைய வேறுபதங்களின் ப்ரயோக ஸான்னித்யத்தினுல் மாயா பதத்தின் சக்திக்ரஹிக்கப்படுகிறது என்று சொல்வது சரியல்ல. ஏனெனில் அலௌகிக சப்த விஷயத்தில்தான் இந்தந்யாயம் பொருந்தும்.

வ்யாக்யானம் : 'மாயாந்து ப்ரக்ருதிம் வித்தி மாயினந்து மஹேச்வரம்' என்று தெரிவித்தபிறகு' ஏஷஸர்வேச்வர:ஏஷஸர்வஞ்ஞ: ஏஷபூதாதிபதி: ஏஷ்பூதபால:" என்று ஈச்வரனுக்கு விசேஷணம் சொல்லப்படுகிறது. இந்த விதம் மாயாவிசிஷ்ட்ட ஈச்வரன் ஸர்வஞ்ஞனுகவும் இருக்கின்றதால் மாயை என்பதற்கு அஞ்ஞானம் என்று அர்த்தம் செய்வது சரியல்ல. அதனுல் ஈச்வர உபாதி அஞ்ஞானம் என்று சொல்லமுடியாது.

சித்தா : வேதத்தில் ஏதோ ஒரு சில பதங்களுக்கு ஸமீபத்திலுள்ள பதங்களைக்கொண்டு அர்த்தம் செய்யப்படுகிறது என்பதற்காக எல்லாபதங்களுக்கும் அவ்விதமே அர்த்தம் செய்யவேண்டுமென்று சொல்வது சரியல்ல. மாயா பதத்திற்கு சக்தி என்ன, வ்யாப்தி என்ன, என்று முன்பே விசாரித்து அஞ்ஞானம்தான் அர்த்தம் என்று தீர்மானிக்கப்பட்டது. ஆதலால் யூபம், ஆஹவனீயம், என்ற பதங்கள் எல்லாம் வேதத்தையன்றி வேறு எதனுலும் அறிந்து கொள்ளமுடியாது. அதுபோல் மாயா சப்தத்திற்கு வேதத்தைக் கொண்டுதான் அர்த்தம் அறியப்படவேண்டும் என்று சொல்லமுடியாது.

**96.** அவதாரிகை : மேலும் இந்த விஷயம் பற்றி விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

अयं तु मायेति न शब्द एवमलौकिको लौकिक एव तस्मात् ।
यदर्थवाची जगति प्रसिद्धस्तमेव वेदेऽपि स वक्ष्यतीह

ச்லோகார்த்தம் : இந்த மாயா சப்தமானது லௌகிக சப்தமாகவே இருக்கிறது. ஆகையால் அது அலௌகிக சப்தமாக ஆகாது. எந்தசப்தமானது எந்த அர்த்தத்தை

தெரிவிக்கின்றது என்று எது லோகப்ரசித்தமாக இருக்கின்றதோ அந்தசப்தம் அதே அர்த்தத்தையே வேதத்திலும் தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** மாயா சப்தம் அலௌகிகமில்லை, லோகத்திலும் ப்ரசித்தம்தான். "ய ஏவலௌகிக:சப்த: தஏவவைதிக:" என்று லோகவேதாதிகரணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. யூபம் முதலான சப்தம் போல் லோக ப்ரசித்தம் இல்லையென்று சொல்லப்படுமானால் ஜைமினியினால் சொல்லப்படும், 'ய ஏவ லௌகிக:' என்ற வாக்யத்திற்கு விரோதமாக ஆகும்.

**97.** **அவதாரிகை :** மாயாசப்தம் லௌகிக அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்றாலும் கூட, அதைவிட்டு வேறு அர்த்தமும் செய்யப்படலாமே? அதனால் எந்த விரோதமும் ஏற்படாது. ஏனெனில் சிலபதங்களுக்கு பல அர்த்தங்கள் இருக்கின்றதால், அதுபோல் வேறு அர்த்தம் சொல்லலாமே? அதாவது,

**ச்லோகம் :**

ननूद्भिदादेर्यदि नाम लोके प्रसिद्धमर्थान्तरवाचकत्वम् ।
तथाऽपि भावार्थनिपीडितस्य विजानते कर्मणि शक्तिमस्य

**ச்லோகார்த்தம் :** லோகத்தில் 'உத்பித்' முதலான பதங்கள் அதனுடைய அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்பது ப்ரசித்தமாக இருக்கிறது. ஆனாலும் தாத்வர்த்த ஸம்பந்தத்தினால் தன்னுடைய லௌகிகார்த்தத்தை த்யாகம் செய்கின்ற அந்த உத்பித் என்றபதத்திற்கு யாகம் (கர்மா) என்பதில் ஸம்பந்தம் இருப்பதாக மீமாம்ஸகர்களால் சொல்லப்படுகிறதே?

**வ்யாக்யானம் :** 'உத்பிதாயஜேத' சித்ரயா யஜேத' என்ற பலவாக்யங்கள் வேதத்தில் சொல்லப்படுகின்றது. இதில் 'உத்பிதா' என்றபதம்யோகவ்யுத்பத்தியினால் 'உத்பித்' என்ற சப்தம், ஊர்த்வம்பித்வா ஆகச்சதி இதி என்று உத்பித் என்றுசொல்லப்படுமானால் மண்வெட்டி என்றும் மரம் என்றும் (வ்ருக்ஷம்) அர்த்தம் கிடைக்கும். அதேபோல் 'சித்ரயா' என்றபதம் 'அனேகவர்ணம்' என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றது. இவைகளையே லௌகிகசப்தம் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் இருந்தபோதிலும் உத்பித், சித்ரயா, என்பது போன்றபதங்கள் வேதத்தில் யாகம் முதலானகர்மாவுடன் சேர்த்து ப்ரயோகம் செய்யப்படுகிறது. அதனால் இந்தபதம் யாகம் என்ற கர்மாவையே குறிக்கின்றது என்று ஜைமினியினால் வ்யவஸ்த்தாபனம் செய்யப்பட்டிருக்கின்றது. அதேபோல் மாயா சப்தம் என்பது லௌகிகப்ரயோகம் செய்யப்பட்டிருந்தபோதிலும் வேதத்தில் வேறு அர்த்தம்சொல்லப்படலாமே? என்றால் 'உத்பிதாயஜேத' 'சித்ரயா யஜேத' என்றும் சொல்லப்படும் வாக்யங்கள் மீமாம்ஸா சாஸ்திரத்தை அனுசரித்து உற்பத்திவிதி, விசிஷ்டவிதி, குணவிதி, என்பது போன்ற பல விதிகள் சொல்லப்படுகிறது. இதில் "தத்னேந்த்ரியகாம:ஜுஹ்யாத்" என்று சொல்லப்படும் வாக்யம் விதிக்கப்பட்ட யாகம் என்பதை அனுவாதம் செய்து அதில் ததி என்பது குணமாக விதிக்கப்படுகிறது. இதுவே குணவிதி என்று சொல்லப்படுகிறது. (விதிக்கப்பட்ட யாகத்தில் ததியினால் ஹோமம் செய்யவேண்டுமென்பது குணவிதி)

இதேபோல் 'ஸோமேனயஜேத' என்ற வாக்யம் ஸோமலதையிலிருந்து எடுத்த ரஸத்தைக் கொண்டுயாகம் செய்யவேண்டுமென்று விதிக்கின்றது என்ற அர்த்தமும் சொல்லலாம். ஸோமம் என்பது யாகத்தின் நாமா என்றும் சொல்லலாம். இவ்விதம் சொல்லப்படும் இரண்டு அர்த்தங்களில் எந்த அர்த்தம் அந்தவாக்கயத்திற்கு எடுத்துக்கொள்வது என்ருல், லக்ஷணையைக்கொண்டு ஸோமலதையுடன் கூடிய கர்மா என்ற அர்த்தத்தையே எடுத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் சொல்லப்படும் லக்ஷணே, மத்வர்த்தலக்ஷணே என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் அர்த்தம்செய்வதைத் தவிர வேறு எந்த அர்த்தமும் இந்த இடத்தில் பொருந்தாது என்பதால் இந்தவிதம் தீர்மானிக்கப்படுகிறது. ஆகவே 'ஸோமேனயஜேத' என்ற வாக்யம் விசிஷ்டவிதி என்று சொல்லப்படுகிறது.

இதுபோல் 'உத்பிதா யஜேத' 'சித்ரயா யஜேத' என்ற இடத்தில் வேறு அர்த்தம் சொல்ல தேவையில்லே. ஏனெனில் உத்பித் என்பது கர்ம நாமதேயம், யாகத்தின் பெயர் என்று சொல்லாவிடில், உத்பித் என்பதால் கோடலியைக் கொண்டுயாகம் செய்' என்ற அர்த்தம் சொல்லப்படுவது பொருந்தாது. அதனுல் உத்பித், சித்ரா என்ற பதங்கள் யாகம் என்ற கர்மாவுடன் சேர்த்துக் சொல்லப்படுமானுல் அது கர்மநாம தேயம் என்று சொல்லப்படுவதில் உள்ள உத்பித், சித்ரா என்ற பதங்களுக்கு யோகவ்யுத்பத்தியைக் கொண்டு வ்ருக்ஷம் என்றும், பலவர்ணமுள்ள பசுவென்று (சித்ராகௌ) சொல்லப்படுவது போல், "யஜேத என்ற பதம் சேர்ந்திருக்கும் இந்த பதங்களுக்கு லோகப்ரசித்தமான இந்த அர்த்தம் பொருந்தாது. அதனுல் யோகவ்யுத்பத்தியினுல் கிடைக்கின்ற அர்த்தத்தை விட்டுவேறு அர்த்தம் செய்யவேண்டும் என்று சொல்வதற்குரிய காரணங்கள் இந்த பதங்கள் இரண்டிற்கும் இருக்கின்றது. அதனுல்தான் உத்பிதாயஜேத, சித்ரயாயஜேத என்ற வாக்யங்களிலுள்ள உத்பித், சித்ரா என்றபதங்கள் இரண்டிற்கும் கர்மாவில் தான் சக்திக்ரஹம் என்று தீர்மானிக்கவேண்டிய அவச்யம் ஏற்படுகிறது.

**98.** அவதாரிகை : குணவிதி என்று சொல்லப்படுமானுல் வைரூப்யம் ஏற்படுகிறது என்றும் விசிஷ்டவிதி என்று சொல்லப்படுமானுல் மத்வர்த்தலக்ஷனே என்று சொல்லவேண்டும். ஆகையால் 'உத்பிதாயஜேத' சித்ரயாயஜேத என்ற வாக்கியத்திலுள்ள உத்பிதா, சித்ரா, என்ற பதங்கள் கர்மநாமதேயம் என்று சித்தாந்தம் செய்யப்பட்டிருக்கின்றது. இதுபோல் மாயா சப்தார்த்தம் என்பது லௌகீக ப்ரயோகத்தில் ஒரு அர்த்தம், வேதத்தில் வேறு ஒரு அர்த்தம் என்று சொல்லவேண்டிய அவஸ்யம் ஏதுமில்லே.

ச்லோகம் :

सत्यं न गत्यन्तरमस्ति तत्र ततस्तथा निश्चितमत्र नैवम् ।
मायागिरोऽज्ञाननिवेदनेऽपि न काचिदत्रानुपपत्तिरस्ति

ச்லோகார்த்தம் : ஸத்யம், அந்த இடத்தில் வேறு வழியே கிடையாது என்பதால் அவ்விதம் நிச்சயிக்கப்பட்டிருக்கிறது. ஆனுல் இங்கு அவ்விதம் இல்லே. மாயாபதமானது அவித்யை என்பதை தெரிவிக்கின்றது என்று சொல்லபடுவதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லே (அனுப்பத்தி ஏதுமில்லே)

வ்யாக்யானம் : 'உத்பிதாயஜேத பசுகாம': என்ற வாக்யம் குணவிதி என்று சொல்லப்படுமானால், குண அபேக்ஷையினாலோ, பல அபேக்ஷையினாலோ அர்த்தம் சொல்லப்படவேண்டும். அந்த வாக்யத்திலுள்ள 'உத்பிதா' என்ற பதத்திற்கு குணம் என்று அர்த்தம் செய்யப்படுமானால் உத்பிதா என்ற குணத்திற்கு இந்தயாகம் ப்ரதானமென்றாகும். பசுகாம : என்ற பலத்தை உத்தேசித்து அர்த்தம் செய்யப்படுமானால் யாகம் என்பது குணம் என்று ஆகும். இதனால் யாகம் என்ற ஒரே வஸ்து விசேஷணமாகவும் விசேஷ்யமாகவும் இருக்க முடியாது. ஆனால் விருத்தத்ருகத்வயதோஷம் ஸம்பவிக்கின்றது. இவ்விதம் விருத்தத்ருகத்வயத்தினால் வித்யாஸம் ஏற்படுகிறது. (வைரூப்யமம்) (ஒரேயாகம் ப்ரதானமாகவும், குணம் அங்கமாகவும் இருக்கமுடியாது) அதனால் 'உத்பிதா' என்பது குணவிதி என்று சொல்ல முடியவில்லை. ஏனெனில் 'ஸோமேனயஜேத என்ற வாக்யத்திற்கு மத்வர்த்தலக்ஷணையை ஒத்துக் கொண்டு அர்த்தம் செய்யப்படுகிறது. (வேறு எந்தவிதமாகவும் அர்த்தம் செய்யமுடியாததால் இந்தவிதம் தான் அர்த்தம் செய்யப்படவேண்டும் என்பதே மத்வர்த்தலக்ஷணை அதனால் விசிஷ்டவிதி என்றும் சொல்லமுடியாது. மேலும், ஸோமபதம் ப்ரசித்தமானஅர்த்தத்தையே தெரிவிக்கின்றது. அதுபோல் உத்பிதா முதலான பதங்களுக்கு அர்த்தம் சித்தம் என்று சொல்லமுடியாது 'உத்பித்' என்ற பதம் யோகவ்யுத்பத்தியைக்கொண்டு வ்ருக்ஷம் என்றும் கோடலி என்றும் இரண்டு அர்த்தம் சொல்லலாம் (ரூடார்த்தமாக இல்லாததால் எந்த அர்த்தமும் சொல்லலாம் வ்யவஸ்திதயாக இதுதான் அர்த்தம் என்று குறிப்பிட்டுச் சொல்லமுடியாது). இந்தவிதம் உத்பிதா பதத்திற்கு அர்த்தம் ப்ரசித்தமாக இல்லாததால் வ்யவஸ்திதமான அர்த்தம் சொல்லமுடியாது என்பதால் விசிஷ்டவிதியும் ஸம்பவிக்காது, குணவிதியும் ஸம்பவிக்காது. ஆகையால் வேறு எந்த மார்க்கமும் இல்லாததால் அவைகள் கர்மநாமதேயம் என்றே தீர்மானிக்கப்படுகிறது. அதுமட்டுமல்ல, 'உத்பிதாயஜேத' என்ற வாக்யத்தில் உள்ள 'உத்பிதா' என்ற பதம் 'யஜ்' தாதுவுடன் ஸமானமாகவே சொல்லப்படுவதால் கர்ம நாமதேயம் என்றே சொல்லப்படவேண்டும்.

(குறிப்பு : இந்த வாக்யத்தில் விருத்தத்ருகத்வயம் என்ற தோஷம் எப்படிஸம்பவிக்கின்றது என்றால், "உத்பிதா யஜேத பசுகாம:" என்ற வாக்யம் குணவிதி என்று சொல்லப்படுமானால் இவ்வித தோஷம் ஸம்பவிக்கின்றது. உத்பித்என்ற ஸாதனத்தைக் கொண்டு இந்த வாக்யத்திற்கு அர்த்தம் செய்யப்படுமானால் யாகம் என்பதும் உத்தேச்யம் என்றாகிறது. அதாவது யாகம் என்பதை உத்தேசித்து, அதை அனுவாதம் செய்து ஸாதனம் விதிக்கப்பட்டதாக ஆகின்றது. அதனால் யாகம் என்பது ப்ரதானம் என்றாகிறது. இந்தவிதம் குணவிதிபக்ஷத்தில் 'யாகம்' என்பதற்கு, உத்திச்யமானத்வம், அனூத்யமானத்வம், ப்ரதானத்வம் என்று முதல் த்ருகம் (ஸம்பவிக்கின்றது) ஏற்படுகிறது. இதேவாக்யம் பசுகாம: என்ற பலத்தை உத்தேசித்து யாகம் என்பதை விதிக்கின்றது என்று (யாகவிதி) சொல்லப்படுமானால், 'யாகம்' என்பது விதேயம் என்றும், (பலத்திற்காக விதிக்கப்படுகிறது) உபாதேயம் என்றும் (பலத்திற்காக செய்யப் படவேண்டியது என்றும்) சொல்லப்பட்டதாக ஆகிறது. இந்த பக்ஷத்தில் யாகம்அப்ரதானம் என்றாகிறது. இந்தவிதம் யாகம் விதிக்கப்படும் பக்ஷத்தில் விதீயமானத்வம் உபாதேயத்வம் அப்ரதானத்வம் என்று இரண்டாவது த்ருகம்

ஏற்படுகிறது. இந்தவிதம் ஒரேவாக்யத்தில் ஒரேயாகம் என்பதில் இரண்டு விதமானத் ருகங்கள் ஒன்றுக்கொன்று விருத்தமாக ஏற்படுகின்றதால் விருத்த த்ருகத்வய தோஷம் ஸம்பவிக்கின்றது. (இந்த விருத்த த்ருகத்வய தோஷம் பற்றி முதல் அத்யாயத்தில் 456 வது ச்லோகம் முதல் 460வதுச் ச்லோகம் வரை விளக்கப்பட்டிருக்கிறது.)

**99. அவதாரிகை :** 'மாயாசப்தம்' அஞ்ஞானம் என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமானுல், மாயை என்பது ஈச்வர சக்தியாக இருக்கின்றதால், ஈச்வரனுக்கு ஸர்வஞ்ஞுத்வம் முதலானவைகள் இருப்பதாகச் சொல்லப்படுவது பாதிக்கப்படுகிறதே ?

**ச்லோகம் :**

अज्ञानं जडशक्तिमात्रवपुषा सर्वेश्वरस्येष्यते सर्वज्ञत्वविरोधि तत्र च भवेदुक्तप्रकारेण नः ।
सर्वज्ञेश्वरसंश्रया भवति सैवाज्ञानमाया श्रुतौ तस्मादुद्भिदिवेति वर्णनमिदं वैषम्यदुष्टं तव

**ச்லோகார்த்தம் :** அஞ்ஞானம் என்பது ஜடசக்தி ரூபத்தில் பரமேச்வரனை சேர்ந்தது என்று ஒத்துக்கொள்ளப்படுகிறது. ஆகையால் முன் சொல்லப்பட்டபடி எங்கள் மதத்தில் இது பரமேச்வரனுடைய ஸர்வஞ்ஞுத்வத்திற்கு விரோதமாக ஆகாது. இந்த அஞ்ஞானரூபமான மாயையே ஸர்வஞ்ஞுன பரமேச்வரனை ஆச்ரயித்திருக்கின்றதென்று ச்ருதியினுல் சொல்லப்படுகிறது. அதனுல் மாயாபதம் 'உத்பித்பதம்போல்' என்ற உன்வர்ணனம் வைஷம்யதோஷம் உடையதாகிறது.

**வ்யாக்யானம் :** ஜீவேச்வர விபாகம் அற்றசின்மாத்ரஸ்வரூபத்தையே ஆச்ரயமாகக்கொண்ட அஞ்ஞானம் என்பது, கேவலஅஞ்ஞானமாத்ரமாக இருக்கின்றபோது ஈச்வரனிடம் சொல்லப்படும் ஸர்வஞ்ஞுத்வாதிதன்மைகளுக்கு விரோதம் ஏதுமில்லை. அஞ்ஞானமானது அதன் கார்யமான அந்த:கரணம் என்ற உபாதியுடன் கூடி இருக்கின்ற ஜீவனிடம், உள்ள ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களின் தாரதம்யத்தினுல் கிஞ்சிக்ஞுத்வம் முதலான தன்மைகள் ஏற்படுகிறது. ஆகையினுல், அவித்யா மாத்ரமாக ஈச்வனிடம் இருக்கின்றபோது சைதன்யம் ப்ரகாசமாத்ரமாக இருக்கின்றது என்பதால் ஸர்வஞ்ஞுத்வாதி தன்மைகளுக்கு பாதம் கிடையாது. ஜீவனிடம் அவித்யையென்பது அந்த:கரணமென்ற கார்யரூபமாக ஆகின்றபோது அது ஜீவ உபாதியாக ஆகிறது. அதனுல் கிஞ்சிக்ஞுத்வாதி தன்மைகள் அஞ்ஞானம், அதன் கார்யம் என்ற அந்த:கரணம் என்ற உபாதி கிடையாது. அதனுல் அஞ்ஞானலக்ஷணமான ஆவரணம்விக்ஷேபம் கிடையாது என்று சொல்லவேண்டியதாக இருக்கிறது. அப்படியானுல் அஞ்ஞானத்தைக்காட்டிலும் வேறு என்றுதானே சொல்லவேண்டும் ? என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது, மாயாச அவித்யாச ஸ்வயமேவ பவதி என்று ச்ருதிவாக்யமே இரண்டும் ஒன்று என்றே தெரவிக்கின்றது..அதுமட்டுமல்ல, ஈச்வா உபாதி வேறு ஜீவ உபாதி வேறு என்று சொல்வதற்குரிய ப்ரமாணம் ஏதுமில்லை. அஞ்ஞானம் என்பது ஜடசக்தி மாத்ரமாக கிஇருக்கின்றபோது, புத்தி முதலான ஸஹகாரி எதுவும் இல்லாததால் ஈச்வர ஞானமென்பது ஆவரணம் செய்யப்படுவதில்லை. இவ்விதம் சொல்லபடுவதற்காக அஞ்ஞானலக்ஷணம் மாயைக்கு இல்லையென்று சொல்லமுடியாது. ஸர்வஞ்ஞுன ஈச்வரனை ஆச்ரயமாகக்கொண்டமாயை என்பதே அஞ்ஞானம்

இரண்டிற்கும் பேதம் என்பது கிடையாது. அதனுல் 'உத்பிதாயஜேத' சித்ரயாயஜேத' என்பது போன்ற வாக்யங்களின் த்ருஷ்ட்டாந்தம் விஷமத்ருஷ்ட்டாந்தம் இந்த விஷயத்திற்கு பொருந்தாது.

**100.** அவதாரிகை : அஞ்ஞானத்தில் மட்டுமே மாயா சப்தப்ரயோகம் செய்யப்படுகிறது என்ருல் மாயை, அவித்யை என்ற இரண்டும் ஒன்று என்று எப்படி சொல்வது?

ச்லோகம் :

मायाऽनिर्वचनीयमेव तु तमो मायाविनो गीयते द्रष्टृणां भ्रमकारणं विषयता मायाविता तस्य तु ।
तं हस्त्यादिविकल्पनाघटितवन्मूढाशया जन्तवो रज्जुं सर्पतयेव तद्विरहितं जानन्त्यबुद्धत्ववत्

ச்லோகார்த்தம் : பார்க்கின்றவர்களுக்கு ப்ராந்தியை ஏற்படுத்தக்கூடியதும் அநிர்வசனீயமாக இருக்கின்றதுமான அவித்யையே மாயாவியின் மாயை என்று கூறப்படுகிறது. இதன் விஷயமாக இருப்பதே மாயாவியின் மாயாவித்தன்மை. ஸர்ப்பமாக இல்லாதகயிற்றை ஸர்ப்பம் என்று பார்க்கின்றதுபோல் மூடர்களாக இருக்கின்ற ஜனங்கள் அஞ்ஞானத்தினுல் யானைமுதலான விகல்பங்கள் அவற்றவனுன மாயாவியை விகல்பமுடையவனுக அறிகின்ருர்கள்.

வ்யாக்யானம் : மாயாவியினுடைய மாயை என்பது, அதனுல் சிருஷ்டிக்கப்படுவைகளை பார்க்கின்றவனுக்குத்தான் ப்ரமத்தை உண்டுபண்ணுகின்றது. ஆனுல் அந்த மாயாவிக்கு ப்ரமத்தை உண்டுபண்ணுவதில்லை. அநிர்வசனீயமான தமஸ் என்ற இந்த அஞ்ஞானமே மாயாவியின் மாயை என்று சொல்லப்படுகிறதேயன்றி மாயை என்பதற்கு வேறு அர்த்தம் ஏதும் இல்லை. அந்த அஞ்ஞானமே அந்த:கரணம் என்ற உபாதியுடன் கூடி ப்ரமத்திற்கு காரணமாக ஆகின்றது. கேவல அஞ்ஞானம் ப்ரமகாரணமில்லை. ஆகவே கேவல அஞ்ஞானமேமாயை என்றும், இந்த நிலையில் அந்த அஞ்ஞானத்திற்கு விஷயம் மாயாவி என்றும் சொல்லப்படுகிறது. (அந்த நிலையில் அஞ்ஞானத்திற்கு விஷயம் மாயாவி என்றும் சொல்லப்படுகிறது. அந்த நிலியில் அஞ்ஞான ஆச்ரயம் என்று சொல்லப்பட வில்லை.) த்ரஷ்ட்டாவின் அஞ்ஞானத்திற்கு மாயாவி விஷயமாகின்ருன். மாயாவிக்கு ப்ராந்தி இல்லையென்றபோதிலும் அவனும் ப்ராந்தனென்றே த்ரஷ்ட்டா நினைக்கின்ருன். இவ்விதம் நினைப்பதும் ப்ராந்திதான்.

வாசஸ்பதி மதத்தில் அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்று சொல்லப்படுகிறது. ஜீவர்கள் அனேகம், அதேபோல் அஞ்ஞானமும் அனந்தம் என்றும், அவரவர்களை ஆச்ரயித்தே அந்தந்த அஞ்ஞானம் இருக்கின்றது என்று சொல்கிருர்கள். இவ்விதம் அஞ்ஞானம் ஜீவாச்ரயம் என்றும், அதற்கு விஷயம் ப்ரஹ்மமென்றும் சொல்லப்படுகிறது. ஜீவாச்ரயமான இந்த அஞ்ஞானமே அவர்களுக்கு உபாதியாக இருக்கின்றதால் அவரவர்களுக்கு ஏற்படும் ப்ராந்தியும் அவரவர்க்கே ஏற்படுகிறது என்றும் ஆனுல் ப்ரபஞ்சம் என்பது மட்டும் எல்லா ஜீவர்களுக்கும் ஒன்ருகதோன்றுவதற்கு என்னகாரணம் என்ருல் ஸர்வ ஜீவர்களின் அவித்யையும் ஒன்ருகச் சேர்ந்து ஜாக்ரத்ப்ரபஞ்சத்தை விஷயமாகக் கொண்டிருக்கின்றது என்றும் இந்தநிலையில் அதற்கு மாயை என்று பெயர் என்றும் ஜீவனை ஆச்ரயமாகக் கொண்டிருப்பதால் அஞ்ஞானம் என்றும் இரண்டிற்கும் வித்யாஸம் இருக்கின்றதென்று சொல்கிருர்கள். முக்குணத்தோடுகூடிய இந்த மாயை

ஒவ்வொரு குணவிசேஷத்திஞல் ஈச்வரனிடம் பலதன்மைகள் ஏற்படுகிறது. அதஞல் ஈச்வரன் அந்தர்யாமி என்றும் சொல்லப்படுகிருன் ஸமஷ்டி அஞ்ஞானமென்ற கூட்டத்திஞல் ஸாமான்ய ப்ரபஞ்சம் உண்டாகின்றது. அந்த கூட்டத்திஞல் வ்யஷ்டிஜீவனின் (தனிப்பட்ட) அஞ்ஞானமும் சேர்ந்திருக்கின்றது. அதஞல் ப்ரபஞ்சம் எல்லோருக்கும் ஒன்ருகவே அறியப்படுகிறது என்ருலும், ரஜ்ஜுஸர்ப்பம்போன்ற ப்ராந்திஞானம் அவரவர்க்கு தனிப்பட்ட அஞ்ஞானத்திஞல் தோன்றுகிறது என்று சொல்லப்படுமாஞல் அதுவேலாகவம். இவ்விதம் சொல்லப்படுவதால் தனிப்பட்டவரின் அஞ்ஞானத்திஞலும் ப்ரபஞ்சம் தோன்றலாம் என்றும், அதுவே ப்ரபஞ்சத்திற்கு காரணம் என்றும் சொன்ஞலே போறுமானது. ஸமஷ்டி அஞ்ஞானம் காரணம் என்று சொல்லத்தேவையில்லை. இந்த விதம் சொல்லப்படுமாஞல் எல்லோராலும் ஒன்ருகத்தானே க்ரஹிக்கப்படவேண்டும். என்ற தோஷத்திற்கும் இடமில்லை. அதேபோல் ஒருவனுக்கு அஞ்ஞானம் நிவர்த்திக்குமாஞல் மற்றவர்களுக்கும் முக்தி ஏற்படவேண்டுமே என்ற கேள்விக்கும் இடமில்லை. பல நூல்களைச் சேர்த்து ஆரம்பிக்கப்படும் ஒரு வஸ்த்திரம், துண்டுதுண்டாக ஆகின்றபோது, ஒரு துண்டில் இருக்கின்ற நூல் நாசத்தை அடைந்தாலும் கூட மற்றவைகளில் உள்ளநூல்நாசமடைவதில்லை. அதேபோல்அவரவர் அஞ்ஞானநாசத்தைப் பொறுத்தே பந்தம், முக்தி என்பது ஏற்படுகிறது என்று சொல்வதுதான் மிக்க எளிது.

**101.** அவதாரிகை : மேலும் அஞ்ஞானரூபம் என்னவென்பதை விளக்குவதன் மூலம் மாயை என்பது அஞ்ஞானத்தைக்காட்டிலும் வேறல்ல என்று காரணத்துடன் தெரிவிக்கப்படுகிறது.

ச்லோகம் :

**सम्यग्ज्ञानबलेन तं विरहितं हस्त्यादिभिर्यत्क्षणे जानीयुस्तदनन्तरं न स भवेद्धस्त्यादियुक्तः पुमान् ।**
**तेनास्मत्तम एव तत्र विषये मायाऽस्तु मायाविनः सोऽज्ञातो वयमज्ञकोटिपतिता मायी स तेनोच्यते**

**ச்லோகார்த்தம் :** எந்த க்ஷணத்தில் ஸம்யக்ஞானத்திஞல் யானை முதலானவைகள் அற்ற மாயாவியை அறிந்து கொள்கிருர்களோ அதன்பிறகு மாயாவியான யானை முதலானவைகள் அற்றவஞகிருன். அதஞல் நம்மிடம் இருக்கின்ற அவித்யையென்பதே மாயாவியை விஷயமாகக்கொள்கின்றபோது மாயை என்று சொல்லப்படுகிறது. மாயாவியே அஞ்ஞாதஞக இருக்கிருன். நாம் அஞ்ஞர்களாக இருக்கின்றதால் அவன் (அஞ்ஞாதன்) மாயீ என்று சொல்லப்படுகிருன்.

**வ்யாக்யானம் :** மாயாவியிஞல் தோற்று விக்கப்படும் விஷயங்கள், மறுபடியும் அந்த மாயாவியிஞலேயே மறைக்கப்படுகிறது. அதன்பிறகு மாயாவி மட்டுமே நமக்கு அறியப்படுகிருன். இவ்விதம் மாயைக்கு அதிஷ்ட்டானமான மாயாவியின் ஞானம் ஏற்படுகின்றபோது மாயை, அதன் கார்யம் எல்லாமே நிவர்த்திக்கின்றது. அதஞல் முன்ஞல் ஏற்பட்ட ஞானம் ப்ராந்தி ஞானமேயன்றி உண்மையான வஸ்து ஞானமில்லை. இதஞல் ஸ்ம்யக்ஞானம் ஏற்படுகின்றபோது மாயாகார்யங்கள் அற்றவஞக இருக்கிருன். ஆகவே த்ரஷ்ட்டாவின் அஞ்ஞானமே மாயை. இந்தஅஞ்ஞானம்மாயாவியை விஷயமாகக் கொண்டிருக்கின்றபோது அதற்கு மாயை என்று பெயர். த்ரஷ்ட்டாவான நம்முடைய

அஞ்ஞானமே மாயாவியை விஷயமாகக் கொண்டிருப்பதால் மாயை என்பது அஞ்ஞானத்தையன்றி வேறில்லை. இவ்விதம் விஷய விஷயீ ஸம்பந்தத்தைக் கொண்டே ஐந்த்ரஜாலிகனை மாயாவி என்று சொல்லப்படுகிறது.

**102.** அவதாரிகை : இவ்விதம் சொல்லப்படுமானால் அதிப்ரஸங்க தோஷம் ஸம்பவிக்கின்றதே ?

**ச்லோகம் :**

नन्वेवं सति रज्जुखण्डलकमप्यज्ञातमज्ञानिभिर्मायावीति गिरोच्यतां न तु तथा लोके प्रसिद्धिः क्वचित् ।
तेनाज्ञातविलक्षणत्वमुचितं मायाविनो लौकिका मायावीति पुमांसमेव निपुणं येनाऽऽहुरत्यादरात्

**ச்லோகார்த்தம் :** இவ்விதம் சொல்லப்படுமானால் அஞ்ஞாதமாக இருக்கின்ற கயிறு என்பதும் அஞ்ஞானிகளால் மாயாவி என்ற பதத்தினால் சொல்லப்படவேண்டும். அவ்விதம் லோகத்தில் ஓரிடத்திலும் ப்ரசித்தமில்லை. ஆகவே, அஞ்ஞாதவஸ்துவிலிருந்து வேறான ஒருவனையே மாயாவி என்று சொல்வதே பொருந்தும். ஏனெனில் லௌகிகஜனங்களும் நிபுணனாக இருக்கின்ற ஒரு புருஷனையே மாயாவி என்று நிச்சிதமாக தெரிவிக்கின்றார்கள்.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானத்திற்கு விஷயமாக லோகத்தில் அனேகவஸ்துக்கள் இருக்கின்றது. உதாரணமாக ஒரு துண்டுக் கயிற்றைமறைக்கின்ற அஞ்ஞானத்தை மாயை என்றும், துண்டுக் கயிற்றை மாயாவி என்றும் சொல்லநேரிடுமே ? அவ்விதம் லோகத்தில் ஒருவராலும் சொல்லப்படவில்லை. அதனால் அஞ்ஞானவிஷயமாக இருப்பதால் மாயாவி என்று சொல்வது சரியல்ல. இல்லாத ஒருவஸ்துவை இருப்பது போல் காண்பித்து மற்றவர்களை ஏமாற்றுகிறவனே மாயாவி என்று சொல்லவேண்டும்.

அஞ்ஞாதமான வஸ்துவைக் காட்டிலும் வேறுபட்ட (விலக்ஷண) தன்மையில் இருப்பவனேமாயாவி என்று சொல்லவேண்டும். அஞ்ஞானவிஷயத் வம்மாயாவி என்று சொல்வது சரியல்ல.

**103.** அவதாரிகை : மாயை அஞ்ஞானம் என்ற இரண்டும் ஒன்றேதான் என்றாலும், இரண்டிற்கும் வைலக்ஷண்யம் இருக்கின்றது என்பதால், அதற்கு ஸமாதானம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

नैवं भ्रान्तिनिमित्तकारणमयं संगृह्य पूर्वक्षणे मन्त्रादिप्रचुरं प्रयत्नजनितं तज्जीवने वर्तते ।
तेनात्रैव तु लोकरूढिरभवन्मायावितागोचरा यद्वद्ब्राह्मणताप्रसिद्धिरभवन्मुक्त्वा परिव्राजकान्

**ச்லோகார்த்தம் :** முன்னால் சொல்லப்பட்டது சரியல்ல. மாயாவியானவன் மந்தரம் முதலானவைகளுடன் கூடியதும், தன்ப்ரயத்னத்தினால் உண்டாகிறது மானப்ராந்திகாரணத்தை தன்வசம் வைத்துக்கொண்டு அதனால் ஜீவிக்கின்றான், அதனால் இப்பேர்ப்பட்ட புருஷனே மாயாவி சப்தத்திற்கு விஷயமாகலோகப்ரசித்தமாக இருக்கின்றான், எவ்விதம் துறவியாக இல்லாதக்ருஹஸ்த்தன் ப்ராஹ்மண சப்தத்திற்கு விஷயமாகின்றானோ அது போல் இந்த விஷயத்திலும் அறிந்து கொள்ள வேண்டும்.

வ்யாக்யானம் : அஞ்ஞானத்திற்கு விஷயமாக இருப்பதற்காக மட்டும் மாயாவி என்று சொல்லப்படவில்லை. புத்தி பூர்வமாக நம்முடைய அஞ்ஞானத்தில் கலக்கத்தை ஏற்படுத்து பவனே அஞ்ஞானத்திற்கு விஷயமாகின்ற மாயாவி என்று சொல்லப்படுகிறது.

பூர்வ : ரஜ்ஜு என்பது ஸர்ப்பம்போல இருக்கின்ற காரணத்தினுலேயே புத்தியில்கலக்கம் ஏற்படுகிறது. அதனுல் சாத்ருச்யாத் ரஜ்ஜுவையும் அஞ்ஞானவிஷயம் மாயாவி என்று சொல்லலாமே?

சித்தா : ரஜ்ஜு வென்பது சாத்ருச்யத்தினுல் ஸர்ப்பமாக தோன்றினுலும், அந்தரஜ்ஜு ப்ரயத்னம் செய்து நமக்கு ப்ரமத்தை உண்டுபண்ணுவதில்லை. புத்தி பூர்வகமாகமணிமந்த்ராதிகளை உபயோகப்படுத்தி எவன் அஞ்ஞானத்தில் கலக்கத்தை உண்டு பண்ணுகின்றுனே அவனையே மாயாவி என்று சொல்லப்படுகிறது. நமக்குப்ரமம் ஏற்படுவதற்கு முன்க்ஷணம் ப்ரயத்னம் செய்து ப்ரமத்தை உண்டு பண்ணுகிறுன். அதுபோல் ரஜ்ஜு என்பதை பார்க்கின்ற போதெல்லாம் ஸ்ர்ப்பம் என்று நியதமாக ப்ரமம் ஏற்படுகிறது என்று சொல்லமுடியாது. தெய்வகதியாய் ஏதோ ஒரு சூழ்நிலையில் மந்தாந்தகாலம் போன்றகாரணங்களால் ப்ரமம் ஏற்படுகிறது. ஆகவே மணி முதலானவைகளைக் கொண்டு அஞ்ஞானத்தில் கலக்கத்தை உண்டுபண்ணுகின்றதால் மாயாவி என்று அஞ்ஞானவிஷயமாக இருந்தாலும் இந்த புருஷனையே மாயாவி என்று சொல்கிறேம். உதாரணமாக ப்ராஹ்மணன் என்ற சப்தம் க்ருஹஸ்த் தனையும் குறிக்கின்றது. ஸன்யாசியையும் குறிக்கின்றது. ப்ராஹ்மணத்வம் என்பது இரண்டுபேருக்கும் பொதுவாக இருந்தபோதிலும் ப்ராஹ்மணத்வ பதம் க்ருஹஸ்த்தனையே குறிக்கின்றது. அதுபோல் 'மாயாவி' என்றசப்தம் அஞ்ஞான விஷயமான இந்தரஜாலக்காரனையே குறிக்கின்றது. ரஜ்ஜு ஸர்ப்பாதிகளை குறிப்பிடவில்லை. ஜாதி அபிமான முடையவர்கள்தான், தன்னை ப்ராஹ்மணன் என்று சொல்லிக் கொள்கின்றதால் அது ப்ரசித்தமாக இருக்கின்றது. அதேபோல் மாயாவி சப்தமும் ப்ரசித்தமாக இருக்கிறது. மாயாவியை எப்படி அஞ்ஞானவிஷயம் என்று சொல்லப்படுகிறதோ அதுபோல் மற்ற ஜடவஸ்துக்களையுமம் அஞ்ஞானவிஷயம் என்றே சொல்லப்படுகிறது.

**104.** அவதாரிகை : லோகத்தில் மாயாசப்தமும் அஞ்ஞானசப்தமும் ஒன்றே என்று சொல்லப்படுவது சரியே என்றுலும் ச்ருதிகளிலும், சூத்ரங்களிலும் சொல்லப்படும்மாயை, அஞ்ஞானம் என்ற இரண்டு சப்தங்களுக்கும் அர்த்தம் ஒன்ரு, வேரு, என்ற கேள்விக்கு பதில் என்ன? என்றுல்,

ச்லோகம் :

एवं तावल्लोकसिद्धा न माया मिथ्याज्ञानाद्भिद्यतेऽतश्च तत्र ।
शक्तिव्यवाप्तिप्रत्ययौ वर्णयित्वा वेदाल्लिङ्गाच्चान्यमायात्वसिद्धिः

ச்லோகார்த்தம் : இவ்விதம் ப்ரசித்தமான மாயையானது அநிர்வசனீயமான அவித்யைக்காட்டிலும் வேருகஇல்லை. ஆகையால் மாயாசப்தத்தின் சக்தி ஞானம் (எதுமாயாகார்யமோ அது அவித்யாகார்யம் என்ற) வ்யாப்திஞானம் என்ற இரண்டையும்

ப்ரதிபாதனம் செய்து ச்ருதியினுலும் யுக்தியினுலும், மற்றமுள்ள ஆகாசாதி ப்ரபஞ்சமும் மாயாமயம் என்றே சாதிக்கவேண்டும்.

வ்யாக்யானம் : லோகத்திலும், வேதத்திலும், மாயை, அஞ்ஞானம் என்றபதங்களுக்கு அர்த்தம் ஒன்றுதான். லோகத்தில் மாயாசப்தம் எப்படி சக்தி வ்யுத்பத்தியைக் கொண்டு அஞ்ஞானம் என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றதோ அதேபோல் த்ருச்யமெல்லாம் மித்யை என்றவ்யாப்தியைக் கொண்டும் அஞ்ஞானம் என்பதே அர்த்தம் என்று அறியப்படுகிறது. அதேபோல் வேதத்திலும் சக்தி, லிங்கம் இவைகளைக் கொண்டு அஞ்ஞானம், மாயை என்ற இரண்டிற்கும் அர்த்தம் ஒன்றே என்று அனுமானத்தினுல் சாதிக்கின்றோம்.

**105.** அவதாரிகை : முன்னுல் சொல்லப்பட்ட விஷயமே மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

जाग्रद्भूमौ या प्रसिद्धेह माया निर्णीता सा तावदज्ञानमेव ।
तस्यां शक्तिव्याप्तिविज्ञानसिद्धेर्विज्ञातव्या सैव वेदानुमानात्

ச்லோகார்த்தம் : ஜாக்ரத் அவஸ்த்தையில் ப்ரசித்தமாக எந்தமாயை இருக்கின்றதோ அது அஞ்ஞானமேயாகும். மாயாபதத்தின் சக்திஞானம் (எது மாயாகார்யமோ அது அவித்யாகார்யம் என்ற) வ்யாப்திஞானம் என்ற இரண்டும் ஏற்பட்டிருப்பதால் அனுமானத்தினுலும், வேதப்ரமாணத்தினுலும் மாயையே அவித்யை என்று அறியப்பட வேண்டும்.

வ்யாக்யானம் : வேத, அனுமானம் என்று ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. இந்த விதம் 'வேத அனுமானம்' என்ற பதம் ஸமாஹாரத்வந்த்வஸமாஸத்தில் ஏகவசனமாக சொல்லப்பட்டிருக்கிறது. ஆனுலும் வேதத்தினுலும் அனுமானத்தினுலும் என்று அர்த்தம் செய்துகொள்ளவேண்டும்.

**106.** அவதாரிகை : ஸ்வப்னம் என்பதும், ஸ்வப்னத்தை பார்க்கின்றவன் (ஸ்வப்னத்ருக்) அஞ்ஞானம்தான் என்பதை 'மாயாமாத்ரம்து' என்ற (ப்ரஹ்ம 3.2.3) சூத்ரக்காரரின் வசனமும் தெரிவிக்கின்றது. அஞ்ஞானமாத்ரம் என்று சொல்லாமல் மாயர்மாத்ரம் என்று சொல்லப்படுகிறது. ஏனெனில்,

ச்லோகம் :

स्वप्नेऽप्येवं स्वप्नदृङ्मोहमात्रादन्या काचिन्न प्रसिद्धाऽस्ति माया ।
तत्रैवायं सूत्रकारस्य तस्मान्मायाशब्दो वर्तते नापरत्र

ச்லோகார்த்தம் : இவ்விதமே ஸ்வப்னத்திலும், ஸ்வப்னத்ரஷ்ட்டாவின் அவித்யையைத்தவிர, வேறு ஒரு மாயை என்பதுப்ரசித்தமாக இல்லை. ஆகையால் சூத்ரகாரரின் மாயாசப்தமானது அவித்யை என்ற அர்த்தத்தில்தான் சொல்லப்படுகிறதே யன்றி அதைத்தவிர வேறு எந்த அர்த்தத்திலும் சொல்லப்படவில்லை.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் என்பதை தன் வசபடுத்துகின்றவனேயே மாயாவி என்றும், அந்தஅஞ்ஞானத்தினால் கலக்கத்தை அடைபவனேயே அஞ்ஞானி என்றும் சொல்லப்படுகிறது. மாயை என்பது எப்படி வச்யமோ அதுபோல் அஞ்ஞானம் என்பதும் வச்யமாக இருக்கின்றதால் மாயை அஞ்ஞானம், என்ற இரண்டும் ஒன்றே என்று சொல்லப்படுகிறது. அதனாலேயே அஞ்ஞானம் என்பது மாயாசப்தத்தினால் சொல்லப்படுகிறது. பரமேச்வரமாயை என்பதும் லோகத்தில் எந்தஅர்த்தத்தில் மாயாசப்தம் குறிப்பிடப்படுகிறதோ அதே அர்த்தத்தில்தான் ச்ருதி சூத்ரம் எல்லாவற்றிலும் ப்ரயோகம் செய்யப்படுகிறது. மாயாசப்தத்தின் சக்திஎன்பதும் வ்யாப்தி என்பதும் கூட ஈச்வர -சைதன்ய வசப்பட்டு இருக்கின்றதால் ப்ரத்யக் சைதன்யமே ஆச்ரயமாகவும், அதுவே அதற்கு விஷயமாகவும் இருக்கின்றது. அதனால் வேதத்திலும், மாயை, அஞ்ஞானம் என்ற இரண்டிற்கும் வேறு அர்த்தம் எதுவும் சொல்லமுடியாது. வேதாதி கரண ந்யாயத்தினால் லோகத்தில் அஞ்ஞானஸ்வரூபமாக இருக்கின்ற விஷயங்களில் மாயாசப்தப்ரயோகம் இருப்பதாலும் அஞ்ஞான கலக்கத்தினால் ஏற்படுவதெல்லாம் மித்யைதான் என்றவ்யாப்தி இருக்கின்றதாலும், அதேபோல் மாயை என்ற விஷயத்திலும் சக்தி வ்யாப்தி என்ற இரண்டும் அஞ்ஞானத்தைப் போன்றே இருக்ககின்ற காரணத்தினால் இரண்டும் ஒன்றே என்று சித்திக்கின்றது. ஆகவே, வேதவாக்யத்தினாலும், லிங்கத்தினாலும், ப்ரமாணத்தைக்கொண்டும், த்வைதமாக தோன்றுகின்ற இந்தப்ரபஞ்சம், சைதன்யத்தையன்றி வேறாக இல்லை என்பதால் த்வைதம் என்பதும், லோகத்தில் மாயாமயமான யானை, குதிரை முதலானவை எப்படி மித்யையோ, அதுபோல் மித்யை என்று அனுமானத்தினாலும் சித்திக்கின்றது.

107. அவதாரிகை : ஆகேவ, சூத்ரகாரர் 'அஞ்ஞானமாத்ரம்து' என்று சொல்லாமல் **'மாயாமாத்ரம்து' என்று சொல்லப்படுவதற்கு காரணம் என்னவென்றால், ப்ரயோஜனத்தை உத்தேசித்து இவ்விதம் சொல்லப்படுகிறது என்பதை மேலே விளக்கப்படுகிறது.**

**ச்லோகம் :**

शक्तिव्याप्तिप्रत्ययौ कारयिष्यन्स्वप्ने स्थित्वा प्रत्यगज्ञानमात्रे ।
मायावाचा लोकवत्सूत्रकारो वेदं लिङ्गं चोपनेतुं प्रवृत्तः

**ச்லோகார்த்தம் :** 'மாயாமாத்ரம்' என்ற சூத்ரத்தினால் வ்யாஸாசார்யார்ஸ்வப்னத்தை ஆச்ரயித்து லௌகிக வ்யவஹாரத்தில் (எது மாயாகார்யமோ அது அவித்யாகார்யம் என்ற) வ்யாப்தியைக் கொண்டு தெரிவிப்பதற்கு முயற்சிக்கின்றார். அதன் மூலம் லௌகிக வ்யாவஹாரத்தில் எவ்விதமோ அவ்விதமே வேதத்திலும் மாயாபதத்தின் சக்திப்ரத்யக் அஞ்ஞானத்தினால்தான் என்ற ஞானத்தையும் எது மாயாகார்யமோ அதுவே அவித்யாகார்யம் என்ற வ்யாப்திஞானத்தையும் ஏற்படுவதற்கு முயற்சிக்கிறார்.

**வ்யாக்யானம் :** மாயாசப்தத்தின் சக்தியானது அஞ்ஞானத்தினால்தான் இருக்கின்றது. த்ருச்யத்வம் முதலான என்ற லிங்கங்கள், அவித்யாகார்யம் என்ற இவை இரண்டிற்கும் வ்யாப்தி இருக்கின்றது. இவ்விதம் தெரிவிப்பதன் மூலம் லோகசித்தமான ஸ்வப்ன, ஜாகரிதவிஷயங்கள் அவித்யாகார்யம் என்று தெரிவிக்கின்ற விஷயத்தில் 'மாயாம்து' என்ற ச்ருதிவாக்யமும், த்ருச்யத்வாதிலிங்கமும் ப்ரமாணமாகின்றது.

இந்த விதம் தெரிவிப்பதற்காகவே ஸ்வனப்ன விஷயம் என்பது மாயா சப்தத்தினுல் தெரிவிக்கப்படுகிறது.

அதாவது, லோகத்தில் ப்ரசித்தமானமாயாசப்தத்தினுல் சொல்லப்படுவதெல்லாம் எப்படி மித்யையோ அதுபோல் ஸ்வப்னம் என்பதும் மித்யை என்றே சொல்லப்படுகிறது. அதேபோல் ஜாக்ரத் என்பதும் அவித்யாகார்யம் (ஆவிந்த்யகம், என்பதால் ஜாக்ரத் என்பதும் மித்யைதான் என்று தெரிவிப்பதற்காக மத்ய அவஸ்த்தையான ஸ்வப்னம் என்பதை ஜீவனுடைய அஞ்ஞானம் என்று சொல்லாமல் சூத்ரகாரர் மாயை என்ற சப்தத்தை ப்ரயோகம் செய்து தெரிவிக்கின்ருர். இதனுல் மாயை, அஞ்ஞானம் என்ற இரண்டிற்கும் சக்தியைக் கொண்டும் வ்யாப்தியைக் கொண்டும் இரண்டும் ஒன்றே என்பதை தெரிவிக்கின்ருர். ஆகவே மாயாசப்தத்திற்கு அஞ்ஞானத்தில்தான் சக்தி. மாயாகார்யம் என்பது எல்லாம் த்ருச்யத்வாத் மித்யையாகவே இருக்கின்றது. அதேபோல் அஞ்ஞானகார்யம் என்பதும் (யத்த்ருச்யம் தந்மித்யா என்ற வ்யாப்தியின்படி) த்ருச்யமாக இருப்பதால் மித்யை என்ற வ்யாப்தியைக் கொண்டு இரண்டும் ஒன்றே என்று. தீர்மானிக்கப்படுகிறது. இந்த விதம் விசாரிக்கப்பட்டதிலிருந்து லோகத்தில் எப்படி மாயாசப்தத்திற்கு அஞ்ஞானத்தில் சக்தியோ அதேபோல் வேதத்திலும் அர்த்தம் என்றே சொல்லவேண்டும் என்பது சித்தம்.

**108.** அவதாரிகை : மாயை என்பதும் அஞ்ஞானம் என்பதும் மறைக்கின்ற தன்மையுடையது என்பதால் இரண்டும் ஒன்றே என்று பகவானுலும் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

अज्ञानावरणमावरणं च माया सर्वेश्वरेण हरिणा दृढमप्यधायि ।
चैतन्यवस्तुन इति प्रतिपद्यमाना तत्त्वं तदेकमिति निश्चयतः प्रतीमः

ச்லோகார்த்தம் : அஞ்ஞானம் சைதன்யவஸ்துவிற்கு ஆவரணம் என்றும் அதோபோல் மாயை என்பதும் சைதன்யவஸ்துவிற்கு ஆவரணம் என்றும் ஸர்வேச்வரனுன கீதாசார்யனுல் நிச்சயமாக சொல்லப்பட்டிருக்கிறது. இதை அறிந்த நாங்களும் இவை இரண்டும் (ஒன்றே) ஒரே தத்வம்' என்று த்ருடமாக அறிந்து கொண்டிருக்கிருேம்.

வ்யாக்யானம் : சைதன்யம் அஞ்ஞானத்தினுல் மறைக்கப்படுகின்றது என்று பகவானுல் சொல்லப்படுகிறது. அதாவது 'அஞ்ஞானேன ஆவ்ருதம் ஞானம் என்றும், 'ந மாம் துஷ்க்ருதின:மூடா:ப்ரபத்யந்தே நராதமா:மாயையா அபஹ்ருத ஞானு ஆசுரம் பாவமாச்ரித: என்றும் ஸர்வஜனரக்ஷகனுகவும், ஆப்தனுகவும் இருக்கின்ற பகவானுலேயே சொல்லப்பட்டிருக்கின்றது. அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்ட காரணத்தினுல் என்னே அறியாத மூடர்களாய் இருக்கிருர்கள் என்றும், மாயையினுல் என் ஸ்வரூபம் மறைக்கப்பட்டிருக்கிறதென்றும் சொல்லப்படும் பகவத் வசனமே ப்ரமாணமாக இருக்கின்றது. ஆகவே, மாயை என்பதும் அஞ்ஞானம் என்பதும் ஒன்றே என்ற த்ருடநிச்சயம் ஏற்படுகிறது.

**109.** அவதாரிகை : மேலும் அஞ்ஞானம் என்பதும் மாயை என்பதும் ஞானத்தினுலேயே நிவர்த்திக்கப்படுகிறது என்றும் பகவானுலேயே சொல்லப்படுகிறது. ஆகவே இரண்டும் ஞானநிவர்த்யம் என்று சொல்லப்படுவதாலும் இரண்டும் ஒன்றே என்று அறியப்படுகிறது.

ச்லோகம் :

ज्ञानं निवर्तकमपि द्वितयस्य तस्य गीतागतः करुणया भगवानुवाच ।
तेनापि तत्त्वमिदमेकमिति प्रतीति-रानीयते कथितलक्षणतुल्यभावात्

ச்லோகார்த்தம் : ஞானம் என்பதனுல் இவை இரண்டும் நிவர்த்திக்கின்றது என்று கீதாசார்யனுன பகவான் கருணையுடன் சொல்லியிருக்கின்ருர். அதனுலும் முன்பு சொல்லப்பட்ட லக்ஷணத்தின் ஐக்யத்தைக் கொண்டும் இவை இரண்டும் (ஒன்று) ஒரே தத்வம் என்ற ஞானம் ஏற்படுகிறது.

வ்யாக்யானம் : 'ஞானேனது ததஞ்ஞானம் யேஷாம் நாசிதமாத்மன: என்றும் மாமேவயேப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்திதே!' என்ற பகவத் வசனத்திஞல் அஞ்ஞானம், மாயை என்ற இரண்டும் ஞானநிவர்த்யம் என்றே தெரிவிக்கின்றதால் இரண்டிற்கும் ஸ்வரூபபேதம் கிடையாது என்பது அறியப்படுகிறது. விப்ரமத்திற்கு காரணமான அநிர்வாச்யமான மாயை என்று தெரிவித்து அதுவே அஞ்ஞானம் என்றும் தெரிவிக்கின்றது. இவ்விதம் இரண்டிற்கும் லக்ஷணம் ஒன்ருக இருப்பதால் இரண்டும் ஒன்றே என்று அறியவேண்டும்.

**110.** அவதாரிகை : மேலும், பகவத்வாக்யம் இதே கருத்தை தெரிவிக்கின்றது.

ச்லோகம் :

नाहं प्रकाश इति तावदनेन मायाऽज्ञानेन चाऽऽवृतमितीतरदप्यभाणि ।
मामेव ये तु परमं पुरुषं प्रपन्ना ज्ञानेन तु प्रभृतिना च धिया निवृत्तिः

ச்லோகார்த்தம் : 'நாஹம்ப்ரகாச'; என்ற வாக்யத்தில் பகவானுல் மாயை என்பதை ஆவரணமாகச் சொல்லப்பட்டது "அஞ்ஞானேன ஆவ்ருதம்" என்ற வாக்யத்தில் அஞ்ஞானம் (ஆவரணம்) என்று சொல்லப்பட்டது. 'மாமேவயேப்ரபத்யந்தே' 'ஞானேனது' என்ற வாக்யங்களினுல் இவை இரண்டும் ஞானத்திஞல் நிவர்த்திக்கின்றது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

வ்யாக்யானம் : 'நாஹம்ப்ரகாச : ஸர்வஸ்ய யோகமாயாஸமாவ்ருத: என்ற (கீதா 7 : 25) வாக்யம் யோகமாயையினுல் மறைக்கப்பட்டிருப்பதால் என் ஸ்வரூபத்தை யாரும் அறியவில்லையென்றும் 'அஞ்ஞானேன ஆவ்ருதம் ஞானம் தேனமுஹ்யந்தி ஐந்தவ:' என்றும் (கீதா 5.25) அஞ்ஞானம் ஆவாரகம் என்று தெரிவிக்கின்றது. இதேபோல், 'மாமேவ யேப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே' (கீதா 7.14) என்றும் 'ஞானேன துததஞ்ஞானம் யேஷாம் நாசிதமாத்மன : (கீதா 5.16) என்பது போன்ற வாக்யங்களால் ஞானத்திஞல் அஞ்ஞான நிவர்த்தி ஏற்படுகிறது என்றும், என்னை பஜிக்கின்றவர்கள் மாயையை தாண்டுகிருர்கள் என்றும் இரண்டும் சைதன்ய ஆவாரகமாக இருக்கிறதென்பதையும் இரண்டும் ஞானநிவர்த்யம் என்றும் சொல்லப்படுவதால் இரண்டும் ஒன்று என்றே சொல்லப்படுகிறது.

**111.** அவதாரிகை : இந்தவிதம் இரண்டிற்கும் அபேதம் சொல்லப்பட்ட போதிலும், மாயை என்பது பாவரூபம், அஞ்ஞானம் என்பது அபாவரூபம் என்பதால் இரண்டும் ஒன்றே என்று எப்படிச் சொல்வது ?

ச்லோகம் .

ज्ञानस्य प्रागभावादपरमभिहितं प्रत्यगज्ञानमेतत्संसारव्याधिबीजं कथितनयवशादेव बुध्यस्व बुद्ध्या ।
ज्ञानेनाज्ञाननाशं कथयति भगवानेष गीतागतः सन्न ज्ञानात्प्रागभावक्षय इति घटते तत्क्षये तत्प्रसूतेः

ச்லோகார்த்தம் : ஸம்ஸாரவ்யாதியின் பீஜமாகச் சொல்லப்படும் இந்த ப்ரத்யக் அஞ்ஞானம் என்பது, ஞானப்ராக பாவத்திலிருந்து வேறுபட்டது என்பதை முன்னால் சொல்லப்பட்ட காரணங்களைக் கொண்டே இதை விவேகத்துடன் அறிந்துகொள்ள வேண்டும். கீதாசார்யனான பகவான் ஞானத்தினால் அஞ்ஞான நாசத்தை தெரிவிக்கின்றார். ஞானத்தினால் ஞான ப்ராகபாவம் நாசமாகிறது என்று சொல்வது பொருந்தாது. ஏனெனில் ஞானப்ராக பாவநாசம் ஏற்பட்டால்தான் ஞானம் ஏற்படும்.

வ்யாக்யானம் : அஞ்ஞானம் என்பது ஞான அபாவம் என்று சொல்லமுடியாது என்பதை பகவானுடைய வசனத்தினாலும் யுக்தியினாலும் விளக்கப்பட்டிருக்கிறது. அபாவமாக இருக்குமானால், எந்த வஸ்துவையும் மறைக்கமுடியாது. அதேபோல் ஞானஅபாவம் என்பது ஞானத்தினால் நிவர்த்திக்கிறது என்றும் சொல்லமுடிாயது.

பூர்வ : அஞ்ஞானம் என்பது பாவரூபம் என்றும் ஞான ப்ராக பாவமில்லை என்றும் எப்படி சித்திக்கிறது ?

சித்தா : ஞானம் என்பதும், அதன் ப்ரதியோகியான ஞான அபாவம் என்பதும் இரண்டும் ஒரேஸமயத்தில் ஓரிடத்தில் இருக்கமுடியாது. ஞானம் இருக்கின்றபோது ஞான ப்ராகபாவம் இருக்க முடியாது. ஞான ப்ராகபாவம் இருக்குமானால் ஞானம் இருக்கமுடியாது. ஆகவே ப்ராகபாவம் நிவர்த்திக்கப்பட்டால்தான் ப்ரதியோகியான ஞானம் ஏற்படமுடியும். அதனால் ஞானப்ராகபாவம் ஞான நிவர்த்யம் என்று சொல்வதற்கு முடியாது.

ச்லோகத்தில் 'க்ஷயே' என்று சப்தமி அர்த்தத்தில் சொல்லப்பட்டிருந்த போதிலும் ஷஷ்டி அர்த்தமே சொல்லப்படவேண்டும். ஞான ப்ராகபாவமான அஞ்ஞானத்தின் க்ஷயம் என்பது ஞானத்திலிருந்தே உண்டாகின்றதால் ஞான ப்ராகபாவத்தின் நிவர்த்தி என்பதே ஞானம் என்று சொல்லவேண்டும். அதனால் அதைத்தவிர வேறாக ப்ராகபாவம் என்பது (வேறுபட்டதாக) இருக்க முடியாது.

ஆகேவ ஞானப்ராகபாவத்தையன்றி வேறாக அஞ்ஞான பதவாச்யமாக பாவரூபமான வஸ்துவையே ஒத்துக்கொள்ளப்படவேண்டும். அவ்விதம் ஒத்துக்கொண்டதால்தான், ஞானம் ஏற்பட்டவுடன் அஞ்ஞானம் நிவர்த்திக்கின்றது என்று சொல்லமுடியும். பகவத் வசனமும் ஞான நிவர்த்யம் அஞ்ஞானம் என்றே தெரிவிக்கின்றது. அதனால் அஞ்ஞானம் பாவரூபம் என்றே சித்திக்கின்றது.

**112.** அவதாரிகை : ப்ரஸங்கவஸாத் விசாரிக்கப்பட்ட இந்த விஷயம் முடிவிற்கு கொண்டுவரப்பட்டது. இப்போது ப்ரக்ருத விஷயம் பற்றி தெரிவித்து முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

ச்லோகம் :

मायामात्रमतः समस्तमभवत्स्वप्ने प्रसिद्धं दृशः कर्तृत्वादि तमोमयं वितथमेवाज्ञानमात्रं यतः ।
तस्माज्जागरितेऽपि चैतदभवत्स्वाभाविकं यत्पुनस्तादृक्षं तव सर्वदैव तु भवेत्स्वप्नेऽपि चैतन्यवत्

ச்லோகார்த்தம் : ஆகவே, ஸ்வப்ன வஸ்த்தையில் சைதன்யத்தில் சித்திக்கின்ற கர்த்ருத்வம் முதலானவைகள் எல்லாமே மாயாமாத்ரமாகும். தமோமயமான (கர்த்ருத்வாதிகள்) இவைகள் மித்யையேயாகும். ஏனெனில் இவைகள் அஞ்ஞான மாத்ரமேயாகும். ஆகையால் ஜாக்ரத் அவஸ்த்தையிலும் கர்த்ருத்வாதிகள் மித்யையேயாகும். அவ்விதமின்றி ஸ்வாபாவிகமாக இருக்குமானல், அவைகள் ஸ்வப்னம் முதலான எல்லா காலத்திலும் சைதன்யம் எவ்விதம் எல்லா காலத்திலும் தொடர்ந்து இருக்கிறதோ அவ்விதமே இருக்கவேண்டும்.

வ்யாக்யானம் : இந்தவிதம் சூத்ரகாரர், மாயாசப்த ப்ரயோகம் என்ற விஷயம் ப்ரஸங்க வஸாத் செய்யப்பட்ட விசாரம், இப்போது காத்ருத்வாதிகள் ஆத்மாவில் ஸ்வாபாவிகமில்லை என்ற ப்ரக்ருத விஷயம் பற்றி விளக்கப்படுகிறது. கர்த்ருத்வாதிகள் ஆத்மாவிற்கு ஸ்வாபாவிகம் என்று சொல்லப்படுமானல், ஜாக்ரத் காலத்தில் இருக்கின்ற கர்த்ருத்வாதிகள் ஸ்வப்னத்திலும் தொடர்ந்து இருக்கவேண்டும். அவ்விதம் இல்லையென்பதால் கர்த்ருவாதிகள் அஞ்ஞானகார்யம் என்றே அறியவேண்டும். ஸ்வப்னத்தில் அறியப்படும் கர்த்ருவாதி விவகாரங்கள் ஏல்லாம் ஒரு ஸமயம் இருந்து மற்றொரு ஸமயம் இல்லாமல் இருக்கின்றதால் அவைகளை மாயாகார்யம் (அஞ்ஞானகார்யம்) என்று எப்படி சொல்லப்படுகிறதோ அதுபோல் ஜாக்ரத்காலத்தில் அறியப்படும் கர்த்ருத்வாதிகளும் மாயாமயம் என்றே அறிவேண்டும். எப்படி சைதன்யம் என்பது எக்காலத்திலும் தொடர்ந்து இருக்கின்றதோ அதுபோல் கர்த்ருவாதிகளும் தொடர்ந்து இருந்தால் தான் ஸ்வாபாவிகம் என்று சொல்லலாம்.

ஆகவே, ஜாக்ரத்முதலான அவஸ்த்தைகளிலும் ப்ரளயாவஸ்த்தையிலும் சைதன்யம் தொடர்ந்து இருக்கின்றது. ஆனல் ஜாக்ரத்முதலான அவஸ்த்தைகளின் விவகாரம், ஒரு அவஸ்த்தையில் இருப்பது மற்ற அவஸ்த்தைகளில் தொடர்ந்து இருப்பதில்லை. அதனல் கர்த்ருத்வம் முதலான ஸர்வவிவகாரங்களும் மாயாமயமேயன்றி ஸ்வாபாவிகமில்லை.

**113.** அவதாரிகை : கர்த்ருத்வம் முதலான விவகாரங்கள் ஒரு ஸமயம் இருந்து மற்றொரு ஸமயம் இல்லையென்பதற்காக அதுமித்யை என்று எப்படிச் சொல்வது ? கடம் என்பது சூளையில் வைத்து பக்குவம் செய்வதற்கு முன்பு கருப்பு நிறமாக இருக்கின்றது. அதற்காக கடத்தின் நிறம் மித்யை என்று சொல்லப்படுவதில்லை. அதுபோல் கர்த்ருத்வாதிகள் மித்யை என்று சொல்லமுடியாது. ஸ்வாபாவிகம் என்றே சொல்லலாம்.

ச்லோகம் :

सत्यप्यलुप्तचिति यत्त्वयि नास्ति कर्तृभोक्तृप्रमातृमुखमन्यदपीह किंचित् ।
जाग्रद्दशावगतमप्यखिलं न तत्ते स्वाभाविकं भवितुमुत्सहते विरोधात्

ச்லோகார்த்தம் : சுஷுப்தியில் அலுப்த சைதன்ய (கூடஸ்த்தசைதன்ய) ஸ்வரூபனுக இருக்கின்றபோது ஜாக்ரத்தசையில் அறியப்படுகின்ற கர்த்ருத்வம், போக்த்ருத்வம், ப்ரமாத்ருத்வம் முதலான எதுவும் இல்லை. அதனுல் அவைகள் எல்லாம் உன்ஸ்வாபாவிகம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் அது விருத்தமாகும்.

வ்யாக்யானம் : நித்யசைதன்ய ஸ்வரூபமான ஆத்மாவில் ஏதோ ஒரு ஸமயம் அறியப்படும் கர்த்ருத்வாதிகள் ஆத்மாவில் ஸ்வாபாவிகமாக இருக்க முடியாது. ஏனெனில், ஆத்மா கூடஸ்த்தமானதால் அதில் எவ்வித விகாரமும் ஏற்படமுடியாது. எந்த இடத்தில் தர்மங்கள் ஆகந்துகமாக (ஒரு ஸமயம் இருந்து மற்றெரு ஸமயம் இல்லாமல்) இருக்கின்றதோ அந்த தர்மங்கள் பாரமார்த்திகமாக இருக்க முடியாது. தர்மியான கடத்தில், முதலில் இருந்த கறுப்பு நிறம் என்பது நாசத்தை அடையாமல் சிகப்பு நிறம் என்பது ஏற்படமுடியாது. இவ்விதமாறுபாடுகள் ஸாவயவமான வஸ்துவில்தான் ஏற்படமுடியும். கூடஸ்த்தசைதன்ய ஸ்வரூபமான ஆத்மா, நித்யசைதன்ய ஸ்வரூபம். இவ்விதம் கூடஸ்த்தமாகவும் நித்யசைதன்ய ஸ்வரூபமாகவும், ஸத்யமாகவும் இருக்கின்ற உன்னிடத்தில் கர்த்ருத்வாதிகளோ, கார்யம் கரணம் என்பவைகளோ போக்யபோகாதிகளோ எதுவுமே உண்மையில் இருக்க முடியாது.

ஆகவே, ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதெய்விகம் என்றதுக்கத்ரயங்களுடன் கூடிய ஸர்வ விவகாரங்களும் ஜாக்ரத் காலத்தில் இருப்பதாக தோன்றிய போதிலும் அவைகள் ஆத்ம தர்மமல்ல. ஸர்வ அவஸ்த்தைகளிலும் நீ இருக்கின்ருய். ஆனுல் ஜாக்ரதாதி அவஸ்த்தைகளில் அறியப்படும் தர்மங்கள் எவையும் உன்னிடம் தொடர்ந்து இருப்பதில்லை. இவ்விதம் அறியப்படும் தர்மங்கள் வ்யபிசரிக்கின்றதால் அவைகள் உன்ஸ்வபாவமில்லை. ஸ்வாபாவிகமாக இருக்குமானுல் நீ இருக்கின்ற போதொல்லாம் இருக்கவேண்டும். அதனுல் கர்த்ருத்வம் முதலான ஸர்வமும் மித்யை என்றே அறியவேண்டும்.

**114.** அவதாரிகை :

ஸ்வாபாவிகமில்லை என்று எவ்விதம் அறியப்படுகிறது ? என்ருல், ஸ்வாபாவிகமாக இருந்தால் ஆகந்துமாக இருக்கமுடியாது. அனுகந்துமாக இல்லாததால் ஸ்வாபாவிகமில்லை என்ற வ்யாப்தியைக் கொண்டு அறியப்படுகிறது.

ச்லோகம் :

स्वाभाविकी हुतभुजः खलु नोष्णता तं जातु प्रमुञ्चति न तामपि जातवेदाः ।
एवं भवन्तमपि जागरितोपलब्धं स्वप्ने भवानपि च जागरितं न मुञ्चेत्

ச்லோகார்த்தம் : அக்னியினுடைய ஸ்வாபாவிகமான உஷ்ணத்வம் என்பது அக்னியை விட்டு ஒரு காலத்திலும் இருப்பதில்லை. அக்னி என்பதும் உஷ்ணத்வம் என்பதை எக்காலத்திலும் விடுவதில்லை. இவ்விதமே ஜாக்ரத் அவஸ்தையில் அறியப்படுகின்ற கர்த்ருத்வம் முதலானவைகள் ஸ்வாபாவிகமாக இருக்குமானுல் ஸ்வப்னத்திலும் உன்னைவிட்டு இருக்கமுடியாது. அதேபோல் நீயும் ஜாக்ரத் கர்த்ருத்வம் முதலானவைகளை ஸ்வப்னத்திலும் விடமாட்டாய்

**வ்யாக்யானம் :** அக்னி என்பது உஷ்ணம் என்ற தன்மையை விட்டு இருக்கமுடியாது. எது உஷ்ணமாக இருக்கின்றதோ அதுவே அக்னி என்பதால், அக்னிக்கு உஷ்ணம் ஸ்வபாவம் என்று சொல்கிறேம். ஸ்வாபாவிகம் என்ருல் அது ஆகந்துகமாக இருக்கமுடியாது. ஆகவே கர்த்ருத்வம் முதலான தர்மங்கள் உன்னிடத்தில் ஒருஸமயம் இருந்து மற்றெருஸமயம் இல்லாமல் இருப்பதால் அவைகள் உன்ஸ்வபாவமல்ல என்பது இவ்விதம் ஆகந்துகம் என்ற வ்யாப்தியைக்கொண்டே அறியப்படுகிறது.

**115.** அவதாரிகை :

'யானி ஹ்யேவ ஜாக்ரத்பச்யதி தானி ஸுப்த:' என்ற ப்ரஹ (4.3.14) ச்ருதிவாக்யம், ஜாக்ரத்தில் எதை பார்க்கின்ருனே அதையே ஸ்வப்னத்திலும் பார்க்கின்ருன் என்று தெரிவிக்கின்றதே ? என்ருல்,

**ச்லோகம் :**

स्वप्ने न जागरितमस्ति मृषात्वहेतोः स्वप्नस्य सत्यमिति जागरितं वदन्ति ।
स्वप्नस्य बाधनबलादनृतत्वमुक्तं तस्माच्चिदेव तव रूपमतोऽन्यदार्तम्

**ச்லோகார்த்தம் :** ஸ்வப்னம் மித்யை என்பதால் ஸ்வப்னத்தில் ஜாக்ரத் கர்த்ருத்வம் முதலானவை கிடையாது என்றும் ஜாக்ரத் என்பது ஸத்யம் என்றும் சொல்கிருர்கள் ஸ்வப்னம் என்பது ஜாக்ரத் காலத்திலேயே பாதிக்கப்படுகிறது என்பதால் ஸ்வப்னம் மித்யை என்று சொல்லப்படுகிறது. (ஜாக்ரத் ப்ரபஞ்சம் ப்ரஹ்மஞானம் ஏற்படும் வரை பாதிக்கப்படாது) ஆகையால் சைதன்ய ஸ்வரூபமான உன்ஸ்வரூபத்தையன்றி வேருனஸர்வமும் மித்யையே ஆகும்.

**வ்யாக்யானம் :** ஸ்வப்ன விவகாரம் ஜாக்ரத் விவகாரம்போல் இருப்பதாக அறியப்பட்டபோதிலும், ஸர்வமும் மாயாமாத்ரமே என்று கீழேயே சொல்லப்பட்டிருக்கிறது. ஜாக்ரத் விவகாரங்கள் ப்ரஹ்மஞானம் ஏற்பட்டால் தான் நிவர்த்திக்கின்றது. ஆனுல் ஸ்வப்னவிவகாரம் ஜாக்ரத் என்ற விழிப்பு நிலை ஏற்பட்டாலே நிவர்த்திக்கின்றது. ப்ரமாத்ருத்வம் இருக்கின்றபோதே ஸ்வப்னப்ரபஞ்சம் பாதிக்கப்படுகிறது. ஆனுல் ப்ரமாதா இருக்கின்றபோது ஜாக்ரத் ப்ரபஞ்சம் பாதிக்கப்படுவதில்லை. அதனுல்தான் வ்யாவகாரிக ஸத்யத்வம் ஜாக்ரத் விவகாரங்களுக்கு சொல்லப்படுகிறது. வ்யாவகார காலத்திலேயே பாதிக்கப்படுவதை (ஸ்வப்னம்) மித்யை என்று சொல்லப்படுகிறது. ஸ்வப்னகாலத்தில் அறியப்படும் கர்த்ருத்வாதிகள் மித்யை என்பதை ஜாக்ரத் காலத்தில் ப்ரசித்தமாக எல்லோராலும் அறியப்படுகிறது. இவ்விதம் லோகத்ருஷ்டியை அனுசரித்து ஜாக்ரத்தில் பாதிக்கப்படும் ஸ்வப்னம் அந்ருதம் என்று ஸந்தேஹத்திற்கு இடமின்றி விளக்கப்படுகிறது. இந்த விதமே ஜாக்ரத் விவகாரமும் ஸ்வப்னத்தில் இல்லையென்பதால் ஜாக்ரத் முதலான ஸர்வ அவஸ்த்தைகளும் ஆகந்துகம் என்பதால் அவைகளும் அந்ருதம் என்றே சித்திப்பதால் அவைகள் ஸ்வாபாவிகமில்லை. ஆகவே கூடஸ்த்த சிதேகரஸமான உன்ஸ்வரூபத்தையன்றி வேருக அறியப்படுவதெல்லாம் விநாசியாக இருப்பதால் ஸ்வாபாவிகமில்லை என்பது சித்திக்கின்றது.

**116.** அவதாரிகை : ப்ரமாத்ராதி விவகார ப்ரபஞ்சம் மித்யை என்று சொல்லப்படுமானால், ஸத்யமான ப்ரஹ்மஞானத்திற்கு எப்படி ஸாதனமாக ஆகமுடியும்? என்றால்,

ச்லோகம் :

स्वप्नोपलब्धमखिलं वितथं तथाऽपि तत्सूचयत्यवितथं परमार्थवस्तु ।
जाग्रद्दशावगतमप्यनृतं तथाऽपि तद्वत्तदप्यवगतिक्षममेव भूम्नः

ச்லோகார்த்தம் : ஸ்வப்னத்தில் அறியப்படுகின்ற ஸர்வமும் மித்யைதான். ஆனால், அந்த விஷயங்கள் அர்த்தக்ரியாகாரியான ஸத்யவஸ்துவை சூசகமாகத் தெரிவிக்கின்றது. அதேபோல் ஜாக்ரத்காலத்தில் அறியப்படும் விஷயங்கள் மித்யையாக இருந்த போதிலும் அவைகள் ப்ரஹ்மஞானத்தை உண்டாக்கக் கூடிய ஸாமர்த்யம் உடையதாக இருக்கிறது.

வ்யாக்யானம் : ஸ்வப்னம்போல் ஜாக்ரத் என்பதும் மித்யை என்று சொல்லப்படுமானால், ஸத்யமான தத்வஞானத்திற்கு எப்படி காரணமாக (ஸாதனமாக) ஆகமுடியும் என்றால், 'சூசகச்சஹிச்ருதே:ஆசக்ஷதே ச தத்தித:' என்ற (சூத்ர 3/2/4) சூத்ரத்தில் சொல்லப்படும் ந்யாயத்தைக் கொண்டு, ஸ்வரூபத : ஜாக்ரத் என்பதும் மித்யையாக இருந்தபோதிலும், ஸத்யார்த்தத்தை போதிக்கின்றது என்று சொல்லப்படுவதில் விரோதம் ஏதுமில்லை ஸ்வப்னத்தில் காணப்படும் விவகாரங்கள் எல்லாமே மித்யை என்றாலும், அவ்விதம் காணப்படுகின்ற ஸ்வப்ன விஷயங்கள்,, ஜாக்ரத்தில் ஏற்படும் சுபாசுப பலன்களை சூசகமாக தெரிவிக்கின்றது. அதேபோல் ஜாக்ரத்தில் அறியப்படும் ப்ரமாத்ராதி விவகாரங்கள் ஸத்யமான ப்ரஹ்மஞானம் ஏற்பட காரணமாக ஆகலாம்.

**117.** அவதாரிகை : ஜாக்ரத் மித்யை என்றால் ஸ்வப்னம் போல் பாதிக்கப்பட வேண்டுமே? ஜாக்ரத் மித்யையானாலும் அதற்கு பாதமில்லை என்று சொல்லப்படுமானால் ஸ்வப்னத்திற்கும் பாதமில்லை என்றே சொல்லவேண்டும்.

ச்லோகம் :

स्वप्नभ्रमोऽपि सुकृतादिनिबन्धनत्वात्तावत्परिस्फुरति यावददृष्टमस्ति
क्षीणे तु तत्र लयमेति जगन्निदाने गाढे तमस्यनुभवावगते प्रतीचः

ச்லோகார்த்தம் : ஸ்வப்னப்ரமம், புண்யபாப நிமித்தமாக ஏற்படுகின்றது. அதனால் எதுபர்யந்தம் அத்ருஷ்ட்டம் இருக்கின்றதோ அது பர்யந்தமே அந்த விஷயங்கள் காணப்படுகின்றது. (ஸ்புரிகின்றது) ஸ்வப்னபோக ப்ரதமான அத்ருஷ்ட்டம் க்ஷீணம் ஆகின்றபோது, ஜகத்காரணமாகவும் அனுபவ விஷயமாகவும் இருக்கின்ற காடமான (கும்மிருட்டு) ஆத்ம அஞ்ஞானத்தில் அவைகள்லயத்தை அடைகின்றது.

வ்யாக்யானம் : ஜாக்ரத் ஸ்வப்னம் என்ற இரண்டுமே புண்யாபுண்யகர்மாவைக் காரணமாகக் கொண்டு ஏற்படுகிறது. ஆனால் ஜாக்ரத், ஸ்வப்னம் என்ற இரண்டிற்கும் வித்யாஸம் இருக்கிறது. அதாவதுஜாக்ரத் போகப்ரதமானகர்மாவை, இந்த ஜன்மா முடிவு பெறும்பர்யந்தம் ஒரே சரீரத்தைக் கொண்டே அனுபவிக்கப்படுகிறது. ஆனால் ஸ்வப்னபோகத்திற்கு காரணமாக இருக்கின்ற கர்மாவினால், ஒவ்வொரு விதமான

ஸ்வப்னம் ஏற்படுகிறது. அதனுல் ப்ராதிபாஸிகமான வெவ்வேறு சரீராதிகளைக் கொண்டு ஸ்வப்னபோகம் அனுபவிக்கப்படுகிறது என்பது அனுபவத்தைக் கொண்டு ஒத்துக் கொள்ளப்படவேண்டும். மேலும் ஸ்வப்னத்தில் அனுபவிக்கப்படும் போகத்திற்கு காரணமான சுக்ருத் துஷ்க்ருத கர்மபலன் அல்ப்ப மாக இருக்கின்றதால் அவ்வப்போது அனுபவித்தவுடன் உபரதமாகிறது. அதனுல் அல்ப்பமான கர்மாவைக்காரணமாகக் கொண்ட ஸ்வப்னம் அல்ப்பகாலத்திலேயே நிவர்த்திக்கின்றது. அது மட்டுமின்றி தினந்தோறும் ஏற்படும் ஸ்வப்னங்கள் ஒன்றுக்கொன்று தொடர்ந்து ஏற்படாததால் வ்யவகாரகாலத்திலேயே மித்யை என்று பாதிக்கப்படுகிறது. ஜாக்ரத் விவகாரம் உயிருள்ளபர்யந்தம் தொடங்குகின்றதால், ஜாக்ரத் போகப்ரதமான கர்மா ஆயுள் பர்யந்தம் பாதிக்கப்படுவதில்லை என்பது எல்லோராலும் அறியப்படுகிறது. அதனுல் வ்யாவகாரிக ஸத்யத்வம் ஜாக்ரத் ப்ரபஞ்சத்திற்கு சொல்லப்படுகிறது. இவ்விதம் வ்யாவகாரிகமான ஜாக்ரத் என்பதும் ப்ராதிபாஸிகமானஸ்வப்னம் என்பதும் சுஷுப்தி அவஸ்த்தையில் காரணமான அஞ்ஞானத்தில்லயத்தை அடைகிறது. ஆனுல் பூர்வகர்ம ஸேஷமான ப்ராரப்தத்தினுல் மறுபடி ஜாக்ரத் ஏற்படுகின்றபோது முந்தின ஜாக்ரத் விவகாரத்திற்கும் மறுபடி சுஷுப்தியிலிருந்து விழித்தவுடன் ஏற்படும் விவகாரத்திற்கும் தொடர்பு இருக்கிறது. இவ்வித ஒற்றுமை ஸ்வப்னவிவகாரத்தில் கிடையாது. இந்த விதம் ஜாக்ரத் போக ப்ரதமான கர்மா ஸ்வப்னபோகப் ப்ரதமான கர்மா என்ற இரண்டும் அந்தந்தகர்மக்ஷயம் ஆகும் பர்யந்தமே இருக்கின்றது என்ருலும் இரண்டிற்கும் காலம் என்பதில் சிறிது வித்யாஸம் இருந்தபோதிலும் இரண்டுமே அதன் காரணமான அஞ்ஞானத்திலேயேலயத்தை அடைகிறது. காரணம் இருந்து அதில் கார்யம் லயம் அடையுமானுல் அதை நிவர்த்தியென்று சொல்கிருேம். காரணத்துடன் சேர்ந்து கார்யம் நாசமாகுமானுல் அதை பாதம் என்று சொல்கிருேம். ஆகவே, அந்தந்த போகப்ரதமான கர்மா பலனை கொடுத்த பிறகே நாசத்தை அடைகிறது. ஆனுல் ஜகத் காரணமான அவித்யையில்தான் இரண்டும் லயத்தை அடைகிறது. அதாவது சுஷுப்தியில் சாக்ஷியினுல் ப்ரகாசப்படுத்தப்படுகின்ற அவித்யா ப்ரதிபிம்பமான ஆபாஸஸ்வரூபத்தில் ஜாக்ரத் ஸ்வப்னம் என்ற இரண்டும் லயத்தை அடைகின்றது. ஆகவே, காம கர்மங்களுக்கு காரணமான அவித்யையில் சூக்ஷ்ம ரூபேண இருக்கின்றதால் ஜாக்ரத் ஸ்வப்னத்திற்கு நிவர்த்தி சொல்லப்படலாமேயன்றி இரண்டிற்கும் பாதம் சொல்லமுடியாது. இந்தவிதம் ஜாக்ரத் ஸ்வப்னங்களுக்கு சிறிது வித்யாஸம் இருந்தபோதிலும் ப்ரஹ்மஞானம் ஏற்படுகின்றபோது எல்லாமே பாதிக்கப்படுகிறது. அதனுல் எல்லாமே மித்யை என்று அறியவேண்டும். இவ்விதம் ஸ்வப்னம் போல் ஜாக்ரத் என்பதும் ஸ்வரூபத: மித்யை என்ருலும், எப்படி ஸ்வப்னமானது ஜாக்ரத்விவகாரம் என்ற ஸத்யார்த்தத்திற்கு சூசகமாக ஆகின்றதோ அதுபோல் ஜாக்ரத் விவகாரம் தத்வஞானத்திற்கு காரணமாக ஆகலாம்.

**118.** அவதாரிகை : க்ரியை என்பது க்ஷணிகம். ஆனுல் அதன் பலனுக ஏற்படும் ஜாக்ரத், ஸ்வப்ன, போகங்கள் ஸ்தாயியாக இருக்கிறது. ஆகையால் இப்பேர்ப்பட்ட ஜாக்ரத், ஸ்வப்ன அவஸ்த்தைகளின் ஸ்தாயியான விவகாரங்களுக்கு க்ஷணிகமான கர்மா எப்படி காரணமாகமுடியும்?

ச்லோகம் :

निष्पादितां सकलकारकवर्गसाध्यासर्वेण कारकगणेन सहैव तावत् ।
तिष्ठेत्क्रिया परम सूक्ष्मतयेक्ष्यमाणासर्वेश्वरेण पुरुषः फलमति यावत्

ச்லோகார்த்தம் : யஜமானனுல் அனுஷ்டிக்கப்பட்டதும், எல்லா காரகஸமூகத்தினுல் சாதிக்கப்பட்டதும், ஸர்வேச்வரனுல் அறியப்படுகின்றதுமான க்ரியை என்பது, புருஷன் அந்த (கர்ம) பலத்தை அடைகின்ற வரையில், ஸர்வகாரக ஸமூகத்துடன் பரமசூக்ஷ்மமாக இருந்து கொண்டிருக்கும்.

வ்யாக்யானம் : க்ரியை என்பது ஸ்தூல ரூபேண க்ஷணிகம்தான் என்ருலும், அவைகள் காரகங்களுடன் சூக்ஷ்மரூபேண ஸ்தாயியாகவே இருக்கின்றது. பலனே அனுபவிக்க வேண்டுமென்றே புருஷன் க்ரியையைச் செய்கின்ருன். அதனுல் அந்த பலன் அனுபவித்து முடியும் பர்யந்தம் காரகங்களுடன் க்ரியை என்பது சூக்ஷ்மரூபணே இருக்கின்றதென்றே சொல்லவேண்டும். இவ்விதம் சூக்ஷ்மரூபமாக இருக்கின்ற க்ரியைக்கு அபூர்வம் என்பது பலனேக் கொடுக்கின்றது. அவரவர் செய்த கர்மாவின் பலனே அவர்கள் அனுபவித்து முடியும் பர்யந்தம் ஈச்வரனுடைய புத்தியில் ஸ்திரமாக இருக்கின்றது. கர்மாத்யக்ஷரான ஈச்வரனுடைய புத்தியில் ஸம்க்காரரூபமாக இருக்கின்றதையேகமார்வின் சூக்ஷ்மரூபமென்றும் அபூர்வம் என்றும் சொல்கிரேம். ஆகவே கர்ம பலதாதாவான ஈச்வரனே காலாந்தரத்தில் அதன் பலனே அனுபவிக்கும் படி செய்கிருர். ஈச்வரஞானத்திற்கு கர்மா விஷயமாகிறது என்பதால் பலன் ஏற்படும் பர்யந்தம் பலத்திற்கு காரணமான கர்மா இருக்கின்றது. அதனுல் அவச்யம் கர்மபலன் அனுபவித்தே ஆகவேண்டும் என்ற சாஸ்திரவசனத்தை அனுசரித்து கர்ம பலதாதாவான பகவானுடைய சித்தத்தில் கர்மா சூக்ஷ்மரூபேண இருக்கின்றதென்றே ஒத்துக்கொள்ள வேண்டும்.

**119.** அவதாரிகை : ஜாக்ரத், ஸ்வப்னம் முதலானவைகள் அஞ்ஞான கார்யம் என்று சொல்லப்படுவதால் அவைகள் கர்ம பலன் என்று எப்படிச் சொல்வது?

ச்லோகம் :

स्वप्नश्च जागरितमप्युभयं तवैवमोहप्रसूतमपि कर्मफलं विभाति ।
कर्मक्षये तदखिलं परमात्ममायामाश्रित्य सूक्ष्ममवतिष्ठत एव लीनम्

ச்லோகார்த்தம் : ஸ்வப்னம் ஜாகரிதம் என்ற இரண்டும் உன்னுடைய அவித்யையினுல் ஏற்பட்டது என்ருலும், கர்ம பலமாகவே அவைகள் தோன்றுகிறது. கர்மக்ஷயம் ஏற்படுகின்றபோது, அவை எல்லாமே பரமாத்மாவினுடைய மாயை என்பதை ஆச்ரயித்து சூக்ஷ்மமாக (லீனம்) லயாவஸ்த்தையில் இருக்கின்றது.

வ்யாக்யானம் : 'புண்ய : புண்யேன', 'பாப : பாபேன' என்ற ச்ருதி வாக்யத்தினுல் கர்ம பலன் என்பது புண்யம், பாபம் என்ற விசித்ரரூபமாக இருக்கின்றது என்று தெரிவிக்கின்றது. இந்த ஜன்மாவேகர்ம பலன்தான் என்று அறியப்படுகிறது. இந்த ப்ரபஞ்சம் கேவல அவித்யாகார்யம்தான் என்று சொல்லப்படுமாஞல் அவித்யை என்பது ஏகரூபமாகவே இருக்கின்றதால் அதன் கார்யமும் ஏகரூபமாகத்தான் இருக்க

வேண்டும். அவ்விதமின்றி பற்பலவிசித்ர ரூபமாக பலத்தில் வைசித்ரியம் இருக்கின்றதால், அதற்கு காரணம், விசித்ரமான கர்மா என்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** அப்படியானுல் இந்த ப்ரபஞ்சத்திற்கு அஞ்ஞானம் காரணம் என்று ஏன் சொல்லப்படுகிறது ?

**சித்தா :** கர்மா என்பது ப்ரபஞ்சத்திற்கு நிமித்தகாரணமாக ஆகிறதேயன்றி உபாதான காரணமாக ஆகமுடியாது. ஆத்மா என்பது கூடஸ்த்த ஸ்வரூபம் என்பதால் அதுவும் உபாதானமாக ஆகமுடியாது. அதனுல் அஞ்ஞானம் என்பதை உபாதானகாரணம் என்று ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். இந்த காரணத்தைக் கொண்டே, மாயாத்வாரா ப்ரஹ்மமென்பது ஜகத்காரணம் என்று சொல்லப்படுகிறது.

**பூர்வ :** ஜாக்ரத், ஸ்வப்னம் என்ற இரண்டுமே கர்மபலம் என்பதால் இரண்டும் ப்ராந்தி என்று சொல்லப்படுவதை ஒத்துக்கொள்ளலாம். ஆனுல் கர்ம பலக்ஷயத்தினுல்தான் ஜாக்ரத் முதலான அவஸ்த்தைகளும் க்ஷயமாகிறது என்று சொல்லப்படுமானுல், இதற்கு மத்தியில் ஞானத்தினுல் நிவர்த்தி என்று ஞானத்தைப் பற்றி தெரிவிக்க வேண்டிய அவஸ்யம் என்ன ?

**சித்தா :** அகில ஜாக்ரத்ஸ்வப்ன விவகாரங்கள் அனைத்தும் ஸம்ஸார ஜாதம். கர்மா என்பது அதன் பலனைக்கொடுத்தபிறகு (அனுபவித்தபிறகு) கர்ம நாசம் ஏற்படுகிறது. அந்த கர்மாவின் கார்யமான ஜாக்ரத்ஸ்வப்னம் என்பதெல்லாம் பரமாத்ம ஸ்வரூபமான மூலகாரணத்தில் சூக்ஷ்மரூபேண (ஈச்வரனுடைய புத்தியில் ஸம்ஸ்காரரூபமாக ஸ்திரமாக (இதையே கர்மாவின் சூக்ஷ்மரூபமென்றும் அபூர்வம் என்றும் சொல்லப்படுகிறது) இருக்கின்றதால்தான் அந்த கர்மாவிற்கு தக்க பலன்கள் ஏற்படுகிறது.

ஜாக்ரத், ஸ்வப்னம் முதலான போகங்களுக்கு கர்மாமட்டும் காரணமில்லை. கர்மாவிற்கு அவித்யையென்பதும் காரணமாக ஆகிறது. அதனுல் கர்மபலம் என்பது அனுபவித்தால் க்ஷயமாகும். ஆனுல் அதற்கு காரணமான அவித்யை என்பது ஞானத்தினுல்தான் நிவர்த்திக்கப்பட வேண்டும். அஞ்ஞானத்திலிருந்தே கர்மா உண்டானதால் அந்த அவித்யையில்தான் கர்மா லயத்தை அடைய வேண்டும். அதனுல் கர்மாவின் கார்யமான ஜாக்ரத் ஸ்வப்னம் முதலான அவஸ்த்தைகள் அதன் பலனை கொடுத்தபிறகு (மூலகாரணமான) பரமாத்ம ஸ்வரூபமாயையினிடம் ஒடுங்கிவிடுகிறது. அதனுல் சூக்ஷ்ம ரூபமாக (ஸம்ஸ்க்கார ரூபேண) இருக்கின்றதால் அவைகளுக்கு ஆத்யந்திகநாசம் சொல்லமுடியாது. ஆகவே கர்ம பலன் மட்டும் க்ஷயமானுலும் அதற்கு காரணமான அவித்யா நாசம் என்பது ஞானத்தினுல் தான் நிவர்த்திக்கப்படவேண்டும். நிமித்தகாரணமான கர்மா, உபாதானகாரணமான அவித்யை என்ற இரண்டுமே நாசம் அடைந்தால்தான் ஸம்ஸாரம் என்பதற்கு ஆத்யந்திக நாசம் ஏற்படும். ஆகையால் ஞானம் வ்யர்த்தம் என்று சொல்ல முடியாது.

**120.** அவதாரிகை : ஜாக்ரத் - ஸ்வப்னம் முதலானவைகள் அஞ்ஞானுத்மகமாக லயத்தை அடைந்திருக்கிறது என்று சொல்லப்படுவதில் ப்ரமாணம் என்ன ? ப்ரமாணமில்லையானுல் அது ஒத்துக்கொள்ளக் கூடியதல்ல.

ச்லோகம் :

उत्थानलिङ्गकृतकल्पनयैतदेवंविज्ञायते न तु तथाऽवगतं तदानीम् ।
अज्ञानलीनमखिलं जगदस्ति सूक्ष्मंतत्रैव नानुभवनादवगम्यते हि

ச்லோகார்த்தம் : ஸமஸ்த்தப்ரபஞ்சமும், அஞ்ஞானத்தில் லீனமாக சூக்ஷ்ம ரூபத்தில் இருக்கின்றதென்பது உத்தானம் (விழிப்பு) என்ற லிங்கத்தினுல் ஏற்பட்ட அனுமானத்தினுலேயே அறியப்படுகிறது. சுஷுப்தி காலத்தில் இவ்விதம் அறியப்படவில்லே. ஏனெனில் சுஷுப்தி அவஸ்த்தையில் ப்ரத்யக்ஷ அனுபவத்தினுல் அறியப்படுவதில்லே என்பது ப்ரசித்தம்.

வ்யாக்யானம் : சுஷுப்தியிலிருந்து மறுபடி எழுந்து, ஜாக்ரத் முதலான அவஸ்தைகளே அனுபவிப்பதிலிருந்தே, அவைகளுக்கு ஆத்யந்திக நாசம் ஏற்படவில்லே என்பது அறியப்படுகிறது. ஆகவே சுஷுப்தி ப்ரளயம் என்ற ஸர்வ அவஸ்த்தைகளிலும் அவித்யை இருக்கின்றது என்பதற்கு சுஷுப்தியிலிருந்து எழுந்திருப்பதேலிங்கமாக ஆகிறது. இவ்விதம் லயத்தை அடைந்திருக்கிறது என்பது சுஷுப்திநிலேயில் அனுபவம் இல்லேயென்ருலும், அஞ்ஞானத்தில்தான் அகில ஜகத்தும் லயத்தை அடைந்திருக்கிறது என்பது அனுமானத்தினுல் அறியப்படுகிறது. (அனுபவத்தினுல் அறியப்படவில்லே என்ருலும் லிங்கத்தினுல் அறியப்படுகிறது.)

பூர்வ : சுஷுப்தியில் ஸம்ஸாரம் என்பதே இல்லேயென்றும், ஸ்வஸ்வரூபம் சுத்தம் என்றும் தெரிவிக்கின்றது. அதனுல் அவித்யை, அதன்கார்யமான ஸம்ஸாரம் என்பதெல்லாம் ஸ்வஸ்வரூபத்தில் லயம் அடைந்திருப்பதாக எப்படிச் சொல்லமுடியும்? சுஷுப்தியிலிருந்து மறுபடி எழுந்திருந்து ஜாக்ரத் முதலான அவஸ்த்தைகளில் கர்ம பலனே அனுபவிக்கின்ருன் என்ற லிங்கத்தைக் கொண்டே இவைகள் சுஷுப்தி நிலேயில் லயத்தை அடைந்திருக்கிறது என்று சொல்லாமல் வேறு என்ன காரணம் சொல்ல முடியும்?

சித்தா : அவித்யை, அதன் கார்யமான ஸம்ஸாரம் என்பவைகள் இல்லாமல் ஸ்வஸ்வரூபத்தில் லயத்தை அடைந்திருந்தாளுகில் மறுபடி எழுந்து கர்மபோகங்களே அனுபவிக்கின்ருன் என்று சொல்வது அஸம்பாவிதம். அதனுல் ஸம்ஸாரபீஜமான அவித்யை சுஷுப்த நிலேயில் ஒடுங்கி இருக்கிறதென்றே சொல்லப்படவேண்டும். சுஷுப்த நிலேயில் இந்த விஷயம் அறியப்படவில்லேயென்ருலும், மறுபடி நித்ரையிலிருந்து எழுந்து போகங்களே அனுபவிக்கிருன் என்ற லிங்கத்தைக் கொண்டு அவித்யை அதன் கார்யம் எல்லாமே அந்த நிலேயில் சூஷ்மரூபேண இருக்கின்றதென்பது அனுமானத்தினுல் சித்திகிக்கின்றது.

**121.** அவதாரிகை : அஞ்ஞானத்தில்தான் லயத்தை அடைகிறது என்று ஏன் சொல்ல வேண்டும்? அஞ்ஞானத்தையன்றி வேறு ஏதாவது ஒன்றில்லயத்தை அடைவதாகச் சொல்லலாமே?

ச்லோகம் :

अज्ञानमेव तु तदाऽवगतं त्वदीयंयेनोत्थितो वदसि नावगतं मयाऽद्य ।
सुप्तेन किंचिदपि गाढतमस्यभूवंक्षिप्तः समस्तविषयावगमासमर्थः

**ச்லோகார்த்தம் :** சுஷுப்தி அவஸ்த்தையில் உன்னுடைய அஞ்ஞானம் ஒன்றே இருந்தது என்பது விழித்தவுடன் தான் இவ்விதம் உன்னால் கூறப்படுகிறது. தூக்கத்தில் இருந்தபோது என்னுல் ஒன்றும் அறியப்படவில்லை. காடமான தமஸ் என்பதால் மூழ்சினவனுக எந்த விஷயத்தையும் அறியக்கூடியஸாமத்யம் அற்றவனுகவே இருந்தேன்.

**வ்யாக்யானம் :** சுஷுப்தி நிலையில் அஞ்ஞானம் தான் இருந்தது என்பது எழுந்தவுடன் ஏற்படும் பராமர்சபலத்தினால் அறியப்படுகிறழ. அந்தநிலையில் அஞ்ஞானம் மட்டுமே இருந்தது என்பதையே அந்த அனுபவம் விஷயீகரிக்கின்றது வேறு ஏதும் இருப்பதாக விஷயீகரிக்கப்படவில்லை கும்மிருட்டுபோன்றதமஸில் மூழ்கிஇருந்தேன் என்றும் எழுந்தவுடன் பராமர்சம் ஏற்படுகிறது. அதனுல் அஞ்ஞானத்தையன்றி வேறு எதுவுமில்லையென்று அறியப்படுகின்றதால் ஜகத் என்பது சுஷுப்தி அவஸ்த்தையில் அஞ்ஞானத்தில் தான் லயத்தை அடைகிறது என்று சித்தமாகிறது. அஞ்ஞானத்தையன்றி வேறே எதுவும் இருப்பதாகச்சொல்லப்முடியாது என்பதால் வேறெதிலும் லயத்தை அடைவதாகச் சொல்லமுடியாது.

**122.** அவதாரிகை **:** சுஷுப்தி அவஸ்த்தையில் எந்த ஞானமும் இல்லையென்று ஞான அபாவத்தையே எழுந்தவுடன் பராமர்சம் செய்கிறான் என்று சொல்லலாமே?

**ச்லோகம் :**

अज्ञानमत्र यदि नानुभवात्प्रसिद्धंनाज्ञासिषं त्विति कुतस्तव निश्चयोऽभूत् ।
अज्ञानमस्त्यवगतं च सुषुप्तिकालेतेनेति निश्चिनु तवानुभवप्रमाणात्

**ச்லோகார்த்தம் :** சுஷுப்தியில் ஏற்பட்ட அனுபவத்தினால் அஞ்ஞானம் சித்திக்கவில்லை யென்றால், நான் ஒன்றையும் அறியவில்லை என்ற நிச்சயம் எப்படி ஏற்பட்டது? ஆகையால் அனுபவம் என்பதே சுஷுப்தியில் அஞ்ஞானம் இருக்கின்ற தென்பதற்கு ப்ரமாணமாகிறது என்பதால், அஞ்ஞானம் இருக்கின்றதென்றே நிச்சயம் செய்வாயாக.

**வ்யாக்யானம் :** சுஷுப்தியில் அஞ்ஞான அனுபவமில்லை அதனால் எழுந்தவுடன் பரமர்சமும் ஏற்படாது. பராமர்சம் என்பது விகல்பமாத்ரம் என்று சொல்வது சரியல்ல. அதாவது முயல்கொம்பு இருக்கின்றதா என்றுல் இல்லையென்று சொல்கிறும். ஆனுல் அவ்விதம் இல்லையென்று சப்தத்தினுல் சொல்லப்பட்ட போதிலும் அதற்கு விஷயமில்லை. சப்த ஞானுனுபாதி வஸ்துசூன்யம் விகல்ப: அதாவது விகல்பாக்யவிருத்தி விஷயத்தை சாதிக்கமுடியாது. ஸசவிஷாணம் என்றசப்தத்தைக்கொண்டு அந்தபொருளின் ஸம்பந்தத்தைக்கொண்டு அறிந்து அதுஇல்லையென்று சொல்கிறோம். ஆகவே விகல்பமென்பதும் மூலப்ரமாணமின்றி ஏற்படுகிறது என்று சொல்வது பொருந்தாது. அதற்குரிய ப்ரமாணத்தைக்கொண்டே அந்த விஷயம் அறியப்படுகிறது என்று கல்ப்பிக்கின்றோம். முன் ச்லோகத்தில் சொல்லப்பட்ட இந்த விஷயத்தையே வ்யதிரேகமுகேன போதிக்கப்படுகிறது. (நெருப்பு இல்லையானால் புகை இருக்காது என்ற முறையில் சொல்லப்படுகிறது) எழுந்தவுடன் நான் ஒன்றையும் அறியவில்லை யென்று ஏற்படும் பராமர்சத்தைக் கொண்டு அஞ்ஞான அனுபவம் இருந்திருக்கிறது

என்று தீர்மானித்து கலப்பிக்கிறோம். இந்த அனுபவம்த்ரிபுடி அற்ற அனுபவமாக இருப்பதால் அதைநிகர்விகல்பக அனுபவம் என்று சொல்கிறோம் ஆகவே சுஷுப்தி அவஸ்தையில் அஞ்ஞானம் இருக்கிறதென்றே ஒத்துக்கொள்ளவேண்டும்.

**123.** அவதாரிகை : சுஷுப்தநிலையில் அஞ்ஞான அனுபவம் இருக்கிறது என்று சொல்லப்படுமானால் அதை எப்படிசுஷுப்தி என்று சொல்லமுடியும்? ஏனெனில் அஞ்ஞானத்தை விஷயீகரிக்கின்ற அனுபவம் என்பதும் அஞ்ஞானவிஷயகமான ஒரு ஞானம்தானே? ஆகையால் எந்த அனுபவமும் இல்லாமல் இருந்தால்தான் சுஷுப்தி என்றே சொல்லலாம் ஆகையால் அஞ்ஞான அனுபவம் இருக்குமானுல் அதை சுஷுப்தி என்றே சொல்லமுடியாது.

ச்லோகம் :

स्पष्टानुभूतिविषयो न तमस्तदानीमासीदहंकरणहीनतयाऽधुना तु ।
निष्पाद्य कार्यमिदमंशमहं न जानेमूढोऽस्मि चेत्यवगतेर्विषयत्वमागात्

ச்லோகார்த்தம் : சுஷுப்தியில் அஹங்காரம் இல்லாததால் அஞ்ஞானம் என்பது ஸ்பஷ்ட்டமாக அனுபவ விஷயமாக ஆகவில்லை. ஆனால் இப்போது (ஜாக்ரத்தில்) கார்யமாகவும் இதம் அம்ஸமாகவும் இருக்கின்ற அஹங்காரத்தை உண்டுபண்ணுகின்ற அஞ்ஞானம் என்பது நான் அறியவில்லை நான் அஞ்ஞானி என்ற அனுபவத்திற்க விஷயமாகின்றது.

வ்யாக்யானம் : சுஷுப்திநிலையில் ஸ்வம் அபீதோபவதி தஸ்மாத்ஸ்வபிதி இதி ஆசக்ஷதே ஸ்வம்ஹ்யபீதோபவதி என்று (சாந்தே.6.8.12) ச்ருவசனம் தெரிவிக்கின்றது. ஆகவே ஸ்வஸ்வருபத்தில் ச்ருயத்தை அடைகின்றதால் தான் சுஷுப்தனைஸ்வபிதி என்று சொல்லப்படுவதாகவும் ப்ரஹ்மஸ்வரூபத்தில் ஏகிபாவத்தை அடைவதாகவும் பாஷ்யவசனமும் தெரிவிக்கின்றது. அஞ்ஞானம் இருக்குமானால் ஸதஸம்பத்தியை அடைகிருன் என்று எப்படிச் சொல்லமுடியும்?

சித்தா : இந்த சுஷுப்திநிலையில் அந்த:கரணம்லயத்தை அடைகின்றது. அஹங்காரம் ஒடுங்குவதால் அஞ்ஞானஅனுபவம்ஸபுடமாக அறியப்படவில்லை. அதனால் அஞ்ஞானமில்லை என்ற வசனங்களால் சொல்லப்படுகிறது. அஹம் அஞ்ஞன் என்ற விசேஷஞானம் அஹங்காரம் இருந்தால்தான் ஏற்படும். அஞ்ஞான அபிவ்யக்தி ஏற்படக்கூடிய அஹங்காரம் இல்லாததால் அஞ்ஞானம் சூக்ஷ்மமாக இருந்தும், அஞ்ஞானம் இல்லையென்று தோன்றுகிறது. ஸ்புடமாக அஞ்ஞானம் அறியப்படவில்லை என்ற காரணத்தைக்கொண்டே ச்ருதி வசனங்களும் தெரிவிக்கின்றது. ஆகவே அஞ்ஞானமே இல்லையென்று தோன்றுகிறது. ஸ்புடமாக அஞ்ஞானம் அறியப்படவில்லை என்ற காரணத்தைக்கொண்டேச்ருதி வசனங்களும் தெரிவிக்கின்றது. ஆகவே அஞ்ஞானமே இல்லையென்று சொல்வதற்கு முடியாது. அஞ்ஞானத்தின் கார்யமான இந்த அந்த:கரணம் என்பது இதமம்ஸமாக இருக்கின்றதால் த்ருச்யமாக இருக்கிறது. ஆகவே ஜாக்ரத்தசையில் அறியப்படும் அந்த:கரணத்தினால் நான் ஒன்றும் அறியாமல் மூடனுக இருந்தேன் என்ற விசேஷமாக ஸ்'பஷ்ட்டமாக அறியப்படுகிறது. இவ்விதம் அஹங்காரம் இருந்தால்தான் ஸ்பஷ்டமாக அறியமுடியும் என்பதால் அஹங்காரம்

அற்றநிலையான சுஷுப்தியில் அஞ்ஞானம் இருப்பதாக ஸ்பஷ்டமாக அறியப்படவில்லை.

**124.** அவதாரிகை : சுஷுப்திஅவஸ்தையில் அஞ்ஞானம் அனுபவிக்கப்பட்டிருந்தால், அஞ்ஞானமே இல்லை என்று என்புத்தியில் தோன்றுவதற்கு காரணம் என்ன?

**ச்லோகம் :**

एतावता तव तमोऽपि सुषुप्तिकालेनास्तीति बुद्धिरुदितं गुरुभिश्च कैश्चित् ।
स्थाने क्वचित्क्वचिदतो द्वयमुच्यमानंग्राह्यं विविच्य भवता विषयं विभज्य

**ச்லோகார்த்தம் :** இந்த காரணத்தினுலேயே சுஷுப்திகாலத்தில் அஞ்ஞானம் என்பதும் இல்லையென்றே உனக்கு (தோற்றுகிறது) அபிப்ருயம் ஏற்படுகிறது. சில ஆசார்யர்களாலும் சில இடங்களில் இரண்டுவிதமாகச் சொல்லப்படுகிறது. ஆகவே இந்த விஷயம் விவேகத்துடன் உன்னுல் விபாகம் செய்து அறிந்துகொள்ளப்படவேண்டும். (க்ரஹிக்கப்பட வேண்டும்)

**வ்யாக்யானம் :** சாஸ்திரத்தில் பரிச்சயமில்லாதவர்களின் நோக்கத்தை அனுசரித்து, ச்ருதி - ஆசார்ய வசனங்கள் ஸ்வஸ்ரூபத்தில் லயத்தை அடைகிருன் என்று தெரிவித்த போதிலும், அஞ்ஞானமில்லையென்று போதிப்பதில் தாத்பர்யமில்லை. ஆத்மஸ்வரூபத்தில் ஸம்ஸாரம் என்பதே கிடையாது என்றும் ஆத்மா சுத்தஸ்வரூபம் என்பதை தெரிவிப்பதற்காகவேச்ருதி வசனம் 'ஸ்வம்ஹி அபீதோபவதி' என்று தெரிவிக்கிறது. ஆகவே அஞ்ஞானகார்யமில்லை என்று தெரிவிப்பதே நோக்கம் என்பதால் அஞ்ஞானமில்லை என்று ஏதோ சிற்சில இடங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனுல் ஸ்பஷ்ட்டமாக அஞ்ஞானம் எனக்கு இருக்கிறது என்று அறியப்படவில்லை என்ற காரணத்தினுலேயே இவ்விதம் சொல்லப்படுகிறது. அஸ்பஷ்ட்ட அனுபவத்தினுல் அஞ்ஞானம் இருக்கிறது என்றும் ஸ்பஷ்ட்ட அனுபவம் இல்லாததால் அஞ்ஞானம் இல்லையென்றும் சொல்லப்படுவதால் இருக்கிறது என்று சொல்லப்படுவது பாதிக்கப்படவில்லை. இருக்கிறது என்று சொல்லப்படுவதால் இல்லையென்பதும் பாதிக்கப்படவில்லை. ஸ்பஷ்ட்டம் அஸ்பஷ்ட்டம் என்பதே இவ்விதம் இரண்டுவிதவிவகாரங்களுக்கு காரணமாகிறது.

**125.** அவதாரிகை : அஞ்ஞானம் இருக்கிறது என்றும், இல்லை என்றும் இரண்டு விதமான வசனங்கள் இருக்கின்றது என்ருல் அந்த வசனங்கள் என்ன?

**ச்லோகம் :**

नाज्ञानमस्ति च सुषुप्तिगतस्य पुंसोगाढे तमस्ययमभूत्पुरुषः सुषुप्तः ।
इत्युच्यमानमविरुद्धतया विचिन्त्यग्राह्यं त्वयाऽनुभवयुक्तिनिरूपणेन

**ச்லோககார்த்தம் :** சுஷுப்தியில் இருக்கின்ற புருஷனுக்கு அஞ்ஞானம் கிடையாது என்றும், சுஷுப்த புருஷன் காடமான அஞ்ஞானத்தில் இருந்தான் என்றும், சொல்லப்படும் வாக்யங்களை யுக்திகள் அனுபவங்களைக் கொண்டு நிரூபணம் செய்வதன் மூலமாக உன்னுல் விரோதமின்றி க்ரஹிக்கப்படவேண்டும்.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் சுஷுப்தியில் இருக்கிறதென்றும் இல்லையென்றும் சொல்வதற்கும் இரண்டுவித வசனங்கள் இருக்கின்றதால், இரண்டிற்கும் விரோதம்

இருப்பதாகச் சொல்லமுடியாது. ஏனெனில் அனுபவத்தைக் கொண்டும் யுக்தியைக் கொண்டும் விவேகித்து அறியப்படுமாஞல் இரண்டிற்கும் விரோதமில்லையென்று அறியப்படும்.

**126.** அவதாரிகை :

இவ்விதம் சொல்லப்பட்ட முறையில்தான் வ்யவஸ்த்தை இருக்கிறது என்பதற்கு காரணம் என்ன ?

ச்லோகம் :

एवं तमोऽपि न बभूव सुषुप्तिकालेभाषान्तरेण पुरुषः पर एव जीवः ।
निर्बीजतामुपगतः स निरन्वयेनन स्पष्टमत्र तमसोऽनुभवोऽस्ति यस्मात्

ச்லோகார்த்தம் : ஸுஷுப்தியில் அஞ்ஞானத்தின் அனுபவம் ஸ்பஷ்ட்டமாக கிடையாது என்பதால் இந்த விஷயத்தை வேறு பாஷையில் இவ்விதம் சொல்லப்படுகிறது. "ஸுஷுப்தி நிலையில் ஜீவன் பரமாத்மாவாகவே இருக்கிருன் என்றும், ஸுஷுப்தியில் ஜீவன் உபாதி ஸம்பந்தம் அற்றவஞக இருக்கின்றதால் அவித்யாபீஜம் அற்ற நிலையை அடைகிருன் என்றும் சொல்லப்படுகிறது.

வ்யாக்யானம் : ஸுஷுப்திகாலத்தில் ஜீவன் ப்ரஹ்மபாவத்தை அடைகிருன் என்று தெரிவிக்கின்றதாக சொல்லப்படும் விஷயம் என்னவென்ருல் ஜீவன் வேறு ப்ரஹ்மம் வேறு என்று ஸ்பஷ்ட்டமாக தெரிவிக்கக் கூடிய உபாதி இல்லையென்ற காரணத்திஞலேயே அவ்விதம் சொல்லப்படுகிறது. அஞ்ஞானம் ஸ்பஷ்ட்டமாக அறியப்படாத காரணத்திஞலேயே தோன்றுகிறதேயன்றி வேறுஎதுவும் காரணமில்லை. ஆகவே ஸம்ஸாரபீஜமான அஞ்ஞானமே நாசமாகின்றது போல் வசனம் இருந்த போதிலும், அஞ்ஞானமில்லை என்று சொல்வதற்கு முடியாது. ஸ்பஷ்ட்டம் அஸ்ப்ஷ்ட்டம் என்பதே இவ்வித விவகாரத்திற்கு காரணம்.

**127.** அவதாரிகை : (இதே விஷயம் பற்றி) வேறு சிலராலும் அஞ்ஞானமே இல்லையென்று சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

अज्ञानतज्जमतिहीनतया सुषुप्तेशुद्धः परोऽसि भगवानसि नित्यमुक्तः ।
कामश्च कर्म सकलं च तदा कुतस्त्यंचित्सागरेऽनवकरे त्वयि तायमाने

ச்லோகார்த்தம் : ஸுஷுப்தியில் அஞ்ஞானமோ, அதஞல் ஏற்பட்ட புத்தியோ இல்லாததால் நீபரமாத்மாவாக இருக்கிருய். நித்யமுக்தஞன பகவாஞகவே இருக்கின்ருய். அவச்சேதகமற்ற பரிபூரணசைதன்யா காரமான உன்னிடத்தில் காமம் கர்மா முதலானவைகள் அந்த ஸமயத்தில் எப்படி இருக்க முடியும் ?

வ்யாக்யானம் : ச்ருதியும் ஆசார்யவசனமும் தெரிவிப்பதற்கு என்ன காரணமோ அதே காரணத்திஞல் வேறு சிலராலும் சொல்லப்படுகிறது. அஞ்ஞானகார்யமான அந்த:கரணம் இல்லாததால் அஞ்ஞானம் அஸ்பஷ்ட்டமாக இருக்கிறது. அதஞல் அஞ்ஞானத்தின் கார்யமான காமம் கர்மா முதலியவைகள் வரமுடியாது என்பதால்

பூர்ண ஸ்வரூபமான உன்னிடம் காமாதிகள் எப்படி வரமுடியும் ? என்று சொல்லப்படுகிறது. உபாதி வஸாத்ஏற்படும் பரிச்சேதம் என்பதும் ஏற்படாததால் வ்யாபகமானபூர்ண ஸ்வரூபத்தில் ஆத்மா ப்ரகாசிக்கின்றது என்று சொல்லப்படுகிறது.

**128.** அவதாரிகை : அஞ்ஞானமே இல்லையென்ருல் அந்த நிலையை முக்தி என்றுதானே சொல்ல வேண்டும் ?

ச்லோகம் :

आसीदहंकरणमात्मतमोनिमित्तंतज्जाग्रतश्च भवतः स्वपतः सुदुःखम् ।
आनीय दर्शयति तन्न सुषुप्तिकाले बीजक्षयादिति भवानतिनिर्मलोऽभूत्

ச்லோகார்த்தம் : ஜாக்ரத்ஸ்வப்னம் என்ற இரண்டு அவஸ்த்தைகளிலும் இருக்கின்ற உனக்கு ஆத்ம அஞ்ஞானத்திஞல் ஏற்பட்ட அஹங்காரம் இருக்கின்றது. அது உனக்கு துக்கத்தை உண்டுபண்ணி அனுபவிக்கும்படி செய்கிறது. சுஷுப்தியில் அஹங்காரபீஜம் லயத்தை அடைந்திருக்கின்றதால் அதன் கார்யமானதுக்க மென்பதும் இல்லை. அதனுல் நீ அதிசுத்தனுக இருக்கின்ருய்.

வ்யாக்யானம் : அஞ்ஞானம் என்பது அஹங்காரமாக பரிணுமத்தை அடைகின்றபோதுதான் துக்காதி அனுபவங்களுக்கு காரணமாகின்றது. ஜாக்ரத் ஸ்வபனங்களில் துக்கம் ஏற்பட காரணம் அஹங்காரம் என்ற பீஜம்தான்..சுஷுப்தியில் அஞ்ஞானம் அஹங்காரமாக பரிணுமத்தை அடைகின்ற தன்மையில் இல்லை. ஆகவே சுஷுப்தி நிலையில் துக்கத்திலிருந்து விடுபட்ட நிலையில் இருந்த போதிலும் அதை முக்தி என்று சொல்லமுடியாது. துக்காதிரஹிதஸ்வரூபமாக இருப்பதால் முக்தன் என்று சொல்லப்பட்டபோதிலும் அஹங்காரம் சூக்ஷ்மரூபேண அஞ்ஞானத்தில் லயத்தை அடைந்திருப்பதால் முக்தனென்று சொல்லமுடியாது. அதனுலேயே ஸர்வதா நிர்மலம் என்றும் சொல்லமுடியாது. இந்தவிதம் ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்கின்ற அஞ்ஞானத்திலிருந்து அந்தःகரணம் உண்டாகின்றது. அதனுலே சுகம் துக்கம் என்பது கர்மாதீனமாக ஏற்படுகிறது. இவ்விதம் அஹங்காரம் என்ற அங்கியை (சட்டையை) உடையவனுக இருக்கின்றபோதே ஆத்மாவிற்கு அசுத்தி சொல்லப்படுகிறது. சுஷுப்தியில் அஹங்காரம் என்ற அங்கி இல்லாததால் சுத்தம் என்று சொல்லப்படுகிறது. அசுத்திக்கு பீஜம் அஹங்காரம். அஞ்ஞான மாத்ரமாக இருக்கின்றபோது ஆத்மாவிற்கு அசுத்தி சொல்லப்படுவதில்லை. அஹங்கார பீஜம் க்ஷயமாகின்றதால் அதிநிர்மல ஸ்வரூபம் நீ என்று சொல்லப்படுகிறது. ஆகவே இந்த நிலையை முக்தி என்று சொல்லமுடியாது.

**129.** அவதாரிகை : சுஷுப்தியில் ஞான அபாவரூபமான அஞ்ஞானமே இருக்கின்றதென்று சில பெரியோர்களால் சொல்லப்படுகின்றது. அதனுல் அபாவ ரூபமான அஞ்ஞானம் அஹங்கார உபாதானமாக பரிணுமத்தை எப்படி அடைய முடியும் ?

ச்லோகம் :

सद्रूपमावरणतानुभवादभीष्टमज्ञानमात्मचिति नैशतमोवदेतत् ।
ज्ञानं दिवाकरवदस्य जडप्रकाशरूपं निवर्तकमिति प्रवदन्ति धीराः

**ச்லோகார்த்தம் :** ஆத்ம சைதன்யத்தில் ஆவரண அனுபவம் ஏற்படுவதால் இந்த அஞ்ஞானம் என்பது இரவில் இருக்கின்ற இருள்போல, பாவரூபம் என்றே ஒத்துக் கொள்ளப்படவேண்டும். ஸாபாஸவ்ருத்தியாக இருக்கின்ற ஞானமானது சூர்யனைப் போல் இந்த அஞ்ஞானம் என்பதை நிவர்த்திக்கின்றது என்று புத்திமான்களால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் என்பது நித்யஸ்வப்ரகாசஸ்வரூபமான ஆத்ம ஸ்வரூபத்தின் விசேஷங்களை மறைக்கின்றது. இவ்விதம் உண்மையான ஸ்வரூபம் மறைக்கப்படுகிறதென்பது ச்ருதி யுக்திஅனுபவங்களாலும் அறியப்படுகிறது. அதனால் அஞ்ஞானம் பாவரூபம்என்றே சித்திகிக்கின்றது.

அஞ்ஞானம் பாவரூபம், ஆவாரக த்வாத் ஞானநிவர்த்யத்வாத் தமோவத், என்று அனுமானத்தைக்கொண்டும் அறியப்படுகிறது. அதாவது இருள் என்பது எப்படி இருக்கின்ற வஸ்துவை மறைக்கின்றதோ அதுபோல் ஸத்ரூபமான ஆத்ம வஸ்துவை மறைக்கின்றதாலேயே ஸ்வரூபமாத்ரமாக ப்ரகாசிக்கின்றபோது அஞ்ஞானத்திற்கு ப்ரகாசமாக இருக்கின்றது என்றாலும் அந்த:கரணவ்ருத்தி அவச்சின்ன சைதன்யத்தினால் அஞ்ஞானம் பாவரூபம் என்றே சொல்லவேண்டும். ஆகவே அஞ்ஞானம் அஹங்காரத்திற்கு உபாதானம் என்றே சொல்ல வேண்டும் என்பதால் அபாவரூபமில்லை. பாவரூபம்அஞ்ஞானம் என்றுமுன்பே விஸ்தாரமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

**பூர்வ :** அஞ்ஞானத்திற்குசைதன்யம் என்பது ப்ரகாஸகமாக இருக்கின்றதால் விரோதமில்லை என்பது சரியே. ஆனால் ஞானஸ்வரூபமான ஆத்மா நித்யம் என்று சொல்லப்படுவதால், ஞானம் ஏற்படுகின்றபோது அஞ்ஞானநாசகம் என்று ஞானம் உண்டாகிறதாக சொல்வது எப்படி ?

**சித்தா :** ஞானஸ்வரூபமான ஆத்மாஸ்வரூபத:நித்யம்தான். சாஸ்திரசார்ய உபதேசத்தின் மூலம் ஏற்படும் வ்ருத்தி ஞானம் - வ்ருத்தி மூலமாக ப்ரகாசிக்கின்றபோது தான் அஞ்ஞானத்திற்கு நாசகமாகிறது என்று சொல்கிறோம். ஆகவே, வ்ருத்தி ஆகந்துகம் என்பதால் வ்ருத்தி ஞானமும் ஆகந்துகம் என்று சொல்லப்படுவதில் தோஷம் ஏதுமில்லை. எப்படி சூர்ய உதயத்தினால் இருள் நாசத்தை அடைகிறது என்று சொல்லப்படுகிறதோ அதுபோல் அகண்டாகார வ்ருத்திப்ரதிபலன சைதன்யத்தினால் அஞ்ஞானத்திற்கு நாசம் ஏற்படுகிறது. அதனால் அஞ்ஞானம் பாவரூபம் என்றே சித்திக்கின்றது. அதனால் ஞானம் உண்டாகிறது என்று சொல்லப்படவில்லை.

**130. அவதாரிகை :** அஞ்ஞானம் பாவரூபமென்றே வேறு மதஸ்த்தர்களாலும் அங்கீகரிக்கப்பட வேண்டும்.

**ச்லோகம் :**

प्रावादुकैरपि तथैव तदेषितव्यंसंवेदनेऽस्फुरणमभ्युपयद्भिरग्रे ।
संवेदने न खलु संविदभावरूपमज्ञानमभ्युपगतं न च बुद्ध्यभाव:

**ச்லோகார்த்தம் :** விஷயஞானம் ஏற்படுவதற்கு முன், விஷய ஞானத்தினுடைய அப்ரகாசம் (அஸ்புரணம்) என்பதை ஒத்துக்கொள்கின்ற வாதிகளாலும் பாவரூபம் அஞ்ஞானம் என்றே ஒத்துக்கொள்ளப்படவேண்டும். விஷய ஞானத்தில் ஞான

அபாவரூபமான அஞ்ஞானம் என்று சொல்லப்படுகின்ற விஷயம் அவர்களாலும் ஒத்துக்கொள்ளப்படவில்லே. ஏனெனில் விஷயஞானம் என்பதில் ஞான அபாவம் என்பது கிடையாது.

**வ்யாக்யானம் :** அஞ்ஞானம் பாவரூபம் என்று சொல்லப்படும் விஷயத்தில் எந்த வாதிகளாலும் ஆக்ஷேபம் செய்யமுடியாது. சாஸ்த்ராச்சார்ய வாக்ய உபதேசத்திஞல் ஏற்படும் ஞானத்திற்கு முன் அபாவரூபமான அஞ்ஞானத்திஞல் ஞானஸ்வரூபம் மறைக்கப்பட்டிருக்கிறதென்று சொல்லமுடியாது. ஞான ஸ்வரூபமான ஆத்மாவில், ஞான அபாவரூபமான அஞ்ஞானம் இருக்கின்றதாக எப்படிச் சொல்லமுடியும்? அதேபோல் புத்தி அபாவரூபமான அஞ்ஞானம் என்பதும் எப்படி இருக்க முடியும்?

1. ஸம்வித்ஸ்வரூபமான ஞானஸ்வரூபத்தில் - ஞான அபாவரூபமான அஞ்ஞானம் என்பது இருக்கமுடியாது ஸம்வித் அபாவம் இருக்கிறதென்ருல் எதுவுமே ப்ரகாசிக்க முடியாது.

2. புத்தி அபாவம் ஸம்வேதனத்தில் இருக்கிறதென்று சொல்லலாமே என்ருல் புத்தி என்பது ஸம்வேதனத்தில் இருக்கிறதென்று சொல்லப்பட்டால்தான் புத்தியின் அபாவம் இருக்கிறது என்று சொல்லலாம். அவ்விதம் புத்தி அபாவம் என்பது ஸம்வேதனத்தில் எப்போதும் இருப்பதாகச் சொல்லப்படுமாஞல் ஸம்வேதனம் என்பதே ப்ரகாசிக்கமுடியாது. ஆகவே அஞ்ஞானம் ஸம்வித் அபாவரூபமென்ருே புத்தி அபாவரூபமென்ருே சொல்லமுடியாததால் அஞ்ஞானம் பாவரூபமென்றே ஒத்துக்கொள்ளவேண்டும்.

**131.** அவதாரிகை : ஆகையால் அபாவவிலக்ஷண அஞ்ஞானம் என்பதையே ஒத்துக்கொள்ள வேண்டும்.

**ச்லோகம் :**

तस्मादशेषजगदेकनिदानभूतमज्ञानमात्मविषयं न विरुद्धमृचुः ।
वेदावसानवचनानि मुनीश्वराश्चस्थानेषु भूरिषु ततोऽवकरो न कश्चित्

**ச்லோகார்த்தம் :** ஆகையால் ஸம்ஸ்த்தப்ரபஞ்சத்திற்கும் ஏககாரணமாக இருக்கின்ற ஆத்ம விஷயகமாக இருக்கின்ற அஞ்ஞானத்தைப் பற்றி வேதாந்த வாக்யங்களோ ஆசார்யர்களோ பல இடங்களில் விருத்தமாக எதுவும் சொல்லவில்லே. ஆகையால் இதில் எந்தவிதமான அனுபபத்தியும் கிடையாது.

**வ்யாக்யானம் :** இந்தவிதம் அஞ்ஞானம் பாவரூபம் என்று சொல்லப்படுவதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லே. ஆகவே அஞ்ஞானகார்யமான அஹங்காரம் அதஞல் ஏற்படும் துக்கம் என்பவைகள் எல்லாம் ஸுஷுப்தியில் இல்லாத காரணத்திஞல் ஸம்ஸார அபாவம் சொல்லப்படுகிறதேயன்றி அஞ்ஞானமே இல்லேயென்ற காரணத்திஞல் ஸம்சாரம் இல்லேயென்று வேதவசனமோ, அல்லது சாஸ்திரமறிந்த பெரியோர்களாலோ சொல்லப்படவில்லே. ஆகையால் இதில் எந்தவிதமான விரோதமுமில்லே என்பதை தெரிவித்து இந்த விஷயத்தை முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**132.** அவதாரிகை : (இதுவரையில் சுஷுப்தியில் ஆத்மாசுத்தம் என்று சொல்லப்படுவதால் அஞ்ஞானம் எப்படி இருக்கமுடியும் என்ற ஆக்ஷேபத்திற்கு பதில் சொல்லப்பட்டது.) இப்போது ஆத்மாவில் கர்த்ருத்வம் போக்த்ருவத்வங்கள் ஸ்வாபாவிகமாக இருக்கிறதா என்ற விஷயத்தையும் இதேபோல் சாக்ஷித்வம், ப்ரமாத்ருத்வம் முதலான தர்மங்கள் இருக்கிறதா இல்லையா என்று விசாரித்து அவைகள் எதுவும் ஆத்மாவில் இல்லை என்று நிராகரிக்கப்படுகிறது.

ச்லோகம் :

साक्षित्वमात्मतमसा मतिकञ्चुकेनमातृत्वमेतदपि नेह सुषुप्तिकाले ।
यद्धेतुकं भवति यत्र हि तद्विना तत्संभाव्यते न च तदत्र सुषुप्तिकाले

ச்லோகார்த்தம் : ஆத்ம அஞ்ஞானத்தினுல், ஆத்மாவிற்கு சாக்ஷித்வம் ஏற்படுகிறது. புத்தி உபாதியினுல் ஆத்மாவிற்கு ப்ரமாத்ருத்வம் ஏற்படுகிறது. இந்த ப்ரமாத்ருத்வம் என்பதும் சுஷுப்திகாலத்தில் கிடையாது. ஏனெனில் எந்த காரணத்தினுல் எது ஏற்படுகிறதோ அது அந்தகாரணம் இல்லாமல் ஸம்பவிக்கின்றதில்லை. சுஷுப்தி காலத்தில் புத்தி என்ற உபாதி கிடையாது.

வ்யாக்யானம் : நிர்விசேஷமான ஆத்ம சைதன்யத்தில் சாக்ஷி என்ற தன்மையோ, ப்ரமாதா என்ற தன்மையோ உண்மையில் கிடையாது. அவித்யை என்ற உபாதியைக் கொண்டு சாக்ஷித்வமும், அந்த : கரணம் என்ற உபாதியைக் கொண்டு ப்ரமாத்ருத்வமும் சொல்லப்படுகிறதேயன்றி இவைகள் ஸ்வாபாவிகமில்லை.

பூர்வ : சாக்ஷித்வம், ப்ரமாத்ருத்வம் என்பதெல்லாம் ஔபாதிகம் என்று சொல்லப்பட்ட போதிலும், ஸ்வாபாவிகம் என்றே சொல்லலாமே? எப்படி வஸ்த்ரத்தில் உள்ள கலர் ஔபாதிகமாக இருந்தாலும் அந்த வஸ்த்ரம் உள்ள பர்யந்தம் அந்த கலரும் இருக்கின்றதால் அதை ஸ்வாபாவிகம் என்று சொல்லலாமே?

சித்தா : அவ்விதம் சொல்லமுடியாது. வெளுப்பு என்பதே வஸ்த்திரத்தின் ஸ்வபாவம். கலர் என்பது ஔபாதிகம்தான். ஆனுல் ஒரு ஸமயம் வஸ்த்ரம் உள்ளபர்யந்தம் கலர் என்பது இருந்தாலும்கூட அந்த உதாகரணத்தைக் கொண்டு சைதன்யத்திற்கு சாக்ஷித்வம் முதலானவைகள் ஸ்வாபாவிகம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் சைதன்யம் ஸர்வதாப்ரகாசித்துக் கொண்டிருக்கின்றது. அதுபோல் சாக்ஷித்வம் என்பதும், ஸர்வதாசைதன்யம் இருக்கின்றபோதெல்லாம் இருக்கிறது என்று சொல்லமுடியாது. சுஷுப்தி காலத்தில் சாக்ஷித்வம் சொல்ல முடியாதாகையினுல் வ்யபிசாரம் ஏற்படுகிறது.

பூர்வ : சுஷுப்தியில் அவித்யை இருக்கின்ற போது சாக்ஷித்வம் இல்லையென்று எப்படி சொல்லமுடியும்?

சித்தா : அவித்யா மாத்ரமாக இருக்கின்றபோது சாக்ஷி என்று சொல்லமுடியாது. ஆனுல் அவித்யாகார்யமான சாக்ஷ்யங்கள் இருக்கின்றபோதே அவைகளுக்கு ஆத்மா சாக்ஷியாக இருக்கின்றது என்று சொல்லலாம்.

பூர்வ : சுஷுப்தி அவஸ்த்தையிலும் சாக்ஷ்யங்கள் இருப்பதாகச் சொல்லலாமே?

சித்தா : 'நத்விதீய மஸ்தி' என்று ச்ருதிவாக்யமே இரண்டாவது வஸ்து எதுவுமே இல்லையென்று தெரிவிக்கின்றது. அது மட்டுமல்ல, அந்த:கரண உபஹித சைதன்யம்தான் சாக்ஷி என்று சொல்லப்படுகிறது. அதனுல் அவித்யாகார்யமான அந்த:கரணம் இருக்கின்றபோதுதான் சாக்ஷி என்றே ப்ரமாதா என்றே சொல்லமுடியும். அவ்விதமின்றி, அவித்யாமாத்ர உபாதிகமாக சைதன்யம் இருக்கின்றபோது சாக்ஷித்வம் சொல்லப்படுமானுல் மற்ற எல்லோருடைய சுகதுக்க அனுபவங்கள் எல்லாம் அவனுக்கும் அறியப்படுகிறது என்று சொல்ல நேரிடும். ஆகையால் அவரவர் அந்த:கரண உபஹிதமான சைதன்யமேசாக்ஷியாக இருந்து, அதிலுள்ள சுகதுக்கங்களை மட்டும் ப்ரகாசப்படுத்துகின்றது என்று சொல்லலாம். ஆகவே, அந்த:கரணம் என்பது உபாதியாகவும், விசேஷணமாகவும் இருக்கின்ற இடத்தில்தான் சாக்ஷி என்றும், ப்ரமாதா என்றும் சொல்லலாம்.

இந்த விஷயத்தில் வேறு சிலர் வேறு விதமாக அபிப்ருயம் தெரிவிக்கின்ருர்கள். அதாவது, அவித்யா ப்ரதிபிம்பத்தையும் சாக்ஷி என்றுசொல்லலாம் என்றும் அதனுல் தோஷம் ஏதுமில்லை என்றும் ஏனெனில் சுகம் அஞ்ஞானம் என்ற இரண்டிற்கும் சாக்ஷி ஸம்பந்தம் இருந்தாலும் கூட, ப்ரமாதாவின் ஸம்பந்தம் கிடையாது. ப்ரமாதாவும் ஏகம் என்று சொன்னுல் தான் ஒருவருடைய சுகதுக்கம் மற்றவர்களுக்கும் அறியப்படவேண்டுமே என்ற ஆக்ஷேபத்திற்கு இடமுண்டாகும். ப்ரமாதாவின் புத்தி அவச்சின்ன சைதன்யத்தில் தான் விஷய அபரோக்ஷம் ஏற்படும். அதாவது சைதன்ய ஸம்பந்தம் நேரிடையாகவோ, வ்ருத்தி மூலமாகவோ விஷயத்துடன் ஸம்பந்தப்படுகின்றபோதுதான். அந்த புத்தித்வாரா சாக்ஷிசைதன்யம் விஷயங்களை ப்ரகாசப்படுத்தமுடியும். அதனுல் அவரவருக்கு அந்தந்த விஷயங்கள் அபரோக்ஷமாக ஆகின்றது. ஒருவருடைய ப்ரமாத்ரு அவச்சின்ன சைதன்யத்தினுல் ப்ரகாசப்படுத்தப்படும் சுகாதிகளுக்கும் மற்றவர்களுக்கும் ஸம்பந்தம் கிடையாது. ஆகையால் ஆத்மா ஏகம் என்பதும் அவித்யா ப்ரதிபிம்ப சைதன்யம் சாக்ஷி எனபதும் ஏகமாக இருக்கலாம். ஸ்வம் என்றும் பரம் என்றும் ஏற்படும் விவகாரங்கள் அவரவர்குரிய அந்த:கரணத்தினுல் ஏற்படுகிறது. அதனுல் சுஷுப்தியில் ஆவ்ருதமாக இல்லாத சாக்ஷியில் எல்லோருடைய சுகாதிகளும் அத்யஸ்த்தம் என்று சொல்லப்பட்டாலும் கூட எல்லோருக்கும் எல்லாமே அறியப்பட வேண்டும் என்ற ஆக்ஷேபத்திற்கு அவகாசமில்லை என்று இந்தவிதம் அவித்யாவ்ருத்தியைப்பற்றி சொல்லப்பட்ட இடத்தில் முன்பே சொல்லப்பட்டிருக்கிறது.

இதேபோல் ஸ்வப்னத்திற்கு சாக்ஷியாக இருக்கின்றபோதும், அவரவர் வாஸனுமய புத்திஅவச்சின்னசாக்ஷியினுல்தான் அவைகள் ப்ரகாசிக்கின்றது. சுஷுப்தி அவஸ்த்தையிலும் சூக்ஷ்மபுத்தி அவச்சின்னசைதன்யம் இருக்கின்ற காரணத்தினுல்தான், அஞ்ஞானம் சுகம் என்பது எல்லாமே சூக்ஷ்மவ்ருத்தி காரணமாகவே அனுபவிக்கப்படுகிறது. அதனுல்தான் அஞ்ஞானம், சுகம், என்பவைகளின் ஸம்ஸ்க்காரம் ஏற்படுகிறது. ஆகவே ஸர்வசாக்ஷியாக இருக்குமானுல் மற்றவர்களுக்கும் பாரமர்சம் ஏற்படவேண்டுமே என்ற ஆக்ஷேபம் சரியல்ல. சூக்ஷ்ம புத்தி அவசேதகத்தினுலேயே சாக்ஷியிலும் பேதம் ஏற்படுகிறது. அதனுலேயே ஸர்வசாக்ஷியென்பதற்கு பொதுவாக

எல்லாஅனுபவமும் ஏற்படுவதாகச் சொல்ல முடியாது. ஆகேவ அவித்யா ப்ரதிபிம்பமே சாக்ஷி என்று சொல்லப்படும், அந்த:கரண உபஹிதம் தான் சாக்ஷி என்று சொல்ல வேண்டிய தேவையில்லை. அவித்யை என்பதும் விஷயம் என்பதால் அதற்கு சைதன்யம் சாக்ஷி என்றே சொல்லலாம்.

பூர்வ : சுஷுப்தியில் அஞ்ஞான அனுபவம், சுகானுபவம் என்பதெல்லாம் இருக்கிறது என்றால், அந்த அனுபவம் சைதன்யத்துடன் கூடிய அந்த:கரண ப்ரதி பலன சைதன்யமான ப்ரமாதாவிற்கு ஏற்படுகிறது என்றுதானே சொல்ல வேண்டும்? அப்படியானல் சுஷுப்தியிலும் ப்ரமாத்ருத்வம் இருப்பதாக சொல்ல நேரிடும். ப்ரமாத்ருத்வம் இருக்குமானல் அஹங்காரம் இருக்கிறது என்றுதானே சொல்ல வேண்டும்?

சித்தா : சுஷுப்தியில் ஏற்படும் அஞ்ஞான அனுபவம், சுகானுபவம் என்பதெல்லாம் அவித்யாவ்ருத்தியினுல்தான் ஏற்படுகிறது. (அந்த : கரண வ்ருத்தியினுல் ஏற்படவில்லை) அவித்யாப்ரதிபிம்ப சைதன்யமேசாக்ஷி. அந்த சாக்ஷியினுல் அவித்யை என்பதால் சைதன்யம் ப்ரகாசப்படுத்துகின்றது என்பதால் அவித்யைக்கு சாக்ஷி என்று சொல்லப்படுகிறது. அதனுல் அஹங்கார அபேக்ஷை கிடையாது. அதனுல் சுஷுப்தியில் சாக்ஷித்வம் சொல்லலாமே தவிர ப்ரமாத்ருத்வம் சொல்லமுடியாது. அவித்யையுடன் அந்த:கரணம் என்ற மதிகஞ்சுகம் (சட்டை) என்பதுடன் கூடி இருக்கின்ற சைதன்யத்திற்கே ப்ரமாத்ருத்வம் சொல்லலாம், அவித்யாமாத்ரமாக இருக்கின்றபோது ப்ரமாத்ருத்வம் சொல்ல முடியாது. ஹேது அபாவே பல அபாவம் என்று, எதற்கு எது காரணமோ அந்த காரணம் இல்லாவிடில் அதன் கார்யமும் இருக்காது என்ற வ்யாப்தியைக் கொண்டு சுஷுப்தியில் ப்ரமாத்ருத்வம் இல்லையென்றே சொல்லவேண்டும்.

பக்ஷதர்மமான அந்த:கரணம் என்பதும் சுஷுப்தியில் இல்லை, எப்படி வன்னி இல்லை என்பதைக்கொண்டு தூமமில்லையென்று அறியப்படுகிறதோ அதுபோல் ப்ரமாத்ருத்வத்திற்கு காரணமான அந்த:கரணம் இல்லாததால் அதன் கார்யமான ப்ரமாத்ருத்வமும் இல்லையென்றே அறியவேண்டும்.

**133.** அவதாரிகை : அஞ்ஞானம் எனக்கு இருக்கிறது என்று சுஷுப்தியவஸ்த்தையில் ப்ரமாதாவிற்கு அனுபவம் இல்லாத காரணத்தினுல், அஞ்ஞானமோ அதன் கார்யமோ எதுவுமே சுஷுப்தியில் இல்லையென்றே சொல்லலாமே?

ச்லோகம் :

अज्ञानमस्ति सकलं हि सुषुप्तिकालेतत्र प्रलीनमिति यद्यपि नास्ति पुंसः ।
स्पष्टानुभूतिरपवर्गविलक्षणत्वादेष्टव्यमेव तु सुषुप्तिभुवस्तथात्वम्

**ச்லோகார்த்தம் :** சுஷுப்தி காலத்தில் அஞ்ஞானம் இருக்கின்றது, ஸர்வமும் அதில் லயம் அடைந்திருக்கின்றது. புருஷனுக்கு அஞ்ஞானத்தின் அனுபவம் ஸ்பஷ்டமாக இல்லையென்ற போதிலும், சுஷுப்தி அவஸ்த்தை என்பது மோக்ஷத்திற்கு விலக்ஷணமாக இருக்கின்றதால் (சுஷுப்தியில் அஞ்ஞானம் இருக்கின்றதென்றே அவஸ்யம்) அவ்விதம் ஒப்புக்கொள்ளப்பட வேண்டும்.

வ்யாக்யானம் : சுஷுப்தியில் அஞ்ஞானமே இல்லையென்று சொல்லப்படுமானல் முக்திக்கும் சுஷுப்திக்கும் வைலக்ஷண்யம் இருப்பதாகச்சொல்லமுடியாது. சுஷுப்தியிலிருந்து புருஷன் எழுந்து மறுபடி கர்ம பலனை அனுபவிப்பதிலிருந்தே அஞ்ஞானம் தன் கார்யத்தை தன்னுள் அடங்கி சூக்ஷ்ம ரூபமாக இருக்கிறதென்றே சொல்லவேண்டும். ஸம்ஸ்க்காரரூபேண அஞ்ஞானகார்யம் அஞ்ஞானத்தில் லயத்தை அடைந்திருக்கிறதென்றே சொல்லவேண்டும்.

**134.** அவதாரிகை : சுஷுப்தியில் அஞ்ஞானம் சைதன்யம் என்ற இரண்டையும் வேறுபடுத்தி அறிந்து கொள்ளமுடியவில்லை. அதனல் என்னிடம் விவேகஞானமில்லை என்று சொல்லலாமேயன்றி அஞ்ஞானம் சூக்ஷ்மமாக இருக்கிறதென்று எப்படிச் சொல்வது ?

ச்லோகம் :

एवं सतीह तमसो न विविच्य वस्तुसाक्षान्निवेदयितुमस्ति निदर्शनं चेत् ।
नैतत्परागवगतेर्विषयो विभातिगाढं तमो न तु तथाऽवगतिः प्रतीचि

ச்லோகார்த்தம் : சுஷுப்த நிலையில் அஞ்ஞானத்திலிருந்து வேருக பிரித்து நேரிடையாக தெரிவிக்கக்கூடிய த்ருஷ்ட்டாந்தமே கிடையாது என்ற ஆக்ஷேபம் சரியல்ல. காடமான அஞ்ஞானம் என்பது த்ருச்யமாக அறியப்படுகிறது என்பதனலேயே அனுபவத்திற்கு விஷயமாக ஸ்புரிக்கின்றது. ப்ரத்யகாத்ம விஷயத்தில் இவ்வித அனுபவம் கிடையாது.

வ்யாக்யானம் : ஆத்மா - அஞ்ஞானம் என்ற இரண்டையும் வேறுபடுத்தி அறிவிக்கக் கூடிய ப்ரமாணம் இல்லாததால், அஞ்ஞானமே இல்லையென்றோ அல்லது அஞ்ஞானமும் ஆத்மஸ்வரூபமாகவே இருக்கிறதென்றோ சொல்லமுடியாது. ஏனெனில் ஜடமான அஞ்ஞானம் ஆத்ம ஸ்வரூபமாக இருக்க முடியாது. அஞ்ஞானம் என்பது பராக்விஷயமாகவே இருந்து அனுபவிக்கப்படுகிறது. சாக்ஷிக்கு விஷயம் அஞ்ஞானம். அந்த அஞ்ஞானம் ஆத்மாவினல் அனுபவிக்கப்படுகின்றதால், அனுபவத்திற்கு விஷயமாகின்ற அஞ்ஞானம் ஆத்மாவிற்கு ஸ்வபாவம் என்று சொல்லமுடியாது.

**135.** அவதாரிகை : இதுவரை விசாரிக்கப்பட்ட விஷயத்தினல் கிடைத்த லாபம் என்னவென்றல்,

ச்லோகம் :

प्रत्यक्पराग्विषयवस्तुविवेचनाय क्लेशो न संभवति कस्यचिदत्र जन्तोः ।
दृश्यं तमो घटपटादिवदेष तस्य द्रष्टा सुषुप्तिभुवि चिद्घनविग्रहोऽभूत्

ச்லோகார்த்தம் : ஒரு மனுஷ்யனுக்கு ப்ரத்யக, பராக்விஷயங்களை விவேசனம் செய்வதில் எவ்வித க்லேசமும் ஸம்பவிக்காது. சுஷுப்தியில் அஞ்ஞானம் என்பது கடபடாதிகள் போல் த்ருச்யமாக இருக்கின்றது. சித்ரூபமான ஆத்மா அதற்கு த்ரஷ்ட்டாவாக இருக்கின்றது.

வ்யாக்யானம் : சுஷுப்தியில் அஞ்ஞானம் இருக்கின்றது என்ற விஷயமும் த்ருச்யமான அஞ்ஞானத்திற்கு சாக்ஷியாக இருக்கின்ற சைதன்யத்தினுல் அவித்யாவ்ருத்தி மூலமாக அஞ்ஞான அனுபவம் ஏற்படுகிறது என்றும், அதனுலேயே எழுந்தவுடன் அஞ்ஞானம் இருந்தது என்ற பராமர்சம் ஏற்படுகிறது என்றும் சொல்லப்பட்டது. இதனுல் நிர்விசேஷமாகவும், சித்கனமாகவும் அஸங்கமாகவும் இருக்கின்றகேவல சைதன்யத்தினுல் மட்டும் அஞ்ஞானம் ப்ரகாசப்படுத்தப்படுவதாகச் சொல்லமுடியாது என்பதால் உபாதி ஸம்பந்தத்தினுல் தான் ப்ரகாசப்படுத்தப்படமுடியும் என்பதால், அவித்யாவ்ருத்தியை கல்பித்து அஞ்ஞானம் இருக்கின்றது என்பதை சித்தம் செய்யப்பட்டது.

பூர்வ : அஞ்ஞானம் என்பது, அவித்யாவ்ருத்தி ப்ரதிபலனமான சைதன்யத்தினுல்தான் ப்ரகாசப்படுத்தப்படுகிறது. சாக்ஷி என்பது நித்யம் என்ருலும், அஞ்ஞான அனுபவம் என்பது, ஸம்ஸ்க்காரத்தை உண்டு பண்ணினபிறகு இருப்பதில்லை. ஸம்ஸ்காரத்தினுல் தான் அந்த அனுபவம் ஸ்மரிக்கப்படுகிறது என்று சொல்லப்படுமானுல், நித்யமான சாக்ஷி சைதன்யத்தினுல் ஏற்பட்ட அனுபவம் என்பது அநித்யம் விநாசி என்று சொல்லப்படுமானுல் அதனுல் ஏற்பட்ட ஸம்ஸ்க்காரம் மட்டும் எப்படி இருக்க முடியும்? அதனுல் எப்படி பராமர்சம் ஏற்பட முடியும்?

சித்தா : அஞ்ஞானம் என்பது அவித்யாவ்ருத்தி ப்ரதிபலன சைதன்யத்தினுல்தான் ப்ரகாசப்படுத்தப்படுகிறது. அந்த வ்ருத்தி ப்ரதிபலனசைதன்யம் நித்யமில்லை. அதனுல் அநித்யமான அனுபவமும் ஏற்படலாம், அந்த அனுபவத்தினுல் பராமர்சமும் ஏற்படலாம். கேவலசைதன்யத்தினுல் அஞ்ஞான அனுபவம் சொல்லப்படவில்லை. அவித்யாவ்ருத்தி உபாதிகமான சைதன்யமே அவித்யையை ப்ரகாசப்படுத்துகின்றதால் வ்ருத்திக்கு நாசம் ஏற்பட்ட போதிலும், வ்ருத்தியினுல் ஏற்பட்ட அனுபவம் ஸம்ஸ்காரத்தை உண்டு பண்ணலாம். அதனுல் இதில் ஸந்தேகத்திற்கே இடமில்லை. உபாதி ஸம்பந்தமற்ற நிர்விசேஷ சித்கனமான சுத்த சைதன்யம் அஸங்கம் என்பதால் த்ரஷ்ட்ருத்வம் ஸம்பவிக்காது. அதனுல்தான் வ்ருத்தியை கல்பிக்க வேண்டி இருக்கிறது. மேலும் சுஷுப்தி நிலையில், சைதன்யம் ப்ரகாசம், அவித்யை ப்ரகாச்யம் த்ருச்யம் என்று விவேசனம் செய்து அறிய முடியவில்லை என்ருலும், எழுந்தவுடன் ஏற்படும் பராமர்சத்தைக் கொண்டு விவேசனம் செய்து அறியலாம். எப்படியெனில், சுஷுப்தியிலிருந்து எழுந்தவுடன் 'நான் இதுவரை ஒன்றும் அறியாமல் இருந்தேன்' என்று ஏற்படும் பராமர்சத்தினுல், 'நான்' என்பது அனுபவம் ஏற்பட்டவனை தெரிவிக்கின்றது. 'நகிஞ்சித் அவேதிஷம்' என்பது அஞ்ஞானத்தை தெரிவிக்கின்றது. இதனுல் அஹம் என்ற ஆத்மாவேத்ரஷ்ட்டா என்றும், அஞ்ஞானம் த்ருச்யம் என்றும், ஆத்மா என்பது விஷயீ என்றும் அஞ்ஞானம் என்பது விஷயம் என்றும் ஸ்பஷ்ட்டமாக ஜாக்ரத் காலத்தில் அறியப்படுகிறது.

136. அவதாரிகை :

இவ்விதம் அவித்யை என்பதும் ஆத்மா என்பதும் வேறு என்பதாக சுஷுப்த நிலையில் விவேசனம் செய்து அறிவது தான் சிரமம். ஆனுல் எழுந்தவுடன், சுஷுப்தி நிலையில் ஏற்பட்ட அனுபவத்தின் பராமர்ஸத்தைக்கொண்டு இரண்டும் வேறு என்று

விவேசனம் செய்ய முடியும் என்பது சித்திக்கின்றது. அதே காரணத்தைக் கொண்டு மற்ற அவஸ்த்தைகளிலும், அந்த அவஸ்த்தைகளைக் காட்டிலும் ஆத்மா வேறு என்று இரண்டிற்குமுள்ள வேறுபாடுகளை சுலபமாகவே அறிந்து கொள்ளலாம்.

**ச்லோகம் :**

तिस्रोऽपि चिद्घनतनोस्तव दृश्यभूता दूरे चकासति मतेर्बहिरेव तावत् ।
आविस्तिरोभवनधर्मतया ह्यवस्थाः कः संकरो विमलचिद्वपुषश्च ताभिः

**ச்லோகார்த்தம் :** த்ருச்யமாக இருக்கின்ற புத்தியினுடைய மூன்று அவஸ்த்தைகளும், சித்ரூபமான உன்னிடதிலிருந்து வேருக ப்ரகாசிக்கின்றது. ஆகையால் அவைகள் உனக்கு பாஹ்யமாகவே இருக்கின்றது. ஆவிர்பாவம், திரோபாவம் முதலான தர்மங்களையுடையதாக இருக்கின்றதால் இவ்வித அவஸ்த்தைகளுடன், சுத்தசைதன்ய ஸ்வரூபனுன உனக்கு என்ன ஸம்பந்தம் இருக்க முடியும்?

**வ்யாக்யானம் :** அவஸ்த்தைகள் மூன்றும் ஆத்ம சைதன்யத்திற்கு உபாதியாக இருக்கின்ற அந்த:கரண தர்மங்கள். ஞான ஸ்வரூபமான உன்னுல் அவைகள் அறியப்படுகிறது. நான் விழித்திருக்கிறேன், ஸ்வப்ன போகங்களை அனுபவித்தேன் நான் நன்ருக தூங்கினேன் என்பது போன்ற விவகாரங்களைப் பற்றி தெரிவிக்கின்றபோது, அவையெல்லாம் ஆத்மதர்மம் போல் தோன்றினபோதிலும், த்ருச்யம் என்பது த்ரஷ்ட்டாவின் தர்மமாக இருக்கமுடியாது. ஆத்மா என்பது உற்பத்தி விநாசம் அற்றது. உற்பத்தி விநாசமுடைய அவஸ்த்தைகள் ஆத்மாவின் தர்மமாக இருக்கமுடியாது. தனக்கு வேருகவும், விஷயமாகவும் அறியப்படுகின்றதால், விமலஸ்வரூபமான நீயும், அவஸ்த்தைகளும் ஒன்று என்று சொல்லவதற்கு முடியாது.

**137.** அவதாரிகை : அப்படியானுல் நான் விழித்திருக்கின்றேன், நான் தூங்கினேன் என்று அனுபவம் ஏற்படுகின்றதே? அதனுல் அவஸ்த்தைகள் அந்த:கரண தர்மமென்றே சொல்லப்பட்டாலும் கூட அவைகள் ஆத்மாவை ஆச்ரயித்து இருக்கின்றதென்றே சொல்லவேண்டும். ஏனெனில் அவைகள் ஸ்வந்தரமாக இருக்கமுடியாது, ஆத்மாவையன்றி வேருன ஒன்றில் இருப்பதாகவும் சொல்லமுடியாது. அதனுல் ஆத்மாவிற்கு புத்தி ஸம்பந்தம் இருப்பதாகவே சொல்லவேண்டும். அவ்விதம் சொல்லப்படுமானுல் அத்வைதம் தத்வம் என்பதற்கு ஹானி ஏற்படுகிறது. அதுமட்டுமல்ல ஆத்மா சுத்தம் என்றும் சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

त्वय्येव कल्पितमहंकरणं बिभर्ति तिस्रोऽपि ताः सहितमेव तु तच्च ताभिः ।
त्वच्चित्प्रकाशविषयत्वमुपेत्य भाति स्वाज्ञानवत्तव न रूपमतश्चतुष्कम्

**ச்லோகார்த்தம் :** உன்னிடத்தில் இருக்கின்ற கல்பிதமான அஹங்காரமே இந்த மூன்று அவஸ்த்தைகளையும் அடைகின்றது. அவைகளுடன் அந்த அஹங்காரம் என்பது அஞ்ஞானத்தைப் போல் உன்னுடைய சைதன்ய ப்ரகாசத்திற்கு விஷயமாக ஸ்புரிக்கின்றது. ஆகையால் இந்த நான்கும் உன்னுடைய ஸ்வரூபமல்ல.

வ்யாக்யானம் : அவஸ்த்தைகள் மூன்றும் அந்த : கரணத்தில்தான் இருக்கின்றது. அந்த:கரணம் என்பது ஆத்மாவில் அத்யஸ்த்தம். அதனுல் ஆத்மாவிலியே இருப்பதாக தோன்றுகிறது. கல்ப்பிதமான அந்த:கரணமோ, அதன் தர்மங்களோ எதுவும் உன்னிடத்தில் ஸம்பந்தப்படுவதில்லே. அவையெல்லாமே த்ருச்யம் என்பதாலும், அத்யஸ்த்தமாக இருக்கின்றதால் உண்மையில் இல்லே என்பதாலும், அசுத்தமுமில்லே, அத்வைத ஹானியுமில்லே. ஆகவே, அஹங்கரணத்திற்கு ஆத்மாசாக்ஷி என்றும் அஹங்கரணம் சாக்ஷ்யம் என்றும் விவேசனம் செய்து அறியவேண்டும். இவையெல்லாமே ஆத்மாவையன்றி வேருக ஸ்வதந்த்ரமாக ப்ரகாசிக்க முடியாது. அஞ்ஞானம் முதல் அதன் கார்யமான அவஸ்த்தை முதலான ஸர்வமும் த்ருச்சயம் என்பதால் அவை எல்லாமே ஆத்மதர்மமல்ல. அஸங்கமான ஆத்ம ஸ்வரூபத்தில் அத்யஸ்த்தமான அந்த:கரணத்துடனும் ஸம்பந்தம் என்பது ஏற்படமுடியாது. ஆகையால் ஆத்மாவிற்கு அசுத்தி என்பதே கிடையாது.

**138.** அவதாரிகை : அவஸ்த்தைகளுடன் கூடிய அந்த:கரணம் கல்ப்பிதம் என்று சொல்லப்படுவதில் ப்ரமாணம் என்ன ?

ச்லோகம் :

नान्वेति तत्तव चिता व्यतिरेकिता तु दूरे न संभवति तस्य चतुष्टयस्य ।
नाभावरूप भजनाय समर्थमेत देवं चिदेव तु चतुष्ट्यमेतदासीत्

ச்லோகார்த்தம் : அந்த நான்கும் உன்னுடன் (ஸ்வரூபத்தினுலோதர்மத்தினுலோ) ஸம்பந்தப்படுவதில்லே. உன்னேக் காட்டிலும் முற்றிலும் வேருக இருப்பதென்பதும் ஸம்பவிக்காது. அவைகள் அபாவரூபமாக இருப்பதற்கும் தருதி உடையதல்ல. இவ்விதம் சைதன்யம் என்ற ஒன்றே நான்கு விதமாகவும் தோன்றுகிறது.

வ்யாக்யானம் : அவஸ்த்தைகள், அஹங்கரணம் என்ற இந்த நான்கும் ஆத்மாவில் பரமார்த்தமாக இல்லேயென்றே சொல்லவேண்டும். அவ்விதம் ஒத்துக்கொள்ளாமல், அவையெல்லாம் பாரமார்த்திகம் தான் என்று சொல்லப்படுமானுல், இந்த நான்கும் ஆத்மாவிற்கு அபின்னமா ? அல்லது பின்னமா ? (ஆத்மாவிற்கு வேருக இருக்கிறதா ?) என்று விசாரிக்கவேண்டும்.

ஜடத்திற்கும், சைதன்யத்திற்கும் வாஸ்த்தவமான ஸம்பந்தம் சொல்லமுடியாது. அதனுல் சித்ஸ்வரூபமான ப்ரத்யக்ஸ்வரூபத்துடன் புத்தி முதலான அவஸ்த்தைகளுக்கு அபேதம் சொல்லமுடியாது. ஜடமான இவைகளுக்கு ஆத்மாவையன்றி வேறு ஆச்ரயமும் எதுவும் கிடையாது. ஜடமான வஸ்த்துக்கள் இருக்கின்றது என்பதற்கு ப்ரமாணமே ஏதுமில்லே. ஆகையால் அவைகள் ஸ்வதந்த்ரமாக இருக்கிறதென்றும் சொல்லமுடியாது. இந்த விதம் அஞ்ஞான கல்ப்பிதமான ஜடவஸ்துவிற்கு ஸ்வதந்த்ரமாக ஸத்தா ஸ்பூர்த்தி (ஸ்புரணம்) கிடையாது என்று சொல்லப்படுகிறது என்பதற்காக அவைகளே அஸத் என்றும் சொல்ல முடியாது. ஏனெனில் அபரோக்ஷமாக அறியப்படுகிறது. (அஸத்சேத் நப்ரதீயேத) ஆகவே, ஆத்ம ஸ்வரூபத்தில் அத்யஸ்த்தமான அவித்யையினுல் இவையெல்லாம் அவ்வப்போது தோன்றுகிறது. அதனுல் ஆத்மா சுத்தம் என்றே சித்திக்கின்றது. ஆத்மாவையன்றி எந்த வஸ்த்துவும் வேருக இருக்கின்றதென்றே,

இருக்கப் போகின்றதென்றோ சொல்வதற்கு எந்த விதத்திலும் முடியாது. அதனால் சித்ரூபமான ப்ரத்யக் ஸ்வரூபம் அத்வைதம் என்பதில் விரோதமோ, ஹானியோ எதுவும் கிடையாது.

**139.** அவதாரிகை : ஸர்வமும் கல்பிதம் என்றால் ஆத்மாவும் கல்ப்பிதம் என்றே சொல்லலாமே? அவ்விதம் சொல்ல முடியாது என்பதற்கு காரணம் என்ன?

ச்லோகம் :

**जाग्रत्स्वप्नसुषुप्तिमूर्छिततनूनिष्क्रान्त्यवस्थासु यच्चैतन्यं व्यभिचारिणीष्वनुगतं तत्सत्यमेवाऽऽत्मनः ।**
**यत्किंचिद्व्यभिचारि तन्ननु मृषा स्रक्सर्पदण्डादिवन्नानुस्यूतचिदात्मवस्तु वदितुं शक्यं मृषा वस्तुवत्**

ச்லோகார்த்தம் : ஜாக்ரத், ஸ்வப்னம், சுஷுப்தி, மூர்ச்சை, மரணம் என்ற வ்யபிசரிக்கின்ற அவஸ்த்தைகளில் எந்த ஆத்ம சைதன்யம் அனுவ்ருத்திக்கின்றதோ அதுவே ஸத்யமாகும். மாலை, ஸர்ப்பம், தண்டம் இவைகளைப்போல் எது வ்யபிசரிக்கின்றதோ அது, மித்யையேயாகும். எது கயிற்றைப் போல் அனுவ்ருத்திக்கின்றதோ அந்த சிதாத்ம வஸ்துவை மித்யை என்று சொல்வதற்கு முடியாது.

வ்யாக்யானம் : த்ருச்யமெல்லாம் கல்ப்பிதம் என்பதற்காக த்ருக்ஸ்வரூபமும் கல்ப்பிதம் என்று எப்படிச்சொல்லமுடியும்?

பூர்வ : த்ருக்ஸ்வரூபமான ஆத்மாவும் கல்பிதம்தான். ஏனெனில் கல்பிதமான த்ருச்ய வஸ்துக்கள் போல் ஆத்மா என்பதும் வஸ்துவாக இருப்பதால், கடம் போல் என்று அனுமானத்தினால் சாதிக்கலாமே?

சித்தா : இவ்விதம் சொல்லப்படும் அனுமானத்தில் வ்யபசரித்வம் என்பது உபாதியாக இருக்கின்றது என்பதால் உபாதி தோஷம் ஸம்பவிக்கின்றது. த்ருச்யமான வஸ்த்துக்கள் போல், த்ருக்ஸ்வரூபமான ஆத்மா என்பது வஸ்து என்று சொல்லப்பட்ட போதிலும், ஆத்மா என்பது ஸர்வ வஸ்துக்களிலும் தொடர்ந்து அவ்யபிசரிதமாக இருக்கின்றது. மற்ற த்ருச்யவஸ்த்துக்கள் அனைத்தும் வ்யபசரிக்கின்றது. அவஸ்த்தைகள் எல்லாம் மாறி மாறி ஒன்றுக்கொன்று வ்யபசரிதமாக இருந்தபோதிலும், அவைகள் எல்லாவற்றிலும் அனுஸ்யூதமாக இருக்கின்ற சைதன்யம் ஒரு போதும் வ்யபசரிப்பதில்லை. இந்த விதம் ஆத்மாவில் வ்யபிசாரம் என்பது இல்லாததால் இந்த அனுமானத்தில் ஸாதன அவ்யாபகத்வம் இருக்கின்றது. ஆகவே, ஆத்மாவும் கல்ப்பிதம், வஸ்துத்வாத், கடவத் என்ற அனுமானத்தில் வஸ்துத்வம் இருந்தாலும் வ்யபிசரித்வம் இல்லை. வஸ்துத்வம் இருக்குமிடத்தில் எல்லாம் வ்யபிசரித்வம் இருந்தால்தான் ஸாதன வ்யாபகத்வம் சொல்லமுடியும். அதனால் அனுமானத்தினால் ஆத்மாவும் கல்ப்பிதம் என்று சாதிக்க முடியாது. மற்ற த்ருச்யபதார்த்தங்கள் எல்லாமே வ்யபசரிதமாக இருக்கின்றதனாலேயே, மித்யை என்பதற்கு வ்யபிசரிதம் காரணம். (ஆகமாபாயியாக இருப்பதெல்லாமும் மித்யைதான்)

“சிதாத்ம வஸ்தும்ருஷா அல்ல. அனுஸ்யூதமாக இருப்பதால், ஆத்மாவையன்றி அன்யமான வஸ்த்துக்கள் எல்லாம் வ்யபிசரிக்கின்றதால் ம்ருஷாவாக இருக்கின்றது.

அதுபோல் ஆத்ம வ்யபிசரிப்பதில்லே என்று வ்யதிரேக த்ருஷ்ட்டாந்தத்தைக் கொண்டு சாதிக்கின்றோம்.

பூர்வ : சைதன்யத்திற்கு வேருக எந்த வஸ்துவும் இல்லேயென்று சொல்லப்படுவதால், ஸர்வ வஸ்துக்களும் சைதன்யம் என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அதனுல் வஸ்துக்கள் வ்யபிசரிக்கின்றது போல் சைதன்யமும் வ்யபிசரிப்பதாகச் சொல்லலாமே ? 'தத்ஸத்யம் ஸ ஆத்மா' என்று ச்ருதி வாக்யமும் ஸர்வமும் சைதன்யம் என்றுதானே தெரிவிக்கின்றது ?

சித்தா : ஸர்வமும் வ்யபிசரிக்கின்றது என்று அறியப்படுவதற்கு அவ்யபிசரிதமான சாக்ஷி ஒன்று இருக்க வேண்டும். அதனுல் இவைகளுக்கெல்லாம் சாக்ஷியாக அவ்யபிசரிதமாக இருப்பது எதுவோ அதுவே ஆத்மா, அதுவே ஸத்யம். சாக்ஷ்யங்கள் என்பதெல்லாம் அவ்வப்போது வந்து போகின்றதால் ம்ருஷா என்றே சித்திக்கின்றது. ஆகவே ஸர்வமும் சைதன்யம்தான் என்று சொல்வதற்காக, ஆத்மாவும் கல்ப்பிதம் என்று சொல்லலாமே என்ற ஆக்ஷேபம் அபத்தம்.

**140.** அவதாரிகை : இவ்விதம் கர்த்ருத்வம், போக்த்ருத்வம், சாக்ஷித்வம், ப்ரமாத்ருத்வம் என்பதெல்லாம் ஆத்மாவில் இல்லேயென்றும், அதனுல் அஞ்ஞானம் அதன் கார்யம் என்ற எல்லாவற்றைக் காட்டிலும் ஆத்மஸ்வரூபம் சுத்தம் என்றும் நிரூபணம் செய்யப்பட்டது. இவ்விதம் விசாரிக்கப்பட்டதன் மூலம் த்வம்பத லக்ஷ்யார்த்தம் என்னவென்று நிரூபணம் செய்யப்பட்டது. இந்த விஷயம் இப்போது முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

ச்லோகம் :

जाग्रत्स्वप्नसुषुप्तिधर्मकमिदं चित्तं त्वदज्ञानतः
प्रादुर्भूतमतस्त्वमेव सततं त्वत्तो न तद्भिद्यते ।
स्वाज्ञानं च तवानुभूतिबलतः सिद्धं मृषा तत्त्वतो
नाऽऽसीदस्ति भविष्यतीति भवतः पूर्णा चितिः शिष्यते

ச்லோகார்த்தம் : ஜாக்ரத், ஸ்வப்னம், சுஷுப்தி என்ற தர்மங்களேயுடைய இந்த சித்தம் உன் அஞ்ஞானத்தினுல் உண்டானது. ஆகையால் எப்போதும் நீ அதாகவே (அந்த வடிவமாகவே) இருக்கின்றுய். அது உன்னேயன்றி வேருக இல்லே. உன் அஞ்ஞானம் என்பது உன் அனுபவத்தினுல் சித்திக்கின்றது. அதனுல் அது மித்யையேயாகும். ஆகையால் அஞ்ஞானம் என்பது உண்மையில் இருந்ததுமில்லே. இருப்பதுமில்லே, (இனி) இருக்கப்போவதுமில்லே. ஆகையால் உன் பரிபூரண சின்மாத்ர ஸ்வரூபமே எஞ்சி இருக்கின்றது. அஞ்ஞானம் என்பதும் த்ருச்யமாகவும் வ்யபிசரிதமாகவும் இருக்கின்றதால் அஞ்ஞானம் மித்யை என்றே அறியவேண்டும். அஞ்ஞானம் என்பது உன் அனுபவத்திற்கு விஷயமாகின்றதால் த்ருச்யம், சைதன்யத்தினுல்தான் ஸத்தாஸ்பூர்த்தி என்பதும் ஏற்படுகிறது. அதனுல் அஞ்ஞான கார்யமான ஜாக்ரதாதி அவஸ்த்தைகள் போல் த்ருச்யமாக இருப்பதால் மித்யை என்றே சொல்லவேண்டும். அதனுல் அஞ்ஞான ஸம்பந்தமும் ஆத்மாவில் உண்மையில் காலத்ரயத்திலும் இருக்க முடியாது. ஆகையால் ஆத்மா நித்யசுத்த புத்த ஸ்வபாவம் என்று சொல்லப்படுவதில் தோஷம் ஏதுமில்லே.

**141.** அவதாரிகை : 'தர்க்க அப்ரதிஷ்ட்ட:' என்ற சூத்ரத்தில், எந்த ஒரு விஷயமாக இருந்தாலும், அது தர்க்கத்திளுல் தீர்மானிக்கப்படுகின்ற விஷயமாக இருக்குமாளுல் அது சரியாகத்தான் இருக்கும் என்று நிச்சயம் செய்யமுடியாது. ஏனெனில் அந்தவிஷயம் வேறொருதர்க்கத்தைக்கொண்டு பாதிக்கப்படலாம். அதளுல் இதுவரை தர்க்க பலத்தைக் கொண்டு சாதிக்கப்பட்ட விஷயம் சரி என்று எப்படி ஒத்துக் கொள்ள முடியும் ?

ச்லோகம் :

ज्योतिर्ब्राह्मणवाक्यमानबलतः संपूर्णरूपा चितिजाग्रत्स्वप्नसुषुप्तिधर्मरहिता मोक्षाय निश्चीयते ।
तस्मादस्मदुदीरितं स्वकवपुः श्रद्धत्स्व मानं विनानास्माभिः प्रतिपादिता चितिरियं वाक्यार्थसंबन्धिनी

ச்லோகார்த்தம் : ஜ்யோதிர்ப்ராஹ்மணம் என்ற (ப்ரஹதாரண்யக) வாக்யப்ரமாண பலத்திளுல், பரிபூரண சைதன்ய ஸ்வரூபம் என்பது ஜாக்ரத், ஸ்வப்ன, சுஷுப்தி தர்மம் அற்றது என்று மோக்ஷஹேதுவான வாக்யார்த்த போதம் ஏற்படுவதற்காக நிச்சயம் செய்யப்படுகின்றது. அதளுல் வாக்யார்த்த ஸம்பந்தமுடைய இந்த சைதன்யமானது ப்ரமாணமின்றி என்ளுல் சொல்லப்படவில்லை. ஆகவே ஸ்வஸ்வரூப போதத்தில் சிரத்தையுடன் இருக்க வேண்டும்.

வ்யாக்யானம் : ஆத்மா நித்யசுத்தம் என்று யுக்திகளால் சொல்லப்பட்ட விஷயம், அதற்கு அனுகூலமான ப்ரமாணத்தின் மூலமாகவே சாதிக்கப்பட்டிருக்கிறது. அதளுல் வைசேஷிகர் முதலான மதஸ்த்தர்கள்போல் கேவலதர்க்கத்திளுல் மட்டும் சாதிக்கப்படவில்லை. அதளுல் எங்கள் புத்தி கல்பனையல்ல. 'கிம் ஜ்யோதிரேவாயம்' என்று ஆரம்பித்து 'அத்ராயம் புருஷ:ஸ்வயம் ஜ்யோதி:' என்ற வாக்யபர்யந்தம் சொல்லப்படுகின்ற விஷயங்களைக்கொண்டு, புத்தி முதலான உபாதிகள் சைதன்ய ஸ்வரூபத்தையன்றி வேருக இல்லையென்றும் எல்லாம் சைதன்ய ஸ்வரூபமே என்றும் நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. அதன்மூலமாக ஆத்மா ஸர்வத்திற்கும் சாக்ஷி என்றும், எந்த விவகாரத்திலும் ஸம்பந்தப்பட்டது அல்லவென்றும், விஸுத்த சைதன்யம், ஜ்யோதிஸ்வரூபம் என்பதையும் மிகத்தெளிவாக விளக்கப்பட்டது. அதற்குப்பின் சொல்லப்பட்ட க்ரந்த பாகத்தில் அவஸ்த்தாத்ரயங்கள் ஆகமாபாயி என்பதை மஹாமத்ஸ்யத்ருஷ்ட்டாந்தத்தின் மூலம் விளக்கப்பட்டது. இந்த விதம் ஆத்மா என்பது நித்ய சுத்த சித்ஸ்வரூபம் என்றும், எந்தஸம்பந்தமும் அற்றது என்றும் விளக்கப்பட்டிருக்கிறது. இந்த விதம் ச்ருதி ப்ரமாணத்தைக் கொண்டும், யுக்தியைக் கொண்டும் விளக்கப்பட்ட விஷயத்தில் ஸந்தேகத்திற்கே இடமில்லை. அதளுல் ச்ரத்தையுடன் அறிந்து கொள்ளவேண்டும். சாஸ்த்திரப்ரமாணத்திலிருந்தே அகண்டார்த்தபோதம் ஏற்படுகிறது. அதளுல் வேதம் தெரிவிக்கின்ற விஷயம் சரியாக இருக்குமா ? இருக்காதா என்ற அஸம்பாவனையை நீக்குவதற்காகவே இவ்வித தர்க்கங்களைக் கொண்டு நிரூபணம் செய்யப்பட்டதேயன்றி கேவல தர்க்கத்தைக் கொண்டு சாதிக்கப்படவில்லை.

142. அவதாரிகை :

முன்னால் சொல்லப்பட்ட விஷயங்களை அனுவாதம் செய்து, சிஷ்யனானவன் தத்பதலக்ஷ்யம் என்னவென்பதை அறியவிரும்புகிறான் என்பதை தெரிவித்து, தத்பதலக்ஷ்யார்த்தம்பற்றி விசாரிக்க ஆரம்பிக்கப்படுகிறது.

ச்லோகம் :

एवं त्वंपदलक्ष्यवस्तु भवता यत्पृष्टमासीत्पुरा तन्निर्णीतमतोऽन्यदस्ति यदि ते चित्तस्थितं पृच्छ तत्
बुद्धिस्थं कुरु पूर्वमुक्तमखिलं यद्वक्ष्यमाणं च तद्बोद्धुं धारय ते मनः स्थिरतरं श्रद्धाधनाद्याश्रयः॥

ச்லோகார்த்தம் : இவ்விதம் முன்பு உன்னால் கேட்கப்பட்டதத்வம்பதலக்ஷ்யார்த்தம் என்ன என்பதை நிர்ணயம் செய்து தெரிவிக்கப்பட்டது. இப்போது மேலும் உனக்கு எதாவது ஸந்தேஹம் இருக்குமானால் அதையும் கேட்பாயாக. முன்னால் சொல்லப்பட்ட விஷயங்களையும் ஞாபகத்தில்வைத்துக்கொள்ள வேண்டும். இனி சொல்லப்போகின்ற விஷயங்களையும் எகாக்ரசித்தத்துடனும் சிரத்தையுடனும் இருந்து அறிந்து கொள்வாயாக.

வ்யாக்யானம் : த்வம்பதலக்ஷ்யார்த்தம் பற்றி விசாரிக்கப்பட்டப்ரகரணத்தை முடித்தபிறகு, இப்போது தத்பதலக்ஷ்யார்த்த சோதனை ஆரம்பிக்கவேண்டும் என்பதற்காக சிஷ்யனுடையப்ரச்சனம் மூலம் விளக்கப்படுகிறது. ஏனெனில் சிஷ்யனால் விரும்பிக் கேட்கப்பட்டால்தான் அந்தவிஷயம் புத்தியில் நன்கு விளங்கும் என்ற காரணத்தினால் ப்ரசனம் மூலம்பதில் சொல்லப்படுகிறது. மேலே சொல்லப்போகின்ற விஷயத்தைக் கேட்கின்ற ஆவலினால் முன்னால் சொல்லப்பட்ட விஷயங்களை மறக்கக்கூடாது. அந்த விஷயங்கள் மனதில் நன்கு பதிந்திருந்தால்தான் மேலே சொல்லப்போகின்ற விஷயங்களை அறிந்துகொள்ளமுடியும். "சாந்தோ தாந்த உபரத: திதிக்ஷு: ச்ரத்தாவித்தேபூத்வா ஆத்மன்யேவ ஆத்மானம் பச்யேத் என்ற வாக்கியத்தின்படி கேட்க்கின்ற விஷயம் மிகவும் சூக்ஷ்மமாக இருக்கின்றதால் ச்ரத்தை என்பது மிக்க அவச்யம் என்பதை தெரிவித்து முன்னால் சொல்லப்பட்ட விஷயம், இப்போது சொல்லப்போகின்ற விஷயம் இரண்டிற்கும் பதபதார்த்தங்கள் மட்டும் அறிவதால் ப்ரயோஜனமில்லை. வாக்யார்த்தபோதம் ஏற்பட்டால்தான் க்ருதக்ருத்யதை ஏற்படுமானதால் ஜக்ரத்தையுடன் கேட்கவேண்டும்.

143. அவதாரிகை : சிஷ்யனுடையப்ரசனம் என்ன வென்பதை மேலே விளக்கப்டுகிறது

ச்லோகம் :

इत्युक्ते गुरुणा स पृच्छति पुनस्त्वंशब्दलक्ष्यं मम ज्ञातं न्यायबलेन पूर्वमुदितावस्थात्रयापोहनात् ।
तच्छब्देन तु लक्ष्यमर्थमधुना बोद्धुं मनो मामकं धावत्याशु तमप्यपोह्य सकलद्वैतप्रपञ्चं वद ॥

ச்லோகார்த்தம் : இவ்விதம் குருவினால் உபதேசிக்கப்பட்ட சிஷ்யன் மீண்டும் ப்ரச்னம் செய்கின்றான். ந்யாயபலத்தினால் முன்னால் சொல்லப்பட்ட அவஸ்த்தாத்ரயநிஷேதத்தினால் த்வம்பதலக்ஷ்யார்த்தம் என்னால் அறியப்பட்டது. இப்போது தத்பதலக்ஷ்யார்த்தத்தை உடனே அறியவேண்டுமென்று என்மனம் ஒடுகின்றது. ஆகவே, ஸகலத்வைதப்ரபஞ்சத்தையும் நிஷேதம் செய்வதன் மூலம் அதை அறிவிக்கவேண்டுகிறேன்.

வயாக்யானம் : தாங்கள் உபதேசித்தபடி ஸர்வத்வைதப்ரபஞ்சத்தையும்ச்ருதியினுலும் யுக்தியினாலும் நிராகரணம் செய்துத்வம்பதலக்ஷயார்த்தம் என்னவென்று போதிக்கப்பட்டதை நான் அறிந்து கொண்டேன். அதேபோல் தத்பதலக்ஷயார்த்தத்தையும் அறிந்து கொள்ளவேண்டும்மென்று விரும்புகிறேன்.

**144.** அவதாரிகை : தத்பதார்த்தம் என்ன என்பது ஸந்தேகமின்றி லோகத்திலேயே ப்ரஸித்தமாக இருக்கின்றதால் அதை அறிந்து கொள்ள விரும்புகின்ற காரணம் என்ன ? என்ருல் அதற்குப் பதில் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

किं सप्रपञ्चमिदमस्त्वथ वा समस्तद्वैतप्रपञ्चरहितं परिपूर्णरूपम् ।
यद्वोभयात्मकमिदं परमार्थतोऽस्तुविष्णोः परं पदमितीह विचारणीयम्

ச்லோகார்த்தம் : விஷ்ணுவினுடைய பரமபதம் என்பது உண்மையிலேயே ப்ரபஞ்சத்துடன் சேர்ந்ததா அல்லது த்வைத ப்ரபஞ்ச மற்ற பூர்ணஸ்வரூபமா ? அல்லது உபயாத்மகமா என்று விசாரிக்கப்படவேண்டும்.

வ்யாக்யானம் : தத்பதார்த்தமாகச் சொல்லப்படும் ஈச்வரன் ஒருவர் இருக்கிருர் என்பது லோகப்ரசித்தமாக இருந்தபோதிலும் அந்த ஈச்வரன் ஸவிஸேஷமா, நிர்விசேஷமா, உபயாத்மகமா, என்று விசாரிக்கவேண்டும். அதாவது பரமார்த்தமாக ப்ரபஞ்சத்துடன் கூடினவரா, கூடாதவரா, அல்லது கூடியும் கூடாமலும் இருப்பவரா என்றஸந்தேஹம் ஏற்படுவதால் உண்மையான ஈச்வரஸ்வரூபம் என்னவென்று அறியவேண்டுமென்ற இச்சையினுல் சிஷ்யன் ப்ரச்னம் செய்கின்ருன்.

**145.** அவதாரிகை : இவ்வித ஸந்தேஹம் ஏற்பட காரணம் என்ன ?

ச்லோகம் :

वेदान्तवाक्यगतिरत्र बहुप्रकाराकाचित्कथंचिदिति संशय उत्थितो मे ।
तत्त्वं प्रकाशय निवर्तय मोहमूलं मत्संशयं मम हिताय भव प्रसीद

ச்லோகார்த்தம் : வேதாந்த வாக்யங்களின் ப்ரவ்ருத்தியென்பது பலவிதமாக இருக்கின்றது. ஒவ்வொரு வாக்யமும் வெவ்வேறு விதமாக இருக்கின்றதால் எனக்கு ஸம்சயம் ஏற்படுகிறது. இவ்விதம் மோஹமூலமாக ஏற்பட்ட இந்த ஸம்சயத்தைநிவர்த்தி செய்து என்னுடைய ஹிதத்திற்காக தத்வத்தை தெரிவிக்க வேண்டுகிறேன். (ஏன் இவ்விதம் நிர்பந்திக்கிறேன் என்று நினைக்காமல்) ப்ரஸன்னமாவீர்களாக.

வ்யாக்யானம் : ஸந்தேஹம் இருந்தால்தான் விசாரணைக்கே இடமுண்டு. அதனுல் ஸந்தேகத்திற்கு காரணம் என்ன என்று தெரிவித்து, அதன்பிறகுபதில் சொல்லப்படுகிறது. அதாவது, வேதாந்த வாக்யங்கள் ஒரிடத்தில் 'வாசாரம்பணம் விகாரோ நாமதேயம்' என்றும், அதாத ஆதேச நேதி நேதி என்றும் பலவாக்யங்களில் ப்ரஹ்மம் நிஷ்ப்ரபஞ்சம் என்று தெரிவிக்கின்றது. வேறுசிலவாக்யங்கள் 'ஸர்வரஸ:' ஸர்வகந்த:' 'ஸர்வஞ்ஞ:' 'ஸர்வபூதபால:' என்றெல்லாம் தெரிவிக்கின்றது. வேறு சிலவாக்யங்கள் 'ஸத்யகாம:' ஸத்யஸங்கல்ப: ஸர்வகர்ம:, ஸர்வகாம:, ஸர்வகந்த: என்றும் வாமனீய: பாமனீய: என்றும்

ப்ரஹ்மமென்பதை ஸவிஸேஷமாக தெரிவிக்கின்றது. இதேபோல் 'ஜன்மாத்யஸ்யயத:' என்ற சூத்ரத்தினுல் தடஸ்தலக்ஷணமாக ஜகத்காரணத்வம் ப்ரஹ்மத்திற்கு சொல்லப்படுகிறது என்பதை தெரிவித்து நிஷ்ப்ரபஞ்சம் ப்ரஹ்மமென்று விளக்கப்படுகிறது. ப்ரபஞ்சம் இருக்கின்ற போது நிஷ்ப்ரபஞ்சம் என்று எப்படிச்சொல்லமுடியும் என்ற ஸந்தேஹத்தை நிவர்த்திப்பதற்காக, "ததனனன்யத்வம் ஆரம்பண சப்தாதிப்ய:' என்ற அதிகரணத்தின்மூலம் இவையெல்லாம் மித்யை என்று நிரூபணம் செய்யப்படுகிறது. இந்தவிதம் உபநிஷத் வாக்யங்கள் ஸவிஸேஷமாகவும், நிர்விசேஷமாகவும் ப்ரஹ்மத்தை போதிக்கின்றதால் வ்யாகூலம் ஏற்படுகிறது. அதனுல் இந்த விஷயத்தில் வ்யவஸ்த்தை என்னவென்று குருவான தாங்களே நிச்சயித்து தெரிவிக்க வேண்டுகிறேன். ஏனெனில் ஸவிஸேஷம் என்பதும் நிர்விசேஷம் என்பதும் வேதவாக்யமாக இருக்கின்றதால் உபயாத்மகமாக இருக்கலாமோ என்ற ஸந்தேஹம் ஏற்படுகின்றது. ஆகவே, உண்மையான ப்ரஹ்மஸ்வரூபம் என்ன என்பதை போதித்து என்னுடைய அஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட மோஹத்தை நீக்கி எந்த அர்த்தபோதம் ஏற்படுவதால் க்ருதக்ருத்யதை ஏற்படுமோ அதை கருணையுடன் உபதேசித்தருளவேண்டுகிறேன்.

**146.** அவதாரிகை : இவ்விதம் செய்யப்பட்ட ப்ரச்சனத்தினுல், 'நிஷ்ப்ரபஞ்சம் ப்ரஹ்மமென்பதே பரமார்த்த தத்வம் என்ற பக்ஷத்தையே அங்கீகரிக்கவேண்டுமென்று குருவானவர் மேலே தெரிவிக்கின்றுர்.

ச்லோகம் :

न स्थानतोऽप्यस्ति परस्य कश्चिद्विशेषयोगः परमार्थरूपः ।
स्वतः पुनर्दूरनिरस्त एव परस्य तत्त्वस्य विशेषयोगः

ச்லோகார்த்தம் : உபாதியின் மூலமாகவும் பரமாத்மாவிற்கு உண்மையில் எவ்வித விசேஷஸம் பந்தமும் கிடையாது. ஆகையால் பரமாத்மாவிற்கு ஸ்வாபாவிகமாகவே விசேஷஸம்பந்தம் இருக்கின்றதென்பது வெகுதூரம் தள்ளப்படவேண்டும்.

வ்யாக்யானம் : ப்ரஹ்ம மென்பது, பாரமார்த்திகமாக, உபாதியினுல் கூட ஸப்ரபஞ்சலக்ஷணஸம்பந்தம் உடையது என்று சொல்லமுடியாது. உபாதி ஸம்பந்தமும் அற்றது என்று அபிசப்தத்தினுல் சொல்லப்படுகிறது என்றுல், விசேஷ ஸம்பந்தம் என்பது ஸ்வாபாவிகமாக எப்படி இருக்கமுடியும் ? என்பது அர்த்த சித்தம். ப்ரஹ்மமென்பது கார்யம் காரணம் என்ற ப்ரபஞ்சத்திற்கு அதீதம் என்பதையே 'அதாத ஆதேசநேதிநேதி' என்ற வாக்யத்தினுல் ஸர்வத்தையும் நிஷேதம் செய்து தெரிவிக்கின்றது. ஆகவே, நிஷ்ப்ரபஞ்சம் ப்ரஹ்மம் என்பதே உண்மையான ஸ்வரூபம் என்றும் ப்ரபஞ்சமாக தோன்றுவ தெல்லாம் ஆரோபிதம் என்றும் அறியப்படவேண்டும்.

**147.** அவதாரிகை : அப்படியானுல் உபநிஷத்வாக்யங்கள் ஸவிஸேஷமாக தெரிவிப்பதற்கு காரணம் என்ன ?

ச்லோகம் :

स्वभावतश्चिद्घनविग्रहस्य मृषा ह्युपाधिप्रभवा विशेषाः ।
यथा जपापुष्पनिबन्धनः स्यान्मृषा मणेर्लोहितिमा तथैव

ச்லோகார்த்தம் : எவ்விதம் ஜபாகுஸுமம் என்ற புஷ்ப்பத்தின் நிமித்தமாக ஸ்படிகம் என்பதில் ஏற்படுகின்ற ரக்தவர்ணம் என்பது மித்யையோ அதுபோல் சித்கனஸ்வரூபமே ஸ்வபாவமாக இருக்கின்ற ஆத்மாவினிடம் அறியப்படும் விசேஷங்களும் உபாதியினுல் ஏற்படுவதால் மித்யையேயாகும்.

வ்யாக்யானம் : கேவல சைதன்யஸ்வரூபத்தில் உண்மையில் வேறு ரூபாந்தரம் ஸம்பவிக்கமுடியாது. 'ஜன்மாத்யஸ்யயத': என்ற சூத்ரத்தினுல் ப்ரஹ்மத்தின் ஸ்வரூபம் 'ஸத்யம் ஞானம் அனந்தம்' என்று லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கின்றது. அதன்பிறகு நேதி நேதி என்ற ச்ருதிவாக்யத்தினுல் நிர்விசேஷம் ப்ரஹ்ம என்று தெரிவிக்கின்றதே? என்ருல், எந்த இடத்திலும் எந்த வஸ்துவிற்கும் ஸ்வயமாக ஒரு தன்மை இல்லையென்றும், உபாதியினுல் தோன்றுகிறதென்றும் சொல்லப்படுமானுல் அந்த தன்மை உண்மையில் இருக்கமுடியாது. ஜபாகு ஸுமம் என்ற உபாதியினுல் ஸ்படிகத்தில் தோன்றும் சிகப்பு நிறம் என்பது எப்படி பரமார்த்தமாக ஸ்படிகத்தில் இல்லையென்று அறியப்படுகிறதோ அதேபோல் நிர்விசேஷமான சைதன்யத்தில் எவ்வித விசேஷமும் உண்மையில் இருக்கமுடியாது. ஸைந்தவகனம் (ஒரே உப்புமயம்) என்று சொல்வதுபோல் ப்ரஹ்மமென்பதுசித்கனம் என்று ஏவகாரத்தினுல் தெரிவிக்கின்றது. ஆகவே உண்மையில் உபாதிஸம்பந்தமும் கிடையாது என்ருல் அந்த உபாதியின் விசேஷங்கள் எப்படி பரமார்த்தமாக இருக்கமுடியும்? ஆகையால் ஸவிஸேஷ ப்ரஹ்ம வாக்யங்கள் எல்லாம் உபாஸனத்திற்காக உப நிஷத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது என்று அந்த வாக்யத்திற்கு தாத்பர்யம் சொல்லப்படவேண்டும். இதுபோல் நிர்விசேஷ வாக்யங்களுக்கு தாத்பர்யம் சொல்லப்பட வேண்டும். இதுபோல் நிர்விசேஷ வாக்யங்களுக்கு வேறு அர்த்தம் கல்பிக்கமுடியாது. நிர்விசேஷப்ரஹ்மத்தை தெரிவிக்கின்ற வாக்யங்களே பரமார்த்தமானதத்வத்தை தெரிவிக்கின்ற வாக்யங்கள் என்று அறியவேண்டும். ஸவிஸேஷம் மித்யை என்பதால், உபயஸ்வரூபம் என்று சொல்வதற்கும் முடியாது. அதனுல் அந்த பக்ஷத்திற்கு இடமில்லை.

**148.** அவதாரிகை : 'ஏஷஸர்வேச்வர': என்பது போன்றவாக்யங்கள் எல்லாம் ஸ்வாபாவிகமாகவே இந்த தன்மைகள் ப்ரஹ்மத்தில் இருப்பதாக தெரிவிக்கின்றதே? அதனுல் இவையெல்லாம் ஔபாதிகம் என்று எப்படிச் சொல்லமுடியும்?

ச்லோகம் :

मायोपाधेरद्वयस्येश्वरत्वं कार्योपाधेर्जीवता च प्रतीचः ।
मिथ्यैव स्याद्बन्धुजीवप्रसूनसंपर्कोत्था रक्ततेवाभ्रकादेः

ச்லோகார்த்தம் : மாயோபாதியினுல் ப்ரஹ்மத்திற்கு ஈச்வரத்வம் ஏற்படுகிறது. கார்யோபாதியினுல் ப்ரத்யகாத்மாவிற்கு ஜீவத்வம் ஏற்படுகிறது. பந்து ஜீவம் என்ற ரத்த வர்ணபுஷ்பத்தின் ஸம்பந்தத்தினுல் அப்ரகம் முதலானவைகளில் ஏற்படும் செந்நிறமானது எவ்விதம் மித்யையோ அதுபோல் இவை இரண்டுமே மித்யையாகும்.

வ்யாக்யானம் : 'மாயினந்து மஹேச்வரம்' என்ற தாதி வாக்யங்கள் மாயை என்ற உபாதியைக் குறிக்கின்றது. மாயையினுல் தான் ஈச்வரபாவம் என்றும் ஸஸமான : என்ற வாக்யம் 'தியாஸமான:' என்று அந்த:கரண உபாதியினுலேயே ஜீவத்வம் என்றும்

தெரிவிக்கின்றதால் உபாதியினுலேயே ஈச்வரத்வம், ஜீவத்வம் என்ற தன்மைகள் சித்திக்கின்றது.

(குறிப்பு : பந்து ஜீவம் என்பது உச்சித்திலகம் என்றும், அப்ரகம் என்பது ஸ்வச்சமான ஒரு தாது விசேஷம் என்றும் அர்த்தம் சொல்லப்படுகிறது.)

பூர்வ : இவ்விதம் உபாதிவஸாத்ஸவிஸேஷத்வம் என்று சொல்லப்படுவதால் அவைகள் மித்யை என்று எப்படி சித்திக்கின்றது ? ஈச்வரத்வம் என்ற தர்மம் ப்ரஹ்மத்தில் உண்மையாக இருக்கிறதென்றே சொல்லப்படவேண்டும். அவ்விதமில்லை என்று சொல்லப்படுமானுல் ஈச்வரன் என்பதே சித்திக்காது. அதேபோல் ப்ரத்யகாத்மாவில் ஜீவத்வம் என்ற விசேஷணம் ஒத்துக்கொள்ளப் படவில்லை யென்ருல் ஜீவனை ஈச்வரனென்ருே, அல்லது ஜடம் என்ருே சொல்லநேரிடும். அதனுல் ஈச்வரத்வம், ஜீவத்வம் இரண்டும் பரமார்த்தமென்றே சொல்லவேண்டும்.

சித்தா : இந்த ஆக்ஷேபம் சரியல்ல. ஈச்வரத்வம் ஜீவத்வம் என்ற விசேஷம் எல்லாம், மாயை, அந்த:கரணம் என்ற உபாதியினுல் ஏற்படுகின்றது அதனுல் அவைகள் பரமார்த்தமாக இருக்கமுடியாது. அத்வயஸ்வரூபமான ப்ரஹ்மத்திற்கு, ஈசிதவ்யம் என்பதை அபேக்ஷித்தே ஈச்வரத்வம் சொல்லப்படுவதால் மாயை என்ற உபாதி இன்றி ஈச்வரத்வம்ஸம்பவிக்காது என்பதால் ஈச்வரத்வம் மாயாகல்பிதம் என்றே சொல்லவேண்டும். அதேபோல் ப்ரத்யகாத்மா என்பதற்கும் நிர்விசேஷம் என்பதே உண்மையான ஸ்வரூபம். அதனுல் ப்ரத்யகாத்மாவில் அத்யஸ்த்தமான அஞ்ஞானம் அதன் கார்யமான அஹங்காரம் என்ற உபாதி மூலமாகவே சாக்ஷித்வம் சொல்லப்படுகிறது. அஹங்கார உபாதி இல்லாமல் ப்ரத்யகாத்மாவில் ஜீவத்வாதி தர்மங்கள் இருப்பதாகச் சொல்லமுடியாது. இவ்விதம் ஔபாதிகமாக இருப்பதெல்லாம் மித்யைதான் என்று அனுமானத்தினுலேயே சாதிக்கலாம். எப்படி சூர்ய க்ரணங்களினுல் தபிக்கப்பட்ட ஸ்தலங்களில் ஜலபாகத்தினுல் பூமியில் ஏற்பட்ட வெள்ளைநிறமுள்ள தாதுப்பொருளான ஸ்படிகம் போன்றகற்கள், ஜபாகுஸுமம் என்ற உபாதியினுல் ஏற்படும் சிகப்புக்கலர் ஔபாதிகம் என்பதால் மித்யை என்று சொல்லப்படுகிறதோ அதுபோல் ஔபாதிகம் எல்லாம் மித்யை என்றே அறியவேண்டும்.

149. அவதாரிகை : நூல் என்பதில் ஏற்றபடும் சாயம் என்பது ஔபாதிகம் தான் என்ருலும், அது அந்தவஸ்திரத்தில் ஸத்யமாகவே இருக்கிறது. அதேபோல் சைதன்யத்திலும் ஔபாதிகம் என்ருலும் ஸத்யமாக இருக்கிறதென்றே சொல்லலாமே ?

ச்லோகம் :

भल्लातकादिरसयोगनिबन्धनं च वस्त्रे कलङ्कितमनेन पथा निरस्तम् ।
तस्यापि पक्षपतितत्त्वमभीष्टमेव तस्मादसौ न भवति व्यभिचारभूमिः

ச்லோகார்த்தம் : பல்லாதகம் (சேற்ருங்கொட்டை) முதலான மூலிகை ரஸங்களிலிருந்து ஏற்பட்டஸம்பந்தத்தினுல் வஸ்த்ரத்தில் வர்ணம் ஏற்படுகிறது என்ற ஆக்ஷேபம் சரியல்ல என்று நிராகரிக்கப்படுகிறது. ஏனெனில் (வஸ்திரத்தில் அதுஸத்யமாகவே இருக்கின்றதால்) ஈச்வரத்வம் ஜீவத்வம் என்ற (எல்லாம் ஸத்யம்

என்ற) பக்ஷத்தில் சேர்ந்ததாகவே எங்களால் ஒத்துக் கொள்ளப்படுகின்றதால் இது வ்யபிசார ஸ்தலமாகாது. (வ்யபிசாரத்திற்கு இடமில்லே)

**வ்யாக்யானம் :** வஸ்திரத்தில் ஏற்றப்பட்டகலர் அதிக நாட்கள் நீடித்து இருக்கின்றது. அதனுல் ஸ்வாபாவிகம் போல் தோன்றுகிறது என்றே சொல்லவேண்டும்.

**பூர்வ :** ஔபாதிகம் என்ருலே மித்யை என்று சொல்வதற்குரிய வ்யாப்தி ஏதுமில்லே. மூலிகையின் ரஸத்தைக் கொண்டு ஏற்றப்படும் கலர் வஸ்திரம் உள்ளவரை இருக்கின்றதென்று சொல்லப்படும் காரணம் வ்யபிசாரிக்கின்றது. அதனுல் ஔபாதிகம் என்ருலே மித்யை என்று சொல்லமுடியாது என்பதால் ஈச்வரத்வம் முதலானவைகள் ஔபாதிகமாக இருந்தபோதிலும் அவைகளே ஸ்வபாவமென்றே சொல்லலாம்.

**சித்தா :** ஸ்படிகம் போன்ற உதாகரணத்தைக் கொண்டு ஔபாதிகம் எல்லாம் மித்யை என்றே சித்திக்கின்றது. ஜீவத்வம், ஈச்வரத்வம் என்பதெல்லாம் எப்படி மித்யை யென்று சொல்லப்படுகிறதோ அதுபோல் உன்னுல் சொல்லப்பட்ட உதாகரணமும் மித்யை என்றே சொல்லவேண்டும். இதில் வ்யபிசாரம் என்பதே கிடையாது. வஸ்திரத்தில் ஏற்றியகலரை சுலபமாக நீக்கமுடியாது என்ருலும், அதற்குரிய ரஸாயனத்தைக்கொண்டு அந்தகலரை நீக்கமுடியும். ஆகவே, வஸ்திரத்தின் உண்மையான நிறம் வெள்ளேநிறம் தான். மூலிகை ரஸத்தினுல் சாயம் ஏற்றப்பட்ட போதிலும் அது போக்கக்கூடியது தான் என்பதால் வஸ்திரத்தில் களங்கம் ஏதுமில்லே.

**150. அவதாரிகை :** ஸவிஸேஷத்வம் ஔபாதிகம் என்பதை த்ருஷ்ட்டாந்தமூலமாக தெரிவித்து, இந்த விஷயம் முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

यथा ह्ययं ज्योतिरात्मा विवस्वानपो भिन्ना बहुधैकोऽनुगच्छन् ।
उपाधिना क्रियते भेदरूपो देवः क्षेत्रेष्वेवमजोऽयमात्मा

**ச்லோகார்த்தம் :** ஜ்யோதிஸ் ஸ்வரூபனுன ஒரே சூர்யன் பலவாறு பின்னமாக இருக்கின்ற (வெவ்வேருக) பாத்திரத்திலுள்ள ஜலத்தில் ப்ரவேசித்து 'உபாதியினுல் பலரூபங்களே உடையவனுக தோற்றுவிக்கப்படுகிருன். அவ்வாறே ப்ரகாசஸ்வரூபமானதும், ஜன்மமற்றதுமான இந்த ஆத்மா பலவிதமான சரீரங்களினுல் பல ரூபங்கள் உடையதாக தோன்றும்படி செய்யப்படுகிறது.

வ்யாக்யானம் : ச்ருதி ப்ரமாணங்களும் விசேஷங்கள் எல்லாம் ஔபாதிகம் என்றே தெரிவிக்கின்றது. ப்ரகாச ஸ்வரூபமான ஆதித்யன் ஏகம் என்ருலும், வெவ்வேறு பாத்ரங்களில் உள்ள ஜலத்தில் ப்ரதிபலிக்கின்ற போது அவைகளில் ஏற்படும் ப்ரதிபலனமும் அனேகமாகவும் வெவ்வேருகவும் இருக்கின்றது. இவ்விதம் உபாதி பேதத்தினுல் சூர்யன் பேதம் உள்ளது போல் தோன்றுகிறது. அதேபோல் அந்த பாத்ரத்தில் உள்ள ஜலம் அசைகின்றபோது அதில் ஏற்படும் ப்ரதிபிம்பத்திலும் அசைவு ஏற்படுவதாக தோன்றுகிறது. இதேபோல் ஸ்வப்ரகாசமான ஆத்மா அஜம், ஜன்மாதிவிகாரங்கள் அறறது என்பதே உண்மையாக இருந்தும் ஸ்தூல, சூக்ஷ்மசரீர பேதங்களினுல் ஏற்படும் ஸம்பந்தத்தினுல் உற்பத்தி விநாசம் முதலான விகாரங்கள்

இருப்பது போல் தோன்றினுலும் உண்மையில் எவ்விதவிகாரமும் அற்ற ஸ்வரூபம் ஆத்மா என்று அறிந்துகொள்ளவேண்டும்.

**151.** அவதாரிகை : ஈச்வரத்வம் முதலான விசேஷங்களும் மாயோபாதிகம் என்பதை த்ருடம் செய்வதற்காக, மற்ற மதஸ்த்தர்களின் வாதங்களை தெரிவித்து, அவைகளை நிராகரணம் செய்யப்படுகிறது.

**ச்லோகம் :**

ऐश्वर्यमस्य परमात्मन उक्तमन्यैः साक्षात्स्वरूपमवबोधसुखादितुल्यम् ।
तेनेशते किल यथायथमीशितव्यान्भृत्यान्प्रतीश्वरतया जगतीभृतोऽपि

**ச்லோகார்த்தம் :** சைதன்யம், ஆனந்தம் என்ற இவைகளைப்போல் ஐச்வர்யம் என்பதும் பரமாத்மாவின் சாக்ஷாத் ஸ்வரூபமேயாகும் என்று ஒரு சிலரால் சொல்லப்படுகிறது. அதனுல்தான் ப்ரஹ்மாமுதல் ஸர்வ ஈச்வரர்களும் தன்னுடைய ஈச்வரத்தன்மையால் ஆளப்படக்கூடிய தாஸர்களின் தாரதம்யத்தைக்கொண்டு ஆளுகின்றனர். (நியாமகராக ஆகின்றனர் அல்லவா என்று அருசியை தெரிவிக்கப்படுகிறது).

**வ்யாக்யானம் :** ஒரு சிலரால் இவ்விதம் சொல்லப்படுகிறது. அதாவது ஸத் சித் ஆனந்தம் என்பது எப்படி பரமாத்ம ஸ்வரூபமோ அது போல் ஈச்வரத்வம் என்பதும் ஸ்வரூபம் என்றே சொல்லவேண்டும். லோகத்தில் ப்ரஹ்மாமுதல் ஸ்தம்ப பர்யந்தம் உள்ள ஸர்வஜீவாரசிகளிடத்திலும், ஈச்வர பாவம், ஞானம், சுகம் என்பதெல்லாம் ஸ்வரூபமாகவே இருக்கின்றது. சைதன்யத்தில் ஈச்வரத்வம் எப்படிஸ்வபாவமாக இருக்கின்றதோ அதேபோல் ஸர்வ ஜீவராசிகளிடத்திலும், உபாதிதாரதம்யத்தினுல் அதற்கு தக்கவாறு அந்தந்த சரீரங்களில் ஈச்வரத்வம் அபிவ்யஞ்சகமாகின்றது. ஈச்வரனுக்கு கீழ் அடுத்த நிலையில் இருக்கின்ற தேவதைகளில் மேலான இந்த்ரனிடம் ஈச்வரத்வம் இருக்கின்றது. அதனுல் இந்த்ரனுக்கு கீழ் இருப்பவன் இந்த்ரனுல் கட்டுப்படுத்தப்படுகிருன். அதே போல் ராஜா, மந்த்ரி முதலானவர்களும் அவரவர்குரிய ஸ்தானத்தில் இருந்து அவர்களுக்கு கீழ் இருப்பவர்களை கட்டுப்படுத்துகின்ருர்கள். இந்தவிதம் அவரவர்க்குள்ள ஐச்வர்யத்தினுல் அவரவர் ப்ருத்யர்களை நியமனம் செய்கின்ருர்கள். ஆகவே, சேதனுன எல்லோரிடத்திலும் ஈச்வரத்வம் என்பது தாரதம்யமாக இருந்தபோதிலும் அவைகள் ஸ்வாபாவிகமாகவே இருக்கின்றது. ஜடமான வஸ்துக்கள் பரதந்த்ரமானதால் அவைகளிலும் வ்யவஹாரம் ஏற்படும்படி சேதனன் செய்கின்ருன். இந்தவிதம் ஐச்வர்யம் என்பது ஸ்வாபாவிகம் என்று சொல்லப்படுவது பொருந்தாது. என்று சொல்கிருர்கள்.

**152.** அவதாரிகை : ஐச்வர்யம் என்பது ஸாபேக்ஷம். ஈச்வரத்வம் என்பது ஈசிதவ்யம் என்பதை அபேக்ஷிக்கின்றது. அதனுல் உற்பத்தி முதலானவைகளை உடையதாகவும், தாரதம்ய முடையதாகவும் இருக்கின்றது. அதனுல் நிரபேக்ஷமாகவும், நித்யமாகவும், ஏகஸ்வரூபமாகவும் இருக்கின்ற ஆத்மசைதன்யத்தில், ஈச்வரத்வம் என்பது ஸ்வரூபமாக எப்படி இருக்கமுடியும்?

ச்லோகம் :

नित्यं प्रियादिषु सुखं प्रतिबिम्बितं सल्लोके वदन्ति विषयेन्द्रियसंप्रयोगात् ।
उत्पन्नमन्यदिति तद्वदिहेश्वरत्वं मायातदुत्थमतिषु प्रतिबिम्बितं सत्

ச்லோகார்த்தம் : நித்யசுகம் என்பது ப்ரியம் மோதம் ப்ரமோதம் முதலான வ்ருத்திகளில் ப்ரதிபலிக்கின்றபோது, அது விஷயேந்த்ரிய ஸம்யோகத்திஞல் ஏற்பட்டதும், நித்யசுகத்திற்குட்பட்டதான சுகமாக இருக்கின்றது என்று சொல்லப்படுகிறது. அதேபோல், ஈச்வரத்வம் என்பதும் அவித்யை, அதன்கார்யமான அந்த:கரணம் இவைகளில் ப்ரதி பிம்பிக்கின்றபோது அது வேருனது போல் (ஈச்வரத்வம்போல்) அறியப்படுகிறது.

வ்யாக்யானம் : நித்யசைதன்யமாகவும், கூடஸ்த்தமாகவும், ஏகரூபமாகவும், நிரதிசயமாகவும் இருக்கின்ற சுகஸ்வரூபம் ஆத்மா என்று உங்களால் சொல்லப்படுகிறது. அவ்விதம் இருந்தபோதிலும், ப்ரியம், மோதம், ப்ரமோதம் என்ற தாரதம்யமுள்ள சுகமானது, ப்ரீதிவிஷயாகாரமான வ்ருத்தியில் ப்ரதிபலிக்கின்றது. இந்த சுகம் விஷயங்களை அபேக்ஷித்தே ஏற்படுகிறது என்பதால் ஸாபேக்ஷமாகவும், உற்பத்தி விநாச முடையதாகவும் தாரதம்யமுடையதாகவும் இருக்கின்றது. இவ்விதம் இருந்தபோதிலும் இந்த சுகம், ஆத்மஸ்வரூபமே என்று எப்படி உங்களால் சொல்லப்படுகிறதோ அதுபோல் ஐச்வர்யம் என்பதும் ஆத்மஸ்வரூபம் என்றே சொல்லலாமே? இந்த்ரியங்களுக்கும் விஷயங்களுக்கும் உள்ள ஸம்பந்தத்திஞலேயே விஷயசுகம் ஏற்படுகிறது. விஷயங்களின் வித்யாஸத்திஞல் சுகத்திலும் வித்யாஸம் அறியப்படுகிறது. இவ்விதம் ஸாபேக்ஷமாக இருந்தாலும் இவையெல்லாம் ஸ்வரூப சுகம் தான் என்று சொல்லப்படுகிறது. ஐச்வர்யம் என்பதும் மாயையில் ப்ரதிபிம்பிக்கின்றதால் ஸாபேக்ஷம், அந்த: கரணஸம்பந்தத்திஞல் உற்பத்தி விநாச முடையதாக இருக்கிறது. ஆஞலும் ஐச்வர்யம் என்பதும் ஸ்வரூபந்தான் என்று சொல்லலாமே?

**153.** அவதாரிகை : மாயை, அதன் கார்யமான அந்த:காரணம் என்ற உபாதியில் ப்ரதிபிம்பிக்கின்ற ஐச்வர்யம் என்பது அனேகம் என்று சொல்லநேரிடும். அவ்விதம் சொல்லப்படுமாஞல் ஸர்வேச்வரன் என்பதும் அனேகம் என்று சொல்லநேரிடும்

ச்லோகம் :

मायानिविष्टवपुरीश्वरबोध एष सर्वेश्वरो भवति सर्वमपक्षेमाणः ।
बुद्धिप्रविष्टवपुरेष तथेश्वरः स्यादात्मीयभृत्यजनवर्गमपेक्षमाणः

ச்லோகார்த்தம் : மாயையில் ப்ரதிபிம்பிக்கின்ற ஈச்வரசைதன்யம் என்பது ஸர்வஜீவர்களையும் அபேக்ஷித்து ஸர்வேச்ரஞக ஆகிருன். புத்தியில் ப்ரதிபிம்பிக்கின்ற சைதன்யமானது தன்னுடைய தாஸர்களை அபேக்ஷித்து ஈச்வரஞகிருன்.

வ்யாக்யானம் (பூர்வ) : மாயா ப்ரதிபிம்ப சைதன்யமான ஈச்வரனுக்கே ஸர்வேச்வரத்வம் சொல்லவேண்டும். மற்றுமுள்ள இந்த்ராதிதேவதைகளின் உபாதியென்பது, அந்த:கரணப்ரதிபிம்ப சைதன்யமாக இருக்கின்றகாரணத்திஞல், ஸ்தூல, சூக்ஷ்ம, உபாதி தாரதம்யத்திஞல் அவர்களுக்கு ஈசவரத்வம் இருந்தபோதிலும்,

ஸர்வேச்வரத்வம் இருப்பதாகச் சொல்லமுடியாது. மாயாப்ரதிபிம்ப சைதன்யத்தில் தான் ஈச்ரத்வம் என்பது நித்யமாகவும், ஏகமாகவும், ஸர்வத்தையும் நியமனம் செய்யக்கூடிய சக்தி உடைய தாகவும் இருக்கின்றது. அதனுல் நிரதிசயமான இந்த ஐச்வர்யமே பரமேச்வர ஐச்வர்யம். ஹ்ரண்யகர்ப்பர் முதல் மற்றுமுள்ள ஸர்வ ஜீவராசிகளிடமும் ஐச்வர்யம் இருந்தபோதிலும், அவரவர் புத்தி என்பது கர்மாதீனமாக இருக்கின்றதாலும், உபாதி தாரதம்யத்தினுலும் சாதிசயம்) அவர்களுக்கு கீழ் உள்ளவர்கள் எத்தனை பேர்கள் ஈசிதவ்யமாக இருக்கின்ருர்களோ அவர்களை அனுசரித்தே அவர்களுக்கு ஈச்வரத்வம் சொல்லமுடியும். அதனுல் எல்லோருக்கும் ஸர்வேச்வரத்வம் சொல்லமுடியாது. அதனுல் ஈச்வரன் அனேகம் என்று ஒத்துக்கொள்ளவேண்டிய அவஸ்யமில்லை. ஐச்வர்யம் எல்லோரிடமும் இருக்கின்றது என்று காரணத்தினுல் அனேக ஈச்வரன் இருந்த போதிலும், ஒரே ஈச்வரன்தான் நித்யமாகவும் நிரதிசயமாகவும், நிரபேக்ஷமாகவும் இருக்கின்ருர் என்று சொல்லப்படுவதாலும் மற்ற ஈச்வரர்கள் அநித்யம், ஸாபேக்ஷம், ஸாதிசயமாகவும் இருக்கின்றதாகச்சொல்லப்படுவதாலும், பஹுத்வதோஷம் ஸம்பவிக்காது.

**154.** அவதாரிகை :

ஜீவேச்வர விபாகம் அற்ற சைதன்யம் முக்தம். மாயை, அந்த:கரணம் என்ற உபாதிகள் எல்லாம் வித்யையினுல் நாசத்தை அடைகின்றதால், ஸ்வாபாவிகமான ஐச்வர்யத்தில் ஸ்திதி பெற்றிருக்கிருன் என்று முக்தனைப்பற்றி தெரிவிக்கின்ற சாந்தோக்ய ச்ருதி ஸ்வராட்பவதி' என்று தெரிவிக்கின்றது.

ச்லோகம் :

सम्यग्ज्ञानध्वस्तसर्वप्रपञ्चः स्वीये रूपे निर्गुणे निर्विशेषे ।
पूर्णैश्वर्ये स्वप्रकाशस्वभावे स्वराज्येऽस्मिन्स स्वराडेव तिष्ठेत्

ச்லோகார்த்தம் : ஸம்யக் ஞானத்தினுல் ஸர்வப்ரபஞ்சமும் பாதிக்கப்படுகின்ற போது, நிர்க்குணமாகவும், நிர்விசேஷமாகவும், பூர்ண ஐச்வர்ய ஸ்வரூபமாகவும், ஸ்வப்ரகாசரூபமாகவும், ஸ்வராஜ்யமாகவும் இருக்கின்ற ஆத்மஸ்வரூபத்தில் ஸ்வயம் ப்ரகாசகனுக இருக்கின்ருன்.

வ்யாக்யானம் : முக்தி நிலையில், வித்வான் பரம ஐச்வர்யமுடையவனுக இருக்கிருன் என்பதையே 'ஸ்வராட்பவதி' என்ற ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றதால் ஐச்ர்யம் என்பது அவன்ஸ்வரூபம் என்றே சொல்லவேண்டும்.

**155.** அவதாரிகை : நிர்க்குண ஸ்வரூபத்தில் ஐச்வர்யம் இருக்கிறதென்பதில் ப்ரமாணம் என்ன? என்ருல்,

ச்லோகம் :

ज्ञात्वा देवं सर्वपाशापहानिः क्षीणैः क्लेशैर्जन्ममृत्युप्रहाणिः ।
तस्याभिध्यानात्तृतीयं देहभेदे विश्वैश्वर्यं केवल आप्तकामः

**ச்லோகார்த்தம் :** பரமாத்மாவை அறிவதனுல் ஸர்வ பாசங்களும் நிவர்த்திக்கின்றது. அவித்யை முதலான க்லேசங்கள் க்ஷீணமடைகின்றபோது ஜன்ம மரணங்கள் நிவர்த்திக்கின்றது. மூன்ருவதாக பரமாத்மாவின் த்யானத்திஞல் தேஹநாசம் ஏற்பட்டபின் ஸர்வைச்வர்யத்தை அடைகிருன் அதனுல் சுத்தனுகவும் ஆப்தகாமனுகவும் ஆகிருன்.

**வ்யாக்யானம் :** ஐச்வர்யம் ஸ்வரூபம் என்று வாதம் செய்பவர்கள், 'ஞாத்வாதேவம் என்றச்வேதாச்வரதர உபநிஷத் வாக்யம் இந்த விஷயத்தை தெரிவிக்கின்றது என்று ச்ருதி வாக்யம் இதற்கு ப்ரமாணம் என்று தெரிவிக்கிருர்கள். அதாவது ஸம்யக் ஞானத்திஞல் த்வைதப்ரபஞ்சமோஹம் நாசம் அடைந்தவன் பூர்ண ஐச்வர்யத்தில் இருக்கிருன் என்று இந்தவாக்யத்தை ப்ரமாணமாகச்சொல்கிருர்கள். 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற உபாஸனத்தின் பலனுக (த்யானத்தின் பலனுக) தேவனே அறிந்து (ஸ்வரூபத்தை அறிந்து) விச்வைச்வர்யத்தை அடைகிருன். இவ்வித ஸம்யக் ஸ்வரூபத்யானத்திஞல் பாபம் என்ற அவித்யை, அஸ்மிதா, ராகம், த்வேஷம் அபினிவேசம் என்ற பஞ்சக்லேசங்களும் அடியோடு நாசமாகின்றது. அதனுல் பந்தகமான கர்மா என்பதே மிச்சமிருக்கமுடியாது என்பதால் ஜனன மரணம் இல்லே என்றும், இவ்விதம் தேஹமானது நசித்தபிறகு ப்ராரப்தம் முடிவை அடைகிறது. அதன்பிறகு த்ருதீயஸ்தானமான ஐச்வர்யத்தை அடைகின்ருன். அதன்பின் கேவல நிரதிசய ஆப்தகாமனுக இருக்கின்ருன் என்று இந்த உபநிஷத் வாக்யம் தெரிவிக்கின்றது.

**156.** அவதாரிகை : இதேபோல் சாந்தோக்ய ச்ருதியும் (இதே விஷயம் பற்றி) தெரிவிக்கின்றது.

**ச்லோகம் :**

स स्वराडिति च विद्यते श्रुतिर्वर्णितेश्वरवपुः प्रकाशिनी ।
तेन सत्यसुखबोधवद्भवेदीश्वरत्वमिति केचिदूचिरे

**ச்லோகார்த்தம் :** முன்னுல் சொல்லப்பட்ட ஈச்வரத்வம் என்பதை ப்ரதிபாதனம் செய்கின்ற ஸஸ்வராட்பவதி என்ற ஸ்ம்ருதி வாக்யமும் இருக்கிறது. அதனுல் சச்சிதானந்தம் (எவ்விதம் ஸ்வரூபமோ) போல ஈச்வரத்வம் என்பதும் ஸ்வரூபம் என்றேசிலரால் சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** "ஆத்மக்ரீட:, ஆத்மரதி:, ஆத்மமிதுன:, ஆத்மானந்த:, ஸஸ்வராட்" என்று சாந்தோக்ய ச்ருதியும் தெரிவிக்கின்றது. மேலும், "தஸ்ய ஸர்வேஷு லோகேஷு காமசார: பவதி" என்றுச்ருதியானது தங்கு தடையின்றி எங்கும் ஸஞ்சரிக்கின்ருன் என்று ஈச்வர ஸ்வரூபத்தை வர்ணிக்கின்றது. அதனுல் முக்தி நிலேயிலும் ஸ்வரூபம் என்பதில் ஐச்வர்யம் இருக்கின்ற தென்பதற்கு இந்த வாக்யங்கள் ப்ரமாணமாகின்றது என்று பரமதஸ்த்தர்களால் சொல்லப்படுகிறது.

**157.** அவதாரிகை : இதுவரை பரமதஸ்த்தர்களால் சொல்லப்பட்ட விஷயம் சரியல்ல என்று மேலே அதை தூஷிக்கப்படுகிறது.

ச்லோகம் :

तत्र भाति चतुरस्रमुच्चकैस्तत्प्रमाणविरहादिह श्रुतौ ।
सत्यबोधसुखवन्न तत्परा सत्युवाच यत ईश्वरश्रुतिः

ச்லோகார்த்தம் : ச்ருதிப்ரமாணம் இல்லாததால் உன்னுடைய வாதம் முற்றிலும் சரி என்று சொல்வதற்குமுடியாது. ஏனெனில் ஈச்வரனைப்பற்றி தெரிவிக்கின்ற ச்ருதியானது சச்சிதானந்தம் போல ஐச்வர்யம் என்பதை தாத்பர்யமாகச் சொல்வதில்லை.

வ்யாக்யானம் : ஸத்யம் ஞானம் அனந்தம் ஆனந்தம் என்பது ஸ்வரூபம் என்று ச்ருதிவாக்யங்கள் எப்படி தெரிவிக்கின்றதோ அதுபோல் ஐச்வர்யம் என்பதும் ஸ்வரூபபூதம் என்று ச்ருதிப்ரமாணம் தெரிவிக்கவில்லை. 'ஸஸ்வராட்' என்ற வாக்யமும் 'ஞாத்வா தேவம்' என்ற வாக்யமும் ஐச்வர்யம் ஸ்வரூபம் என்ற தாத்பர்யத்தில் சொல்லப்படவில்லை. 'ஏஷஸர்வேச்வர:' என்ற வாக்யம்ஸ்வரூபம் என்ற தாத்பர்யத்தில் சொல்லப்படவில்லை. 'ஏஷஸர்வேச்வர': என்ற வாக்யம் கூட முக்தா வஸ்த்தையிலும் ஐச்வர்யம் இருப்பதாகவோ, அதுவே ஸ்வரூபம் என்ற தாத்பர்யத்துடனோ தெரிவிக்கவில்லை.

**158.** அவதாரிகை : மேலும்

ச்லோகம் :

तत्परश्रुतिवचः प्रमाणकं सत्यबोधसुखविग्रहं परम् ।
ब्रह्म तद्वदिह नेश्वरत्वभाक्तत्परश्रुतिवचः प्रमाणकम्

ச்லோகார்த்தம் : பரமாத்மா சச்சிதானந்த ஸ்வரூபம் என்று தெரிவிப்பதில் தாத்பர்ய முடைய ச்ருதிவாக்யங்கள் ப்ரமாணமாக இருக்கிறது. அதேபோல் ப்ரஹ்ம, ஈச்வரஸ்வரூபம் என்று தாத்பர்யத்துடன் தெரிவிக்கின்ற ச்ருதிவாக்யங்கள் ப்ரமாணமாக இல்லை.

வ்யாக்யானம் : "ஸத்யபோத சுக விக்ரஹம் பரப்ரஹ்மம்" என்று ச்ருதிவாக்யமானது ஸத்யம் ஞானம் சுகஸ்வரூபம் என்றே தெரிவிக்கின்றது. வேறு எந்த அர்த்தமும் சொல்லமுடியாது என்ற முறையில்தான், தத்பரமான ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. இதுபோல் ஐச்வர்யம் ஸ்வரூபம் என்று எந்தச்ருதிவாக்யமும் தெரிவிக்கவில்லை. அதனுல் ஐச்வர்யம் ஸ்வபாவம் என்பதற்கு ப்ரமாண ச்ருதியேகிடையாது.

**159.** அவதாரிகை : முன்னால் சொல்லப்பட்டச்ருதிவாக்யங்களே (ஆத்மக்ரீட: முதலானவை) ஐச்வர்யம்ப்ருஹ்மஸ்வரூபம் என்பதற்கு ப்ரமாணம் என்று சொல்லப்படுவது சரியல்ல. ஏனெனில் அவைகள் பலச்ருதி வாக்யமானதால் அவைகள் அர்த்தவாத வாக்யங்கள் என்பதால் அவைகள் ப்ரமாணமில்லை.

ச்லோகம் :

या फलश्रुतिरिहोपवर्णिता सा न तत्परतयाऽवगम्यते ।
तत्त्वमादिवचनं हि तत्परं तत्परा न तु फलश्रुतिः क्वचित्

**ச்லோகார்த்தம் :** எந்த பலச்ருதி இங்கு சொல்லப்பட்டதோ அது தாத்பர்யமுடையதாக அறியப்படவில்லை. தத்வமஸ்யாதிவாக்யங்கள்தான் தாத்பர்யமுடையவாக்யங்களாகும். எப்போதுமே பலச்ருதிகள் தாத்பர்யமுடையதாக ஆகாது.

**(சித்தா) வ்யாக்யானம் :** ச்ருதியானது 'தத்வமஸி' முதலான வாக்யார்த்தத்தையே தாத்பர்யத்துடன்போதிக்கின்றது. ஆத்மக்ரீட்: முதலான வாக்யங்கள் பலச்ருதி வாக்யங்கள் என்பதால் ச்ருதி அவைகளை தாத்பர்யத்துடன்போதிக்கவில்லை.

**பூர்வ :** பலச்சருதிவாக்யமாக இருந்தபோதிலும் ஐச்வர்யம் என்பதை போதிக்கின்றது என்று சொல்லப்படுதால் ஏற்படும் அஸம்பாவிதம் என்ன?

**சித்தா :** 'தத்வமஸி' முதலான வாக்யங்களே ஸ்வார்த்தபரம். த்ருஷ்ட்டபலமாக இருக்கின்றதால் ஸ்வார்த்தபோதக வாக்யமாக் இருக்கின்றது. பலச்ருதி வாக்யங்களுக்கு அதன் அர்த்தத்தை போதிப்பதில் தாத்பர்யமில்லை. உதாரணமாக 'ஜ்யோதிஷ்ட்ஹோமேனயஜேத' என்றவாக்யத்திற்கு ஸ்வர்க்கம்பலம் என்று தெரிவிப்பதில் தாத்பர்யமில்லை. இந்த கர்மாவிற்கு இதுபலம் என்று தெரிவிப்பதால் அந்தகார்யத்தில் அவன்ப்ரவ்ருத்திப்பான் என்று விதியில் தான்தாத்பர்யமேயன்றி பலத்தில் தாத்பர்யமில்லை. ஸாதனத்தில்ப்ரவ்ருத்தி ஏற்படவேண்டுமென்ற காரணத்தை முன்னிட்டு பலச்ருதி அர்த்தவாதமாகச் சொல்லப்படுகிறது. ஆகவே, தத்வமஸ்யாதி மஹாவாக்யங்களுக்கு உபகாரமாகவே மற்றவாக்யங்கள் இருக்கின்றதேயன்றி ஸ்வஅர்த்தத்தை போதிப்பதில் தாத்பர்யமில்லை.

**160. அவதாரிகை :** மேலும், 'ஐச்வர்யம்' என்பது பலச்ருதியாக இருந்தபோதிலும் ப்ரஹ்மஸ்வரூபம் என்றே சொல்லவேண்டும் என்றால், அதேபோல் மற்றுமுள்ள பலச்ருதிகளில் சொல்லப்படுவதெல்லாமே ப்ரஹ்மஸ்வரூபம் என்றேசொல்ல நேரிடும். அவ்விதம் சொல்லப்படுமானால் அதிப்ரஸங்கம் என்றதோஷம்ஸம்பவிக்கும்.

**ச்லோகம் :**

सामगानमपि तत्स्वरूपतां जक्षणं च जगतश्च सर्जनम् ।
अश्रुवीत फलवाक्यतः श्रुतं तत्स्वरूपमिति यद्युपेयते

**ச்லோகார்த்தம் :** ஈச்வரத்வம் என்பது பலச்சுருதிவாக்யம். இவ்விதம் பலச்ருதியினால் சொல்லப்படும் ஐச்வர்யம் முதலானவைகள், ப்ரஹ்மஸ்வரூபம் என்று சொல்லப்படுமானால் ஸாமகானம் ஜக்ஷணம் ஜகத்சிருஷ்டி முதலானவைகளும் ப்ரஹ்மஸ்வரூபம் என்றே ஒத்துக்கொள்ளநேரிடும்.

**வ்யாக்யானம் :** 'ஸாமகாயன்னுஸ்த்தே' என்ற (தைத்ரீய 3-10-5) வாக்யமும் 'ஜக்ஷத் க்ரீடன்' என்றும் 'ஸோSஸ்யஸங்கல்ப்பாதேவஸமுத்திஷ்ட்டதி' என்று (சாந்தோக்யம் 8-12.3, 8-2.10) சொல்லப்படும் வாக்கியங்கள் வித்வானுக்கு பலமாக சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது, ஸாமகானம் என்பது வித்வானுக்கு பலமாக சொல்லப்படுகிறது. அதேபோல் ஹாஸ்யம் போஜனம் முதலானவைகளேயும், ஸங்கல்ப்ப மாத்ரத்தினுல் பிதுர்க்களே தரிசிக்கலாம் என்றெல்லாம் பலமாக சொல்லப்படுகிறது. அதேபோல் ஜகத்சிருஷ்டி முதலானவைகளேயும் பலவாக்யங்களில் சொல்லப்படுகிறது. இவைகள் எல்லாமே

ப்ரஹ்மஸ்வரூபம் என்று சொல்லப்படுமாஞல் ப்ரஹ்மம் என்பது ப்ரஞ்ஞானகனம், ஏகரஸம், நிர்விசேஷம் என்று பரமார்த்தஸ்வரூபத்தை தெரிவிக்கின்ற ச்ருதிவாக்யங்களுக்கு விரோதமாகும். ஆகவே, பலச்ருதிவாக்யங்களில் சொல்லப்படுவதெல்லாம் ஸ்வரூபத்தில் சேர்ந்தது என்று சொல்வது சரியல்ல.

**161.** அவதாரிகை : அர்த்தவாதம் என்பது, குணவாதம், அனுவாதம், பூதார்த்தவாதம் என்று மூன்று விதம் சொல்லப்படுகின்றது. இதில் பூதார்த்த வாதம் என்பது அர்த்தவாதமாக இருந்தபோதிலும் அதைப்ரமாணமென்றே ஒத்துக்கொள்ளவேண்டு மென்று தேவதாதிகரணத்தில் பாதராயணரால் சொல்லப்படுகிறது. அதஞல், பலச்ருதி வாக்யங்கள் தத்பரமாக இல்லாததால் அர்த்தவாத வாக்யங்களுக்கு ப்ராமாண்யமே இல்லை என்று எப்படிச் சொல்வது ?

ச்லோகம் :

अर्थवादगतमभ्युपेयते न प्रमान्तरविरोधि यन्मतम् ।
सामगानमत जक्षणादि वा तत्परश्रुतिविरुद्धमुच्यते

ச்லோகார்த்தம் : அர்த்த வாதத்திஞல் அறியப்படுகின்ற விஷயம் எதுவோ அது ப்ரமாணாந்தர விரோதமாக இல்லையென்ருல், அது ஏற்றுக்கொள்ளப்படுகிறது. ஸாமகானம் பக்ஷணம் முதலானவைகள் தாத்பர்யச்ருதி வாக்யங்களுக்கு விருத்தம் என்று ஒத்துக் கொள்ளப்படுகிறது. (அதஞல் அவைகள் அங்கீகரிக்கப்பட முடியாது)

வ்யாக்யானம் : ஸத்யம், தேவதாதிகரணத்தில் சொல்லப்படும் விஷயத்திற்கு விரோதமாக எதுவும் சொல்லப்படவில்லை. எந்த ஒரு விஷயம் சொல்லப்படுகிறதோ அந்த விஷயத்தில் லோகத்தில் ஸம்வாதம் இருக்குமாஞல் அது அனுவாதம் என்றும், விஸம்வாதம் இருக்குமாஞல் (விருத்தமாக இருக்குமாஞல்) அந்த விஷயம் குணவாதம் என்றும், ஸம்வாதமோ, விஸம்வாதமோ இல்லாமல் இருக்குமாஞல் அந்த விஷயம் பூதார்த்தவாதம் என்று சொல்லப்படுகிறது.

ஜக்ஷன், க்ரீடன் என்ற வாக்யங்கள் எல்லாம் குணவாதம் என்றே சொல்லவேண்டும். ஏனெனில், ப்ரஹ்மஸ்வரூபம் ஏகரஸம் என்று தெரிவிக்கின்றவாக்யங்களுக்கு விரோதமாக இருப்பதால் அவைகளை நிஷேதம் செய்யப்படவேண்டும். (தள்ளப்படவேண்டும்)

இதேபோல் ஸாமகானம் முதலான விஷயங்களும் நிர்விசேஷ ச்ருதிவாக்கியத்திற்கு விரோதமாக இருப்பதால் விஸம்வாதம் என்று சொல்லவேண்டும். தேவாதாதி கரணத்தில் சொல்லப்படுவது ஸம்வாதி அஸம்வாதி என்பதெல்லாம் ப்ரமாணாந்தரத்திஞல் பாதிக்கக்கூடிய விஷயமாக இல்லாததால் அதில் சொல்லப்படும் விஷயம் பூதார்த்தவாதம் என்று தீர்மானித்து ஒத்துக்கொள்ளப்படுகிறது. தேவதாதிகரணத்தில் சொல்லப்படும் ந்யாயம் இங்கு முற்றிலும் பொருந்தாது.

**162.** அவதாரிகை : ஐச்வர்யம் என்பது வஸ்துபரமானச்ருதிக்கு விரோதமாக இல்லாததால், ப்ரஹ்மஸ்வரூபம் என்றே ஒத்துக் கொள்ளலாமே ? என்ருல்,

ச்லோகம் :

ईश्वरत्वमपि तत्परश्रुतिर्नेति नेति परिदु:खिता सती ।
वारयत्यवशिनष्टि केवलं चित्स्वरूपमनवद्यविग्रहम्

ச்லோகார்த்தம் : "நேதி நேதி" என்ற தாத்பர்யமுடையச்ருதியானது துக்கத்துடன் ஈச்வரத்வம் என்பதையும் நிஷேதம் செய்கின்றது. தோஷமற்றதான கேவல சித்ஸ்வரூபத்தை (மிஞ்சும்படிச் செய்கின்றது) சேஷமாகச் செய்கின்றது.

வ்யாக்யானம் : ஐச்வர்யம் என்பது ஸாபேக்ஷம். ஈசிதவ்யம் இல்லாமல் ஈச்வரத்வம் ஸம்பவிக்காது. 'ஏகரஸம்ப்ரஹ்ம' என்று தெரிவிக்கின்ற ச்ருதிக்கு விரோதமாக ஈச்வரத்வம் ஸ்வரூபம் என்று சொல்லப்படுவது ஒத்துக் கொள்ளகூடியதல்ல. மூர்த்தா மூர்த்த ப்ராஹ்மணத்தில் ஸர்வஜகத்தும் ப்ரஹ்மத்தின் ஐச்வர்யம் என்று முதலில் ப்ரஹ்மத்தில் அவைகளை ஆரோபம் செய்து அதன்பிறகு சொல்லப் பட்டவை எல்லாம் ப்ரஹ்ம் ஸ்வரூபத்தில் இல்லையென்று 'அதாத ஆதேசநேதி நேதி' என்று ஸர்வத்தையும் நிஷேதம் செய்து தெரிவிக்கின்ற இந்த ச்ருதிவாக்யமே தத்பரச்ருதி. இந்தச்ருதி வாக்யத்திற்கு விரோதமாக சொல்லப்படுவது சரியல்ல.

பூர்வ : இவ்விதம் அந்த வாக்யம் ஸர்வத்தையும் நிஷேதம் செய்யுமானால் சூன்யம் தான் எஞ்சிநிற்கும்.

சித்தா : அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் ஸர்வநிஷேதத்திற்குப் பிறகு நிஷேத அவதிஸ்வரூபமாக, அவைகளுக்கு அதிஷ்ட்டானமாக கேவல நிர்விசேஷ சித்ஸ்வரூபமே எஞ்சி இருக்கின்றது. சின்மாத்ரஸ்வரூபம் அனவத்யரூபம் நிரபேக்ஷஸ்வரூபம் என்பதே 'ஸத்யஸ்யஸத்யம்', 'ப்ராணாவைஸத்யம்', தேஷாம் 'ஏஷஸத்யம்' என்று கேவலம் ஸன்மாத்ரஸ்வரூபமாக ப்ரஹ்மஸ்வரூபம் இருக்கின்றதென்று மிச்சப்படுத்தி தெரிவிக்கின்றது. அதனால் சூன்யம் என்று சொல்வதற்கு ஒருக்காலும் முடியாது.

குறிப்பு : 1. எந்த வேதவாக்யம் ப்ரமாணாந்தர சித்தமான ஸம்வாதி அர்த்தத்தை தெரிவிக்கின்றதோ அதற்கு அனுவாத வாக்யம் என்று பெயர். (அக்னி : ஹிமஸ்ய பேஷஜம் என்பதுபோல்) எந்த வேதவாக்யம் ப்ரமாணாந்தர விருத்தமான அர்த்தத்தை (விஸம்வாதி) தெரிவிகின்றதோ அந்த வாக்யம் குணவாதவாக்யம் (ஆதித்யோயூப : என்பது போல்) எந்த வேதவாக்யம் ப்ரமாணாந்தர விருத்தமாகவோ, சித்தமான விஷயமாகவோ இல்லாத (அனுவாதமாகவோ) அர்த்தத்தை தெரிவிக்குமானால் அந்த வாக்யம் பூதார்த்தவாதம் என்று சொல்லப்படும். (வஜ்ர ஹஸ்த:புரந்தர: என்பது போல்) என்று ஸர்வத்தையும் நிஷேதம் செய்து தெரிவிக்கின்ற இந்த ச்ருதிவாக்யமே தத்பரச்ருதி. இந்த ச்ருதிவாக்யத்திற்கு விரோதமாக சொல்லப்படுவது சரியல்ல.

**163.** அவதாரிகை : ஐச்வர்யம் என்பது ஔபாதிகம், அனௌபாதிகம் என்று (ஸோபாதிகம், நிரூபாதிகம்) இரண்டு விதம்சொல்லப்படுகிறது. இதில் ஔபாதிக ஐச்வர்யத்தையே ச்ருதி நிஷேதம் செய்கிறது. ஸ்வாபாவிகமான விஸ்வஐச்வர்யம் (நிரூபாதிகம்) என்பதை ப்ரஹ்மஸ்வரூபம் என்று ஒத்துக் கொள்ளலாமே ?

**ச்லோகம் :**

**सोपाधीश्वरतानिषेधनपरा सा नेति नेतिश्रुतिः साक्षाद्भागवतं निरस्तनिखिलोपाधिस्वरूपं पुनः ।**
**विश्वैश्वर्यमिहोच्यमानमधुना मोक्षे ततस्तत्परैर्वाक्यैरस्य विरुद्धतानवसरो मुख्यं ततो गृह्यताम्**

**ச்லோகார்த்தம் :** "நேதி நேதி" என்ற ச்ருதி வாக்யம் ஸோபாதிக ஐச்வர்யத்தை நிஷேதம் செய்கின்றது. இப்போது முக்தி நிலையில் சொல்லப்படுகின்ற ஸர்வ ஐச்வர்யம் என்பது பரமாத்மாவின் சாக்ஷத்நிருபாதிக ஸ்வரூபமாக இருக்கின்றது. ஆகையால் இவ்விதம் நிருபாதிக ஈச்வரத்வம் என்பது தாத்பர்யமான ச்குதிவாக்யத்திற்கு விருத்தமாக இருக்கமுடியாது. ஆகையால் இதை முக்ய ஈச்வரத்வம் என்றே ஏற்கப்படவேண்டும்.

வ்யாக்யானம் : விச்வ ஐச்வர்யம் என்பது மோக்ஷநிலையில் நிஷேதம் செய்யப்படவில்லை. விச்வ ஐச்வர்யம் ப்ரஹ்மஸ்வரூபமே என்பதால் ஏகரஸம் என்று தெரிவிக்கின்ற ச்ருதிக்கு விரோதம் ஏதுமில்லை. ஆகையால் ஐச்வர்யம் ஸ்வாபாவிகம் என்றே ஒத்துக் கொள்ளவேண்டும்.

**164.** அவதாரிகை :

இவ்விதம் சொல்லப்படுமானல் மற்றவைகளையும் ஒத்துக்கொள்ள நேரிடும். அதனல் அதிப்ரஸங்கம் ஸம்பவிக்கும்.

ச்லோகம் :

सामगानमथ जक्षणं जगत्सर्जनं च निरुपाधि गृह्यताम् ।
नेति नेतिवचसा निषिध्यते जक्षणादिकमुपाधिसंश्रयम्

ச்லோகார்த்தம் : ஸாமகானம், பக்ஷணம் ஜகத்சிருஷ்டி முதலானவைகள் நிருபாதிக ஸ்வரூபமாகவே ஏற்கபட்டிருந்தாலும் கூட நேதி நேதிவாக்யத்தினுல் ஸோபாதிகமான பக்ஷணம் முதலானவைகள் நிஷேதம் செய்யப்படுகிறது.

வ்யாக்யானம் : விச்வஐச்வர்யம் என்பதை இந்த முறையில் ஒத்துக்கொள்ள வேண்டும் என்ருல், இதேபோல் ஜக்ஷன், க்ரீடன், ரமமாணு: ஸாமகானம் போன்ற எல்லாவற்றையுமே சிலவற்றை ஸோபாதிகம் என்றும் சிலவற்றை நிருபாதிகம் என்றும் பிரித்து அதில் நிருபாதிகம் என்பதே ப்ரஹ்மஸ்வரூபம் என்று ஒத்துக்கொள்ள நேரிடும்.

**165.** அவதாரிகை : ஸாமகானம் முதலானவைகளில் ஸோபாதிகம், நிருபாதிகம் என்று இரண்டு விதம் இருந்தால் தானே ஸோபாதிகத்தை நிஷேதம் செய்து நிருபாதிகம் ஸ்வரூபம் என்று சொல்லலாம்? அவ்விதம் சொல்வதற்கு ப்ரமாணமே இல்லை.

ச்லோகம் :

सामगानमथ जक्षणं जगत्सर्जनं न च खलु द्विधेष्यते ।
तत्प्रमाणविरहादिहेति चेदीश्वरत्वमपि न द्विधा भवेत्

**ச்லோகார்த்தம் :** ஸாமகானம், பக்ஷணம், ஜகத் சிருஷ்டி முதலானவைகள் ஆத்மாவில் அல்லது லோகவேதங்களில் இரண்டுவிதமாக அங்கீகரிக்ப்படவில்லை. ஏனெனில் அவ்விதம் தெரிவிக்கின்ற ப்ரமாணம் ஏதுமில்லை. அதேபோல் ஈச்வரத்வம் என்பதும் இரண்டுவிதம் என்பதற்கு ப்ரமாணம் ஏதுமில்லை. அதனால் ஒத்துக் கொள்ளப்படவில்லை.

**வ்யாக்யானம் :** ஸாமகானம் முதலானவைகள் நிரூபாதிகம் என்று சொல்வதற்கு ப்ரமாணமே கிடையாது. அதனால் ஒத்துக் கொள்ளமுடியாது என்று சொல்லப்படுமானால், அதேபோல் ஐச்வர்யம் ஸ்வரூபம் என்று சொல்வதற்கும் ப்ரமாணம் ஏதுமில்லை அதனால், ஐச்வர்யம் என்பது ஈசிதவ்யம் என்பதை அபேக்ஷிக்கின்றது என்பதாலும் ஈச்வரத்வம் என்பது நிரபேக்ஷமாக சித்திக்கின்றது என்பதில் ப்ரமாணமே கிடையாது. நிரூபாதிக ஐச்வர்யம் என்பதே சித்திக்க முடியாது என்பதால் அதை ஒத்துக் கொள்ளமுடியாது.

**166.** அவதாரிகை : ஞானம், சுகம், என்ற இரண்டும் ஔபாதிகம், அனௌபாதிகம் என்று இரண்டுவிதம் இருக்கின்றது என்று சொல்வதற்குரிய ப்ரமாணம் ஏதுமில்லை. அதனால் நேதி நேதி என்ற ச்ருதியினால் ஞானம் முதலானவைகளும் நிஷேதம் செய்யப்படுமானால் அவைகளையும் ஸ்வரூபம் என்று சொல்லமுடியாது. அதனால் ப்ரஹ்மம் ஜடமென்றும், அசுகஸ்வரூபம் என்றும் சொல்லநேரிடுமே?

**ச்லோகம் :**

ज्ञानमस्ति खलु बाह्यगोचरं निर्विशेषमविनाशि च द्विधा ।
बाह्यगोचरमपोह्य केवला स्वापमोक्षसमये चितिः स्थिता

**ச்லோகார்த்தம் :** பாஹ்யவிஷயவிஞ்ஞானம், நிர்விஷயகமான நித்யஞானம் என்ற இரண்டுவிதஞானம் இருக்கிறது. பாஹ்ய விஷய ஞானம் இல்லாமல் கேவல சைதன்யம் என்பது சுஷுப்திநிலையிலும் மோக்ஷநிலையிலும் இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஞானம் என்பதில், பாஹ்யார்த்த விஷயங்களை ப்ரகாசப்படுத்துகின்ற ஞானம் என்பது அந்தந்த விஷயத்தைக்கொண்டு ஏற்படுகின்றது. அதனால் அதற்கு நாசம் ஏற்படுகிறது. ஸ்வரூப ஞானம் என்பது நிர்விசேஷஞானம் என்பதை ஒருபோதும் யாராலும் நிஷேதம் செய்யமுடியாது. (நிஷேதம் செய்பவனே ஞானஸ்வரூபம்) இப்பேர்பட்ட ஸவிஸேஷ, நிர்விஸேஷ ஞானம் இருக்கின்றதென்பது ச்ருதி ப்ரமாணத்தினாலும் அனுபவத்தினாலும் அறியலாம் என்பதை மேலே தெரிவிக்கின்றோம்.

**167.** அவதாரிகை : ஞானம் இரண்டுவிதம் என்பதில் ச்ருதிவாக்யமே ப்ரமாணம்.

**ச்லோகம் :**

पश्यन्न पश्यतिगिरा कथयांबभूव साक्षादनश्वरविनश्वराचिद्विभागम् ।
तात्पर्यतः श्रुतिवचः स्फुटमेव नैवमैश्वर्यवस्तुनि विभागवचः श्रुतिर्नः

ச்லோகார்த்தம் : "பச்யன் நபச்யதி" என்ற வாக்யத்தினுல் ச்ருதியானது நேரிடையாகவே மிகஸ்பஷ்ட்டமாக நித்யசைதன்யம், அநித்யசைதன்யம் என்ற விபாகத்தை தாத்பர்யத்துடன் போதிக்கின்றது. இந்தவிதம் ஐச்வர்யம் என்ற விஷயத்தில் இரண்டுவித விபாகங்களை தெரிவிக்கின்ற ச்ருதிவாக்யங்கள் கிடையாது. இதுவே எங்கள் அபிப்ருயம்.

வ்யாக்யானம் : பாஹ்ய விஷயகமானவ்ருத்திஞானம் என்பது அநித்யம். அதனுல்அதை நிஷேதம் செய்து நிருபாதிகமான ஞானம் நித்யசைதன்யஸ்வரூபமாகவே இருக்கின்றது என்பதில் ச்ருதிவாக்யங்களே ப்ரமாணம். அதாவது, "யத்வைதந்நபச்யதி பச்யன் வை தந் நபச்யதி, நஹித்ரஷ்ட்டு: த்ரஷ்ட்டே: விபரிலோபோவித்யதே அவிநசித்வாத்"1 நது தத் த்விதீயமஸ்திதாதோSன்யத் விபக்தம்யத்பச்யேத்", என்ற (ப்ரஹ-4-3-23) ச்ருதி வசனமே ஞானம் இரண்டுவிதம் என்பதில் ப்ரமாணமாகின்றது. சாக்ஷாத் அனச்வரம், வினச்வரம் என்று ஞானத்தில் விபாகம் இருக்கிறது என்று 'பச்யன்' என்பதால் நித்யஞானம் என்பதையும் நபச்யதி என்பதால் வ்ருத்தி ஞானத்தையும் தெரிவிக்கின்றது. 'யத்வைதத்' முதலானபதங்கள் சுஷுப்திநிலையில் ஆத்மா பார்த்துக்கொண்டே இருக்கின்றது என்றும், ஆனுலும் பார்க்கவில்லை என்று (விஷயம் இல்லாததால்) வ்ருத்தி ஞானம்இல்லை என்று இந்தவாக்யம் தெரிவிக்கின்றது. இதனுல் நித்யஞானம் இருக்கிறது என்பது சித்தமாகின்றது. ஆகையால் ஸ்வரூபஞானத்திற்கு சுஷுப்தி அவஸ்த்தையிலும் நாசமில்லை என்றும், அந்த நிலையில் எந்த விஷயம் இருக்கின்றதோஅதை ப்ரகாசப்படுத்துகின்றது என்பதையே "நஹித்ரஷ்ட்டு : த்ரஷ்ட்டே: விபரிலோபாவித்யதே அவிநசித்வாத்" என்ற வாக்யம் தெரிவிக்கின்றது. ஸர்வ வஸ்துக்களின்உற்பத்தி விநாசங்களுக்கும் சாக்ஷியாக ஞப்திஸ்வரூபமாக இருக்கின்ற இந்த த்ருஷ்ட்டிக்கு (ஆத்மாவிற்கு) நாசம் என்பதே கிடையாது என்று தெரிவிக்கின்றதன் மூலம், ஸர்வ அநாத்மாவிலிருந்தும் வேறுபடுத்திஆத்மா நித்யசைதன்யஸ்வரூபம் என்பதை தெரிவிக்கின்றது.

ஆகவே, சுஷுப்தி அவஸ்த்தையில் சக்ஷுஸ் முதலான ஸர்வகரணங்களும் உபஸம்ஹாரம் அடைவதால், பாஹ்ய விஷய வ்ருத்திஞானம் என்பது ஏற்படவில்லை. அதனுல் வ்ருத்திக்கு நாசம் சொல்லப்படுகிறது. இதையே'நபச்யதி' என்று சொல்லப்படுகிறது. ஆனுல் சுஷுப்தியிலும் ஸ்வரூப ஞானத்திற்கு நாசமே கிடையாது என்பதையே "பச்யன்வைதத்" என்றுதெரிவிக்கின்றது. ஏனெனில் சுஷுப்திநிலையில் ஆத்மாவையன்றி வேருக அறியப்படக்கூடிய த்ருச்யமான விஷயங்களோ அவைகளை க்ரஹிக்கக் கூடிய கரணங்களோ கிடையாது. ஆகவே ஸர்வவஸ்த்துக்களின் பாவாபாவங்களுக்கு சாக்ஷியாக ஸ்வரூபஞானம் ப்ரகாசிக்கின்றது. இந்தவிதம் ஸோபாதிக ஞானம், நிருபாதிக ஞானம் என்று இரண்டுவித ஞானம் இருக்கின்றதென்பதில் ச்ருதியே ப்ரமாணமாகிறது. அதுபோல் ஐச்வர்யம் இரண்டுவிதம் என்று விபாகம்செய்து எந்தச்ருதிவாக்யமும் தெரிவிக்கவில்லை.

**168.** அவதாரிகை : இதேபோல் சுகம் என்பதும் இரண்டுவிதம் இருப்பதாக ச்ருதி வசனம் தெரிவிக்கின்றது.

**ச்லோகம் :**

एवं न वा अर इति श्रुतमेव तावत्पुत्राद्युपाधिपुरुषस्य सुखं विनाशि ।
नित्यं निरन्तरमनन्तमपारमुक्तं ब्राह्मं सुखं वचनकोटिशतैश्च यत्नात्

**ச்லோகார்த்தம் :** இந்தவிதம் புருஷனுடைய ஸோபாதிகமான புத்ரர் முதலான சுகங்கள் அநித்யமென்று 'நவா அரே' என்ற வாக்யத்திஞல் அறியப்படுகிறது. ப்ரஹ்மானந்தமோ நித்யம், நிரந்தரம் அபாரம் என்று கோடிக்கணக்கான வாக்யங்கள் யத்னத்துடன் (மிகுந்த ப்ரயாஸையுடன்) தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஞானம் என்பது வ்ருத்தி விஷய ஞானமென்றும், ஸ்வரூப ஞானமென்றும் இரண்டுவிதம் சொல்லப்படுகிறது அதுபோல் விஷய சுகமென்றும் ஸ்வரூபசுகம் என்றும் இரண்டுவிதம் இருப்பதாகச் ச்ருதிவசனங்கள் தெரிவிக்கின்றது. அதாவது "ந வா அரே புத்ராணும் காமாய புத்ரா : ப்ரியா பவந்தி ஆத்மனஸ்துகாமாயபுத்ரா: ப்ரியாபவந்தி" என்று (ப்ரஹ 2-4-5) தெரிவிக்கின்றது. புத்ரமித்ராதிகளிஞல் ஏற்படும் சுகம் அநித்யசுகம். தன் ஸ்வரூபசுகம் என்பதில் உள்ள ப்ரீதியின் காரணமாகவே புத்ராதிகளில் ப்ரியம் ஏற்படுகிறது. ஆகவே ஆத்ம சுகமே நித்ய சுகம் என்பதை 'விஞ்ஞானம் ஆனந்தம் ப்ரஹ்ம' என்றும் 'ஏஷ: அஸ்ய பரம ஆனந்த': என்றும் 'ஆனந்தோப்ரஹ்மே திவ்யஜாஞத்' என்று ப்ரஹதாரண்யக ச்ருதி முறையே (3-9-28, 4-3-32, 3-6-1) வாக்யங்கள் தெரிவிக்கின்றது. 'ஆனந்தத்விபாதி' என்றுமுண்டக ச்ருதி (2-2.7) வாக்யம் தெரிவிக்கின்றது. இந்த விதம் நூற்றுக்கணக்கான ச்ருதிவாக்யங்கள் ஆத்மா சுகஸ்ப்வரூபம் என்பதைத் தெரிவிக்கின்றது. துக்க ஸம்பந்தம் அற்றதான இந்த சுகம் (கால பரிச்சேதமற்றது என்றும் தேச பரிச்சேதமும் அற்றது வஸ்துபரிச்சேதம் அற்றது) மூன்று வித பரிச்சேதங்களும் அற்றது அனந்தம் என்றும் நித்யநிரந்தர நிரதிசய சுகஸ்வரூபம் என்று உபநிஷத் வாக்யங்கள் தெரிவிக்கின்றது.

**169.** அவதாரிகை : இந்தவிதம், ஐச்வர்யம் என்பது இரண்டுவிதம் என்று தெரிவிக்கக்கூடிய ச்ருதி வசனமே கிடையாது என்பதை தெரிவித்து இந்த விஷயத்தை ஒரு முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

ऐश्वर्यवर्णनमिह द्विविधं न वेदे नित्यं क्वचित्क्वचिदनित्यमिति प्रतीमः ।
ऐश्वर्यमात्रकथनं पुनरस्ति मोक्षादर्वाङ् न मोक्षसमये च न तत्परं तत्

**ச்லோகார்த்தம் :** வேதத்தில் சில இடங்களில் நித்ய ஐச்வர்யமும், சில இடங்களில் அநித்ய ஐச்வர்யமும் வர்ணிக்கப்பட்டு இருக்கிறது என்று (எங்களால் அறியப்படவில்லை) நாங்கள் அறியவில்லை மோக்ஷத்திற்கு முன்பு ஐச்வர்யம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆஞல் மோக்ஷதசையில் சொல்லப்பட்டிருக்கின்ற ஐச்வர்யம் என்பது தாத்பர்யமுடையதல்ல. (ஸ்துதி பரம் என்றே அறிய வேண்டும்.)

**வ்யாக்யானம் :** இந்த விதம் ஞானம், சுகம், என்ற இரண்டும், இரண்டு விதமாக இருக்கிறது என்பதை ச்ருதிவசனம் நேரிடையாகவே தெரிவிக்கின்றது. 'ந ப்ரேத்ய ஸம்ஞாSஸ்தி' 'நப்ரியாப்ரியேஸ்ப்ருசத:' என்ற (சாந்தோக்யம்8-12.1) வசனம் ஸோபாதிகமான ஞானமோ சுகமோ கிடையாது என்பதை நிஷேதம் செய்து தெரிவிக்கின்றது. நிருபாதிகமான ஞானம், சுகம், என்ற இரண்டையும் ச்ருதி தாத்பர்யேண போதிக்கின்றது. 'விஞ்ஞானம் ஆனந்தம்' 'ப்ரஹ்ம' என்று தெரிவிப்பதால் ஞானம் ஆனந்தம் என்பதெல்லாம் ஸ்வரூபமென்றே ஒத்துக் கொள்ளப்படுகிறது. ஆகவே ஞானம், சுகம் இரண்டும் ஸ்வரூபமில்லை என்று சொல்லப்படும் விஷயம் நிராகரணம் செய்யப்பட்டது. இதேபோல் ஐச்வர்யம் என்பது ஆத்மஸ்வரூபமல்ல, ஏனெனில் ஐச்வர்யம் ஸ்வரூபம் என்று விபாகம் செய்து தெரிவிக்கக் கூடிய ச்ருதி வசனமே கிடையாது.

ஏஷஸர்வேச்வர:ஸர்வச்ய ஈசான;ஸர்வச்ய அதிபதி:என்பது போன்ற வசனங்கள் (ப்ரஹ 4-4.22) நித்யத்வ அநித்யத்வ விபாகம் செய்து தெரிவிக்கவில்லை. வ்யாவகாரிக நிலையில் உள்ள உபாதியுடன் கூடிய ஆத்ம ஸ்வரூபத்தைப்பற்றி தெரிவிக்கின்ற வாக்யங்கள். ஆகவே, இந்த ஐச்வர்யம் முதலானவைகள் உபாதி அற்ற ஸ்வரூபத்தை தெரிவிக்கவில்லை. அதனுல் அதை நித்யம் என்று சொல்ல முடியாது. முக்தி நிலையில் ஈசித்வ்யமே இல்லாததால் ஐச்வர்யம் ஸ்வரூபம் என்று சொல்வது சரியல்ல. 'விச்வைச்வர்யம் கேவல ஆப்த காம:' என்ற வாக்யம் ஸ்துதி பரம் என்றே சொல்ல வேண்டும். ஏனெனில் ஆத்மா ஏகரஸம் என்பதாலும் முக்தி நிலையில் ஐச்வர்யாதிகள் இருக்க முடியாது என்பதாலும் ஐச்வர்யம் ஸ்வரூபம் என்றோ நித்யமென்றோ சொல்லமுடியாது.

**170. அவதாரிகை :** ஐச்வர்யம் ஸ்வரூபமில்லையென்ருல், 'ஏஷஸர்வேச்வர:' என்பது போன்ற வசனங்கள் வ்யர்த்தமென்று சொல்ல நேரிடுமே ?

**ச்லோகம் :**

प्रियशिरस्त्वकथा खलु यादृशीभवति तादृशमेव तदीरणम् ।
तदनु नेतिच नेति वचः श्रुतेर्यदपि मोक्षगतं स्तुतये हि तत्

**ச்லோகார்த்தம் :** ப்ரியம் என்பது ஆத்மாவின் சிரஸ் என்பது போன்ற வாக்யங்கள் எவ்விதமோ, அவ்விதமே ஐச்வர்யத்தை தெரிவிக்கின்ற வாக்யங்களிலும் இருக்கின்றது. ஏனெனில் அதன் பிறகு நேதி நேதி என்ற (நிஷேத) ச்ருதி வாக்யம் இருக்கின்றது. ஆகவே முக்தி நிலையில் சொல்லப்படும் ஐச்வர்யம் என்பது ஸ்துதி செய்வதற்காகவே சொல்லப்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** 'ஆனந்தமயனே ப்ரஹ்மமென்று தெரிவிக்கின்றமதத்தில், அவர்களால் சொல்லப்படுவது சரியல்ல என்று தெரிவிப்பதற்காக' 'தஸ்யப்ரியமேவ சிர: மோதோ தக்ஷிண: பக்ஷ: என்பது முதலான வசனங்கள் தைத்ரீயச்ருதியில் (2.5.1) சொல்லப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படும், ப்ரியம் மோதம், ப்ரமோதம் முதலானவைகளை அவயவமாக கல்ப்பிக்கப்பட்டிருக்கிறது. அந்தந்த உபாதிகளைக் கொண்டு ஆனந்த தாரதம்யங்கள் தெரிவிக்கப்படுகிறது. ஆகவே இவையெல்லாம் வ்யாவகாரிக விஷயம் என்பதால் அவைகளை ஸ்வரூபமென்று சொல்லப்படவில்லை. கடைசியில் ப்ரஹ்ம புச்சம்

ப்ரதிஷ்ட்டா என்று கேவல ப்ரஹ்ம ஸ்வரூபத்தை ப்ரதிபாதனம் செய்ய வேண்டுமென்ற நோக்கமுடையதாக இருப்பதால் அதற்குரிய உபாயமாகவே மற்ற வாக்யங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே ப்ரிய மோதாதிகல்பனைகளால் நிர்க்குண ப்ரஹ்மத்தை தெரிவிப்பதில் தான் நோக்கமுடையதாக ச்ருதி வசனங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. இதேபோல் ஐச்வர்ய கல்பனை என்பதும் உபாதி ஸம்பந்தமுள்ள விஷயம், வ்யாவகாரிகம், ஆரோபிதம் என்றே சொல்லப்படவேண்டும். ஏனெனில் ஐச்வர்யத்தைப்பற்றி தெரிவித்த பிறகு ஸ ஏஷ நேதி நேதி (ப்ரஹ 3-9-26) என்று ஸர்வத்தையும் நிஷேதம் செய்து தெரிவிக்கின்றதால், அவையெல்லாம் பரமார்த்தமில்லையென்று அறியப்படுகிறது. பரமார்த்தமாக இருக்குமானால் அவைகளை நிஷேதம் செய்யமுடியாது. அத்யந்தம் அஸத்தாக இருந்தாலும் நிஷேதம் செய்ய முடியாது. அதனால் நிஷேதம் செய்யப்படுவதாலேயே ஐச்வர்யாதிகள் ஆரோபிதம் என்று சித்திக்கிறது. ஞானம் சுகம் என்பது போல் ஐச்வர்யம் என்பதும் ஸ்வரூபம் என்று எந்த வாக்யமும் தெரிவிக்கவில்லை என்பதாலும் முக்தி நிலையில் ஐச்வர்யாதிகள் இருக்க முடியாது என்பதாலும் 'ஸோSச்னுதே ஸர்வான் காமான் ஸஹ' என்பதுபோல், விச்வைச்வர்யம் கேவல:' என்ற வாக்யமும் வித்யா ஸ்துதி பரமான பலச்ருதி வாக்யம் என்றே சொல்லவேண்டும்.

**171.** அவதாரிகை : இவ்விதம் உபாதி வஸாத் ஐச்வர்யாதிகள் ஆரோபிதம் என்று சொல்லப்பட்டதால் ஸ்வரூபமில்லையென்பது சித்தம் செய்யப்பட்டது. இதே விஷயத்தினை வேறு விதமாகவும் சொல்லலாம்.

ச்லோகம் :

स्वातन्त्र्यमीश्वरगिरा गुणमार्गवृत्तिमाश्रित्य पूर्वगुरवः प्रतिपादयन्ति ।
सिंहस्य शौर्यगुणवत्परमेश्वरस्य स्वातन्त्र्यलक्षणगुणोऽव्यभिचाररूपः

ச்லோகார்த்தம் : கௌணவ்ருத்தியை ஆச்ரயித்து பூர்வ ஆசார்யர்கள் ஈச்வரன் என்ற பதத்தினால் ஸ்வாதந்தர்யத்தை தெரிவிக்கிறார்கள். சிம்ஹத்தினுடைய சௌர்ய குணம்போல் பரமேச்வரனுடைய ஸ்வாதந்தர்யமும் அவ்யபிசாரியாக இருக்கிறது.

வ்யாக்யானம் : பாஷ்யகாரர் முதலான பெரியோர்கள் கௌணீவ்ருத்தியைக் கொண்டு இந்த வாக்யங்களுக்கு அர்த்தம் தெரிவிக்கிறார்கள். அதாவது, ஈச்வரன் என்றாலே ஸ்வதந்திரன் என்று அர்த்தம்.

'ஏஷ ஸர்வேச்வர:' என்ற வாக்யம் லக்ஷணையினால் ஸ்வாதந்தர்யம் என்று தெரிவிக்கின்றது. எப்படி சிம்ஹசப்தமானது சிம்ஹத்திற்கு ஸ்வாபாவிகமாக இருக்கின்ற ஸௌர்யம், பராக்ரமம் முதலானவைகள் மாணவகனிடத்திலும் இருப்பதால், அதை தெரிவிப்பதற்காக மாணவனையே எப்படி சிம்ஹ சப்தத்தினால் சொல்லப்படுகிறதோ அதேபோல் நிர்விசேஷ ப்ரஹ்மத்தில் ஸ்வாதந்தர்யம் என்பது ஸ்வரூபமாகவே இருக்கிறது. ஸோபாதிகத்திலும் அந்த ஸ்வாதந்தர்யம் அறியப்படுகின்றதால் ஸோபாதிக ஸ்வரூபத்தையே ஈச்வரன் என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் ஸோபாதிக ஸ்வரூபத்தைக்கொண்டு நிருபாதிகஸ்வரூபத்தை தெரிவிப்பதற்காகவே 'ஏஷஸர்வேச்வர:' என்பது முதலான வாக்யங்கள் 'ஸ்வாதந்தர்யம்' என்பது ப்ரஹ்ம ஸ்வரூபமென்று கௌணவ்ருத்தியைக்கொண்டு தெரிவிக்கின்றது. இந்த ஸ்வாதந்தர்யம் ஒருபோதும்

வ்யபிசரிப்பதில்லை. அவ்யபிசரிதம் என்பதையே கௌணவ்ருத்தியினால் தெரிவிக்கப்படுகிறது.

**172. அவதாரிகை : ஈச்வர பதத்தினால் எப்படி நிர்க்குணப்ரஹ்மத்தில் ஸ்வாதந்தர்யம் சித்திக்கின்றது ?**

**ச்லோகம் :**

ऐश्वर्यवस्तु परिगृह्य तदत्यजन्तः सामर्थ्यसिद्धिमुपपादयितुं क्वचिच्च ।
सर्वेश्वरश्रुतिवचः समुदाहरन्ति स्वातन्त्र्यलक्षणगुणस्य तमस्वितायाम्

**ச்லோகார்த்தம் :** அஞ்ஞானதசையில் இருக்கின்ற ஐச்வர்யத்தை எடுத்துக் கொண்டு, நிரூபாதிக ப்ரகணத்திலும் சில இடங்களில் அதை விடாமல் ஸாமர்த்ய சித்தமான ஸ்வாதந்தர்யத்தை உபபாதனம் செய்வதற்காக பூர்வ ஆச்சார்யங்கள் ஸர்வேச்வர ச்ருதிவாக்யங்களை தெரிவிக்கின்றார்கள்.

**வ்யாக்யானம் :** 'காரணத்வேன ச ஆகாசாதிஷு யதா வ்யபதிஷ்ட்டாந்தே:' என்ற ஸூத்ரத்திற்கு பாஷ்யகாரரால் இவ்விதம் வ்யாக்யானம் செய்யப்பட்டிருக்கிறது. இதே அபிப்ருயத்தை வேறு சில இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. அவ்ய பிசரிதமான ஸ்வதந்தரத்வம் என்பது ப்ரஹ்மத்தினிடம்தான் இருக்கிறது. ஆனால் மாணவகனையேசிம்ஹமென்று சிம்ஹசப்தத்தினால் தெரிவிப்பதனாலேயே சிம்ஹமென்பதே பராக்ரமமுடையது என்று எப்படி அர்த்தாத் சித்திக்கின்றதோ அதுபோல் ஈச்வரன் என்ற சப்தம் ஸ்வாதந்தர்யம் என்ற அர்தத்தைக் கொண்டு ப்ரஹ்மத்தினிடம் இருக்கின்ற அவ்யபிரிசரிதமான ஸ்வதந்தரத்வத்தையே தெரிவிக்கின்றது என்று இவ்விதம் குருமார்களால் சொல்லப்படும் அர்த்தம் ப்ரஹ்மஸ்வரூபத்திற்கு விரோதமாக இல்லை. அதனால் ஈச்வரன் என்ற சப்தம் கௌணமாக ஸ்வதந்த்ரம் என்ற அர்த்தத்தில் பொருந்துகின்றதால் எவ்வித ஆக்ஷேபத்திற்கும் இடமில்லை.

**173.** அவதாரிகை : 'ஏஷ ஸர்வேச்வர : ஏஷபூதபால :' என்ற ச்ருதிவாக்யம், உபாதி ஸம்பந்தமுள்ள ஈச்வர ஸ்வரூபத்திலேயே இந்த விசேஷணங்களை தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுமானால், இவ்விதம் ஸவிஸேஷஸ்வரூபத்தில் சொல்லப்படும் ஐச்வர்யம் என்ற பதத்தினால் நிர்விசேஷமான ப்ரஹ்மஸ்வரூபத்தினிடம் ஸ்வாதந்தர்யம் என்ற தன்மை (குணம்) சித்திப்பதாக எப்படி கிடைக்கின்றது ?

**ச்லோகம் :**

सिंहश्रुतिर्न घटते यदि शूरताऽस्य न स्यात्तथैव परमेश्वरताश्रुतिश्च ।
नैश्वर्यलक्षणगुणः परमात्मनश्चेदित्यर्थलब्धिमभिसंदधते महान्तः

**ச்லோகார்த்தம் :** புருஷனுக்கு ஸௌர்யம் இல்லையென்றால் சிம்ஹபதம் அவனிடம் பொருந்தாது. அவ்விதமே பரமாத்மாவிற்கு ஐச்வர்யத்தினால் லக்ஷிதமான ஸ்வாதந்தர்ய்ம் இல்லையென்றால் பரமேச்வரன் என்ற ச்ருதி வாக்யம் பொருந்தாது என்று மஹான்கள் அர்த்தாத் சித்திக்கின்றதை சொல்கிறார்கள்.

**வ்யாக்யானம் :** தேவதத்தனிடம் சிம்ஹ சப்தப்ரயோகம் செய்யப்படுகின்றதாலேயே, ஸௌர்யம் என்ற குணம் சிம்ஹத்தினிடம் இருக்கிறதென்றே அறியப்படுகிறது. அவ்விதம் ஸௌர்ய பராக்ரமாதிகள் சிம்மத்தினிடம் இல்லையென்றால், அந்த பதத்தினால் தேவதத்தனை குறிப்பிடுவது (அவனிடம் ப்ரயோகம் செய்வது) பொருந்தாது. இதேபோல் ஸ்வாதந்தர்யம் என்ற அர்த்தம் பரமாத்மாவினிடம் இல்லாமல் இருக்குமானால் ஐச்வர்யம் என்ற ச்ருதி பொருந்தாது. ஆகவே ஐச்வர்யம் என்ற சப்தம் அர்த்தாத் ஸ்வாதந்த்ரியம் என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றதென்றே சொல்ல வேண்டும்.

**பூர்வ :** 'ஸர்வேச்வர:' என்று வ்யவகாரதசையில் சொல்லப்படுகிறது என்பதற்காக நிர்விசேஷ ப்ரஹ்மத்தினிடம் ஸ்வாதந்தர்யம் எப்படி சித்திக்கின்றது ?

**சித்தா :** ஸ்வாதந்தர்யம் இல்லையென்றால் ஸர்வேச்வரத்வம் சொல்வது பொருந்தாது. ஆகையால் அர்த்தாத் ஸ்வாதந்தர்யம் என்பது கிடைக்கின்றது. சிம்ஹத்தினிடமும் ஸௌர்யபராக்ரமாதிகள் இருக்கவேண்டும். அதேபோல் மாணவகனிடமும் ஸௌர்யாதிகள் இருக்கவேண்டும். இரண்டு இடங்களிலும் இந்த தன்மைகள் இருந்தால்தான் மாணவகனிடம் சிம்ஹசப்தம் பொருந்தும். சிம்ஹத்தினிடம் ஸௌர்யம் முதலானவை எப்படி எப்போதும் அவ்யபிசாரியாக இருக்கின்றதோ அதுபோல் பரமாத்மாவினிடம் ஸ்வாதந்தர்யம் என்பது எப்போதும் தொடர்ந்து இருக்கிறது. ஸ்வாதந்தர்யம் என்பதற்கு ஐச்வர்யம் என்பது லக்ஷகம். ஈச்வரன் என்று சொல்லப்படுவதனாலேயே ஸ்வாதந்த்ரியம் என்ற அர்த்தம் கிடைக்கின்றது. பரமேச்வரனிடம் ஸ்வாதந்தர்யம் இல்லையானால் பரமேச்வரன் என்ற ச்ருதி வசனம் பொருந்தாது. ஆகவே ப்ரஹ்மமென்பதையே வ்யவகாரதசையில் 'ஸர்வேச்வரன்' என்று ச்ருதியானது தெரிவிக்கின்றதால் ஸ்வாதந்தர்யம் என்பது ப்ரஹ்மஸ்வரூபம் என்றே சொல்லவேண்டும். ஆகவே ச்ருதிபலத்தினாலேயே ஐச்வர்யம் என்பதற்கு அர்த்தாத் ஸ்வாதந்தர்யம் என்றே அர்த்தம் சொல்லப்படுகிறது.

**174.** அவதாரிகை : 'ஸர்வேச்வரன்' முதலான ச்ருதி வசனங்களால் நேரிடையாக ஐச்வர்ய சப்தத்திற்கு ஸ்வதந்த்ரம் என்ற அர்த்தத்தை தெரிவிக்கவில்லையென்றால், ஸ்வதந்த்ரம் என்ற அர்த்தம் சாஸ்த்திரத்தினால் சொல்லப்படுவதாக எப்படிச் சொல்லமுடியும் ?

ச்லோகம் :

श्रौतार्थवृत्तिबललभ्यमपीह वस्तु श्रौतं वदन्ति निकटत्वमनुस्मरन्तः ।
आसन्नवृष्टिमपि देवमुदीरयन्ति वर्षन्तमेव हि जना भुवि तादृगेतत्

ச்லோகார்த்தம் : ஸாமீப்யத்தை அனுசரித்துச்ரௌதார்த்த ஞானத்தினால் எந்த அர்த்தம் கிடைக்கின்றதோ அதுவும் ச்ரௌதம் என்றே சொல்கிறார்கள். இனிமேல் வர்ஷிக்கப்போகின்ற மேகத்தைப் பார்த்து வர்ஷிக்கின்றதென்றே இந்த லோகத்தில் ஜனங்களால் எவ்விதம் சொல்லப்படுகிறதோ, அதுபோல் சொல்லப்படுகிறது.

வ்யாக்யானம் : ச்ருதியிலிருந்து கிடைக்கின்ற அர்த்தமானது, அர்த்தாத் கிடைக்கின்றது என்ருலும் அதையும் ச்ரௌதம் என்றே சொல்ல வேண்டும் என்று பெரியோர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. (ச்ரௌதார்த்தேவ்ருத்திச்ரௌதார்த்த போதனம் தத்பல லப்யம் = தத்ஸாமர்தயாத்ப்ராப்யமபிவஸ்து ச்ரௌதம் என்றே ப்ரமாணவ்ருத்தி நிரூபணம் செய்கின்ற பண்டிதர்களால் சொல்லப்படுகிறது) யாகாதி கர்மாவிற்கு ஸ்வர்க்கம் என்பதே பலம் என்று வாக்யம் தெரிவிக்கிறது. ஆனுல் யாக கர்மாவிற்கும், ஸ்வர்க்க பலத்திற்கும் மத்தியில் அபூர்வம் என்பதை அர்த்தாத் ஒத்துக்கொள்ளப்பட வேண்டும் என்றும் மீமாம்ஸகர்களால் ஒத்துக் கொள்ளப்படுகிறது. அர்த்த லப்யமாக இருந்தாலும் அதை ச்ரௌதம் என்றே அவர்களால் சொல்லப்படுகிறது. அதுபோல் வேதாந்தத்திலும் இந்த ந்யாயம் இருக்கின்றதால் அர்த்தாத் கிடைப்பதாக இருந்தபோதிலும் அதை ச்ரௌதம் என்றே சொல்லப்படவேண்டும். உதாரணமாக, பர்ஜன்ய தேவதை வர்ஷிக்கிருன் என்று நிச்சயமாக மழைவர்ஷிக்கப்போகிறது என்று அறியப்படுகின்றபோதே ஜனங்கள் மழை பெய்கிறது என்று ஸமீபத்தில் நடக்கப் போகின்றதைக் கொண்டே அப்போதே பெய்கின்றது என்று சொல்கிருர்கள். அதேபோல் ச்ருதியினுல் தெரிவிக்கப்படும் (ச்ரௌதமான) ஐச்வர்யம் என்ற பதம் அதற்கு ஸமீபத்திலுள்ள ஸ்வாதந்த்ரியம் என்ற அர்தத்தையே தெரிவிக்கின்றது என்று சொல்லப்படுவதில் தோஷம் ஏதும் ஸம்பவிக்கமுடியாது.

**175.** அவதாரிகை : "பராபித்யானுத்து திரோஹிதம் ததோஹ்யஸ்ய பந்த விபர்யயௌ" என்ற (ப்ரஹ்மசூத்ரம் 3-2-9) சூத்ரத்தினுல் மறைந்திருக்கின்ற ஐச்வர்யாதிகள் த்யானத்தினுல் அறியப்படுகிறது என்று சொல்லப்படுகிறது. அதனுல் ஐச்வர்யாதிகள் ஸ்வாபாவிகம் என்றே சொல்லலாமே ?

ச்லோகம் :

ऐश्वर्यमज्ञानतिरोहितं सद्ध्यानादभिव्यज्यत इत्यवोचत् ।
शरीरिणः सूत्रकृदस्य यत्तु तदभ्युपेत्योदितमुक्तहेतोः

ச்லோகார்த்தம் : அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்டிருக்கின்ற இந்த ஜீவனுடைய ஐச்வர்யமானது த்யானத்தினுல் அபிவ்யக்தமாகின்றதென்று சூத்ரகாரர் சொல்லியிருக்கிருர். முன் சொல்லப்பட்ட காரணங்களினுல் இது அப்யுபேத்யவாதமேயாகும்.

வ்யாக்யானம் : 'பராபித்யானுத்து' என்ற சூத்ரமானது ஜீவனுக்கு ஐச்வர்யம் என்பது ஸ்பாவமாக இருந்தபோதிலும், ப்ரஹ்ம ஐச்வர்யம் என்பது அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்டிருப்பதால் (ப்ரஹ்ம்) தன் ஸ்வரூபத்யானத்தினுல் ஐச்வர்யம் அபிவ்யக்தமாகிறது என்று தெரிவிக்கின்றது. இதனுல் முக்தி நிலையிலும் ஐச்வர்யம் அபிவ்யக்தமாகிறது என்று சூத்ரார்த்தம் அறியப்படுகிறது. இந்தவிதம் தெரிவிக்கின்ற சூத்ரம் அப்யுபேத்ய வாதமாகவே தெரிவிக்கின்றதேயன்றி தாத்பர்யத்துடன் சொல்லப்படவில்லை. ஏனெனில் முக்தி தசையில் ஐச்வர்யமிருப்பதாக ச்ருதிவசனமே கிடையாது. ஐச்வர்யம் முதலான அர்த்தங்கள் ப்ரஹ்மஸ்வரூபம் நிர்விசேஷம் என்று சொல்லப்படுவதற்கு விரோதமாக இருக்கின்றது. அதனுல் 'விச்வைச்வர்யம்கேவல'

என்ற வசனங்களும் அர்த்த வாதம் என்றே சித்திக்கின்றது. தத்பரவாக்யம் என்று சொல்வதற்கு முடியாது.

**176. அவதாரிகை :** மேலும் முக்தி நிலையிலும் வாஸ்த்தவமான ஐச்வர்யம் இருக்கிறதென்று ஒத்துக்கொள்ளவேண்டிய அவச்யம் ஏதுமில்லை. ஆகவே எவ்வித தோஷமும் இல்லாததால் ஐச்வர்யம் ஸ்வாபாவிகம் என்று சொல்லவேண்டியதில்லை.

**ச்லோகம் :**

अथ वा चितिवत्प्रतीयतां पुरुषस्येश्वरताऽपि वास्तवी ।
यदि किंचन कारणं भवेन्न विना सा तदिहाभ्युपेयते

**ச்லோகார்த்தம் :** அல்லது ஏதாவது ப்ரமாணம் இருக்கின்றதென்றால் பரமாத்மாவின் ஈச்வரத்வமும் சைதன்யத்தைப் போல் வாஸ்தவமென்று ஒத்துக்கொள்ளப்படட்டும். (ஆனால் எவ்வித) ப்ரமாணம் இன்றி அது இங்கே ஒத்துக் கொள்ளப்பட முடியாது.

**வ்யாக்யானம் :** வேதத்தில் சொல்லப்படுகின்ற விஷயத்திற்கு விருத்தமில்லாமல் சூத்ரத்திற்கு அர்த்தம் செய்யப்படவேண்டும். அவ்விதம் இருந்தால்தான் சூத்ரம் என்பது ப்ரமாணமாக ஆகும். ஐச்வர்யம் ஈச்வரனிடம் இருக்கிறதென்று சொல்லப்படும் விஷயத்தில் அர்த்த வாதவாக்யங்களைத் தவிர வேறு விதிவாக்யங்கள் ப்ரமாணமாக இல்லை. ப்ரமாணமின்றி ஐச்வர்யம் இருப்பதாக ஒப்புக்கொள்ள முடியாததால்தான் அப்யுபக வாதம் என்று சொல்ல நேரிடுகிறது. ஆகையால் ஐச்வர்யம் பரமார்த்தமாக இருக்கிறதென்றால் அதிப்ரஸங்கம் ஸம்பவிக்கும்.

**177. அவதாரிகை :** இந்த விஷயம் அப்யுபேத்ய வாதம் தான் என்று சொல்லப்படுவதற்கு என்ன ப்ரமாணம் ?

**ச்லோகம் :**

कामादि तत्र च भवेदितरत्र चेति यत्सूत्रकारवचनं तदुदीक्षमाणाः ।
कामादिकेन दहरस्थगुणेन तुल्यं सर्वेश्वरादिगुणजातमिति प्रतीमः

**ச்லோகார்த்தம் :** ஸத்யகாமத்வாதி குணங்கள் ஸகுண நிர்க்குண வித்யைகளிலும் சேர்த்துக்கொள்ளப்படவேண்டும் என்ற சூத்ரக்காரர் வசனத்தைப் பார்த்து ஸர்வேச்வரத்வம் முதலான குணங்களும் தஹரவித்யையில் இருக்கின்ற காமம் முதலான குணங்களைப் போலவே மித்யை என்றே அறிந்து கொள்கிறோம்.

**வ்யாக்யானம் :** சூத்ரகாரரால் சொல்லப்படும் சூத்ரத்திலிருந்தே அப்யுகமவாதம் என்று நிச்சயிக்கப்படுகிறது. அதாவது "காமாதி தரத்ர தத்ர சாSSயதனுதிப்ய:' என்ற (ப்ரஹ்ம சூத்ரம் 3-3-39) சூத்ரத்தினால், தஹரோபாஸனையில் சொல்லப்படும் ஸத்யகாமம் முதலானவைகளையும், வாஜஸனேயத்தில் சொல்லப்படும் நிர்குண உபாஸனையில் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்றும் ப்ரஹதாரண்யகத்தில் சொல்லப்படும் நிர்க்குண உபாஸனையில் வாஜஸனேயத்தில் சொல்லப்படும் ஸர்வேச்வரத்வம் ஸர்வ வசித்வம் என்பவைகளுடன் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று சூத்ரகாரரால் சொல்லப்படுவதன் தாத்பர்யம் என்னவென்றால், ஸர்வச்யாசானும் ஸர்வவசீ என்பதை ஸத்யகாமாதிகளுக்கு

ஸமானமாக சொல்லப்பட்டிருப்பதால் ஸத்யகாமாதிகள் எப்படி ஸ்வரூபமாக இல்லேயோ அதுபோல் ஐச்வர்யாதிகளும் ஸ்வரூபமில்லேயென்பதையே சூத்ரகாரர் தெரிவிக்கிருர். ஆகவே, தஹரவித்யையில் சொல்லப்படும் காமாதிகளே நிர்க்குண வித்யையிலும் சேர்த்துக்கொள்ளலாம் என்று சொல்லப்படுவதிலிருந்தே ஸ்துத்யர்த்தவாதம் என்றும் ஸ்வரூபமல்ல வென்றும் அறியப்படுகிறது. தஹரோபாஸனேயில் உபாஸ்யமாகவும் ஞேயமாகவும் சொல்லப்படும் ஆத்மவஸ்துவே நிர்க்குணம் என்று அறியப்படவேண்டும். ஆகவே, இவ்விதம் இரண்டிடத்திலும் வஸ்து ஒன்றே உபாஸ்யமாகவும், ஞேயமாகவும் சொல்லப்படுவதால் ஒரிடத்தில் சொல்லப்பட்ட குணங்களே பரஸ்பரம் மற்ருேர் இடத்திலும் சேர்த்துக் கொள்ளலாம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே இரண்டுமே ஸ்துத்யர்த்தவாதம் என்று அறியப்படுகிறது. அதனுல் அப்யுபேத்யவாதம் தான் என்பது இந்த சூத்ரத்தின் மூலமாகவே அறியப்படுகிறது.

**178.** அவதாரிகை : அதே விஷயத்தை மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

दहरस्थगुणोपसंहृतेः स्तुतिमात्रं विरहय्य नापरम् ।
फलमस्ति परात्मनिष्ठिते वचने वाजिभिरादृते महत्

**ச்லோகார்த்தம் :** பரமாத்ம பரமான ப்ரஹதாரண்யக வாக்யங்களில் தஹர வித்யையில் இருக்கின்ற குணங்களேச் சேர்த்துக் கொள்வதனுல் பரமாத்மாவை ஸ்துதிக்கின்ற ப்ரயோஜனம் என்ற ஒன்றைத்தவிர வேறுஎந்த மஹத்தான ப்ரயோஜனமும் கிடையாது.

**வ்யாக்யானம் :** சாந்தோக்ய உபநிஷத்தில் தஹரவித்யையில் சொல்லப்படும் ஸத்யகாமாதி குணங்களேயும், நிர்க்குண ப்ரஹ்மத்தை போதிக்கின்ற இடத்திலும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லப்படுகிறது. ப்ரஹதாரண்யகத்தில் ஸவா ஏஷ மஹானஜ ஆத்மா என்ற இடத்தில் சொல்லப்படும் ஸவத்வம் முதலானவைகளும் ஸ்துதிபரம் என்றே சொல்லவேண்டுமேயன்றி வேறு எந்த விதமும் சொல்லமுடியாது. ஸத்யகாமத்வாதிகளால் ஸ்வாதந்த்ரியம் என்ற அர்த்தம் லக்ஷணேயாக கிடைக்கலாம். ஆனுல் ஸ்வாதந்த்ரியம் என்ற அர்த்தத்தை ஸத்யகாமத்வாதிகளேக் கொண்டு தான் தெரிவிக்க வேண்டுமென்ற அவச்யமில்லே. ப்ரஹதாரண்யகத்தில் சொல்லப்படும் வசித்வம் முதலானவைகளேக் கொண்டே ஸ்வாதந்திரியம் என்ற அர்த்தம் கிடைக்கும். ஆகையால் இந்த வாக்யத்தில் கிடைக்காத மஹத்தான பலன் ஏதும் அந்த வாக்யத்திலிருந்து கிடைக்கிறதென்று சொல்வதற்கு முடியாது. ஆகவே இவையெல்லாம் அர்த்த வாத வாக்யங்கள் என்றே அறியவேண்டும்.

**179.** அவதாரிகை : இந்தவிதம் இந்த வாக்யங்களுக்கு ஸ்துதிமாத்ரம் பலம் என்று சொல்லப்பட்டதால், விசாரிக்கப்படும் விஷயத்தில் கிடைத்த லாபம் என்ன?

ச்லோகம் :

दहरादुपसंहृतैर्गुणैः सदृशाश्चेद्वशितादिलक्षणाः ।
न तदा परमात्मरूपतां प्रतिपत्तुं कलयाऽपि शक्नुयुः

**ச்லாகார்த்தம் :** வஸித்வம் முதலான குணங்கள் தஹர வித்யையிலிருந்து சேர்க்கப்பட்ட குணங்களுக்கு ஸமானம் என்று ஒத்துக்கொள்ளப்படுமானுல் அவைகள் பரமாத்மாவின் ஸ்வரூபமாக இருப்பதற்கு சிறிதும் தகுதி உடையதாக ஆகாது.

**வ்யாக்யானம் :** சாந்தோக்யத்தில் தஹரோபாஸனேயில் சொல்லப்படும் ஸத்ய காமத்வாதி குணங்களுக்கும் - வாஜஸனேயத்தில் சொல்லப்படும் வசித்வம் முதலான குணங்களுக்கும் விசேஷமான வேறுபாடுகள் ஏதுமில்லாததனுல்தான் ஓரிடத்தில் சொல்லப்படுவதை மற்ருெரு இடத்திலும் சேர்த்துக்கொள்ளலாம் என்று சொல்லப்படுகிறது. ஆகையால் இரண்டும் அர்த்தவாதம் என்று சொல்வதற்குரிய சாத்ருச்யம் இருக்கின்றதால் வேறு எந்தவிதமான அர்த்தமும் பொருந்தாது என்பது இதனுல் சாதிக்கப்பட்டது.

**180.** அவதாரிகை : இதுவரை விசாரிக்கப்பட்ட விஷயம் முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது.

**ச்லோகம் :**

परमेश्वरतागुणोऽप्यतः स्तुतये तस्य परस्य वस्तुनः ।
परिकीर्तित इत्युपेयतामविशेषाद्वशितादिलक्षणैः

**ச்லோகார்த்தம் :** வஸித்வம் முதலான குணங்களுக்கு ஸமானமாக இருப்பதனுல் ஈச்வரத்வம் என்ற குணமும் பரமாத்மாவின் ஸ்துதிக்காகவே சொல்லப்பட்டிருக்கிறதென்று ஒத்துக்கொள்ளப்பட வேண்டும்.

**வ்யாக்யானம் :** வசித்வம், ஸத்யகாமத்வம் முதலானவைகள் எப்படி அர்த்தவாதம் என்று சொல்லப்படுகிறதோ அதுபோல் ஐச்வர்யம் என்பதும் அர்த்தவாதம் என்றே அவஸ்யம் ஒத்துக்கொள்ளப்படவேண்டும் என்பதை இதன் மூலம் நிரூபணம் செய்யப்பட்டது.

**181.** அவதாரிகை : இந்தவிதம் இந்தவாக்யங்கள் அர்த்தவாதம் என்று ஒத்துக்கொள்ளப்படவில்லேயென்ருல் அதனுல் ஏற்படும் பாதகம் என்ன என்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

कारणत्वमपि चित्सुखादिवत्तत्स्वरूपमिति किं न गृह्यते ।
ईश्वरत्वविषये विपश्चितां पक्षपातकरणे न कारणम्

**ச்லோகார்த்தம் :** சிதானந்தம் முதலானவைகள் போல காரணத்வம் என்பதும் ஸ்வரூபம் என்று ஏன் க்ரஹிக்கப்படவில்லே? ஈச்வரத்வம் என்ற விஷயத்தில் மாத்ரம் பக்ஷபாதம் காண்பிப்பதற்கு காரணம் ஏதுமில்லே.

**வ்யாக்யானம் :** ஐச்வர்யம் என்பது ப்ரஹ்மஸ்வரூபம் என்று சொல்லப்படுமானுல் ஜகத்காரணம் என்பதும் ஸ்வரூபம் என்றே சொல்ல நேரிடும். ஏனெனில் ஈச்வரத்வம் என்பதும் காரணத்வம் என்பதும் ஒன்றுதான் என்பதால் ஈச்வரத்வம் ஸ்வரூபம் என்ருல் காரணத்வமும் ஸ்வரூபம் என்றே சொல்லப்பட வேண்டும். ஏனெனில் எந்த விதத்திலும் ஒன்றுக்கொன்று விசேஷம் சொல்லமுடியாது.

**182.** அவதாரிகை : மற்றொரு முறையிலும் பாதகம் ஏற்படுகிறது.

**ச்லோகம் :**

साक्षिताऽपि परमात्मनो भवेदीश्वरत्ववदियं न संशयः ।
नित्यसिद्धनिजबोधरूपवपमेव निरुपाधिकं विभोः

**ச்லோகார்த்தம் :** நித்ய சித்த சைதன்யம்போல் ஈச்வரத்வம் என்பதும் ஸ்வரூபம் என்றால், ஈச்வரத்வம் என்பது போல் சாக்ஷித்வம் என்பதும் ஸர்வகதமான பரமாத்மாவின் நிரூபாதிக ஸ்வரூபம் என்றே ஆகும்.

**வ்யாக்யானம் :** ஐச்வர்யம் என்பது ஸ்வரூபம் என்று சொல்லப்படுமானால் சாக்ஷித்வம் என்பதும் ஸ்வரூபம் என்று சொல்ல நேரிடும். ஸத்யம் ஞானம் அனந்தம் என்பது எப்படி நிரபேக்ஷமாக ஸ்வரூபம் என்று சொல்லப்படுகிறதோ அதுபோல் ஈச்வரத்வம் முதலானவைகள் நிரபேக்ஷமாக இல்லாததால் ஸ்வரூபம் என்றே சொல்லமுடியாது. சைதன்ய ஸ்வரூபமே ஆத்மா, பரமாத்மாவே சைதன்யம் (சைதன்யம் வேறு ஆத்மா வேறல்ல) ராகோ:சிர:என்பது போலவே ரூபவத் என்றாலே ரூபம் என்றே அர்த்தம் என்பதுபோல் சைதன்யமே பரமாத்ம ஸ்வரூபம் என்று அறியவேண்டும். வேறு எதையும் ஸ்வரூபம் என்று சொல்வதற்கு முடியாது.

**183.** அவதாரிகை : சாக்ஷித்வம் என்பது ஔபாதிகம் என்பதாலும் ச்ருதியிலும் சாக்ஷித்வம் என்பது சொல்லப்படவில்லையென்பதாலும், சாக்ஷித்வமும் ஸ்வரூபம் என்று சொல்ல நேரிடுமே என்ற ஸங்கைக்கு இடமே இல்லை. ஆனால் ஐச்வர்யம் என்பது ச்ருதியினால் சொல்லப்படுகிறது என்பதால் ஸ்வரூபம் என்று சொல்லலாம். அதுபோல் சாக்ஷித்வம் ஸ்வரூபம் என்று சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

एको देवः सर्वभूतेषु गूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा ।
कर्माध्यक्षः सर्वभूताधिवासः साक्षी चेता केवलो निर्गुणश्च

**ச்லோகார்த்தம் :** ஒரே பரமாத்மாவே எல்லா பூதங்களிலும் மறைந்திருக்கிறது. ஸர்வகதமாகவும், ஸர்வபூதங்களுக்கும் அந்தராத்மாவாகவும் இருக்கின்றது. கர்மாத்யக்ஷனாகவும் ஸர்வபூதங்களுக்கும் ஆச்ரயமாகவும் இருக்கின்றது. அதுவே சாக்ஷியாகவும், ப்ரகாசகமாகவும், அஸங்கமாகவும் நிர்க்குணமாகவும் இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஐச்வர்யம் என்பது எப்படி ப்ரஹ்மதர்மமென்று ச்ருதியினால் சொல்லப்படவில்லையோ அதுபோல் சாக்ஷித்வம் என்பதும் ச்ருதியில் சொல்லப்படவில்லை யென்று சொல்வது சரியல்ல. 'ஏகோ தேவ: ஸர்வபூதேஷு கூட: ஸர்வ வ்யாபி, ஸர்வ பூதாந்தராத்மா, கர்மாத்யக்ஷ:, ஸர்வபூதாதிவாஸ: சாக்ஷி, சேதா, கேவல:, நிர்க்குணச்ச" என்று ச்வேதாச்வரதர உபநிஷத் வசனமே தெரிவிக்கின்றது. ஏகோதேவ: என்பதால் ஸர்வபூதங்களிலும் இருப்பவர் ஒருவரே என்றும் ஸர்வ பூதங்கள் என்பதால் சேதனம், அசேதனம் என்ற ஸர்வத்திலும் வ்யாபித்திருக்கின்றது என்றும், எங்கும் வ்யாபகம் என்பதால் ஆகாசம் என்று சொல்ல நேரிடுமே என்பதற்காக 'தேவ': என்ற பதத்தினால்

ப்ரகாச ஸ்வரூபம் என்றும், ப்ரகாசம் என்றால் சூர்யன் என்று சொல்ல நேரிடும் என்பதற்காக, அதை விலக்கி 'கூடம்' என்றும் 'ஸர்வ பூதேஷு கூட:' என்பதால் ஸர்வாந்தரம் என்றும் சொல்லப்படுகிறது. இந்தவிதம் சித்ஸ்வரூபமாக ப்ரகாசித்துக் கொண்டிருந்தபோதிலும், சப்த, ஸ்பர்ஸ, ரூப, ரஸ, கந்தம் என்பது முதலான விஷயங்களைக்கொண்டு ராகத்வேஷங்களுக்கு இருப்பிடமான புத்தி வ்ருத்தியினால் ஸ்வரூபப்ரகாசம் அறியப்படாமல் மறைக்கப்படுகிறது. அதனால்தான் ஸர்வபூதங்களிலும் வ்யாபித்திருந்தும் ஸ்வாபாவிகமான ஸ்வரூபத்தில் அறியப்படவில்லை. பீஜத்திலிருந்து வெளிப்படுகின்ற அங்குரம் போல் ஸ்தூலரூபமாக (வெளிப்படையாக) அறியப்படுமானால் அதுபரிச்சின்னமாகவே இருக்கும். ஆனால் ஸர்வ வ்யாபியாக இருக்கின்ற காரணத்தினால் சரீரத்திற்கு உள்ளும் புறமும் மட்டுமின்றி ப்ரஹ்மாண்டத்தையும் தாண்டி எங்கும் வ்யாபித்திருக்கின்றதால் அபரிச்சின்னஸ்வரூபம் என்றும் சொல்லப்படுகிறது.

ஜகத்காரணம் ப்ரஹ்ம என்று சொல்லப்படுவதால் நையாயிகர் சொல்வதுபோல் நிமித்தகாரணம் வேறு உபாதானகாரணம் வேறு என்பது போன்ற ஜகத் கர்த்ருத்வம் சொல்லப்படுகிறதோ என்ற ஸந்தேகத்தை நிவர்த்திப்பதற்காகவே, நிமித்தோபாதனம் ப்ரஹ்ம என்று தெரிவிக்கவே, ஸர்வ பூதாந்தராத்மா என்று சொல்லப்படுகிறது.

கர்மாத்யக்ஷ : என்று சொல்லப்படுவதால் கர்மாவிற்கு சாக்ஷியாக இருக்கின்றதேயன்றி கர்த்தாவாக இல்லை என்பதை தெரிவிக்கின்றது. எப்படியெனில், மந்திரி முதலான ப்ரஜைகள் அவரவர்குரிய கர்மாக்களை செய்யும்படிச் செய்பவர் ராஜா என்றாலும், அவர் அந்த வேலைகளில் ஸம்பந்தப்படாமல் அஸங்கமாகவே இருக்கின்றதுபோல் ஸர்வத்திற்கும் அத்யக்ஷகர் என்று சொல்லப்படுகிறது.

அஸங்க ஸ்வரூபம் என்றால் அத்யக்ஷகர் என்று எப்படிச் சொல்வது ? வாதி, ப்ரதிவாதி, அத்யக்ஷகர் என்று ஒருவர்க்கொருவர் ஸம்பந்தம் இருந்தால்தானே அத்யக்ஷகர் என்றுசொல்லலாம். அத்யக்ஷ, அத்யக்ஷ்ய ஸம்பந்தம் இருக்குமானால் அஸங்கம் என்று சொல்லமுடியாது. அஸங்கம் என்றால் கர்மாத்யக்ஷ: என்று சொல்லமுடியாதே என்ற ஸந்தேக நிவர்த்திக்காக 'ஸர்வபூதாதிவாஸ:' என்று தெரிவிக்கின்றது. அதாவது ஸர்வபூதங்கள் வசிப்பதற்கு ஆச்ரயமாக இருப்பவர் என்பதால் (ஸர்வாச்ரயம்) அத்யக்ஷம் என்று சொல்லலாம், அல்லது ஸர்வ பூதங்களுக்கும் அதிபதியாக, அவைகளை நியமனம் செய்கின்றதால் ஸர்வபூதாதிவாஸ: என்று சொல்லலாம். இதனால் அத்யக்ஷ : என்று சொல்லப்படுவதில் பொருந்தாதது ஏதுமில்லை. அப்படியானால் நான் ராஜா மற்றவர்கள் என்ப்ருத்யர்கள் என்ற அஹங்காரம் இருக்குமே என்றால், அதற்காகவே எந்த விவகாரத்திலும் ஸம்பந்தப்படாமல் ஔதாசீன்யமாக சாக்ஷிமாத்ரமாக இருக்கின்றது என்று தெரிவிக்கவே 'சாக்ஷி' என்ற பதம் சேர்க்கப்பட்டிருக்கிறது. உதாசீனம் என்றால் விவகாரத்தில் ஸம்பந்தமே இல்லையென்றாகும். அப்படியானால் சாக்ஷி என்று எப்படி சொல்ல முடியும் என்ற கேள்விக்கு இடமின்றி 'சேதா' என்று தெரிவிக்கின்றது. சேதா என்றால் பார்க்கிறான் கேட்கிறான் என்ற சேதயித்ருத்வம் ஸம்பவிக்குமே என்றால், ஸ்வரூப சைதன்யத்தில் கர்த்ருத்வம்ஸம்பவிக்க முடியாது, சிதாபாஸனுக்குத்தான் கர்த்ருத்வாதிகள் சொல்லமுடியும். சுத்த சைதன்யத்திற்கு சேதயிருத்வம் சொல்ல முடியாது என்பதையே 'உதாசீனம்' என்பதால் தெரிவிக்கப்படுகிறது.

ப்ரகாச ஸ்வரூபம் என்பதால் சூர்யனைப் போல் ஸர்வவ்யாபகமாக எல்லாவற்றிலும் ப்ரகாசிக்கின்றதோ என்ற ஸந்தேக நிவர்த்திக்காகவே 'நிர்க்குணம்' என்று சொல்லப்படுகிறது. தன்னைத்தானே ப்ரகாசப்படுத்துகின்றதோ என்ற ஸந்தேஹத்தை நிவர்த்திக்க இரண்டற்ற வஸ்து என்பதால் எந்த வஸ்துவின் ஸம்பந்தமும் இல்லை என்று தெரிவிக்கின்றதற்காக 'கேவலம்' என்று சொல்லப்படுகிறது.

இந்த விதம் ஆரோபிதமான வஸ்துக்களையும் வ்யாபித்திருக்கின்றதால் சாக்ஷி என்று சொல்லப்படுகிறதேயன்றி பரமார்த்தமாக சாக்ஷித்வம் என்பதும் கிடையாது. ஆகவே, 'ஏகோதேவ:, ஸர்வ பூதேஷு கூட : ஸர்வவ்யாபி, ஸர்வபூதாந்தராத்மா, கர்மாத்யக்ஷ:, ஸர்வபூதாதிவாஸ:, சாக்ஷி, சேதா, கேவலோ நிர்க்குணச்ச", என்ற வாக்யம்ச்ருதிவாக்யம்தான். அதனால் சாக்ஷி என்பதே ச்ருதியினால் சொல்லப்படவில்லையென்று சொல்ல முடியாது. ஆகவே, ஐச்வர்யம் போல் சாக்ஷித்வம் என்பதும் ஸ்வரூபம் என்று சொல்ல நேரிடும் என்று சொல்லப்பட்டதில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை.

**184.** அவதாரிகை : இந்த விஷயத்தில் மற்றொரு ச்ருதிவாக்யமும் அனுகூலமாக இருக்கிறது.

ச்லோகம் :

न तस्य कार्यं करणं च विद्यते न तत्समश्चाप्यधिकश्च दृश्यते ।
पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च

ச்லோகார்த்தம் : அந்த பரமாத்மாவிற்கு ஸ்தூல, சூக்ஷ்மாதி சரீரங்கள்கிடையாது. அதற்கு ஸமமாகவோ, அதிகமாகவோ, ஏதும் இருப்பதாக அறியப்படவில்லை. அந்த பரமாத்மாவினுடைய உத்க்ருஷ்ட்டமாயா சக்தியானது பலவிதமாக இருக்கிறதென்று ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. (இயற்கையாகவே சித்திக்கின்ற அந்த சக்தி ஞானபலக்ரியா ரூபமாக) ஞான பலத்தினால் ப்ரவர்த்திக்கின்ற ஸ்வாபாவிகம் அந்த சக்தியில் இருக்கிறது.

வ்யாக்யானம் : சாக்ஷி என்பது எப்படி ச்ருதி வசனமோ அதேபோல் ஜகத் காரணத்வம் ஈச்வரத்வம் என்பதும் உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது ஸ்தூலசரீரமோ, லிங்கசரீரமோ (கார்யம், கரணம்) இல்லையென்றால் ஜகத் சிருஷ்டி எப்படிச்செய்யமுடியும் என்ற கேள்விக்கு உத்தரமாக 'தமீச்வராணும் பரமம் மஹேச்வரம்' நிரதிசய ஈச்வரத்வம் என்பது முன்னால் சொல்லப்பட்ட மந்திரத்தில் ப்ரதிஞ்ஞை செய்யப்பட்டிருக்கிறது. அதில் 'நதஸ்யகார்யம் கரணம்சவித்யதே' என்பதால் கார்ய கரணவத்வம் நிராகரிக்கப் பட்டிருக்கிறது. இதனால் ஈச்வரனுக்கும் ஈச்வரன் என்றும் அந்த ஈச்வரத்வம் நிரதிசயம் என்றும் தெரிவிக்கின்றது. அதனால் ப்ரஹ்மத்தின் ஐச்வர்யம் என்பதற்கு மேற்பட்ட ஐச்வர்யம் என்பதே கிடையாது என்று 'தமீச்வராணும் பரமம் மஹேச்வரம் என்ற (ச்வேதாச்வர) மந்த்ரம் முன்னால் ப்ரதிஞ்ஞையாக சொல்லப்பட்டிருக்கிறது. அப்போப்பட்ட ஐச்வர்யம் என்னவென்பதையே மேலே சொல்லப்படும் மந்த்ரங்களில் விளக்கப்படுகிறது. அதாவது கார்யகரண ஸங்காதம் என்பதே கிடையாது என்று நிஷேதம் செய்வதன் மூலம் ப்ரஹ்ம ஐச்வர்யம் என்பதே மிகவும் (மேலானது) சிறந்தது என்று தெரிவிக்கின்றது.

எப்படியெனில், லோகத்தில் ஞானம், ஐச்வர்யம் என்பதெல்லாம் சரீர அதீனமாகவே இருக்கின்றது. அசரீரியான ஈச்வர ஐச்வர்யம் சரீரமற்ற ஐச்வர்யமானதால் நிரதிசய ஐச்வர்யம். அதனுல் ஜீவர்களின் ஐச்வர்யம் போல் ஸாபேக்ஷ ஐச்வர்யமில்லே. நிரபேக்ஷ ஐச்வர்யம். அதேபோல் ஞானம் என்பதும் ஜீவர்களின் ஞானம் ஸாபேக்ஷம். ஈச்வரஞானம் நிரபேக்ஷம் என்று ஜீவர்களின் ஐச்வர்யம் என்பதிலிருந்து ஈச்வர ஐச்வர்யம் ஞானம் என்பது வேறு என்று இரண்டையும் வேறுபடுத்தி தெரிவிக்கின்றது. நிரபேக்ஷ ஐச்வர்யம் என்பதாலேயே ஈச்வரஸ்வாதந்தர்யம் என்பதும் வேறு என்று அறியப்படுகிறது.

பூர்வ : லோகத்தில் ஒவ்வொரு கண்டத்திற்கும் நியந்தாவாக இருப்பவனே அந்தந்த கண்டத்திற்கு பதி என்றும், எல்லா கண்டத்திற்கும் சேர்த்து நியந்தாவாக இருப்பவனே மண்டலத்திற்கு பதி என்றும் தாரதம்யமாகத் தானே சொல்லப்படுகிறது. அவ்விதமிருக்கின்றபோது நிரதிசய ஐச்வர்யம் ஈச்வரன் என்று தாரதம்யம் இல்லாதவராக எப்படி சொல்வது? தாரதம்யம் இல்லையென்ருல் ஸமமாகவும் இருக்கலாம் அல்லது மேலாகவும் இருக்கலாமே?

சித்தா : "ந தத்ஸமச்சாப்யதிகச்ச த்ருச்யதே" என்ற ச்வேதாச்வர ச்ருதியே (6-8) அவ்விதம் சொல்லமுடியாது என்று தெரிவிக்கின்றது. இவ்விதம், வேதத்தில் இதற்கு மேற்பட்ட ஈச்வரனே கிடையாது என்று தெரிவிக்கின்றது. லோகத்திலும் அறியப்படவில்லை. ஆகவே ஞானம், க்ரியை என்பதெல்லாம் ப்ரஹ்மஸ்வரூபத்திற்கு அன்யமாக, அதற்கு ஸமானமாகவோ, அதிகமாகவோ வேறு எதுவும் இருக்க முடியாது என்றே ச்ருதியுலம் தெரிவிக்கின்றது. ஸமானமாக இல்லையென்ருல் அதிகமாக எப்படி இருக்க முடியம்? ப்ரஹ்மத்திற்கு வேருக (அன்யமாக) அறியப்படும் சேதனனுக்கு சரீரத்தை அபேக்ஷித்தே ஞானம் க்ரியை என்பதெல்லாம் ஸம்பவிக்கின்றது. ஸர்வத்திற்கும் மேலாக தங்கு தடையற்ற ஐச்வர்யம் ப்ரஹ்மத்தினிடம் இருக்கின்ற தென்பதை அவஸ்யம் ஒத்துக்கொள்ள வேண்டும்.

இவ்விதம் சொல்லப்படுமானுல், ஸர்வஞ்ஞத்வம், ஸர்வ சக்தித்வம், ஸர்வஜகத் காரணத்வம், ஸர்வேச்ரத்வம், என்பதெல்லாம் எப்படிசித்திக்கின்றது என்ருல், "பராச்யசக்தி: விவிதை:ச்ரூயதே" என்றும் "இந்த்ரோ மாயாவி:புருரூபஈயதே" என்று தெரிவிக்கின்ற ச்ருதி வாக்யங்களினுல், ஸர்வகார்யங்களுக்கும் உத்க்ருஷ்ட்டமாய் அனுதியான பராசக்தி என்று சொல்லப்படும் மாயா சக்தியே ஸர்வமாக ஆகக் கூடிய சக்தி உடையதாக இருக்கின்றது. அதனுல் அனேகவிதமான கார்ய கரண பரிணும முடையதாகவும் ஐச்வர்யாதிகளை நிர்வாகம் செய்யக் கூடிய ஸாமர்த்யம் உடையதாகவும் இருக்கின்றது. அதனுல் அசிந்த்ய சக்தியுடையது என்று சொல்லப்படுகிறது. ஜடமான இந்த சக்திக்கு சிருஷ்டிக்கக் கூடிய ஸாமர்த்யம் எப்படி ஏற்பட்டது? என்ருல், சைதன்ய பலத்தினுல்தான் ஜடமான இந்த சக்திக்கு ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது. சிம்ஹத்திற்கு எப்படி ஸ்வாபாவிகமாகவே ஸௌர்ய பராக்ரமங்கள் எல்லாம் இருக்கின்றதோ அதுபோல் ப்ரஹமத்தினிடம் ஞானம் ஸ்வாபாவிகம். அந்த ஞானபலத்தினுலேயே ப்ரஹ்மசக்திக்கும் ப்ரவ்ருத்தி ஏற்படுகிறது என்பதையே "ஞான பலக்ரியாச்ச" என்றச்ருதி வசனம் தெரிவிக்கின்றது. இந்தவிதம் ப்ரஹ்ம ஸ்வரூப ஞான பலத்தினுல் க்ரியையைச் செய்கின்ற, மாயாசக்தி என்பதால் தான் ஈச்வரனுக்கு ஸர்வஞ்ஞத்வம்,

ஸர்வகர்த்ருத்வம் என்பதும் ஸம்பவிக்கின்றது. அதேபோல் ஸர்வகாரணம் என்று சொல்லப்படுவதாலேயே ஸர்வேச்வரத்வம் சித்திக்கின்றது. ஆகவே - ஞானம் ப்ரஹ்மத்தினிடம் ஸ்வதந்த்ரம் என்றும் மாயையினிடம் பரதந்த்ரம் என்றும் அறியவேண்டும்.

**185.** அவதாரிகை : ப்ரஹ்மமென்பது ஈச்வரன் என்பதும் ஜகத் காரணம் என்றும் சொல்லப்படும் ச்ருதி வாக்யங்கள் என்னவென்றும், அதன் தாத்பர்யம் என்னவென்றும் மேலே சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

न तस्य कश्चित्पतिरस्ति लोके न चेशिता नैव च तस्य लिङ्गम् ।
स कारणं वै करणाधिपाधिपो न चास्य कश्चिज्जनिता न चाधिपः

ச்லோகார்த்தம் : அந்த பரமாத்மாவிற்கு பதியோ, நியந்தாவோ கிடையாது. அதற்கு ஸ்தூல, சூக்ஷமம் முதலான சரீரங்கள் கிடையாது. ஆகவே அதுவே ஸர்வத்திற்கும் காரணம், அதுவே ஸர்வ அதிஷ்ட்டான தேவதைகளுக்கும் பதியாக இருக்கிறது. ஆனுல் அதற்கு எதுவும் காரணமாகவோ பதியாகவோ இல்லை.

வ்யாக்யானம் : ஐச்வர்யம் என்ற பதம் ஸ்வதந்த்ரம் என்ற அர்த்தத்தில்தான் ஸ்வரூபத்தை சேர்ந்தது என்று சொல்லப்படுகிறது என்பதை த்ருடப்படுத்தப்படுகிறது. அதாவது ஈச்வரனுக்கு மேலாக ஒரு பதி என்ரோ நியந்தா என்ரோ எவரும் கிடையாது. அதனுல் ஸ்வாதந்த்ர்யம் என்பது அவருக்கு சித்திக்கின்றது. அஸரீரீ என்ருலும், இந்த சரீரத்தை லிங்கமாகக் கொண்டே நித்ய சைதன்ய ஸ்வரூபமான ஆத்மாவை அறிந்து கொள்ளவேண்டும். கார்ய காரண ஸங்காதம் என்பதும் கிடையாது என்பதால் ஜீவனைப் போல் அநீச்வரன் இல்லை என்றும் மண்டலாதிபதி போல் ஸாபேக்ஷ ஈச்வரனும் அல்ல என்பதால் ஸர்வேச்வரத்வம் சித்திக்கின்றது. கார்யகரணங்களுக்கு அதிபனை ஜீவனுக்கும், அக்னி முதலான ஸர்வதேவதைகளுக்கும் அதிபர் என்பதால், அவருக்கு அனுக்ரஹம் செய்யக்கூடியவர் எவருமில்லை ஸர்வத்திற்கும் காரணமான ஈச்வரன் என்பதால் ஸர்வேச்வரன் என்றும் ஸர்வரக்ஷகர் என்றும் ச்ருதி வாக்யம் தெரிவிக்கின்றது. பிதாபுத்ரன் என்பதுபோல் ஈச்வரனை உண்டுபண்ணுபவர் எவருமில்லை. ராஜா மந்திரி ப்ரதானி என்று ஒருவர்க்கொருவர் வெவ்வேறு அதிபதியாக இருப்பதுபோல் ஈச்வரனுக்கு மேல் அதிபதி எவருமில்லை. இதனுலேயே ஸர்வேச்வரன் என்று சித்திக்கின்றது.

**186.** அவதாரிகை : இவ்விதம் தெரிவிப்பதன் தாத்பர்யம் என்னவென்ருல்,

ச்லோகம் :

इति श्रुतिः कारणसाक्षिभावमैश्वर्यवद्वक्ति परस्य पुंसः ।
अतत्परत्वान्न तदिष्यते चेद्द्वयं तृतीयं न तथैषिव्यम्

ச்லோகார்த்தம் : இவ்விதம், ச்ருதியானது பரமாத்மாவின் காரணத்வம் சாக்ஷித்வம் என்ற இவை இரண்டையும் ஈச்வரத்வம் போலவே தெரிவிக்கின்றது. ஏனெனில் அவை

இரண்டும் தாத்பர்யமுடையதல்ல. ஆகையால் மூன்றுவதாகச் சொல்லப்படும் ஈச்வரத்வமும் அவ்விதமே ஒத்துக்கொள்ளப்பட வேண்டும்.

**வ்யாக்யானம் :** 'ஐச்வர்யம்' என்பதைப் போல் 'சாக்ஷி' என்றும் 'ஜகத் காரணம்' என்றும் ச்ருதிவாக்யமே தெரிவிக்கின்றது. அதனுல் ஐச்வர்யம் என்பது ப்ரஹ்மஸ்வரூபம் என்று சொல்லப்படுமானுல் காரணத்வம், சாக்ஷித்வம் என்பதையும் ஸ்வரூபம் என்று ஒத்துக்கொள்ள நேரிடும். ஏனெனில் ஐச்வர்யம் என்பது மட்டும் ஸ்வரூபமென்றும் மற்றவை ஸ்வரூபமில்லை என்றும் தெரிவிப்பதற்குரிய விசேஷகாரணம் என்னவென்று சொல்லமுடியும் ?

**187. அவதாரிகை :** ஆகையால் ஸாபேக்ஷமாக இருப்பதனுலும் ஐச்வர்யம்முதலானவைகள் ஸ்வரூபமில்லையென்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

अतत्परत्वं श्रवणस्य तुल्यं त्रिषु त्रयं तेन विवर्जनीयम् ।
अथेष्टमेकं त्रयमेषितव्यं विशेषहेतोरनिरूपणेन

**ச்லோகார்த்தம் :** ச்ருதி வாக்யத்தில் தாத்பர்யம் இல்லையென்பது முற்றிலும் துல்யமாகவே இருக்கிறது என்பதால் அவைகள் தள்ளப்படவேண்டும். மூன்றில் ஏதாவது ஒன்று ஒத்துக்கொள்ளப்படுமானுல் மூன்றையும் ஒத்துக்கொள்ளப்படவேண்டும். ஏனெனில் ஒன்றை மட்டும் ஒத்துக் கொள்வதற்கு உரிய விசேஷ (காரணம்) ஹேது நிரூபணம் செய்யப்படவில்லை.

**வ்யாக்யானம் :** காரணத்வம், சாக்ஷித்வம், ஐச்வர்யத்வம் என்பதெல்லாமே ஒன்றுக்கொன்று வேறுபடுத்தி சொல்வதற்குரிய காரணம் ஏதுமில்லை. அதனுல் இந்த மூன்றையும் ச்ருதி தெரிவித்திருந்தாலும் கூட அவைகள் எல்லாமே தத்பரமாக இல்லையென்பதால் ப்ரஹ்மஸ்வரூபம் என்று சொல்லமுடியாயது.

**188. அவதாரிகை :** ஸாபேக்ஷத்வமாக இருக்கின்றதாலும் ஐச்வர்யாதிகள் ம்ருஷா என்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

ईशितव्यमनपेक्ष्य नेश्वरो नेशितव्यमपि तद्वदीश्वरम् ।
अन्तरेण घटते ततो मृषा मोहमात्रपरिकल्पितं द्वयम्

**ச்லோகார்த்தம் :** ஈசிதவ்யத்தை அபேக்ஷிக்காமல் ஈச்வரன் இருக்க முடியாது. அதேபோல் ஈச்வரன் இல்லாமல் ஈசிதவ்யம் என்பதும் இருக்கவே முடியாது. ஆகையால் மோஹத்தினுல் கற்பிக்கப்பட்ட இரண்டும் மித்யையேயாகும்.

**வ்யாக்யானம் :** ஈச்வரத்வம் என்பதும் ஈசித்வ்யம் என்பதும் ஒன்றுக்கொன்று அபேக்ஷையின்றி சித்திக்காது. எதையும் அபேக்ஷிக்காமல் நிரபேக்ஷமாக இருப்பதே

ஸ்வரூபம். அதனால் ஒன்றை ஒன்று அபேக்ஷிக்காமல் எது சித்திப்பதில்லையோ அது மோஹமாத்ரம் என்றும் கல்பிதம் ம்ருஷா என்றே சொல்லவேண்டும்.

**189.** அவதாரிகை : காரணத்வம் என்பதும் அதேபோல் ம்ருஷா என்றறிய வேண்டும்.

ச்லோகம் :

कार्यवस्तु विरहय्य कारणं न क्वचिद्घटायितुं क्षमयमहि ।
नापि कारणमपोह्य केवलं कार्यवस्तु परिकल्पयेमहि

ச்லோகார்த்தம் : கார்ய வஸ்து இல்லாமல் எந்த ஒரிடத்திலும் காரணம் என்பதை பொருத்தமாகச் சொல்ல முடியாது. அதேபோல் காரணவஸ்து இன்றி கேவல கார்ய வஸ்துவைகல்ப்பிப்பதற்கும் நம்மால் முடியாது.

வ்யாக்யானம் : காரணம் என்று கார்யம் இல்லாமல் சொல்லமுடியாது. அதேபோல் கார்யம் என்பதும் காரணம் இல்லாமல் சொல்லமுடியாது. ஆகவே இரண்டும் ஒன்றை ஒன்று அபேக்ஷிக்கின்றதால் (ஸாபேக்ஷம் என்பதால்) ஸ்வரூபமல்ல.

**190.** அவதாரிகை : சாக்ஷித்வம் என்பதும் அதேபோல் அறியவேண்டும்.

ச்லோகம் :

साक्ष्यवस्तु परिहृत्य साक्षिता साक्षिणं च परिहृत्य साक्ष्यता ।
नेष्यते न घटते च तेन तत्सव्यपेक्षमुभयं परस्परम्

ச்லோகார்த்தம் : சாக்ஷ்ய வஸ்து இல்லாமல் சாக்ஷித்வம் என்பதோ சாக்ஷி என்பதோ இல்லாமல் சாக்ஷ்யம் என்பதோ இருப்பதாக ஒத்துக் கொள்ளப்படுவதில்லை. அவ்விதம் சொல்வது பொருந்தவுமில்லை. ஆகையால் இரண்டும் பரஸ்பரம் அபேக்ஷை உடையதாகவே இருக்கிறது.

வ்யாக்யானம் : சாக்ஷ்யம் என்பது இல்லாமல் சாக்ஷித்வம் என்பதோ அதேபோல் சாக்ஷி இல்லாமல் சாக்ஷ்யம் என்பதோ சித்திக்க முடியாது. இவ்விதம் ஒன்றையொன்று அபேக்ஷிக்கின்றதால் ஸ்வாதந்தர்யமில்லை. அதனால் ப்ரஹ்மஸ்வரூபமில்லை ம்ருஷா என்றே சித்திக்கின்றது.

**191.** அவதாரிகை : இதேபோல் ப்ரமாத்ருத்வாதிகளும் ப்ரஹ்மஸ்வரூபமில்லை என்பதை தெரிவிக்கப்படுகிறது.

ச்லோகம் :

न प्रमेयमपहाय मातृता नापि मातृविरहे प्रमेयता ।
मातृमेयरहिता न च प्रमा न प्रमाणरहितं प्रमाफलम्

ச்லோகார்த்தம் : ப்ரமேயம் இன்றி ப்ரமாத்ருத்வம் கிடையாது. ப்ரமாதா இன்றி ப்ரமேத்யத்வம் கிடையாது. ப்ரமாதாவும் ப்ரமேயமும் இல்லாமல் ப்ரமை என்பதும் கிடையாது. அதேபோல் ப்ரமாணம் இன்றி ப்ரமா ரூபமான பலன் என்பதும் கிடையாது.

வ்யாக்யானம் : முன்னல் சொல்லப்பட்ட நியாயத்தின்படி ப்ரமாதா, ப்ரமேயம், ப்ரமாணம் என்பதெல்லாமே ஆத்மஸ்வரூபமாக இருக்கமுடியாது. ஏனெனில் ப்ரமாத்ருத்வம் என்பது ப்ரமேயமான விஷயத்தை அபேக்ஷித்து சித்திக்கின்றது. விஷயத்திலுள்ள ப்ரமேயத்வம் என்பதும் ப்ரமை என்ற ஞானத்தை அபேக்ஷித்து சித்திக்கின்றது. ப்ரமாதா, ப்ரமேயம் என்ற இரண்டையும் அபேக்ஷித்தே ப்ரமை என்பது ஏற்படுகிறது. ப்ரமாணம் என்பதும் ப்ரமாதா இன்றி சித்திக்காது ப்ரமாதா, ப்ரமேயம் என்பதும் ப்ரமாணத்தை அபேக்ஷித்து ஏற்படுகிறது. (ப்ரமாணுகாங்க்ஷம்) ப்ரமாணம் என்பதும் ப்ரமேயம் இவைகளை அபேக்ஷித்தே சித்திக்கின்றது என்பது சொல்லாமலேயே கிடைக்கின்றது. ப்ரமாணப்ரமேயம் இல்லாமல் ப்ரமாதாவே சித்திக்க முடியாது என்பதை சுஷுப்தியில் ப்ரமாதா இல்லையென்பதைக்கொண்டே அறியலாம். ப்ரமிதி என்ற விவகாரமும் ப்ரமாதாவை ஆச்ரயித்து ப்ரமாண அதீனமாகவே ஏற்படவேண்டும். ஆகவே ப்ரமாணமின்றி ப்ரமை ஏற்படாது. ஸ்வரூபசைதன்யத்தை ப்ரமை என்று சொல்லப்படுவதில்லை.

ஈச்வரத்வம் என்பது ஈசித்வ்யம் என்பதை மட்டும் அபேக்ஷிக்கிறது. காரணம் கார்யத்தை மட்டுமே அபேக்ஷிக்கின்றது. சாக்ஷி என்பது சாக்ஷ்யத்தை மட்டுமே அபேக்ஷிக்கின்றது. ஆனால் ப்ரமாத்ராதிகள் ப்ரமாணம், ப்ரமேயம், ப்ரமை என்ற மூன்றையும் அபேக்ஷிக்கின்றது. அதாவது ஒவ்வொன்றும் மற்ற மூன்றையும் அபேக்ஷிக்காமல் அவைகள் சித்திக்காது. அதனுல் அவைகளும் ஸ்வரூபமில்லை.

**192.** அவதாரிகை : ஈசித்வம் முதலானவைகள் ஒன்றை மட்டுமே அபேக்ஷிக்கின்றது. ப்ரமாத்ருத்வம் முதலானவைகள் ஒவ்வொன்றும் மற்ற மூன்றயும் அபேக்ஷிக்கின்றது. அதேபோல் கர்த்ருத்வம் என்பதும் மற்றவைகளை அபேக்ஷித்தே சித்திக்கின்றது.

ச்லோகம் :

कर्तृ कर्म परिहृत्य नेष्यते कर्म कर्तृरहितं न च क्वचित् ।
कर्तृकर्मरहिता न च क्रिया न क्रियाविरहितं क्रियाफलम्

ச்லோகார்த்தம் : கர்மமின்றி கர்த்தா என்று ஒத்துக்கொள்வதில்லை. கர்த்தா இல்லாத கர்மமென்பதும் ஓரிடத்திலும் கிடையாது. கர்த்தாவும் கர்மமும் இல்லாமல் க்ரியை என்பதும் கிடையாது. க்ரியை இன்றி க்ரியாபலம் என்பதும் கிடையாது.

வ்யாக்யானம் : கர்த்தா என்பது கர்மாவையும், க்ரியை என்பதையும் அபேக்ஷிக்கின்றது. க்ரியையென்பது கர்த்தாவையும் கர்மாவையும் அபேக்ஷிக்கின்றது கர்மா என்பது கர்த்தா, க்ரியை என்பதை அபேக்ஷித்தே சித்திக்ன்றது. அதனுல் ப்ரமாத்ருத்வம் போலவே, மற்றவைகளை அபேக்ஷிக்கின்றதால் ஸாபேக்ஷம் என்றே அறியவேண்டும்.

**193.** அவதாரிகை : ஸாமான்யம், விசேஷம் என்ற தன்மையுடைய இந்த ப்ரபஞ்சம் என்பதும் ஸாபேக்ஷம் என்றே சித்திக்கின்றது.

ச்லோகம் :

सामान्यं न विशेषवस्तुविरहे तस्माद्विना तत्र च स्वातन्त्र्येण घटामुपाञ्चति ततः सापेक्षमेतद्द्वयम् ।
यत्सापेक्षमिहेक्षितं भवति तन्मायामयं स्वप्नवत्तस्मादीश्वरतादि कल्पितवपुः स्वी कुर्महे न्यायतः

ச்லோகார்த்தம் : விசேஷ வஸ்து இன்றி ஸாமான்யம் கிடையாது. ஸாமான்யம் என்பது இல்லாமல் விசேஷமும் கிடையாது. ஆகவே, ஸாபேக்ஷமாக இருக்கின்ற இந்த இரண்டும் ஸ்வதந்தரமாக இருக்கிறதென்பது பொருந்தாது. எது ஸாபேக்ஷமாக இங்கு அனுபவிக்கப்படுகிறதோ அவையெல்லாம் ஸ்வப்னம்போல் மாயாமயமாகவே இருக்கிறது. ஆகையால் யுக்தியினுலும் ஈச்வரத்வம் முதலானவை கல்பிதம் என்றே ஒத்துக்கொள்ளப்படுகிறது.

வ்யாக்யானம் : ப்ரமாத்ருத்வம் முதலானவை ஆத்ம ஸ்வரூபம் என்று சொல்லப்படுமானுல், ஸாமான்ய விசேக்ஷத்மகமான இந்த ப்ரபஞ்சமும் ஆத்மஸ்வரூபம் என்று சொல்ல நேரிடும். ஸர்வமும் ப்ரஹ்மத்தைஆச்ரயித்தே சித்திக்கின்றதால் ஸர்வமும் ஸாபேக்ஷம் என்பதால் கல்பிதம் என்றே சித்திக்கின்றது. ஸாமான்யம் என்பது விசேஷமின்றி சித்திக்காது. விசேஷமென்பதும் ஸாமான்யமின்றி சித்திக்காது. அதனுல் ஸாபேக்ஷமாக இருக்கின்றதென்ருலே ஸ்வதந்த்ரமாக இருக்கமுடியாது என்பதால் அவைகளும் ஸ்வரூபமல்ல என்றே சித்திக்கின்றது. இதேபோல் காரணத்வம், சாக்ஷித்வம், ப்ரமாத்ருத்வம், ஈச்வரத்வம் என்பது எல்லாமே ஸாபேக்ஷலக்ஷணமுடையதாக இருக்கின்றதால் ஸர்வமும் மித்யை என்றே சித்திக்கின்றது. ஈச்வரத்வம் முதலானவை மாயாமயம், ஸாபேக்ஷத்வாத் ஸ்வப்னம் போல் மித்யை என்றே அனுமானத்தினுல் சித்திக்கின்றது. ஆகையால், முன்னுல் சொல்லப்பட்ட ஈச்வரத்வாதிகள் பரமார்த்தமில்லையென்பதால் முன்பு சொல்லப்பட்ட யுக்திகள் அனைத்தையும் சேர்த்து இந்த ச்லோகத்தில் ந்யாயமென்று சொல்லப்படுகிறது.

**194.** அவதாரிகை : ப்ரஹ்மமென்பது ஸப்ரபஞ்சமா, நிஷ்ப்ரபஞ்சமா, உபயாத்மகமா, என்ற சிஷ்யனின் ப்ரசனத்திற்கு ஸப்ரபஞ்சமில்லை, நிஷ்பரபஞ்சந்தான் என்று பதில் சொல்லப்பட்டது. இப்போது உபயாத்மகமில்லையென்று தெரிவிக்கப்படுகிறது.

ச்லோகம் :

अभिन्नता भिन्नतया विरुद्धाविभिन्नताऽभिन्नतया तथैव ।
उपाधिभेदे परिकल्पितेऽपि विना पुनस्तं किमुदीरणीयम्

ச்லோகார்த்தம் : கல்பிதமான உபாதிபேதம் இருக்கின்றபோதே அபேதம் என்பது பேதத்திற்கு விருத்தமாக இருக்கிறது (அதேபோல்) பேதம் என்பது அபேதத்திற்கு விரோதமாக இருக்கின்றது. உபாதி இல்லையென்ருல் விரோதத்தை சொல்லவா வேண்டும் ?

வ்யாக்யானம் : கார்யம், காரணம், ஈச்வரத்வம் ஈசித்வ்யம் என்பதெல்லாம் அத்யந்தம் பேதம் என்று சொல்லப்படும் வாதம் சரியல்லவென்பதால் அதற்கு வேறுபட்ட முறையில் ஒன்றுக்கொன்று ஸாபேக்ஷமாக இருக்கின்றதால் அவைகள் மித்யை என்று

சாதிக்கப்பட்டது. இப்போது பேதாபேதம் என்பது ப்ரஹ்மஸ்வரூபம் என்றும், அதனுல் ப்ரஹ்மம் உபயாத்மகம் என்று சொல்லப்படுகின்ற பக்ஷத்தை கண்டிக்கப்படுகிறது.

அதாவது நிர்பேதம் அபின்னஸ்வரூபம், ஸபேதம் பின்னஸ்வரூபம் என்பதால், நிர்பேதமாக இருக்கின்ற ப்ரஹ்மஸ்வரூபத்தில் ஐச்வர்யம் முதலானவைகள் ஸாபேக்ஷமாக இருக்கின்றதால் அவைகள் ஸ்வரூபத்தில் சேரமுடியாது என்ருலும் ஸபேதமான ப்ரஹ்மத்தினிடம் ஐச்வர்யாதிகள் பரமார்த்தமாகவே ஸ்வரூபமாக இருக்கின்றதென்றே சொல்லலாமே ? அதனுல் ப்ரஹ்மமென்பது ஏகம், அனேகாத்மகம் என்று சொல்லப்படுவதில் விரோதம் ஏதுமில்லையென்று பேதாபேதவாதிகளால் சொல்லப்படுகிறது.

சித்தா : நிர்பேதம் ப்ரஹ்மமென்று சொல்லப்படுமானுல், அதில் பேதத்வம் என்பது ஸ்வாபாவிகமா ? அல்லது உபாதிவஸரத் ஏற்படுகிறதா ? நிர்பேத ஸ்வரூபத்தில் பேதம் என்பது ஸ்வாபாவிகம் என்று சொல்ல முடியாது. ஏனெனில் இரண்டும் விருத்தமானதால் ஒரே வஸ்துவில் ஒன்றுக்கொன்று விரோதமான இரண்டு தன்மைகள் இருக்க முடியாது. அவ்விதம் சொல்லப்படுமானுல் கடம் உடைந்தும், உடையாமலும் இருக்கிறது என்று சொல்வது போலாகும். உபாதியினுல் பேதம் என்று சொல்லப்படுமானுல் அது பரமார்த்தம் என்று சொல்லமுடியாது. உபாதி பேதத்தினுலும் பின்னம் அபின்னமாக ஆகமுடியாது. அபின்னம் பின்னமாக ஆகமுடியாது. ஆகவே உபாதி இருக்கின்ற போதும் ஒன்றுக்கொன்று விருத்தமாக இருக்கின்றதால் உபயாத்மகம் என்று சொல்வதற்கே முடியாது.

**195.** அவதாரிகை : ஆகாசம் என்பது நிர்பேதம் என்றபோதிலும் கடம், மடம் என்ற உபாதி வஸாத் கடாகாசம் மடாகாசம் என்ற பேதம் இருக்கின்றது அதுபோல் அபின்னமான வஸ்துவிலும் பின்னம் என்பது இருக்கிறதென்று சொல்லலாமே ? என்ருல்,

**ச்லோகம் :**

स्वभावतो यन्मिथुनं विरुद्धं न तन्निमित्तान्तरतः कदाचित् ।
उपैति सख्यं परमार्थवृत्त्या भ्रमादलभ्यं न च किंचिदस्ति

**ச்லோகார்த்தம் :** எந்த இரண்டு வஸ்துக்கள் ஸ்வாபாவிகமாகவே விருத்தமாக இருக்கின்றதோ அவை வேறு நிமித்தங்களினுல் உண்மையான ஸம்பந்தத்தை அடையமுடியாது. ஆனுல் ப்ராந்தியினுல் அடையமுடியாதது ஏதும் இல்லை.

**வ்யாக்யானம் :** ஆகாசம் என்பதில் உபாதியினுல் பேதம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுவதனுலேயே பேதம் பரமார்த்தமில்லையென்பது அறியப்படுகிறது. நிரவயமான ஆகாசத்தில் எத்தனை உபாதிகள் இருந்த போதிலும் ஆகாஸம் என்பதில் எந்த விதமான பேதமும் ஏற்படமுடியாது என்பதால் ஆகாஸம் என்பதில் பேதம் என்பதே கிடையாது. அதேபோல் ப்ரஹ்மஸ்வரூபத்தில் உபாதியினுலும் பேதம் ஏற்படமுடியாது.

**196.** அவதாரிகை : இந்த விஷயத்தில் மேலும் ஒரு உதாகரணம் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

न रविशार्वरसख्यकृदीक्ष्यते जगति कश्चिदुपाधिरमोहतः ।
यदि भवेत्स भवेद्भवतो मतः स न भवेद्यदि सोऽपि न संभवेत्

ச்லோகார்த்தம் : ப்ராந்தி இல்லாமல் இந்த லோகத்தில் வேறு எந்த உபாதியும் சூர்யனுக்கும் இருளுக்கும் ஸம்பந்தத்தை உண்டு பண்ண முடியாது. அவ்விதம் ஸம்பவிக்கும் என்ருல் உன்மதமும் ஸம்பவிக்கும். அது ஸம்பவிக்காது என்ருல் உன் மதமும் ஸம்பவிக்காது.

வ்யாக்யானம் : ஏந்தக் காரணத்தைக் கொண்டும் அஞ்ஞானம் என்ற ஒன்றைத் தவிர சூர்யன் என்பதையும் இருள் என்பதையும் ஒன்ருக சேர்த்து வைக்கக் கூடிய வஸ்து ஒன்று இருப்பதாகச் சொல்வதற்கே முடியாது. அவ்விதம் இருக்கிறதென்று சொல்லப்படுமாஞல், இரண்டும் ஸ்வாபாவிகம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் ஸ்வபாவத்தில் இரண்டும் ஒன்றுக்கொன்று விருத்தமாக இருக்கின்றபடியிஞல் ஒன்று பரமார்த்தமென்றும் மற்ருென்று ப்ராந்தி என்றே சொல்லவேண்டும்.

**197.** அவதாரிகை : ஒன்றுக்கொன்று விருத்தமாக இருக்குமாஞல் ப்ராந்தி சித்தமாக இருந்தாலும் இரண்டும் ஒன்ருக இருக்கமுடியாதே? ஏற்கனவே அறியப்பட்ட வஸ்து எதுவோ அதுதானே ப்ராந்தி ஞானத்திலும் ப்ரகாசிக்கும்?

ச்லோகம் :

खमपि खादति खण्डितमीक्षते निजशिरोनयनेन करार्पितम् ।
किमपि दुर्घटमस्य न विद्यते यदि विमूढमतिर्भवति स्वयम्

ச்லோகார்த்தம் : ஆகாசத்தை புஜிக்கின்ருன், வெட்டப்பட்டதன் சிரஸை கையில் வைத்திருப்பதாக காண்கிருன். ஸ்வயம் விமூடமதியுள்ளவஞக இருக்கின்ற ஒருவனுக்கு ஸம்பவிக்காத விஷயம் ஏதுமில்லை.

வ்யாக்யானம் : ப்ராந்தி ஞானத்தில், உண்மையில் ஏற்கனவே பார்க்கப்பட்டதுதான் பார்க்கப்படுகிறென்ருே அல்லது பொருந்தாத விஷயம் என்பது ப்ராந்தி ஞானத்தில் இருக்கமுடியாது என்ருே சொல்வதற்கு முடியாது. ஏனெனில் ஸ்வப்னத்தில் ஆகாசம் என்பதை சிறிய துண்டுகளாக விண்டு பக்ஷணம் போல் புஜிக்கின்றதாகவும், தன்னுடைய கழுத்திலுள்ள சிரஸை வெட்டிதன் கையிலேயே வைத்துக் கொண்டு தன் கண்ணுலேயே வேறுபடுத்தப்பட்ட அந்தசிரஸைப்பார்க்கின்றதாககனவு காண்கிருன். ஆகவே பொருந்தாததை பொருத்திக் காட்டுவதே மாயை என்பதின் விசேஷஸ்வரூபம் என்று அறிய வேண்டும். இவ்விதம் காணப்படும் ஸ்வப்னம் அதுவே அநிஷ்டத்திற்கு சூசகம் என்று ஸ்வப்னத்தைப்பற்றி விசாரிக்கின்ற இடத்தில் ஐதரேயசாகையைச் சேர்ந்தவர்களால் சொல்லப்படுகிறது. ஆகையால் ப்ராந்தி ஞானம் என்பது ஏற்கெனவே பார்க்கப்பட்ட விஷயமாகத்தான் இருக்க வேண்டும் என்று சொல்வதற்கு முடியாது.

**198.** அவதாரிகை : மேலும் உபாதி என்பதே மித்யை என்ருல், அந்த உபாதியிஞல் ஏற்படும் பேதம் என்பதும் மித்யை என்றே சொல்ல வேண்டும்.

ச்லோகம் :

इतश्च निर्भेदकमात्मतत्त्वं निरूपणे कारणकार्यतादेः ।
अनादिमायैकनिबन्धनत्वादसंभवादस्य तु वस्तुवृत्त्या

ச்லோகார்த்தம் : நிரூபணம் செய்கின்றபோது காரணத்வம், கார்யத்வம், என்பவைகள் எல்லாம், அனுதிமாயை என்பதன் நிமித்தமாகவே இருக்கின்றது. உண்மையில் அவை ஸம்பவிக்காது. ஆகையால் ஆத்மதத்வம் நிர்விசேஷமேயாகும்.

வ்யாக்யானம் : ப்ரஹ்மமென்பது காரணமென்ருே கார்யமென்ருே சொல்லமுடியாது. அதனுல் ஆத்ம ஸ்வரூபத்தில் கார்யகாரணம் என்பதெல்லாம் மாயிகம் என்றே ஒத்துக்கொள்ளவேண்டும். ஆரம்பண அதிகரணத்தில் சொல்லப்பட்டிருக்கின்ற விவர்த்த ந்யாயத்தின்படி, ப்ரஹ்மமென்பது, ஏகம் நிர்விசேஷம் என்று சித்திக்கின்றது. எப்படியெனில் காரணத்வம் ப்ரஹ்மத்தினிடம் சொல்லப்படுமானுல் ப்ரஹ்மஸவிஸேஷம் என்று சொல்ல நேரிடும். நிர்விசேஷமான வஸ்துவில் ஸவிஸேஷம் என்பது பரமார்த்தமாக இருக்கமுடியாது. இருக்கின்ற அஞ்ஞானத்தினுல் கல்ப்பிக்கப்பட்டது என்பதால் பரமார்த்தமாக கார்ய காரண பாவம் ஸம்பவிக்கமுடியாது. ஆகையால் பாரிசேஷாத் நிர்பேதம் ஆத்மதத்வம் என்றே சித்திக்கின்றது.

**199.** அவதாரிகை : கார்ய காரணபாவம் என்பதே ஸம்பவிக்க முடியாது என்பதால் விவர்த்த வாதம் என்பதை அவச்யம் ஒப்புக்கொள்ளவேண்டும். அதாவது கார்யம் முதலானவை, முன்னுல் இல்லாமல் அஸத்தாக இருந்து உண்டாகிறதா? ஸத்தாக இருந்து உண்டாகிறதா, அல்லது ஸதஸத்தாக இருந்து உண்டாகிறதா என்று விசாரிக்கப்படுமானுல் எந்தவிதமும் சொல்ல முடியாது என்று தெரிவிக்கப்படுகிறது.

ச்லோகம் :

असत्र कार्यं गगनप्रसूनवन्ध्यासुतादेः करणाप्रसिद्धेः ।
न प्रागसत्कार्यमिति प्रवादः प्रशस्यते तस्य विरोधहेतोः

ச்லோகார்த்தம் : அஸத்வஸ்து கார்யமாக இருக்கமுடியாது. ஏனெனில் ஆகாசபுஷ்ப்பம், வந்த்யாபுத்ரன் இவைகளின் உற்பத்தியென்பது, அப்ரசித்தமாகவே இருக்கின்றது. உற்பத்திக்கு முன்பு கார்யம் அஸத்தாக இருந்தது என்ற வாதமும் ஒத்துக் கொள்ளப்படுவதில்லே. ஏனெனில் அது விருத்தமேயாகும்.

வ்யாக்யானம் : கார்யம் என்பது அத்யந்தம் அஸத்தாக இருந்து உண்டாகிறது என்று சொல்வதற்கு முடியாது. வந்த்யாபுத்ரன், முயல் கொம்பு முதலானவைகளுக்கு உற்பத்தி என்பதே கிடையாது. (லோகத்தில் ப்ரசித்தமில்லே) கடபடாதிகள் முன்னுல் அஸத்தாக இருக்கின்றது. அதன் பிறகு உண்டாகிறது என்பதால் ப்ராக் அஸத் என்றே சொல்லலாமே? என்ருல் அஸத் என்ருல் அதற்கு முன்னுல் என்ருே பின்னுல் என்ருே விசேஷணம் சொல்லமுடியாது. இருக்கின்ற ஒருவஸ்துவிற்கே காலவிசேஷணம் சொல்லமுடியும் என்பதால், அஸத் என்றும் அதற்கு முன்கால ஸம்பந்தம் இருக்கின்றதென்றும் சொல்வது யுக்திக்கு விரோதம்.

**200.** அவதாரிகை : எப்படி விரோதம் என்ருல்,

ச்லோகம் :

विशेषणानामसति प्रवृत्तिर्न दृश्यते क्वापि न युज्यते च ।
युधिष्ठिरात्प्रागभवन्नरेन्द्रो वन्ध्यासुतः शूर इतीह यद्वत्

ச்லோகார்த்தம் : அஸத்வஸ்துவில் விசேஷணங்கள் ப்ரவர்த்திப்பதில்லே. பொருந்தவும் முடியாது. யுதிஷ்ட்டிரனுக்கு முன்பு இங்கு சூன்யஞன வந்த்யாபுத்ரன் ராஜாவாக இருந்தான் என்பது எவ்விதமோ அவ்விதமேயாகும்.

வ்யாக்யானம் : அஸத் என்ருல், ஸ்வரூபம் என்பதே இல்லாதது. இல்லாத ஒரு வஸ்துவிற்கு விசேஷணம் சொல்லப்படுவது சரியல்ல. ஏனெனில் முன்ஞல் ஏதாவது ஒரு வஸ்து இருந்தால்தானே இப்போது இருக்கின்ற வஸ்துவை வேறுபடுத்தி தெரிவிப்பதற்காக விசேஷணம் சொல்ல முடியும் ? மலடி மகஞன நரேந்திரன் என்பவன் யுதிஷ்டிரன் என்ற ராஜாவிற்கு முன்ஞல் இருந்தவன் என்றும் அவன் மஹாசூரன் என்றும் சொல்லப்படுமாஞல் எப்படிப் பொருந்தாதோ அதேபோல் இல்லாத வஸ்துவிற்கு முன்ஞல், பின்ஞல் என்று காலவிசேஷ ஸம்பந்தம் சொல்வதும் பொருந்தாது.

**201-202.** அவதாரிகை : இதேபோல் உற்பத்தி ஸம்பந்தம் என்பதும் நிராகரணம் செய்யப்படுகிறது.

ச்லோகம் :

उत्पत्तिरप्यस्य निरूप्यमाणा न काचिदागच्छति युक्तिमार्गम् ।
स्वसत्तया स्वैः समवायिकारणै रपीह या स्यात्समवायिताऽस्य
असज्जनिः सेत्युपवर्ण्यमानं सुदुर्घटं न ह्यसतो युजैभिः ।
सदेव सद्भिः सह सर्ववस्तु संगच्छते न त्वसदेव सद्भिः

ச்லோகார்த்தம் : அஸத்கார்யத்தில் உற்பத்தி என்று சொல்லப்படுவதை நிரூபணம் செய்கின்றபோதும் அதுவும் யுக்தியுக்தமாக இல்லே. தன்னுடைய ஸத்தையுடனும், தன்னுடைய ஸமவாயிகாரணத்துடனும் தன்னுடைய கார்யத்திற்கு ஸமவாயி ஸம்பந்தம் ஏற்படுகிறது. அதுவே அஸத் கார்யத்தின் உற்பத்தி என்று இவ்விதம் சொல்லப்படுவது ஸம்பவிக்காது. ஏனெனில் அஸத்வஸ்துவிற்கு இவைகளுடன் ஸம்பந்தம் என்பதே ஏற்படாது. ஸர்வ வஸ்துக்களும் ஸத்தாக இருந்துகொண்டே மற்றவஸ்துக்களுடன் ஸம்பந்தத்தை அடைகின்றது. அஸத்தாக இருந்து மற்ற வஸ்துக்களுடன் ஸம்பந்தத்தை அடைவதில்லே.

வ்யாக்யானம் : அஸத்தாக இருந்தாலும் அதற்கு ஸத்தை என்பதுடனே ஸமவாயிகாரணத்துடனே ஸம்பந்தப்படுவதையே உற்பத்தி என்று சொல்கிரேம் என்று சொல்லப்படுமாஞல் அதுவும் பொருந்தாது. ஏனெனில் இருக்கின்ற இரண்டு வஸ்துக்களுக்கே ஸம்பந்தம் சொல்லமுடியும். அதேபோல் இருக்கின்ற ஒரு வஸ்துவுடன் இல்லாத ஒரு வஸ்துவிற்கு ஸம்பந்தம் சொல்லப்படுவதென்பதும் முடியாது.

**203.** அவதாரிகை : ஸத்தான ஒன்றுக்கே ஸத்துடன் ஸம்பந்தம் என்று சொல்லப்படுவது இருக்கட்டும். இதஞல் இங்கு விசாரிக்கப்படுகின்ற விஷயத்திற்கு லாபம் என்ன ?

ச்லோகம் :

सती हि सत्ताऽस्य पटस्य दृष्टा तथैव सन्तः पटतन्तवोऽपि ।
तथा च तैश्चास्य कथं पटस्य संबन्धिता स्यादसतो वदैतत्

ச்லோகார்த்தம் : இந்த படத்தின் (வஸ்திரத்தின்) ஸத்தை என்பது இருக்கின்றதாகவே அறியப்படுகிறது. அதேபோல் அந்த வஸ்திரத்தின் நூல்களும் இருக்கின்றதாகவே அறியப்படுகின்றது. இவ்விதம் இருக்கின்றபோது அஸத்தான வஸ்திரத்திற்கு ஸத்தையான வஸ்திரம் நூல் இவைகளுடன் எவ்விதம் ஸம்பந்தம் ஏற்படும்? இதற்கு பதில் சொல்.

வ்யாக்யானம் : ஸத்தான வஸ்திரத்திற்கும், ஸத்தான நூல் என்பதற்கும் ஸமவாய ஸம்பந்தம் இருக்கின்றதென்பது ப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறது. அதனுல் இருக்கின்ற வஸ்து இரண்டிற்குத்தான் ஸமவாய ஸம்பந்தேன ஸத்தை என்பது இருக்கின்றதென்று அறியப்படுகிறது. இந்த நியமத்திற்கு விரோதமாக அஸத் என்பது காரணத்துடனும், ஸத்தை என்பதுடனும் ஸம்பந்தம் உடையது என்று உன்னுல் சொல்லப்படுவது ஒத்துக் கொள்ளக்கூடியதல்ல.

**204.** அவதாரிகை : இந்தவிதம் நிரூபிக்கப்பட்டதால் ஏற்படும் லாபம் என்னவென்ருல்,

ச்லோகம் :

स्वकारणैस्तन्तुभिरेवमस्य स्वसत्तया चान्वय एव जन्म ।
तवेष्टमेवं सति जन्म तस्य न शक्यते वर्णयितुं पटस्य

ச்லோகார்த்தம் : தன்னுடைய ஸத்தையுடனும் ஸமவாயிகாரணத்துடனும் கார்யத்திற்கு ஸம்பந்தம் ஏற்படுவதே கார்யத்தின் உற்பத்தி என்று உன் அபிப்ருயம் இருக்குமானுல் படத்தினுடைய உற்பத்தியைச் சொல்வதற்கு உன்னுல் முடியாது.

வ்யாக்யானம் : இதனுல் இல்லாத ஒரு வஸ்துவிற்கு ஸத்தையுடனே, ஸமவாயி காரணத்துடனே ஸம்பந்தமே ஏற்படமுடியாது. அதனுல் உற்பத்தியும் ஏற்பட முடியாது என்று சாதிக்கப்பட்டது. ஆகவே அஸத் என்பதற்கு ஸத்தா ஸம்பந்தமோ காரண ஸம்பந்தமோ ஏற்படுவதையே ஜன்மா என்று சொல்லப்படும் உன் வாதம் சித்திக்கமுடியாது.

**205.** அவதாரிகை : வஸ்திரம் என்பது முன்னுல் இல்லையென்ருலும் ஸத்தை என்பதும் ஸமவாயிகாரணம் என்பதும் இருக்கின்றதால் அவைகளுடம் அஸத்தான வஸ்திரத்திற்கு ஸம்பந்தம் ஏற்படுவதாக சொல்லலாமே?

ச்லோகம் :

तदन्वयात्प्रागसतः कथं स्यात्तदन्वयो न ह्यसदन्वयाय ।
सता समर्थं न हि वन्ध्यया तत्पुत्रः तत्पुत्रः समन्वेति कदाचिदत्र

ச்லோகார்த்தம் : ஒரு வஸ்துவுடன் ஸம்பந்தம் ஏற்படுவதற்கு முன்பு அஸத்தாக இருக்கின்ற ஒன்றுடன் வேறொரு வஸ்துவின் ஸம்பந்தம் எப்படி ஏற்படமுடியும்?

ஏனெனில் அஸத் என்பது ஸத்வஸ்துவுடன் ஸம்பந்தப்படுவதற்கு சக்தி அற்றதாக இருக்கின்றதல்லவா ? இந்த் லோகத்தில் வந்தியையுடன் அவள் புத்ரனுக்கு ஸம்பந்தம் இருப்பதாக ஒருபோதும் அறியப்படவில்லை.

வ்யாக்யானம் : வஸ்திரம் என்பது அத்யந்தம் அஸத் அல்லவென்றும், முன்னால் அஸத்தாக இருந்த ஒன்றுக்கு காரணம் முதலான ஸம்பந்தம் ஏற்படலாம் என்று சொல்லப்படுவதும் சரியல்ல. வந்த்யாசுதனுக்கு மாதாவுடன் ஸம்பந்தம் என்று சொல்வது எப்படி பொருந்தாதோ அதேபோல் ஸத் என்பதுடன் அஸத்திற்கு ஸம்பந்தம் ஏற்படுவதாகச் சொல்வதும் பொருந்தாது.

**206.** அவதாரிகை : முன்னால் அஸத்தான வஸ்துவிற்கு காரண ஸம்பந்தம் இல்லையென்றாலும், காரணத்துடன் ஸம்பந்தப்படக்கூடிய யோக்யதை அஸத்திற்கு இருக்கின்றதென்று சொல்லலாம். அந்த யோக்யதை என்பதையே ஜனி என்று சொல்கிறோம் என்று சொல்லப்படுமானால்,

ச்லோகம் :

न च किंचिदन्यदसतो बदितुं पटवस्तुनोऽत्र शकनीयमितः ।
जनिशब्दवाच्यमनवद्यतया तदयुक्तमेवमसदुद्भवनम्

ச்லோகார்த்தம் : அஸத்தான படத்தின் (வஸ்திரத்தின்) உற்பத்திக்கு முன்னால் சொல்லப்பட்ட காரணங்களினால், அவைகளுக்கு வேறான தோஷம் அற்ற விளக்கம் சொல்வதற்கு, இந்த வைசேஷிகமதத்தில் வேறு மார்க்கம் கிடையாது. ஆகையால் முன்பு சொல்லப்பட்டபடி அஸத் என்பதற்கு ஜன்மம் என்று சொல்வது யுக்திக்கு பொருந்தாது (அயுக்தமாகும்)

வ்யாக்யானம் : ஸத்தான ஸம்பந்தம் என்பதோ ஸமவாயிகாரணஸம்பந்தம் என்பதோ ஏற்படுவதையே அஸத்திற்கு ஜன்மா என்று சொல்லப்பட்ட பக்ஷம் நிராகரிக்கப்பட்டது. அதேபோல் யோக்யதை என்பதும் இருக்கின்ற வஸ்துவில்தான் ஸம்பவிக்கும் என்று தெரிவித்து, இந்த விதம் விசாரிக்கப்பட்ட முறையில் வைசேஷிக மதத்தில் உற்பத்தி என்பதே என்னவென்று நிரூபிக்க முடியவில்லையென்பதால் வேறு எவ்வித காரணமும் சொல்லமுடியாது. அஸத் என்பதற்கு உற்பத்தி என்பதே ஏற்பட முடியாது என்று சொல்லப்பட்டதனாலேயே, வஸ்த்ரம் ஏற்படுவதற்கு, முன்க்ஷண ஸம்பந்தம் ஏற்படுவதைத்தான் உற்பத்தி என்று சொல்கிறோம் என்ற வாதமும் நிராகரிக்கப்பட்டது.

**207.** அவதாரிகை : ஸம்பந்த யோக்யதையே ஜனித்வம் என்று சொல்லப்படுவதும் சரியல்லவென்று சித்தம் செய்யப்பட்டது. மேலும் ஜனித்வம் என்பது உன் சித்தாந்தமும் அல்ல, ஏனெனில் அஸத் என்பதற்கு உற்பத்தி சொல்லப்படும் உன் சித்தாந்தம் அபசித்தாந்தம் என்றே சொல்லப்படவேண்டும்.

ச்லோகம் :

न च वर्णितादपरमत्र भवाननुमन्यते जनिवचोर्थमितः ।
यदि वर्ण्यते किमपि तत्र भवेत्स्वमतप्रहाणमलिनीकरणम्

ச்லோகார்த்தம் : முன்பு சொல்லப்பட்ட விளக்கத்திலிருந்து வேறு எந்தவிதமான விளக்கத்தையும் உற்பத்தி சப்தத்திற்கு அர்த்தமாக நீங்கள் ஒத்துக்கொள்வதில்லை. அவ்விதம் வேறான அர்த்தம் சொல்லப்படுமானால் ஸ்வமத த்யாகம் என்ற தோஷம் ஏற்படுகிறது.

வ்யாக்யானம் : ஸத்தாஸம்பந்தம் அல்லது காரண ஸம்பந்தம் என்ற இந்த இரண்டையும் தவிர வேறு எதையுமே ஜனி என்பதற்கு அர்த்தமாக உன்னால் ஒப்புக்கொள்ளப்படவில்லை. அதனால் அதைவிட்டு வேறு எதையாவது உன்னால் சொல்லப்படுமானால் அது உன் சித்தாந்தமல்ல. அபசித்தாந்தம் என்றே சொல்லவேண்டும்.

**208.** அவதாரிகை : வேறு மதத்தினரின் அபிப்ருயமாக இருந்தபோதிலும் அதைச் சொல்வதற்காக, அது என் சித்தாந்தமில்லையென்று ஏன் சொல்லவேண்டும்?

ச்லோகம் :

संमवायिकारणगणेन तथा सह सत्तया च पटवस्त्विह यत् ।
समवैति तत्कणभुगिच्छति तज्जनिशब्दवाच्यमिति नान्यदितः

ச்லோகார்த்தம் : தன்னுடைய ஸத்தையுடனும், ஸமவாயி காரணத்துடனும் படவஸ்துவின் ஸமவாயஸம்பந்தமே உற்பத்திசப்தவாச்யமென்று கணாதர் அபிப்ருயப்படுகிறார். இதைத்தவிர வேறு எதுவும் அர்த்தமில்லை என்பதே அவர் அபிப்ருயம்.

வ்யாக்யானம் : ஸமவாயி காரண ஸம்பந்தமோ, ஸத்தாஸம்பந்தமோ வஸ்திரம் என்ற கார்யவஸ்துவிற்கு ஏற்படுகின்ற ஸம்பந்தமே ஜனி என்ற சப்தார்த்தம் என்று கணாதரால் சொல்லப்படுகிறது. இதைத் தவிர வேறு எந்த விதம் சொல்லப்பட்டாலும், அது கணாதருடைய அபிப்ருயமல்ல. அவரவர் அபிப்ருயம் என்றே சொல்லவேண்டுமானதால், அவைகள் அபசித்தாந்தம் என்றே சொல்லவேண்டும்.

**209.** அவதாரிகை : அப்படியானால் கணாதர் என்பவரால் சொல்லப்பட்டதையே ஒத்துக் கொள்ளலாமே?

ச்லோகம் :

न तदत्र संभवति युक्तिवशादुपवर्णितं तदतिविस्तरतः ।
न च किंचिदन्यदुचितं भवतो वदितुं स्वपक्षमपरित्यजतः

ச்லோகார்த்தம் : யுக்திக்கு பொருந்தாததால் அது இங்கு ஸம்பவிக்காது. இதுபற்றி முன்பே விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. ஸ்வமதத்தை த்யாகம் செய்யாமல் உசிதமான வேறொரு அபிப்ருயத்தைச் சொல்வதற்கு உன்னால் முடியாது.

வ்யாக்யானம் : கணாதரால் சொல்லப்பட்ட ஸூத்ரத்தில் அனேக தோஷங்கள் ஸம்பவிக்கின்றது. அதனால் அதை ஒத்துக் கொள்ள முடியாது. உற்பத்தி என்றால் என்ன என்பதற்கு லக்ஷணமே உன்னால் சொல்ல முடியவில்லை என்பதை முன்னால் நிரூபணம் செய்யப்பட்டது. ஆகவே ஆரம்ப வாதம் என்ற உன் சித்தாந்தத்தை விட்டு வேறு எதைச் சொன்னாலும் அது அபசித்தாந்தம்தான்.

கார்யம் என்பது உற்பத்திக்கு முன் அத்யந்தம் அஸத் என்று சொல்லமுடியாது. அதனுல் ஏதோ ஒருவிதமான ஸத் என்றே சொல்லவேண்டும். காரணம் என்பதில் சக்தி ரூபேண கார்யம் இருக்கின்றதென்ருே, அல்லது சூக்ஷ்மரூபமேண இருக்கிறது என்ருே சொல்லப்படுமானுல், அதிலிருந்து உற்பத்தி என்று சொல்லலாம் என்று ஸத்கார்யவாதிகளால் சொல்லப்படுகிறது. ஆகவே அஸத்கார்யவாதியான உனக்கு ஸத்கார்யவாதம் என்பது எப்படி உன் சித்தாந்தமாக இருக்கமுடியும்? காரணத்தில் ஏதோ ஒரு அவஸ்த்தா விசேஷம் என்பதோ அல்லது சக்தி விசேஷம் என்பதோ அல்லது உற்பத்தி செய்யக்கூடிய தர்மம் இருக்கின்றதென்ருே சொல்லப்பட்டால்தான் உற்பத்தி என்பதே சொல்லமுடியும்.

அதற்காக, அத்யந்த அஸத் என்று சொல்லப்படவில்லையென்றும், கார்ய ப்ராகபாவத்தையே அஸத் உற்பத்தி என்று சொல்லப்படுமானுல், கார்யப்ராகபாவம் என்பது, இப்போது கார்யமாக அறியப்படுவது போல் முன் அறியப்படவில்லையென்ருலும், காரணத்தில் தர்மரூபமாகவோ சக்தி ரூபமாகவோ சூக்ஷ்ம ரூபமாகவோ கார்யம் இருக்கிறதென்றும் அதற்கே ஸத்தை முதலானவைகளுடன் ஸம்பந்தம் ஏற்படுவதால், அதையே கார்ய உற்பத்தி என்று உன்னுல் சொல்லப்படுமானுல், அது ஸத்கார்யவாதம். ஆகையால் உன் சித்தாந்தமல்ல. அபசித்தாந்தம் என்றே சொல்லவேண்டும்.

**210.** அவதாரிகை : ஆகவே அஸத்கார்யவாதம் என்ற விஷயம் முடிவு பெறுகிறது.

ச்லோகம் :

निरूपणायां न यतोऽस्ति कश्चिदुत्पत्तिशब्दार्थ इह त्वदीये ।
पक्षे ततो दुर्घटनाप्रसिद्धिरसज्जनेरुक्तनयेन तावत्

ச்லோகார்த்தம் : நிரூபணம் செய்கின்றபோது உன்னுடைய பக்ஷத்தில் உற்பத்தி சப்தத்திற்கு அர்த்தமே கிடையாது. ஆகையால் முன்னுல் சொல்லப்பட்ட யுக்திகளால் அஸத் ஜன்மமென்பது ஸம்பவிக்கமுடியாது என்று சித்திக்கின்றது.

வ்யாக்யானம் : இது வரை விசாரிக்கப்பட்டதிலிருந்து அஸத் கார்ய வாதத்தில் உற்பத்தி என்ருல் என்னவென்றே சொல்லமுடியாயததால், இந்தவாதம் ஏற்றுக்கொள்ளத் தக்கது அல்லவென்று நிரூபிக்கப்பட்டது.

**211.** அவதாரிகை : இரண்டாவதாக, ஸத் என்பதற்கே உற்பத்தி என்று சொல்லப்படும் ஸத்கார்யவாதமும் சரியல்ல என்று நிராகரிக்கப்படுகிறது.

ச்லோகம் :

सतोऽपि कार्यत्वमयुक्तमेव निरूपणे कारणकृत्यहानेः ।
न कारणव्यापृतिरत्र शक्या सतः स्वरूपे वदितुं फलाय

ச்லோகார்த்தம் : நிரூபணம் செய்கின்றபோது ஸத்வஸ்துவின் உற்பத்தியும் அயுக்தமாகவே இருக்கின்றது. ஏனெனில் காரண க்ருதயம் ஏதுமில்லை. அதற்காக கார்யத்தினுடைய ஸத்வரூபத்தில் பலம் ஏற்படுவதற்காக காரண வ்யாபாரத்தை சொல்வதற்கு முடியாது.

வ்யாக்யானம் : ஸத் என்ருல், அதற்கு உற்பத்தி என்று சொல்வதே பொருந்தாது. கார்யம் என்பதை உண்டுபண்ணுவது எதுவோ அதையே காரணம் என்று சொல்லப்படுகிறது. கார்யம் என்பது ஸத் என்ருல், காரணம் என்பது எதற்கு ? அதனுல் இந்த கார்யத்திற்கு அது காரணம் என்று சொல்வதே ப்ரயோஜனம் அற்றதாக ஆகும். காரணம் என்பதில் கார்யம் இருக்கிறது என்று சொல்லப்படுமானுல், கார்யத்தின் ஸ்வரூபமே காரணத்தினுல் சித்திக்கின்றதா ? அல்லது கார்யத்தில் இல்லாத சில விசேஷகுணங்களை உண்டு பண்ணுவதற்காக காரண வ்யாபாரம் தேவைப்படுகிறதா ? அல்லது கார்ய அபிவ்யக்திக்காக காரணம் என்று சொல்லப்படுகிறதா ? என்று விசாரிக்கப்பட வேண்டும். கார்ய அபிவ்யக்திக்காக என்று சொல்லப்படுமானுல் ஸ்வரூபம் என்பதே இல்லையென்ருல் அதை கார்யம் என்றும் அது இருக்கின்றதென்றும் சொல்வதற்கு முடியாது. அதனுல் காரணம் நிஷ்ப்ரயோஜனம் என்ருகும்.

**212.** அவதாரிகை : அபிவ்யக்திரூபமான குண ஆதானுர்த்தம் காரணவ்யாபாரம் என்று சொல்லலாமே என்ருல்,

ச்லோகம் :

गुणं शिपत्कारणमर्थवत्त्वं लभेत चेन्नात्र गुणस्य भावात् ।
न चेद्गुणोऽसत्करणं प्रसक्तं निरर्थकं कारणकर्म तस्मात्

ச்லோகார்த்தம் : குணங்களை உண்டுபண்ணுவதன் மூலமாக காரணம் அர்த்தவத்தாகின்றது என்று சொல்லப்படுமானுல் அது சரியல்ல. ஏனெனில் இந்த வாதத்தில் குணங்களும் உற்பத்திக்கு முன்பே இருக்கின்றது. இல்லையென்ருல் அஸத்ஜன்ம வாத ப்ரஸக்தி ஏற்படும். ஆகையால் காரண வ்யாபாரம் நிரர்த்தகமாகவே இருக்கின்றது.

வ்யாக்யானம் : கார்ய அபிவ்யக்தி என்பது முன்னுல் காரணத்தில், இருந்து ஏற்படுகிறதா இல்லாமலிருந்தே ஏற்படுகிறதா என்று விசாரிக்கின்றபோது, சித்தமாக இருந்தே ஏற்படுகிறது என்ருல் காரணத்தினுல் உண்டாகிறது என்று சொல்லமுடியாது. முன்னுல் இல்லாமல் இருந்தே உண்டாகிறது என்று சொல்லப்படுமானுல், அந்த காரணத்திலிருந்து அந்த கார்யம் உண்டாவதாகச் சொல்லமுடியாது. இதேபோல்குண ஆதானம் என்பதோ, தோஷநிவர்த்தி என்பதோ முன்னுல் இருக்கின்றதா ? இல்லாததா ? என்று விசாரிக்கப்படுமானுலும் எந்த விதமாகவும் சொல்லமுடியாது. ஸத் என்ருல் நிவர்த்திக்க முடியாது. அஸத் என்ருல் நிவர்த்திப்பதற்காக காரண வ்யாபாரம் தேவை இல்லை வ்யர்த்தம் என்றே சித்திக்கின்றது.

**214.** அவதாரிகை : அனபிவ்யக்தி என்பதை நிவர்த்திப்பதற்காக காரணவ்யாபாரம் தேவை என்று சொல்லலாமே என்ருல்,

ச்லோகம் :

मलं निरस्यार्थवदिष्यते चेन्मलोऽपि सन्नैव निरस्य इष्टः ।
सतोऽविनाशादसतोऽजनेश्च वृथा ततः कारणमत्र पक्षे

ச்லோகார்த்தம் : மலத்தை நீக்குவதன் மூலம் காரணம் அர்த்தவத்தாக இருக்கின்றது என்று சொல்லப்படுமானுல் அதுவும் சரியல்ல. ஏனெனில் ஸத்தானமலம் நீக்கப்படுவதாக உங்களால் ஒத்துக்கொள்ளப்படவில்லே. ஸத்திற்கு நாசம் இல்லாததாலும், அஸத்திற்கு உற்பத்தி இல்லாததாலும் இந்த பக்ஷத்தில் காரணம் வ்யர்த்தமாகவே இருக்கின்றது.

வ்யாக்யானம் : குண ஆதானம் என்பதில் என்ன தோஷம் சொல்லப்பட்டதோ அதே தோஷம் அனபிவ்யக்த நிராஸம் என்பதிலும் ஸம்பவிக்கின்றது. ஸத் என்பதற்கு ஒருபோதும் விநாசம் என்பதே கிடையாது. அஸத் என்ருல் உற்பத்தியென்பதே சொல்லமுடியாது. இதே விஷயம் பற்றி பகவத்கீதையில், "நாஸதோ வித்யதேபாவ : நா பாவோ வித்ய தேஸத:" என்று பகவானுல் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகவே காரணம் வ்யாபாரம் என்பது இரண்டு பக்ஷத்திலும் வ்யார்த்தம் என்று சித்திக்கின்றது.

214. அவதாரிகை : இந்த விஷயம் முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

ச்லோகம் :

तस्मादभिव्यक्तिकरी न हेतुप्रवृत्तिरत्रार्थवती घटेत ।
न चानभिव्यक्तिनिरासवृत्या तस्मान्न सत्कार्यवचः प्रशस्तम्

ச்லோகார்த்தம் : ஆகையால் காரண ப்ரவர்த்தியானது கார்யத்தை அபிவ்யத்தமாக செய்கின்றதன் மூலம் அர்த்தவத் என்று சொல்வது பொருந்தாது. கார்ய அனபிவ்யக்தியை நீக்குவதன் மூலம் அர்த்தவத் என்று சொல்வதும் பொருந்தாது. ஆகையால் ஸத்கார்யவாதம் என்பதும் ஒத்துக்கொள்வதற்கு முடியாது.

வ்யாக்யானம் : இருக்கின்றது என்ருல் அது உற்பத்தி உடையது என்று சொல்லமுடியாது ஆகையால் இல்லாத அபிவ்யக்தியை காரணம் உண்டு பண்ணுவதாகவும் சொல்லமுடியாது. அதனுல் மலநிவர்த்தி என்பதும் ஸம்பவிக்காது. இருக்கின்றது என்ருல் அதை உண்டு பண்ணத்தேவை இல்லே. அதனுல் ஸத்கார்யவாதத்திலும் காரணம் வ்யர்த்தம் என்றே சித்திக்கின்றதால் ஸத்கார்யவாதமும் நிராகரிக்கப்படுகிறது.

215. அவதாரிகை : மேலும், ஸத்கார்யவாதத்தில் காரண வ்யாபாரம் என்பதும் கார்யம் என்பதும் நித்யம் என்று சொல்லப்படுகிறது. இதுவும் சரியல்ல.

ச்லோகம் :

नित्या च कारकगणस्य सती प्रवृत्तिर्नित्यं व्यनक्ति सकलं फलमित्यवश्यम् ।
वक्तव्यमत्र न लयो न सुषिप्तिमूर्छे नो चेन्न सृष्टिरिति कष्टमुपस्थितं वः

ச்லோகார்த்தம் : காரணகணங்களில் ஸத்தாக இருக்கின்ற ப்ரவ்ருத்தி என்பது நித்யமென்றும் அவை எல்லாகார்யங்களேயும் எப்போதும் அபிவ்யக்தமாகச்செய்கிறது என்றும் அவச்யம் ஒத்துக்கொள்ளப்படவேண்டும் என்று சொல்லும் பக்ஷத்தில், ப்ரளயம் சுஷுப்தி மூர்ச்சை என்ற எதுவுமே இருக்கமுடியாது. காரககணங்களின்ப்ரவர்த்தி ஸத்தாக இல்லேயென்ருல் சிருஷ்டி என்பதே இல்லேயென்ருகும்.

வ்யாக்யானம் : காரண வ்யாபாரம் நித்யம் என்றும் கார்யம் என்ற ச்ருஷ்டி என்பதும் ஸத் என்றும் சொல்லப்படுமானுல், சுஷுப்தி என்பதோ, ப்ரளயம் என்பதோ மூர்ச்சை என்பதோ எதுவுமே இருக்க முடியாது. எல்லாமே ஸத் என்ருல் காரண வ்யாபாரம் என்பது எதற்கு ? இது காரணம் இது கார்யம் என்றவ்யவஸ்த்தையும் இருக்க முடியாது. மேலும் காரண வ்யாபாரம் என்பதும் அந்த காரணத்தில் இருந்து உண்டாகிறதா ? இல்லாமலே உண்டாகிறதா ? என்று விசாரிக்கின்றபோது இதே தோஷம் ஸம்பவிக்கின்றது. ஆகவே, காரண வ்யாபாரம் ஸத் என்று சொல்லமுடியாது. அதற்காக அஸத் என்று சொல்லப்படுமானுல் சிருஷ்டி என்பதே ஏற்படாது. இந்த வித தோஷங்கள் ஏற்படுவதால் ஸத் கார்யவாதம் என்பதும் ஒத்துக் கொள்ளக்கூடியதல்ல.

**216.** அவதாரிகை : இவ்விதம் ஸத்கார்யம், அஸத் கார்யம் என்ற இரண்டு பக்ஷத்திலும் தோஷம் சொல்லப்படுமானுல், இதே தோஷம் அத்வைதமேதத்வம் என்று சொல்லப்படும் உங்கள் பக்ஷத்திலும் ஸம்பவிக்கின்றதே ? என்ருல்,

ச்லோகம் :

वेदान्तवादिसमयेऽपि समानमेतच्चोद्यं परैर्न खलु वाच्यमिहाप्रसक्तेः ।
अस्मिन्मते न खलु संव्यवहारमात्रे मायामये किमपि दूषणमस्ति यस्मात्

ச்லோகார்த்தம் : வேதாந்த வாதிகளின் பக்ஷத்திலும் இந்த ஆக்ஷேபம் ஸமானம் என்று அன்யர்களால் சொல்லமுடியாது. ஏனெனில் அதற்கு இங்கு ப்ரசக்தியே கிடையாது. எங்கள் மதத்தில் வ்யாவஹாரிகமாகவும், மாயாமயமாகவும் இருக்கின்ற கார்யத்தில் எவ்வித தோஷமும் ஸம்பவிக்க முடியாது.

வ்யாக்யானம் : வேதாந்த சித்தாந்தத்தில் இவ்வித தோஷங்களுக்கு இடமே கிடையாது. ஏனெனில் ஸர்வ விவகாரமும் வாசாரம்பணம், மித்யை என்றே சொல்லப்படுவதால் எந்த விதமான தோஷத்திற்கும் அவகாசம் கிடையாது. ஸர்வ விவகாரமும் மாயாமயம் என்று சொல்லப்படுவதால் ஸத் என்ருே அஸத் என்ருே நிர்வசனம் செய்யமுடியாது. அதனுல் அநிர்வசனீயமாக இருக்கின்ற வ்யவஹார விஷயத்தில் ஸத்கார்ய வாதத்திலோ, அஸத் கார்யவாதத்திலோ சொல்லப்படும் தோஷம் எதுவும் ஸம்பவிக்கமுடியாது.

**217.** அவதாரிகை : ஸர்வமும் மாயாமாத்ரம் என்று ஸம்ப்ரதாயமாகச் சொல்லப்பட வில்லையே ? என்ருல்,

ச்லோகம் :

आत्रेयवाक्यमपि संव्यहारमात्रं कार्यं समस्तमिति नः कथयांबभूव ।
सत्कार्यवादविषयो न हि दोषराशिर्मायामये भवितुमुत्सहते विरोधात्

ச்லோகார்த்தம் : கார்யம் என்பது எல்லாமே வ்யாவஹாரிகமே என்று ஆர்த்தரேயருடைய வாக்யமும் கூறுகின்றது. ஸத் கார்யவாதத்தில் சொல்லப்படுகின்ற தோஷங்கள் எல்லாமே மாயாமயமான கார்யத்தில் ஸம்பவிக்க முடியாது. ஏனெனில் அது விரோதமாகும்.

வ்யாக்யானம் : கார்யம் அஸத் என்றுல் அதற்கு உற்பத்தி சொல்ல முடியாது. ஸத் என்றுல், காரண ப்ரவ்ருத்தியென்பதே தேவையில்லே. அபிவ்யக்தி என்பது இருந்து உண்டாகிறதா ? இல்லாமலேயேஉண்டாகிறதா ? என்று விசாரிக்கப்படுமாஞல் தோஷம் ஏற்படும் என்றும் காரண ப்ரவர்த்தி நித்யம் (ஸத்) என்று சொல்லப்படுமாஞல், சுஷுப்தி, ப்ரளயம், மூர்ச்சை என்ற அவஸத்தைகள் ஸம்பவிக்க முடியாது என்றும் அதனுல் ஸத் கார்யம் என்பது பொருந்தாது என்பதால் ஸதஸத் விலக்ஷணம் மித்யை என்றே அறியப்படுகிறது என்று ஆத்ரேயர் என்பவர் (ப்ரஹ்மநந்தி) சாந்தோக்ய பாஷ்யத்தில் 'ஸம் வ்யவஹாரமாத்ரம் கார்யம்' என்று தெரிவிக்கின்றுர். இப்பேர்ப்பட்ட பெரியோர்களால் தெரிவிக்கப்பட்ட விஷயத்தை நாங்களும் அறிந்து கொண்டிருக்கின்றேம். ஆகவே, கார்யம் என்பது எல்லாம் மாயாமயம் என்றே சித்திக்கின்றதால் எங்கள் பக்ஷத்தில் எவ்விதம் தோஷமும் கிடையாது.

**218.** அவதாரிகை : இதேபோல் அஸத் கார்ய வாதத்தில் சொல்லப்பட்ட தோஷங்களும் எங்களுடைய பக்ஷத்தில் சித்திக்காது. ஏனெனில்,

ச்லோகம் :

काणाददर्शनसमाश्रयदोषराशिर्दूरान्निरस्त इह संव्यहारमात्रे ।
वेदान्तभूमिकुशले मुनिरत्रिवंश्यस्तेनाऽऽह कार्यमिह संव्यवहारमात्रम्

ச்லோகார்த்தம் : கார்யம் வ்யாவஹாரிகம் என்ற இந்த பக்ஷத்தில் வைசேஷிக மதத்தில் இருக்கின்ற தோஷங்கள் தூரத்தில் தள்ளப்பட்டதாகிறது. ஆகையால் வேதாந்த சாஸ்திரத்தில் குசலரான ஆர்த்தரேயர் இந்த மதத்தில் கார்யம் வ்யாவஹாரிகம் என்று சொல்கிறுர்.

வ்யாக்யானம் : ஸத்கார்ய வாதத்தையோ, அஸத்கார்ய வாதத்தையோ நாங்கள் ஒத்துக் கொள்வதற்கில்லே. ஏனெனில் ஸதஸத் விலக்ஷணம் கார்யம் என்பதால் ஸம்வ்யவகாரம் (மித்யை) என்றே எங்களால் சொல்லப்படுவதால் உங்கள் பக்ஷத்தில் சொல்லப்படும் தோஷம் எதுவும் எங்கள் பக்ஷத்தில் ஏற்படமுடியாது.

ஸத்கார்யவாதமான பரிணுமபக்ஷத்தை ஒத்துக்கொள்கிறீர்களே என்றுல், அதுவே சரி என்பதற்காக ஒப்புக்கொள்ளப்படவில்லே. விவர்த்த வாதத்தை தெரிவிப்பதற்கு உபகாரகமாக அதற்கு ஸமீபத்தில் இருக்கின்றதால் அதை உபாயமாகக் கொண்டே விவர்த்த வாதத்தை விளக்கப்படுகிறது. ஆனுல் ஸத்கார்யவாதத்தில் சொல்லப்படும் தோஷம் எதுவும் வ்யவகாரமாத்ரம் கார்யம் என்று சொல்லப்படும் எங்கள் மதத்தில் ஸம்பவிக்கமுடியாது. எவ்விதம் ஸத்விலக்ஷணம் என்று சொல்லப்படுகிறதோ அதுபோல் அஸத் விலக்ஷணம் என்று சொல்லப்படுவதால் மாயாமயம் மித்யை என்றே சித்திக்கின்றது. அதனுல் வேதாந்த மதத்தில் எவ்வித தோஷமும் ஸம்பவிக்க முடியாது என்று வேதாந்ததார்த்தங்களே விசாரிக்கின்றதில் குசலர்களான அத்ரிவம்ஸத்தைச் சேர்ந்த முனிவரானப்ரஹ்ம நந்தி என்பவரால் இந்த விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது.

**219.** அவதாரிகை : ப்ரஹ்மநந்தி என்பவரால் சொல்லப்பட்ட வாக்யங்களில் சில இடங்களில் பரிணும வாதத்தையும் சில இடங்களில் விவர்த்தவாதத்தையும் பற்றி

சொல்லப்பட்டிருப்பதால், விவர்த்த வாதந்தான் அவருடைய சித்தாந்தம் என்று எப்படிச் சொல்லமுடியும் ?

**ச்லோகம் :**

षष्ठप्रपाठकनिबद्धमुदीरितं यत् तत्सत्यमेव खलु सत्यसमाश्रयत्वात् ।
अत्रैव यत्पुनरुवाच समुद्रफेनदृष्टान्तपूर्वकमदो व्यवहारदृष्ट्या

**ச்லோகார்த்தம் :** சாந்தோக்ய ஷஷ்ட்டாத்யாய வ்யாக்யானத்தில் எந்த விஷயம் சொல்லப்படுகிறதோ அது ஸத்யமே. ஏனெனில் அது ஸத்ய வஸ்துவை ஆச்ரயித்திருக்கின்றது. இங்கு ஸமுத்ரம், பேனம், முதலான த்ருஷ்ட்டாந்தங்களுடன் எந்த பரிணமவாதம் சொல்லப்படுகிறதோ அது, வ்யாவஹாரிக த்ருஷ்டியில் சொல்லப்படுகிறது என்று அறிந்து கொள்ள வேண்டும்.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்ம நந்தி என்பவர் அனேக பக்ஷங்களைப் பற்றி தெரிவிக்கின்றார். ஆனால் சாந்தோக்ய உபநிஷத்தில் ஆறுவது அத்யாயத்தில் விவர்த்தவாதம் என்பதையே சித்தாந்தமாக தெரிவிக்கின்றார். ஸர்வம் ஸதஸத்விலக்ஷணம் என்று தெரிவிக்கின்றார். பரமார்த்த தத்வம் என்ன என்பதை நிரூபணம் செய்கின்ற இடத்தில் ஸதஸதத்விலக்ஷணம் ஸர்வம் விவர்த்தம் என்று சித்தாந்தமாக தெரிவிக்கின்றதால் அதுவே ஸத்யம். ஏனெனில் அபாதிதமான அர்த்தத்தை போதிக்கின்றது. பரிணம வாதம் பின்னால் கண்டிக்கப்படுகிறது. அதனால் விவர்த்த வாதத்தையே அவரும் சித்தாந்தமாக தெரிவிக்கின்றார்.

**220.** அவதாரிகை : அவ்விதம் விவர்த்த வாதமே சித்தாந்தமாக இருக்கும் பக்ஷத்தில் பரிணம வாதத்தைப் பற்றி விஸ்த்தாரமாக விசாரிக்க வேண்டிய அவஸ்யம் என்ன ? என்றால்,

**ச்லோகம் :**

पूर्वं विकारमुपवर्ण्य शनैः शनैस्त-द्दृष्टिं विसृज्य निकटं परिगृह्य तस्मात् ।
सर्वं विकारमथ संव्यवहारमात्रमद्वैतमेव परिरक्षति वाक्यकारः

**ச்லோகார்த்தம் :** வ்யாக்யான கர்த்தாவானவர் முதலில் பரிணமவாதத்தை ப்ரதிபாதனம் செய்து அதன் பிறகு மெதுவாக அந்த த்ருஷ்டியை விட்டு அதற்கு ஸமீபமாக இருக்கின்ற விவர்த்தவாதத்தை ஆச்ரயித்து அதன் மூலம் ஸர்வகார்யங்களும் வ்யாவஹாரிகமே என்று சாதித்து அத்வைதம் என்பதை ரக்ஷிக்கின்றார்.

**வ்யாக்யானம் :** பரிணமவாதம் என்பது விவர்த்தவாதத்தை போதிப்பதற்கு உபகாரகமாக இருக்கிறது என்பதற்காக அதைப்பற்றி விளக்கப்பட்டிருக்கிறது. அதன் பிறகு அந்த வாதத்தை கண்டிக்கப்படுகிறது. அதாவது பரிணம வாதத்தில் பொருந்தாத விஷயங்களினால் ஏற்படும் தோஷங்களை தெரிவித்து, க்ரமேண அந்த பரிணமத்ருஷ்டியை விட்டு, அதற்குப் பின் விவர்த்தவாதத்தை சித்தாந்தமாக தெரிவிக்கின்றார். ஸர்வ வ்யவகாரமும் மித்யை என்றும் மாயாமயம் என்றும் (ப்ரஹமநந்தி) க்ரந்தக்காரரால் சொல்லப்படுகிறது. என்பதால் அத்வைதம் தான் தத்வம்

என்பதே அவருடைய சித்தாந்தம் என்றும் இதுவே அவருடைய தாத்பர்ய விஷயம் என்பதும் அறியப்படுகிறது.

**221.** அவதாரிகை : இவ்விதம் ப்ரஹ்மநந்தி என்பவரால் செய்யப்பட்ட சாந்தோக்ய உபநிஷத் பாஷ்யத்திற்கு வ்யாக்யானம் செய்த த்ரவிடாச் சாரியார் என்பவரும் இந்த விஷயம் பற்றி விஸ்தாரமாக விசாரித்திருக்கின்ருர் அவரும் விவர்த்தவாதம் தான் சரி என்று நிர்ணயம் செய்திருக்கின்ருர்.

ச்லோகம் :

अन्तर्गुणा भगवती परदेवतेति प्रत्यग्गुण(े)ति भगवानपि भाष्यकारः ।
आह स्म यत्तदिह निर्गुणवस्तुवादे संगच्छे न तु पुनः सगुणप्रवादे

ச்லோகார்த்தம் : த்ரவிடாசார்யரான பாஷ்யகாரர் பகவதி பரதேவதை அந்த ராத்மஸ்வரூபமாக, ப்ரத்யக்ரூபமாக இருக்கிறதென்று தெரிவிக்கிருர். இவ்விதம் சொல்லப்படும் விஷயம் நிர்க்குண வஸ்து வாதத்தில்தான் பொருந்துகிறது. ஸகுண வஸ்துவாதத்தில் பொருந்தாது.

வ்யாக்யானம் : அத்வைதம்தான் சித்தாந்தம் என்று ப்ரஹ்மநந்தியினுல் இயற்றப்பட்ட பாஷ்யத்தின் விஷயமும் இது பரிணும வாதமல்ல என்றே தெரிவிக்க்ப்படுகிறது என்று ப்ரஹ்மநந்திக்ரந்தத்திற்கு வ்யாக்யானம் செய்த த்ரவிடாச்சாரியாரால் இந்த விஷயம் விஸ்தாரமாக விளக்கப்பட்டிருக்கிறது. ‘ஸதேவஸௌம்ய இதமக்ரமாஸீத்’ என்ற வாக்யத்தினை விசாரிக்கப்படும் இடத்தில் சொல்லப்படும் பரதேவதை என்பது ஸர்வசரீரங்களிலும் ப்ரத்யக் ஸ்வரூபமாக இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. ப்ரத்யக்ஸ்வரூபத்தையே அந்தர் குணம் என்று சொல்லப்படுகிறது. (ஸத் என்று சொல்லப்படும் பரதேவதையே ஸர்வத்திலும் ப்ரத்யகாத்மாவாக இருக்கிறது என்றும், இவ்விதம் இருந்தபோதிலும், ஈக்ஷணுதிகார்யங்களையும், ஸர்வ விவகாரங்களையும் ஸ்வதந்தரமாக செய்யக்கூடிய ஸாமர்த்தயமுடையதாக இருக்கின்றது என்பதை தெரிவிக்கவே, பகவதி என்ற விசேஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. ஸ்வதந்தரம் என்ற தன்மையை தேவதா என்ற சப்தம் தெரிவிக்கின்றது. செய்ய முடியாத கார்யத்தையும் செய்யக்கூடிய ஸாமர்த்தயமுடையது என்பதையே தேவதாசப்தத்தினுல் போதிக்கப்படுகிறது. ஆகவே ‘ஸேயம் தேவதா’ என்று மாயாசக்தியே ஸர்வகார்யங்களையும் செய்கின்றது என்று பாஷ்யத்திற்கு வ்யாக்யானம் செய்த த்ரவிடாச்சாரியாரால் சொல்லப்பட்டிருக்கின்றது. அந்தர் குண பகவதி என்றும் பரதேவதை என்றும் சொல்லியிருக்கின்ருர். இவையெல்லாம்நிர்க்குண ப்ரஹ்ம ஸ்வரூபத்தை தெரிவிக்கின்ற வாதத்தில் தான்பொருந்துமேயன்றி மற்ற வாதங்களில் பொருந்தாது. பரதேவதையே ப்ரத்யக்ஸ்வரூபம் என்பது அத்வைத சித்தாந்தத்தில் தான் பொருந்தும்.

**222, 223.** அவதாரிகை : கார்யகாரணபாவம் என்பது அத்யந்தம் பின்னமாக இருக்கின்ற இரண்டுவஸ்துவிற்கோ, அத்யந்தம் அபின்னமாக இருக்கின்ற வஸ்துவிற்கோ, அல்லது பின்ன பின்னமான வஸ்துவிற்கோ சொல்லமுடியாது என்ற விஷயம் மேலே விளக்கப்படுகிறது.

ச்லோகம் : न खलु कारणकार्यसमन्वयोभवति जातुचिदत्र विभिन्नयोः ।
किमिह सागरसह्यसमाश्रयोः भवति कारणकार्यसमन्वयः
न च तथाऽयमभिन्नसमाश्रयो भवितुमुत्सहतेऽनभिवीक्षणात् ।
न हि घटो विदधाति घटं क्वचिन्न च पटः पटमित्थमनीक्षणात्

ச்லோகார்த்தம் : இந்த உலகத்தில் வெவ்வேருக இருக்கின்ற இரண்டு வஸ்துவிற்கு கார்யகாரண ஸம்பந்தம் என்பது ஒருபோதும் சொல்லமுடியாது. ஸமுத்ரத்திற்கும் ஸஹ்யபர்வதத்திற்கும் கார்யகாரண ஸம்பந்தம் இருக்கின்றதா என்ன ? அதேபோல் அபின்னமான வஸ்துவிற்கும் கார்யகாரண ஸம்பந்தம் சொல்லமுடியாது. ஏனெனில் கடம் என்பது கடத்தையோ, படம் என்பது படத்தையோ உண்டு பண்ணுகின்றதாக ஒருபோதும் அறியப்படவில்லை.

வ்யாக்யானம் : அத்யந்தம் பின்னமாக இருக்கின்ற இரண்டு வஸ்துவிற்கு கார்யம காரண பாவம் சொல்லப்படுமானுல், ஸமுத்ரத்திற்கும் மலைக்கும் கார்ய காரண ஸம்பந்தம் சொல்லப்படுவது எவ்விதம் பொருந்துமோ அது போலாகும். அதே போல் அத்யந்தம் அபின்னமான வஸ்துவிற்கும் கார்யகாரண பாவம் சொல்லமுடியாது. ஏனெனில்அபேதமான (அபின்னமான) வஸ்து அதுவே காரணமாகவும் அதுவே கார்யமாகவும் இருக்கின்றதாக லோகத்தில் ஓரிடத்திலும் அறியப்படவில்லை. கடம் கடத்தையோ, படம் படத்தையோ உண்டுபண்ணுவதில்லை.

**224.** அவதாரிகை : காரணம் என்பது கார்யத்தை உண்டுபண்ணுகிறது என்று சொல்லப்படுமானுல், அந்த காரணத்தில் கார்யத்தை உண்டு பண்ணக் கூடியசக்தி இருக்கிறதா இல்லையா ? (குர்வத் ரூபமான) கார்யத்தை உண்டுபண்ணக் கூடிய சக்தி உடைய காரணமே, கார்யத்தை உண்டு பண்ணுகிறது என்று சொல்லப்படுமானுல் அதனுல் என்ன தோஷம் ஏற்படும் என்பதை விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

कुर्वत्कारणपक्षमाश्रितवतः कुर्वच्च कुर्वत्कृतं तत्कुर्वच्च तथाविधान्यकृतमित्येषाऽनवस्था भवेत् ।
कुर्वद्रूपमकार्यमिष्टमिति चेन्नित्यं जगज्जायतां नित्यं मा जनि वा विशेषविरहादेतत्समस्तं जगत्

ச்லோகார்த்தம் : குர்வத் காரணம் என்ற பக்ஷத்தை ஆச்ரயிக்கப்படுமானுல் ப்ரவ்ருத்தி என்பது, ப்ரவ்ருத்திக்கின்ற காரணத்திலிருந்து ஏற்படுகிறது என்ருகும். காரணத்தில் இருக்கின்ற அந்த ப்ரவ்ருத்தியும் ப்ரவ்ருத்திக்கின்ற வேருெரு காரணத்திலிருந்து ஏற்படுகிறது என்ருகும். இவ்விதம் சொல்லப்படுமானுல் அனவஸ்தா தோஷம் ஸம்பவிக்கும். காரணத்திலுள்ள ப்ரவ்ருத்தி என்பது அகார்யம் என்று ஒத்துக்கொள்ளப்படுமானுல் ஜகத் என்பது ஸர்வதா உற்பத்தி ஆகிக்கொண்டே இருக்கிறது என்ருே அல்லது எப்போதும் உற்பத்தி ஆகாமலேயே இருக்கின்றதென்ருே சொல்ல நேரிடும். ஏனெனில் உற்பத்தியாவதற்கு விசேஷ காரணம் ஏதுமில்லை.

வ்யாக்யானம் : குர்வத் ரூபமான காரணமே கார்யத்தை உண்டுபண்ணுகிறது என்று சொல்லப்படுமானுல், அந்த காரணத்திற்கு எப்படி அந்த சக்தி ஏற்பட்டது என்று விசாரிக்கப்படுமானுல் அனவஸ்த்தை முதலானதோஷங்கள் ஸம்பவிக்கும். அதற்கு

பரிகாரமே கிடையாது. அதற்காக காரணத்தில் அந்த சக்தி இல்லையென்று சொல்லப்படுமானல் எந்த காரணத்திலிருந்து எந்த கார்யம் உண்டாகிறது என்று நியமமாகச் சொல்லமுடியாது. அதற்காக அந்த சக்தி என்பது கார்யமல்லவென்றும் நித்யம் என்றும் சொல்லப்படுமானல் கார்ய உற்பத்தி என்பது நித்யமாக ஸர்வதா உண்டாகிக்கொண்டே இருக்கும். ப்ரளயம் என்பதே ஏற்படாது. காரணத்தில் கார்யத்தை உண்டு பண்ணக்கூடிய சக்தி இருக்கிறதென்றும், ஆனல் அது கார்யத்தை உண்டு பண்ணது என்று சொல்லப்படுமானல் ஜகத் என்பதே இருக்க முடியாது. அதனல் சக்தி இருக்கிறது ஆனல் கார்யம் உண்டுபண்ணப்படுவதில்லை என்று சொல்வதற்கு முடியாது.

**225.** அவதாரிகை : காரணம் என்பது (அகுர்வத்ரூபம்) கார்யத்தை உண்டு பண்ணக்கூடிய சக்தி உடையது அல்ல என்று சொல்லப்படுமானல் அதிலும் தோஷம் ஸம்பவிக்கின்றது.

ச்லோகம் :

सर्वं सर्वसमुद्भवाय घटते कुर्वन्न चेत्कारणं न ह्यस्मिन्क्वचिदस्ति कस्यचिदपि व्यापारवत्ता यतः ।
तस्मात्कारणकार्यतादि सकलं मायामयं तत्त्वतो नाऽऽसीदस्ति भविष्यतीति सकलं चैतन्यशेषं जगत्

ச்லோகார்த்தம் : ப்ரவ்ருத்தியுடைய வஸ்து காரணமில்லை என்று சொல்லப்படுமானல், எல்லா வஸ்துக்களும், எல்லா வஸ்துக்களையும் உற்பத்தி செய்வதற்கு தகுதி உடையதாக ஆகிறது. ஏனெனில் இந்த பக்ஷத்தில் எக்காலத்திலும் எந்த வஸ்துவிலும் வ்யாபாரம் என்பதே கிடையாது. ஆகையால் காரணம் கார்யம் என்ற எல்லாமே மாயாமயமேயாகும். உண்மையில் சைதன்ய அதிஷ்ட்டானமாக இருக்கின்ற ஸமஸ்த்தப்ரபஞ்சமும் இருக்கவுமில்லை இருப்பதும் இல்லை. இனி இருக்கப் போவதும் இல்லை.

வ்யாக்யானம் : காரணம் என்பது அகுர்வத்ரூபம் என்று சொல்லப்படுமானல் அகுர்வத்ரூபமான காரணம் கார்ய ஜனகம் என்று சொல்லமுடியாது. மேலும், எந்த வஸ்துவிலிருந்தும் எதுவும் உண்டாகலாம் என்ற நிலை ஏற்படும். அல்லது எதிலிருந்து எதுவும் உண்டாகாது என்ற நிலை ஏற்படும். இந்த வஸ்து உண்டாவதற்கு இதுவே காரணம், இது அதன் கார்யம் என்ற வ்யவஸ்த்தையே இருக்க முடியாது. இதை நிர்ணயம் செய்யக்கூடிய ப்ரமாணமும் கிடையாது. அதனல் ஸர்வம் அஞ்ஞான கல்பிதம் என்று ஸர்வமும் ப்ரஹ்மத்தில் ஆரோபிதம் என்றே சித்தம் செய்யப்படுகிறது. மாயாமயம் - 'யதஸத்பாசமானம் தந்மித்யா' என்று சொல்லப்பட்டபடி விசாரிக்கின்றபோது இன்னதென்று நிச்சயம் செய்து அறியமுடியாது. ஆனல் தோன்றுகிறது. அதனல்தான் ஸதஸத்விலக்ஷணம் மித்யை என்று சித்திக்கின்றது.

**226.227.** அவதாரிகை : அகுர்வத்ரூபகாரணமாக இருந்தபோதிலும் சிலகாரணங்களில் சில சக்திகள் இருக்கிறது. அந்த சக்த ரூபமான காரணமே கார்யத்தை உண்டு பண்ணுகின்றது என்று சொல்லப்படுமானல் அவ்யவஸ்த்தை என்பது இருக்காது என்று சொல்லலாமே ? என்ருல்,

ச்லோகம் : सकलशक्तिविकल्पनयाऽन्वये सकलशक्यविकल्पनयाऽन्वयः ।
सकलशक्यविकल्पनयाऽन्वये सकलशक्तिविकल्पनयाऽन्वयः
इति परस्परसंश्रयता यदा वद कथं जगतः परमार्थता ।
यदि पुनर्जगतोऽपरमार्थता परममस्ति पदं परमात्मनः

ச்லோகார்த்தம் : ஸர்வ காரணங்களிலும் சக்தியை கல்பித்து அதனுடன் ஸம்பந்தத்தை ஸ்தாபிக்கின்றதனுல் கார்யங்களே கல்ப்பித்து அதனுடன் ஸம்பந்தத்தை ஸ்தாபிக்கமுடியும். இவ்விதம் கார்யங்களே கல்பித்து அதனுடன் ஸம்பந்தத்தை சாதிக்கப்படுவதனுல் சக்தியை கல்பித்து அதனுடன் ஸம்பந்ததை சாதிக்கமுடியும். ஆகவே இவ்விதம் அன்யோன்ய ஆச்ரய தோஷம் இருக்கின்ற போது ஜகத் என்பது எப்படி பரமார்த்தமாக இருக்கமுடியும். அதனுல் ஜகத் என்பது அபரமார்த்தம் என்று சித்திக்குமானுல் சுத்த ஸ்வரூபமே இருக்கின்றது.

வ்யாக்யானம் : எந்த காரணத்திலிருந்து எந்த கார்யம் உண்டாகிறது என்று தீர்மானிக்கப்பட்டால்தான், இந்த கார்யத்தை உண்டு பண்ணக்கூடிய சக்தி இந்த காரணத்தில் இருக்கின்றது என்று நியமனம் செய்யலாம். அதேபோல் இந்த காரணத்தில் இந்த கார்யத்தை உண்டு பண்ணக்கூடிய சக்திதான் இருக்கிறது என்று தீர்மானிக்கப்பட்டால்தான், மற்ற காரணத்தில் அந்த சக்தி இல்லையென்று தீர்மானிக்கலாம். இவ்விதம் ஒன்றை ஒன்று எதிர்பார்க்கின்றதால் கார்யம் என்பது தத்வம் (தாத்விகம்) என்று சொல்லமுடியாது. ஆகவே, சக்தம் இன்னதென்று தீர்மானிக்கப்பட்டால்தான் அதிலுள்ள சக்தி இன்னதென்று தீர்மானிக்கலாம். அதனுல் இந்த ஜகத் என்பது மித்யை என்றே சித்திக்கின்றது. இவ்விதம் ஜகத் என்பது கல்பிதம் என்று சித்திக்குமானுல் அதன் ஸம்பந்தம் என்பதும் ப்ரஹ்மத்திற்கு பரமார்த்தமாக இருக்க முடியாது. இதுவரை விசாரிக்கப்பட்ட விஷயத்திலிருந்து சுத்த ஸ்வரூபமான பரமாத்மஸ்வரூபம் ஒன்றே பரமார்த்தம் அதுவே தத்வம் என்பது சித்திக்கின்றது.

**228.** அவதாரிகை : ப்ரபஞ்சம் அவித்யாகார்யம் என்று சித்தம் செய்யப்பட்டது. இந்த விஷயத்தில் வேறு சிலர் அபிப்ருயம் என்னவென்பதை தெரிவிக்கப்படுகிறது.

ச்லோகம் :

चिच्छक्तिः परमेश्वरस्य विमला चैतन्यमेवोच्यतेसत्यैवास्य जडा परा भगवतः शक्तिस्त्वविद्योच्यते ।
संसर्गाच्च मिथस्तयोर्भगवतः शक्त्योर्जगज्जायतेऽसच्छक्त्या सविकारया भगवतश्चिच्छक्तिरुद्रिच्यते

ச்லோகார்த்தம் : பரமேச்வரனுடைய சைதன்யமே சித்சக்தி என்று சொல்லப்படுகிறது. இது சுத்தமாகவும், ஸத்யமாகவும், இருக்கிறது. இந்த பரமேச்வரனுடைய மற்றொரு சக்தியே அவித்யை என்று சொல்லப்படுகிறது. இது ஜடம். பரமேச்வரனின் இந்த இரண்டு சக்திகளுடைய ஸம்பந்தத்தினுல் ஜகத் உற்பத்தியாகிறது. ஸவிகாரமான அஸத்சக்தியின் ஸம்பந்தத்தினுல் பரமேச்வரனின் சித்சக்தியானது பரிணமத்தை அடைகிறது.

வ்யாக்யானம் : ப்ரஹ்மத்தினிடம் ஒரு சக்தி இருக்கிறதென்பதை அத்வைத மதத்தில் ஒப்புக் கொண்டபோதிலும் அந்த சக்தி மித்யை என்றே சொல்லப்படுகிறது.

ஆனுல் ஒரு சிலர் இதை ஒப்புக் கொள்ளாமல், அந்த சக்தி மித்யையல்ல என்றும், அந்த சக்தியுடன் கூடியதுதான் ப்ரஹ்மமென்றும், ஆனுல் அது ஜடசக்தியாக இருப்பதால் அநித்யம் என்றும் சொல்கிருர்கள். அநித்யமாக இருந்தாலும் அதை மித்யயைஎன்று சொல்வதை ஒப்புக்கொள்வதில்லே.

அதாவது பரமேச்வரனிடத்தில் சிற்சக்தி என்றும் ஜடசக்தி என்றும் இரண்டுவித சக்திகள் இருக்கிறது. இதில் சைதன்யமான சிற்சக்தி என்பதற்குஷட்பாவ விகாரம் என்பது கிடையாது. விமலஸ்வரூபம் இதுவே ப்ரஹ்மஸ்வரூபம் இது ஸத்யம் அவ்யபிசரிதமாக இருக்கிறது. மற்றெரு சக்தியை அவித்யை என்றும் ஜடசக்திஎன்றும் சொல்லப்படுகிறது. அந்தசக்தி அந்ருதம். இந்தசக்திகள் ஒன்றுடன் ஒன்றுஸம்பந்தப்படுகின்றபோது தாதாத்ம்ய அத்யாஸத்திஞல் ஜகத் என்பது உண்டாகிறது. அநித்யமான இந்த சக்தி விகாரத்தை அடையக்கூடியது என்பதால் சித்ஜடசக்தி ஸம்பந்தம் ஏற்படும்போது கார்யாகாரமாக பரிணுமத்தை அடைகிறது. ஜடசக்திஸ்வயமே பரிணுமத்தை அடையமுடியாது. ஆகவே இந்தவிதம் சித்சக்தி ஜகதாத்மனு விவர்த்தமாக உண்டாகிறது என்பதையே ஜகத் உற்பத்தி என்று சொல்லப்படுகிறது என்று சொல்கிருர்கள்.

**229.** அவதாரிகை : அவர்களால் சொல்லப்படுவதை அனுவாதம் செய்து அந்தபக்ஷத்திலுள்ள தோஷம் என்னவென்பதை விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

इत्येवं कथयन्ति केचिदपरे श्रद्धालवस्तत्पुनः कस्यां चिद्भुवि संमतं च विदुषां नेष्टं तु भूम्यन्तरे ।
कर्मोपास्तिविधानभूमिषु तथा तत्संमतं निर्गुणे तत्त्वे तत्परवेदवाक्यविषये त्वालोचिते नेष्यते ॥

ச்லோகார்த்தம் : ச்ரத்தையுடைய சிலரால் இவ்விதம் சொல்லப்படுகிறது. இந்த மதம் சில இடங்களில் ஒத்துக்கொள்ளக்கூடியதாக இருக்கின்றதால் வித்வான்களுக்கு அந்த இடம் மட்டும் அவர்களுக்கு ஸம்மதமாகவும், வேறு சில இடங்கள் ஸம்மதம் இல்லாமலும் இருக்கிறது. கர்மா, உபாஸனம் இவைகளை விதிக்கின்ற இடத்தில் மட்டும் இந்தமதத்தை ஒத்துக்கொள்ளப்படுகிறது. ஆனுல் நிர்க்குணப்ரஹ்மதத்வத்தை தாத்பர்யத்துடன் போதிக்கின்ற வேதாந்த வாக்யங்களை விசாரிக்கின்ற விஷயத்தில் இந்த மதம் ஒத்துக்கொள்ளப்படுவதில்லே.

வ்யாக்யானம் : இந்த ச்லோகாத்திற்குமுன் ச்லோகத்துடன் ஸம்பந்தம் இருக்கிறது. இவ்விதம் சொல்பவர்கள், 'ஸச்சத்யச்சாபவதி நிருக்தஞ்சாநிருக்தஞ்ச' என்பது போன்ற உபநிஷத்வாக்யங்களில் மிகுந்தச்ரத்தைஉடையவர்கள் என்பதை 'ச்ரத்தானவை' என்று ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் சாஸ்திரத்தில் ச்ரத்தையுடைவர்களால் சொல்லப்படும் விஷயமாக இருக்கின்றதால் அதை முற்றிலும் சரியல்ல என்று தள்ள முடியாது. ஆகவே, விவகாரதசையில் கர்மா, உபாஸனம் முதலானவைகளே விதிக்கின்றதால் அந்த நிலேயில் பரிணுமவாதத்தைப்பற்றி சொல்லப்படுவதை ஒப்புக்கொள்ளலாம். ஆனுல் வேதாந்த வாக்ய விசாரம் செய்கின்ற நிலேயில் நிர்க்குணமானதத்வம் நிர்விசேஷம் என்று தெரிவிக்க வேண்டும் என்பதால் விவர்த்த வாதத்தை அனுசரித்தே சொல்லப்படவேண்டும். வேதாந்தம் தாத்பர்யத்துடன்

தெரிவிக்கின்றது எதுவோ அதுவே முக்ய ப்ரமாணம். அதனுல் வேதாந்த வாக்யங்கள் மூலம் தத்வம் நிர்க்குணம் நிர்விசேஷம் என்று சித்தாந்தம் செய்யப்படுகின்றபோது அந்த வாக்யங்களே நிராகரித்து ப்ரஹ்மமென்பது 'சக்திமத்' சக்தியுடன் கூடியது என்று சொல்வதற்கு இடமே கிடையாது.

**230.** அவதாரிகை : வேதாந்த விசாரித்தினுல் எப்படி நிர்ணயம் செய்யப்படுகிறது?

ச்லோகம் :

मूर्तामूर्ततदुत्थलिङ्गपुरुषव्यामिश्रभूता चितिर्वीप्सापूर्वकनेतिनेतिवचनप्रध्वस्तसर्वद्वया ।
संपूर्णे परमे सुखे परिहृताशेषाशिवे शाश्वते सत्ये शुद्धमहिम्नि तायिनी परे भूम्न्यक्षरे तिष्ठति ॥

ச்லோகார்த்தம் : மூர்த்தா மூர்த்தப்ரபஞ்சங்களிலிருந்து உண்டான ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களுடன் கூடிய சைதன்யம் என்பது அடிக்கடி சொல்லப்படுகின்ற நேதிநேதி என்ற வாக்யத்தினுல் ஸர்வத்வைதமும் நிவர்த்திக்கப்பட்டு ஸம்பூர்ண பரமானந்தமானதும் ஸர்வ துக்கங்கள் அற்றதும் சாஸ்வதமானதும் ஸத்யமானதும், அத்யந்தம் மஹத்தானதும் நாசமற்றதுமான ப்ரஹ்மத்தில் விச்ராந்தி அடைகின்றது.

வ்யாக்யானம் : சைதன்ய லக்ஷண சக்தி என்பதை பரிணும த்ருஷ்டியைக் கொண்டேனும் எப்படி அங்கீகரிக்க முடியும்? அவ்விதம் ஒத்துக் கொள்ளப்படுமாஞல் விவர்த்த த்ருஷ்டியைக் கொண்டு பரிணும த்ருஷ்டியை ஒத்துக்கொள்ள முடியாது என்று சொல்வது எப்படி பொருந்தும்? அவ்விதம் சொல்லப்படுமாஞல் சித்சக்தி என்பதே மித்யை என்ருகுமே? என்ருல்

சைதன்யத்தில் ஆரோபிதமான அந்த சக்திமித்யை என்பதற்காக அதிஷ்ட்டான ரூபமான சித்ஸ்வரூபத்திற்கு மித்யாத்வம் சொல்லமுடியாது. அதிஷ்ட்டான ஸ்வரூபம் என்பதே ஸத்யமாய் எஞ்சிநிற்கும். ப்ருதிவி, அப்பு, தேஜஸ் என்ற மூர்த்தமான பூதங்கள் ஆகாசம், வாயு என்ற அமூர்த்தமான பூதங்கள். என்று சொல்லப்படும் மூர்த்தா மூர்த்தம் என்ற ஸர்வமும், லிங்கசரீரம், வாஸனுமயத்துடன் கூடிய ஸ்தூலசரீரங்களுடன் கூடிய ஜீவன் என்பவைகள் எல்லாமே சைதன்யத்துடன் கலந்து ஏற்படும் தாதாத்ம்ய அத்யாஸத்தினுல் சரீராதிகளில் ப்ரவேசிக்கின்றதால் ஜீவ பாவம் ஏற்படுகிறது. இந்தவிதம் அத்யாஸம் ஏற்பட ஆஸ்பதமாக இருக்கின்ற சித் என்பது உண்மையில் ப்ரஹ்மஸ்வரூபந்தான். ஆனுல் உபாதி வஸாத் ப்ரஹ்மத்தையன்றி வேருக இருக்கின்ற ஒரு சக்தி போல் தோன்றுகிறது. இதையே உபநிஷத் வாக்யங்கள் 'த்வே வாவெள ப்ரஹ்மண ரூபேமூர்த்தஞ்சஅமூர்த்தஞ்ச' என்று பரிணும வாதத்தை அனுசரித்து ஸர்வத்தையும் ப்ரஹ்மத்தில் ஆரோபிதம் செய்தபிறகு, 'அதாதோ ஆதேச நேதி நேதி என்று அடிக்கடிஅவைகளே இல்லையென்று நிஷேதம் செய்கின்றது. அதனுல் ஸர்வ உபாதிகளேயும் நிஷேதம் செய்த பிறகு ஸத்வைதமாக அறியப்பட்ட ப்ரஹ்மமானது ஸ்வஸ்வரூபமான ஸம்பூர்ணமான ஸ்வரூபத்தில் ப்ரகாசிக்கின்றது. அதுவே ஸம்பூர்ணசுகம். அபரிச்சின்னசுகம். அவித்யை, அதன்கார்யம் என்பதெல்லாம் அசிவரூபம். ப்ரஹ்மஸ்ரூபத்தில் அத்யஸ்தமான ஸர்வமும் த்வம்ஸம் செய்யப்பட்டதால், ஸாச்வதமான நிர்விகாரஸ்வரூபம் என்பது நித்யசுத்தம், நித்யஸத்ரூபம் ஸ்வமஹிமையினுல் எதையும் அபேக்ஷிக்காமல் எவ்வித பரிச்சேதமும் அற்றதாக நிரங்குசமாக எங்கும் வ்யாபக

இருக்கின்றது. அதனுல் அத்யஸ்த்தமான சக்தியின் தர்மங்கள் எதுவும் அற்ற ஸ்வரூபம். நாமாதிகளை காட்டிலும் வேறுபட்டதான பூம வஸ்து (ப்ரஹ்மஸ்துவினை) வை அக்ஷரஸ்வரூபமாக வர்ணிக்கப்படுகிறது. ஆகையால் சக்தி என்றும் சக்தி உள்ளது என்றும் விவகாரம் செய்யப்பட்டபோதிலும், வித்யாவஸ்த்தையில், அவித்யையோ அதன் கார்யங்களோ எதுவுமே மிஞ்சுவதில்லை. சித்சக்தி என்பது ஆத்மஸ்வரூபமாகவே இருக்கின்றதால், விவகாரதசையில் இருப்பது போல் பரிணுமதர்மம் இருப்பதாகச் சொல்லமுடியாது. ஸத்யமாக, நித்யமாக, கூடஸ்த்தமாக இருக்கின்ற சிதாத்மஸ்வரூபம் பரிணுமத்தை அடைவதாகச் சொல்வது ப்ரமமேயன்றி உண்மையென்று சொல்லமுடியாது.

**231.** அவதாரிகை : இவ்விதம் சொல்லப்பட்ட காரணங்களினுல் ஜகத் என்பது பரமார்த்தமில்லையென்று நிரூபிக்கப்பட்டது. மேலும் இந்த ஜகத் என்பது எதனுல் ப்ரகாசிக்கிறது என்றே நிரூபணம் செய்யமுடியாததால் மாயாமயம் ஜகத் என்றே சித்திக்கின்றது.

ச்லோகம் :

जगन्महिम्ना न जगत्प्रसिद्धिर्न चिन्महिम्नाऽपि जगत्प्रसिद्धिः ।

न च प्रमाणाज्जगतः प्रसिद्धिस्ततोऽस्य मायामयताप्रसिद्धिः

ச்லோகார்த்தம் : ஜடமான ஜகத்தின் ஸாமர்த்யத்தினுல் ஜகத்சித்திப்பதில்லை. சித்தினுடைய ஸாமர்த்யத்தினுலும் ஜகத் சித்திப்பதில்லை. ப்ரமாணத்தினுல் ஜகத் சித்திப்பதில்லை. ஆகையால் ஜகத்தினுடைய மாயாமயத்வமே சித்திக்கின்றது.

வ்யாக்யானம் : த்வைதம் மித்யை என்பதை தெரிவிக்க யுக்தியைக் கொண்டு வேருெருகாரணமும் சொல்லப்படுகிறது. ஜடமான இந்தஜகத் என்பது ஸ்வயமே ப்ரகாசிக்கின்றதென்ரே, சித் ஸ்வரூபத்தினுல் ப்ரகாசிக்கிறதென்ரே, ப்ரமாணத்தினுல் ப்ரகாசிக்கிறதென்ரே சொல்லமுடியாது.

**232.** அவதாரிகை : இவ்விதம் மூன்று விதமாகவும் ப்ரகாசிக்கமுடியாது என்று சொல்வதற்கு காரணம் என்ன என்ருல்,

ச்லோகம் :

जडत्वहेतोर्न· जगन्महिम्ना न चिन्महिम्ना तदसङ्गभावात् ।

न च प्रमाणात्तदकारकत्त्वात्कृतस्य जाड्यादजडा जनेश्च

ச்லோகார்த்தம் : ஜகத்தின் ஸாமர்த்யத்தினுல் ஜகத்சித்திப்பதில்லை. ஏனெனில் அதுஜடம். சித்தினுடைய ஸாமர்த்யத்தினுலும் ஜகத்சித்திப்பதில்லை. ஏனெனில் அது அஸங்கமாக இருக்கின்றது. ப்ரமாணங்களினுல் ஜகத் சித்திப்பதில்லை. ஏனெனில் அவைகள் அகாரகமாக இருக்கின்றது. அவைகள் எதையும் உண்டுபண்ணக்கூடிய தன்மையில் இல்லை. கார்யம் என்பதுஜடம், ஞானம் என்து அஜடம். (அஜடஸம்வித்திற்கு உற்பத்தி கிடையாது) அகார்யமாகவும் இருக்கிறது.

வ்யாக்யானம் : ஜகத் என்பது ஸ்வயமே ப்ரகாசிக்கின்றது என்று சொல்லப்படுமானுல் ஜகத் என்பது ஜடம் என்று சொல்வது பொருந்தாது. அதே போல் இது சேதனம், இது

அசேதனம் என்ற பேத விவகாரமோ, இது ப்ரமாணம் இது ப்ரமேயம் என்ற விவகாரமோ இருக்கமுடியாது. ஏனெனில் ஸ்வயம் ப்ரகாசம் ஜகத் என்ருல் ஜகத் என்பதும் சைதன்யம், ப்ரஹ்ம மென்பதும் சைதன்யம், என்று சொல்லவேண்டும். அதனுல் ஜடாஜட விவகாரம் என்பதே இருக்கமுடியாது சித்ஸ்வரூபம் அஸங்கம் என்பதால், அதன்ஸம்பந்தத்தினுல் ஜகத் என்பது ஜடம், அத்யஸ்த்தம் என்று சொன்னுல்தான், சித்ப்ரகாஸ ஸம்பந்தம் சொல்லமுடியும். மேலும் ஜகத் என்பதை உண்டாக்கக்கூடிய ஸம்வித் என்பது ப்ரமாணத்தினுல் உண்டாகிறது என்று சொல்லப்படுமானுல் அதை ஸம்வித் என்றே சொல்லமுடியாது. எதுகார்யமோ அதுஜடம் என்ற நியமத்தின்படி ஸம்வித் உண்டாகிறது என்ருல் அதுஸம்வித் என்றே சொல்லமுடியாது. உற்பத்தி இருந்தால் அது ஸம்வித்தாக இருக்கமுடியாது. ஜடமென்றே சொல்லநேரிடும்.

**233.** அவதாரிகை : ஜகத் என்பது ஜடமாக இருந்தபோதிலும், ஆத்ம ஸம்பந்தத்தினுல் ப்ரகாசிக்கின்றது என்று சொல்லலாமே? என்ருல், ஜடமான ஜகத்திற்கும் சித்ரூபமான ஆத்மஸ்வரூபத்திற்கும் தாதாத்ம்யஸம்பந்தமா? ஸம்யோக ஸம்பந்தமா? அல்லது ஸமவாய ஸம்பந்தமா? என்னஸம்பந்தம் சொல்லமுடியும்?

ச்லோகம் :

न संकरो नापि च संयुतिस्तयोर्न चास्ति तद्वत्समवायसंभवः ।
ततो न चिच्चोत्यसमन्वयं प्रति प्रतीयते का च न मूलसंगतिः

ச்லோகார்த்தம் : சித்திற்கும் ஜடத்திற்கும் தாதாத்ம்ய ஸம்பந்தம் என்பதோ, ஸம்யோக ஸம்பந்தம் என்பதோ அல்லது ஸமவாய ஸம்பந்தம் என்பதோ கிடையாது. ஆகையால் சித்திற்கும் ஜடத்திற்கும் எந்த விதமான மூலஸம்பந்தமும் அறியப்படவில்லை.

வ்யாக்யானம் : ப்ரமாணத்திலிருந்து ஜடமான ஜகத்தை ப்ரகாசப்படுத்தக்கூடிய ஸம்வித் என்பது உண்டாக முடியாது என்பதை முன் ச்லோகத்தில் சொல்லப்பட்டது. அவ்விதமே ஜகத் என்பது சித்தினுல் ப்ரகாசப்படுத்தப்படுகிறது என்பதை ஒத்துக் கொண்டபோதிலும், அவை இரண்டிற்கும் ஸம்பந்தம் சொல்லப்படவேண்டுமே? என்னஸம்பந்தம் சொல்லமுடியும்?

1. ஜடம், அஜடம் என்ற இரண்டும் ஒன்றுக்கொன்றுதமஸ், ப்ரகாசம் என்ற இரண்டிற்கும் எப்படி விரோதமோ அதுபோல் விருத்த ஸ்வ்பாவமுள்ளதாக இருப்பதால் தாதாத்ம்ய ஸம்பந்தம் சொல்லமுடியாது.

2. இரண்டு வஸ்துக்கள் உண்மையாக இருக்குமிடத்தில்தான் ஸம்யோக ஸம்பந்தம் ஸம்பவிக்கமுடியும். வஸ்து அத்வயம் என்பதால் இரண்டாவது வஸ்து என்பதே இல்லாததால் ஸம்யோக ஸம்பந்தம் சொல்லமுடியாது. மேலும் இரண்டு த்ரவ்யங்களுக்கே ஸம்பந்தம் ஏற்படமுடியும். ஆத்மாத்ரவ்யமல்ல. ரூபம் என்பது த்ரவ்யமல்ல, த்ரவ்யத்திற்கும் குணத்திற்கும் எப்படி ஸம்யோகஸம்பந்தம் சொல்லமுடியாதோ அதேபோல் இதற்கும் சொல்லமுடியாது.

3. ஆத்மாவிற்கும் விஷயத்திற்கும் ஸமவாயஸம் பந்தமும் சொல்லமுடியாது. ஏனெனில் ஆத்மா அஸங்கம் என்பதால் ஆத்மாவிற்கும் அனுத்மாவிற்கும் ஸமவாய

ஸம்பந்தம் சொல்லமுடியாது. ம்ருத்திற்கும் கடத்திற்கும் ஸமவாயஸம் பந்தம் சொல்லலாம். ஜடமான விஷயம், சித்ஸ்வரூபமான விஷயீ இரண்டிற்கும் நிரூப்யநிரூபக பாவஸம்பந்தம் என்பதும் மூலஸம்பந்தமில்லாமல் சொல்லமுடியாது.

**234.** அவதாரிகை : ஸம்பந்தமில்லே யென்றுலும், ஸம்பந்த யோக்யதை இருக்கிறதென்று சொல்லலாமே ?

ச்லோகம் :

न योग्यतामात्रनिबन्धनो भवेज्जडात्मनोरत्र विवक्षितोऽन्वयः ।
तदा हि तस्या अनपायरूपतः सदाऽऽत्मनः स्यादनपायसंसृतिः

ச்லோகார்த்தம் : சித்திற்கும் ஜடத்திற்கும் யோக்யதையை முன்னிட்டு இங்கு விவக்ஷிதமான விஷய விஷயீ பாவ ஸம்பந்தம் என்பதும் ஸம்பவிக்காது. அவ்விதம் ஏற்படுமானல் ஸதாத்மாவிற்கு நிச்சயமாகவே ஸம்ஸாரம் என்பது ஏற்படும். ஏனெனில் அந்த யோக்யதை என்பதும் நித்யமாகவே இருக்கிறது.

வ்யாக்யானம் : சித்ரூபமான ஆத்மாவிற்கு ஜடரூபமான ஜகத்திற்கும் விஷய விஷயீ பாவஸம்பந்த யோக்யதை இருக்கிறதென்று சொல்லப்படுவதால்என்ன தோஷம் ஸம்பவிக்கிறது ? என்றுல் அநிர்மோக்ஷ ப்ரஸங்கம் ஏற்படும். ஸம்பந்தம் என்பது ஒரு ஸமயம் இருக்கலாம் மற்றெரு ஸமயம் இல்லாமல் இருக்கலாம். ஆனுல் யோக்யதை என்பது நித்யமாகத்தான் இருக்கவேண்டும். அதனுல் ஒருபோதும்ஸம்ஸாரம் என்பதே நிவர்த்திக்கமுடியாது.

**235.** அவதாரிகை : இந்தவிதம் ப்ரபஞ்சத்திற்கும் அஸங்கமான சைதன்யத்திற்கும் ஸம்பந்தம் என்பதே இருக்கமுடியாததால் ப்ரபஞ்சம் எதனுலும் சித்திக்கமுடியாது என்று சொல்லப்படுமானுல் வேதாந்திகளான உங்களுக்கும் இந்த ஸம்பந்தம் நிரூபணம் செய்யமுடியாததால் ப்ரபஞ்சம் என்பது எப்படி சித்திப்பதாகச் சொல்லமுடியும் ? என்றுல்.

ச்லோகம் :

अतो वियन्मुख्यमदो जगज्जडंचिदात्मनोऽस्यैव विवर्त इष्यताम् ।
अनाद्यविद्यापटसंवृतात्मनस्तदोपलभ्यत्वममुष्य कल्पते

ச்லோகார்த்தம் : ஆகையால் ஜடமான ஆகாசம் முதலான இந்த ப்ரபஞ்சம் அனுதி அவித்யை என்ற வஸ்திரத்திஞல் மறைக்கப்பட்ட சிதாத்மாவின் விவர்த்தம் என்றே ஒத்துக்கொள்ளப்பட வேண்டும். சேதனத்தின் விவர்த்தம் என்று சொல்லப்பட்டால்தான் (இந்த ப்ரபஞ்சம் அறியப்படுகிறது என்ற) அனுபவம் பொருந்தும். (அறியப்படும் தன்மைகல்பிதம்)

வ்யாக்யானம் : த்ருக்ஸ்வரூபமான ஆத்மாவிற்கும், த்ருச்யமான இந்த ஜகத்திற்கும் அவித்யையினுல் ஏற்பட்ட ஆத்யாஸிகஸம்பந்தம் இருக்கின்றதால் ஜகத் ப்ரதீதி ஏற்படலாம். விவகார தசையில் அறியப்படும் ஜகத், சித் ஆவாரகமான அஞ்ஞானத்திஞல் ஆரோபிதம் என்று சொல்லப்படுவதால் மித்யாபூதமான தாதாத்ம்யஸ்பந்தம் ஏற்படலாம்

என்று சொல்லப்படுவதால், வேதாந்த சித்தாந்தமான எங்கள் பக்ஷத்தில் பொருந்தாத விஷயம் ஏதுமில்லை. அதனால் தோஷமுமில்லை.

**236. அவதாரிகை :** அந்தந்த ப்ரமாணங்களின் பலமாகவே ஞானம் (வ்ருத்திருபமான ஞானம்) ஏற்படுகிறது. இந்தஞானம் பரிச்சின்னம், நாசத்தை அடையக்கூடியது. இப்பேர்ப்பட்ட ஸம்வித் எப்படி அனாதியான அவித்யைக்கு ஆச்ரயமாகவும், ஜகத் அதிஷ்டானமாகவும் இருக்கிறதென்று சொல்லமுடியும்? என்றால்,

**ச்லோகம் :**

संवित्तिभेदतदभावतदीयजन्मनाशादयो न खलु मानबलेन लभ्याः ।
न ह्यस्ति मानमिह किंचन तद्यदस्या धर्मस्वरूपविषयीकरणे समर्थम्

**ச்லோகார்த்தம் :** சைதன்யத்தின் பேதம், பேத அபாவம், உற்பத்தி, நாசம் முதலானவை ப்ரமாணத்தினால் சித்திக்காது. சைதன்யதர்மங்களை விஷயீகரிக்கக்கூடிய ஸாமர்த்யம் ப்ரமாணத்திற்கு கிடையாது.

**வ்யாக்யானம் :** ஞானம் என்பது ப்ரமாணத்தினால்தான் ஏற்படவேண்டும். ஒவ்வொரு விஷயஞானமும் பேதமுள்ளதாகவே இருக்கிறது. க்ஷணேக்ஷணே உண்டாகிநசிக்கின்றது. இவ்விதம் உற்பத்திமுதலான ஷட்பாவவிகாரமுள்ள ஞானம் அனாதியான அவித்யைக்கு ஆச்ரயம் என்று எப்படி சொல்லமுடியும்? ஜடமான வ்ருத்தி என்பது எப்படி ப்ரமத்திற்கு ஆஸ்பதமாக (ஞானரூபமாக) இருக்கமுடியும்?

**சித்தா :** இது ஒரு பெரிய தோஷமில்லை. ஸம்வித்ஸ்வரூபம் என்பது கூடஸ்த்தம். அதுவே, அவித்யை, அதன்கார்யம் முதலாவைகளுக்கு ஆச்ரயம் என்று சொல்லப்படுவதால் எவ்விததோஷத்திற்கும் இடமில்லை.

இவ்விதம் கூடஸ்த்தமாக இருக்கின்ற ஸம்வித் என்பதற்கு உற்பத்தி விநாசம் இருப்பதாக சொல்லப்படுமானால், அந்த பேத தர்மங்கள் எதனால் அறியப்படுகிறது? ஸம்வித் என்பதனாலேயே அறியப்படுகிறதா? அல்லது அதைத்தவிர வேறொன்றினால் அறியப்படுகிறதா? ஸம்வித் என்பதனாலேயே அறியப்படுகிறது. என்றால், தன்னிடமுள்ள தர்மத்திற்கு தானேப்ரகாசகமாக இருக்கிறதென்று சொல்லமுடியாது. ஸம்வேதனம் என்பது சைதன்யபலரூபமேயன்றி வ்ருத்திரூபமில்லை. அதனால் பலாச்ரயம் என்று சொல்வது பொருந்தாது. வேறு ப்ரமாணங்களால், ஸம்வித் என்பதும், அதன்தர்மங்களும் ப்ரகாசிக்கின்றது என்று சொல்வதற்கு முடியாது. ஜடமான ப்ரமாணங்களினால் ஸம்வித் என்பதும், ப்ரமாணம் என்பதும் ஸமானமாக இருக்கின்றது என்றாகும். அவ்விதம் இருந்தாலும், ஒரு தீபமானது தன் ப்ரகாசத்திற்காக மற்றொரு தீபத்தை அபேக்ஷிப்பதில்லை. அதுபோல் ஒரு ஸம்வித்மற்றொரு ஸம்வித் என்பதை அபேக்ஷிக்கிறது என்றோ அல்லது ஒரு ஸம்வித்திற்கு மற்றொரு ஸம்வித் என்றோ சொல்லமுடியாது. ஆகையால் ஸம்வித் என்பதைக்ரஹிக்கக்கூடிய ப்ரமாணமேகிடையாது. ஆகவே வ்ருத்தி என்பதே உற்பத்தி விநாசமுடையது. அந்த வ்ருத்தியின் தர்மங்களை ஸம்வித் என்ற ஞானத்தில் இருப்பதாக அவிவேகத்தினால் அறியப்படுகிறது.

**237.** அவதாரிகை : கடம், படம் முதலான விஷய ஞானம் என்பது சக்ஷுஸ்முதலான ப்ரமாணங்களின் மூலமாகத்தானே அறியப்படுகிறது? அதனுல் ஸம்வித் என்பது ப்ரமாணஜன்யம் என்று தானே சொல்லவேண்டும்?

ச்லோகம் :

तस्मान्न मानफलता निरुपाधिकस्य संवेदनस्य घटतेऽविषयत्वहेतोः ।
एवं च मानफलसिद्धिसमन्वयेन सिद्धिर्जडस्य जगतो न कदाचिदस्ति

ச்லோகார்த்தம் : ஆகையால் அவிஷயமாக இருக்கின்றதால் நிரூபாதிக சைதன்யம் என்பது ப்ரமாண பலமாக இருக்க முடியாது. இவ்விதம் சைதன்ய ரூபமான ஞானம் என்பதை ப்ரமாண பலம் என்று சாதிப்பதன் மூலம் ஜடமான ப்ரபஞ்சத்தின் சித்தி என்பது ஏற்படாது.

வ்யாக்யானம் : ஸம்வித் என்ற கூடஸ்த்தசைதன்யம் புத்தி வ்ருத்தி என்பதை உபாதியாக கொண்டிருப்பதால் ஜன்யமான புத்தி வ்ருத்திக்கு ப்ரகாசகமாக இருக்கின்ற சைதன்யமே உற்பத்தி உள்ளது போல் அறியப்படுகிறது.

சைதன்யம் நிரூபாதிகம் என்ருலும் ப்ரமாணஜன்யம் என்று சொல்லப்படுவதால் என்ன தோஷம் ஏற்படும்?

நிரூபாதிகமான சைதன்யம் ப்ரமாண பலம் இல்லை. ஸம்வித் என்பது வ்ருத்தியுடன் ஸம்பந்தப்படுத்தப்படுகின்றபோது, உபசாராத் ப்ரமாணபலம் என்று சொல்லப்பட்டபோதிலும், ஸம்வித் என்பது கூடஸ்த்தம். ப்ரமாணபலமாக ஸம்வித் என்பது ப்ரகாசிக்கின்றது என்று சொல்லப்படுமானுல் ஸம்வித் என்பது ஜடம் என்று சொல்ல நேரிடும். ஜடம் என்று சொல்லப்படுமானுல் ஜகத் என்பதே ப்ரகாசிக்கமுடியாது. ப்ரமாணபலம் என்று வ்ருத்தி ஞானமே சொல்லப்படுகிறது. வ்ருத்தி என்பதே ஜடமானதால் ஞானத்தினுல்தான் அறியப்படவேண்டும். சைதன்யம் என்பது எதற்கும் விஷயமில்லை. அதனுல் அந்த சைதன்யத்தின் ஜன்மதர்மங்கள் சக்ஷுராதி ப்ரமாணங்களின் மூலம் விஷயமாகிறது என்று எப்படிச் சொல்ல முடியும்? ஆகவே, ப்ரமாண பலமான ஸம்வித் என்பதின் ஸம்பந்தத்தினுல் ஜடமான ஜகத் ப்ரகாசிக்கின்றது என்று ஆக்ஷேபிக்கப்பட்ட விஷயம் பொருந்தாது.

**238.** அவதாரிகை : அப்படியானுல் ஜகத் என்பது எப்படி சித்திக்கின்றது என்ருல்,

ச்லோகம் :

इतरेतराध्यसनमस्त्वनयोरुभयोरतो दृगदृशोरनिशम् ।
अपरस्परव्यतिकरानुभवादिह शुक्तिकारजतविभ्रमवत्

ச்லோகார்த்தம் : ஆகையால் த்ருக் என்றும் த்ருச்யம் என்றும் சொல்லப்படும் இவை இரண்டிற்கும் எப்போதுமே இதர இதர அத்யாஸம் இருக்கட்டும். ஏனெனில் சுக்தியில் ஏற்படும் ரஜத ப்ரமம் போல இங்கும் இதர இதர அத்யாஸம் அனுபவிக்கப் படுகிறது.

வ்யாக்யானம் : ஸர்வ ஜகத்தும் ஜடம் என்பதால் சைதன்யத்தில் அத்யஸ்த்தம் என்பதால் பரஸ்பர அத்யாஸம் இருக்கின்றதென்றே சொல்லவேண்டும். அதாவது த்ருக் ஸ்வரூபமான சைதன்யத்திற்கும், த்ருச்யமான ஜகத்திற்கும் ஆத்யாஸிக ஸம்பந்தம் இருக்கின்றது. த்ருச்யமான ஜகத் த்ருக் ஸ்வரூப விஷயமான அவித்யையின் கார்யமாக இருக்கின்றதால் அன்யோன்ய அத்யாஸம் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. ஜடம் என்பது சைதன்யத்தில் ஸ்வரூபத : அத்யஸ்த்தம். ஆனுல் சைதன்யம் என்பது ஸம்பந்தத்தினுல் ஜடத்தில் இருப்பதுபோல் தோன்றவதையே, சைதன்யம் ஜடத்தில் அத்யஸ்த்தம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, உண்மையில் சைதன்யத்திற்கும் ஜடத்திற்கும் ஸம்பந்தம் என்பதே கிடையாது என்றே சொல்லப்படுகிறது. உதாரணமாக 'இதம் ரஜதம்' என்று ப்ராந்தி ஞானம் ஏற்படும் இடத்தில் இதம் என்ற அம்ஸத்தில் ரஜதம் அத்யஸ்த்தம். அதாவது உண்மையில் இல்லாத ரஜதத்தின் ஸம்பந்தம், 'இதம்' என்று தோன்றுகின்ற வஸ்துவிற்கு இருப்பதுபோல் தோன்றுகிறது. அதனுல்தான் ரஜதம் என்பது பாதிக்கப்படுகின்றபோது, அதன் ஸம்பந்தம் பாதிக்கப்படுகிறதேயன்றி இதம் அமஸத்திற்கு பாதம் ஏற்படுவதில்லை. அதனுல் ரஜதம் என்பது ஸ்வரூபத : அதயஸ்த்தம் என்றும் சுக்தியின் இதம் அம்ஸம் ஸம்ஸார்க்கேன அத்யஸ்த்தம் என்றும் சொல்லப்படுகிறது. இந்தவிதம் சைதன்யத்தில் அத்யஸ்த்தமான ஜகத் என்பதற்கு ஆத்யாஸிகஸம்பந்தம் இருக்கின்றது. அதனுல் ஏற்படும் சைதன்ய ப்ரதிபலனத்தினுலேயே ஜகத் என்பது ப்ரகாசிக்கின்றது.

**239.** அவதாரிகை : ஜடம், சைதன்யம் என்ற இரண்டிற்கும் பரஸ்பர அத்யாஸம் சொல்லப்படுமானுல் ஆத்மா என்பதும் அத்யாஸம் என்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அவ்விதம் சொல்லப்படுமானுல் சூன்யவாதமே சரி என்று ஒப்புக் கொள்ள நேரிடுமே? என்ருல்,

ச்லோகம் :

संसिद्धा सविलासमोहविषये वस्तुन्यधिष्ठानगीर्नाऽऽधारेऽध्यसनस्य वस्तुनि ततोऽस्थाने महान्संभ्रमः ।
केषां चिन्महतामनूनतमसां पाण्डित्यगर्वादयमन्योन्याध्यसने निरास्पदमिदं शून्यं जगत्स्यादिति

ச்லோகார்த்தம் : கார்ய ஸஹித அஞ்ஞானத்திற்கு விஷயமாக இருக்கின்ற வஸ்துவில்தான் அதிஷ்ட்டானம் என்ற பதம் ப்ரசித்தமாக இருக்கின்றது. அத்யாஸத்திற்கு ஆதாரமாக இருக்கின்ற வஸ்துவில் இந்த பதம் ப்ரசித்தமாக இல்லை. ஆகவே, அன்யோன்ய அத்யாஸம் இருப்பதாக ஒப்புக் கொள்ளப்படுமானுல் ஆஸ்பதம் அற்ற இந்த ஜகத் சூன்யமாகும் என்று மிகுந்த அஞ்ஞானத்துடன் கூடிய சில மஹாத்மாக்களின் பாண்டித்யகர்வத்தினுல், இவ்விதம் மஹத்தான ப்ராந்தி இருக்கிறது. இது தகுதியற்றது.

வ்யாக்யானம் : ப்ரமஸ்த்தலத்தில் பரஸ்பர அத்யாஸம் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது என்பதற்காக, சூன்யம்தான் மிஞ்சும் என்று சொல்வதற்கு முடியாது. உதாரணமாக சுக்தி என்பதைப் பார்த்து 'இதம் ரஜதம் (இது வெள்ளி) என்று ப்ரமம் ஏற்படும் ஸ்தலத்தில், அந்த வஸ்துவில் ஆதார அம்ஸம் என்றும் அதிஷ்ட்டான அம்ஸம் என்றும் இரண்டு அம்ஸங்கள் இருக்கின்றது. அதில் 'இதம்' என்ற அம்ஸம் ஆதாரம் என்றும் சுக்தி என்ற அம்ஸம் அதிஷ்ட்டானம் என்று சொல்லப்படுகிறது. அந்த

ஸ்தலத்தில் உண்மையில் இருக்கின்ற வஸ்து சுக்தி (கிளிஞ்சல்) என்ற ஒரே வஸ்துதான். ஆனால் அதன் உண்மையான ஸ்வரூபம் பூரா அறியப்படாமல் 'இது' என்று ஸாமான்யமாகஅந்த வஸ்து முதலில் அறியப்படுகிறது. அந்த வஸ்து கிளிஞ்சல் என்ற விசேஷ அம்ஸம் அறியப்படாததால் தான் ப்ரமம் ஏற்படுகிறது. அந்த ஸமயத்தில் விசேஷாம்ஸ அஞ்ஞானம் அதன் கார்யமான விக்ஷேபத்துடன் கூடி ரஜதாகாரமாக பரிணாமத்தை அடைகின்றது. அதனால் தான் இது ரஜதம் என்று இதம் அம்ஸத்தில் ரஜத ஆரோபம் ஏற்படுகிறது. ஆகவே, அந்த ஸ்தலத்தில் இருக்கின்ற வஸ்துவின் ஸாமான்யாம்ஸம் மட்டும் 'இது' என்று அறியப்படுவதாலேயே ஆரோபம் ஏற்படுகின்றதால் 'இதம்' என்ற அம்ஸம் ஆரோபம் ஏற்படுவதற்கு ஆதாரம் என்று சொல்லப்படுகிறது. அதன் பிறகு எந்த விசேஷாம்ஸம் அறியப்படுகின்றதால் ஆரோப நிவர்த்தி ஏற்படுகிறதோ அந்த விசேஷாம்ஸமான சுக்தியை ஆரோபிதத்திற்கு அதிஷ்டானம் என்று சொல்லப்படுகிறது. இதில் இதம் அம்ஸம் என்ற ஸாமான்யாம்ஸம் என்பது ப்ரமம், ப்ரமை என்ற இரண்டிற்கும் ஸாதாரணம். ஆகவே, இதம் அம்ஸம் அறியப்பட்டவுடனே (விசேஷாம்ஸம் அறியப்படாததால்) விக்ஷேபத்தினால் ஏற்பட்ட ரஜதமும் அதன் ஸம்பந்தமும் இதமம்ஸத்தில் தோன்றுகிறது. அதன்பிறகு சுக்தி என்றஅதிஷ்டான அம்ஸம் அறியப்படுகின்றபோது, இது ரஜதமல்ல, இது சுக்தியே என்ற ஞானம் ஏற்படுகின்றது. ஆகவே, வஸ்துவின் உண்மையான ஞானம் ஏற்படுகின்றபோது இதம் அம்ஸத்தில் ஆரோபம் செய்யப்பட்ட ரஜதமும் அதன் ஸம்பந்தமும் நிவர்த்திக்கின்றது. ஆகவே வஸ்துவின் விசேஷாம்ஸம் அறியப்படாமல் ஸாமான்யமாக 'இது' என்று மட்டும் எந்த வஸ்து ஆரோபத்திற்கு ஆதாரமாக அறியப்பட்டதோ அந்த வஸ்துவே (ஸாமான்யக அறியப்பட்ட இதமம்ஸமே) ஆரோபித நிவர்த்திக்குப்பின் அதிஷ்டான மாத்ரமாக விசேஷாகாரமாக சுக்தி என்று அந்த இதம் அஸம்ஸமே விசேஷமாக ப்ரகாசிக்கின்றது. ஆகவே, இதம் அம்ஸம் என்பது சுக்தியைச் சேர்ந்ததுதான் என்பதால் இதம் அம்ஸத்திற்கு பாதம் என்பதே கிடையாது. இதம் என்று எந்த வஸ்து குறிப்பிடப்பட்டதோ அதுவே சுக்தி என்பதால், ஆதாரம், அதிஷ்டானம் என்று இரண்டும் வெவ்வேறான வஸ்துவல்ல. ஆகையால் அஞ்ஞானத்தினால் ஏற்பட்ட ஆரோபநிவர்த்திக்குப்பின் அதிஷ்டான ஸ்வரூபமாத்ரமாக வஸ்து எஞ்சி இருக்கின்றதால் சூன்யம் என்ற வாதத்திற்கு இங்கு இடமே கிடையாது.

**240.** அவதாரிகை : சாந்தோக்ய உபநிஷத்தில்ம்ருத் முதலான மூன்று த்ருஷ்டாந் தங்களினால் ஜகத் என்பது ப்ரஹ்ம பரிணாமமென்றே விளக்கப்படுகின்றதாக அறியப்படுகின்றது. அதனால் ஜகத் விவர்த்தம் என்று சாஸ்திரம் போதிக்கின்றது என்று எப்படிச் சொல்லமுடியும்?

**ச்லோகம் :**

कृपणमध्यमपक्वधियां नृणां मतिविलासविधात्रितयं क्रमात् ।
परिणतिर्बहुजीवतमस्विता परमपुंसि तमः परिकल्पना

**ச்லோகார்த்தம் :** அதம, மத்யம, உத்தம புத்தி உடையவர்களுக்கு மூன்று விதமான கல்பனைகள் இருக்கின்றது. அவைகள் க்ரமமாக, ப்ரஹ்ம பரிணாமவாதம்,

அஞ்ஞானி ஜீவர்கள் அனேகர் என்ற வாதம், பரமாத்மாவிடம், அஞ்ஞானம் இருக்கின்றது என்று சொல்லப்படும் வாதம் என்று (மூன்று விதம்) கல்பிக்கப்படுகிறது.

வ்யாக்யானம் : ஜீவர்களின் புத்தி விலாஸதாரதம்யத்தினுல் அதிகாரிகள் மூன்று விதமாக இருக்கின்ருர்கள். அதனுல் அவரவர் புத்தி சாதுர்யத்திற்கு தக்கவாறு க்ரமமாக போதிக்கப்படுகிறது. அதாவது மந்தாதிகாரியாக இருக்கின்ற க்ருபணனுக்கு, ப்ரஹ்மபரிணாமமே ஜகத் என்று தெரிவிக்கின்றது. மத்யமஅதிகாரிக்கு ப்ரஹ்ம விவர்த்தம் ஜகத் என்று போதிக்கின்றது. இந்த விவர்த்தவாத த்ருஷ்டியை அனுசரித்தே அஞ்ஞானியான ஜீவர்கள் அனேகம் என்று ஜீவநானுத்வம் சொல்லப்படுகிறது. அதன் பிறகு பரிபக்வமுடைய உத்தம அதிகாரியாக இருப்பானுகில் அஹமேவமுமூக்ஷு : என்றும், என்னையன்றிவேருக இருக்கின்றதாக அறியப்படுபவை எல்லாமே அஞ்ஞான கல்ப்பிதம் என்றும், அந்த அஞ்ஞானத்திற்கு, ப்ரஹ்மமே, ஆச்ரயமாகவும், விஷயமாகவும் இருக்கின்றதென்று உபதேசிக்கப்படுகிறது. இந்த விதம் அதிகாரி பேதத்தைக் கொண்டும் உபதேசிக்கலாம் அல்லது ஒருவனுக்கே அவஸ்த்தா பேதத்தைக் கொண்டு க்ரமமாக உபதேசிக்கப்படுவதாகவும் சொல்லலாம்.

ப்ரஹ்மமேஸர்வ ஜகத் காரணம் என்று தீர்மானித்து, காரண பூதமான அந்த தத்வத்தின் ஸ்வரூபம் என்னவென்று அறியவிரும்புகின்றவன், ப்ரஹ்ம விவர்த்தம் ஜகத் என்றும், ப்ரஹ்மமே பரமார்த்தம் என்றும் இரண்டும் கலந்த ஸ்வரூபமாகவே ப்ரஹ்மத்தை அறிகின்ருன் என்பதால் அந்த அதிகாரி மத்யமஅதிகாரி என்று சொல்லப்படுகிறது. ஜகத் என்பது, விவர்த்தமாகவும் ப்ரஹ்மத்தினிடம் இல்லையென்று த்ருடமாக அறிந்தவனே உத்தம அதிகாரி அவனே அத்வைதம் தத்வம் என்று அறிந்துகொள்கிருன்.

இநதவிதம் அதிகாரிபேதத்திலுைம், அவஸ்த்தாபேதத்திலுைம் க்ரமமாக போதிக்க வேண்டுமென்று மூன்றுவித த்ருஷ்டாந்தங்களைக் கொண்டு விளக்கப்படுகின்றது. இதனுல் ப்ரஹ்மத்தில் அத்யஸ்த்தமான அஞ்ஞானம், அதன் கார்யமான ஜகத் என்பதெல்லாம் ஆரோபிதம் என்று அறியப்படுகிறது. அஹம் ப்ரஹ்மாஸ்மி என்ற ஸ்வரூப ஞானத்தினுல் ஆரோபிதமான ஸர்வத்வைதங்களும் காரணமான அஞ்ஞானத்துடன் நாசத்தை அடைகின்றது. ஆகவே ஸர்வ அதிஷ்ட்டானமான ப்ரஹ்மமே நான் என்று ப்ரகாசிக்கின்றபோது, சூன்யமே எஞ்சி நிற்கும் என்று சொல்லப்படுவது பொருந்தாது. வேதாந்த சித்தாந்தத்தில் சூன்ய வாதத்திற்கே இடமில்லை.

**241.** அவதாரிகை : இந்தவிதம் க்ரமமாக போதிக்கப்படுகின்றது என்று சொல்லப்படுவதில் ப்ரமாணம் என்ன ?

ச்லோகம் :

श्रुतिवचांसि मुनिस्मरणानि च द्वयविशारदगीरपि सर्वशः ।
त्रयमपेक्ष्य विधात्रितयं विना न हि घटामुपयान्ति कदाचन

ச்லோகார்த்தம் : (சச்சத்யச்சாபவத் என்ற) ச்ருதி வசனங்களும், (போக்த்ராபத்தே: வ்யாஸசூத்ரம் முதலானதும் பாஷ்யகாரரின் வ்யாக்யான வசனமுமே இவ்விதம் மூன்று விதமான புருஷரை அபேக்ஷித்தே போதிக்கப்படுகின்றது என்பதில் ப்ரமாணமாகின்றது. இவ்விதம் மூன்றுவித புருஷரை அபேக்ஷிக்கவில்லை என்ருல், (ச்ருதி வசனம், சூத்ரவசனம், பாஷ்யவசனம்) சொல்லப்பட்ட வசனங்கள் ஒருபோதும் பொருந்தாது.

வ்யாக்யானம் : இரண்டாவது அத்யாயத்தில், ஒரே புருஷனிடத்தில் ஏற்படும் மூன்று விதமான த்ருஷ்டிகள் பற்றி க்ரமமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதுமட்டுமல்ல, ச்ருதி, ஸ்ம்ருதி வசனங்களும், பாஷ்யகாரரான ஆசார்யவசனங்களும் இவைகளுக்கு பொருத்தாக இருக்கின்றதால் அவைகளே ப்ரமாணம். க்ரமமாகச் சொல்லப்படும் இந்த மூன்று விஷயங்களை அபேக்ஷித்து மூன்று அவஸ்த்தைகளை கல்ப்பிக்காவிடில் ச்ருதி முதலான வசனங்கள் பொருந்தாது.

**242.** அவதாரிகை : இவ்விதம் அதிகாரி பேதத்தைக் கொண்டு ஜீவநானுத்வம் என்பதை ஒத்துக் கொள்ளப்படுமானுல் அத்வைதமேதத்வம் என்பது எவ்விதம் சித்திக்க முடியும்?

ச்லோகம் :

पुरुषमेकमपेक्ष्य च भूमिकात्रितयमस्ति पुरोदितमेव तत् ।
सदनुसारवशादखिलश्रुतिस्मृतिवचांसि वयं घटयामहे

ச்லோகார்த்தம் : இந்த மூன்று அவஸ்த்தைகளும் ஒரே புருஷனை ஆச்ரயித்தே இருக்கின்றது என்று முன்பே சொல்லப்பட்டிருக்கிறது. இதை அனுசரித்து ஸர்வ ச்ருதி, ஸ்ம்ருதி வாக்யங்களை நாங்கள் பொருத்தமாக ப்ரதிபாதனம் செய்கின்ருேம்.

வ்யாக்யானம் : பரிணும த்ருஷ்டி, விவர்த் த்ருஷ்டி, தத்வநிலை என்ற மூன்றும் ஒன்றுக்கொன்று விருத்தமானதால் ஒரே புருஷனிடத்தில் ஒரே ஸமயத்தில் இவ்வித மூன்று த்ருஷ்டிகளும் இருப்பதாகச் சொல்லப்படவில்லை. அதேபோல் ஜீவநானுத்வம் என்பதும் பரமார்த்த த்ருஷ்டியில் சொல்லப்படவில்லை. ஆகவே, ஒரே புருஷனிடம் அவஸ்தா பேதத்தினுல் மூன்று விதமான த்ருஷ்டி ஏற்படுகிறது என்று சொல்லப்பட்ட விஷயத்தில் பொருந்தாதது ஏதுமில்லை.

**243.** அவதாரிகை : ச்ருதி, ஸம்ருதி, பாஷ்யக்காரார் வசனம் என்பதெல்லாம் ஒரே புருஷனிடத்தில் ஏற்படும் மூன்று வித நிலையை அனுசரித்து உபதேசிக்கின்றது என்று எவ்விதம் அறியப்படுகிறது.

ச்லோகம் :

परिणतिं च विवर्तदशाद्वयं स्थितमनुक्रमतः श्रुतिशासने ।
अनुशशास मुनिप्रवरः सुधीः पुरुषबुद्धिमपेक्ष्य यथाक्रमम्

ச்லோகார்த்தம் : புத்திமானுகிய வ்யாஸமஹரிஷி ச்ருதியில் உபதேசிக்கப்படுகின்ற பரிணும வாதம், இரண்டு விதமான விவர்த்தவாதம் இவைகளை புருஷபுத்தியை அபேக்ஷித்து க்ரமமாக உபதேசிக்கின்ருர்.

வ்யாக்யானம் : ச்ருதியில் சொல்லப்படும், பரிணமவாதம், விவர்த்த வாதம் என்ற இரண்டு வாதங்களை அனுசரித்தே சூத்ரகாரர் "போக்த்ராபத்தேர விபாகச் சேத் ஸ்யாத்லோகவத்" என்ற சூத்ரத்தினலும், அதன் பிறகு ஆரம்பணதி கரணத்தில் 'த தனன்யத்வ மாரம்பண சப்தாதிப்ய: என்ற சூத்ரத்தினலும், க்ரமமாக இவைகளை விசாரிக்கப்பட்டிருக்கிறது. உபநிஷத்தில் எவ்விதம் பர்ணம வாதம் பற்றியும் இரண்டுவிதமான விவர்த்த வாதம் பற்றியும் சொல்லப்படுகின்றதோ அதே க்ரமத்தில் வ்யாஸராலும் விசாரிக்கப்பட்டிருக்கிறது. சாஸ்த்ர சிரவண ஆரம்பத்தில் புருஷ புத்தியின் க்ரஹண சக்திக்கும், அதன்பின் மேன்மேலும் புத்தியின் பரிபக்குவத்திற்கும் உள்ள வித்யாஸத்தை அனுசரித்து, மூன்றுவிதமாக போதிக்கப்படுகிறது. இந்த விஷயம் பற்றி இரண்டாவது அத்யாயத்திலேயே விளக்கமாக விசாரிக்கப்பட்டிருக்கிறது.

**244.** அவதாரிகை : ஸர்வம் ப்ரஹ்மகார்யம் என்று சொல்லப்படுமானல் வேதம் அபௌருஷேயம் என்றும் ஸ்வத:ப்ரமாணம் என்றும் சொல்லப்படும் சித்தாந்தத்திற்கு ஹானி ஏற்படுகிறதே ?

ச்லோகம் :

यदि परिणतिरेषा चिद्विवर्तोऽथ वा स्याद्भवति ननु तदानीं वेदशास्त्रे विरोधः ।
न हि खलु कृतकत्वे पौरुषेयत्वहेतोर्भवितुमलमियं नो मानता स्वप्रयुक्ता

ச்லோகார்த்தம் : இந்த ச்ருதியானது சைதன்யத்தினுடைய பரிணமமாக இருந்தாலும் அல்லது விவர்த்தமாக இருந்தாலும், வேத சாஸ்திர விஷயத்தில் விரோதம் ஏற்படுகிறது. எங்கள் மதத்தில் அபௌருஷேயம் என்ற காரணத்தினல் ஏற்படுகின்ற ஸ்வத:ப்ராமாண்யமானது, வேதம் கார்யமாக இருக்கும் பக்ஷத்தில் ஏற்பட முடியாதன்றோ

வ்யாக்யானம் : த்ருச்யமான ஜகத் என்பது ப்ரஹ்மத்தில் அவித்யையினல் ஆரோபிதம் என்பதால் மித்யை என்ருகிறது. அதனல் ப்ரஹ்மமென்பது பரிசுத்தம், நித்யமுக்தம் என்பது சித்தக்கின்றது. ஆனல் பரிணம த்ருஷ்டி, விவர்த்த த்ருஷ்டி என்ற இரண்டையும் அனுசரித்து ஸர்வமும் ப்ரஹ்ம கார்யம் என்று சொல்லப்படுகிறது. அதனல் வேதம் என்பதும் சிருஷ்டிக்கப்பட்ட ஜகத்திற்கு உட்பட்டதாகவே இருக்கின்றதால், வேதம் என்பதும் பரமேச்வர சிருஷ்டி என்றே சொல்லப்படவேண்டும். ஆகவே வேதம் பௌருஷேயம் என்பதால் ஸ்வத:ப்ரமாணம் என்று சொல்வதற்கே முடியாது. அபௌருஷேயமாக இருந்தால்தான் ப்ரமாண்யம் சொல்லமுடியும். வேதம் அபௌருஷேயமானதால் ஸ்வத:ப்ராமாண்யம் உண்டு என்று ஜைமினி சித்தம் செய்திருக்கிருர், ஆகையால் வேதம் ப்ரஹ்மகார்யம் என்று சொல்லப்படுமானல் ஜைமினி சித்தாந்தத்திற்கு ஹானி ஏற்படும் இந்த விஷயத்தில், ஈச்வரன் என்பவர் ஆப்தனகையால் ஆப்தவாக்யமானவேதம் ப்ரமாணம் என்று நையாயிகர்களால் சொல்லப்படுகிறது. வேதம் ப்ரமாணமே இல்லையென்று நாஸ்திகர்களால் சொல்லப்படுகிறது. ஈச்வரவாக்யமாக இருந்தாலும் ஸ்வத:ப்ரமாண்யம் கிடையாது என்று பூ. மீமாஸகர்களால் ஆக்ஷேபிக்கப்படுகிறது.

**245.** அவதாரிகை : குருமதஸ்த்தர்கள் முதலான வேறு மதஸ்த்தர்களின் சாஸ்திரங்களை ஒத்துக்கொள்ளவேண்டிய அவஸ்யம் என்ன? அவ்விதம் ஒத்துக்கொள்ளப்படவில்லை யென்றால் அதனால் ஏற்படும் தோஷம் என்ன?

**ச்லோகம் :**

कणभुगभिमतिर्वा कल्पनीया तदानीं सुरगुरुमतमेवोपास्यमाहोस्विदुच्चैः ।
इति निपतति चोद्यं ब्रह्मणो विश्वसृष्टिर्यदि भवति न चेद्वो नित्यमायाति विश्वम्

ச்லோகார்த்தம் : ப்ரபஞ்சமானது (ச்ருதியினால்) சைதன்ய பரிணாமமென்றோ விவரித்தமென்றோ சொல்லப்படுமானால், கணாதமதத்தையோ அல்லது சார்வாகமதத்தையோ நிச்சயமாக ஒத்துக்கொள்ளப்படவேண்டுமே என்றகேள்விக்கு இடமுண்டாகிறது. ப்ரஹ்மத்தினிடமிருந்து ஜகத்சிருஷ்டி ஏற்படவில்லையென்றால் ஜகத் நித்யமென்றாகும்.

வ்யாக்யானம் : 'சாஸ்திரயோனித்வாத்' என்ற சூத்ரார்த்தத்தை நிரூபணம் செய்யப்படுகின்ற இடத்தில்தான், வேதம் ஸ்வத : ப்ரமாணமா, பரத : ப்ரமாணமா என்று விசாரிக்க வேண்டிய அவச்யம் ஏற்படுகிறது. ஆனால் அந்த இடத்தில் விசாரிக்கப்படவில்லை. ஆயினும் இந்தஸாதன அத்யாயத்தில், வேதம் என்பது ஸாதனமாக இருக்கின்றதால் அதைப்பற்றி விசாரிக்கப்படுகிறது. அபௌருஷேயமானாலல்ப்ராமாண்யம் உண்டு என்று ஜைமினியினால் சொல்லப்பட்டிருக்கிறது. அதை ஒத்துக்கொள்ளப்படாவிடில் பரமதஸ்த்தரான நையாயிகர் (கணாதர்) மதத்தை அனுசரிப்பதாகவோ, அல்லது ப்ரஹஸ்பதியினால் எழுதப்பட்ட நாஸ்திக (சார்வாக) தர்சனத்தையோ ஒத்துக் கொண்டதாக ஆகும். ப்ரஹஸ்பதியினால் இவ்விதம் எழுதப்பட்டிருக்கிறதென்றவிஷயம் மைத்ரோபநிஷத்திலிருந்தும், புராணங்களிலிருந்தும் அறியப்படுகிறது. ஆகவே, வேதம் ப்ரமாணமில்லை என்றநாஸ்திக வாதம், வைதிகரான உங்களால் ஒத்துக்கொள்ளப்படுமானால் அது பரிகசிக்கத்தக்கதாகும். ஆகையால் பரதந்த்ரத்தில் சொல்லப்படும் முறையை அனுசரித்து வேதம் ப்ரமாணம் என்று ஒத்துக்கொண்டே ஆகவேண்டும். அவ்விதமின்றி விச்வம் என்பது ப்ரஹ்மகார்யம் என்று சொல்லப்படுமானால் (வேதம் சிருஷ்டிக்கப்பட்டது) பலவித ஆக்ஷேபங்களுக்கு இடமுண்டாகும். அதாவது, கணாதர்போல் வேதம் பௌருஷேயம் என்றால் அதற்கு மூலப்ரமாணம் என்னவென்று சொல்லவேண்டும். அவ்விதம் சொல்லப்படுமால் அத்வைதம் தத்வம் என்ற மதம் சித்திக்காது. ப்ரஹஸ்பதியின் நாஸ்திக தர்சனமும் ஒத்துக்கொள்ளக்கூடியதல்ல. இவ்வித தோஷங்களை நிவர்த்திப்பதற்காக வேதம் ப்ரஹ்மகார்யமில்லை என்றும் வேதம் நித்யம் என்றும் சொல்லப்படுமானால், வேதம் நித்யம் என்பது போல் விச்வமும் நித்யம் என்றாகும். அதனால் அத்வைத ஹானி ஏற்படும். கார்யம் என்றால் வேதம் மித்யை என்றாகும், இல்லையெனில்வேதம் நித்யம் என்றாகும். அதனால் த்வைதம் ஸத்யம் என்றாகுமானதால் விச்வம் என்பது அகார்யம் என்றும், ஸ்வதந்த்ரம் என்றும் சொல்ல நேரிடும். இவ்விதம் 'ஸத்வயம் ப்ரஹ்ம' என்று சொல்லப்படுமானால் 'ஏகமேவ அத்விதீயம் ப்ரஹ்ம' என்ற ச்ருதிவாக்யவிரோதம் ஏற்படும்.

**246. அவதாரிகை :** முன்ச்லோகத்தில் சொல்லப்பட்ட தோஷத்திற்கு பரமதத்தை அனுசரித்து பரிகாரம் சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

ननु सदृशमिदं वश्चोद्यमस्मासु कस्माद्विनिहितमुभयेषां पूर्वमीमांसकानाम् ।
अवगतिकृतमेतद्वाचकत्वं पदानामवगतिरियमिष्टा नश्वरी तत्क्षणेन

**ச்லோகார்த்தம் :** பூர்வமீமிம்ஸகளான உங்கள் இரண்டுபேருக்கும் இந்தகேள்வி ஸமானமாகவே இருக்கின்றது. இந்த கேள்வியை ஏன் எங்களிடம் கேட்கவேண்டும். பதங்களுடைய வாசகத்வமானது (அர்த்தத்தை தெரிவிக்கின்றதன்மை) பதஞானத்தை அபேக்ஷிக்கின்றது. ஞானம் என்பதோ அந்த க்ஷணத்திலேயே மறைகின்றது என்று உங்களால் (நாசமுடையதாக) அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** அத்வைதமேதத்வம் என்ற வேதாந்த சித்தாந்தத்தில், வேதம் நித்யம் என்று சொல்லப்படுவதால் என்ன தோஷம் ஸம்பவிக்கின்றது என்று உங்களால் சொல்லப்படுகிறதோ அதேபோல் உங்களுடைய பூ.மீமாம்ஸா பக்ஷத்திலும் தோஷம் ஏற்படுகிறது.

அதாவது, வேதம் ப்ரஹ்மகார்யம் என்றால் அநித்யத்வாத் அப்ரமாணம் என்றுகுமே என்று ஆக்ஷேபிக்கப்பட்டது. இந்த கேள்வி பூர்வ மீமாம்ஸகர்களான் பாட்டர், ப்ராபாகரர் என்ற இரண்டு மதஸ்த்தர்களுக்கும் பொருந்தும். எப்படியெனில், வர்ணங்கள் நித்யமென்று பூமீமாம்ஸகர்களாலும், வர்ணங்கள் அநித்யம் என்று நையாயிகர்களாலும் சொல்லப்படுகிறது. வேதம் என்பது கேவல வர்ணமல்ல (அக்ஷரமல்ல) அந்த அக்ஷரங்களை ஒரு விதமான க்ரமத்தில் அமைத்தால்தான் (ஆனுபூர்வி) அதிலிருந்து அர்த்தபோதம் ஏற்படும் என்பதை அவர்களும் ஒத்துக்கொண்டேயாகவேண்டும். அதனால் கேவல அக்ஷரங்களை மட்டும் வேதம் என்று சொல்லப்படவில்லை ஒருவித க்ரமத்தில் அமைக்கப்பட்டால்தான் வேதம் என்று சொல்லலாம். வர்ணங்கள் மாற்றி அமைக்கப்படலாம் என்பதால் அந்தக்ரமம் என்பது அநித்யம். அதனால் அவகதி (வ்ருத்திஞானம்) என்பது நித்யமில்லை. அதனால் அவகதியினால் சித்திக்க வேண்டிய வேதம் என்பதும் அநித்யம் என்று சொல்ல நேரிடுகிறது. இந்தவிதம் அநித்யமாக இருந்தாலும் அந்தவேதம் அர்த்தபோதகமாகிறது என்றும் அதனால் ப்ரமாணமாகிறது என்று உன்பக்ஷத்தில் எப்படிச் சொல்லப்படுகிறதோ அதுபோல் எங்கள் பக்ஷத்திலும் சொல்லப்படலாமே? இதனால் என்ன தோஷம் ஸம்பவிக்க முடியும்? ஆகையால் அர்த்த போதக ஆகாரமான அவகதி அநித்யமென்றாலும் அதற்கு ஸ்வத:ப்ராமாண்யம் உண்டு என்று சொல்லப்படுவதுபோல் வேதம் ப்ரஹ்மகார்யம் என்பதால் அநித்யம் என்று சொன்னாலும் ஸ்வத:ப்ராமாண்யம் என்று சொல்லப்படுவதில் தோஷம் ஏதுமில்லை.

**247.** அவதாரிகை : அவகதி என்பது அநித்யம் என்றாலும், வர்ணங்கள் நித்யம் என்று சொல்லப்படுவதால் பூ.மீ.பக்ஷத்தில் தோஷம் சொல்லமுடியாது.

ச்லோகம் :

अवगतिगतमेवापेक्ष्य पूर्वापरत्वप्रतिनियममियं वो वेदता वेदराशेः ।
क्षणिकमभवदित्थं वेदशास्त्रं समस्तं कथमिव तदिदानीं वेदशास्त्रं प्रमाणम्

ச்லோகார்த்தம் : ஞானத்தில் இருக்கின்ற பூர்வாபரத்வ நியமத்தை அபேக்ஷித்தே வேத சப்த ஸமுகத்தினுடைய வேதத்தன்மை உங்களுக்கு சித்திக்கின்றது. (ஆனால் ஞானம் க்ஷணிகம் என்று உங்களால் சொல்லப்படுகின்றதால்) ஸமஸ்த்த வேதசாஸ்த்ரங்களும் க்ஷணிகம் என்றே சொல்லப்பட்டதாகின்றது. இவ்விதம் இருக்கின்றபோது வேத சாஸ்த்ரம் என்பது ப்ரமாணம் என்று எவ்விதம் கூறமுடியும்?

வ்யாக்யானம் : முன்பின் க்ரமமாக அமைக்கப்பட்ட வர்ணங்கள்தான் அர்த்த போதகமாகின்றது. வர்ணங்கள் நித்யம், விபு (வ்யாபகம்) என்று சொல்லப்பட்டபோதிலும், அந்த வர்ணங்களின் க்ரமம் புருஷனால்தான் அமைக்கப்படவேண்டுமே யன்றி ஸ்வயமே ஏற்படாது. அதனால் அமைக்கப்படும் வர்ணங்களின் ஆகாரம் க்ஷணிகம் என்றே சொல்லப்படவேண்டும். வர்ணக்ரமத்தை அபேக்ஷித்தே அர்த்தபோதம் ஏற்படுகிறது என்று உங்களால் சொல்லப்படுவதால் வேதம் அநித்யம் என்றாகிறது. அநித்யமாக இருப்பதாலும் ஸ்வத:ப்ராமாண்யம் சொல்ல முடியாது என்ற தோஷம் உங்களுக்கும் ஸமமாகவே இருக்கிறது.

**248.** அவதாரிகை : வேதத்தின் சப்த ஆகாரம் (வர்ணக்ரமம்) என்பதே புருஷ அதீனம். அர்த்தத்தில் புருஷ புத்தி ஸம்பந்தமில்லாததால், அர்த்தத்தில் புருஷனுக்கு ஸ்வாதந்தர்யமில்லை. (புருஷ மதிக்குஸம்பந்தமில்லை) அதனால் வேதம் ஸ்வத:ப்ரமாணம் என்று சொல்லலாமே?

ச்லோகம் :

पुरुषमतिनिवेशो नास्ति वेदप्रमेये विषय इति यदीष्टा मानता स्वप्रयुक्ता ।
सदृशमिदमिदानीं कारणं मानतायां परमपुरुषसृष्टे वेदशास्त्रेऽप्यभीष्टे

ச்லோகார்த்தம் : வேத ப்ரமேயவிஷயத்தில், புருஷபுத்தியின் ப்ரவேசம் இல்லாமல் இருப்பதே, ஸ்வத:ப்ராமாண்யம் என்று ஒத்துக்கொள்ளப்படுமானால், ப்ரஹ்ம சிருஷ்ட்டமான வேத சாஸ்திரத்தின் ஸ்வத:ப்ராமாண்யம் என்பதும், அதே காரணத்தைக் கொண்டு எங்களால் ஒத்துக்கொள்ளப்படுகிறது. (அபௌருஷேயம் என்ற காரணத்தினால்)

வ்யாக்யானம் : வேதம் அநித்யம் என்றும் பௌருஷேயம் என்றும் சொல்லப்பட்ட போதிலும், அதன் அர்த்த விஷயத்தில் புருஷ புத்திக்கு ஸம்பந்தமில்லை. வேதத்தினால் அறியக்கூடியதல்ல, இந்த அர்த்தத்தைக் கொண்டு, இந்த சப்தம் ப்ரயோகிக்கப்பட வேண்டும் என்று கவிகள் தன் புத்தியைக் கொண்டு அமைப்பது போல் அமைக்கப்படவில்லை. வேதங்களிலுள்ள க்ரமம் முன்னால் எப்படி இருக்கின்றதோ அதே போன்ற ஆகாரம் புத்தியில் ஏற்பட்டு அதன்படி அமைக்கப்படுகிறது. கனபாடிகள் போல்

அர்த்தம் அறிந்து சொல்லப்படவில்லை. லௌகிக வாக்யம்போல் வேதவாக்யங்களில் அர்த்தத்தை மாற்றி அமைப்பதற்கு ஸ்வாதந்தர்யம் கிடையாது. ஆகையால் சப்தம் புருஷனிடமிருந்து ஏற்பட்டபோதிலும் அதன் அர்த்தங்களில் புருஷகல்ப்பனை ஏதுமில்லையென்பதால் ஸ்வத:ப்ராமாண்யம் உண்டு. புருஷனுடைய விவக்ஷையை அனுசரித்து ப்ராமாண்யம் சொல்லப்படவில்லையென்றால், அதேவிதம் எங்களாலும் சொல்ல முடியும். ஆகவே, வேதம் பரமபுருஷனால் சிருஷ்டிக்கப்பட்டது என்றாலும், அதற்கும் ப்ராமாண்யம் உண்டு என்றே சொல்லலாம். அர்த்த விஷயத்தில் புருஷ புத்தி ஸம்பந்தம் இருந்தால்தான் அதற்கு மூலப்ரமாணம் என்னவென்று சொல்லவேண்டும். வேதம் புத்தி பூர்வகமாக சிருஷ்டிக்கப்படவில்லையென்பதால் ப்ரமாணாந்தர அபேக்ஷை கிடையாது. அதனால் வேதம் ஸ்வத:ப்ரமாணம் என்றே சித்திக்கின்றது.

**249.** அவதாரிகை : ஈக்ஷணபூர்வமாகவே சிருஷ்டிக்கப்பட்டது என்று ச்ருதிவாக்யமே தெரிவிக்கின்றதால் புருஷபுத்தி ஸம்பந்தமில்லை என்று சொல்வது எப்படிப் பொருந்தும்! ஆகவே இரண்டும் ஸமானமே என்று சொல்வதும் சரியல்ல.

ச்லோகம் :

न हि खलु मतिपूर्वा ब्रह्मणः सृष्टिरिष्टा निगदितुरिव सृष्टिर्वेदविद्यासु नित्यम् ।
भवति तु पुनरेषा तस्य निःश्वासकल्पा श्रुतिवचनमपीदं वस्तु वक्ति स्फुटं नः

ச்லோகார்த்தம் : எவ்விதம் வேதாத்யயனம் செய்கின்றவனிடமிருந்து வேதங்கள் வருகின்றதோ (வெளிப்படுத்துகின்றதோ) அதேபோல் ப்ரஹ்மத்தினிடமிருந்து வேதங்களின் சித்தி என்பது புருஷபுத்தி ப்ரவேசம் இல்லாமலேயே (உஸ்வாஸம்) மூச்சுக்காற்று போல ஒவ்வொருகல்பத்திலும் ஏற்படுகிறது. இந்த விஷயம் பற்றி ச்ருதிவாக்யமே ஸ்பஷ்ட்டமாக எடுத்து உரைக்கின்றது.

வ்யாக்யானம் : 'தத ஐக்ஷத' என்றும் 'ஸோ காமயத' என்றும், பூத சிருஷ்டியைப் பற்றி தெரிவிக்கின்ற இடத்தில் தான் சொல்லப்படுகிறதேயன்றி வேதம் என்பதை ஆலோசித்து சிருஷ்டித்தார் என்று சொல்லப்படவில்லை. வேதம் என்பது எப்படி வித்யார்த்திகள்கனபாடிகள் என்பவர்களால் நித்யம் அத்யயனம் செய்யப்படுகிறதோ அதுபோல் ப்ரஹ்மத்தினிடமிருந்து வேதம் அபிவ்யக்தமாகின்றது. ப்ரதமஜீவர் என்று சொல்லப்படும் ஹிரண்யகர்ப்பரின் புத்தியில் ஆவிர்பாவத்தை அடைகின்றது என்பதால் புத்தி பூர்வகமா இல்லையா என்பதில் விவாதம் தேவையற்றது. ப்ரஹ்மத்தினிடமிருந்து வேதம், உஸ்வாஸநிஸ்வாஸம் போல், புருஷப்ரயத்னமின்றி அனுயாஸமாக வெளிப்பட்டது என்று ச்ருதிவாக்யமே தெரிவிக்கின்றது. அதனால் வேதம் புருஷபுத்திஸம்பந்தமுடையது அல்லவென்பதால் வேதம் ஸ்வத:ப்ரமாணம் என்றே சித்திக்கின்றது.

**250.** அவதாரிகை : புருஷபுத்திபூர்வகம் என்பதற்காக அப்ராமாண்யம் சொல்லப்படவில்லை புருஷனால் சிருஷ்டிக்கப்பட்டது என்பதால் அப்ராமாண்யம் சொல்லப்படலாமே? என்றால், அவ்விதம் சொல்லப்படுவதில் வ்யபிசாரம்ஸம்பவிக்கின்றது.

ச்லோகம் :

अपि च पुरुषकर्मोद्भूतिकानीन्द्रियाणि स्फुटमिव गमयन्ति स्वं स्वमन्यानपेक्षम् ।
विषयमिति हि दृष्टं तद्वदिष्टं च तस्मादिह किमपि न चोद्यं वाच्यमेतद्भवद्भिः

ச்லோகார்த்தம் : மேலும் புருஷனுடைய கர்மத்தினுல் உண்டான இந்திரியங்கள் வேறெதையும் அபேக்ஷிக்காமலேயே விஷயத்தை தெரிவிக்கின்றது என்று அறிகின்ரேம். அதுபோலவே வேதத்தின்ஸ்வத:ப்ராமாண்யம் என்பதும் ஒத்துக்கொள்ளப்படுகின்றது என்பதால் இந்த விஷயத்தில் எவ்வித ஆக்ஷேபமும் உங்களால் செய்வதற்கு முடியாது.

வ்யாக்யானம் : பருஷனுடைய தர்மாதர்மங்கள் என்ற கர்மாவை அனுசரித்தே அந்தந்த இந்த்ரியங்கள் அதற்குரியவிஷயங்களை தெரிவிக்கின்றது. இவ்விதம் புருஷனுடைய கர்மத்வாரா சிருஷ்டிக்கப்பட்டதாக இருந்தபோதிலும் அந்த இந்த்ரியங்களின் ப்ராமாண்யத்திற்கு விரோதம் ஏதுமில்லை. அதேபோல் வேதம் புருஷ சிருஷ்டியாக இருந்த போதிலும் ப்ரமாணமாகலாம். பௌருஷேயத்வம் என்பதற்காக அப்ராமாண்யம் சொல்லப்படுமானுல் வ்யபிசாரம் ஏற்படுகிறது என்பது இதனுல் தெரிவிக்கப்பட்டது.

**251.** அவதாரிகை : வேதம், ப்ரத்யக்ஷாதிகள் போல் ப்ரமாணம் என்று எப்படிச் சொல்லமுடியும் ? இரண்டிற்கும் வித்யாஸம் இருக்கின்றதே ?

ச்லோகம் :

श्रुतिवचनमनेकं वक्ति तस्येक्षितृत्वं मतिमदिति ततस्तन्नेष्यते कस्य हेतोः ।
इति यदि मनुषे तन्मैव मंस्थाः कुतश्चेत्सकलकरणहीनं ब्रह्म नः शास्ति शास्त्रम्

ச்லோகார்த்தம் ; அனேகச்ருதிவாக்யங்கள் ப்ரஹ்மத்தின் ஈக்ஷணம் (ஈக்ஷித்ருத்வம்) பற்றிய விஷயத்தை தெரிவிக்கின்றது. அதனுல் வேதச்சிருஷ்டிஎன்பதும் (புத்தி) ப்ரமாணபூர்வகம் என்று எந்தகாரணத்தினுல் உங்களால் ஒத்துக்கொள்ளப்படுவதில்லை ? என்று சிந்திக்கப்படுமானுல், அந்த காரணம் சரியல்ல. ஏனெனில் ப்ரஹ்மமென்பது காரணங்கள் அற்றது என்றே சாஸ்திரம் நமக்கு தெரிவிக்கின்றது.

வ்யாக்யானம் : "ஸோகாமயத இதம் ஸர்வமஸ்ருஜத யதிதம் இஞ்ச்" என்று எதுவும் மிச்சமின்றி சிருஷ்டித்தாக வாக்யமே இருக்கின்றதால், வேதம் என்பதும் அதேபோல் சிருஷ்டிக்கப்பட்டது என்றுதானே சொல்லவேண்டும் ? அவ்விதம் ஒத்துக்கொள்ளாமல் இருப்பதற்கு காரணம் என்ன ? கரணஹீனமான ப்ரஹ்மமென்பது ஈக்ஷணம் செய்தது என்று சொல்வதே பொருந்தாது. 'அப்ராணேஹ்யமனு:, அபாணிபாதோ ஜவனே க்ருஹீதா' என்றும் அசக்ஷுஷ்கம் அச்ரோத்ரம் என்றெல்லாம் ப்ரஹ்மஸ்வரூபம் வர்ணிக்கப்படுகின்றதால் ஈக்ஷணம் என்பதற்கு வேறு விதமாகவே அர்த்தம் சொல்லப்படவேண்டும்.

**252.** அவதாரிகை : அப்படியானுல் ஈக்ஷணம் முதலான ச்ருதிவசனங்களின் தாத்பர்யம் என்ன ?

ச்லோகம் :

चितिगतजडशक्तेराद्य इष्टो विवर्तश्चितिनिकटनिवेशाल्लब्धदीप्तिर्जडोऽपि ।
श्रुतिशिरसि निषण्णैरीक्षणं कथ्यते तत्रतु परमपदस्यापीक्षणं बुद्धिवृत्तिः

ச்லோகார்த்தம் : ஜடமாக இருந்தபோதிலும், அவித்யையில் சைதன்ய அத்யாஸத்தினுல் அதில் ப்ரகாசம் ஏற்படுகிறது. சைதன்யத்தில் இருக்கின்ற இந்த ஜடமான அவித்யாசக்தியினுல் முதல் விகாரம் (பரிணுமம்) ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறது. இதுவே ஈக்ஷணம் என்று வேதாந்த குசலர்களால் சொல்லப்படுகிறது. ப்ரஹ்மத்தினுடைய ஈக்ஷணம் என்பது புத்தி வ்ருத்தி ரூபமானது அல்ல.

வ்யாக்யானம் : சிருஷ்டியென்பது அனுதியானதால், மாயை என்பதில் ஒவ்வொரு சிருஷ்டியும் ஸம்ஸ்க்காரரூபேண இருக்கின்றது. இந்த ஸம்ஸ்க்காரம் ச்ரஷ்ட்ட வ்யமான ப்ராணிகளின் கர்மாவினுல் உத்புத்தமாகிறது. அதாவது ஸம்ஸ்க்காரரூபேண சூக்ஷ்மரூபமாக இருந்தமாயை ப்ராணிகர்மவஸாத் (சுஷுப்தியிலிருந்து எழுந்திருப்பது போல்) அபிவ்யக்தமாகிறது. இந்த மாயாவ்ருத்தியைத்தான் ஈக்ஷணம் என்ற சப்தம் தெரிவிக்கின்றது. ஆகையால் இதை புத்தி வ்ருத்தி என்று சொல்லப்படுவதில்லை. சிருஷ்டி ஆரம்பத்தில் ஸம்ஸ்க்கார ரூபமாக இருக்கின்ற ஸ்ர்வபதார்த்த வாஸனையுடன் மாயை என்பது பரிணுமத்தை அடைகின்றபோது சைதன்யத்தினுல் ஸர்வமும் ப்ரகாசப்படுத்தப்படுகிறது. அதனுல் மாயாவி என்ற ஈச்வரனுக்கு ஈக்ஷணத்வம் என்பது உபசாராத் சொல்லப்படுகிறது. இந்தவிதம் சைதன்ய ஸஹாயத்தினுல் சாஸ்திரங்களில் சொல்லப்படுகிறது என்று சாஸ்திரார்த்தத்தை அறிந்தவர்களால் சொல்லப்படுகிறது. ப்ரபஞ்சம் என்பது ஜடத்தின் பரிணுமமே என்ருலும், சித்ஸ்வரூபத்தில் அத்யஸ்த்தமாக இருக்கின்றதால், மாயாயில் ஏற்படும் சித்ஸ்வரூப சாயையினுல் ஜடமான ஸர்வமும் சித்ஸ்வரூபம் போல் ப்ரகாசிக்கின்றது. ஸர்வ ப்ரபஞ்சமும் வாஸனுமயமாக அஞ்ஞானத்தில் லயத்தை அடைகின்றதால் சிருஷ்டி ஆரம்பிக்கின்றபோது முதலில் அங்குரம் போல் வெளிப்படுகின்றதையே ஈக்ஷணம் என்று சொல்லப்படுகிறது. அதனுல் ஜீவனைப்போல் ஈக்ஷணம் சொல்லப்படவில்லை.

**253.** அவதாரிகை : இந்த விஷயத்தில் வைசேஷிகர்களின் ஆக்ஷேபம் என்னவென்று விசாரிக்கப்படுகிறது.

ச்லோகம் :

ननु च डित्थडवित्थपदादिवत्सकलमेव तु सामयिकं पदम् ।
अनुमिमीमहि पूर्वनिदर्शनादनुमितिर्भवतीति किमद्भुतम्

ச்லோகார்த்தம் : டித்தன், டவித்தன் என்ற பதங்கள் போலவே எல்லா பதங்களும் ஈச்வரனுல் நிர்ணயம் செய்யப்பட்ட அர்த்தத்தை உடையது என்று அனுமானிக்கின்ருேம். அனுமான ப்ரயோகத்திற்கு முன்பு அறியப்பட்ட த்ருஷ்ட்டாந்தத்திலிருந்து அனுமிதி ஏற்படுகிறது என்பதில் ஆச்சர்யம் என்ன இருக்கிறது?

வ்யாக்யானம் : ப்ரஹ்மகார்யமாக இருந்த போதிலும் வேதம் என்பது, லௌகிக வாக்யம் போல் வேறு ப்ரமாணங்களால் அறியப்பட்டதல்ல. அபௌருஷேயம் என்று

சொல்லப்படுவதால் ப்ராமாண்யம் உண்டு என்று முன்னால் சொல்லப்பட்ட விஷயம் பாதிக்கக்கூடியதல்ல. ஆனால் இந்த விஷயத்தில், தார்க்கிகர்கள், நையாயிகர்கள் வேறுவிதமாக அபிப்ருயம் தெரிவிக்கின்றார்கள். அதாவது, ப்ராசீனமான வேதசப்தமும், அதன் அர்த்தஸம்பந்தமும் லௌகிகமான டித்தன், டவித்தன் முதலான சப்த ஸம்பந்தம் போல ஸங்கேதம் ஏற்பட்டிருக்க வேண்டும் என்பதால், வேத சிருஷ்டி என்பது புத்தி பூர்வகம் என்றே சொல்லவேண்டும், அதனால் பௌருஷேயம் என்றே அவர்களால் சொல்லப்படுகிறது. (இந்த சப்தத்தினால் இந்த பொருள் குறிக்கப்படவேண்டும் என்று தீர்மானிப்பது ஸங்கேதம்) இவ்விதம் தீர்மானிக்கவேண்டும் என்று சொல்வதற்கு என்ன வ்யாப்தி என்றால், "வேத சப்தங்களும் ஸங்கேதம் செய்யப்பட்ட அர்த்தத்தையே போதிக்கின்றது. ஏனெனில் பதங்களாக இருப்பதால், எப்படியெனில் டித்தன்,டவித்தன் என்ற பதங்கள் போல் என்ற த்ருஷ்ட்டாந்தத்தைக் கொண்டு அனுமானத்தினால் சாதிக்கின்றேன். ஆகவே வ்யாப்திஸம்பவிக்கின்றது என்று அவர்களால் சொல்லப்படுகிறது.

**254.** அவதாரிகை : இந்த ஆக்ஷேபம் சரியல்ல என்று தூஷிக்கப்படுகிறது.

ச்லோகம் :

अनादिवृद्धव्यवहारलक्षणे कथं प्रमाणे परिपन्थिनि स्थिते ।
गवादिशब्दे समयोऽनुमास्यते डवित्थशब्दादिवदेतदुच्यताम्

ச்லோகார்த்தம் : அனாதிவ்ருத்த விவகாரம் என்ற ப்ரமாணம் பாதகமாக இருக்கின்றதால், டவித்தன் முதலான சப்தங்கள் போல் கவாதி(பசு, கடம் போன்ற) சப்தங்களில் ஈச்வரஸங்கேதம் என்பதை எவ்வாறு அனுமானிக்கமுடியும்? இதற்கு உங்களால் பதில் சொல்லப்படவேண்டும்.

வ்யாக்யானம் : அனாதிகாலமாக தொடர்ந்து வருகின்ற வ்ருத்த விவகாரத்தினால்தான் பதபதார்த்த ஞானம் ஏற்படுகிறது என்பது ப்ரசித்தம்.ஆகவே, வ்ருத்த விவகாரம் என்ற ப்ரமாணத்தினால் உன் அனுமானம் பாதிக்கப்படுகிறது. அதனால் கவாதிசப்தங்கள், ஸங்கேதத்தினால்தான் அர்த்த போதம் ஆகிறது என்று சொல்லப்படுவது சரியல்ல. ஆவாப, உத்வாபம் என்பவைகளைக் கொண்டு அன்வயவ்யதிரேகத்தினால்தான் சப்தார்த்த ஸம்பந்தம் அனாதிகாலமாக அறியப்படுகிறது என்பதை அன்வயவ்யதி ரேகத்தைக் கொண்டே அறியலாம். எதனுடைய அன்வயவ்யதிரேகத்தை (க்கொண்டு) அனுசரித்து எது இருக்கின்றதோ அதுவே அதற்கு காரணம் என்பது லோக ப்ரசித்தம். நூல் இருந்தால்தான் வஸ்திரம் இருக்கும். வஸ்தரம் என்பதுநூல் இல்லாமல் இருக்கமுடியாது என்ற அனுமானத்தினால் உன் அனுமானம் பாதிக்கப்படுகிறது. சிருஷ்டி என்பதும் ப்ரளயம் என்பதும், சுஷுப்தியிலிருந்து எழுந்தவுடன் எப்படி பூர்வ ச்ருஷ்டியைப் போன்றே வ்யவஹாரம் செய்யப்படுகின்றதோ அதுபோல் ஞானம், கர்மா (கர்மா, உபாஸனம்) என்பவைகளைக் கொண்டு ஆதி ஜீவன் என்று சொல்லப்படும் ஹ்ரண்யகர்ப்பஸ்தானம் அடையப்படுகிறது. இந்த ஆதி ஜீவனை அனுசரித்தே முன் கல்பம் போலவே இந்த ச்ருஷ்டி ஏற்படுகிறது. அதேபோல் சுஷுப்தியிலிருந்து எழுந்தவுடன் முன்போலவே விவகாரம் செய்கின்றான். சுஷுப்தி நிலையிலிருந்து

எழுந்தவுடன் ஏற்கனவே வாஸனுமயமாக இருந்த வேதங்கள் அவனுடைய புத்திக்கு எப்படி விஷயமாகின்றதோ அதேபோல் பூர்வகல்பத்தில் இருந்த வேதங்கள் ஹிரண்யகர்ப்பருக்கு ப்ரகாசிக்கின்றது. இந்த விதம் பூர்வ கல்ப்பம் போன்ற விவகாரம் நடைபெறுகின்றதால், ஸங்கேதத்தினுல் சப்தார்த்த போதம் ஏற்படுகிறது என்று சொல்வது சரியல்ல.

**255.** அவதாரிகை : ஸங்கேதம் இருந்தால்தான் சப்தார்த்த போதம் ஏற்படும் என்றும் ஸங்கேதம் இல்லாவிடில் அர்த்த போதம் ஏற்படாது என்று அன்வய வ்யதிரேக வ்யாப்தி இருக்கின்றதென்றே சொல்லலாமே ? என்ருல்,

ச்லோகம் :

सतः प्रमाणाभिमतेषु पञ्चसु प्रमाणमक्षादिषु किंचिदीक्ष्यते ।
न हीह संबन्धरि तेन तस्य वः खपुष्पकल्पत्वमभावमानतः

ச்லோகார்த்தம் : பாவ பதார்த்தங்களை தெரிவிப்பதில் ப்ரமாணமாக ஒத்துக்கொள்ளப் படுகின்ற ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்களில், எந்த ஒரு ப்ரமாணமும் ஸங்கேத கர்த்தாவான ஈச்வரவிஷயத்தில் இருக்கின்றதாக அறியப்படவில்லை. ஆகையால், உங்கள்மதத்தில் அனுபலப்திப்ரமாணத்தினுல் ஈச்வரன் என்பவர் ஆகாச புஷ்ப்பத்திற்கு ஸமானமாகின்ருர்.

வ்யாக்யானம் : ஸங்கேதம் என்பது யாரால் செய்யப்பட்டது ? இந்த புருஷன்தான் ஸங்கேத கர்த்தா என்று சொல்லப்படுமானுல், அதற்கு என்ன ப்ரமாணம் ? ப்ரத்யக்ஷமா, அனுமானமா, அர்த்தாபத்தியா உபமானமா ? அல்லது ஆகமமா ? இவ்விதம் பாவப்ரமாணமாகச் சொல்லப்படும் ஐந்து விதமான ப்ரமாணங்களில் எந்த ப்ரமாணத்தினுல் ஸங்கேத கர்த்தா சித்திக்கின்ருன் என்று விசாரிக்கப்படுமானுல், இந்த ப்ரமாணங்கள் எதனுலும் அவ்விதம் கர்த்தா இருப்பதாக சித்தம் செய்யமுடியாது. ஸர்வ ஜகத்திற்கும் கர்த்தா ஒருவன் இருக்க வேண்டுமென்ற அனுமானத்தினுல் சித்திகின்ற ஈச்வரனே, அந்தந்த பதங்களுக்குரிய அர்த்தத்தை ஸங்கேதம் செய்து கொடுக்கின்ருர் என்றும், அதை அனுசரித்தே வ்ருத்த விவகாரங்கள் ஏற்படுகிறது என்று கல்ப்பிக்கலாமே ? என்ருல், அனுமானத்தினுல் எந்த ஈச்வரன் சிருஷ்டிக்கர்த்தா என்று சொல்லப்படுகிறதோ அந்த ஈச்வரன் ஸரீரமுள்ளவனு, அஸரீரனு என்பதெல்லாம் சித்திக்க முடியாது. அஸரீரன் என்ருல் வேதங்களை சிருஷ்டித்தார் என்றும், பத பதார்த்தங்களுக்கு ஸங்கேதங்களை அமைத்தார் என்பதும் பொருந்தாது. ஆகவே அனுமானத்தினுல் சாதிக்கப்படும் ஈச்வரனின் ஸ்வரூபம் என்ன என்பதை தெரிவிக்கும் சக்தி இந்த ப்ரமாணங்களுக்கு கிடையாது. உபமானத்தினுல் சாதிப்பதற்கு த்ருஷ்ட்டாந்தமே கிடையாது. சப்தம் என்ற ஆகம ப்ரமாணம் ஈச்வரன் ஸங்கேயிதா என்று தெரிவிப்பதாகச் சொல்லப்படுமானுல் அதை நம்புவதற்கு முடியாது. லௌகிக சப்தத்தினுல், இவன்தான் ஸங்கேதம் செய்கின்றவன் என்று ஒரு புருஷனை தெரிவிப்பதாக லோகத்தில் அறியப்படவில்லை.

அர்த்தாபத்தி என்ற ப்ரமாணம் வ்ருத்த விவகாரத்தில்தான் ஸம்பவிக்குமேயன்றி, ஸங்கேதம் என்பதில் ஸம்பவிக்கமுடியாது. இந்தவிதம் பாவவஸ்து விஷயகமான

ப்ரமாணம் எதனுலும் ஸங்கேதம் சித்திக்கவில்லை. அதனுல் அனுபலப்தி என்ற அபாவப்ரமாணத்தினுல் அறியப்படுகிறதா என்ருல், அனுபலப்தி என்ற ப்ரமாணம் ஸங்கேதம் செய்கின்ற ஈச்வரன் ஒருவன் இல்லையென்றே தெரிவிக்கின்றது. சப்தார்த்த ஸங்கேதம் ஏற்படுவதற்கு காரணமாக ஒரு புருஷன் இருக்கிருன் என்பதை (அவ்விதம் ஏற்படும் காலத்தில்) அனுபலப்தி ப்ரமாணம் தெரிவிக்கமுடியாது. அனுபலப்தி என்ற ப்ரமாணம், ஏற்கனவே அறியப்பட்ட வஸ்து அந்த ஸமயம் அங்கு இல்லாமல் இருக்குமானுல், அந்தவஸ்து இருந்தால் தெரியும், தெரியாததால் இல்லையென்று வஸ்து அபாவத்தை தெரிவிக்குமேயன்றி ஏற்கனவே அறியப்படாத ஒரு வஸ்துவை, அந்த வஸ்து அங்கு இல்லை என்று தெரிவிக்கமுடியாது. எப்போதும் அறியப்படாதவஸ்துவை, எப்போதுமே அப்பேர்ப்பட்ட வஸ்து இல்லை என்று அனுபலப்தியினுல் அறிகின்ருேம் என்று சொல்லலாம். ஆகவே இந்த விதம் ஸங்கேதயித்ரு என்று ஒரு போதும் யாரும் இல்லையென்பதையே அனுபலப்தி ப்ரமாணம் தெரிவிப்பதாகச் சொல்லலாம். ஆகவே ஸங்கேத கர்த்தா என்பது ஆகாச புஷ்ப்பம் போல் கல்ப்பனை என்றே சித்திக்கின்றது. எந்தப்ரமாணத்தைக் கொண்டும் ஸங்கேதயிதா சித்திப்பதாகச் சொல்லமுடியாது.

**256.** அவதாரிகை : ஏதோ ஓரிடத்தில், ஏதோ ஒரு காலத்தில் அனுபலப்தி ப்ரமாணத்தினுல் கடாதிகள் சித்திக்கவில்லை என்பதற்காக, எங்குமே எந்தக் காலத்திலும் கடாதிகளே கிடையாது என்று எவ்விதம் சாதிக்க முடியும்?

ச்லோகம் :

पुरोपलब्धो विषयो न दृश्यते यदा प्रमाणैरिह भावगोचरैः ।
तदा तु तत्रानुपलब्धिकारणं किमप्यभावादपरं हि मृग्यते

ச்லோகார்த்தம் : முதலில் அறியப்பட்ட ஒரு விஷயம், பாவவஸ்து போதகப்ரமாணங்களினுல் அறியப்படவில்லையென்ருல், அந்த அஞ்ஞானத்திற்கு அபாவத்திலிருந்து வேருன ஒரு காரணம் தேட வேண்டியதாக இருகிறது (அன்வேஷணம் செய்யப்பட வேண்டியதாகிறது)

வ்யாக்யானம் : ப்ரத்யக்ஷம் முதலான ப்ரமாணங்கள் ஐந்தும் ஈச்வரன் ஸங்கேதயிதா இல்லையென்று தெரிவிப்பதற்காகவோ, அனுபலப்தி என்ற பரமாணத்தைக் கொண்டு ஸங்கேத கர்த்தா வென்று யாராவது இருந்தால் அறியப்பட்டிருக்கும் அவ்விதம் அறியப்படாததால் எவருமே இல்லையென்றும் எவ்விதம் சாதிக்கமுடியும்? பாவ வஸ்த்துக்களாக இருந்தபோதிலும், அந்த வஸ்து இருட்டில் இருக்குமானுல் அறிவதற்கு முடியாது. அதற்காக வஸ்துவே இல்லையென்று சொல்வதில்லை. அப்படியானுல் ஏன் அந்த வஸ்து தெரியவில்லை என்ருல் தமஸ் என்பதனுல் அந்த வஸ்து மறைக்கப்பட்டிருப்பதால் அறியப்படவில்லை என்று தெரியாமல் இருப்பதற்கு காரணம் தேடிக்கண்டுபிடித்து, இன்னகாரணத்தினுல் இவ்விதம் காரணம் சொல்லமுடியும். ஆனுல் எங்குமே, எவராலும், எப்போதுமே அறியப்படாத ஒன்றை ஏன் தெரியவில்லை என்று காரணவிசாரம் செய்வதற்கோ கேள்விக்கோ இடமே இல்லை.

**257.** அவதாரிகை : ப்ரத்யக்ஷம் முதலான பஞ்ச ப்ரமாணங்களுக்கும் விஷயமாகவில்லை என்றால், அந்தவஸ்து அத்யந்த அஸத் என்றே தீர்மானிக்கவேண்டும்.

**ச்லோகம் :**

अत्यन्तानुपलब्धवस्तुनि पुनर्यः पञ्चकानुद्भवस्तस्याभावनिमित्तकः स न पुनस्तत्रापरं कारणम् ।
अन्विच्छन्ति मनीषिणो न हि शशेऽदृष्टे विषाणेऽस्तितां तत्रादर्शनकारणान्तरपरा हेत्वन्तरोन्वेषिणः

**ச்லோகார்த்தம் :** அத்யந்தம் அறியப்படாத வஸ்துவில் பஞ்சப்ரமாணங்களும் ப்ரவ்ருத்திக்காமல் இருப்பதற்கு காரணம் அதனுடைய அபாவமேயாகும். இந்தவிஷயத்தில் புத்திமான்கள் வேறொரு காரணத்தை அன்வேஷிக்கமாட்டார்கள். முயலின்கொம்பு அறியப்படாதபோது புத்திமான்கள் அந்த (அஞ்ஞானம்) அறியாமைக்கு, அபாவத்திலிருந்து வேறுகாரணம் என்பதை தேடுவதில்லை.

**வ்யாக்யானம் :** அத்யந்த அஸத்தாக இருப்பதனால்தான், அந்தவஸ்து இல்லையென்பது அனுபலப்திப்ரமாணத்தினால் அறியப்படுகிறது என்று சொல்லலாமேயன்றி வேறு எந்தக்காரணத்தினாலும் சொல்லமுடியாது. முயல் கொம்பு இல்லையென்றும் அத்யாந்தம் அஸத் என்று முயல் சிரஸில்கொம்பு இருப்பதாக அறியப்படவில்லை என்ற காரணத்தைக்கொண்டே தீர்மானிக்கின்றோம். இதில் விசாரம் செய்வதற்குரிய விஷயம் ஏதுமில்லை. ஆகையால் முன்னால் எந்தப்ரமாணத்திற்கும் விஷயமாகாத ஒன்றை அனுபலப்தியினால் சாதிப்பதாக சொல்வதற்கு முடியாது.

**258** அவதாரிகை : சப்தத்திற்கும், அதன் அர்த்தத்திற்கும் ஸங்கேதத்தினால் ஸம்பந்தம் ஏற்படச்செய்வதற்கு ஈச்வரனாலும் முடியாது.

**ச்லோகம் :**

विषमदुर्गमदेशसहस्रगः कथमिवैष नरः समयक्रियाम् ।
सकलशब्दतदर्थनिवेशिनीं वदविधातुमलं स्वयमेकलः

**ச்லோகார்த்தம் :** ஸ்வயம் தனியே இருந்துகொண்டு செல்லக்கூடியதாக இல்லாத அனேக விஷமஸ்தலங்களில் சென்று ஒருபுருஷன் எல்லாபதங்களுக்கும் அதன் அர்த்தங்களுக்கும் இடையே இருக்கின்றஸங்கேதம் என்பதை எவ்வாறு விதிக்க முடியும் ?

**வ்யாக்யானம் :** வேதம் என்ற ப்ரமாணத்தைக்கொண்டுதான் ஈச்வரன் சாதிக்கப்படவேண்டும் என்ற அவச்யமில்லையென்றும் அனுமானத்தைக்கொண்டே சாதிக்கலாம் என்று சொல்லப்படுவதை ஒத்துக்கொள்ளப்பட்ட போதிலும், ஈச்வரன் ஸங்கேதயிதா என்பதை எவ்விதமும் சாதிக்க முடியாது. அதாவது, ஈச்வரன் ஸசரீரன் என்று சொல்லமுடியாது. அசரீரனாக இருக்கின்ற ஈச்வரன் சப்தம் என்பதை கேட்கவேண்டும். அந்த அர்த்தத்தை (வஸ்துவை) பார்க்கவேண்டும். அதன் பிறகு அதற்குரிய அர்த்தங்களை ஸங்கேதம் செய்யவேண்டுமானால் அவைகளுக்குரிய காரணங்கள் வேண்டும். இவ்வித தோஷங்களை நிவர்த்திப்பதற்காக ஈச்வரன் சரீரத்துடன் கூடினவன் என்று சொல்லப்படுமானால் ஒரேபுருஷன் ப்ரபஞ்சத்திலுள்ள

ஸர்வதேசங்களிலுள்ள ஸர்வவஸ்துக்களையும் பார்த்து அதற்குரிய சப்தத்தைக்கொண்டு ஸங்கேதம் செய்யவேண்டும். அவ்விதம் செய்வதற்கு முடியும் என்று தெரிவிப்பதற்கு ஏதாவது ஒருத்ருஷ்ட்டாந்தம் இருக்குமானால்தான் அதைக்கொண்டு அனுமானிக்கலாம். த்ருஷ்ட்டாந்தமே கிடையாது என்றால் அனுமானத்தினால் எவ்விதம் சாதிக்கமுடியும்? கார்யகரணஸங்காதத்துடன் கூடிய, சரீரமுடையவன் பரிச்சின்னனாக இருக்கின்றதால் ப்ரபஞ்சத்திலுள்ள வஸ்துக்களை அறிந்து ஸங்கேதம் செய்கிறான் என்பது பொருந்தாதவிஷயம். ஆகவே, பரமேச்வரனாக இருந்தபோதிலும் சப்தத்திற்கும் அதன் அர்த்தத்திற்கும் ஸங்கேதம் (ஸம்பந்தம்) செய்வதற்கு முடியாது. இந்த விஷயத்தை தெரிவிக்கின்ற இந்த ச்லோத்தில் 'நர' என்றபதம் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதற்கு பதிலாக 'ஹர' என்றபதம் சேர்க்கப்பட்ட ஒருபாடமும் இருக்கிறது. 'ஹர' என்றபதம் ஈச்வரனையே குறிப்பிடுகின்றதால், ஈச்வரனாக இருந்தபோதிலும் சரீரத்வம் உள்ளவனாக இருப்பவனுக்கு என்னதோஷம் ஸம்பவிக்கின்றதோ அந்த தோஷமே ஸம்பவிக்கின்றது என்று சொல்லப்படுகிறது.

**259.** அவதாரிகை : ஏகபுருஷனாக இருந்தாலும் யோகசக்தியினால் அனேக சரீரங்களை சிருஷ்டித்து, அதில் ப்ரவேசிப்பதனாலோ, அல்லது மற்றவரிடம் இல்லாத அற்புதசக்தி அவரிடம் இருப்பதாகவோ சொல்லப்பட்டாலும் கூட ஸர்வ சப்தங்களுக்கும் அதன் அர்த்தங்களுக்கும் ஸங்கேதம் செய்வதென்பது முடியாத கார்யம்.

ச்லோகம் :

अपि च किंचिदपि प्रतिपादकं न हि यदा पदमस्ति जगन्मुखे ।
अनभिधाय पदेन तदा कथं समयमेष करिष्यति शंकरः

ச்லோகார்த்தம் : மேலும் ஜகத் ஆரம்பகாலத்தில் ப்ரதிபாதகங்களான பதங்கள் ஏதும் இல்லாதபோது ஈச்வரன் ஏதாவது ஒருபதத்தை சொல்லாமல் எப்படி சப்தஸங்கேதத்தை எவ்வாறு செய்திருக்கமுடியும்?

வ்யாக்யானம் : ஈச்வரன் ஏகம் என்றாலும், யோகசக்தியினால் அனேக சரீரங்களை எடுத்துக்கொண்டாலும் அல்லது ஒரேசரீரத்தில் அனேகவிசித்ரசக்தி இருக்கின்றது என்று சொல்லப்பட்டாலும் கூட சப்தத்திற்கும் அதன் அர்த்தத்திற்கும் ஸங்கேதம் செய்வதென்பது இயலாது. ஏனெனில் இந்த சப்தம், இந்த வஸ்துவை தெரிவிக்கின்றது என்று ஸங்கேதம் செய்வதற்கு முன்பு அந்தசப்தம் வாக்கினால் ப்ரயோகம் செய்யப்படவேண்டும். முதலில் இதற்கு பெயர், இது என்று சொல்லவேண்டுமானால், இது, அது, என்ற சப்தமே அதன் அர்த்தத்தை எப்படி தெரிவிக்கின்றது என்று சொல்லவேண்டும் 'இது' என்ற சப்தம் என்ன அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்பதை குறிப்பிடுவதற்கு வேறொரு சப்தம் இருக்கின்றது என்று மேன்மேலும் கேள்விக்கு இடமாகின்றது. அதனால் அனவஸ்த்தை என்ற தோஷம்ஸம்பவிக்கின்றது. உதாரணமாக இதோ நிற்கின்றானே அவன் பெயர் தேவதத்தன் என்று தெரிவிக்கவேண்டுமானால், முதலில் எந்த சப்தத்தினால் எந்த பதம் குறிக்கப்படுகிறது என்றும், எப்படி அறிவது? ஜகத் உற்பத்திகாலத்தில் (ஸமயத்தில்) சப்தங்கள் (பதங்கள்) என்பதே இல்லாததால், எதனால் எந்தவஸ்து குறிப்பிடப்படமுடியும்? ஆகவே, சங்கரரேயானாலும் இந்த விஷயத்தில் எதுவும் செய்யமுடியாது.

**260.** அவதாரிகை : ஒரு வஸ்துவை விரலினுல் சுட்டிக்காட்டி இது என்று தெரிவிக்கலாமே என்ருல், அவ்விதமும் சொல்லமுடியாது.

ச்லோகம் :

अभिनयेन करिष्यति चेदयं समयमेतदतीव हि दुर्घटम् ।
न हि पदार्थसहस्रविमिश्रिते गवि तदाऽभिनयात्समयो भवेत्

ச்லோகார்த்தம் : அபிநயத்தினுல் சப்தஸங்கேதம் என்பதை செய்யலாம் என்று சொல்லப்படுமானுல், அதுவும் ஒரு போதும் முடியாத கார்யம். ஏனெனில் சிருஷ்டி ஆரம்பத்தில் பலபதார்த்தங்களுடன் கூடிஇருக்கின்ற ஒரு பசுவை, அபிநயத்தினுல் தெரிவிப்பது என்பது ஸம்பவிக்கமுடியாது.

வ்யாக்யானம் : வஸ்து என்ருல், அதில் குணம், க்ரியை, த்ரவ்யம், ஸம்பந்தம் என்றபல அம்ஸங்கள் இருக்கின்றது. உதாரணமாக பசு என்பதை சுட்டிக்காட்டி 'இதுபசு' என்று போதிக்கப்படுமானுல், அந்தபசுவின் வெளுப்புநிறம் என்பது பசுவா? கொம்புபசுவா? அல்லது நிற்கின்ற செய்கை என்பது பசுவா? என்று அனேக அம்ஸங்கள் உள்ள இவைகளில் எது பசு என்ற சப்தத்திற்கு அர்த்தம் என்பதே அறியமுடியாது.

**261.** அவதாரிகை : இதையன்றி வேறு தோஷங்களும் ஸம்பவிக்கின்றது.

ச்லோகம் :

अपि च लौकिकमानबलाश्रयादधिगते विषये समयो भवेत् ।
अनुपलब्धसतत्त्वकदेवताप्रभृतिकार्यगतः समयः कुतः

ச்லோகார்த்தம் : மேலும், லௌகிக ப்ரமாணங்களால் அறியப்பட்டவிஷயங்களில் சப்தஸங்கேதம் என்பது ஸம்பவிக்கும். அவ்வாறு அறியப்படாத ஸ்வரூபத்தையுடைய தேவதை முதலான விஷயங்களில் சப்தஸங்கேதம் எவ்வாறு ஸம்பவிக்க முடியும்?

வ்யாக்யானம் : நம்மால் அறியப்படக்கூடிய லௌகிக விஷயங்களில்ஸங்கேதக்ரஹம் ஏற்படுகிறது என்று ஒத்துக்கொண்டபோதிலும், வேதத்தில் தெரிவிக்கப்படும் தேவதாதி சப்தங்களில் எப்படி சுட்டிக்காட்டி அதன் அர்த்தத்தை தெரிவிக்கமுடியும்? அதுமட்டுமல்ல, ஸங்கேதகர்த்தா யார்? இவர்தான் இந்த சப்தத்திற்கு ஸங்கேதம் செய்தார் என்று ஒருவரை ஒத்துக்கொள்ளப்படுமானுல் அந்த கர்த்தாவை லோகத்தில் ஸ்மரிக்கப்படவேண்டுமே? அவ்விதஸ்மரணம் யாருக்குமே ஏற்படாததால் சப்தத்திற்கு ஸங்கேதம் என்பது யாராலும் செய்யப்படவில்லையென்றே சித்திக்கின்றது.

**262.** அவதாரிகை : எவரோ ஒருவரால், சப்தார்த்தத்திற்கு ஸங்கேதம் செய்யப்பட்டிருக்கு மானுல், அவரைப்பற்றிய ஸ்மரணம் அவச்யம் ஏற்படவேண்டும் அவ்விதம் ஏற்படாததால் ஸங்கேதம் செய்யப்பட்டது என்ற விஷயம் ஒத்துக்கொள்ளக்கூடியதல்ல.

ச்லோகம் :

अपि च कर्तुरनुस्मरणं भवेद्यदि चकार पुमान्समयं गिराम् ।
न खलु कर्तृगबुद्धिबलं बिना व्यवहृतिर्भवति व्यवहर्तरि

ச்லோகார்த்தம் : மேலும், ஈச்வரன் சப்தஸங்கேதத்தைச் செய்கிறார் என்றால் அந்த ஸங்கேத கர்த்தாவின் ஸ்மரணம் ஏற்படவேண்டும் சப்தஸங்கேதம் என்பதை செய்கின்றவனுடைய ஸ்மரணம் இல்லாமல் விவகாரம் செய்கின்ற ஒருவனிடம் அந்த விவகாரம் ஸம்பவிக்காது.

வ்யாக்யானம் : மற்றதர்க்கம் முதலான சாஸ்திரங்களில் அவைகளின் கர்த்தாயார் என்று தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அதேபோல் வேத வேதாந்தங்களிள் உள்ள சப்தார்த்ததிற்கு ஸங்கேதம் செய்தவர் யார் என்று சொல்லப்படவுமில்லை, அவ்விதம் ஒருவர் இருந்ததாகஸ்மரிக்கப்படவுமில்லை. வ்யவஹாரகாலத்தில் இவ்விதம் ஸங்கேதம் செய்த கர்த்தாவின் ஸ்மரணம் ஏற்படுகிறது என்பதில் உதாரணம் ஏதாவது இருக்கின்றதா ? என்றால் பாணினி என்பவரால் செய்யப்பட்ட "வ்ருத்திராதைச்" என்பது போன்ற அனேக சூத்ரங்கள் இருக்கின்றது. இந்த சூத்ரங்களுக்கு அனேக அர்த்தங்களை ஸங்கேதம் செய்து கொடுத்திருக்கின்றார். அதாவது 'ஆ, ஐ, ஔ' என்ற அக்ஷரத்திற்கு வ்ருத்தி என்று அர்த்தம் செய்யவேண்டும் என்று தெரிவிக்கின்றார். அதேபோல் பிங்களர் என்ற மஹரிஷி 'தி' 'ஸ்ரீ' 'ஸ்திரீம்' என்ற சப்தங்கள் வ்ருத்தங்களின் பெயர் என்று ஸம்ஞைசெய்திருக்கின்றார். கணங்கள் என்பதைக்கொண்டு வ்ருத்தங்கள் அமைக்கப்படுகிறது. (யகணம் ஸகணம் ரகணம் என்ற கணங்களுக்கு இதுவே பெயர் என்று ஸம்ஞைசெய்திருக்கின்றார்) இந்தவிதம் 'ஆ'காரம் முதலான அக்ஷரங்களில்பாணினி, பிங்களர், என்பவர்களால் ஸம்ஞை செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது என்பதை ஸ்மரிக்காமல், எவராலும் இந்த வ்யவஹாரம் செய்யப்படவில்லை என்பது லோகப்ரசித்தம். இதுபோல் வேத வேதாந்தங்களில் செய்யப்பட்டிருப்பதாக அறிவதற்குரிய வ்யாப்தி ஏதுமில்லை. அதனால் சப்தத்திற்கும், ப்ரபஞ்சத்திலுள்ள அர்த்தத்திற்கும் உள்ள ஸம்பந்தம் ஸங்கேதம் செய்யப்பட்டிருக்கிறது என்ற விஷயம் ஒரு போதும் சித்திக்க முடியாது.

263. அவதாரிகை : இதே விஷயம் த்ருஷ்டாந்தத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

न खलु पाणिनिपिङ्गलसंज्ञया व्यवहरन्ति तयोः स्मरणं विना ।
पदपदार्थपरस्परसंगतिं निरमिमीत ततो न जगद्गुरुः

ச்லோகார்த்தம் : பாணினி, பிங்களர் என்பவர்களின் ஸ்மரணம் இல்லாமல் இவர்களால் செய்யப்பட்ட பதங்களினால், ஜனங்கள் எவரும் விவகாரம் செய்வதில்லை. ஆகையால் பதபதார்த்தங்களின் ஸம்பந்தத்தை ஜகத் குருவான ஈச்வரன் ஏற்படுத்தவில்லை.

வ்யாக்யானம் : இதுவரை விசாரிக்கப்பட்டதிலிருந்து பதபதார்த்தங்களை ஸங்கேதம் செய்யப்பட்டது என்ற விஷயம் ஒத்துக் கொள்ள முடியாது என்று தெரிவித்து இந்த

விஷயம் ஒரு முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது. ஸர்வ பூஜ்யரான ஈச்வரன், பரமேச்வரன் ஸர்வஞ்ஞன் என்று நையாயிகர்கள் தெரிவிக்கின்றார்கள். வ்ருஷபத்வஜன், மஹாதேவன் என்பவர் கணாதாதி முனீச்வரர்களுக்கு ஈச்வரன் என்று சொல்லப்படுகிறது. அதாவது "விமதம் ஸகர்த்ருகம், கார்யத்வாத், கடவத்" என்று ஈச்வரனை நையாயிகர்கள் அனுமானத்தினால் ஈச்வரனை சித்தம் செய்கிறார்கள். அந்த ஈச்வரன் ஸர்வஞ்ஞன், ஸர்வசக்தன் என்றும் அவருடைய ஞானம் தங்கு தடை அற்றது என்றும் கணாதர் முதலான முனிவர்களால் சொல்லப்படுகிறது. இந்தவிதம் அவர்களால் சாதிக்கப்படும் ஈச்வரன் எப்பேர்ப்பட்டவராக இருந்தாலும், சப்தார்த்த ஸங்கேதம் செய்தார் என்பதை ஒப்புக் கொள்ளமுடியாது.

**264.** அவதாரிகை : இவ்விதம் சப்தார்த்த ஸம்பந்த கர்த்தா ஒருவர் இருப்பதாக ப்ரமாணமே ஏதுமில்லை என்று சொல்லமுடியாது. அனுமானம் என்ற ப்ரமாணத்தைக் கொண்டே சித்தம் செய்யலாம்.

ச்லோகம் :

मतिमतां प्रवरो वृषभध्वजः कणभुगदिमुनिप्रवरः प्रभुः ।
ननु धरादिजगद्रचनाबलादनुमितोऽनवखण्डितशक्तिकः

ச்லோகார்த்தம் : புத்திமான்களில் ச்ரேஷ்ட்டரும், கணாதர் முதலான முனி ச்ரேஷ்ட்டர்களுக்கு ப்ரபுவும், ப்ருதிவ்யாதி ஜகத் சிருஷ்டி மூலம் அனுமானிக்கப்படுபவரும், அகண்ட சக்தியுடையவருமான பரமேச்வரன் பதபதார்த்த ஸம்பந்தத்தை ஏற்படுத்தவில்லை.

வ்யாக்யானம் : "இந்த ஜகத் ஸர்வஞ்ஞனை ஈச்வரனால்தான் சிருஷ்டிக்கப்பட்டிருக்க வேண்டும், கார்யத்வாத் (அவ்வப்போது உண்டாகின்றதால் காதாசித்கத்வாத்) ஆத்மாபோல நித்யமாக இல்லாததால்" என்ற வ்யதிரேக த்ருஷ்ட்டாந்தம் மூலம் அனுமானத்தினாலேயே ஈச்வரனை சித்தம் செய்யலாமே?

**265.** அவதாரிகை : இந்த அனுமானம் சித்தஸாதனம் என்பதால் தூஷிக்கப்படுகிறது.

ச்லோகம் :

अपि तु वैदिकवाङ्मनसातिगानुदितलुप्तचिदेकरसात्प्रभोः ।
अभवदानकदुन्दुभिनन्दनादमतिपूर्वमिदं सकलं जगत्

ச்லோகார்த்தம் : மேலும் வேதத்தினால் மட்டும் அறியப்படுபவனும் வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாதவனும் நித்ய சைதன்ய ஸ்வரூபனுமான க்ருஷ்ண பரமாத்மாவிடமிருந்து புத்தி பூர்வகமாக இல்லாமல் இந்த ஸமஸ்த்த ப்ரபஞ்சமும் உண்டாகி இருக்கின்றது.

வ்யாக்யானம் : கார்யம் என்ற லிங்கத்தைக் கொண்டு இதற்கு காரணமான கர்த்தா ஒருவன் ஸர்வஞ்ஞனாகவும் ஸர்வசக்தனாகவும் இருக்க வேண்டுமென்றும் அவ்விதம் இல்லையென்றால் ஜகத்திற்கு கர்த்தாவென்பதோ, அவன் நித்யம் என்றோ சொல்ல முடியாது என்று அனுமானத்தினால் சித்திக்கின்ற ஈச்வரனே ஜகத் காரணம் என்று ஒத்துக்கொள்வதற்கு முடியாது. ஏனெனில் "யதோவாசோ நிவர்த்தந்தே

அப்ராப்யமனஸாஸஹ" என்று வேதவாக்யம் ஈச்வரனே தெரிவிக்கின்றது. அதனுல் வேதத்திஞல் சித்தம் செய்யப்பட்ட ஈச்வரனேத்தான் ஜகத் காரணமாக ஒப்புக்கொள்ளப்பட வேண்டும்.

கேவல சைதன்யத்திலிருந்தோ, அல்லது வஸுதேவ புத்ரனுன ஸ்ரீக்ருஷ்ண பகவானிடமிருந்தோ இந்த ஜகத் என்பது புத்தி பூர்வமாக சிருஷ்டிக்கப்பட்டதாக சொல்வதற்கு முடியாது. ஈச்வரனிடமிருந்து உஸ்வாஸ நிஸ்வாஸம் போல் அனுயாஸமாக உண்டாயிற்று என்று சொல்லப்படுகினறதால், அபின்ன நிமித்தோபாதான காரணமாக ஈச்வரனே வேதம் தெரிவிக்கின்றது. தார்க்கிகனுல் ஈச்வரன் இவ்விதம் ஒத்துக்கொள்ளப்பட வில்லே. நிமித்த காரணம் என்றே அனுமானத்திஞல் தெரிவிக்கின்ருர்கள். ஆகவே, 'யதோவா இமானி பூதானி ஜாயந்தே' என்ற வாக்யத்திஞல் அபின்ன நிமித்தோபாதானம் ஈச்வரன் என்று வேதாந்தத்திஞல் சித்திக்கின்றது. வாக், மனஸ் என்பவைகளுக்கெல்லாம் அகோசரம் என்று சொல்லப்படும் விசேஷணத்திஞல் வேறு எந்த ப்ரமாணத்தைக் கொண்டும் அறியமுடியாது. நித்ய சைதன்ய ஸ்வரூபமான ப்ரஹ்மமென்பதை எந்த வ்யாப்தியைக் கொண்டு அனுமானிக்க முடியும்? நித்யஞானஸ்வரூபம் என்பதால், த்ரவ்யத்தைப்போல், ஸர்வஞ்ஞத்வம் முதலானவைகள் குணங்கள் என்றும் அந்த குணங்களுக்கு ஈச்வரன் ஆச்ரயம் என்று சொல்வது பொருத்தமற்றது. "வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸு துர்லபம்" என்று ஸ்ம்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. இவ்விதம் ஸர்வாத்மகமாக ஈச்வரனே அறிந்து கொள்வதென்பது சுலபமல்ல. ஆகவே வேறு எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமாக இல்லாத விஷயத்தில் வேதம் ஒன்றே ப்ரமாணமாகிறது. அதனுல் வேதத்திஞல் சித்தம் செய்யப்பட்ட ஈச்வரனே மறுபடி அனுமானத்திஞல் சித்தம் செய்வதென்பது முடியாத கார்யம் என்பது மட்டுமல்ல, அதற்கு தேவையும் கிடையாது. இந்தவிதம் வேதத்திஞல் சித்தம் செய்யப்பட்டதை அனுமானத்திஞல் சித்தம் செய்வதென்பதே சித்த ஸாதன தோஷம். ஆகவே சாஸ்திரம் என்பதையன்றி வேறு எந்த ப்ரமாணத்திற்கும் ஈச்வரன் விஷயமல்ல என்பது சித்திக்கின்றது.

**266.** அவதாரிகை : 'வேத வாக்யங்கள் என்பதும் புத்தி பூர்வமாகவே இருக்கவேண்டும், ஏனெனில் அவைகளும் வாக்யங்களாக இருப்பதனுல், லௌகிக வாக்யம் போல்" என்று அனுமானத்திஞல் சித்திக்கின்றது என்று சொல்லலாமே?

ச்லோகம் :

ननु लौकिकवचसां नरमतिपूर्वकरचना परिदृश्यत इति वैदिकवचसामनुमिनुमः ।
वचनं श्रुतिशिरसामपि नरधीकृतरचनं वचनत्वत इव लौकिकजननिर्मितिवचनम्

ச்லோகார்த்தம் : லௌகிகவாக்யங்கள் புருஷபுத்தி பூர்வமாகவே செய்யப்படுகின்றது என்று அறியப்படுகிறது. ஆகையால் வைதிகவாக்யங்களும் அவ்வாறே என்று அனுமானிக்கின்ருேம். லௌகிகஜனங்களால் செய்யப்பட்ட வாக்யங்களைப்போல், வேதாந்த வாக்யங்களும் வாக்யங்களாக இருக்கின்றதால் புருஷ புத்தியிஞல் செய்யப்பட்டதேயாகும்.

விஷயம் ஒரு முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது. ஸர்வ பூஜ்யரான ஈச்வரன், பரமேச்வரன் ஸர்வஞ்ஞன் என்று நையாயிகர்கள் தெரிவிக்கின்ருர்கள். வ்ருஷபத்வஜன், மஹாதேவன் என்பவர் கணபுகாதி முனீச்வரர்களுக்கு ஈச்வரன் என்று சொல்லப்படுகிறது. அதாவது "விமதம் ஸகர்த்ருகம், கார்யத்வாத், கடவத்" என்று ஈச்வரனை நையாயிகர்கள் அனுமானத்தினுல் ஈச்வரனை சித்தம் செய்கிருர்கள். அந்த ஈச்வரன் ஸர்வஞ்ஞன், ஸர்வசக்தன் என்றும் அவருடைய ஞானம் தங்கு தடை அற்றது என்றும் கணுதர் முதலான முனிவர்களால் சொல்லப்படுகிறது. இந்தவிதம் அவர்களால் சாதிக்கப்படும் ஈச்வரன் எப்பேர்பட்டவராக இருந்தாலும், சப்தார்த்த ஸங்கேதம் செய்தார் என்பதை ஒப்புக் கொள்ளமுடியாது.

**264.** அவதாரிகை : இவ்விதம் சப்தார்த்த ஸம்பந்த கர்த்தா ஒருவர் இருப்பதாக ப்ரமாணமே ஏதுமில்லை என்று சொல்லமுடியாது. அனுமானம் என்ற ப்ரமாணத்தைக் கொண்டே சித்தம் செய்யலாம்.

ச்லோகம் :

मतिमतां प्रवरो वृषभध्वजः कणभुगदिमुनिप्रवरः प्रभुः ।
ननु धरादिजगद्रचनाबलादनुमितोऽनवखण्डितशक्तिकः

ச்லோகார்த்தம் : புத்திமான்களில் ச்ரேஷ்ட்டரும், கணுதர் முதலான முனி ச்ரேஷ்ட்டர்களுக்கு ப்ரபுவும், ப்ருதிவ்யாதி ஜகத் சிருஷ்டி மூலம் அனுமானிக்கப்படுபவரும், அகண்ட சக்தியுடையவருமான பரமேச்வரன் பதபதார்த்த ஸம்பந்தத்தை ஏற்படுத்தவில்லை.

வ்யாக்யானம் : "இந்த ஜகத் ஸர்வஞ்ஞனை ஈச்வரனுல்தான் சிருஷ்டிக்கப்பட்டிருக்க வேண்டும், கார்யத்வாத் (அவ்வப்போது உண்டாகின்றதால் காதாசித்கத்வாத்) ஆத்மாபோல நித்யமாக இல்லாததால்" என்ற வ்யதிரேக த்ருஷ்ட்டாந்தம் மூலம் அனுமானத்தினுலேயே ஈச்வரனை சித்தம் செய்யலாமே ?

**265.** அவதாரிகை : இந்த அனுமானம் சித்தஸாதனம் என்பதால் தூஷிக்கப்படுகிறது.

ச்லோகம் :

अपि तु वैदिकवाङ्मनसातिगानुदितलुप्तचिदेकरसात्प्रभोः ।
अभवदानकदुन्दुभिनन्दनादमतिपूर्वमिदं सकलं जगत्

ச்லோகார்த்தம் : மேலும் வேதத்தினுல் மட்டும் அறியப்படுபவனும் வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாதவனும் நித்ய சைதன்ய ஸ்வரூபனுமான க்ருஷ்ண பரமாத்மாவிடமிருந்து புத்தி பூர்வகமாக இல்லாமல் இந்த ஸமஸ்த்த ப்ரபஞ்சமும் உண்டாகி இருக்கின்றது.

வ்யாக்யானம் : கார்யம் என்ற லிங்கத்தைக் கொண்டு இதற்கு காரணமான கர்த்தா ஒருவன் ஸர்வஞ்ஞுனுகவும் ஸர்வசக்தனுகவும் இருக்க வேண்டுமென்றும் அவ்விதம் இல்லையென்ருல் ஜகத்திற்கு கர்த்தாவென்பதோ, அவன் நித்யம் என்றோ சொல்ல முடியாது என்று அனுமானத்தினுல் சித்திக்கின்ற ஈச்வரனே ஜகத் காரணம் என்று ஒத்துக்கொள்வதற்கு முடியாது. ஏனெனில் "யதோவாசோ நிவர்த்தந்தே

அப்ராப்யமனஸாஸஹ" என்று வேதவாக்யம் ஈச்வரனை தெரிவிக்கின்றது. அதனுல் வேதத்தினுல் சித்தம் செய்யப்பட்ட ஈச்வரனைத்தான் ஜகத் காரணமாக ஒப்புக்கொள்ளப்பட வேண்டும்.

கேவல சைதன்யத்திலிருந்தோ, அல்லது வஸுதேவ புத்ரனுன ஸ்ரீக்ருஷ்ண பகவானிடமிருந்தோ இந்த ஜகத் என்பது புத்தி பூர்வமாக சிருஷ்டிக்கப்பட்டதாக சொல்வதற்கு முடியாது. ஈச்வரனிடமிருந்து உஸ்வாஸ நிஸ்வாஸம் போல் அனுயாஸமாக உண்டாயிற்று என்று சொல்லப்படுகினற்தால், அபின்ன நிமித்தோபாதான காரணமாக ஈச்வரனை வேதம் தெரிவிக்கின்றது. தார்க்கிகனுல் ஈச்வரன் இவ்விதம் ஒத்துக்கொள்ளப்பட வில்லை. நிமித்த காரணம் என்றே அனுமானத்தினுல் தெரிவிக்கின்ருர்கள். ஆகவே, 'யதோவா இமானி பூதானி ஜாயந்தே' என்ற வாக்யத்தினுல் அபின்ன நிமித்தோபாதானம் ஈச்வரன் என்று வேதாந்தத்தினுல் சித்திக்கின்றது. வாக், மனஸ் என்பவைகளுக்கெல்லாம் அகோசரம் என்று சொல்லப்படும் விசேஷணத்தினுல் வேறு எந்த ப்ரமாணத்தைக் கொண்டும் அறியமுடியாது. நித்ய சைதன்ய ஸ்வரூபமான ப்ரஹ்மமென்பதை எந்த வ்யாப்தியைக் கொண்டு அனுமானிக்க முடியும்? நித்யஞானஸ்வரூபம் என்பதால், த்ரவ்யத்தைப்போல், ஸர்வஞ்ஞத்வம் முதலானவைகள் குணங்கள் என்றும் அந்த குணங்களுக்கு ஈச்வரன் ஆச்ரயம் என்று சொல்வது பொருத்தமற்றது. "வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸு துர்லபம்" என்று ஸ்ம்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது. இவ்விதம் ஸர்வாத்மகமாக ஈச்வரனை அறிந்து கொள்வதென்பது சுலபமல்ல. ஆகவே வேறு எந்த ப்ரமாணத்திற்கும் விஷயமாக இல்லாத விஷயத்தில் வேதம் ஒன்றே ப்ரமாணமாகிறது. அதனுல் வேதத்தினுல் சித்தம் செய்யப்பட்ட ஈச்வரனை மறுபடி அனுமானத்தினுல் சித்தம் செய்வதென்பது முடியாத கார்யம் என்பது மட்டுமல்ல, அதற்கு தேவையும் கிடையாது. இந்தவிதம் வேதத்தினுல் சித்தம் செய்யப்பட்டதை அனுமானத்தினுல் சித்தம் செய்வதென்பதே சித்த ஸாதன தோஷம். ஆகவே சாஸ்திரம் என்பதையன்றி வேறு எந்த ப்ரமாணத்திற்கும் ஈச்வரன் விஷயமல்ல என்பது சித்திக்கின்றது.

**266.** அவதாரிகை : 'வேத வாக்யங்கள் என்பதும் புத்தி பூர்வமாகவே இருக்கவேண்டும், ஏனெனில் அவைகளும் வாக்யங்களாக இருப்பதனுல், லௌகிக வாக்யம் போல்" என்று அனுமானத்தினுல் சித்திக்கின்றது என்று சொல்லலாமே?

**ச்லோகம் :**

ननु लौकिकवचसां नरमतिपूर्वकरचना परिदृश्यत इति वैदिकवचसामनुमिनुमः ।
वचनं श्रुतिशिरसामपि नरधीकृतरचनं वचनत्वत इव लौकिकजननिर्मितिवचनम्

**ச்லோகார்த்தம் :** லௌகிகவாக்யங்கள் புருஷபுத்தி பூர்வமாகவே செய்யப்படுகின்றது என்று அறியப்படுகிறது. ஆகையால் வைதிகவாக்யங்களும் அவ்வாறே என்று அனுமானிக்கின்ருேம். லௌகிகஜனங்களால் செய்யப்பட்ட வாக்யங்களைப்போல், வேதாந்த வாக்யங்களும் வாக்யங்களாக இருக்கின்றதால் புருஷ புத்தியினுல் செய்யப்பட்டதேயாகும்.

வ்யாக்யானம் : பலவிதமான யுக்திகளைக்கொண்டு வேதம் பௌருஷேயமில்லை என்று சாதிக்கப்பட்டது. ஆனாலும் 'வேதவசனமும்' வாக்யமாக இருக்கின்றதால் புருஷபுத்தி பூர்வமாகத்தானே இருக்கவேண்டும் என்று வாக்யம் என்ற வ்யாப்தியையும், லௌகிகவாக்யம்போல் என்ற த்ருஷ்ட்டாந்தத்தையும்கொண்டு சாதிக்கின்றோம் என்பதை இந்த ச்லோகத்தில் "பரித்ருச்ய" என்றவரை உள்ள பூர்வார்த்தத்தில் வ்யாப்தியை தெரிவிக்கப்படுகிறது. அதன் பிறகு வ்யாப்தமானலிங்கம் பக்ஷத்தில் இருக்கின்றது என்று விளக்கப்படுகிறது. வேதம் என்பதும் வசனமாக (வாக்யமாக) இருப்பதால் புருஷபுத்திபூர்வகமாகவே இருக்கவேண்டும் என்று சாதிக்கின்றோம் என்று சொல்லப்படுகிறது. ஹேதுவிற்கும் சாத்யத்திற்கும் வ்யாப்தியும், ஹேது என்பது பக்ஷத்தில் இருக்கின்தென்று தீர்மானிக்கப்படுமானால் அனுமானம் என்பது சித்திக்கின்றது. வேதாந்த வாக்யம் என்பதே பக்ஷஸ்வரூபம், புருஷபுத்தியினால் ஏற்பட்டது என்பது சாத்யம். லௌகிகவாக்யம்போல் என்பது த்ருஷ்ட்டாந்தம்.

**267.** அவதாரிகை : வேதவாக்யமும் வாக்யமாக இருப்பதால், வக்தா ஒருவன் இருக்கவேண்டுமென்று சித்தித்த போதிலும், அந்த வக்தா ஸர்வஞ்ஞன ஈச்வரன்தான் என்பது எப்படிசித்திக்கமுடியும்? என்றால்,

ச்லோகம் :

न च मादृशजनधीकृतरचनं श्रुतिवचनं भवितुं क्षममिति वैदिकरचनाबलमिषतः ।
अनुमीयत इह शूलभृदिति चेदिदमशुभं न हि वैदिकवचसामभिभवानास्पदमनुमा

ச்லோகார்த்தம் : ச்ருதிவாக்யங்களானது என்னைப்போன்ற மனிதர்களால் செய்யப்படமுடியாது. அதனால் வேதரசனாஸாமர்த்யம் என்பது வேறு எங்கும் ஸம்பவிக்காத தால் ஈச்வரன் அனுமானிக்கப்படுகிறான் (சித்தா:-) இது தோஷமுடையதாகும். ஏனெனில் அனுமானம் என்பது வைதிகவாக்யங்களை சாதிப்பதற்கு காரணமாகாது.

வ்யாக்யானம் : வேதகர்த்தாவாக ஒருவர் ஒத்துக்கொள்ளப்பட்டபோதிலும் அவர் ஈச்வரனாகத்தான் இருக்கவேண்டுமெனபதில்லை என்று "அனபிமத அர்த்த சித்தி: அர்த்தாந்தரம்" என்று ஸந்தேகப்படதேவையில்லை. ஏனெனில் பக்ஷதர்மமான அதீந்த்ரியார்த்த வேதத்தைச்செய்தவர் என்பதனாலேயே அவர் ஸர்வஞ்ஞர் ஸர்வசக்தர் என்று, தானே அர்த்தம் கிடைக்கின்றது. எந்த விஷயம் பற்றி எவர் தெரிவிக்கின்றாரோ, அதைவிட அதிக விஷயங்களை அவர் அறிந்திருக்கவேண்டும். அதனால் அதிகஞானமுடையவராகவே இருக்கவேண்டும் என்பதால் இப்பேர்ப்பட்ட வேதம் நம்போன்ற சிற்றறிவு உடையவர்களால் செய்திருக்க முடியாது என்பதாலும் பரமேச்வரன்தான் செய்திருக்கவேண்டும் என்றும் அனுமானத்தினாலேயே தீர்மானிக்கலாமே?

சித்தா : வேதகர்த்தா, ஜீவ விலக்ஷணனாக இருக்க வேண்டுமென்று அனுமானத்தினால் சாதிக்கப்படுமானால் அந்த அனுமானம் ஆகமத்தினால் பாதிக்கப்படுகிறது. லோகத்தில், ஸர்வஞ்ஞனாகவும், ஸர்வசக்தனாகவும், லோகத்தை சிருஷ்டிக்கக் கூடியவனாகவும் ஒருவன் இருக்கின்றான் என்று த்ருஷ்ட்டாந்தமாக

தெரிவிக்கமுடியாது. அதீந்த்ரியமான விஷயத்தில் ஆகமம் ஒன்றே ப்ரமாணம். இப்பேர்பட்ட ஆகம ப்ரமாணம் என்பதை அனுமானத்தினுல் பாதிக்கமுடியாது என்பது மட்டுமல்ல, ஆகமப்ரமாணத்தினுல் அனுமானமே பாதிக்கப்படுகிறது. அனுமானம் சித்திப்பதற்கும் த்ருஷ்டாந்தம் அபேக்ஷிக்கப்படுகிறது. ஆனுல் சாஸ்திரம் தெரிவிக்கின்ற விஷயம் சாதிப்பதற்கு த்ருஷ்ட்டாந்த அபேக்ஷை இல்லை. வேதம் என்பது ஸ்வதந்த்ரம். வேதம் தெரிவிக்கின்ற விஷயத்திற்கு விரோதமாக இருக்கின்ற அனுமானம் என்பது பாதிக்கப்படுகிறது.

**268.** அவதாரிகை : வேதம் புத்தி பூர்வகமாக செய்யப்பட்டதுதான் என்று சாதிக்கப்படும் அனுமானம், ஆகமம் என்ற ப்ரமாணத்தினுல் பாதிக்கப்படுகிறது.

ச்லோகம் :

ब्रह्म स्वयंभु परमात्मपदस्य वेदो निःश्वासकल्प इति चापरमामनन्ति ।
वाक्यं तदस्य मतिपूर्वकतानुमानं सद्यो निरस्यति न चेदपबाधितं स्यात्

ச்லோகார்த்தம் : வேதம் ஸ்வயம்பூ என்றும், பரமாத்மாவின் மூச்சுக்காற்றுக்கு ஸமானம் என்றும் வேதம் தெரிவிக்கின்றது. இந்த வாக்யங்கள் வேதம் புத்தி பூர்வகமாகச் செய்யப்பட்டது என்ற அனுமானத்தை உடனே நிஷேதம் செய்கின்றது. இல்லையென்ருல் வேதவாக்யம் பாதிக்கப்படும்.

வ்யாக்யானம் : குருபரம்பரை பற்றி தெரிவிக்கின்ற ஸந்தர்ப்பத்தில் பரமேஷ்டி குருவானஹ்ரண்ய கர்ப்பரிடமிருந்தே மற்றவர்கள் வேதத்தை அத்யயனம் செய்தார்கள். வேதம் என்பது ஹ்ரண்யகர்ப்பருக்கு ஸ்வயமே ப்ரகாசித்தது என்பதால் ஸ்வயம் பூ நித்யம் என்றும், எந்த ஒரு புருஷனுலும் செய்யப்பட்டது அல்லவென்று வேதவாக்யமே தெரிவிக்கின்றது. அதாவது "ப்ரஹ்மஸ்வயம்பூ ப்ரஹ்மனே நம': என்று (ப்ரஹ 2.6.3) 'ப்ரஹ்மஸ்வயம் ப்வயானர்ஷத்' என்று ப்ரஹ்மபதவாச்யமாக வேதம் நித்யம் என்றும் அந்த வேதத்திற்கு நமஸ்காரம் என்றும் இந்தவாக்யம் தெரிவிக்கின்றது. வேதம் பராதீனமாக இல்லையென்ற தன்மையினுல் நித்யம் என்று சிலமஹரிஷிகளால் சொல்லப்படுகிறது. 'அஸ்ய மஹதோ பூதஸ்ய நிஸ்வஸிதம்' என்று வேருெரு வாக்யமும் (ப்ரஹ 2.4.10) தெரிவிக்கின்றது. இப்பேர்ப்பட்ட வேதவாக்யங்களால், மதிபூர்வகம் என்ற அனுமானம் பாதிக்கப்படுகிறது என்றே சொல்லப்படவேண்டும். அவ்விதமின்றி அனுமானத்தினுல் ச்ருதிபாதிக்கப்படுவதாகச் சொல்ல நேரிடுமானுல், வேதம் என்பது நிர்விஷயம் என்ருகும். ஆகவே வேறு எந்த முறையிலும் வேதவசனங்களுக்கு அர்த்தம் செய்யமுடியாது. வேத ப்ரமாண்யத்திற்கு விரோதமாக அர்த்தம் செய்யமுடியாது. 'ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய:' என்ற விதியானது வேதத்தில் உள்ள அக்ஷரங்களுள் ஒரு அக்ஷரம் கூட அப்ரமாணமாகாது என்று வேதம் என்பதை நன்கு விசாரித்தறிந்த வித்வான்களால் சொல்லப்படுகிறது. ஆகவே எந்த ப்ரமாணத்தினுலும் வேதம் பாதிக்கப் படுவதாகச் சொல்வதற்கு முடியாது.

**269.** அவதாரிகை : மேலும், கூடஸ்த்த ஆத்மசைதன்யம், மாயையின் ஸஹாயத்தைக் கொண்டு அபுத்தி பூர்வகமாக இந்த ஜகத்தை சிருஷ்டித்ததாக ச்ருதிவாக்யமே

தெரிவிக்கின்றது. அதனுல் சிருஷ்டிக்கப்பட்ட ஜகத்தின் ஒரு அம்ஸமான வேதத்தை மட்டும் புத்தி பூர்வகமாக சிருஷ்டிக்கப்பட்டது என்று அனுமானத்தினுல் சாதிக்கப்படுவது பொருத்தமற்றது.

**ச்லோகம் :**

सृजति रक्षति संहरति प्रभुः सकलमेव निविश्य नियच्छति ।
अमतिपूर्वमिति श्रुतिशासने वद कथं मतिपूर्वकतानुमा

**ச்லோகார்த்தம் :** ஈச்வரன் மதிபூர்வகமாக இல்லாமல் ஸர்வத்தையும் சிருஷ்டிக்கின்ருன், ரக்ஷிக்கின்ருன், ஸம்ஹாரம் செய்கின்ருன், ஸர்வத்திலும் ப்ரவேசித்து நியமனம் செய்கின்ருன் என்று, இவ்விதம் ச்ருதி வாக்யம் இருக்கின்றபோது மதிபூர்வகம் என்ற அனுமானம் எவ்வாறு ஸம்பவிக்கும் ?

**வ்யாக்யானம் :** 'யதோ வா இமானிபூதானி' என்ற தைத்ரீய வாக்யத்திலுலும் 'யோ அந்தரோயமயதி' என்ற ப்ரஹதாரண்யக (அந்தர்யாமிப்ராஹ்மண) வாக்யத்திலுலும்" மஹதோ பூதஸ்ய நிச்வஸித மேதத், ரிக்வேத: யஜுர்வேத: ஸாமவேத". என்றெல்லாம் ப்ரஹதாரண்யக வாக்யம் தெரிவிக்கின்றது. அதே உபநிஷத், "அயம் சலோக:, பரச்சலோக: ஸர்வாணி சபூதானி அஸ்யைவ ஏதானி நிஸ்வஸிதானி" என்றும் (ப்ரஹ 3.7.1) தெரிவிக்கின்றது. அதாவது சிருஷ்டி முதலானவைகள் ப்ரஹ்மத்தினிடமிருந்தே உண்டாகிறது என்றும், சிருஷ்டிக்கப் பட்டவைகளில் அந்தராத்மாவாக இருந்து ஸர்வத்தையும் நியமனம் செய்கின்றது என்றும், இஹலோகம் பரலோகம் என்ற ஸர்வசிருஷ்டியும் நிஸ்வாஸம் போல் அனுயாஸமாக ஏற்பட்டது என்றும் வேதவசனமேஸ் பஷ்டடமாக ப்ரயத்ன பூர்வகமில்லை என்று தெரிவிக்கின்றது. அதனுல் கூடஸ்த்தரூபமான ப்ரஹ்மத்திற்கு, குலாலாதிகள் போல் ஜகத்சிருஷ்டிகாரணத் வம் சொல்லமுடியாது. அத்வைதமான தத்வம், வேருெரு ஸஹாயத்தைக் கொண்டு சிருஷ்டித்ததாகவும் சொல்லமுடியாது.

"மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாத்" (ஸ்வே - 4.10) என்றும், "தேவாத்மசக்திம் ஸ்வகுணை: நிரூடாம்" (ஸ்வே 1.3) என்றும் "இந்த்ரோ மாயாபி : புருரூபஈயதே" (ப்ரஹ 2.5.19) என்றும் அனேக ச்ருதிவசனங்களும் "மயா Sத்யக்ஷேணப்ரக்ருதி: ஸுயதே சசராசரம்" என்ற(பகவத்கீதா 9-10) ஸ்ம்ருதிவசனமும் மாயை, அவித்யை, அஞ்ஞானம் முதலான சப்தவாச்யமானதும், ஆத்மாவையே ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்ட ஜடமான ஸதஸத் விலக்ஷணமான அநிர்வசனீயமான மாயா த்வாரா ப்ரஹ்ம மென்பது ஜகத் சிருஷ்டிக்கு காரணமாகிறது. என்று அனேக ச்ருதி ஸம்ருதி வசனங்களால் தெரிவிக்கின்றது. என்னை அதிஷ்ட்டானமாகக்கொண்டமாயையே ஸர்வத்தையும் சிருஷ்டிக்கின்றது என்று கீதாவசனமே தெரிவிக்கின்றது. ஆகவே அஞ்ஞானத்திலிருந்தே ஜகத்தோன்றுகிறது என்பதைத் தவிர வேறு காரணம் எதுவும் சொல்லமுடியாது. இவ்வித காரணங்களைக்கொண்டுசிருஷ்டி என்பது அமதி பூர்வகம் (மதி ஞானம், அமதி அஞ்ஞானம்) என்றே சாஸனம் செய்கின்றது. அதனுல் புத்தி பூர்வகம் பௌருஷேயம் என்று சொல்லப்படும் அனுமானம் ஒத்துக்கொள்ளக் கூடியதல்ல.

**270.** அவதாரிகை : வேதம் என்பது ஆப்தன் ஒருவனால் அதன் அர்த்தங்கள் அறியப்பட்டு உபதேசம் செய்யப்படுவதாலேயே வேதம் ப்ரமாணமாகிறது என்று சொல்லப்படுமானால் அதுவும் சரியல்ல.

ச்லோகம் :

आप्तोक्तत्वप्रत्यये मानभावो वेदस्यास्य ज्ञायते मानभावे ।
विज्ञाते सत्याप्तपूर्वत्वसिद्धिरित्यन्योन्यापाश्रयत्वप्रसङ्गः

ச்லோகார்த்தம் : வேதம் என்பது ஆப்தனால் சொல்லப்பட்டது என்ற ஞானம் ஏற்படுமானால் ப்ரமாண்யம் சித்திக்கின்றது. வேதத்தின் ப்ராமாண்யம் அறியப்படுமானால் அது ஆப்தனால் சொல்லப்பட்டது என்று சித்திக்கின்றது. இவ்விதம் அன்யோன்ய ஆச்ரயதோஷம் சித்திக்கின்றது.

வ்யாக்யானம் : வேதம் ப்ரமாணம் என்று அறியப்பட்டால்தான் அதை உபதேசிக்கின்றவன் ஆப்தன் என்றாகும், ஆப்தன் என்று அறிந்தால்தான் அவன் உபதேசிப்பது ப்ரமாணம் என்றாகும். ஆகவே இரண்டும் அன்யோன்ய ஆச்ரயமாக இருக்கின்றதால் தோஷம் ஏற்படுகிறது.

**271.** அவதாரிகை : அப்படியானால் வேதம் ப்ரமாணம் என்று எப்படி சித்திக்கின்றது என்றால், ஸ்வயமே ப்ரமாணமாகின்றது என்றே சித்திக்கின்றது.

ச்லோகம் :

तस्मादेषा स्वप्रयुक्तप्रमाणभावज्ञाना वेदविद्याऽभ्युपेया ।
प्रामाण्यं स्यात्स्वप्रयुक्तं च तस्या वस्तुस्थित्या ज्ञप्तिवन्नान्यतस्तत्

ச்லோகார்த்தம் : ஆகையால் வைதிக ஞானத்தின் ப்ராமாண்யம் என்பது ஸ்வயம் அறியப்படுவதாகவே ஒத்துக் கொள்ளப்படவேண்டும். ஞப்தியை ப்போல் வைதிக ஞான ப்ராமாண்யத்தின் உற்பத்தியும் ஸ்வயமாகவே ஏற்படுகிறதேயன்றி வேறு காரணத்தினால் ஏற்படுவது அல்ல.

வ்யாக்யானம்: வேதம் என்பது ஸ்வயமே ப்ரமாணம் என்பதால்தான் ஸ்வத: ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது. வேதத்திலிருந்து ஞானம் ஏற்படுமானால் எதனால் ப்ரமாணமாகிறது என்ற கேள்விக்கே இடமில்லை.

(லௌகிக வாக்யங்களிலிருந்து ஏற்படும் ஞானமாக இருந்தாலும் கூட அதை ப்ரமை என்றே சொல்லவேண்டும், அப்ரமை என்று பின்னால் தீர்மானிக்கப்பட வேண்டும்) ஆப்தவாக்யம் என்பதால் ப்ராமாண்யம் சொல்லப்படுமானால் அன்யோன்ய ஆச்ரய தோஷம் ஸம்பவிக்கின்றது. வேதத்தினால் தெரிவிக்கப்படும் தர்மாதர்மங்கள் மற்ற ப்ரமாணங்களுக்கோ, புருஷபுத்திக்கோ விஷயமாக இல்லாததால், அனாப்தனால் சொல்லப்பட்டது என்று தீர்மானிக்க வேறு ப்ரமாணங்களே கிடையாது. ஆகவே, வேதம் ஸ்வத:ப்ரமாணம் என்றே சித்திக்கின்றது. மேலும் ஞானம் என்பது ஸ்வயமே ப்ரமாணமாகவே உண்டாகிறது. வேறு ஒன்றினால் ப்ரமாணமாக ஆகவில்லை. ஞானம்

ஏற்படுவதற்கு உரிய ஸாமக்ரியைகள் இருந்தால் உண்டாகின்றபோதே ப்ரமாணமாகவே உண்டாகின்றதால் வேதத்திலிருந்து ஏற்படும் விஞ்ஞானமும் ப்ரமாணமென்றே அறியப்படுகிறது. ஞப்தௌ ஸ்வதஸ்த்வம் என்பது போல் உத்பத்தௌ ஸ்வதஸ்த்வம் என்று ஞப்தியில் எப்படி ஸ்வத:ப்ராமாண்யம் சித்திக்கின்றதோ அதேபோல் அதன் உற்பத்தியிலும் ஸ்வதஸ்வம் சித்திக்கின்றது. ஞப்தியில் ப்ராமாண்யம் ஸ்வயமே உண்டாகிறது என்ருல் என்ன அர்த்தம் என்ருல் ஞானம் என்பது எதனுல் உண்டாகிறதோ அதுவே ப்ராமாண்யத்தையும் உண்டு பண்ணுகின்றது என்பதே அதன் அர்த்தம். ஆகவே, எந்த காரணத்திலிருந்து வேதஞானம் உண்டாகின்றதோ அப்போதே அந்தஞானம் (அபிவ்யக்தமாகின்றபோதே) ப்ரமையாகவே அபிவ்யக்தமாகின்றது. இது ப்ரமாணம் என்று தீர்மானிப்பதற்கு வேறுகாரணம் எதையும் அபேக்ஷிப்பதில்லே, அதேபோல் அதன் உற்பத்திக்கும் வேறுகாரண அபேக்ஷை எதுவுமில்லே.

(இந்த விஷயத்தில் நையாயிகர் விதமாக தெரிவிக்கிருர்கள் அதாவது ஞானம் என்பது உண்டாகின்ற போது அதற்கு ப்ராமாண்யம் கிடையாது என்றும், அந்த ஞானத்தினுல் அறியப்படும் விஷயம் (வஸ்து) உண்மையில் இருந்தால்தான் அதற்கு ப்ராமாண்யம் சித்திக்கிறது என்று ப்ராமாண்யம் பரத; அப்ராமாண்யம் ஸ்வத: சித்தம் என்று அனுமானத்தை கொண்டு சொல்கிருர்கள். அதாவது ப்ரத்யக்ஷ ப்ரமாணத்தில் இந்த்ரிய ஸன்னிகர்ஷம்குணம் என்றும், அனுமானம் என்பதில் ஹேது விற்கும் சாத்யத்திற்கும் உள்ள வ்யாப்தி குணம் என்றும், இவ்வித குணங்களே அபேக்ஷித்தே ஏற்படும் ஞானம் ப்ரமாணமாகிறது என்று சொல்கிருர்கள். இது சரியல்ல. ஞானஸாமக்ரியை இருந்து, அதிலிருந்து ஞானம் உண்டாகுமாளுல் உண்டாகின்றபோது அது ப்ரமாணமாகிவே உண்டாகிறது. அதனுல் அந்த ஞானம் ப்ரமை என்றே அறிகின்ருேம். இதையே உத்பத்தௌ ஸ்வதஸ்த்வம் என்றும் ஞானம் என்பது ஞப்தௌஸ்வதஸ்த்வம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே ஏற்பட்ட ஞானத்திற்கு மறுபடி பாதகஞானம் ஏற்படுமாளுல் அப்ரமாண்யம் என்று சித்திக்கும். ஆகையால் ஞானம் என்பது ஸ்வத:ஸ்வயமே ப்ரமாண்யம் என்றும் அப்ராமாண்யம் என்பதே பரத: சித்திக்கின்றது என்று வேதாந்த சித்தாந்தமாகச்சொல்லப்படுகிறது.)

**272.** அவதாரிகை : விவகாரத்திலும் ஸ்வத:ப்ராமாண்யம் இருக்கிறதென்று மேலே விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

ज्ञप्त्युत्पत्त्योर्यद्वदेवं प्रवृत्तावस्या युक्ता मानता स्वप्रयुक्ता ।
वेदोत्थाया बुद्धिवृत्तेर्न हीयमुत्पत्त्याऽन्यत्संविदे काङ्क्षतीति

ச்லோகார்த்தம் : வேதத்திலிருந்து ஏற்படுகின்ற ஞானத்தின் ஸ்வத:ப்ராமாண்யம் என்பது, ஞப்தி, உற்பத்தி இவைகளேப்போல் விஷய ப்ரகாசன விஷயத்திலும் ஸ்வயமாகவே ப்ரவ்ருத்திக்கின்றது. உற்பத்திக்குப் பிறகு விஷ்யப்ரகாசனத்திற்காக வேறு எதையும் அபேக்ஷிப்பதில்லே.

வ்யாக்யானம் : முன்னுல் எப்படி ஞானத்திற்கு ஸ்வத: ப்ராமாண்யம் சொல்லப்பட்டதோ அதேபோல் அந்த வேதத்திலிருந்து ஏற்படும் ஞானம் அதன் உற்பத்தி இரண்டிற்கும்

ப்ராமாண்யம் ஸ்வத: சித்திக்கின்றது போல்ப்ரவர்த்தி விஷயத்திலும் ப்ராமாண்யம் ஸ்வத: சித்திக்கின்றது. ஆகவே, ஞப்தி, அதன் உற்பத்தி ப்ரவர்த்தி என்ற மூன்றிலும் ப்ராமாண்யம் சித்திக்கின்றதால் இதுசரியா இல்லையா என்ற விஷயத்தில் வேறு எதையுமே அபேக்ஷிப்பதில்லை.

**273.** அவதாரிகை : இந்தவிதம் வேதம் ஸ்வத:ப்ரமாணம் என்று சித்திக்கின்றதால் ஈச்வரன் புத்திபூர்வகமாக சிருஷ்டித்தார் என்று சொல்லமுடியாது. ஆகையால் நிஸ்வாஸம் போல் ஈச்வரனிடமிருந்து ப்ரயத்னமின்றி உண்டாயிற்று என்றே சொல்லவேண்டும்.

ச்லோகம் :

विश्वं विष्णोरुत्थितं नामरूपं निःश्वासादिप्रल्यमित्याह वेदः ।
यत्तत्थ्यं वर्त्मना वर्णितेन तस्मान्मिथ्या पौरुषेयानुमानम्

ச்லோகார்த்தம் : விஷ்ணுவினிடமிருந்து உற்பத்தியான நாமரூப ப்ரபஞ்சம் என்பது மூச்சுக் காற்றுக்கு ஸமானம் என்று வேதம் தெரிவிக்கின்றது. முன்பு சொல்லப்பட்ட முறைப்படி இது ஸத்யமே ஆகும். ஆகையால் வேதம் பௌருஷேயம் என்ற அனுமானம் தோஷம் உடையது ஆகும்.

வ்யாக்யானம் : 'நரசிரம் என்பது சுசி' (சுத்தம்) என்றே ஒத்துக்கொள்ள வேண்டும். ஏனெனில் முத்து சிப்பி எப்படி சுசியோ அதுபோல், என்று அனுமானத்தினுல் சாதிக்கின்றேன் என்று சொல்லப்படுமானுல் அந்த அனுமானம் எப்படி ப்ரதிக்ஷத்தினுல் பாதிக்கப்படுகிறதோ அதேபோல் அபௌருஷேயமான வேதம் என்பது புத்தி பூர்வகம்தான் என்று அனுமானத்தினுல் சாதிக்கின்றேன் என்று சொல்லப்படுமானுல் ஆகம ப்ரமாணத்தினுல் பாதிக்கப்படும் இந்த அனுமானம் ப்ரமாணம் என்றே சொல்லமுடியாது. அதாவது நாமரூபாத்மகமான இந்த ஜகத் விஷ்ணுவினிடமிருந்து உஸ்வாஸ நிஸ்வாஸம்போல் அனுயாஸமாக உண்டாயிற்று என்று வேதவாக்யமே தெரிவிக்கின்றது. அதுவே உண்மை இந்த விஷயத்தை பாதிக்கக்கூடிய ப்ரமாணமும் ஏதுமில்லை. ஆகவே ச்ருதிப்ரமாணத்தை பாதித்து புத்தி பூர்வகம்தான் என்று செய்யப்படும் அனுமானம் அப்ரமாணம் என்றே தள்ளவேண்டும். (நரசிரம் என்பது அசுத்தம் அதற்கு உதாரணமாக சொல்லப்பட்ட முத்துச் சிப்பி என்பதும் அசுத்தம் என்பது ப்ரத்ய க்ஷமாக அறியப்படுவதால் அந்த அனுமானம் எவ்விதம் ப்ரமாணமாகாதோ அதுபோல் என்று அறியப்படவேண்டும்.

**274.** அவதாரிகை : வேதம் என்பது ஈச்வரவிவர்த்தம் என்ருலும், அல்லது பரிணுமம் என்றே சொல்லப்பட்டாலும், வேதம் அபுத்தி பூர்வகம் என்றே சொல்லவேண்டும். அதேபோல் வேதம் ஸ்வத: ப்ரமாணம் என்றே சித்திக்கின்றது. இவ்விதம் சொல்லப்படாமல் ச்ருதியுக்தி முதலானவைகளுக்கு விரோதமாகத் தெரிவிக்கப் படுமானுல் அது ஒத்துக் கொள்ளக்கூடியதல்ல என்று தெரிவித்து இந்த விஷயம் முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது.

**ச்லோகம் :**

परिणामविवर्तयोरतः परिक्लृप्तावपि वेदगोचरः ।
न च चोद्यलवोऽपि विद्यते कथितेनैव पथाऽनपेक्षितः

**ச்லோகார்த்தம் :** ஆகையால் பரிணுமமோ, விவர்த்தமோ, கல்பிப்பதன் மூலம் வேதவிஷயத்தில் ஒருவித ஆக்ஷேபமும் ஏற்படமுடியாது. முன்பு சொல்லப்பட்டபடி வேதம் ஸ்வதந்த்ரமாகவே இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** பூர்வ மீமாம்ஸா சாஸ்திரத்திலும் வேதம் ஸ்வத: ப்ரமாணம் என்றே சொல்லப்படுகிறது என்றும் அந்தவிஷயம் எங்களாலும் ஒத்துக் கொள்ளப்படுகிறது என்று முன்ஞல் சொல்லப்பட்ட விஷயத்தில் பலவித ஆக்ஷேபங்கள் செய்யப்பட்டது. அந்த ஆக்ஷேபங்கள் எல்லாம் சரியல்ல என்று நிரூபணம் செய்து வேதம் ஸ்வத: ப்ரமாணம் என்றே சித்தம் செய்யப்பட்டது.

**275.** அவதாரிகை : இதுவரை ப்ரஸங்க வஸாத் ஏற்பட்ட ஆக்ஷேபங்களுக்கு (பதில் தெரிவித்தன் மூலம்) பரிகாரம் செய்யப்பட்டது. இப்போது, தத்பதார்த்தம் த்வம்பதார்த்தம் என்ற இரண்டிலும் தள்ளப்படவேண்டிய அம்ஸம் என்ன? எடுத்துக் கொள்ளப்பட்ட வேண்டிய அம்ஸம் என்ன? என்று தெரிவிப்பதற்காக ஒவ்வொன்றிலும் நான்கு அம்ஸங்கள் இருக்கின்றதென்று விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

उपाधिमौपाधिकमान्तरं चिदाभासनं चित्प्रतिबिम्बकं च ।
चिद्विम्बमेवं चतुरः पदार्थान्विविच्य जानीहि तदर्थभाजः

**ச்லோகார்த்தம் :** தத்பதார்த்தமாக இருக்கின்ற உபாதி, உபாதிக்குள்ளே தோன்றுகின்ற (அறியப்படும்) சிதாபாஸன், சைதன்ய ப்ரதிபிம்பம், சைதன்ய பிம்பம் என்ற நான்கும் நிபுணமாக விவேசனம் செய்து அறிவாயாக.

**வ்யாக்யானம் :** கார்யம், காரணம், சாக்ஷ்யம், சாக்ஷி என்ற பேத வ்யவஹாரம் அனைத்தும் மாயாமாத்ரம் என்று யுக்திகளைக் கொண்டு முன்பபே விளக்கப்பட்டிருக்கிறது. ஈச்வரன் என்றும் ஜகத்காரணம் என்றும் சொல்லப்படும் விகல்பங்கள் ஸர்வமும் ப்ரஹ்மத்தில் ஆரோபிதம். ஆகையால்ப்ரஹ்மம் நிர்விசேஷம் ஸத்சித் சுகாத்மகம் என்று தத்பதார்த்த சோதனை செய்து முன்பே நிர்ணயம் செய்யப்பட்டிருக்கிறது. அதேபோல் த்வம்பதார்த்த சோதனை செய்யப்பட்டு தத்வம் பதார்த்தங்களுக்கு ஐக்யம் போதிப்பதற்காக, தத்த்வம் பதார்த்தங்களில் ஹேயம் எது? உபாதேயம் எது? என்று இரண்டு அம்ஸங்களையும் பற்றி விளக்கப்படுகிறது. உபாதியில் சித்ஸ் ஸ்வரூபம் ப்ரவேசிப்பதையே ஔபாதிகம் என்று சொல்லப்படுகிறது. உண்மையில் சைதன்யம் நிரூபாதிகம்தான். ஆனுலும் உபாதி விசிஷ்ட்டமாக இருக்கின்றதால் ஔபாதிகம் என்றும், உபாதியில் (அந்த:ப்ரவிஷ்ட்டம்) ப்ரவேசிப்பதை சித்ப்ரதிபிம்பம் என்றும், சிதாபாஸன் என்றும், அதற்கு காரணமான சித்ஸ்வரூபம் என்பது பிம்பம் என்றும் நான்கு அம்ஸம் தத்பதார்த்தத்தில் சொல்லப்படுகிறது.

**276.** அவதாரிகை : அதேபோல் த்வம் பதார்த்தத்திலும் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

तथा त्वमर्थेऽपि चतुष्ट्यं तत् विवेचनीयं निपुणेन भूत्वा ।
मतिश्चिदाभासनमेवमस्यां बिम्बं तदीयं प्रतिबिम्बकं च

ச்லோகார்த்தம் : அவ்விதமே பதார்த்தமாக இருக்கின்ற புத்தி உபாதி அதில் தோன்றுகிற சிதாபாஸன், சைதன்ய ப்ரதிபிம்பம், சைதன்ய பிம்பம் என்று நான்கும் நிபுணமாக விவேசனம் செய்து அறியப்படவேண்டும்.

வ்யாக்யானம் : அந்தஃகரணம் என்ற புத்தி உபாதி, அதில் தோன்றுகின்றசிதாபாஸன், அந்த ஆபாஸத்துடன் கூடிய சித்ப்ரதிபிம்பம் இதற்கு காரணமான பிம்ப சைதன்யம் என்ற இந்த நான்கு அம்ஸங்கள் த்வம் பதார்த்தத்தில் சொல்லப்படுகிறது.

**277.** அவதாரிகை : தத்பதார்த்தத்தில் சொல்லப்பட்ட நான்கு அம்ஸங்கள் மேலும் விளக்கப்படுகிறது.




ச்லோகம் :

उपाधिरज्ञानमनादिसिद्धमस्मिंश्चिदाभासनमीश्वरत्वम् ।
तदन्विता चित्प्रतिबिम्बकं स्यादुदीर्यते शुद्धचिदेव बिम्बम्

ச்லோகார்த்தம் : அநாதி சித்தமான அஞ்ஞானமே ஈச்வரனுக்கு உபாதி, அதில் தோன்றுகின்ற சிதாபாஸமே ஈச்வரத்வம், அந்த ஆபாஸத்துடன் சேர்ந்த சைதன்யமே ப்ரதிபிம்பமாகும். சுத்த சைதன்யமே பிம்பமாகும்.

வ்யாக்யானம் : சைதன்யத்துடன் கூடிய உபாதி என்பதே ஔபாதிகம். இந்த உபாதியும் சித்தைப் போலவே ப்ரகாசிக்கின்றதால் சிதாபாஸனம் என்று சொல்லப்படுகிறதேயன்றி உபாதி என்பது ஜடமானதால் உண்மையில் ப்ரகாசஸ்வரூப மில்லை. சித்ஸன்னிதானத்தில் சித்ஸம்பந்தத்தினுல் மாயை என்ற உபாதி வஸாத் ஏற்படும் ப்ரதிபலனமானசிதா பாஸத்திற்கு ஈச்வரத்வம் என்ற தன்மை ஏற்படுகிறது. இவ்வித மாயா ப்ரவ்ருத்தி காரணமாகவே ஈசனத்வம் ஸம்பவிக்கின்றது. ஆகவே மாயா ப்ரதிபிம்ப சைதன்யம் ஈச்வரன் என்றும், அதற்குகாரணமான சுத்த சைதன்யம் பிம்பம் என்றும் வ்யவஹாரம் செய்யப்படுகிறது. இவ்விதம் சைதன்யத்திற்கும் மாயைக்கும் ஏற்பட்ட ஸம்பந்தத்தினுலேயே இரண்டையும் பிரித்து அறிய முடியவில்லை. அதனுல், உபாதி தர்மங்களுடன் கூடினதாகவே சித்ஸ்வரூபம் அறியப்படுகிறது. நிர்விசேஷ சைதன்யத்தினிடம் ஈசிதவ்யம் என்பதெல்லாம் ஸம்பவிக்கமுடியாது. ஆகவே, சுத்த சித்ஸ்வரூபம் பிம்பம் என்றும் சிதாபாஸம் ப்ரதிபிம்பம் என்றும், மாயை என்ற உபாதி காரணமாக தத்பதவாச்யம் ஈச்வான் என்றும் லக்ஷ்யார்த்தம் சுத்திசித் என்றும் சொல்லப்படுகிறது.

**278.** அவதாரிகை : இதேபோல் த்வம் பதார்த்தத்திலுள்ள அம்ஸங்கள் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

उपाधिरन्तःकरणं त्वमर्थे जीवत्वमाभासनमत्र तद्वत् ।
तदन्विता चित्प्रतिबिम्बमेवमनन्वितां तामिह बिम्बमाहुः

ச்லோகார்த்தம் : த்வம்பதார்த்தத்தில் அந்த:கரணம் என்பதே உபாதியாகும். அதில் தோன்றுகின்ற சிதாபாஸமே ஜீவத்வமாகும். ஆபாஸத்துடன் சேர்ந்த சைதன்யமே ப்ரதிபிம்பமாகும். ஆபாஸத்துடன் ஸம்பந்தப்படாத சுத்த சைதன்யம் என்பதே பிம்பமாகும்.

வ்யாக்யானம் : அந்த:கரணம் என்ற உபாதியுடன் கூடிய சைதன்ய ப்ரதிபலனமே ஜீவன் என்று சொல்லப்படுகிறது. கார்யமான அந்த:கரணம் என்பது காரணமான சைதன்யத்திற்கு பரதந்த்ரமாக இருக்கின்றதால், அதில் ப்ரதிபலன சைதன்யம் அல்லது அந்த: கரண விசிஷ்ட்டசைதன்யம் என்பது ஆபாஸம் என்று சொல்லப்படுகிறது. இந்த ஆபாஸ ஸ்வரூபத்தில் தோன்றும் பாரதந்த்ரியம் அவிவேகத்தினுல் (பிம்ப) சைதன்யத்தில் இருப்பதாக தோன்றுகிறது. ஆகவே ஜீவபதப்ரவ்ருத்தி நிமித்தகமாகத் தோன்றுகின்ற சைதன்யம், அந்த: கரணம் என்ற உபாதியில் உள்ள பாரதந்த்ரியம் என்பதை தன்னிடம் ஏற்றுக்கொள்கின்ற காரணத்தினுல் தான் ஜீவன் என்று சொல்லப்படுகிறது. உபாதிகளிலோ அல்லது ஔபாதிக்கத்திலோ ஸம்பந்தம் அற்ற சைதன்யம், அவை எல்லாவற்றிர்க்கும் அதிஷ்ட்டானமாக இருக்கின்றது. அந்த சைதன்யமே பிம்பம் என்று ஆத்மஸ்வரூபதத்வம் என்னவென்று அறிந்த பெரியோர்களால் இவ்விதம் விபாகம் செய்துசொல்லப்படுகிறது.

**279.** அவதாரிகை : இவ்விதம் சுத்த சைதன்யத்தில் நான்கு அம்ஸங்கள் இருப்பதாக விபாகம் செய்து சொல்லப்படுமானுல் அத்வைதமேதத்வம் என்று எப்படி சித்திக்கமுடியும்?

ச்லோகம் :

उपाधिना सार्धमुपाधिजन्यमौपाधिकं सर्वमवेहि मिथ्या ।
भागं मृषा चित्प्रति बिम्बकेऽपि बिम्बं पुनः सत्यमशेषमेव

சலோகார்த்தம் : உபாதியுடன் உபாதிஜன்யமாக இருக்கின்ற ஔபாதிகம் அனைத்தும் மித்யையேயாகும். ப்ரதிபிம்பத்திலோ ஒரு அம்ஸம் மட்டுமே மித்யையாகும். பிம்பம் என்பதோ பூர்ணமாக ஸத்யமாகும்.

வ்யாக்யானம் : தத்பதார்த்தம், தத்வம்பதார்த்தம் என்ற இரண்டிலும் சொல்லப்பட்ட எட்டு அம்ஸங்களில், உபாதி என்பதும், ஔபாதிகம் என்பதும் முற்றிலும்மித்யை. உபாதியில் உள்ள அபிமானம் காரணமாகவே ஜீவத்வம் ஏற்படுகின்றதால் அந்த:கரணம் முதலான உபாதிகளில் உள்ள அபிமானம் விடப்படவேண்டும். சித்ப்ரதிபிம்பம் என்று சொல்லப்படுவதில் அசித்அம்ஸமான ஆபாஸத்தை மித்யை என்று அறிந்து தள்ளவேண்டும். அதில் உள்ள சிதம்ஸம் மட்டும் ஸத்யம் என்பதால் பிம்பம் என்பது முற்றிலும் ஸத்யம். உபாதி ஔபாதிகம் என்பது இரண்டும் முற்றிலும் மித்யை என்று சொல்லப்பட்டதால் அவை இரண்டையும் தள்ளி, ப்ரதிபிம்பம் என்பதில் மித்யாம்ஸத்தை விட்டு ஸத்யாம்ஸத்தைக்ரஹிக்க வேண்டும். ஆகவே, தத் வம்பதார்த்தங்ளில் லக்ஷயார்த்தமான சுத்த சைதன்யம் என்பதே உபாதேயம் (எடுத்துக்கொள்ளவேண்டிய

அம்ஸம்) மற்றஎல்லாமே அனுத்மாவாக இருக்கின்றதால் அவை எல்லாவற்றையும் ஹேயம் என்று அறிந்து தள்ளப்படவேண்டும்.

**280.** அவதாரிகை : நம்மால் அறியப்படுபவை எல்லாமே மித்யை என்றும், இவைகளுக்கெல்லாம் வேருக இருக்கின்றவஸ்து எதுவோ அதுவே ஸத்யம் என்று அறியவேண்டும். இந்த விஷயத்தில் ப்ரமாணம் என்னவென்பதை த்ருஷ்ட்டாந்தத்தின் மூலம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

अप्पात्रमप्पात्रगतत्वमेवमप्पात्रगोऽप्पात्रगताद्बहिष्ठः ।
दिवाकरो दिव्यवतिष्ठमानो न शक्यतेऽपोहितुमिद्धतेजाः

ச்லோகார்த்தம் : ஜலபாத்ரம், ஜலபாத்ரத்தில் தோன்றுகின்ற சூர்யனுடைய ஆபாஸம், ஜலபாத்ரத்தில் ப்ரதிபிம்பிதமானசூர்யன், ஜலபாத்ரத்திற்கு வெளியே ஆகாசத்தில் மிகப்ரகாசமுடன் இருக்கின்ற சூர்யன் இவைகளை நிஷேதம் செய்யமுடியாது.

வ்யாக்யானம் : ஜலபாத்ரம் என்பதும், அதில் ஏற்படும் ப்ரதிபலனம் முதலானஎல்லாமே மித்யை. இவ்விதம் ஜலபாத்ரத்தில் ப்ரதிபிம்பிக்கின்ற சூர்யனைக்காட்டிலும், இவைகளுக்கு காரணமாக இவைகளுக்கு வேருகஇருக்கின்ற பிம்பஸ்தானீயமான சூர்யன்தான் ஸத்யம், அதுவே சுத்தம், மற்ற மூன்றும் அசுத்தம்மித்யை என்றே அறியவேண்டும்.

**281.** அவதாரிகை : சொல்லப்பட்டத்ருஷ்ட்டாந்தத்தைக்கொண்டு தார்ஷ்ட்டாந்தம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

पुरं पुरस्थत्वमथो पुरस्थं पुराद्बहिः शुद्धमवस्थितं च ।
तथा परं ब्रह्म सुसूक्ष्मयाऽपि धिया निराकर्तुमशक्यमेव

ச்லோகார்த்தம் : அந்த:கரணம், அதில் அறியப்படும் ப்ரஹ்மசைதன்ய ஆபாஸம் அந்த: காரணத்தில் ப்ரதிபிம்பிதமான ப்ரஹ்மம், அந்த:கரணத்திற்கு அப்பால் இருக்கின்ற சுத்தமான ப்ரஹ்மம் இவைகளை சூக்ஷ்மபுத்தியினுல் கூட நிஷேதம் செய்யமுடியாது.

வ்யாக்யானம் : அஞ்ஞானம் என்ற உபாதி அல்லது அந்த:கரணம் என்ற உபாதியை இங்குபுரம் என்று (சரீரம்) சொல்லப்படுகிறது. புரம் என்பது உபாதி, புரஸ்தத்வம் சித் ஆபாஸம், புரஸ்த்தம் ப்ரதிபிம்பம் புரத்திற்கு வேருக இருக்கின்றது பிம்பம், அதுவே சுத்தம். இதுவே உபாதேயம் என்பதால் சுத்தம் என்று சொல்லப்படுகிறது. எப்படி ஜலபாத்ரம் முதலானவைகளுடன் ஸம்பந்தமில்லாததான ஆகாஸத்தில் இருக்கின்ற சூர்யன் சுத்தம் என்று சொல்லப்படுகிறதோ அதுபோல் பிம்பஸ்தானீயமான ஸ்வரூபம் சுத்தம் என்று அறியப்படவேண்டும். இப்பேர்ப்பட்ட சுத்த சித்ஸ்வரூபத்தை இல்லையென்று யாராலும் சொல்லமுடியாது. இவ்விதம் ஸர்வநிஷேதங்களுக்கெல்லாம் அவதியாக எந்தஸ்வரூபம் சொல்லப்படுகிறதோ அந்த அதிஷ்ட்டானஸ்வரூபத்தை இல்லையென்று அதிபுத்திசாலியாலும் சொல்லமுடியாது. "புருஷாத் நபரம் கிஞ்சித் ஸாகாஷ்ட்டா ஸாபராகதி": என்று கடோபநிஷத்வாக்யமும் இதேகருத்தை தெரிவிக்கின்றது.

**282.** **அவதாரிகை :** இவ்விதம் உபாதி - ஔபாதிகம் - ப்ரதிபிம்பம் என்பதெல்லாம் அந்ருதம் என்பதால், ப்ரஹ்ம மென்பதில் ஸவிஸேஷதன்மையென்பது அஞ்ஞானத்தினுல் ஏற்பட்டது என்பதால் அவையெல்லாம் மித்யை என்றே சித்திக்கின்றது.

**ச்லோகம் :**

न स्थानतोऽप्यस्ति परस्य तस्माद्विशेषयोगः परमार्थरूपः ।
स्वतः पुनर्दूरनिरस्तमेव परस्य तत्त्वस्य विशेषवत्त्म्

**ச்லோகார்த்தம் :** பரமாத்மாவிற்கு உபாதியினுலும் பாரமார்த்திகமான விசேஷஸம்பந்தம் என்பது கிடையாது. பரமாத்மாவிற்கு ஸ்வயமாகவே பாரமார்த்திகமான விசேஷஸம்பந்தம் என்பது வெகுதூரமாகும்.

**வ்யாக்யானம் :** நிர்விசேஷப்ரஹ்மமே ச்ருதிதாத்பர்யவிஷயம். அதனுல் ஸவிஸேஷம்பரமார்த்தமில்லே என்று அறியப்படுகிறது. ஆகவே ப்ரஹ்மநிர்விசேஷம் என்பது சித்தம்.

**283.** **அவதாரிகை :** இந்த விஷயத்தை வேருெரு காரணத்தைக்கொண்டும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

श्रुतेश्च तात्पर्यमखण्डरूपे परे पुरस्तादुपपादितं च ।
ततोऽपि तस्याद्वयरूपतोऽन्यद्रूपान्तरं कल्पयितुं न शक्यम्

**ச்லோகார்த்தம் :** ச்ருதியினுடைய தாத்பர்யம் என்பது அகண்டரூபமான பரமாத்மாவில்தான். இந்த விஷயம் முன்பே ப்ரதிபாதனம் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் பரமாத்மாவிற்கு அத்வைதஸ்ரூபத்தையன்றி வேறு எந்தஸ்வரூபமும் கல்ப்பிக்கமுடியாது.

**வ்யாக்யானம் :** இதுவரை யுக்தியைக்கொண்டு ப்ரஹ்மம் நிர்விசேஷம் என்று விளக்கப்பட்டது. இப்போது ச்ருதி வாக்யத்தின் தாத்பர்யமும் அதுவே என்று ச்ருதி ப்ரமாணத்தைக் கொண்டு விளக்கப்படுகிறது. ச்ருதிகளுக்கெல்லாம் அகண்டமான பரதத்வத்தை போதிப்பதில் தான் தாத்பர்யம் என்பதை முன் அத்யாயத்திலேயே விளக்கப்பட்டிருக்கிறது. 'ஜன்மாத்யஸ்யத': என்ற சூத்ரத்தினுல் நிர்விசேஷமான தத்வமே லக்ஷ்யம் என்று சொல்லப்படும் இடத்திலும், அதற்கு அடுத்துவரும் அத்யாயங்களிலும் அகண்ட பரமாத்மஸ்வரூபமே தாத்பர்ய விஷயமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அரூபவதேவ ஹி தத் ப்ரதானத்வாத்' என்ற சூத்ரமும் நிர்விசேஷம் ப்ரஹ்ம மென்றே போதிக்கின்றது. அதாவது ஔபாதிகமான ரூபமெல்லாம் அப்ரதானம் என்றும் சைதன்யம் என்பதே ப்ரதானம் என்றும் தெரிவிக்கின்றது. ஸமன்வய அத்யாயத்திலும் அகண்ட நிர்விசேஷ பரப்ரஹ்ம ஸ்வரூபத்தை போதிக்கவேண்டுமென்பதற்காகவே அந்த அத்யாயம் நன்கு விசாரிக்கப்பட்டிருக்கிறது. எந்த காரணத்தைக் கொண்டு நிர்விசேஷ்மே தத்வம் என்று நிரூபணம் செய்யப்பட்டதோ அந்த காரணங்களே அறிந்தால்தான் ப்ரஹ்மம் நிர்விசேஷம் என்பது அறிந்து

கொள்ளமுடியும். இவ்விதம் ப்ரஹ்மம் நிர்விசேஷம் என்பதை ப்ரதானமாக தெரிவிப்பதற்காக அந்த:தத்தர்மோபதேசாத்' என்று ஸவிஸேஷத்தைப் பற்றி விசாரித்து ஸவிஸேஷம் அப்ரதானம் என்று சொல்லப்பட்டிருக்கின்றது. ஆகவே, ஸவிஸேஷம் அப்ரதானம் என்று தெரிவிப்பதாலும் நிர்விசேஷம் தான் ப்ரதானம் என்று போதிக்கப்படுகிறது என்று ஸமன்வயம் செய்து தெரிவிக்கின்றது. ஆகவே நிர்விசேஷமேதத்வம் என்பது சித்தம்.

**284.** அவதாரிகை : அத்வைதமே தத்வம் என்று தாத்பர்யத்துடன் ச்ருதி போதிக்கின்றது என்று சொல்லும்பக்ஷத்தில் "த்வாஸஸுபர்ணா" என்ற (ஸ்வேதா 4.6) வாக்யமும் "பஹுஸ்யாம் ப்ரஜாயேய" என்ற (சாந்தோ 6.2.3) ச்ருதிவாக்யமும் த்வைதத்தை தெரிவிக்கின்றதாக அறியப்படுகிறதே? அந்தச்ருதி வாக்யங்களுக்கு விரோதமாக அகண்ட ஸ்வரூபத்தையே தாத்பர்யேண போதிக்கின்றது என்று எப்படிச் சொல்லமுடியும்?

ச்லோகம் :

भेदश्रुतिस्त्वन्यपरा समस्ता समस्तवेदेषु न तत्पराऽसौ ।
अतत्परा तत्परवेदवाक्यैर्विरुध्यमाना गुणवाद एव

ச்லோகார்த்தம் : உபநிஷத்துக்கள் எல்லாவற்றிலும் இருக்கின்ற பேத வாக்யங்கள் அனைத்துமே வேறு ஒன்றில் தான் தாதபர்யமுடையதாகும். பேதத்தை தெரிவிப்பதில் தாத்பர்யம் உடையதாக ஆகாது. தாத்பர்யமுடைய வேதவாக்யங்களுடன் விருத்தமாக இருக்கின்ற, தாத்பர்யம் அற்ற வேதவாக்யங்கள் குணவாதமேயாகும்.

வ்யாக்யானம் : 'த்வாஸுபர்ணா' என்பது போன்ற ச்ருதிவாக்யங்கள் பேதத்தை தெரிவிப்பதில் தாத்பர்யம் உடையது என்று சொல்வதுசரியல்ல. மஹாவாக்யங்கள் எல்லாம் தத்பரச்ருதிவாக்யங்கள். மற்றவாக்யங்களில் பேதம் அறியப்படுமானால் அந்தவாக்யங்கள் தத்பரச்ருதி வாக்யங்கள் இல்லையென்றும் வேறு ஏதோ ஒருவித அபிப்ருயத்தில் அந்த வாக்யங்கள் போதிக்கின்றது என்றும் அறியவேண்டும். ஸவிஸேஷமாக ப்ரஹ்மத்தை தெரிவிக்கின்ற வாக்யங்கள் ஸவிஸேஷத்தை போதிப்பதில் தாத்பர்யமில்லை. ப்ரஹ்மம் நிர்விசேஷம் என்று போதிக்கின்ற ச்ருதிவாக்யங்களே தத்பரவாக்யங்கள் என்று அறியவேண்டும். ஆகவே, எந்த ப்ரமாணத்திற்கும் விரோதம் இல்லாமல் இருந்தால்தான், தேவதா அதிகரணந்யாயப்படி அதை பூதார்த்தவாதம் என்று எடுத்துக்கொள்ளலாம். விரோதம் இருக்குமானால் அதனை குணவாதம் என்றே சொல்லவேண்டும். சாஸ்திரத்தில் சில இடங்களில், உபாஸனத்தை விதிப்பதற்காக சில விசேஷங்கள் இருப்பதாக கல்ப்பிக்கப்படுகிறது.

பூர்வ : ஸவிஸேஷவாக்யங்கள் உபாஸனபரமாக இருந்தாலும் தேவாதாதிகளுக்கு சரீரம் இருப்பதாகச் சொல்லப்படும் பூதார்த்தவாதம் போல, இந்த வாக்யங்களும் பூதார்த்தவாதம் என்று சொல்லலாமே? அதனால் தெரிவிக்கப்படும் அர்த்தமும் தாத்பர்யமுடையது என்று சொல்லலாமே?

சித்தா : தேவதாதிகளுக்கு சரீரம் இருக்கின்றது என்ற விஷயத்தில், வேறொரு ப்ரமாணத்தைக்கொண்டு அவ்விதம் இல்லையென்று நிரூபிக்கக் கூடிய விரோதமான வாக்யமோ, வேறுப்ரமாணமோ கிடையாது என்பதால் பூதார்த்த வாதம் என்று

சொல்லலாம். ஆனால் அதுபோல் ச்ருதிவாக்யங்களில் விரோதம் ஏற்படுமிடத்தில் அதை பூதார்த்தவாதம் என்று ஏற்றுக்கொள்ளமுடியாது. ஆகவே நிர்விசேஷ ப்ரஹ்மத்தை போதிக்கின்ற வாக்யம் தான் ச்ருதியின் தாத்பர்ய விஷயம் என்று அறியவேண்டும்.

**285.** அவதாரிகை : ஸவிஸேஷச்ருதிவாக்யமே ப்ரபலம், நிர்விசேஷ ச்ருதிவாக்யம் துர்ப்பலம் என்று விபரீதமாகச் சொல்லலாமே? நிர்விசேஷமே ச்ருதிக்கு தாத்பர்ய விஷயம் என்றும் அதுவே ப்ரதானம் என்றும் சொல்லவேண்டிய அவஸ்யம் என்ன?

**ச்லோகம் :**

न ह्यर्थवादा विधिभिर्विरुद्धा विध्यर्थसंकोचकरा भवन्ति ।
किं तु प्रधानानुगुणं यदेषामालम्बनं तत्खलु कल्पनीयम्

**ச்லோகார்த்தம் :** விதிவாக்யங்களுக்கு விருத்தமாக இருக்கின்ற அர்த்த வாதங்களானது வித்யர்த்தத்தை ஸங்கோசம் செய்வதில்லை. ஆனால் ப்ரதான விதிக்கு அனுகுணமாக எந்த அர்த்தம் இருக்கின்றதோ அதையே கல்ப்பிக்கவேண்டும்.

**வ்யாக்யானம் :** நிர்விசேஷ ச்ருதியுடன் ஸவிஸேஷ ச்ருதிக்கு விரோதம் ஏற்படுகிறது என்பது போல், ஸவிஸேஷ ச்ருதிக்கு நிர்விசேஷ ச்ருதி விரோதமாக இருக்கிறது என்று சொல்லலாமே? இரண்டும் ஸமமாக இருக்கின்றபோது நிர்விசேஷ ச்ருதியே ப்ரதானம் என்று ஏன் சொல்லவேண்டும் என்றால், இந்த ஆக்ஷேபம்சரியே. ஆனாலும் நிர்விசேஷ ச்ருதியினால் தெரிவிக்கப்படும் நிர்க்குண வாக்யங்களின் அர்த்தம் எதுவோ, அந்த அர்த்தத்தைத் தவிர வேறு எந்த அர்த்தமும் அந்தவாக்யத்திற்கு சொல்லமுடியாது. ஆகையால் நிர்க்குண வாக்யம் நிரவகாசம் என்பதால் அந்த வாக்யத்திற்கே முக்யத்வம் சொல்லப்படவேண்டும். நிர்க்குண வாக்யத்தினால் எந்த அர்த்தம் அறியப்படுகிறதோ அதுவே அதற்குபலம் (ப்ரயோஜனம்) ஸவிஸேஷ வாக்யங்களுக்கு வேறு அர்த்தம் சொல்ல முடியும் என்பதால் அந்த வாக்யங்கள் நிரவகாசமாக இல்லை. ஸாவகாச நிரவகாசயோ. நிரவகாச: பலீய: என்ற ந்யாயத்தை அனுசரித்து நிரவகாசத்திற்கே முக்யத்வம் சொல்லவேண்டும். ஆகவே ஸவிஸேஷ வாக்யத்தை நிர்ணயம் செய்வதற்காக கிர்விசேஷவாக்யார்த்தத்தை மாற்ற முடியாது.

அவ்விதம் சொல்லப்படுமானால் அர்த்த வாத வாக்யங்கள் நிராலம்பனமாக ஆகின்றதே? என்றால், அர்த்தவாத வாக்யங்களை முற்றிலும் தள்ளவேண்டிய அவச்யம் ஏதுமில்லை. அர்த்தவாத வாக்யங்களில் ப்ரதானமான விதிக்கு அனுகுணமாக எந்த அர்த்தம் ஸம்பவிக்கின்றதோ அதுவே அந்தவாக்யத்திற்கு விஷயம் என்று சொல்லவேண்டும். லக்ஷணை முதலான வ்ருத்தியினால் விரோதமில்லாத அம்ஸத்தை யோகல்ப்பிக்க வேண்டுமேயன்றி ப்ரதான விதிவாக்யத்தின் அர்த்தத்தை பாதிக்கக் கூடிய அர்தத்தை ஒத்துக் கொள்ளமுடியாது. (கல்ப்பிக்க முடியாது)

**286.** அவதாரிகை : இந்த விஷயம் பற்றி விளக்குவதற்காக பூர்வமீமாம்ஸா விஷயத்தை த்ருஷ்ட்டாந்தமாகச் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

यथा ह्यजक्षीरविधेः समीपे यज्जर्तिलादेः परिकीर्तनं तत् ।
प्रधानसंकोचभयादपास्य स्तुत्यर्थमासीद्गुणवाद एव

ச்லோகார்த்தம் : ஆட்டுப்பால் என்பதை விதிக்கின்ற இடத்தில் ஜர்திலம் முதலானவைகள் சொல்லப்பட்டிருக்கின்றது. ஆனால் ப்ரதான விதியின் அர்த்தத்தை ஸங்கோசம் செய்து தெரிவிக்கவேண்டுமே என்ற பயத்தினுல், அவைகள் தன்னுடைய அர்த்தத்தை விட்டு குணவாதமாகவே ஆகின்றது.

வ்யாக்யானம் : பூ மீமாம்ஸையில் சயனகத அக்னிஹோத்ரம் என்றகர்ம விதியை விசாரம் செய்யப்பட்டிருக்கிறது. அதில் ஜாதிலய வாக்வா வாஜுஹ்யாத் கவேது கயவாக்வா" என்று ஒருவாக்யமும் அதேபோல் அஜக்ஷீரேண ஜுஹ்யாத் என்று ஒருவாக்யமும் சொல்லப்பட்டிருக்கிறது. ஜர்திலா என்பது காட்டு எள், கவேது கா என்பது காட்டுகோதுமை. இந்த தான்யங்களைக் கொண்டு கஞ்சி தயாரித்து அதில் ஏற்படும் ஆடையைக் கொண்டு ஹோமம் செய்யவேண்டும் என்று இதன் அர்த்தம் அறியப்படுகிறது. இதேபோல் அஜாயா: க்ஷீரம் அஜ க்ஷீரம் என்பதற்கு ஆட்டுப்பால் என்று அர்த்தம். அஜாக்ஷீரம் என்று சொல்வதற்கு பதில் அஜக்ஷீரம் என்று ஜாதி வசனமாக வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த வாகயங்களினுல் ஆட்டுப் பாலினுலும் ஹோமம் செய்யலாம் அல்லது காட்டு எள் காட்டுகோதுமை இவைகளினுலும் ஹோமம் செய்யலாம் என்று (அர்த்தம்) சொல்லப்படுகிறதா ? அல்லது அர்த்த வாதவாக்யமா ? என்ற ஸந்தேஹம் ஏற்படுகிறது. ஆனுல் இரண்டு வாக்யங்களிலும் 'ஜுஹ்யாத்' என்று லிங் ப்ரத்யயம் ப்ரயோகம் செய்யப்பட்டிருப்பதால் இரண்டுமே விதிவாக்யம் என்றே சொல்லவேண்டும். இந்த கர்மாவிற்கு த்ரவ்யம் அபேக்ஷிக்கப்படுகிறது. அதனுல் 'ஜர்திலாதே:' என்ற எள், கோதுமை என்பவைகள் ஹோமத்ரவ்யமாக இருக்கின்றதால் அவைகளைக் கொண்டு ஹோமம் செய்வதா ? அல்லது, இதற்கு முன்னுல் சொல்லப்படும் 'அஜக்ஷீரேன ஜுஹ்யாத்' என்ற வாக்யத்தைக் கொண்டு ஆட்டுப்பாலினுல் ஹோமம் செய்வதா என்று ஸந்தேஹம் ஏற்படுகின்றது. இரண்டுமே விதிவாக்யமாக இருக்கின்றதால், இரண்டில் ஏதாவது ஒன்றினுல் செய்யலாம் என்று விகல்பம் அறியப்படுகிறது என்று சொல்லப்படும் பூர்வ பக்ஷத்திற்கு பூ. மீமாம்ஸகர்களால் அவ்விதம் விகல்பம் செய்வதற்கு இடமில்லையென்று தெரிவித்து அந்தவாக்யங்களுக்கு அர்த்தம் என்ன என்பதை சித்தம் செய்திருக்கின்றுர்கள். அதாவது 'ஜர்திலாதே:ஜுஹ்யாத்" என்ற வாக்யத்திற்குப் பிறகு சொல்லப்படும் வாக்யத்தில், "அனுஹுதிர்வை ஜர்திலாச்ச கவாது காச்சேத்யஜக்ஷீ ரேண ஜுஹோதி" என்ற வாக்யத்தினுல், எள், கோதுமை இவைகளால் செய்யக்கூடாது என்று நிந்தை செய்திருக்கின்றது. அஜக்ஷீரத்தினுல் ஹோமம் செய்யலாம் என்று அறியப்படுகிறது. ஆகவே, ஜர்திலாதே என்பதால் ஹோமம் செய்யலாம்என்று சொல்லி இருந்தால்தான் விகல்ப்பம் என்று சொல்லலாம் அஜக்ஷீரம்என்பது நிந்தை செய்யப்படவில்லை. அதனுல் இந்த இடத்தில் விகல்ப்பம் என்று சொல்வதற்கு முடியாது என்றும், அஜக்ஷீரம் என்பதே விதிக்கப்படுகின்றது என்பதால் அதுவே முக்யம் என்று தீர்மானிக்கப்படுகிறது. மேலும் ஜர்திலாதே: என்பது விதிக்கப்படவில்லை. அதனுல்

ஹோமம் செய்யப்படுமானுல் ஏதோ தோஷம் ஏற்படும் என்ற காரணத்தைக் கொண்டே அனுஹூதிர்வை' என்று பின்னுல் நிந்தை செய்கின்றது என்றே அறியவேண்டும். ஆகவே, இதனுலோ, அதனுலோ இஷ்டம் போல் செய்யலாம் என்ற (விகல்பம்) அர்த்தம் செய்யமுடியாது. மேலும் அஜக்ஷீரம் என்பது விதிக்கப்படாமல், 'ஜர்திலாதே:' என்பதையும் நிந்தை செய்திருக்குமானுல் ஹோமத் ரவ்யம், என்ன விதிக்கப்படுகிறது என்பதே அறியமுடியாது. மற்றவைகளை நிந்திப்பதன் மூலமாக அஜக்ஷீரம் விதிக்கப்படுகிறது என்பதுஸ்பஷ்டமாக அறியப்படுகிறது. ஆகவே, அஜக்ஷீரத்தினுல் ஹோமமம்செய்ய வேண்டுமென்பதை ஸ்துதிப்பதற்காகவே 'ஜர்திலாதே:' என்ற வாக்யம் ஏற்பட்டிருக்கின்றதால் (சொல்லப்படுவதால்) இந்தவாக்யம் குணர்த்தவாதம் என்றே (குண அர்த்தவாதம்) சொல்லவேண்டும். ஆகையால் 'அஜக்ஷீரேண ஜுஹுயாத்' என்ற விதிவாக்யத்தினுல் அஜக்ஷீரம் என்பதாலேயே அவச்யம் செய்யவேண்டு மென்ற அர்த்தம் கிடைக்கின்றதால், அதை விட்டுவேறு அர்த்தம் சொல்லப்படுவது சரியல்ல. இவ்விதம் சொல்லப்படவில்லை யென்ருல் அந்தவிதியை ஸங்கோசம் செய்து அர்த்தம் செய்யநேரிடும். அதனுல் 'ஜர்திலாதே: என்பது ஸ்துத்யர்த்தமென்றும் குணவாதம் என்றும் பூ மீமாம்ஸகர்களால் நிச்சயம் செய்யப்படுகிறது. இந்தமுறையில் ப்ரதானமாகச் சொல்லப்படும் விஷயத்திற்கு விருத்தமாக இல்லாத முறையில் மற்றவாக்யங்களுக்கு அர்த்தம் செய்யவேண்டுமேயன்றி ப்ரதான விஷயத்தை பாதிக்கின்றமுறையில் வாக்யத்திற்கு அர்த்தம் செய்யக்கூடாது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

**287.** அவதாரிகை : த்ருஷ்டாந்தத்தில் சொல்லப்பட்ட முறையே தாஷ்டாந்தத்திலும் ஒப்புக் கொள்ளப்படவேண்டும்.

**ச்லோகம் :**

एवं सतीहापि विरुध्यमानं वचो यदद्वैतपरैर्वचोभिः ।
तदस्तु गौणं यदि वा परस्य माया प्रसूतद्वयवादिमुख्यम्

**ச்லோகார்த்தம் :** இவ்விதமே, இந்த இடத்திலும் அத்வைத பரமான வாக்யங்களுடன் விரோதிக்கின்ற வாக்யங்கள் எல்லாம் கௌணம் என்றே ஒத்துக்கொள்ளப் படவேண்டும், அல்லது மாயையினுல் ஏற்பட்ட த்வைதத்தையே அவைகள் முக்யமாக தெரிவிக்கின்ற தென்று ஒத்துக்கொள்ளப்படவேண்டும்.

**வ்யாக்யானம் :** த்ருஷ்டாந்தத்தில் சொல்லப்பட்டது போலவே இந்த இடத்திலும், ஸவிஸேஷவாக்யங்கள், நிர்விசேஷவாக்யங்களை ஸ்துதி செய்வதற்காக ஸ்துத்யர்த்தமாகச் சொல்லப்படுகிறது என்றே சொல்லவேண்டும். ப்ரதானவாக்யத்திற்கு அனுகுணமாகவே அர்த்தவாதவாக்யங்கள் இருக்க வேண்டுமேயன்றி விரோதமாக இருக்கக்கூடாது. விரோதமாக இருக்குமானுல் அதை அங்கம் என்றே சொல்லமுடியாது. (அங்கிக்கு அங்கம் விரோதமாக இருக்கமுடியாது). வேதாந்த வாக்யங்கள் அத்வைதமே தத்வம் என்பதை தாத்பர்யத்துடன் போதிக்கின்றது. இந்த அர்த்தம் வேறு எதனுலும் சித்திக்கமுடியாது. (அனன்யதாசித்தார்த்தம்) இவ்விதம் ப்ரதானபூதமான அத்வைத ச்ருதிக்கு விரோதமாக எந்தவாக்யம் இருந்தாலும் அது கௌணமாகவே இருக்க வேண்டும். அதனுல் குணவாதம் என்ற தன்மையில் ஸ்துத்யர்த்தவாதம் என்றே

சொல்லவேண்டும். ஸவிஸேஷ வாக்யங்கள் உபாஸனத்தை விதிப்பதற்காக முக்யமாக தெரிவிக்கப்படுகிறது. ஏனெனில், மாயையினுல் எந்த குண விசேஷங்கள் ப்ரஹ்மத்தில் கல்ப்பிக்கப்படுகின்றதோ, அவைகளை அந்த வாக்யங்கள் போதிக்கின்றதால் அவைகளை முக்யம் என்றே சொல்லலாம். உபாஸனத்திற்காக சொல்லப்படுவதாக இருந்தபோதிலும் கூட அத்வைத ச்ருதிக்கு விரோதமாக இல்லை.

**288.** அவதாரிகை : இதே விஷயம் பற்றி மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

भेदश्रुतिः कल्पितमेव भेदमालम्ब्य मुख्यार्थवती भवित्री ।
अतत्परा तत्परवाक्यभङ्गस्त्वतोऽन्यथा याति विना निमित्तम्

ச்லோகார்த்தம் : தாத்பர்யமில்லாத பேத ச்ருதிகள், கல்ப்பித பேதத்தை ஆச்ரயித்தே முக்யார்த்தம் உடையதாக ஆகிறது. அவ்விதம் இன்றி இதற்கு மாருக ஒத்துக்கொள்ளப்படுமாஞல், காரணமில்லாமலேயே தாத்பர்யமுடைய வாக்யங்களுக்கு பங்கம் ஏற்படும்.

வ்யாக்யானம் : அத்வைத ச்ருதிக்கு பங்கம் ஏற்படும் முறையில் ஸ்விஸேஷச்ருதி வாக்யங்களுக்கு முக்யார்த்தம் சொல்லமுடியாது. ஏனெனில் தத்பரச்ருதிக்கு விரோதம் ஏற்படாமல் த்வைச்ருதி (பேதச்ருதி) வாக்யத்திற்கு அர்த்தம் சொல்லப்படவேண்டும். அவ்விதம் சொல்லப்படும் அர்த்தம் பரமார்த்தமாக இருக்கவேண்டுமென்ற அவஸ்யமில்லை. அதத்பரமான வாக்யத்திற்கு முக்யார்த்தம் ஸம்பவிக்கமுடியாது. ஆகையால் உபாஸனம் முதலானவைகளை விதிக்கின்றது என்றே சொல்ல வேண்டும். அவ்விதமின்றி ஸவிஸேஷமான குணங்களுடன் கூடியது ப்ரஹ்மமென்று எந்த வாக்யமும் தெரிவிக்கவில்லை. ஆகையால் இதைத் தவிர வேறு எந்த அர்த்தம் சொல்லப்பட்டாலும், அது தத்பரச்ருதி வாக்யங்கள் ஸ்வார்த்தபரம் என்று சொல்வதற்கு அபகாரமாகவே முடியும். இதே காரணத்தைக்கொண்டே 'ஜர்திலாதே:' என்ற வாக்யங்களும் அர்த்தவாதம் என்றே தீர்மானம் செய்யப்பட்டதால், அதை முக்யவிதி என்று சொல்லப்படவில்லை.

**289.** அவதாரிகை : ஸவிஸேஷவாக்யங்கள் உபாஸனத்திற்காக சொல்லப்படுகிறது என்ருலும், வேதத்திஞல் விதிக்கப்படும் வாக்யம் ஸத்யமில்லை மித்யை என்று எப்படிச் சொல்லமுடியும் ?

ச்லோகம் :

यदपि किंचिदुपासननिष्ठिताद्वचनतः प्रतिभाति परात्मनः ।
सकलगन्धरसादिमयं वपुस्तदपि कल्पितभेदसमाश्रयम्

ச்லோகார்த்தம் : உபாஸனுபரமான வாக்யங்களிலிருந்து பரமாத்மாவின் ஸ்வரூபமே என்பது, ஸர்வகந்தம், ஸர்வரஸம் முதலான விசேஷணத்துடன் கூடியதாக அறியப்படுகிறதோ அதுவும் கல்ப்பிதபேதத்தை ஆச்ரயித்து (என்று அறியவேண்டும்) சொல்லப்படுவதாகவே ஆகும்.

வ்யாக்யானம் : ஸவிஸேஷ வாக்யங்கள் உபாஸனத்தைத்தான் விதிக்கின்றதேயன்றி அந்த குணங்கள் பரமார்த்தமென்று போதிக்கவில்லை. உபாஸனம் என்றுலே அதஸ்மின்தத்புத்தி என்றே சொல்லவேண்டும். அதனுல் அவையெல்லாம் கல்ப்பித பேதத்தையே தெரிவிக்கின்றதால், சொல்லப்படும் விசேஷங்கள் பரமார்த்தம் என்று அத்வைத ச்ருதிக்கு விரோதமான அர்த்தம் சொல்லவேண்டிய அவஸ்யம் ஏதுமில்லை. ஆகவே, விசேஷங்கள் அபரமார்த்தம் என்று சொல்லப்பட்டதில் பாதகம் ஏதுமில்லை.

**290.** அவதாரிகை :

**ச்லோகம் :**

न खलु निर्गुणवस्तुपरं वचः सगुणवाक्यविरोधनिमित्ततः ।
स्वविषयादपसारयितुं बलादतिबलिष्ठपदान्वयमिष्यते

ச்லோகார்த்தம் : ஸகுண பரமானவாக்யங்களுடன் விரோதிக்கின்ற காரணத்தினுல், அதிக பலமுள்ள பதங்களுடன் அன்வயிக்கின்றதும் நிர்க்குணவஸ்துபரமாக இருக்கின்றதுமான வாக்யத்தை, அதன் விஷயத்திலிருந்து நிவர்த்தி செய்யப்படுவதை ஒத்துக்கொள்வதற்கு முடியாது.

வ்யாக்யானம் : அத்வைதச்ருதியின் அர்த்தத்தை மாற்றமுடியாது. ஏனெனில் அத்வைதமே த்தவம் என்று தெரிவிக்கின்ற வாக்யங்கள், அத்வைதத்தை தெரிவிப்பதில்தான் தாத்பர்யம் உடையதாக இருக்கிறது என்பதாலும், அதன் அர்த்தத்தை தெரிவிப்பதில் வேறு எதையும் அபேக்ஷிக்கவில்லை என்பதாலும், தத்வமஸ்யாதி வாக்யங்களும் அபேதத்தையே போதிக்கின்றது என்று அன்வயம் சொல்லப்படுவதால் அதுவே பலிஷ்ட்டம். மேலும் அத்வைதம் தத்வம் என்பதை தெரிவிப்பதற்காக, இந்த ஜகத்ப்ரஹ்மத்திலிருந்தே உண்டாயிற்று என்று தெரிவித்து, இந்த ப்ரஹ்மமேரஸாத்மகம் குணாத்மகம் ஸர்வாத்மகம் என்று சிருஷ்டிவாக்யங்கள் தெரிவிக்கின்றது. இந்தவிதம் சிருஷ்டியை அனுசரித்து ஸர்வாத்மகம் ப்ரஹ்மமென்று அனுவாதம் செய்து தெரிவிக்கின்றதாலும், உபாஸனுவிதிபரமாக இருப்பதாலும் அபேதச்ருதி என்பது உபஜீவ்யமாக இருக்கின்றதாலும், துர்ப்பலமான பேதச்ருதியைக்கொண்டு ப்ரபலமான நிர்க்குணச்ருதிக்குபாதம் ஏற்படுவதாகச் சொல்லமுடியாது. ஆகவே ஸவிஸேஷச்ருதிக்கு விரோதமாகநிர்க்குண (நிர்விசேஷ) ச்ருதி இருக்கின்றது என்பதற்காக அதைமாற்றி அர்த்தம் செய்வதற்கு எவராலும் முடியாது. அவ்விதம் சொல்லப்படுமானுல் அந்த தோஷத்திற்கு பரிகாரமே கிடையாது.

**291.** அவதாரிகை : இந்த விஷயம் முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

**ச்லோகம் :**

तस्मात्तत्परवेदवाक्यगतिभिन्र्यायेन चाऽऽत्मप्रभेसर्वद्वैतविवर्जितं विगलितध्वान्तं शिवं शाश्वतम् ।
प्रत्यग्रूपमरूपगन्धरसकं तच्छब्दवाच्यं स्थितं वाक्यार्थान्वयि लक्षितं भगवतो विष्णोः पदं गृह्यताम्

ச்லோகார்த்தம் : ஆகையால் தாத்பர்யமுடைய வாக்யங்களின் அர்த்தம் போதிக்கப்படுகின்ற ப்ரகாரத்தினுலும், ந்யாயத்தினுலும், ஸ்வயம்ப்ரகாசமாக இருக்கின்றதும் ஸர்வத்வைதங்கள் அற்றதும், அஞ்ஞானமற்றதும், மங்களமாக இருப்பதும் சாஸ்வதமானதும், ப்ரத்யக்ஸ்வரூபமானதும் ரூபரஸகந்தங்கள் அற்றதும் தத்பதவாச்யார்த்தத்தில் அன்வயிக்கின்றதும், பகவான் விஷ்ணுவின் ஸ்வரூபமாக இருக்கின்றது மானதத்பதலக்ஷ்யார்த்தம் கிரஹிக்கப்படவேண்டும்.

வ்யாக்யானம் : வாக்யம் என்ருல், அந்த வாக்யத்தின் விவக்ஷிதார்த்தம் என்னவென்று தெரிவிக்கவேண்டும் நியாயம் யுக்தி என்பவைகளைக்கொண்டு, உபாதி, ஔபாதிகம், ப்ரதிபிம்பம் என்பதெல்லாம் ஸத்யமல்ல, மித்யை என்று தெரிவித்து, அதன் மூலமாக பஞ்சகோசாதிகளின் ஸம்பந்தம் அற்றதான சைதன்யமே த்தபதலக்ஷ்யார்த்தம் என்றும் மாயா அவச்சின்னசைதன்யம் தத்பதவாச்யார்த்தம் என்றும் தெரிவிக்கவேண்டும். இந்த விதம் விசாரிக்கப்பட்ட தத்பதலக்ஷ்யார்த்தமே விஷ்ணுவின் பரமபதம் என்று தெரிவிப்பதே அபேதவாக்யத்திற்கு உபயோகமாகிறது என்று அறியவேண்டும்.

**292.** அவதாரிகை : இதுவரை விசாரிக்கப்பட்ட விஷயத்திற்கு வேதவாக்யங்களே ப்ரமாணம் என்று மேலே சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

अशब्दमस्पर्शमरूपमव्ययं तथाऽरसं नित्यमगन्धवच्च यत् ।
अनाद्यनन्तं महतः परं ध्रुवं निचायनीयं पदमीदृशं हरेः

ச்லோகார்த்தம் : விஷ்ணுவின்ஸ்வரூபம் என்பது சப்தஸ்பர்ஸரூபரஸகந்தங்கள் அற்றதாகவும் அவ்யயமாகவும், நித்யமாகவும், அந்தமற்றதாகவும், மஹத்தத்வத்திற்கு அப்பாற்பட்டதாகவும், கூடஸ்த்தமாகவும் இருக்கின்றது. இப்பேர்ப்பட்ட ஹரியின்ஸ்வரூபமே நன்கு அறியப்படவேண்டும்.

வ்யாக்யானம் : தத்பதலக்ஷ்யார்த்தம் என்னவென்று, அசப்தம் அஸ்பர்ஸம் அரசம்அகந்தம் என்றும், அனந்தம், மஹத், பரம், த்ருவம், நிசாய்யம் என்று சொல்லப்படும் தத்வம் எதுவோ, அதுவே விஷ்ணுவின் பதம் என்று கடோபநிஷத் தெரிவிக்கின்றது. நித்ய அசப்தம், நித்ய அஸ்பர்ஸம், என்று நித்யசப்தத்தை ஒவ்வொன்றிலும் சேர்த்துக்கொள்ளவேண்டும். அவ்வயம் வ்யயரஹிதம் நிர்க்குணம் என்பதால் நாசரஹிதம், கூடஸ்த்தம் என்றும், ச்லோகத்தின் பூர்வார்த்தத்தில் அசப்தம் முதலானவைகளை சொல்லப்படுவதன் மூலமாக, காரணமான பஞ்சபூதங்களையும் நிஷேதம் செய்கின்றது. அனுதி அனந்தம் என்பதால் ஆதியையும், அந்தத்தையும் நிஷேதம் செய்து ஆத்யந்தரஹிதம் என்று தெரிவிப்பதனுலேயே மத்யமும் இல்லையென்று மத்தியிலுள்ள அஸ்தி, வர்த்ததே என்பது முதலான ஷட்பாவ விகாரங்களும் அற்றஸ்வரூபம் என்றுதெரிவிக்கின்றது. இதேபோல் 'மஹத:பரம்' என்று சொல்லப்படுவதின் மூலம் புத்தி உபாதியுடன் கூடிய ஜீவனைக்காட்டிலும் வேறுபட்ட சைதன்யம் என்று தெரிவிக்கின்றது. ஆகவே ஸோபாதிகஸ்வரூபத்தைக்காட்டிலும்வேறுன

நிரூபாதிகநிர்விசேஷசைதன்யத்தையே மஹத:பரம் என்று தெரிவிக்கிறது. மஹத:பரம் என்பது, அவ்யாக்ருதத்தை குறிக்கவில்லை என்பதை தெரிவிப்பதற்காக 'த்ருவம்' என்ற விசேஷணம்சொல்லப்படுகிறது. த்ருவம் என்பதால், அசைவற்றதும், பரிணாமமற்றதும், க்ரியை அற்றதுமான ஆத்மஸ்வரூபமே குறிப்பிடப்படுகிறது. இவ்விதம், அனாத்மாவுடனோ, அதன் தர்மங்களுடனோ ஸம்பந்தமற்ற நிர்விசேஷ சைதன்ய ஸ்வரூபமே நான் என்று அஹம்ப்ரஹ்மாஸ்மி என்று நிச்சிதமாக அறிகின்றவன் ம்ருத்யுவினிடமிருந்து விடுபடுகிறான் என்பதையே இந்த மந்த்ரம் தெரிவிக்கின்றது.

**293.** அவதாரிகை : இதே கருத்தை வேறு ஒருமந்த்ரமும் தெரிவிக்கின்றது.

**ச்லோகம் :**

भोक्ता भोज्यं प्रेरितारं च मत्वा सर्वं प्रोक्तं त्रिविधं ब्रह्म मे तत् ।
जीवेशानौ सृज्यमानं जगच्चशुद्धं ब्रह्मेत्याह वेदान्तवाक्यम्

**ச்லோகார்த்தம் :** போக்தா, போக்யம், ப்ரேரகனான ஈச்வரன் என்று மூன்று விதமாக இருக்கின்ற அனைத்தும் ப்ரஹ்மமேயாகும் என்று என்னிடம் சொல்லப்பட்டது ஜீவன் ஈச்வரன் சிருஷ்டிக்கப்பட்ட ஜகத் என்ற மூன்றும் சுத்த ப்ரஹ்மமே என்று வேதாந்த வாக்யம் தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** ச்லோகத்தில் போக்தா என்று இருப்பதை போக்தாரம் என்று அர்த்தம் செய்து கொள்ளவேண்டும். (போக்தாரம் என்றால் ஜீவன், போஜ்யம் என்றால் ப்ரபஞ்சம், ப்ரேரிதாரம் என்றால் ஈச்வரன்) இவ்விதம் போக்தா, போக்யம் ப்ரேரிதாரம் என்ற மூன்றையும் யுக்தியைக் கொண்டு விசாரித்து ஸர்வமும் ப்ரஹ்மத்தையன்றி வேறானதத்வமில்லை யென்றும் ப்ரஹ்மமேமூன்று விதமாக தோன்றுகிறது என்று இந்த மந்த்ரத்தைக் கொண்டு இந்த க்ரந்தகர்த்தா போதிக்கின்றார்.

**294.** அவதாரிகை : தத்த்வம் பதார்த்த சோதனையினால் ஏற்படுகின்ற ஞானமே முக்திக்கு சாதனம் என்றே சொல்லவேண்டும். அவ்விதம் சொல்லப்படாமல் வாக்யார்த்த போதம் ஏற்பட வேண்டும் என்று சொல்வதற்கு காரணம் என்ன என்று சிஷ்யனுக்கு ஸந்தேஹம் ஏற்படுகிறது. இவ்விதம் சிஷ்யன் அபிப்ராயத்தை அறிந்த குருவானவர், அவ்விதம் தீர்மானிப்பது சரியல்ல என்று தெரிவித்து, வாக்யார்த்தபோதம் அவச்யம் என்பதை தெரிவிக்கின்றார்.

**ச்லோகம் :**

पदार्थबोधेन कृतार्थता न ते मतिः परोक्षा हि पदार्थगोचरा ।
अतो महावाक्यनिबन्धनैव धीरबोधविच्छेदकरी भविष्यति ।

**ச்லோகார்த்தம் :** பதார்த்த ஞானத்தினால் உனக்கு க்ருதார்த்தத்தை ஏற்படாது. ஏனெனில் பதார்த்த விஷயமானஞானம் பரோக்ஷமேயாகும். ஆகையால் மஹா வாக்யத்தினால் ஏற்படுகின்ற ஞானமே அஞ்ஞான நாசகமாக ஆகும்.

**வ்யாக்யானம் :** சோதிதமான ப்ரஹ்மமே ப்ரத்யக் ஸ்வரூபம் என்று யுக்தியினால் பதார்த்த ஞானம் ஏற்பட்டபோதிலும், லிங்காதி விவதானமாக இருக்கின்றதால், அந்த

ஞானம் பரோக்ஷமாகத்தான் ஏற்படுகிறது ஆத்மஸ்வரூப அஞ்ஞானம் என்பது அபரோக்ஷமாகவே இருக்கின்றதால் பரோக்ஷஞானத்திஞல் அபரோக்ஷ அஞ்ஞானம் நிவர்த்திக்காது. அதஞல் அபரோக்ஷ ஞானம் ஏற்படுவதற்கு வாக்யார்த்த ஞானம் அவச்யம் வேண்டும். ஜடம், சைதன்யம், என்ற இரண்டும் ஒன்ருக இருக்க முடியாது என்ற காரணத்தைக் கொண்டு, இப்படித்தான் இருக்கவேண்டுமென்று யூகிப்பதால் அந்த ஞானம் பரோக்ஷம் என்றே சொல்லவேண்டும். பதங்களிலிருந்து தனித்தனியே ஏற்படும் பதார்த்த ஞானம் ஸ்மரணரூபம் பரோக்ஷம். இரண்டும் ஒன்றே என்று ஏற்படும் வாக்யார்த்த ஞானமே, அபரோக்ஷமாக ஏற்படுகிறது.

**295.** அவதாரிகை : ச்ருதி வாக்யமான தத்வமஸ்யாதி வாக்யார்த்தங்களை அறிந்த வ்யுத்பன்னர்களும் பரோக்ஷஞானம் உடையவர்களாகவே காணப்படுகின்றதால் வாக்யத்திஞல் அபரோக்ஷஞானம் ஏற்படுகிறது என்று எப்படிச் சொல்வது?

**ச்லோகம் :**

स्वाध्यायधर्मपठितं निजवेदशाखावेदान्तभूमिगतमादरपालितं च ।
संन्यासिना परदृशा गुरुणोऽपदिष्टं साक्षान्महावचनमेव विमुक्तिहेतुः

**ச்லோகார்த்தம் :** ஸ்வாத்யாய விதியை அனுசரித்து கற்கப்பட்டதும், தன்னுடைய வேத சாகையில் அந்தர்கதமான உபநிஷத்தில் இருக்கின்றதும், ஆதரவுடன் ஞாபகத்தில் வைக்கப்பட்டதும் ப்ரஹ்ம ஞானியான ஸன்யாசியிஞல் சாக்ஷாத் உபதேசிக்கப்பட்டது மான மஹாவாக்யம் என்பதே முக்திக்கு ஹேதுவாக இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** மஹா வாக்யத்திலிருந்தே அபரோக்ஷஞானம் ஏற்படுகிறது என்பது உண்மையே. ஆஞல் இப்பேர்ப்பட்ட ஞானம் ஏற்படுவதற்கு சில நியமங்களை சாஸ்திரம் விதிக்கின்றது. அந்த நியம்மங்களுடன் கூடிய அதிகாரிக்கே வாக்யார்த்தம் சாக்ஷாத் காரமாக ஆகும். ஆகையால் ஸ்வாத்யாயோ அத்யேதவ்ய: என்ற தர்மங்களை விடாமல், அவரவர்க்குரிய சாகையை நன்கு அறிந்து அத்யயனம் செய்வதுடன் அதஞல் போதிக்கப்படும் அர்த்தங்களையும் விடாமல் க்ரஹித்து தீர்க்க காலம் அனுசந்தானம் செய்து அதிலேயே ஈடுபட்டிருக்க வேண்டும். அவரவர் சாகையே மிகவும் முக்யம் அதஞல் அதை விட்டு விட்டு வேறு சாகையை மட்டும் படித்து அறிவாஞகில் சாகாரண்டம் என்ற தோஷம் ஏற்படும் என்றும், அவ்விதம் செய்யப்படுவதை நிந்தை செய்திருக்கின்றது என்பதாலும் அதற்குரிய ப்ராயச்சித்தமும் சொல்லப்பட்டிருப்பதாலும், ஸ்வசாகை என்பதே முக்யம் என்று அறிந்து அர்த்தத்துடன் அத்யனம் செய்யவேண்டும். அதில் சொல்லப்படும் மஹாவாக்யார்த்தம் மிகவும் முக்யம். மற்ற சாகைகளையும் அதிலுள்ள மஹாவாக்யங்களையும் அறிந்து கொள்வதால் ஏற்பட்ட ஞானம் த்ருடப்படும் என்பதால் அவைகளை சிந்தித்திருக்கவேண்டும். அவ்விதமின்றி அறிந்த வேதங்களை மறப்பாஞகில் ப்ரஹ்மோஜ்ஜம் என்ற பாபம்ஸம் பவிக்கும். ஆகவே, இவ்வித அதிகாரியானவன் ஸமித்பாணியுடன், ச்ரோத்ரியஞகவும் ப்ரஹ்மநிஷ்டஞகவும் இருக்கின்ற குருவை அடைந்து அவர் பாதங்களில் நமஸ்கரித்து குரு ஸேவைகளைச் செய்து ஆத்ம வித்யையைப் பெற்று அதிலேயே நிஷ்டையுடன் இருக்கவேண்டும்.

குடீசகன், பஹிதகன், ஹம்ஸன், பரமஹம்ஸன் என்ற ஸன்யாசிகளில் பரமஹம்ஸன் என்ற ப்ரஹ்மநிஷ்ட்டனிடமிருந்து ஆத்மவித்யையை பெறவேண்டும். அப்பேர்ப்பட்ட மஹாத்மாவையே குருவாக அடைந்தால்தான் அபரோக்ஷஞானம் ஏற்படும்.

**296.** அவதாரிகை : இவ்விதம் மஹா வாக்யத்திலிருந்தே அபரோக்ஷஞானம் ஏற்படும் என்பதில் ப்ரமாணம் என்ன?

ச்லோகம் :

नावेदविन्मनुते पुरुषं बृहन्तमित्याह वेदवचनं कथमन्यथैतत् ।
वाक्यान्तरं च कथमाह पुमांसमेनं साटोपमौपनिषदत्वविशेषणेन

ச்லோகார்த்தம் : அவ்விதம் இல்லையென்றால் வேதவாக்யமானது "வேதத்தை கற்காதவன் அந்த பரமாத்மாவை அறியமாட்டான்" என்று எவ்வாறு கூறும்? அதேபோல் வேறு ஒருவாக்யமானது அந்த புருஷனை "ஔபநிஷதம்" என்ற விசேஷணத்துடன் விமர்ஸம் செய்து எவ்வாறு தெரிவிக்கின்றது?

வ்யாக்யானம் : 'தந்து ஔபநிஷதம் புருஷம்ப்ருச்சாமி' என்றும், 'நா வேத வித் மனுதே தம் ப்ரஹந்தம்' என்றும் பல:ச்ருதி வாக்யங்களே இதற்கு ப்ரமாணம் 'யேன சூர்யஸ்தபதி தேஜஸேத்த:' என்ற பூர்வவாக்யத்தினால் சூர்யாதிகளுக்கும் ப்ரகாசகமாக சிதானந்த பரமாத்ம ஸ்வரூபமே ப்ரகாசிக்கும் அது வேப்ரஹ்மமென்றும் தெரிவிக்கின்ற வாக்யங்களைக் கொண்டே அபரோக்ஷஞானம் ஏற்படவேண்டும். இவ்விதமின்றி வேறு ப்ரமாணங்களினால் அறியக்கூடிய விஷயமாக இருக்குமானால் வேதைக வேத்யம் என்று வேதம் ஒன்றே உண்மையான தத்வத்தை தெரிவிக்கின்றது என்றும் வேதையதி இதிவேத : என்று உண்மையான தத்வத்தை தெரிவிப்பது எதுவோ அதுவே வேதம் என்றும் சொல்லப்படுகிறது. உபநிஷத் ஒன்றினால் தான் அறியமுடியும் என்று விசேஷணம் சொல்லப்படுவதால் மற்ற ப்ரமாணாதிகளால் அறிய முடியாது என்பது சித்தம்.

**297.** அவதாரிகை : "நா வேதவின் மனுதே தம்ப்ருஹந்தம்" என்றும் "தம்த்வோபநிஷதம்" என்ற (ப்ரஹ 3.9.26 என்ற வாக்யங்கள், வேதத்தை அறியாதவனுக்கு ஆத்ம ஞானம் ஏற்படாது என்றும் ஆத்ம ஞானத்திற்கு உபநிஷத் ஒன்றே ஸாதனம் என்றும் தெரிவிக்கின்றது. அவ்விதம் இருக்கின்றபோது, மஹா வாக்யத்திலிருந்தே போதம் ஏற்படவேண்மென்று சொல்வதற்கு காரணம் என்ன?

ச்லோகம் :

उपनिषदिति वेद इत्यपीदं समभिवदन्ति महावचो महान्तः ।
फलवदवगतिः स्यादन्तरेणैतदेकं वचनमिति न शक्यं वक्तुमित्यादरोऽस्मिन्

ச்லோகார்த்தம் : மஹான்கள் இந்த மஹாவாக்யத்தை உபநிஷத் என்றும் வேதம் என்றும் சொல்கிறார்கள். இந்த மஹாவாக்யம் என்பது இல்லையானால் சபலமான (பலத்துடன்கூடிய) ஞானம் ஏற்படும் என்று சொல்வதற்கே முடியாது. ஆகையால் மஹாவாக்யத்திற்கு இவ்வித ஆதரவு இருக்கின்றது.

வ்யாக்யானம் : வேத வேதாந்தங்களை நன்கு விசாரித்து அத்யாத்ம ஸ்வரூபத்தை நிரூபணம் செய்திருக்கின்ற மஹான்களான புத்தி ஸாமர்த்யமுடையபெரியோர்களால், வேதம், உபநிஷத், என்ற பதங்களினுல் மஹாவாக்யமே குறிப்பிடபடுகிறது என்று சொல்லப்படுகிறது. வேதம் என்பதும் உபநிஷத் என்பதும் எல்லா விஷயங்களையும் பற்றி தெரிவிக்கின்றது என்பது லோக ப்ரசித்தமாக இருந்த போதிலும், யோகவ்யுத்பத்தியைக் கொண்டு அர்த்தம் செய்யப்படுகின்றபோது 'உபநிஷத்' என்ற சப்தம், அஞ்ஞானத்தை நாசம் செய்து ஆத்மஸ்வரூபத்தில் சேர்க்கின்றது என்ற அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. அதேபோல் 'வேதம்' என்ற சப்தம் (உண்மையான) தத்வம் எதுவோ அதைதெரிவிக்கிறது என்று அர்த்தம் செய்யப்படுகிறது. அதனுல் இந்த இரண்டு சப்தங்களும் மஹாவாக்யத்தையே குறிக்கின்றது. மஹாவாக்யத்தை அன்றி வேறு எந்த வாக்யத்திலுைம் மோக்ஷப்லனுக்கு ஸாதனமான அபரோக்ஷப்ரஹ்ம ஞானம் ஏற்படமுடியாது என்பதால் மஹாவாக்யத்திற்கே ஆதரவு இருக்கின்றது. ஆகையால் மஹாவாக்யமே, உபநிஷத் என்றும் வேதம் என்றும் இரண்டுவித பெயரால் குறிப்பிடப்படுகிறது. ச்லோகம் என்பது ஒரேவிருத்தத்தில் இருக்கவேண்டும். ஆனுல் இந்த ச்லோகத்தில், பூர்வார்த்ததம் என்பதும், உத்தரார்த்தம் என்பதும் வெவ்வேறு லக்ஷணத்தில் ஏற்பட்டிருக்கின்றது. இது தவருக ஏற்பட்டிருக்கின்றது.

**298.** அவதாரிகை : இந்த விஷயம் முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

ச்லோகம் :

उपनिषदिति शब्दो वेदशब्दश्च तस्माच्छ्रुतिशिरसि निविष्टो योज्यतामत्र वाक्ये ।
अपरमखिलमस्यैवाङ्गभूतत्वहेतोरिह समभिनिविष्टं तद्गिरो वाच्यमासीत्

ச்லோகார்த்தம் : ஆகையினுல் வேதாந்தத்தில் சொல்லப்படும் உபநிஷத், வேதம் என்ற சப்தங்கள் இரண்டும் மஹாவாக்யத்தில் தான் பொருத்தவேண்டும். மற்ற எல்லா வாக்யங்களும் இந்த மஹாவாக்யத்தின் அங்கமாக இருக்கின்றதால் மஹாவாக்யத்தில் அந்தர்க்கதமாகவே இருந்து கொண்டு உபநிஷத், வேதம் முதலான சப்தங்களுக்கு விஷயமாக ஆகின்றது.

வ்யாக்யானம் : வேதயதி இதிவேத:, வேத்யதே ஞாப்யதே அனேன பரம்ப்ரஹ்ம இதி என்று பரம்ப்ரஹ்ம மென்பது மஹா வாக்யத்தினுலேயே அறியப்படுகிறது என்பதால் மஹாவாக்யத்தையே வேதம் என்று சொல்லப்படுகிறது. அதேபோல் விசரண, கதி, அவஸாதனே என்று அஞ்ஞானத்தினுல் மறைக்கப்பட்ட ஸ்வரூபத்தை, அந்த அஞ்ஞானத்தை விலக்குவதன் மூலம், மறைவற்றதான ஸமீபத்திலுள்ள ப்ரஹ்மபாவத்தை அடைவிக்கின்றது என்ற காரணத்தினுலேயே உபநிஷத் என்று சொல்லப்படுகிறது. ஆனுல் உபநிஷத்திலும் வேதத்திலும் உள்ள எல்லா வாக்யங்களையும் சேர்த்தே உபநிஷத் என்றும் வேதம் என்றும் சொல்லப்படும் காரணம் என்னவென்ருல், மஹா வாக்யத்திற்கு மற்ற எல்லா வாக்யங்களும் அங்கமாக இருப்பதால், அவைகளும் மஹாவாக்யத்துடன் சேர்ந்து ஏகவாக்யதை என்ற தன்மையைக்கொண்டு எல்லாவற்றையும் சேர்த்தே வேதமென்றும், உபநிஷத் என்று சொல்லப்படுகிறது.

**299.** அவதாரிகை : ப்ரஹ்ம ஞானம் என்பது மஹாவாக்யத்தினுல்தான் ஏற்படுகிறது என்றும், வேதம், உபநிஷத் என்ற சப்தங்கள் மஹாவாக்யத்தையே போதிக்கின்றது என்றும் சொல்லப்படும் விஷயத்தில் ப்ரமாணம் என்ன ?

ச்லோகம் :

पित्रा तत्त्वमसीतिबोधनमनु स्पष्टं विजज्ञाविति च्छान्दोग्ये यदवोचदेतदिह नो लिङ्गं भवेज्ज्ञापकम् ।
सर्वत्रैव महागिरामुपनिषच्छब्दो भवेद्ग्राहको वेदश्चायमतोऽन्यदस्य निकटं तेनात्र वेदादिगीः

ச்லோகார்த்தம் : பிதாவினுல் (உத்தாலகரால்) உபதேசிக்கப்பட்ட 'தத்வமஸி' என்ற போதனையை (க்கேட்டபிறகு) தொடர்ந்து புத்ரனுனவன் ஸ்பஷ்ட்டமாக அறிந்தான் என்று சாந்தோக்ய உபநிஷத்தில் சொல்லப்படுகின்ற வாக்யமே இந்த விஷயத்தை தெரிவிக்கின்ற லிங்கமாக நமக்கு அமைகின்றது. எல்லா இடத்திலும் உபநிஷத், வேதம் என்ற சப்தங்கள் மஹா வாக்யத்தையே தெரிவிக்கின்றது. மற்றவாக்யங்கள் இதற்கு ஸமீபத்தில் (அங்கமாக) இருக்கின்றது. ஆகையால் அவைகளிலும் வேதம் முதலான சப்தங்கள் ப்ரயோகிக்கப்படுகிறது.

வ்யாக்யானம் : சாந்தோக்ய உபநிஷத்தில் ஸ்வேதகேது என்பவனுக்கு அவனுடைய பிதாவினுல் உபதேசிக்கப்பட்ட 'தத்த்வமஸி' என்ற மஹாவாக்யத்தினுல்தான் ஜீவ ப்ரஹ்மஜக்யம் ஏற்பட்டதாக சொல்லப்பட்டிருக்கிறது. மேலும் 'தத்தாஸ்ய விஜஜௌ' என்ற வாக்யம் மஹாவாக்யத்தைக் கேட்டவுடனேயே ப்ரஹ்ம சாக்ஷத்கார ஞானம் ஏற்பட்டதாக ஸ்பஷ்ட்டமாகவே தெரிவிக்கின்றது. ஆகையால் மஹாவாக்யம் என்பதே ஸ்வரூபோதத்திற்கு காரணம் என்றும் மற்றவாக்யங்கள் மஹாவாக்ய போதத்திற்கு உபகாரகமான வாக்யங்கள் என்பதால் அவைகளையும் சேர்த்தே உபநிஷத் என்றும் வேதம் என்றும் சொல்லப்படுகிறது என்று வேத அத்யயனம் செய்து வேதார்த்தங்களை நன்கு அறிந்த பெரியோர்களால் சொல்லப்படுகிறது.

**300.** அவதாரிகை : உபநிஷத் என்றபதம் 'விசரண, கதி, அவஸாதனே' என்ற தாத்வர்த்தத்தினுல் ப்ரஹ்மவித்யை என்ற அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. என்றும், மஹா வாக்யத்திலிருந்து ஏற்படும் ப்ரஹ்மஞானமே ப்ரஹ்மபாவத்தை அடைவிக்கின்றது என்றும் சொல்லப்படவேண்டும். அதனுல் ப்ரஹ்மவித்யை என்பதே உபநிஷத் என்பதின் முக்யார்த்தம் என்று சொல்லவேண்டுமேயன்றி மஹாவாக்யம்தான் முக்யார்த்தம் என்று சொல்வது சரியல்ல என்று ஆக்ஷேபிக்கப்படுகிறது.

ச்லோகம் :

उपनिषद्वचसा परमात्मधीः सहजशक्तिवशेन निगद्यते ।
उपचरय्य महागिरी वर्तते निकटभावमपेक्ष्य तु मुख्यगीः

ச்லோகார்த்தம் : உபநிஷத் சப்தத்தினுல் அதனுடைய அவயவார்த்தத்தை அனுசரித்து பரமாத்ம ஞானமே சொல்லப்படுகிறது. அந்த சப்தமானது உபசாரத்தினுல் மஹா வாக்யத்தில் ப்ரயோகிக்கப்படுகிறது. பரமாத்ம ஞானத்திற்கு ஸமீபத்தில் இருப்பதை அபேக்ஷித்து முக்யமென்று சொல்லப்பட்டது.

வ்யாக்யானம் : உபநிஷத் என்ற சப்தத்திற்கு, அஞ்ஞானத்தை நிவர்த்திக்கக்கூடிய ப்ரஹ்மவித்யை என்பதே முக்யார்த்தமாகச் சொல்லப்படவேண்டும். மஹாவாக்யம் என்பது ப்ரஹ்மஞானத்தை உண்டுபண்ணுகின்றது என்பதாலும், மற்ற அவாந்தரவாக்யங்களைக் காட்டிலும் முக்யமாக இருக்கின்றதாலும், உபநிஷத் சப்தம் ப்ரஹ்மவித்யையை போதிக்கின்றது என்பதால் அவாந்தர வாக்யங்களை அபேக்ஷித்து மஹாவாக்யம் முக்யம் என்றும், ப்ரஹ்ம வித்யை என்பதை அபேக்ஷித்து அமுகயம் என்று சொல்லப்படுகிறது. ஆனால் ப்ரஹ்மவித்யைக்கு நெருங்கிய ஸாதனமாக இருக்கின்றதால் உபநிஷத் என்ற பதம் மஹாவாக்யத்தையே குறிப்பிடுகிறது என்று சொல்லப்படுவதில் எவ்வித தோஷமும் இல்லை.

**301.** அவதாரிகை : மேலும், இதே விஷயம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

उपनिषद्वचसाऽभिहिताऽऽत्मधीर्निकटवर्तिमहागिरी मुख्यवत् ।
उपनिषद्वचनं तदवान्तरे वचसि गौणवदत्र विवक्ष्यते

ச்லோகார்த்தம் : உபநிஷத் சப்தத்தினால் ஆத்மஞானமே சொல்லப்படுகிறது. லோகத்திலும், சாஸ்திரத்திலும் உபநிஷத் சப்தம் என்பது ஆத்மஞானத்திற்கு ஸமீபத்தில் இருக்கின்ற மஹாவாக்யத்தில் முக்யம் போல ப்ரயோகிக்கப்படுகிறது (மஹாவாக்யத்திற்கு அங்கமான) அவாந்தர வாக்யங்களில் கௌணம் போல் ப்ரயோகிக்கப்படுகிறது.

வ்யாக்யானம் : உபநிஷத்தில் உள்ள மஹாவாக்யம் என்பதே ஆத்மஞானம் சாக்ஷாத் காரமாக ஏற்படுவதற்கு முக்யமாக இருக்கிறது. ஆகையால் நேரிடையாகவே ப்ரஹ்மவித்யையை உண்டு பண்ணுகிறது என்பதால் மற்ற கௌண வாக்யங்களான அவாந்தர வாக்யங்களை அனுசரித்து மஹாவாக்யம் முக்யம் என்று சொல்லப்பட்ட போதிலும், ப்ரஹ்மவித்யை என்பதை அனுசரித்து மஹாவாக்யம் என்பது உபசாரமாகவே உபநிஷத் என்று சொல்லப்படுகிறது என்று வேதாந்த விசாரத்தில் குசலர்களான பெரியோர்களால் சொல்லப்படுகிறது.

**302.** அவதாரிகை : ஸ்வேத கேதுவிற்கு உபதேசிக்கப்பட்ட மஹாவாக்யார்த்தத்தினால் ப்ரஹ்மஞானம் ஏற்பட்டது என்று 'தத்தாஸ்யவிஜிஞ்ஞௌ' என்ற வாக்யத்தைக் கொண்டு முன் ச்லோகத்தில் லிங்கமாக சொல்லப்பட்ட விஷயம் இங்கு முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

ச்லோகம் :

यतो महावाक्यत एव पुत्रो विजज्ञिवानस्य पितुः सकाशात् ।
इति श्रुतं तेन स एव वेदस्तथैव सैवोपनिषच्च सिद्धा

ச்லோகார்த்தம் : பிதாவினிடமிருந்து புத்ரனானவன் மஹாவாக்யத்தின் மூலமாகவே ஆத்மஸ்வரூபத்தை அறிந்து கொண்டான் என்று ச்ருதியில் சொல்லப்படுகிறது. ஆகையால் அந்த மஹா வாக்யமே வேதம் என்றும் அதுவே உபநிஷத் என்றும் சித்திக்கின்றது.

வ்யாக்யானம் : பிதாவான உத்தாலகரால் உபதேசிக்கப்பட்ட புத்ரன் ஸ்வேத கேதுவிற்கு, அவாந்தர வாக்யங்களைக் கேட்டபோது ஆத்ம சாக்ஷத்காரம் ஏற்படவில்லை யென்றும் மஹாவாக்யத்தை கேட்டபிறகே சாக்ஷத் ப்ரஹ்ம வித்யையை அடைந்தான் என்றும் உபநிஷத்வாக்யமே தெரிவிக்கின்றதால் ப்ரஹ்மவித்யைக்கு காரணம் மஹாவாக்யம் என்ற லிங்கத்தைக் கொண்டு உபநிஷத் என்ற சப்தமும் வேதம் என்ற சப்தமும் மஹாவாக்யத்தையே முக்யார்த்தமாக தெரிவிக்கின்றது என்று இந்தவிஷயத்திற்கு சாந்தோக்ய வாக்யமே ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது.

**303.** அவதாரிகை : இதுவரை, மஹாவாக்யத்திலிருந்தே ப்ரஹ்மபோதம் ஏற்படவேண்டுமென்பதை அன்வயமுகேன தெரிவிக்கப்பட்டது. இப்போது மஹாவாக்யம் இல்லாமல் ப்ரஹ்மபோதம் ஏற்படமுடியாது என்று வ்யதிரேகமுகேன தெரிவிக்கப்படுகிறது.

ச்லோகம் :

विना महावाक्यमतो न कश्चित्पुमांसमद्वैतमवैति जन्तुः ।
ततः पदार्थावगमान्न मुक्तिर्घटिष्यते तस्य परोक्षभावात्

ச்லோகார்த்தம் : ஆகையால் மஹாவாக்யம் இல்லாமல் ஒரு புருஷனும் அத்வைத ஸ்வரூபமான ஆத்மாவை அறிவதில்லை. ஆகையால் பதார்த்த ஞானத்தினுல் மட்டும் முக்தி ஸம்பவிக்காது. ஏனெனில் அந்த ஞானம் பரோக்ஷமாக இருக்கின்றது. (ப்ரத்யக பின்னம் ப்ரஹ்மமென்ற ஞானம் மஹாவாக்யத்தினுல் ஏற்படவேண்டும்)

வ்யாக்யானம் : மஹாவாக்யத்திலிருந்தே அத்வைதம் என்ற பரமார்த்த ஞானம் ஏற்படுகிறது. அதுவே க்ருதார்த்தத்தைக்கு காரணம் தனித்தனியே ஏற்படும் பதார்த்த ஞானத்தினுல் அபேதஞானம் ஏற்படாது என்று முதலில் அத: என்றபதம் சேர்க்கப்பட்டிருப்பதன் காரணத்தினுல் அறிந்து கொள்ளவேண்டும். ஆகவே, பதார்த்த ஞானம் என்பது, பதங்களினுல் அறியப்படும் அர்த்தம் யுக்தி சித்தமாக இருக்கின்றதால் பரோக்ஷமாகத்தான் இருக்கமுடியும் என்பதால் பதார்த்த சோதனத்தினுல் மட்டும் க்ருதக்ருத்யதை ஏற்படாது. அதனுல் அபரோக்ஷமான ஸம்ஸாரம் பரோக்ஷஞானத்தினுல் நிவர்த்திக்காது. ஆகவே, மஹாவாக்யம் என்பதே முக்தி என்ற பலனை கொடுக்கின்றது.

**304.** அவதாரிகை : வாக்யத்திலிருந்தே ப்ரஹ்மஞானம் ஏற்படவேண்டுமென்ருல், பதபதார்த்த சோதனம் எதற்காக ?

ச்லோகம் :

पदार्थबोधं परिहृत्य वाक्यं न शक्तमात्मानुभवावसानाम् ।
धियं समानेतुमपेक्षितत्वादतः स यत्नेन निरूपितोऽभूत्

ச்லோகார்த்தம் : பதார்த்த ஞானம் இல்லாமல் ஆத்மானு பவபர்யந்தமான ஞானம் ஏற்படுவதற்கு வாக்யம் ஸமர்த்தமாகாது. ஆகையால் பதார்த்த ஞானம் அபேக்ஷிக்கப்படுகிறது என்பதை யத்னத்துடன் நிரூபணம் செய்யப்பட்டது.

வ்யாக்யானம் : பத பதார்த்தங்களில் உள்ள அம்ஸங்களை விசாரித்து அறிந்தால்தான் வாக்யார்த்தம் என்னவென்று அறிந்து கொள்ள முடியும். ஆகவே

மஹாவாக்யம் என்பது அகண்டார்த்தமான ப்ரஹ்மாத்ம வஸ்து ஞானத்தை உண்டுபண்ணுவதற்கு சோதித பதார்த்த ஞானம் ஏற்படவேண்டும். அவ்விதம் பதார்த்த ஞானம் இல்லையென்றால் அபேத ஞானத்தை வாக்யம் உண்டுபண்ண முடியாது. என்ற காரணத்தினாலேயே பதார்த்தங்களை மிகுந்த ப்ரயாஸையுடன் விளக்கப்பட்டிருக்கிறது.

**305.** அவதாரிகை : எந்த பதார்த்த ஞானத்தினால் அபேதவாக்யார்த்த ஞானம் ஏற்படும் என்று சொல்லப்பட்டதோ அந்த பதார்த்த ஞானம் என்ன வென்பதை மேலே விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

तच्छब्दादवगतमद्वितीयमासीत्प्रत्यक्त्वं समधिगतं त्वमित्यनेन ।
प्रत्यक्त्वं न खलु विना द्वितीयमेवं नाद्वैतं भवितुमलं विना प्रतीचा

**ச்லோகார்த்தம் :** தத்சப்தத்திலிருந்து அத்விதீயத்வம் அறிப்பட்டது. த்வம் சப்தத்திலிருந்து ப்ரத்யக்த்வம் அறியப்பட்டது. அத்விதீயத்வம் இல்லாமல் ப்ரத்யக்த்வம்ஸம்பவிக்காது. அவ்விதமே ப்ரத்யக்த்வம் இல்லாமல் அத்விதீயத்வம் என்பதும் ஸம்பவிக்காது.

**வ்யாக்யானம் :** பதார்த்த சோதனத்தினால் வாக்யார்த்தத்திற்கு என்ன ப்ரயோஜனம் என்றால், வாக்யம் அகண்டார்த்தத்தை போதிக்கின்ற போது, பதார்த்தங்கள் இரண்டும் ஒன்றே என்று அபேத ஞானம் ஏற்படுவதற்கு பதார்த்த சோதனம் மிகவும் அவச்யம் ஏனெனில் பதார்த்தங்களினால் அறியப்படும் வாக்யார்த்தத்தினால் ஒன்றுக்கொன்று விரோதம் இருக்கின்றதால் அபேத ஞானம் ஏற்படமுடியாது. அதனால் விரோதாம் ஸங்களை விலக்கி தத்த்வமஸி என்ற வாக்யத்திலுள்ள தத்பதார்த்தமான ஈச்வரஸ்வரூபம் அத்விதீயம் என்ற லக்ஷ்யார்த்தம் அறியப்படவேண்டும். அதேபோல் த்வம் பதார்த்த லக்ஷ்யார்த்தம் ப்ரத்யக் ஸ்வரூபம் என்பது அறியப்படவேண்டும். இவ்விதம் விசாரிக்கப்பட்டதனால் சித்தம் செய்யப்பட்ட அத்விதீயஸ்வரூபமான ஈச்வரன் என்பதும் ப்ரத்யக் ஸ்வரூபமும் தனித்தனியே அறியப்படுமானால் அபேதமான அகண்டார்த்த போதம் ஏற்படாது. ஆகையால் ப்ரஹ்மமே ஸர்வசரீரங்களிலும் உள்ள ப்ரத்யக் ஸ்வரூபம் என்று அறியப்பட்டால்தான், இரண்டும் ஒன்றே என்ற அபேத ஞானம் ஏற்படும். இவ்விதம் அறியாதவரையில் ப்ரஹ்மபாவம் ஏற்படாது. ப்ரத்யக் ஸ்வரூபமே ஸர்வாந்தரம் என்று அறிந்தால் தான் ப்ரஹ்மபாவம் ஏற்படும். ப்ரஹ்மமென்பது வேறு என்றால் ப்ரத்யக்த்வம் சித்திக்காது. இந்தவிதம்பதார்த்த சோதனம் செய்து உபாதிகளை விலக்கினால் ப்ரத்யக்த்வம் சித்திக்கும். அவ்விதம் ஸர்வப்ரத்யக் என்று சித்தித்தால் தான் அதுவே ப்ரஹ்மமென்று சித்திக்கும். இதேபோல் ப்ரத்யக் ஸ்வரூபமே ப்ரஹ்மமென்று சித்திக்காவிடில் தத்பதார்த்த வஸ்து அத்விதீயம் என்று சித்திக்காது. ஸர்வாந்தரமாக இருக்கின்றதன்மையே ப்ரத்யக்தவம் ப்ரத்யக்தவம் என்பது ப்ரஹ்மத்தைக் காட்டிலும் வேறு என்று சொல்லப்படுமானால்ப்ரத்யக்த்வம் சித்திக்க முடியாது.

இதேபோல், தத்பதார்த்தமான ஈச்வரன் என்பதற்கும் ப்ரத்யக்த்வம் சொல்லப்பட வில்லையென்றால், ஈச்வரனுக்கு அத்வீதீயத்வம் சித்திக்காது. ஆகையால், தத்த்வம் என்ற இரண்டு பதார்த்தங்களும் சைதன்யமே என்ற லக்ஷணம் அறியப்பட்டால்தான்

இரண்டும் ஒன்றே என்ற அகண்டார்த்த போதம் ஏற்படும். இந்த விதம் ஏற்படும் ஞானத்தினுல் ஈச்வரனிடம் அறியப்படும் பாரோக்ஷ்யமும், த்வம்பதார்த்தத்தில் அறியப்படும் ஸத்வித்தீயத்வமும் நீங்கி, பூர்ண அகண்ட ஏகரஸமான (சைதன்யம்) வாக்யார்த்தம் சித்திக்கின்றது. அதனுல் பதார்த்த சோதனம் அவச்யம் செய்ய வேண்டுமென்பது சித்தமாகின்றது.

**306.** அவதாரிகை : அனுமானம் என்ற தர்க்கத்தினுலேயே த்ருக்ஸ்வரூபமும், த்ருச்யம் என்பதும் வேறு என்று அறியப்படுகின்றதே ? அதாவது ஆத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் அனுத்மா என்பது வேறு என்று அனுமானத்தினுயே அறிந்து கொள்ளலாம். அதனுல் அனுத்மவிலக்ஷணம் ஆத்மா என்று அறிவதற்கு வாக்ய விசாரம் எதற்கு ? வாக்யவிசாரம் செய்யப்படுவதில் என்ன விசேஷசம் ?

ச்லோகம் :

तर्कप्रतीतिसमयेऽपि तदद्वितीयं प्रत्यक्परिस्फुरति तत्प्रतिबिम्बितं सत् ।
वेदान्तवाक्यजनिताद्वयबुद्धिभूमिनिष्ठं पुनः स्फुटतरं भवतीति भेदः

ச்லோகார்த்தம் : யுக்தி ஜன்யமான வ்ருத்தி ஏற்படும் காலத்திலும், அந்த வ்ருத்தியில் ப்ரதிபிம்பிதமான அத்விதீய ப்ரத்யகாத்மா ப்ரகாசிக்கின்றது. ஆனுல் வேதாந்த வாக்ய ஜன்யமான அகண்டாகார வ்ருத்தி ப்ரதிபிம்பிதமான அத்விதீய ப்ரத்யகாத்மாவானது மேலும் ஸ்புடமாக ப்ரகாசிக்கின்றது என்ற விசேஷம் இருக்கின்றது.

வ்யாக்யானம் : தர்க்கத்தினுல் ஏற்படும் புத்தி வ்ருத்தியில் ஆத்ம சைதன்யம் ப்ரகாஸ ஸ்வரூபம் என்பது ப்ரகாஸிக்கலாம். ஆனுல் அத்வைத அகண்டாகார வ்ருத்தி என்பது வாக்யத்தினுல் தான் ஏற்படும். அந்த ஞானமே அபரோக்ஷசாக்ஷாத்காரத்தை ஏற்படுத்த முடியும் ஏனெனில் வாக்யத்தினுல்தான் அஸம்பாவனே முதலான தோஷங்கள் நிவர்த்திக்கின்றது. இவ்வித தோஷங்கள் அற்ற சுத்த சைதன்யமாத்ர ஞானமே அபரோக்ஷஞானம் என்பதால், அந்த ஞானத்தினுல் தான் ஸ்பஷ்ட்டாமாக அறிந்து கொள்ளமுடியும். தர்க்காதிகளால் அபரோக்ஷஞானம் ஏற்பட முடியாது.

**307.** அவதாரிகை : தர்க்கத்தினுல் ஏற்படும் புத்தி வ்ருத்திக்கும், வாக்யத்தினுல் ஏற்படும் புத்தி வ்ருத்திக்கும், சுத்தம், அசுத்தம் என்ற தாரதம்யம் இருக்கின்றது என்ற விஷயம் த்ருஷ்ட்டாந்த மூலமாக விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

अधममध्यमशुद्धिनिरूपणे परमशुद्धिनि चाऽऽननमात्मनः ।
तरतमक्रमतः प्रतिभासते तदिव तत्त्वमिह प्रतिपत्तिषु

ச்லோகார்த்தம் : அதமமாகவும், மத்யமாகவும், உத்தமமாகவும் சுத்தமாகவும் இருக்கின்ற கண்ணுடியில் தன்னுடைய முகமானது தாரதம்யத்துடன் ப்ரகாசிக்கின்றது. அதுபோலவே இந்த இடத்திலும் (இரண்டுவித) வ்ருதிகளில் தத்வமானது தாரதம்யத்துடன் ப்ரகாசிக்கின்றது.

வ்யாக்யானம் : புத்தி என்பதில் உள்ள சுத்தம், அசுத்தம் என்ற தாரதம்யத்தினுல் அந்த புத்தியில் ஏற்படும் வ்ருத்தியிலும் தாரதம்யம் இருக்கின்றது. கண்ணுடி என்பது சுத்தமாக இருக்குமானுல் அதில் ஏற்படும் ப்ரதிபிம்பம் என்பதும் ஸ்பஷ்ட்டமாக அறியப்படும். கண்ணுடி அசுத்தமாக இருக்குமானுல் அதில் ஏற்படும் ப்ரதிபிம்பம் அஸ்பஷ்ட்டமாக இருக்கும். ஆகையால் உபாதியின் தாரதம்யத்தைப் பொறுத்தே விஷயப்ரகாசம் ஏற்படும்.

**308.** அவதாரிகை : ஆகவே, அனுமானத்தினுல் ஏற்படும் புத்திவ்ருத்தியினுல் அறியப்படும் விஷயம் நேரிடையாக அறியப்படுவதில்லே. ஆனுல் சப்தம் அவ்விதம் இல்லேயென்பதால் இரண்டிற்கும் வித்யாஸம் இருக்கிறது.

ச்லோகம் :

एकदेशमुपलभ्य धर्मिणश्चैकदेशमपरं विजानते ।
धर्मिधीव्यवधिकारणादतो नानुमाऽनुभवनाय वस्तुनः

ச்லோகார்த்தம் : பக்ஷத்தினுடைய (வ்யாப்யவிசிஷ்ட்டத்வம் என்ற) ஏகதேசத்தை அறிவதன் மூலம் (வ்யாபக விசிஷ்ட்டத்வம் என்ற) ஏகதேசத்தை அறிகிருர்கள். பக்ஷஞானம் என்ற வ்யவதானம் இருப்பதால் வஸ்துவின் அபரோக்ஷ ஞானத்திற்கு அனுமானம் ஸஹாயமாக ஆகாது.

வ்யாக்யானம் : அனுமானம், சப்தம், என்ற ப்ரமாணங்களினுல் ஏற்படும் புத்தி வ்ருத்தியில் வித்யாஸம் இருக்கிறது. ஏனெனில் அனுமானத்தினுல் சித்திக்கின்ற விஷயத்தில் ஒரு அம்ஸம்தான் ப்ரத்யக்ஷம் மற்ருெரு அம்ஸம் அனுமானமாக இருக்கின்றதால் அது பரோக்ஷமாகவே இருக்கிறது. ப்ரத்யக்ஷமல்ல. உதாரணமாக 'பர்வதோ வன்னிமான் தூமத்வாத்' என்ற அனுமானத்தினுல் வன்னி என்பது சாதிக்கப்படுகிறது. இதில் தூமம் ஒன்றே ப்ரத்யக்ஷம், வன்னி ப்ரத்யக்ஷமில்லே. ஏனெனில், ப்ரமாதாவிற்கும் வன்னிக்கும் மத்தியில் பர்வதம் என்பது வன்னியை மறைக்கின்றது. அதனுல் ப்ரமாதாவின் புத்தி வ்ருத்திக்கு ஸாத்யவஸ்துவின் ஸம்பந்தம் ஏற்படுவதில்லே. அதனுல் எந்த ஸாதனத்தைக் கொண்டு எது ஸாதிக்கப்படுகிறதோ, ஸாத்யமான அந்த வஸ்து ப்ரத்யக்ஷமில்லே. அக்னி இருக்கவேண்டுமென்று அனுமானிக்கப்படுகிறது. அதனுல் அனுமானம் என்பது நேரிடையாக ஸாத்ய வஸ்துவை தெரிவிக்க முடியாது. அது மட்டுமல்ல, எந்த வஸ்து தர்க்கத்தினுல் ஸாதிக்கப்படுகிறதோ அந்தவஸ்து ஏற்கனவே ப்ரமாணத்தினுல் சித்தமானதாக இருக்கின்றதால் அந்த விஷயத்தைக்கொண்டே இது இவ்விதம்தான் இருக்கவேண்டு மென்று யூகிக்கப்படுகிறது. ஆகவே, அதை நிச்சய ஞானம் என்று சொல்லமுடியாது. மேலும் ஞானம் என்பது ப்ரமாணத்தினுல் ஏற்படவேண்டும். தர்க்கம் என்பது ப்ரமாணமில்லே. ஸ்வயம் ப்ரமாணமாக இல்லாத அனுமானம் என்ற தர்க்கத்திலிருந்து அபரோக்ஷஞான அனுபவம் ஏற்படமுடியாது. அனுமானம் என்பது ப்ரத்யக்ஷமாக அறியப்பட்ட அக்னியிலிருந்து ஏற்பட்ட புகையைக் கொண்டு வேறு இடத்தில் புகையை மட்டும் பார்த்தாலும் (வ்யாப்தி, லிங்கம்-பக்ஷம்) அக்னி இருக்கின்றதென்று யூகித்து

அறியப்படுகிறது. ஆனுல் அக்னி என்ற வஸ்துவின் ஸ்வரூப ஞானம், வ்யாபகமானபுகையுடன் கூட சாக்ஷாத் ஸம்பந்தம் அறியப்படுவதில்லை. அதனுல் ஸ்வரூபத்தின் அபரோக்ஷ ஞானம் ஏற்படமுடியாது. ஆகவே அனுமானத்தினுல் ஏற்புடம் புத்தி வ்ருத்தி அசுத்தம். அந்த புத்தி வ்ருத்தியில் அகண்டாகார வஸ்து ப்ரதி பலனம் ஏற்பட்டபோதிலும் வஸ்து இருக்கிறது என்று அறியப்படலாமேயன்றி வஸ்து அபரோக்ஷஞானம் ஏற்படமுடிாயது. சுஷுப்தியில் எந்தவிதமான ஞானமும் ஏற்படுவதில்லை. வாக்யத்தினுல் ஏற்படும் லக்ஷணுவ்ருத்தியினுல் கேவல ப்ரஹ்மாகாரமாகவே புத்தி வ்ருத்தி ஏற்படுகின்றதால் அபரோக்ஷமாகவே ஞானம் ஏற்படும். மஹாவாக்யம் ஸ்வயமே தன்னிடமுள்ள லக்ஷணையினுல் அகண்டாகார ப்ரஹ்மத்தை விஷயமாகக் கொண்ட புத்தி வ்ருத்தியைஉண்டுபண்ணுகிறது. இவ்விதம் வாக்யத்திலிருந்து போதம் ஏற்படுவதற்கு முன்பே தர்க்கத்தினுல் தேஹவ்யதிரிக்தம் ஆத்மா என்றும் அதுவே சுத்த ஸ்வரூபமான ஆத்மா என்றும் சோதிக்கப்பட்ட பிறகு அந்த ஸ்வரூபமே வாக்யத்தினுல் அபரோக்ஷமாக ஆகிறது. இவ்விதம் வாக்யத்தினுல் ஏற்படும் அபரோக்ஷ ஞானம் சுத்த தரமாக இருக்கின்றது. அதனுல்தான் அபரோக்ஷமான ஸம்ஸாரம் அபரோக்ஷப்ரஹ்மாகா வ்ருத்தியினுல் நிவர்த்திக்கின்றது. இந்த காரணத்தினுல் தான் இரண்டிற்கும் வித்யாஸம் சொல்லப்படுகிறது.

**309.** அவதாரிகை : இதே விஷயம் அனுவாதம் செய்வதுடன் மேலும் வேறுவிஷயம் பற்றியும் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

एवं तावत्तत्त्वमर्थौ विशुद्धौ बोद्धव्यं चेदन्यदस्तीति पृच्छ ।
यद्यद्बुद्धं तत्तदादाय तिष्ठेर्यच्चाबुद्धं तत्र चाऽऽधत्स्व चेतः

ச்லோகார்த்தம் : இந்தவிதம் தத்த்வம் பதார்த்தங்கள் சோதிக்கப்பட்டது அறியப்படவேண்டிய வேறு எதுவும் இருக்குமானுல் கேட்ப்பாயாக. எவையெல்லாம் அறியப்பட்டதோ அதை அனுசந்தானம் செய்து கொண்டே இருப்பாயாக. எது அறியப்படவில்லையோ, அந்தவிஷயத்தில் மனதைச் செலுத்துவாயாக :

வ்யாக்யானம் : இதுவரை சொல்லப்பட்ட விஷயங்களில் சிஷ்யனுக்கு ஏதாவது ஸந்தேகம் ஏற்படலாம் என்பதை கருத்தில் கொண்டு குருவானவர் சிஷ்யனைப்பார்த்து - இதுவரை தத்-த்வம் பதார்த்தங்கள் சோதனம் செய்து சுத்தமான ப்ரஹ்மதத்வம் என்னவென்பதை நிர்ணயம் செய்து போதிக்கப்பட்டது. இதற்கு மேல் வேறு ஏதாவது அறியப்படவேண்டுமென்று இச்சை இருந்தால் அதையும் கேட்டு அறிந்துகொள். மேலும் சித்தம் என்பது (புத்தி) ஸ்வபாவத்தில் பாஹ்ய விஷயங்களிலேயே ஈடுபடுகின்றதால் இதுவரை அறியப்பட்ட விஷயங்களைக் கூட மறக்க நேரிடும். அவ்விதம் மறதி ஏற்படாமல் இருப்பதற்குரிய முயற்சியைச் செய்யவேண்டும். அதற்காக சொல்லப்பட்ட விஷயத்திலேயே சிந்தனை இருக்குமானுல் இப்போது சொல்லப்போகின்ற விஷயம் க்ரஹிக்கப்படமுடியாது. ஆகையால் மேலே கேட்க்கின்ற விஷயத்திலும் கவனக்குறைவின்றி ஏகாக்ரதையுடன் கேட்டு க்ரஹிக்கப்பட வேண்டும்.

**310.** அவதாரிகை : இவ்விதம் ஆஞ்ஞாபிக்கப்பட்ட பிறகு சிஷ்யன்தான் அறியவிரும்பிய விஷயம் பற்றி ப்ரச்னம் செய்கின்ருன்.

ச்லோகம் :

बुद्ध्वा तत्त्वं पदार्थावनुभवविषयं कर्तुकामस्तदैक्यं
वाक्याद्वाक्यार्थनिष्ठाच्छ्रुतिशिरसि गतादञ्जसा तत्त्वमादेः ।
तच्छेषापन्नमस्मिञ्श्रुतिशिरसि वचोजातमन्यद्यदस्ति
तस्येयत्ताबुभुत्साकुलितनिजमतिः पृच्छति स्मैष भूयः

ச்லோகார்த்தம் : சிஷ்யனுனவன், தத்த்வம் பதார்த்தங்களை அறிந்து கொண்டு வாச்யார்த்தமான அபேதத்தில் தாத்பர்யமுள்ள தத்வமஸ்யாதி வேதாந்த வாக்யங்களில் இருந்து ஐக்யத்தை நேரிடையாக அபரோக்ஷஞானமாகச் செய்வதற்கு ஆசை உடையவனுக இருக்கின்ருன். மஹாவாக்யத்திற்கு ஸேஷமாக வேறு எந்த வாக்யம் இருக்கின்றதோ அதனுடைய பரிமாணத்தை அறிந்துகொள்வதற்கான ஆஸங்கையினுல் கலக்கமடைந்த மனதையுடைய சிஷ்யன் மீண்டும் ப்ரச்னம் செய்கின்ருன்.

வ்யாக்யானம் : தத், த்வம் என்ற பதார்த்தங்கள் என்னவென்பதை அறிந்துகொண்டேன். ஆனுல் தத் த்வம் பதார்த்த ஐக்ய போதம் ஏற்படுவதற்குரிய அவாந்தர வாக்யங்கள் என்னவென்று அறியவிரும்புகிறேன். ச்ருதிசிரஸ் என்று சொல்லப்படும் மஹவாக்யங்களுக்கு அங்கமான அவாந்தரவாக்யங்கள் அனேகமாக இருக்கின்றதால், அவைகளில் ஸ்வரூப நிர்ணயம் செய்து தெரிவிக்கக் கூடிய பதங்கள் என்ன தத்பதார்த்தம் த்வம்பதார்த்தம் என்பவைகளின் லக்ஷ்யார்த்தம் அறியப்படு வதாலேயே அகண்டார்த்தபோதம் ஏற்படலாமே ? அதனுல் இந்த விஷயத்தில் அவாந்தர வாக்யங்களால் என்ன ப்ரயோஜனம் ஏற்படுகிறது என்பதை அறியவிரும்புகிறேன்.

**311.** அவதாரிகை : இவ்விதம் சிஷ்யனுல் செய்யப்படும் ப்ரச்னம் என்னவென்ருல்,

ச்லோகம் :

अद्याप्यवबान्तरवचः परिणामबोधवैकल्यमस्ति मम तेन महावचोऽपि ।
वाक्यार्थबुद्धिमनभूतिफलावसानां नोत्पादयत्यहरहः श्रुतमप्यशक्तेः

ச்லோகார்த்தம் : இப்போதும் அவாந்தரவாக்யங்களின் பரிமாண ஞானம் என்னிடமில்லை. ஆகையால் நாள்தோறும் (தினந்தோறும்) கேட்கப்பட்டபோதும் மஹாவாக்யம் என்பது அனுபவபர்யந்தமான வாக்யார்த்த ஞானத்தை உண்டுபண்ணுவதில்லை. ஏனெனில் வாக்யார்த்தத்திற்கு அந்த ஸாமர்த்யம் இல்லை.

வ்யாக்யனாம் : இதுவரை உபதேசிக்கப்பட்ட விஷயங்களில் அவாந்தர வாக்யங்களைப்பற்றி விசாரிக்கப்படாததால் மஹாவாக்யார்த்தத்தினுல் ஏற்படக்கூடிய அகண்டார்த்தபோதம் எனக்கு ஏற்படவில்லை. அதனுல் மஹாவாக்யத்தினுல் ஏற்படும் அகண்டார்த்த போதத்திற்கு அவாந்தரவாக்ய அபேக்ஷையும் இருக்கின்றது என்று அறியப்படுகிறது. ஏனெனில் மஹாவாக்யார்த்தம் என்னவென்று விடாமல் விசாரித்து அறிந்திருந்தும் கூட எனக்கு அபரோக்ஷ ஞானம் ஏற்படாததால் அவாந்தரவாக்யத்தையும் அவஸ்யம் அறிந்து கொள்ள வேண்டுமென்று விரும்புகிறேன் என்று ப்ரச்னம் செய்கிருன்.

**312.** அவதாரிகை : முன் அத்யாயத்தில் சொல்லப்பட்ட விஷயத்தையே மேலும் விளக்கமாக விபாகம் செய்து தெரிவிக்கிப்படுகிறது.

ச்லோகம் :

विधिमुखेन परस्य निवेदकं वचनजातमवान्तरसंज्ञितम् ।
यदपि भेदनिषेधमुखेन तत्परिमितिं प्रतिपादय मेऽद्य भोः

ச்லோகார்த்தம் : ஹே 'ப்ரபோ' விதிமுகமாகவும் நிஷேதமுகமாகவும் பரப்ரஹ்மத்தை தெரிவிக்கின்ற அவாந்தர வாக்யங்களின் பரிமாணத்தை (அளவினை) எனக்கு ப்ரதிபாதனம் செய்வீர்களாக.

வ்யாக்யானம் : "ஸத்யம் ஞானம் அனந்தம் ஆனந்தம் ப்ரஹ்ம்" என்ற வாக்யம் வஸ்துவின் ஸ்வரூபத்தை பாவரூபமாக தெரிவிக்கின்றது. இந்த வாக்யம் விதிமுகமாக வஸ்துவை போதிக்கின்றது. இதேபோல் அஸ்தூலம் அனனு முதலான வாக்யங்கள் ப்ரஹ்ம ஸ்வரூபத்தையே போதிக்கின்றது என்றுலும் அவைகள் ப்ரஹ்மஸ்வரூபமாக இல்லாதவற்றை நிஷேதம் செய்து தெரிவிக்கின்றது. ஆகவே, இந்தவிதம் விதிமுகமாகவும், நிஷேதமுகமாகவும் தெரிவிக்கின்ற இரண்டுவிதமான வாக்யங்களைப் பற்றி மேலே விளக்கப்படுகிறது.

**313.** அவதாரிகை : மேலும் இதே விஷயம் பற்றி விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

सकलवेदशिरःसु परात्मधीपरवचःसुः परापरबोधतः ।
अपुनरुक्तपदान्युपसंहरन्परिमितिं स्वयमेव तु वेत्स्यसि

ச்லோகார்த்தம் : ஸர்வ உபநிஷத்துக்களிலும் ஸகுண நிர்க்குண வாக்யங்களை அறிந்து கொண்டு நிர்குண ப்ரஹ்மஞான பரமானவாக்யங்களில் இருக்கின்ற அபுனருக்தமான பதங்களை உபஸம் ஹாரம்செய்து (க்ரஹித்து) அவைகளின் அளவினை (பரிமாணத்தை) தானுகவே அறிந்துகொள்வாயாக.

வ்யாக்யானம் : ஸர்வ உபநிஷத்துக்களிலும் ஸகுணம், நிர்க்குணம் என்ற இரண்டுவிதமான வாக்யங்கள் இருக்கின்றது. அதில் எந்த வாக்யம் பரம், எந்த வாக்யம் அபரம் என்று பிரித்து அறிந்து கொள்ளவேண்டும். அதாவது நிர்க்குண ப்ரஹ்ம பரமானவாக்யங்களே பரவித்யாவிஷயகம் என்று அறிந்து கொள்ளவேண்டும். அத்துடன் அந்த சாகையில் சொல்லப்பட்ட வாக்யங்களைத் தவிர, வேறு சாகைகளில் சொல்லப்படும் நிர்க்குணபரமான வாக்யங்களையும் சேர்த்து அறிந்து கொள்ளவேண்டும். அவ்விதம் அறியப்படுமானுல் ப்ரஹ்ம ஸ்வரூபம் என்னவென்பதை நீயே அறிந்துகொள்ளமுடியும்.

**314.** அவதாரிகை : அந்தந்த சாகையில் ப்ரஹ்மஸ்வரூபத்தைப் பற்றி என்ன தெரிவிக்கப்படுகிறதோ அதை மட்டும் கிரஹித்தால் போருதா ? மற்ற உபநிஷத்துக்களில் உள்ள (இதற்கு ஸமானமான) வாக்யங்களையும் சேர்த்து அறிந்து கொள்ள வேண்டும் என்பதற்கு என்ன காரணம் ?

ச்லோகம் :

अपुनरुक्तपदानि विना यतो न परिपुष्कलबुद्धिसमुद्भवः ।
अपुनरुक्तपदानि ततस्ततस्त्वमुपसंहर तत्त्वबुभुत्सया

ச்லோகார்த்தம் : அபுனருக்தமான (அன்யவாக்யங்களில் சொல்லப்பட்ட) பதங்களை க்ரஹிக்காமல், பூர்ணஞானம் ஏற்படாது. அதனுல் தத்வஞானத்திற்காக வெவ்வேறு வாக்யங்களிலிருந்து அபுனருக்தமான பதங்களை க்ரஹித்துக் கொள்வாயாக.

வ்யாக்யானம் : ஸர்வசாகைகளிலும் சொல்லப்படும் நிர்க்குண பரமான வாக்யங்களையும் ஒன்று சேர்த்து அறியப்படுமானுல் பரிபூரணப்ரஹ்ம ஸ்வரூப அவகதி ஏற்படும். அதேபோல் ஸகுண பரமான வாக்யங்கள் எந்தெந்த உபநிஷத்தில் என்ன விசேஷங்கள் சொல்லப்பட்டிருக்கின்றதோ அவைகளையும் உபஸம்ஹாரம் செய்து உபாஸனை செய்யப்படுமானுல் அதற்குரிய பலன் ஏற்படும். ச்லோகத்தில் இதைப் பற்றி சொல்லப்படவில்லை. ஆனுல் உபாஸனை செய்ய விரும்புவர்களுக்கு உபகாரகமாக இதைப்பற்றி தெரிவிக்கப்படுகிறது.

**315.** அவதாரிகை : உபநிஷத்தில் ஆங்காங்கே சொல்லப்படும் வாக்யங்களை உபஸம்ஹாரம் செய்வதில் மிகவும் கவனமாக இருக்கவேண்டும். மேலும், இதுவரை கேட்டறிந்த விஷயங்களை ஞாபகத்தில் இருத்தி புதிதாக சொல்லப்போகின்ற விஷயங்களையும் கவனமாக கேட்டறிந்து கொள்ளவேண்டும் என்றும் முன்னுல் சொல்லப்பட்டதை இங்கு ஸ்மரிக்கப்படுகிறது.

ச்லோகம் :

कुरु परापरवाक्यविवेचनं तदनुशब्दसमाहरणं कुरु ।
प्रियशिरः प्रभृतीनि च यत्नवानुपचितापचितानि परित्यज

ச்லோகார்த்தம் : (முதலில்) ஸகுண நிர்க்குண வாக்யவிவேசனம் செய்வாயாக. அதன்பிறகு அபுனருக்தமான பதங்களைச் சேர்த்து க்ரஹிப்பாயாக, வ்ருத்தி, க்ஷயங்கள், உடைய ப்ரியசிரஸ்த்வம் முதலான குணங்களை த்யாகம் செய்வாயாக.

வ்யாக்யானம் : இவ்விதம் ஒரு உபநிஷத்தில் சொல்லப்படாத வாக்யங்கள் மற்ற உபநிஷத்துகளலிருந்து உபஸம்ஹாரம் செய்து க்ரஹிக்கப்படுகின்றபோது மிக்க கவனமாக இருக்கவேண்டும். ஏனெனில் கவனக்குறைவினுல் ஸகுண ப்ரஹ்மபரமான வாக்யங்களிலுள்ள பதங்களை உபஸம்ஹாரம் செய்து சேர்க்கக்கூடாது. அதேபோல் பரவித்யையிலுள்ள பதங்களை அபரவித்யையிலுள்ள பதங்களுடன் சேர்க்கக்கூடாது. நிர்க்குண ப்ரஹ்மஸ்வரூபத்தை போதிக்கின்ற ப்ரகரணமாக இருந்த போதிலும் சில இடங்களில் நிர்க்குண ஸ்வரூபத்தை தெரிவிப்பதற்கு உபாயமாக சில விஷயங்கள் சொல்லப்பட்டிருக்கிறது. உதாரணமாக சாக்ஷி என்றபதம் சாக்ஷ்யத்தை அபேக்ஷித்து சொல்லப்படுகிறது. ஈசிதவ்யத்தை அபேக்ஷித்து ஈச்வரன் என்றபதம் சொல்லப்படுகிறது. இவ்விதம் ஏதாவது சில பதங்கள் எதையாவது அபேக்ஷித்துச் சொல்லப்பட்டிருக்குமானுல் அவைகள் (ஸ்வரூபத்தில் சேர்க்க முடியாது) ஸ்வரூபமல்ல. இதேபோல் 'தஸ்யப்ரியமேவசிர: என்பது போன்ற வாக்யம் நிர்க்குண ப்ரகரணத்தில் இருந்தாலும் கூட ப்ரியம், மோதம்

- ப்ரமோதம், முதலானவைகள் ப்ரஹ்மஸ்வரூபமல்ல - ஏனெனில் உபசிதம், அபசிதம், (வ்ருத்தி - குறைவு) என்ற தன்மைகள் உபாதியினுல் விசேஷமாக ஏற்படுகின்றதால் (ஆனந்த தாரதம்யம்) மாறுபாடுகள் (பரிணமம்) அடைகின்ற தன்மைகளை ப்ரமஸ்வரூபத்தில் சேர்க்கக் கூடாது. ஸர்வஜீவர்களிடத்திலும் ஏக ரூபமாக இல்லாமல் தாரதம்யம் என்ற வித்யாஸத்துடன் கூடியதாக இருப்பதால் ஸ்வரூபத்தில் சேர்க்கக்கூடாது.

**316.** அவதாரிகை : மேலும் இதே விஷயத்தை விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

उपचितापचितानि न निर्गुणे प्रियशिरः प्रभृतीनि कदाचन ।
निपुणधीरपि कश्चन योजयेदपि तु कोशगुणाः कथिता ह्यमी

ச்லோகார்த்தம் : குசலபுத்தியுடைய எவனும் ஒரு காலத்திலும் வ்ருத்தி க்ஷயங்கள் உடைய ப்ரிய சிரஸ்த்வாதிகுணங்களை எவனும் நிர்க்குணத்தில் பொருத்தமாட்டான். ஆனுல் இவைகள் கோசகுணங்களாக சொல்லப்பட்டிருக்கிறது.

வ்யாக்யானம் : நிர்க்குண ப்ரஹ்மத்தினிடம் ப்ரிய மோதாதிகளை விசேஷமாகச் சொல்லப்படுமானுல் ப்ரஹ்மமென்பது நிர்விசேஷம் என்று சித்திக்காது. அதனுல் புத்திமான்கள் இவைகளைச் சேர்க்கக் கூடாது என்று தெரிவிக்கின்ருர்கள். மேலும் ப்ரிய மோதாதிகளை ஆனந்தமயகோசத்தின் தர்மமாகத்தான் உபநிஷத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.கோசத்வாரா ப்ரஹ்மஸ்வரூபம் அறிவிக்கப்படுகிறதேயன்றி ப்ரஹ்மஸ்வரூபமாகச் சொல்லப்படவில்லை. ஆகவே ப்ரஹ்ம ப்ரகரணத்தில் சொல்லப்பட்டிருந்தாலும் இப்பேர்ப்பட்ட பதங்களை ப்ரஹ்ம ஸ்வரூபத்தை தெரிவிக்கின்ற வாக்யங்களுடன் சேர்க்கக்கூடாது.

**317.** அவதாரிகை : இதுவரை சொல்லப்பட்ட வாக்யங்கள் விதிமுகமாக சொல்லப்பட்டது. மேலே நிஷேதமுகமான வாக்யங்களையும் தெரிவித்து இந்த விஷயத்தை ஒரு முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

ச்லோகம் :

इति वचः परिमाणमुदीरितं विधिवचःसु निषेधगिरः शृणु ।
बहु निषेध्यममूष्वपि तेन तास्वपि समाहर पूर्ववदेव तत्

ச்லோகார்த்தம் : இந்தவிதம் விதிவாக்யங்களில் பதங்களுடைய பரிமாணம் (அளவு) சொல்லப்பட்டது. நிஷேத வாக்யங்களின் பரிமாணத்தை கேட்பாயாக. இவைகளிலும் நிஷேதிக்கப்பட்ட வாக்யங்கள் பல இருக்கின்றது. ஆகையால் முன்போலவே இவைகளிலும் அபுனருக்த பதங்களைச் சேர்த்து க்ரஹிக்கப்பட வேண்டும்.

வ்யாக்யானம் : இதுவரை ஸத்யம் ஞானம் அனந்தம் என்ற விதிவாக்யம் அதற்கு விருத்தமான அந்ருத, ஜட, பரிச்சின்னத்வம், என்ற தன்மைகள் இல்லை என்பதை வ்யாவ்ருத்தி செய்து பாவரூபமான ஸத்யம் ஞானம் அனந்தம் என்பதே ப்ரஹ்மஸ்வரூபம்

என்பதையே போதிக்கின்றது என்று சொல்லப்பட்டது. ஆகையால் இவ்விதம் விதிமுகமான வாக்யங்களால் ஸ்வரூபலக்ஷணம் சொல்லப்படுமானுல் அந்தவாக்யங்களை மட்டும் உபஸம்ஹாரம் செய்து அறிந்து கொள்ளவேண்டும். இந்தவிதம் சொல்லப்படும் விதிவாக்யங்களைக் காட்டிலும் உபநிஷத்துக்களில் நிஷேதவாக்யங்கள் அதிகமாக இருக்கின்றது. ஆகையால் ஒரு உபநிஷத்தில் சொல்லப்படாத நிஷேத வாக்யம், மற்ற உபநிஷத்தில் இருப்பதை அவஸ்யம் சேர்த்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் க்ரஹிக்கப்படுகின்றபோது மிக்ககவனமாக இருக்கவேண்டும்.

**318.** அவதாரிகை : நிஷேத வாக்யங்களையும் முன்னுல் சொல்லப்பட்டவிதமே உபஸம்ஹாரம் செய்யவேண்டும்.

ச்லோகம் :

अपनरुक्तनिषेध्यनिषेधकृत् बहुपदाहरणं कुरु तास्वपि ।
यदि पुनर्न समाहरणं भवेत्परिमितिप्रतिषेधनमापतेत्

ச்லோகார்த்தம் : நிஷேத வாக்யங்களிலும், நிஷேதம் செய்யக் கூடியவைகளை நிஷேதம் செய்கின்ற அபுனருக்தபதங்கள் எல்லாவற்றையும் சேர்த்து க்ரஹிப்பாயாக. எல்லாபதங்களையும் சேர்த்து க்ரஹிக்கப்படவில்லையென்ருல பரிமிதமான (குறிப்பிட்ட) சிலவற்றையே நிஷேதம் செய்ததாக ஆகும்.

வ்யாக்யானம் : எந்தெந்த உபநிஷத்தில் எங்கெல்லாம் நிஷேதபதங்கள் இருக்கின்றதோ அவையெல்லாவற்றையும் ஒன்ருக சேர்த்து அறியப்படவில்லையென்ருல், ஸ்தூலமில்லையென்ருல் சூக்ஷ்மமாக இருக்கலாமே என்பது போன்ற ஸந்தேகங்களுக்கும் ஆக்ஷேபத்திற்கும் இடமுண்டாகும். எந்த குணமும் அற்றதான ஸ்வரூபம் அறியப்படவேண்டுமானுல் ஸர்வத்தையும் நிஷேதம் செய்தே அறியவேண்டும். வேறு எந்தமுறையிலும் நிர்க்குண ஸ்வரூபம் அறிந்து கொள்ளமுடியாதாகையால் ஸர்வத்தையும் நிஷேதம் செய்தே ஆகவேண்டும்.

**319.** அவதாரிகை : விதிவாக்யம், நிஷேதவாக்யம் இரண்டையும் உபாஸம்ஹாரம் செய்து அறியப்படவண்டும் என்று சொல்வதற்கு காரணம் என்ன ? இரண்டில் ஏதாவது ஒன்றை உபஸம்ஹாரம் செய்து அறியலாமே ? இரண்டையும் அறிந்தேயாகவேண்டு மென்ருல் அதில் உள்ள வைலக்ஷணயம் என்ன ?

ச்லோகம் :

विधिवचस्युभयं तु पदे पदे भवति संग्रहवर्जनरूपकम् ।
स्वकवपुः परिकल्पितरूपयोर्न तु निषेधवचःसु तथा मतम्

ச்லோகார்த்தம் : விதிவாக்யங்களில் இருக்கின்ற ஒவ்வொருபதத்திலும் ஸ்வரூபத்தினுடைய க்ரஹணம், கல்ப்பிதரூபத்தின் த்யாகம் என்ற இரண்டுமே ஸம்பவிக்கின்றது. நிஷேத வாக்யங்களில் அவ்விதம் ஒத்துக்கொள்ளப்படுவதில்லை.

வ்யாக்யானம் : ஸத்யம், ஞானம், அனந்தம், என்ற விதிமுகவாக்யம் அந்ருத ஜடபரிச்சின்ன ஸ்வரூபமில்லையென்று நிஷேதம் செய்து தெரிவிப்பது மட்டுமின்றி

'ஸத்சித் (ஆனந்தம்) அனந்தம்என்று ப்ரஹ்மஸ் வரூபத்தை தெரிவிக்கின்றது. இதனுல், ஸத்யாதிபதங்கள் ஸ்வரூபத்தையும் போதிக்கின்றது, அத்துடன் ஆரோபிதமான அந்ருதாதிகளை ஸ்வரூபமில்லையென்பதையும் நிஷேதம் செய்து தெரிவிக்கின்றது. ஆகையால் ஸத்யாதி பதங்களால் அந்ருதாதிகள் இல்லையென்று தெரிவிப்பது அவாந்தரம். ஸத்-சித் ஆனந்தம் என்று ஸ்வரூபத்தை போதிக்கின்றதே முக்யம். நிஷேதவாக்யம் ஸத்யாதி வாக்யம்போல் இரண்டுவிதமான அர்த்தத்தை தெரிவிக்கிவில்லை. கல்பிதமான ரூபத்தை மட்டும் அவைகள் எதுவுமில்லையென்றே தெரிவிக்கின்றது. ஆகவே விதிவாக்யத்திற்கும் நிஷேதவாக்யத்திற்கும் இவ்விதம் வித்யாஸம் இருக்கின்றதால் இரண்டு வாக்யங்களையும் உபஸம்ஹாரம் செய்து அறியப்படவேண்டும்.

**320.** அவதாரிகை : விதிவாக்யம்போல் நிஷேதவாக்யம் 2 விதமான அர்த்தத்தை தெரிவிப்பதாகச் சொல்லலாமே?

**ச்லோகம் :**

यदिह किंचिदबोधसमुद्भवं तदखिलं प्रतिषेधति केवलम् ।
न तु किमप्युपगृह्य परे पदे भगवतो निविशेत निषेधगी:

**ச்லோகார்த்தம் :** நிஷேதவாக்யங்கள், அஞ்ஞானத்தினுல் உண்டானது எதுவோ அவைகளையெல்லாம், நிஷேதம் மட்டும் செய்கின்றது. பாவரூபமான எதையும் க்ரஹித்து பகவானுடைய பரமபதத்தில் சேர்த்து தெரிவிப்பதில்லை.

**வ்யாக்யானம் :** நிஷேதவாக்யம் ஸ்தூலமில்லை சூக்ஷ்மமில்லை அணுஇல்லை என்பதுபோன்று இல்லை இல்லையென்றே தெரிவிக்கின்றதால் வஸ்துஸ்வரூபம் இன்னெதன்று போதிக்கவில்லை. அதனுல் இரண்டையுமே அறியவேண்டும்.

**321.** அவதாரிகை : இந்தவிதம் இரண்டு வாக்யங்களுக்கு முள்ள வித்யாஸத்தை விளக்கமாக தெரிவித்து இந்த விஷயத்தை முடிவிற்கு கொண்டு வரப்படுகிறது.

**ச்லோகம் :**

इति विशेष इह प्रतिपादितो विधिनिषेधगिरोरुभयोरपि ।
अपुनरुक्तपदाहरणं पुनर्विधिनिषेधवच: स्वविशेषितम्

**ச்லோகார்த்தம் :** இவ்விதம், விதி, நிஷேதம் என்ற இரண்டு விதமான வாக்யங்களுக்கும் இடையே இருக்கின்ற வேற்றுமை தெரிவிக்கப்பட்டது. அபுனருக்தமான பதங்களைச் சேர்த்து க்ரஹிப்பதென்பது விதி, நிஷேதம் என்ற வாக்யங்கள் இரண்டிற்கும் ஸமானமேயாகும்.

**வ்யாக்யானம் :** இதுவரை சொல்லப்பட்ட காரணத்தினுல் விதி முகமானவாக்யங்கள், நிஷேதமுகமாக வஸ்துவை போதிக்கின்ற வாக்யங்கள் எல்லாவற்றையும், எந்தெந்த உபநிஷத்துக்களில் இப்பேர்ப்பட்ட வாக்யங்கள் இருக்கின்றதோ அவை யெல்லாவற்றையும் உபஸம்ஹாரம் செய்து அறிந்துகொள்ள வேண்டும் என்று சொல்லப்பட்ட நியாயம் விதிவாக்யம், நிஷேதவாக்யம் இரண்டிற்கு மேதுல்யம், இதில் சிறிதும் வித்யாஸமில்லை.

**322.** அவதாரிகை : நிஷேத வாக்யங்கள் ஏதோ சிலவற்றையே நிஷேதம் செய்கின்றன. ஆனால் லோகத்தில் கணக்கிடமுடியாத எவ்வளவோ வஸ்துக்கள் இருக்கின்றதால் அவைகளை எப்படி நிஷேதம் செய்யமுடியும்?

ச்லோகம் :

श्रुतपदैरुपसंहृतिशालिभिर्यदवशिष्टनिषेध्यनिषेधनम् ।
तदपि पूर्वमिहाभिमतं श्रुतेः श्रुतपदान्युपलक्षणमेव हि

ச்லோகார்த்தம் : வேறுப்ரகரணத்திலிருந்து க்ரஹக்கப்பட்டபதங்களோடு ச்ருதிசப்தங்களினால் நிஷேதம் செய்யப்படவேண்டிய மிச்சமுள்ள பதங்களையும் ஸமுச்சயம் செய்யவேண்டுமென்பதுச்ருதியின் அபிப்ருயம். ஏனெனில் ச்ருதியிலிருந்து அறியப்பட்ட பதங்கள் மற்றுமுள்ள ஸர்வநிஷேதபதங்களுக்கும் உபலக்ஷணம் என்றே சொல்லப் படுகிறது.

வ்யாக்யானம் : ஒவ்வொரு உபநிஷத்துக்களிலும் இருக்கின்ற நிஷேத வாக்யங்களிலுள்ள பதங்களை உபஸம்ஹ்ருதம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்ட போதிலும் ப்ரபஞ்சத்திலுள்ள ஸர்வவஸ்துக்களையும் நிஷேதம் செய்யப்பட்டதாக சொல்லமுடியாது. ஆனால், இவ்விதம் சொல்லப்படும் வாக்யங்கள் உபலக்ஷணமாகவே சொல்லப்பட்டிருப்பதால், இதேபோல் மற்றுமுள்ள அனாத்ம வஸ்துக்கள் எல்லாமே ஸ்வரூபத்தில் சேர்ந்ததல்ல என்று அறிந்து அவைகளையும் தள்ளவேண்டும். ஆனால் இதுபோல் விதிவாக்யங்களில் ச்ருதியில் ப்ரஹ்மஸ்வரூபத்தைப்பற்றி சொல்லப்பட்ட வாக்யங்களையன்றி அதிகமாக சொல்லப்படும் ஐச்வர்யாதிகளை ஸ்வரூபத்தில் சேர்க்கக்கூடாது. இந்தவிதம், ப்ரஹ்மஸ்வரூபம் ஸஜாதீய விஜாதீய, ஸ்வகதபேத, ரஹிதம் அகண்டஸ்வரூபம் என்பது ச்ருதியின் தாத்பர்யம் என்று அறியப்படுவேண்டும்.

323. அவதாரிகை : நிஷேதமுக வாக்யம் போல் விதிமுக வாக்யங்களும் உபலக்ஷணம் என்று சொல்லலாமே?

ச்லோகம் :

समुपसंहृतशब्दसमन्वितैः श्रुतिपदैर्विधिवाक्यशतैः पुनः ।
समुपलक्षणया न परात्मनः किमपि रूपमिहाप्यधिकं मतम्

ச்லோகார்த்தம் : ஆனால் மற்றப்ரகரணத்திலிருந்து க்ரஹிக்கப்பட்ட பதங்களுடன் கூடிய விதிவாக்யத்திலிருந்து கேட்கப்பட்ட பதங்களால் உபலக்ஷிக்கப்படவேண்டிய ஸ்வரூபம் அதிகமாக பரமாத்மாவிற்கு இருப்பதாக ஏதும் ஒத்துக்கொள்ளப்படவில்லை.

வ்யாக்யானம் : ப்ரஹ்மஸ்வரூபத்தை விதிமுகமாக தெரிவிக்கின்ற உபநிஷத் வாக்யங்கள் உபலக்ஷணமாகச் சொல்லப்படவில்லை. அந்த வாக்யங்களில் ஸ்வரூப லக்ஷணம் பூரணமாக சொல்லப்பட்டிருக்கிறது. அதனால் அந்த வாக்யங்களில் சொல்லப்படுவதை மட்டுமே ஸ்வரூபலக்ஷணமாகக்ரஹிக்கப்படவேண்டும். வேறு எதையும் சேர்க்கக்கூடாது. நிஷேதமுக வாக்யம் போல் விதிமுகவாக்யம் உபலக்ஷணம் என்று சொல்லமுடியாது.

**324.** அவதாரிகை : விதிவாக்யங்களை உபலக்ஷணம் என்று ஏன் சொல்லக்கூடாது.?

**ச்லோகம் :**

न खलु संश्रुतसंहृतशब्दोरविषयः परमात्मन इष्यते ।
किमपि रूपममुत्र हि नास्ति नः किमपि मानमतो न तदस्ति नः

**ச்லோகார்த்தம் :** ச்ருதியில் சொல்லப்பட்டதும், சேர்த்துக்ரஹிக்கப்பட்டதுமான சப்தங்களுக்கு விஷயமாகாதஸ்வரூபம் ஏதும் பரமாத்மாவிற்கு இருப்பதாக ஒத்துக் கொள்ளப்படவில்லை. அப்பேர்ப்பட்ட ஸ்வரூபவிஷயத்தில் ப்ரமாணம் ஏதும் நம்மிடம் கிடையாது.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மஸ்வரூபம் வேதம் ஒன்றினுல்தான் அறியப்படுகிறது. வேதம் என்பதே ப்ரஹ்மவிஷயத்தில் ப்ரமாணம் என்பதால் உபநிஷத்துகளில் அதன் ஸ்வரூபம் பற்றி எவ்விதம் தெரிவிக்கின்றதோ அவ்விதமே க்ரஹிக்கப்படவேண்டும். ஆகையால் ஒரு உபநிஷத்தில் விதிமுகமாக ஸ்வரூபத்தைப்பற்றி தெரிவிக்கின்ற வாக்யங்களில் உள்ளவைகளை க்ரஹிக்கவேண்டும். அந்த உபநிஷத்தில் சொல்லப்படாத ஸ்வரூபலக்ஷணம் வேறு உபநிஷத்துக்களில் சொல்லப்படிருக்குமாளுல் அவைகளையும் சேர்த்து அறிந்துகொள்ளவேண்டும். உபநிஷத்தில் ஸ்வரூபமாக சொல்லப்படாத வாக்யங்களைச் சேர்க்கக்கூடாது. வேதம் ஒன்றே ப்ரஹ்ம விஷயத்தில் ப்ரமாணம். வேறு ப்ரமாணம் எதுவும் ப்ரஹ்ம விஷயத்தில் ப்ரவர்த்திக்க முடியாது.

**325.** அவதாரிகை : ஒவ்வொரு உபநிஷத்தும் வெவ்வேறு சாகையில் இருக்கின்றதால் ஒரு உபநிஷத்தில் சொல்லப்பட்டதை மட்டுமின்றி மற்ற உபநிஷத்தில் இருப்பதையும் சேர்த்துக் க்ரஹிக்கவேண்டுமென்று சொல்வது என்ன ந்யாயம்? அவ்விதம் சேர்ப்பதன் அவஸ்யம் என்ன?

**ச்லோகம் :**

गुणतया हि पदानि परात्मनो विधिनिषेधवचः स्ववतस्थिरे ।
गुणगणो गुणितन्त्रतया गुणी भवति यत्र हि तत्र भवत्यसौ

**ச்லோகார்த்தம் :** விதிநிஷேத வாக்யங்களில் பதங்களானது பரமாத்மாவிற்கு குணபூதமாகவே இருக்கின்றது. எங்கு முக்ய பூதமான குணி இருக்கின்றதோ அங்கு குணியை ஆச்ரயித்து அமுக்யமான குணகணங்கள் இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** வேதங்களில் உள்ள பதங்கள் எல்லாம் ப்ரஹ்ம ஸ்வரூபத்தை தெரிவிப்பதற்காகவே ஏற்பட்டது. நிர்க்குண ப்ரஹ்மத்தைப்பற்றி தெரிவிக்கின்ற இடங்களில் விசேஷமாகச்சொல்லப்படும் குணங்கள் எந்த உபநிஷத்தில் சொல்லப்பட்டிருந்தாலும் அவையெல்லாம், குணியானதும், விசேஷ்யமானதுமான ப்ரஹ்மத்தினிடமே போய்ச்சேருகின்றது. குணங்கள் என்பது, குணி பரந்த்ரமாக இருக்கின்றதால் குணி இருக்கின்றஇடத்தில்தான் குணங்கள் போய்ச்சேரவேண்டும்.

**326.** அவதாரிகை : உன்னுல் கேட்க்கப்பட்ட கேள்வியை அனுசரித்து அவாந்தரவாக்யங்கள் என்ன என்பதை சொல்லப்பட்டது. இதற்குமேலும் ஏதாவது ஸந்தேஹம் இருக்குமாஞல் அவைகளையும் கேட்கலாம் என்று குருவானவர் தெரிவிக்கிருர்.

ச்லோகம் :

विधिनिषेधवचः परिमाणतस्तव मया कथितं नयवर्त्मना ।
यदपरं तव वस्तु बुभुत्सितं तदिह नः पुरतः प्रकटी कुरु

ச்லோகார்த்தம் : என்னுல் உனக்கு விதிநிஷேத வாக்யங்களின் பரிமாணமானது யுக்தியுக்தமாகச் சொல்லப்பட்டது. வேறு எந்த விஷயத்தைப்பற்றி அறியவிரும்புகிருயோ அதை என்னிடம் தெரிவிப்பாயாக.

வ்யாக்யானம் : இதுவரை பத உபஸம்ஹாரப்ரகரணம் பற்றி சொல்லப்பட்டது. அதன்பிறகு சிஷ்யனுக்கு ஸந்தேஹம் ஏதேனும் இருந்தால் அவைகளையும் கேட்டு தெரிந்துகொள் என்று சொல்கிருர்.

**327.** அவதாரிகை : குருவின் அனுமதியைப் பெற்ற சிஷ்யன் மேலேப்ரச்னம் செய்கின்ருன்.

ச்லோகம் :

अन्तरङ्गबहिरङ्गसाधने भेदतः कथय तद्बुभुत्सितम् ।
ज्ञानजन्मन इदं जिघृक्षितं हेयमेतदिति चोपपत्तिभिः

ச்லோகார்த்தம் : ஞானேற்பத்திக்கு அந்தரங்க, பஹிரங்க ஸாதனங்களைப் பற்றி, இது க்ரஹிக்கப்படவேண்டியது, இது விடத்தக்கது என்று விவேசனம் செய்து அறியவிரும்புகிறேன். அதை தெரிவிக்கவேண்டுகிறேன்.

வ்யாக்யானம் : இப்பேர்ப்பட்ட ஞானம் ஏற்படுவதற்குரிய அந்தரங்க ஸாதனம், பஹிரங்க ஸாதனம் என்று இரண்டுவிதமான ஸாதனங்களை அனுஷ்டிக்கவேண்டுமென்று சொல்லப்படுகின்றதால் அவைகள் என்ன என்பதையும், அவைகளில் அனுஷ்டிக்கப்படவேண்டியது என்ன, விடப்படவேண்டியது என்ன என்பதையும் அறியவிரும்புகிறேன். ஆகையால் அவைகளையும் விளக்கமாக தெரிவிக்கவேண்டுகிறேன்.

**328-329.** அவதாரிகை : மேலும் ஞானத்திற்கு உபயோகமாக இருக்கின்ற ஸாதனங்களை அந்தரங்கம் என்றும், பஹிரங்கம் என்று இரண்டுவிதமாகச் சொல்லவேண்டியகாரணம் என்ன? இவ்விதவிபாகம் எந்த இடத்தில் ப்ரயோஜனமாகின்றது?

ச்லோகம் :

अन्तरङ्गपवर्गकाङ्क्षिभिः कार्यमेव यतिभिः प्रयत्नतः ।
त्याज्यमेव बहिरङ्गसाधनं यत्नतः पतनभीरुभिर्भवेत्
उच्यते शृणु विविच्य साधनं ज्ञानजन्मनि यदूचिवान्गुरुः ।
अन्तरङ्गबहिरङ्गभेदतः शब्दशक्तिमनुसृत्य वैदिकीम्

ச்லோகார்த்தம் : முக்தியை விரும்புகின்றயதிகளால் அந்தரங்க ஸாதனம் என்பது அவஸ்யம் அனுஷ்டிக்கப்படவேண்டும். யதி தர்மத்திலிருந்து நழுவநேரிடும் என்ற

தோஷத்திற்கு பயப்படுகின்றவர்கள் அவஸ்யம் பஹிரங்கஸாதனத்தை யத்னத்துடன் விட்டுவிடவேண்டும். ஞானோற்பத்தியின் பொருட்டுவைதிகசப்த சக்தியினை அனுசரித்து அந்தரங்கம், பஹிரங்கம் என்றபேதத்துடன் எந்த ஸாதனத்தை நிவேதனம் செய்து வ்யாஸாசார்யரால் தெரிவிக்கப்படுகின்றதோ அதை இப்போது தெரிவிக்கின்றேன் ஸாவதானமாக கேட்பாயாக.

வ்யாக்யானம் : இந்த ப்ரசனத்திற் குருவினால் பதில் சொல்ப்படுகிறது. அதாவது ஞானம் ஏற்படுவதற்கு ஸாதனம் என்னவென்று என்னுடைய குருஎனக்கு எதை உபதேசித்தாரோ அதையே இங்கு விளக்கமாகத் தெரிவிக்கின்றேன். ஸன்யாஸிகள் அந்தரங்க ஸாதனத்தை மட்டுமே அனுஷ்டிக்கவேண்டும். பஹிரங்கஸாதனம் என்பது ஸன்யாஸ ஆச்ரமத்திற்கு விரோதமாக இருக்கின்றதால் ஸன்யாஸியிகள் அவைகளை விடவேண்டும். வேதம் என்பது சப்தரூபம். அந்த சப்த சக்தியை அனுசரித்து குரு பரம்பரையில் என்ன உபதேசிக்கப்பட்டதோ அதையே நானும் உனக்கு ஸம்ப்ரதாயத்தை அனுசரித்து உபதேசிக்கின்றேன்.

**330.** அவதாரிகை : இரண்டுவித ஸாதனங்கள் என்னவென்றால்,

ச்லோகம் :

यच्छ्रुतं विविदिषोदयाय तत्सर्वमेव बहिरङ्गसाधनम् ।
अन्तरङ्गमवगच्छ तत्पुनर्यत्परावगतिसाधनं श्रुतम्

ச்லோகார்த்தம் : விவிதிஷை உண்டாவதற்காகச்ருதியில் சொல்லப்பட்டிருக்கின்ற அனைத்தும் பஹிரங்கஸாதனமாக ஆகும். பரப்ரஹ்ம ஞானத்திற்கு ஸாதனமாகச்ருதியில் சொல்லப்படுகின்ற விஷயங்கள் எல்லாம் அந்தரங்க ஸாதனம் என்று அறிந்துகொள்.

வ்யாக்யானம் : ஞானம் ஒன்றே மோக்ஷஸாதனம். இந்த ஞானம் என்பதை அடையவேண்டும் என்ற இச்சையே விவிதிஷை என்று சொல்லப்படும். விவிதிஷையை உண்டுபண்ணுவதற்காக சொல்லப்படும் ஸாதனம் பஹிரங்கம் என்றும் ஞானத்திற்கு நேரிடையாக சொல்லப்படும் ஸாதனம் அந்தரங்கம் என்றும் சொல்லப்படுகிறது. "தாமேதம் வேதானுவசனேன ப்ராஹ்மணா விவிதிஷந்தி யஞ்ஞேனதானேன தபஸா அனாசகேன" என்று ப்ரஹதாரண்யக உபநிஷத் வாக்யம் தெரிவிக்கின்றது. யஞ்ஞாதிகர்மாக்களை அனுஷ்டிக்கப்படுவதால், ஆத்மஞானம் என்பது அடையப்பட வேண்டும் என்ற இச்சை ஏற்படுகிறது. விவிதிஷைக்கு ஸாதனமாகச் சொல்லப்படும் யஞ்ஞாதி கர்மாக்களே பஹிரங்கஸாதனம். "தஸ்மாத் ஏவம் விச்சாந்தோ தாந்த உபரதி:திதிக்ஷு:ஸமாஹிதோ பூத்வாSSத்மன்யேவாSSத்மானம்பச்யதி" என்ற (ப்ரஹ 4-4-23) ச்ருதிவாக்யம் பரப்ரஹ்ம ஸ்வரூபப்ராப்திக்குரிய ஞானத்திற்கு ஸாதனம் பற்றி தெரிவிக்கின்றது. இந்தவித ஸாதனங்கள் அபரோக்ஷசாக்ஷத்காரத்திற்கு ப்ரயோஜனமாக இருக்கின்றதால் அவைகளை அந்தரங்க ஸாதனமென்று சொல்லப்படுகின்றது. இவ்வித அந்தரங்க ஸாதனங்களுடன் கூட ச்ரவணமனனங்கள் செய்யப்படவேண்டும். இவ்விதம் செய்யப்படும் ச்ரவணாதிகளினால்தான் அபரோக்ஷசாக்ஷத்காரம் ஏற்படும். ஆகவே, ஞானத்தில் இச்சை ஏற்படுவதற்காகச் செய்யப்படும் கார்யங்களை பஹிரங்க ஸாதனம்

என்றும், ஞானத்தை அடைவதற்காக அனுஷ்டிக்கப்படும் ஸமதமாதிகள் அந்தரங்க ஸாதனம் என்றும் அறியவேண்டும்.

**331.** அவதாரிகை : வேறொரு முறையிலும் அந்தரங்க பஹிரங்க ஸாதனங்கள் பற்றி விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

यद्धि कारकतयाऽवगम्यते दूरतस्तदिह साधनं धियः ।
अन्तरङ्गमखिलं तु तत्पुनर्व्यञ्जकं भवति यत्परात्मनः

**ச்லோகார்த்தம் :** எந்த யஞ்ஞாதி ஸாதனங்கள், ஞானத்திற்கு காரகங்களாக அறியப்படுகின்றதோ, அது இங்கு பஹிரங்கமேயாகும். பரமாத்மஸ்வரூபத்தை அபிவ்யக்தி செய்கின்ற (ச்ரவணாதி) ஸாதனங்கள் எல்லாம் அந்தரங்க ஸாதனம் என்று அறியப்படவேண்டும்.

**வ்யாக்யானம் :** ஸாதனம் என்பது காரகமாகவும் இருக்கலாம், வ்யஞ்சகமாகவும் இருக்கலாம். அதாவது, யஞ்ஞயாகாதிகளால், ஏற்கனவே இல்லாத சித்தசுத்தி என்றபலம் ஏற்படுகிறது என்பதால் அந்தஸாதனம், காரகம் என்று சொல்லப்படுகிறது. இந்த ஸாதனமானது சாஸ்த்ரஜன்யஞானத்திற்கு ஆராதுபகாரகமாக (தூரத்தில் இருந்து உபகாரகமாக ஆகிறது) இருக்கின்றதால் பஹிரங்கஸாதனம் என்று சொல்லப்படுகிறது. இதன் சாரம் (கருத்து) என்னவென்றால், ஞானம் ஏற்படுகின்ற விஷயத்தில் யஞ்ஞாதிகள் என்ற காரகங்களில் எந்தகாரகங்கள் த்ருஷ்டமாக எவ்விதம் உபகாரமாகிறது என்ற விஷயம் அறியப்படமுடியாது. (யஞ்ஞாதிகளால் ஞானத்தில் இச்சை உண்டாகிறது என்பது த்ருஷ்டமாக அறியப்படமுடியாது) இவ்விதம் த்ருஷ்டப்ரயோஜனம் அறியப்படாமல் எந்த காரகங்கள் உபகாரம் செய்கின்றதோ அதுவே பஹிரங்கஸாதனம். எந்த ஸாதனம் ஞானத்தை அடைகின்ற விஷயத்தில் த்ருஷ்டப்ரயோஜனமாக உபகாரம் செய்கின்றதாக அறியப்படுகின்றதோ அதுவே அந்தரங்கஸாதனம். அதாவது சாக்ஷாத்வித்யைக்கு ஸாதகமான ஸ்வரூபப்ரகாசத்திற்கு வ்யஞ்சகமாக இருக்கின்ற ஸமதமாதிகளையே அந்தரங்கஸாதனம் என்று சொல்லப்படுகிறது.

**332.** அவதாரிகை : இவ்விதம் சொல்லப்பட்ட ஸாதனங்களில் யார் எதை அனுஷ்டிக்கவேண்டும், எதை அனுஷ்டிக்கக் கூடாது என்ற விஷயம் பற்றியும் அந்த அதிகாரி அனுஷ்டிக்க வேண்டியதை அனுஷ்டிக்காவிட்டாலும் அல்லது அனுஷ்டிக்க கூடாததை அனுஷ்டிப்பதால் ஏற்படும் தோஷங்கள் பற்றியும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

कारकस्य करणेन तत्क्षणाद्भिक्षुरेष पतितो भवेद्यथा ।
व्यञ्जकस्य परिवर्जनात्तथा सद्य एव पतितो भवेदसौ

**ச்லோகார்த்தம் :** யஞ்ஞம் முதலான காரகங்களை அனுஷ்டிப்பதனுல், ஒரு யதியானவன் உடனே பதிதனுகிருன். அதேபோல் ச்ரவணம் முதலான வ்யஞ்சகங்களை அனுஷ்டிக்காமல் இருப்பதனுலும் அவன் உடனே பதிதனுகிருன்.

**வ்யாக்யானம் :** ஸன்யாஸிகள் அவஸ்யம் காரகமான பஹிரங்க ஸாதனங்களை விடவேண்டும். பிக்ஷுவானவன் பஹிரங்கஸாதனங்களை அனுஷ்டிப்பானுகில் அதேக்ஷணம் பதிதனுகிருன். அதேபோல் வ்யஞ்சகமான ஸமதமாதிகளை அனுஷ்டிக்காதவனுக இருக்கின்ற ஸன்யாஸியும் பதிதனுகிருன். ஆகவே, பஹிரங்க ஸாதனங்களை விட்டு, வ்யஞ்சகமான அந்தரங்க ஸாதனங்களையே ஸன்யாஸிகள் அனுஷ்டிக்க வேண்டும்.

**333.** அவதாரிகை : யஞ்ஞாதிகள் விவிதிஷைக்குத்தான் ஸாதனம் என்றும் வேதனத்திற்கு ஸாதனமில்லை என்பதற்கு என்ன காரணம்? விவிதிஷை என்பதும் ஞானத்திற்கு ஸாதனமாக இருக்கின்றதால் யஞ்ஞாதிகளையும் ஸமதமாதிகள்போல் அந்தரங்கஸாதனம் என்றே சொல்லலாமே?

**ச்லோகம் :**

प्रत्ययार्थविषयं हि कर्मणामुच्यते विविदिषेयुरित्यतः ।
न प्रकृत्यभिहितार्थवेदने वेदवाचि विनियोगशासनम्

**ச்லோகார்த்தம் :** 'தமேதம்' என்ற வேதவாக்யத்தில் 'விவிதிஷந்தி' என்ற கர்மங்களை வினியோகம் செய்கின்ற விதியானது, ப்ரத்யயார்த்தமான இச்சை என்பதை விஷயமாக கொண்டிருக்கிறது. ஆகவேசதுர்த்யர்த்தமான வேதன விஷயத்தில் அந்தவிதி சொல்லப்படுவதில்லை.

**வ்யாக்யானம் :** ஞானம் என்பதே புருஷார்த்தம். இச்சை என்பது புருஷார்த்தமில்லை. விவிதிஷை என்ற இச்சைக்கு ஞானம் என்பதே விஷயம். அதனுல் ஞானம் என்பது கர்மத்வேன ப்ரதானமாக இருக்கின்றது. ஆகவே ஞானத்திற்கு ஸாதனமான யஞ்ஞாதிகர்மாக்களையும் அந்தரங்கஸாதனம் என்றே சொல்லலாமே என்ருல், அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில், வாக்யத்திலுள்ள 'விவிதிஷை' என்றபதத்தில் ப்ரத்யயார்த்தமான இச்சையென்பதே ப்ரதானம். 'வித்' என்ற ப்ரக்ருதி அர்த்தமான ஞானம் என்பதற்கு யஞ்ஞாதிகளை ஸாதனமாகச் சொல்லப்படவில்லை. 'விவிதிஷேயு': என்ற சப்தத்தில், 'ஷ' என்ற ஸன்ப்ரத்யயம் இச்சையென்ற அர்த்தத்தையே ப்ரதானமாக தெரிவிக்கின்றது. அந்த இச்சைக்கு ஸாதனமாகவே யஞ்ஞாதிகளை, 'யஞ்ஞேன' என்ற விதியினுல் சொல்லப்படுகிறது. அதனுல்யஞ்ஞாதிகளை அந்தரங்க ஸாதனம் என்று சொல்லமுடியாது. மேலும், விவிதிஷந்தி என்ருல் வேத்தும் இச்சந்தி என்று பிரித்து அறியவேண்டும். வித் என்ற தாத்வர்த்தம் ஞானம் என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றது. 'ஷ' என்ற ஸன்ப்ரத்யயத்திற்கு இச்சை என்று அர்த்தம். இந்த இரண்டையும் சேர்க்கின்ற:போது விவிதிஷை என்று சொல்லப்படுகிறது. விவிதிஷை என்ருல் 'அறிய வேண்டுமென்ற இச்சை' என்றே அர்த்தம் அறியப்படுகிறது. ஆகவே, தாத்வர்த்தமான வேதனத்திற்கு (ஞானத்திற்கு) யஞ்ஞம் ஸாதனம் என்று அர்த்தமா? அல்லது ப்ரத்யயத்தினுல் சொல்லப்படும் இச்சை என்பதற்கு யஞ்ஞம் ஸாதனம் என்று அர்த்தம்

சொல்லப்படுகிறதா என்ருல், வ்யாகரணத்தில் ப்ரதயயார்த்தப்ரதானம் ஸ்யாத்ப்ரக்ருத்யார்த்தம் உபஸர்ஜனம் என்று சொல்லப்படுகிறது. அதனுல் 'விவிதிஷந்தி' என்பதில் ப்ரதானமாக இச்சை என்பதே அறியப்படுகின்றது. ஆகவே எதை இச்சிக்கிருன் என்ருல் ஞானம் என்பதை இச்சிக்கிருன் என்று இச்சையென்பதற்கு ஞானம் என்பது விசேஷணமாகிறது. இந்தவிதம் இச்சையென்பதே ப்ரதானம் என்பதால் யஞ்ஞாதிகள் இச்சையில்தான் அன்வயிக்கின்றது என்று வ்யாகரணரீதியில் இச்சா ஸாதனதவம்தான் யஞ்ஞாதிகளுக்கு சொல்லப்படவேண்டுமேயன்றி ஞானஸாதனத்வம் சொல்லமுடியாது.

**334,335.** அவதாரிகை : வேதனம் ப்ரதானம் என்று சொல்லக்கூடாது என்பதற்கு காரணம் என்ன ?

ச்லோகம் :

न प्रधानमपहाय वेदने नान्वयं व्रजति कर्म साधनम् ।
संगतिर्भवति वेदनेच्छया वेदनेन न तु कर्मणां क्वचित्
न प्रधानमिह वेदनं भवेत्प्रत्ययार्थविषयां प्रधानताम् ।
उत्ससर्जभगवान्निरङ्कुशं येन पाणिनिरलङ्घ्यशासनः

ச்லோகார்த்தம் : இச்சை என்ற ப்ரதானத்தை விட்டு, அப்ரதானமான வேதனத்துடன் கர்மங்களுக்கு ஸம்பந்தம் ஏற்படாது. கர்மங்களுக்கு வேதன இச்சையுடன் ஸம்பந்தம் இருக்கின்றது. ஆனுல் வேதனத்துடன் கர்மங்களுக்கு ஒருபோதும் ஸம்பந்தம் கிடையாது. இங்கு ப்ரக்ருத்யார்த்தமான வேதனம் ப்ரதானமாகாது. ஏனெனில் மாற்றமுடியாத நியமங்களை தெரிவிக்கின்றபகவான் பாணினியானவர், ப்ரத்யயார்த்தமே ப்ரதானம் என்று அபவாதம் இல்லாமல் உத்ஸர்க்கமாக தெரிவிக்கின்ருர். (ஸாமான்ய நியமமாக தெரிவிக்கின்ருர்)

வ்யாக்யானம் : "ப்ரதானப்ரத்யயார்த்தவசனமர்த்தஸ்ய அன்யப்ரமாணத்வாத்" என்ற பாணினியின் சூத்ரத்தின்படி, ப்ரக்ருத்யர்த்தம் ப்ரதான்யமில்லை, ப்ரத்யயார்த்தமேப்ராதன்யம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. பாணினியினுல் சொல்லப்படும் இந்த விஷயத்தை அலக்ஷ்யம் செய்யமுடியாது. அதனுல், விவிதிஷை என்ற பதம் ஞானம், இச்சை என்ற இரண்டையும் சேர்த்து தெரிவித்தபோதிலும், ப்ரத்யயார்த்தமான இச்சைக்கே ப்ராதான்யம் சொல்லவேண்டும். இந்த இச்சைக்கு ஸாதனம் என்ன என்ற ஆகாங்க்ஷை ஏற்படுவதால், கர்மாவே ஸாதனம் என்று க்ரமமாக அன்வயிக்கின்றது. ப்ரக்ருதியர்த்தமான விஞ்ஞானத்துடன் கர்மா அன்வயிக்கமுடியாது. பதம் பதார்த்தேன அன்வேதி என்று விவிதிஷந்தி என்ற பதத்திற்கு எது பதார்த்தமோ அதனுடன்தான் அந்தபதம் அன்வியிக்கின்றது என்று பகவான் பானியினுல் ப்ரத்யயார்த்தமே ப்ரதானம் என்று தங்குதடையின்றி தெரிவிக்கின்ருர். ஆகையால் வேதனம் என்பதைப் ப்ரதானமாகச் சொல்லமுடியாது. உத்ஸர்க்கம் அபவாதம் ப்ரதிப்ரஸவம் என்று சொல்லப்படுவதில் இந்த இடத்தில்உத்ஸர்க்கம் தான் சொல்லப்படுகின்றது என்பதால் வேறு எந்தஅர்த்தமும்சொல்லமுடியாது.

**336.** அவதாரிகை : ப்ரத்யயார்த்தமே ப்ரதானம் என்பதாக சூத்ரத்தில் சொல்லப்பட்டிருந்த போதிலும், ஸன்ப்ரத்யயத்தையன்றி வேறு ப்ரத்யயங்களுக்கே அந்த நியமம் சொல்லப்படிருப்பதாகச் சொல்லலாமே ?

ச்லோகம் :

प्रत्यये सनि न चापवादकं किंचिदप्युदितवानसौ मुनिः ।
येन तत्र गुणभावमुद्वहेत्प्रत्ययाभिहितमर्थवस्तु नः

ச்லோகார்த்தம் : ஸன்ப்ரத்யய விஷயத்தில் பாணினி முனிவர் அபவாதமாக ஒன்றையும் நம்மிடம் சொல்லவில்லை. அவ்விதம் சொல்லி இருப்பாரேயானுல் ப்ரத்யயத்திஞல் சொல்லப்படுகின்ற இச்சை என்பது அப்ரதானமாக இருக்கக்கூடும்.

வ்யாக்யானம் : ஸன்ப்ரத்யயத்தையன்றி வேருன மற்றுமுள்ள ப்ரத்யயயத்திற்கே இந்த ந்யாயம் என்று சொல்லப்பட்டிருக்குமாஞல், வேதனம் என்ற தாத்வர்த்தத்திற்கு இச்சை என்பது குணம் என்று சொல்லவேண்டும். ஆனுல் ப்ரத்யயார்த்தமே ப்ரதானம் என்று சொல்லப்பட்டிருக்கிறதேயன்றி இதைத்தவிர வேறு என்று அங்குசம் தடைஏதும் சொல்லப்படவில்லை. (அபவாதம் செய்யப்படவில்லை). அதனுல் ப்ரத்யயார்த்தம்தான் ப்ரதானம் என்று சொல்லப்படவேண்டும். (உதாரணமாக'நஹிம்ஸ்யாத்ஸர்வாபூதானி' அன்யத்ரதீர்த்தேப்ய: என்ற வாக்யம், வேதத்தில் சொல்லப்படுவதைத் தவிர மற்ற இடங்களில் ஜீவஹிம்ஸை செய்யக்கூடாது' என்று தெரிவிக்கின்றது. இந்தவிதம் ப்ரத்யயார்த்தத்தில் அபவாதம் ஏதும் செய்யப்படவில்லை.)

**337.** அவதாரிகை : "தாதோ:கர்மண:ஸமான கர்த்ருகாதிச்சாயாம் வா" என்ற சூத்ரத்தில், தாத்வர்தத்தில் ஸன் அர்த்தமான இச்சைக்கு ஞானம் என்பது கர்மாவாக சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது இச்சை என்பதற்கு விஷயம் ஞானம் என்பதால் ஞானம் என்பதை இச்சிக்கிருன் என்று ஞானத்தை கர்மாவாக சொல்லப்படுகிறது. அதனுல் ஞானத்தை இச்சிக்கிருன் என்னும்போது ஞானமே ப்ரதானமாக சொல்லப்படுகிறது. ஆகையால் விவிதிஷந்தி என்பதிலுள்ள ஸன்ப்ரத்யய்த்தையன்றி மற்ற இடங்களில் ப்ரத்யயார்த்தம் ப்ரதானம் என்றும் ஸன்ப்ரத்யயத்தில் ஞானம்ப்ரதானம் என்றும் சொல்லலாமே? மேலும் "விவிதிஷாகாம் : யஞ்ஞும் குருயாத்" என்று இச்சையை விரும்புவன் யஞ்ஞத்தைச் செய்யவேண்டுமென்று வாக்யமில்லை. விவிதிஷந்தி என்றபதம் ஞான இச்சைக்காக யஞ்ஞும் என்று இச்சைக்கு விஞ்ஞானம் என்பதை கர்மாவாகசச்சொல்லப்படுவதால் விஞ்ஞானமே ப்ரதானம் என்றுதான் சொல்லவேண்டும்.

ச்லோகம் :

धातोः कर्मण इत्युवाच भगवान्यत्पाणिनिस्तत्पुनर्धात्वर्थस्य निवेदयत्यभिमतं प्राधान्यमायुष्मतः ।
किं त्वार्थं न तु शब्दगम्यमवदत्तेनापि तद्योक्ष्यते नोत्सर्गस्य विना निमित्तमपरं संकोचनं युज्यते

ச்லோகார்த்தம் : பகவான் பாணினி "தாதோ! கர்மண : ஸமான கர்த்ருகத்வாத் இச்சாயாம் வா" என்று தெரிவிக்கின்ருர். அந்த சூத்ரமானது உங்கள் அபிப்ருயத்தின்படி தாத்வர்த்தப்ரதான்யத்தை தெரிவிக்கவில்லை. தாத்வர்த்தப்ராதான்யம் என்பது ஆர்த்திகமேயாகும். (அர்த்தசித்தம்) சப்தத்திஞல் அறியப்படுவதில்லை. ஆகையால் ஆர்த்திகமாகவும் அந்த ப்ராதான்யம் பொருந்தும். வேறு எந்த காரணமும் இன்றி உத்ஸர்க்கத்தின் ஸங்கோசம் என்பது பொருந்தாது.

வ்யாக்யானம் : "விவிதிஷந்தி" என்ற பதம் ஞானத்தில் இச்சை ஏற்படுவதற்காக யஞ்ஞாதிகளை அனுஷ்டிக்கவேண்டுமென்றுதான் அந்த வாக்யத்திலிருந்து நேரிடையாக அர்த்தம் கிடைக்கின்றது. ஞானத்திற்காக என்ற அர்த்தம் அர்த்தம் அர்த்தாத் கிடைக்குமேயன்றி நேரிடையாக கிடைக்காது. ஞானத்திற்காக இச்சை என்னும்போதுதான் ஞானம் என்ற அர்த்தம் கிடைக்கும். அதனுல் தாத்வர்த்தம் ப்ரதானம் என்று அர்த்தத : சொல்லலாமேயன்றி சப்தத : கிடைக்கின்ற அர்த்தமாகா ஆகாது. ஆகவே ப்ரத்யயார்த்தம் ப்ரதானம் என்று சொல்வதற்கு பாதம் சொல்லமுடியாது. மேலும் ப்ரஹ்மஞானம் ஏற்படுவதற்கு கர்மா என்பது ஸாதனம் என்று சொல்லப்படும் பக்ஷத்தில் கர்மா என்பதை ப்ரமாணம் என்று சொல்லநேரிடும். ஏனெனில் ஞானத்திற்குஸாதனம் ப்ரகாணம், கர்மா என்பது எந்த இடத்திலும் காரகமாகத்தான் இருக்கின்றதேயன்றி கர்மா ஞாபகமாக இருப்பதாகச் சொல்லமுடியாது. இந்த விஷயம் உனக்கு இஷ்டமாக இல்லாவிட்டால் கூட இதை ஒத்துக்கொண்டேயாக வேண்டும். உதாரணமாக ஏதோ வியாதியினுல்பசி என்பதே ஏற்படவில்லையென்ருல், புஜிக்கவேண்டுமென்ற இச்சையே ஏற்படாலம இருப்பவன், ஔஷதாதிகளை உண்டுபண்ணுகிருன். இந்த ஔஷதாதி ஸேவனத்திற்கு புஜிக்கவேண்டுமென்ற இச்சையே பலமாக இருக்கிறது. ஆகவே இச்சை என்பதும் காமனுவிஷயமாகச் சொல்லலாம். அதனுல் இச்சையை பலமாக எப்படிச் சொல்லமுடியும் என்ற கேள்விக்கு இடமில்லை. இதேபோல் விவிதிஷை என்பதால் வேதன இச்சைக்காக யஞ்ஞாதிகளைச் செய்யவேண்டுமென்று வாக்யம் தெரிவிக்கிறது என்றே சொல்லவேண்டும். "தாதோ : கர்மண : ஸமான கர்த்ருகாதிச்சாயாம் வா" என்ற சூத்ரத்தில் ஸன்ப்ரத்யயார்த்தமான இச்சை என்பதைக் காட்டிலும் தாத்வர்த்தமான வேதனம் என்பது ப்ரதானம் என்பதாக சொல்லப்பட்டிருக்கிறதே என்ருல், பாணினியின் சூத்ரத்தில் இதுபோல் அர்த்தம் சொல்லப்படவில்லை. சப்தத்திலிருந்து முதலில் எந்த அர்த்தம் அறியப்படுகிறதோ அந்த அர்த்தமே ப்ரதானம் என்பதால் இச்சை என்பதேப்ரதானம். ஞானம் என்பது அப்ரதானம் என்றே சொல்லவேண்டும். ஆனுல் இச்சை என்பதே புருஷார்த்தமில்லை. ஞானம்தான் புருஷார்த்தம் என்று பின்னுல் விசாரிக்கப்படும்போதுதான் ஞானம் ப்ரதானம் என்று அர்த்தம் கிடைக்கின்றது. அதனுல் ஞானம் ப்ரதானம் என்பது அர்த்தாத் கிடைக்கின்ற அர்த்தம். ஆனுல் சப்தக! ஸன்ப்ரத்யயார்த்தத்திற்கே ப்ராதான்யம் - அதனுல் ஞானத்திற்கு சாப்தசித்தமான ப்ராதான்யமில்லை அர்த்தசித்தமான ப்ராதான்யம்தான் என்றஅர்த்தத்தை அறிந்து பாணினின சூத்ரத்திற்கு அர்த்தம் செய்யப்படவேண்டும். ஆகையால் 'ப்ரத்யயார்த்தப்ராதான்யம் ச்யாத்' என்று சொல்லப்படுகின்ற உத்ஸர்க்கத்திற்கு 'தாதோ - கர்மண' என்ற சூத்ரம் அபவாதமாக ஆகாது. அதுமட்டுமல்ல ஸன்ப்ரத்யயத்தையன்றி வேருன மற்ற ப்ரத்யயங்களுக்கே ப்ரதான்யம் என்று ஸங்கோசம் செய்து பாணினியினுல் சொல்லப்படவில்லை. என்பதால் ப்ரத்யயார்த்தமே ப்ரதானம் என்ற உத்ஸர்க்கந்யாயத்தை அனுசரித்து அன்வயம் சொல்லப்பட்டது.

**338.** அவதாரிகை : இந்த விஷயம் பற்றி மேலும் விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

धातोः कर्मण इत्युदीरितमिदं साधारणं दृश्यते शब्दार्थत्वविशेषसूचकतया न ह्यत्र सूत्रे पदम् ।
धात्वर्थस्य तु कर्मतावचनमत्रोच्चारितं केवलं तत्त्वार्थेऽप्युपपद्यमानमधुना नोत्सर्गपीडाकरम्

**ச்லோகார்த்தம் :** "தாதோ : கர்மண : -" என்ற வசனமானது ஸாதாரணமாகவே அறியப்படுகிறது. "தாத்வர்த்தத்தின்ப்ராதான்யம்" என்பது சப்தத்திலா? அர்த்தத்திலா? என்று பிரித்து தெரிவிக்கின்ற பதம் ஏதும் இந்த ஸூத்ரத்தில் இல்லை. இந்த ஸூத்ரத்தில் தாத்வர்த்தம் என்பது இச்சைக்கு கர்மமாக இருக்கின்றது என்று மட்டுமே சொல்லப்பட்டிருக்கிறது. 'தாத்வர்த்தத்தின்' ப்ரதான்யம் என்பது ஆர்த்திகமாகவும், உபபன்னமாகவும் இருக்கின்றதால் ப்ரத்யயார்த்த ப்ரதானம்என்ற உத்ஸர்க்கத்தை பாதிக்காது.

**வ்யாக்யானம் :** 'தாதோ:கர்மண:' என்ற ஸூத்ரத்தில் ப்ரத்யயார்த்தத்தில் தாத்வர்த்தம் கர்மா என்று சொல்லப்பட்ட விஷயம். ஸாமான்யமாக அறியப்படுகிறது. ஆனால் சப்தப்ராதான்யத்தை விட்டு அர்த்தப்ரதான்யத்தில்தான் அன்வயம் என்று சொல்லவேண்டும் என்பதற்கு உரிய பதங்கள் எதுவும் ஸூத்ரத்தில் சொல்லப்படவில்லை. ஆகவேஅர்த்தத : ப்ரதான்யம் இருந்தாலும் சப்தத : ப்ராதான்யம் இல்லை. அதனால் ப்ரத்யயார்த்தமான இச்சைக்கு ப்ரதான்யம் சொல்லப்பட்டதற்கு பாதகமாக இந்த ஸூத்ரத்தில் ஏதும் சொல்லப்படவில்லை. அர்த்தத:ஞானத்திற்கு ப்ராதான்யம் சொல்லமுடியுமானதால் விரோதம் ஏதுமில்லை.

339. அவதாரிகை :

ப்ரத்யயார்த்தமான இச்சை என்பதற்கே அர்த்தத:ப்ராதான்யம் (ஆர்த்தம் ) என்றும் ப்ரக்ருத்யர்த்தமான ஞானத்திற்கே சப்தத : ப்ராதான்யம் என்றும் விபரீதமாக அர்த்தம் சொல்லக்கூடாது என்பதற்கு என்ன காரணம்?

**ச்லோகம் :**

इच्छायामिति सूत्रकारवचनं प्राधान्यपक्षे भवेदिच्छार्थस्य समञ्जसं न खलु तत्सन्प्रत्ययार्थे गुणे ।
धात्वर्थे ननु सन्भवेदिति वदेदिच्छा गुणश्चेद्भवेदिच्छायामिति वक्ति तेन वदति प्राधान्यमिच्छागतम्

**ச்லோகார்த்தம் :** இச்சையை தெரிவிக்கின்ற ப்ரத்யயார்த்தமே ப்ராதான்யம் என்றபக்ஷத்தில் "இச்சாயாம்" என்ற ஸூத்ரகாரரின் வசனம் பொருத்தமாக இருக்கும். ஸன்ப்ரத்யயார்த்தம் என்பது அப்ரதானமாக இருக்குமானால் அது பொருந்தாது. ப்ரத்யயார்த்தமான இச்சையென்பது அப்ரதானமாக இருக்குமானால் 'தாத்வர்த்தேஸன்' என்று சொல்லியிருப்பார். ஆனால் 'இச்சாயாம்ஸன்' என்றே சொல்கிறார். ஆகையால் இச்சையின் ப்ரதான்யத்தையே ஸூத்ரகாரர் தெரிவிக்கின்றார்.

**வ்யாக்யானம் :** 'தாதோ':கர்மண:ஸமானகர்த்ருகாதிச்சாயாம்' என்ற ஸூத்ரத்தில் 'இச்சாயாம்' என்று ஸப்தமி அர்த்தத்தில் சொல்லப்பட்டிருக்கின்றதால் இச்சைக்கே ப்ராதான்யம் சொல்லப்படவேண்டும். அவ்விதமின்றி, ப்ரக்ருத்யர்த்தம்தான் ப்ரதானம் என்று சொல்லப்படுமானால் ப்ரத்யயார்த்தம் குணம் என்று சொல்ல நேரிடும்.

இச்சாயாம்' என்று ஸப்தமியந்தத்தில் சொல்லப்பட்டிருப்பதால் குணம் என்று சொல்வது பொருந்தாது. 'விவிதிஷந்தி' என்னுமிடத்தில் இச்சை ப்ரதானமாகவும் ஞானம் குணமாகவும் சொல்லப்படுகிறது என்றே அறியவேண்டும். ஏனெனில் இச்சை என்பது அப்ரதானமாக இருக்குமாளுல் 'ஸன்' என்பது தாத்வர்த்தத்தில் சொல்லப்பட்டிருக்குமேயன்றி தாத்வர்த்த விஷயமான இச்சை என்பதில் 'ஸன்' ப்ரயோகம் செய்திருக்கமுடியாது. ஆகையால் இச்சாயாம் என்ற அர்த்தத்தில்தான் ஸன்ப்ரத்யயம் செய்யப்பட்டிருக்கிறது என்றே சொல்லவேண்டும் என்பதால் இச்சைக்கே ப்ராதான்யம் என்பதே சூத்ரகாரரின் அபிப்ருயம் என்று அறியப்படுகிறது.

**340.** அவதாரிகை : இதுவரை விசாரிக்கப்பட்ட முறையில் யஞ்ஞாதிகர்மாக்கள் வேதன இச்சையை உண்டுபண்ணுகின்றது என்பது சித்தமாகின்றது. இதளுல் ஏற்படும் லாபம் என்னவென்ருல்,

ச்லோகம் :

तस्मात्कर्म समस्तमेव तु भवेदिच्छाजनेः साधनं शास्त्रेणोक्तमतः समस्तमपि तद्यत्नेन हेयं यतेः ।
द्रष्टव्यत्वमनूद्य साधनतया यद्यत्प्रतीचः श्रुतं वेदान्तश्रवणादिकं भवति तत्कर्तव्यमावश्यकम्

ச்லோகார்த்தம் : ஆகையால் சாஸ்திரத்திளுல் சொல்லப்பட்டிருக்கின்ற ஸர்வகர்மங்களும் இச்சோற்பத்திக்கே ஸாதனமாக ஆகும். ஆகையால் அந்த தர்மங்கள் அனைத்தும் யத்னத்துடன் விடப்படவேண்டும் என்ற விஷயத்தை அனுவாதம் செய்து அதற்கு ஸாதனமாக வேதாந்த ச்ரவணம் முதலான என்னென்ன ஸாதனங்கள் ச்ருதியில் சொல்லப்பட்டிருக்கிறதோ அவையெல்லாவற்றையும் அவஸ்யம் அனுஷ்டிக்கப்படவேண்டும்.

வ்யாக்யானம் : வேதத்தில் சொல்லப்படும் கர்மாக்கள் அனைத்தும் ஞானத்தை அடைய வேண்டுமென்றபரஹிரங்கஸாதனமாக இருக்கின்ற கர்மாக்களை ஸன்யாஸிகள் விட்டுவிடவேண்டும். ஸர்வகர்மாக்களையும் விட்ட ஸன்யாசிகள், 'ஸன்யஸ்யச்ரவணம் குர்யாத்' என்ற வாக்யப்படியும், ஆத்மாவாSரே த்ரஷ்டவ்ய : மந்தவ்ய : நிதித்யாஸிதவ்ய : என்று சொல்லப்பட்டபடிச்ரவணமனனுதிகளிலேயே ஈடுபட்டிருக்க வேண்டும் என்று சொல்லப்பட்டிருப்பதால், அதைத்தவிர வேறு எந்தக்கர்மாவையும் செய்யக்கூடாது. அத்துடன் சாந்தோ, தாந்தோ, உபரதி என்பது முதலானவைகளை அனுஷ்டிக்கவேண்டும். ஞானநிஷ்ட்டைக்கு விரோதியான கர்மாக்களை செய்யக்கூடாது. வேதாந்த வாக்ய விசாரம் செய்து தத்பரளுக இருக்கவேண்டும்.

**341.** அவதாரிகை : அந்தரங்க ஸாதனத்திளுலேயே ஆத்மஞானம் ஏற்படும் என்று சொல்லப்படுமாளுல், அதன் பின் வேதாந்த விசாரம் என்பது எதற்காகச்செய்யவேண்டும்?

ச்லோகம் :

वेदान्तवाक्यमिह कारणमात्मबोधे हेत्वन्तराणि परिपन्थिनिबर्हणानि ।
यज्ञादिकानि दुरितं क्षपयन्ति बुद्धेस्तत्त्वंपदार्थविषयं तम उत्तराणि

**ச்லோகார்த்தம் :** இங்கு ஆத்மஞானவிஷயத்தில் வேதாந்த வாக்யமேகாரணம். மற்றகாரணங்கள் எல்லாமே ப்ரதிபந்தங்களை மட்டுமே நிவர்த்திக்கின்றது. யஞ்ஞம் முதலானவைகள் புத்தியில் இருக்கின்ற துரிதங்களை (பாவங்களை) நாசம் செய்கின்றது. மற்றுமுள்ள ச்ரவணம் முதலான ஸாதனங்கள் தத்த்வம் பதாரத்தவிஷயமான அஞ்ஞானத்தை நாசம் செய்கின்றது.

**வ்யாக்யானம் :** ப்ரமாணத்திலிருந்தே ப்ரமை (ஞானம்) ஏற்படவேண்டும். ஆகவே, வாக்யம் என்ற சப்தப்ரமாணத்திலிருந்தே ஆத்மஸ்வரூபஞானம் ஏற்படவேண்டும். அந்தரங்கஸாதனமான ஸமதமாதிகளோ - அல்லது பகிரங்க ஸாதனமான யஞ்ஞாதிளோ ப்ரமாண்யம் இல்லை. அதனால் அந்த ஸாதனங்களிலிருந்து ஞானம் ஏற்படட்டுமே என்ற கேள்வியே சரியல்ல. பஹிரங்கஸாதனமான யஞ்ஞாதிகளைச் செய்வதால் பாபத்தின்பலமாக சித்தத்தில் ஏற்படும் அசுத்திகள் நீங்கி சித்தசுத்தி ஏற்படும். அந்தரங்கஸாதனமான ஸமதமாதிகள் சிரவணாதிகளால் அஸம்பாவனை விபரீதபாவனைகள் நீங்குகின்றது. ஸ்வரூபஞானம் ஏற்படுவதற்கு மஹாவாக்யங்கள்தான் ப்ரமாணமாகின்றது.

**பூர்வ :** வேதாந்த வாக்யங்கள் அந்தரங்க பஹிரங்க ஸாதனங்களை அபேக்ஷித்தே அதன் பலனான ஞானத்தை உண்டுபண்ணுகின்றது என்று சொல்ல நேரிடுமே? அதனால் வாக்யம் ப்ரமாணம் என்று எப்படிச் சொல்வது?

**சித்தா :** ஞானம் என்பது மாஹா வாக்யத்திலிலருந்தே ஏற்படவேண்டும். அந்த ஞானம் ஏற்படுவதற்கு இடையூறாக எவையெல்லாம் இருக்கின்றதோ அவைகளை நிவர்த்திப்பதற்காகவே மற்ற ஸாதனங்கள் தேவைப்படுகிறது. வாக்யம் ஞானத்தை உண்டுபண்ணுகின்ற விஷயத்தில் எதையும் அபேக்ஷிப்பதில்லை. அதனால் வாக்ய ப்ராமாண்யத்திற்கு ஹானி ஏதுமில்லை. அந்தரங்க ஸாதனம் பஹிரங்க ஸாதனம் என்ற இரண்டுமே இடையூறுகளை நிவர்த்திக்கின்றது. யஞ்ஞாதிகளால் பாவம்நிவர்த்திக்கின்றது. சித்த சுத்தி ஏற்படுகிறது. சிரவணாதிகள் அஸம்பாவனாதிகளை நிவர்த்திக்கின்றது என்பதால் தாரதம்யமாக இருப்பதால் இரண்டையும் விபாகம் செய்து அந்தரங்கம் பஹிரங்கம் என்று தெரிவிக்கிப்படுகிறது.

**342.** அவதாரிகை : சின்மாத்ரமான ஸ்வரூபத்தை ஆச்ரயமாகவும் விஷயமாகவும் கொண்ட அஞ்ஞானம் என்பது ஏகம் என்று முன்னால் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விதம் ஸ்வரூபத்தை ஆச்ரயித்து அதையே மறைக்கின்ற அஞ்ஞானம் என்பது ஏகம் என்றால், அந்த அஞ்ஞானம் மஹாவாக்யத்தினால் நிவர்த்திக்கிறது என்று சொல்லப்படுமானால், அதற்குப் பிறகு அந்தரங்க பஹிரங்க ஸாதனங்கள் எதை நிவர்த்திக்கின்றது? ஞானத்தினால் அஞ்ஞானம் நிவர்த்திக்கின்றது என்றால் இந்த சாதனங்கள் எதை நிவர்த்திக்கிறது? வேறு ஒரு அஞ்ஞானத்தை நிவர்த்திக்கிறது என்றால், அஞ்ஞானம் ஏகம் என்றும், ஸாதனங்கள் ப்ரமாணமில்லையென்றும் சொல்லப்படுகிறது. ஆகவே அந்தரங்காதி ஸாதனங்களால் நிவர்த்திக்கப்படவேண்டிய விஷயம் என்னஸ?

ச்லோகம் :

तत्त्वंपदार्थविषयं तम इत्यपीदमर्वागवस्थजनदृष्टिमपेक्ष्य गीतम् ।
अज्ञानमुत्तमदृशां पुनरेकमेव संसारमूलमपवर्गफला च विद्या

ச்லோகார்த்தம் : தத்வம் பதார்தங்களை விஷயமாகக் கொண்ட அஞ்ஞானம் என்று ஸாமான்ய ஜனங்களுடைய த்ருஷ்டியை அபேக்ஷித்தே சொல்லப்பட்டது. உத்தம த்ருஷ்டி உடையவர்களுக்கு ஸம்ஸாரகாரணமான அஞ்ஞானம் என்பது ஏகமேயாகும். மோக்ஷமென்ற பலத்தையுடைய ஞானமும் ஏகமேயாகும்.

வ்யாக்யானம் : அஞ்ஞானம் ஏகம் என்பதே பரமசித்தாந்தம். தத் த்வம் பதார்த்த விஷயகமான அஞ்ஞானம் ஏகம் என்று சொல்லப்பட்டவிஷயத்தில் ஆக்ஷேபத்திற்கே இடமில்லை. இவ்விதம் விவேகித்ருஷ்டியில் ஏகம் என்று சொல்லப்படும் அஞ்ஞானம்தான் ஸம்ஸாரபீஜம். அந்த அஞ்ஞானத்தின் கார்யம்தான் சித்தத்தில் அசுத்தி, அஸம்பாவனுதிகள் என்று லோகத்ருஷ்டியை அனுசரித்து சொல்லப்படுகிறது. இவ்விதம் அஞ்ஞானம், அஞ்ஞானகார்யம் என்று அஞ்ஞானத்தைக் காட்டிலும் வேருக இருப்பதுபோல் சொல்லப்பட்டபோதிலும் இரண்டும் வேறல்ல. சாஸ்திர த்ருஷ்டி இல்லாதவர்களுக்காக பிரித்து சொல்லப்பட்டது. ஆகையால் வாக்யத்தினுல்தான் ஸம்ஸாரத்திற்கு பீஜமான அஞ்ஞானம் நிவர்த்திக்கப்படவேண்டும். சூக்ஷ்மபுத்தியுடைய உத்தமத்ருஷ்டி உடையவர்களுக்கு சொல்லப்பட்ட ஏகமான அஞ்ஞானம் என்ற அவித்யையானது வித்யை என்ற மோக்ஷபலனுக்காக - வித்யையினுல் அவித்யை நிவர்த்திக்கப்படவேண்டும்.

**343.** அவதாரிகை : தத்வஞானத்தினுல்தான் அஞ்ஞானநிவர்த்தி என்று சொல்லப்படுமானுல், அந்தரங்க ஸாதனங்கள் வ்யர்த்தம் என்றுதானே சொல்லவேண்டும் ?

ச்லோகம் :

अज्ञानसंशयविपर्ययरूपकाणि ब्रह्मात्मबुद्धिजनकप्रतिबन्धकानि ।
तत्त्वं पदार्थविषयाणि निवर्तयन्ति ह्यावृत्तिमन्ति मननश्रवणादिकानि

ச்லோகார்த்தம் : தத்த்வம் பதார்த்தங்களை விஷயமாகக் கொண்ட அஞ்ஞானம், ஸம்சயம், விபர்யயம் என்ற எல்லாமே, ப்ரஹ்மாத்ம/ஞானேற்பத்திக்கு ப்ரதிபந்தகமாகும். ச்ரவணம் மனம் முதலானவைகளில் ஆவ்ருத்தியினுல் தான் இவைகள் நிவர்த்திக்கப்படுகிறது.

வ்யாக்யானம் : அவ்விதம் சொல்லமுடியாது. ஏனெனில் எத்தனையோமுறை ச்ரவணம் செய்தபோதிலும், த்ருஷ்ட்டபலமான ஞானம் ஏற்படவில்லையென்ருல், ஞானம் ஏற்படுவதற்கு தடை இருப்பதாக அறிந்துகொள்ளவேண்டும். அஞ்ஞானம், ஸம்சயம், விபர்யயம் என்றமூன்று விதரூபங்களையுடைய தமஸ் என்பதே தடையாக இருக்கின்றது. அந்தரங்க ஸாதனத்தினுல் தான் இந்த ப்ரதிபந்தகம் நிவர்த்திக்கப்படவேண்டும். ஆகவே தத்த்வம் பதார்த்ததமஸ் என்பது (மூன்றுவிதரூபமாக) இருக்கின்றதால் அவஸ்யம் அந்தரங்கஸாதனமான சிரவணுதிகளையும் ஸமதமாதிகளையும் பலம் ஏற்படும் பர்யந்தம் அனுஷ்ட்டித்தேயாகவேண்டும்.

**344.** அவதாரிகை : ச்ரவணுதிகளின் ஸ்வரூபம் என்னவெருல்,

**ச்லோகம் :**

शब्दात्तिविषयं निरूपणं युक्तितः श्रवणमुच्यते बुधैः ।
वस्तुवृत्तविषयं निरूपणं युक्तितो मननमित्युदीर्यते

**ச்லோகார்த்தம் :** வேதாந்த வாக்யங்களின் தாத்பர்யத்தை (உபக்ரமம் முதலான) லிங்கங்களிஞல் நிர்ணயம் செய்வதே ச்ரவணம் என்று வித்வான்களால் சொல்லப்படுகிறது. யுக்தியிஞல் வஸ்து ஸ்வரூபத்தை நிச்சயம் செய்வதே மனனம் என்று சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** வேதாந்த வாக்யங்களை யுக்திகளைக் கொண்டு அறிந்தபோதிலும், தாத்பர்யவிஷயம் என்ன என்பதை அவஸ்யம் அறியவேண்டும் என்று 'யுக்தித:' என்று உபலக்ஷணமாக ச்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதஞல் அறியப்படும் விஷயம் என்னவென்ருல், சப்தசக்தியை மட்டும் கொண்டு வாக்யத்திற்கு அர்த்தம் செய்யாமல் தாத்பர்ய விஷயம் என்ன என்பதை அனுசரித்து, ச்ரவணத்திஞலும், யுக்தியைக்கொண்டும் விஷயம் நிச்சயிக்கப்படவேண்டும் என்பதே இதன்கருத்து.

**345, 346.** அவதாரிகை : நிதித்யாஸனம் என்ருல் என்ன?

**ச்லோகம் :** चेतसस्तु चितिमात्रशेषता ध्यानमित्याभिवदन्ति वैदिकाः ।
अन्तरङ्गमिदमित्थमीरितं तत्कुरुष्व परमात्मबुद्धये
श्रवणमननबुद्धयोर्जातयोर्यत्फलं तन्निपुणमतिभिरुचैरुच्यते दर्शनाय ।
अनुभवनविहीना यैवमेवेति बुद्धिः श्रुतमननसमाप्तौ तन्निदिध्यासनं हि

**ச்லோகார்த்தம் :** வாக்யார்த்த ஞானவ்ருத்தியானது சைதன்யகாரமாக நிலைத்திருப்பதே த்யானம் என்று வைதிகர்களால் சொல்லப்படுகிறது. இந்தவிதம் சொல்லப்பட்ட அந்தரங்க ஸாதனங்களை ப்ரஹ்மசாக்ஷாத்காரம் ஏற்படுவதற்காக அனுஷ்டிப்பாயாக.

ச்ரவண மனனங்களிஞல் ஏற்பட்ட ஞானத்தின் பலஞக ஏற்படுவது எதுவோ அதுவே நித்யாஸனம் என்று குசலபுத்தி உடையவர்களால் சொல்லப்படுகிறது. முன்பு சொல்லப்பட்ட முறையில் சிரவணமனனங்களின் முடிவில் இதுவே என் ஸ்வரூபம் என்ற அபரோக்ஷ அனுபவமற்ற (நான் ப்ரஹ்மமே என்ற நிச்யாத்மகஞானமே) ஞானம் எதுவோ அதுவே நிதித்யாஸனம் என்று சொல்லப்படுகிறது.

**வ்யாக்யானம் :** வாக்யத்திஞல் ஏற்படும் ப்ரஹ்மாத்ம பரோக்ஷ ஞானத்தைக் காட்டிலும், நிதித்யாஸனம் வேறு என்று ஒரு சிலரால் சொல்லப்படுகிறது. அதாவது - ச்ரவணுதிகளால் ஏற்படும் பரோக்ஷநிச்சய ஞானம் என்பதே நிதித்யாஸனம் என்று சொல்கிருர்கள். எப்படி யாகாதிகளைச் செய்வதால் ஸவர்க்கம் என்ற பலம் எப்படி நிச்சயமாக ஏற்படுகிறதோ அதுபோல் ச்ரவணுதிகளால் பரோக்ஷஞானம் நிச்சயமாக ஏற்படுவதே நிதித்யாஸனம் என்றும் அதஞல் அபரோக்ஷஞானம் என்பது பரோக்ஷநிச்சயஞானத்தையன்றி வேறு எதையும் அபேக்ஷிப்பதில்லையென்றும், "அபராயத்தபோதோSத்ர நிதித்யாஸனமுச்யதே" என்று அவர்களால் (அதுவே

நிதித்யாஸனம்) சொல்லப்படுகிறது. இடைவிடாது ச்ரவணுதிகளில் புத்தியைச் செலுத்துவதனுல் ஏற்படும் பலமே நிதித்யாஸனம் என்றும் அதுவே அபரோக்ஷஞானத்திற்கு ஸாதனம் என்பது அவர்கள் அபிப்ருயம். வேறுசிலர் - ச்ரவணமனனுதிகளை செய்வதால் ஏற்படும் ஞானத்தையன்றி வேருக நிதித்யாஸனம் என்று ஒன்று ப்ரயத்னபூர்வகமாகச் செய்யப்படவேண்டியது எதுவுமில்லை என்று சொல்கிருர்கள்.

**347.** அவதாரிகை : இதுவரை சொல்லப்பட்டதன் சாரம் என்னவென்ருல்,

**ச்லோகம் :**

पूर्वाण्यदृष्टपरिपन्थिनिबर्हणानि दृष्टं हरन्ति च विरोधिनमुत्तराणि ।
वाक्यं निरस्तसकलप्रतिबन्धकं सदात्मानमद्वयमखण्डमबुद्धमाह

**ச்லோகார்த்தம் :** முன்னுல் சொல்லப்பட்ட யஞ்ஞாதி ஸாதனங்கள் அத்ருஷ்ட்ட ப்ரதிபந்தங்களை நாசம் செய்கின்றது. பின்னுல் சொல்லப்பட்ட ச்ரவணுதிஸாதனங்கள் த்ருஷ்ட்டப்ரதிபந்தங்களை (நிவர்த்திக்கின்றது) நாசம் செய்கின்றது. ஸர்வ ப்ரதிபந்தங்களும் அற்ற வாக்யமானது முன்னுல் அறியப்படாத (ஸாமான்யாக அறியப்பட்ட) அத்வய அகண்ட ஸ்வரூபமாக ஆத்மாவை தெரிவிக்கின்றது.

வ்யாக்யானம் : பஹிரங்க ஸாதனமான யஞ்ஞாதிகள் அத்ருஷ்ட்டமான (ஜன்மாந்தரங்களில் செய்யப்பட்ட) பாபங்களை நிவர்த்திக்கின்றது. அந்தரங்க ஸாதனம் என்பது த்ருஷ்ட்டமான ஸம்சயம், விபர்யயம் முதலானவைகளால் ஏற்படும் ப்ரதிபந்தங்களை நிவர்த்திக்கின்றது. இவ்விதம் சொல்லப்படும் இரண்டு ஸாதனங்களினுல் ஸகல ப்ரதிபந்தங்களும் நிவர்த்திக்கப்பட்டு அதன்பிறகு அத்வயமான அகண்ட ஆத்மஸ்வரூப போதம் ஏற்படுகிறது. இந்தவிதம் விசாரிக்கப்பட்டதிலிருந்து வாக்யத்தினுலேயே ஆத்மஸ்வரூபபோதம் ஏற்படவேண்டும் என்பதும் சித்திக்கின்றது.

**348.** அவதாரிகை : இவ்விதம் அந்தரங்க ஸாதனங்களை அனுஷ்டிக்கின்ற ஸன்யாசிகளுக்கு இந்த ஜன்மாவிலேயே வித்யாபலமான மோக்ஷம் சித்திக்கின்றதா ? அல்லது சித்ரயாகபலன்போல, இந்த ஜன்மாவிலோ அல்லது அடுத்த ஜன்மாவிலோ பலன் ஏற்படலாம் என்று அநியதமாக பலன் ஏற்படுகிறது என்று சொல்லப்படுகிறதா ?

**ச்லோகம் :**

यज्ञादिक्षपितसमस्तकल्मषाणां पुत्रादित्रयगतसङ्गवर्जितानाम् ।
संशुद्धे पदयुगलार्थतत्त्वमार्गे प्रायेणोद्भवति हि जन्मनीह विद्या

**ச்லோகார்த்தம் :** யஞ்ஞாதிகளால் ஸர்வபாபங்கள் அற்றவர்களும், புத்ராதி ஏஷணைகள் அற்றவர்களுமாக இருக்கின்றவர்களுக்குத் தத்வஞானஸாதனமாக இருக்கின்ற தத் த்வம் பதார்த்தங்கள் சோதிக்கப்படுகின்றபோது (பெரும்பாலும்) அனேகமாக இந்த ஜன்மத்திலேயே ஞானம் ஏற்படுகின்றது.

வ்யாக்யானம் : அந்தரங்க, பஹிரங்க ஸாதனங்களை முறைப்படி நன்கு அனுஷ்டிக்கின்ற ஸன்யாசிக்கு இந்த ஜன்மாவிலேயே முக்தி கிடைக்கின்றது என்றும்,

அல்லது இவ்வித ஸாதனங்களை ஜன்மாந்தரங்களில் அனுஷ்ட்டித்திருப்பவராக இருந்தால் அவருக்கும் இந்த ஜன்மாவிலேயே முக்தி கிடைக்கின்றது என்பதை பகவானுலும் கீதையில் 'அனேக ஜன்மஸம்ஸித்தி': என்று சொல்லப்படுகிறது. அதேபோல் 'பஹூனும் ஜன்மனும் தே ஞானவான் மாம்ப்ரபத்யதே' என்று அனேக ஜன்மங்களிலும் கிடைக்கலாம் என்று தெரிவிக்கப்படுகிறது. இந்தவிதம் ஜன்மாந்தங்களில் செய்த யாகாதி ஸாதனங்களினுல் இப்போது ஞானம் ஏற்படுகிறது என்று சொல்வதற்காக, (புத்ராதி) ஏஷணுத்ரயங்களும் ஜன்மாந்தரங்களில் விடப்பட்டிருக்கலாம் என்று நினைக்காமல் இந்த ஜன்மாவிலும் அவஸ்யம் ஏஷணுத்ரயங்களையும் விடவேண்டும். இந்தவிதம் சாஸ்திரத்தில் விதிக்கின்றபடி ஸர்வஸாதனங்களையும் அனுஷ்ட்டிப்பதனுல் ப்ரதிபந்தகம் நீங்கினவனுக்கு அவஸ்யம் இந்த ஜன்மாவிலேயே முக்தி என்ற பலன் கிடைக்கும் என்பதில் ஸந்தேஹமில்லை.

**349.** அவதாரிகை : இதே விஷயம் பற்றி மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

अत्रैव जन्मनि भवेदपवर्गदायि वाक्यप्रसूतमनुभूतिफलावसानम् ।
ज्ञानं निवारकनिमित्तवशादमुष्मिञ्जन्मन्यपीति वचनादवगम्यते हि

**ச்லோகார்த்தம் :** முக்தியை கொடுக்கக் கூடியதும், வாக்யத்தினுல் ஏற்படுவதும், அனுபூதி பலத்தில் முடிவு பெறுவதுமான (சாக்ஷாத்காரத்தின் பயனுகிய அவித்யையின் நிவர்த்தியில் முடிவு பெறுவதும்) த்ருட ஞானம் என்பது, இந்த ஜன்மாவிலேயே ஏற்படும். (அவ்விதமின்றி ஏதாவது தடை இருக்குமானுல்) அவ்விதம் ஞானம் ஏற்படுவதற்கு தடை செய்கின்ற சில நிமித்தங்கள் இருக்குமானுல் (அன்ய ஜன்மாவிற்குரிய கர்மா) மறு ஜன்மத்திலும் ஞானம் ஏற்படலாம் என்று வேதவாக்யங்களினுல் அறியப்படுகிறது.

**வ்யாக்யானம் :** வாக்யத்திலிருந்து அவச்யம் ஞானம் ஏற்பட்டே ஆகவேண்டும். அவ்விதம் ஏற்படவில்லையென்ருல் ப்ரதிபந்தகம் இருக்கிறது என்று அறியவேண்டும். அதனுல் ப்ரதிபந்தக நிவர்த்திக்குரிய ஸாதனங்களை நன்கு அறிந்து அனுஷ்ட்டிக்கப்படுமானுல் இந்த ஜன்மாவிலேயே பலன் ஏற்படலாம், அல்லது அடுத்த ஜன்மாவிலும் ஏற்படலாம். அதனுல் ஸாதனம் வ்யர்த்தம் என்று சொல்லமுடியாது. இந்த விஷயத்தில் சாஸ்திரமே ப்ரமாணம்.

**350.** அவதாரிகை : இந்த விஷயத்தில் சாஸ்திரவசனம் என்ன என்பதை மேலே விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

ज्ञानोत्पत्तिं वामदेवस्य गर्भे श्रुत्वा विद्मः साधनं प्राच्यमस्य ।
योगभ्रष्टस्मृत्यवष्टम्भतोऽपि विज्ञातव्यं साधनं प्राच्यमस्य

**ச்லோகார்த்தம் :** வாமதேவருக்கு கர்ப்பத்திலேயே ஞானம் ஏற்பட்டது என்ற ச்ருதி வாக்யத்தைக் கேட்டு அவருடைய பூர்வஜன்ம சாதன அனுஷ்ட்டானத்தை அறிந்து

கொள்கிறோம். யோகப்ரஷ்ட்டனைப்பற்றி தெரிவிக்கின்ற கீதா ஸ்ம்ருதி வாக்யத்தை அனுசரித்தும் அவனுடைய பூர்வஜன்மஸாதனனுஷ்ட்டானத்தை தெரிந்து கொள்ளவேண்டும்.

வ்யாக்யானம் : வாமதேவருக்கு கர்ப்பவாஸத்திலேயே 'அஹம் மனுரபவம் ஸூர்யச்ச' என்று ஸர்வாத்மபாவம் ஏற்பட்டதாக ச்ருதிவசனமே இருக்கின்றது. அதனால் சொல்லப்பட்ட ஸாதனங்களை முன் ஜன்மாவிலேயே அனுஷ்டித்திருக்கவேண்டுமென்று நிச்சயமாக அறியப்படுகிறது. ஏனெனில் காரணமின்றி கார்யம் ஏற்படாது. கர்ப்பத்தில் அந்தரங்க பஹிரங்க ஸாதனங்கள் செய்திருக்கமுடியாது. அதனால் முன்ஜன்மாவில் செய்திருக்கவேண்டுமென்பது சித்தமாகிறது. (ஸ்பஷ்ட்டம்) "நைவ இஹ நா அமுத்ர என்றும்," "நஹி கல்யாண க்ருத் கச்சித் துர்கதிம் தாத கச்சதி" என்றும் பகவானலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே இப்பேர்ப்பட்ட ச்ருதிஸம்ருதி வாக்யங்களே இதற்குப்ரமாணம்.

**351.** அவதாரிகை : இவ்விதம் ச்ரவணுவதி ஸாதனங்களால் ஏற்படும்பலம் சித்ராயாகம் போல் அநியதபலம் என்று சொல்லப்படுமானல், சித்ராயாகம் என்பது எப்படி ஒருமுறைதான் செய்யப்படுகிறதோ அதுபோல் ச்ரவணுதிகளையும் ஒருமுறைசெய்தால் போதுமே ? என்றால்,

ச்லோகம் :

चित्रादिवद्भवति साधनजातमस्य ज्ञानप्रसूतिकरमित्यवगच्छ सर्वम् ।
अभ्यग्रशुष्यदखिलौषधिकस्य पुंसोवृष्टिप्रदेष्टिरधिकारवशादिहैव

ச்லோகார்த்தம் : ஸாதனங்கள் அனைத்தும் சித்ரா முதலானயாகம் போல் இந்த ஜன்மத்திலோ அல்லது ஜன்மாந்திரத்திலோ ஞானத்தை ஏற்படுத்தும் என்று அறிந்துகொள். யாக காலத்தில் உலர்ந்துபோய் நிற்கின்ற பயிர்களுடைய புருஷனுக்கு மழையைக்கொடுக்கின்ற காரீரி என்ற யாகமானது அவனுடைய அதிகாரத்தினல் தற்போதே பலத்தைக் கொடுக்கின்றது.

வ்யாக்யானம் : ச்ரவணுதிகளும் சித்ராயாகம் போல் அநியதபலம் என்று தெரிவிப்பதற்காகவே அதை உதாகரணமாகச் சொல்லப்பட்டது. அதற்காக, யாகம்போல் ஒரு தரம் செய்தால்போதுமே என்று சொல்வது சரியல்ல. யாகம் என்பது அபூர்வம் என்பதை ஏற்படுத்தி அதன்பின் அதன் பலனை கொடுக்கிறது என்று சொல்கிறோம். அதனல் யாகபலம் அத்ருஷ்ட்டம். ஆனல் ச்ரவணுதிகளை அத்ருஷ்ட்டபலமென்று சொல்லப்படவில்லை. த்ருஷ்ட்ட பலமாகவே இருக்கின்றதால் பலன் கிடைக்கும் பர்யந்தம் ச்ரவணுதி, சாதனங்களை அனுஷ்ட்டிக்கவேண்டும். யாகம்போல் ஒருமுறை செய்தால் போதும் என்று சொல்வதற்கு முடியாது. ப்ரதிபந்தக நிவர்த்தி ஏற்படவில்லையென்றால் மறு ஜன்மாவில் பலன் ஏற்படலாம் என்பதால் அநியதம் பலம் என்று சொல்லப்படுகிறது.

பூர்வ : காரீரிஇஷ்டி என்ற கர்மாவை மழை பெய்ய வேண்டு மென்பதற்காகச் செய்யப்படுகிறது. த்ருஷ்ட்டபலத்தை வேண்டி செய்த போதிலும்

மழைபெய்யவில்லையென்ருல், அந்த கர்மாவையும் அநியத பலம் என்று சொல்லலாமா?

**சித்தா :** காரீரிஇஷ்டி என்ற கர்மாவைச் செய்வதற்கு காரணம், ப்ரத்யக்ஷமாய் பயிர்கள் வாடி பாதிக்கப்படுவதைக் கண்டு உடனே மழை பெய்யவேண்டுமென்று செய்கின்றகர்மா. வேதவிஹிதமான இந்த கர்மாத்ருஷ்ட்டபலனை உத்தேசித்து செய்யப்படுவதால் அநியதபலம் என்று சொல்லமுடியாது. ஒரு ஸமயம் பலன் ஏற்படவில்லையென்ருல் சரியான முறையில் செய்யப்படவில்லை என்றே அறியவேண்டும். ஆகவே மழை உடனேயும் பெய்யலாம், பத்துநாட்க்களிலும் பெய்யலாம் ஆனுல் அடுத்த ஜன்மாவில் பெய்யலாம் என்று சொல்லமுடியாது - மழைபெய்த உடனேயே பயிர்களில் பலன் தெரியாது அதுவும் சிறிது நாட்களில்தான் வளம்பெறுகிறது. இவ்விதம் அவாந்தரபலமாக காலாந்தரத்தில் ஏற்படுவதற்காக அதையும் ஜன்மாந்தரபலம் என்று சொல்லமுடியாது.

ஆகவே காரீரிஇஷ்டி என்பது செய்தால் பலன் உண்டு செய்யவில்லை என்ருல் பலன் இல்லை, என்று அன்வயவ்யதிரேகத்தைக் கொண்டு சொல்லப்படுகிறது. அதுபோல் ச்ரவணுதி ஸாதனங்கள் அன்வயவ்யதிரேகத்தினுல் அறியக்கூடிய விஷயமல்ல. புஜித்தால் பசி தீரும் புஜிக்காவிடில் பசிதீராது என்று கட்டாயம் பலன் ஏற்படுமிடத்தில் சாஸ்திரம் தெரிவிக்கவேண்டிய அவஸ்யமில்லை. சித்ராயாகத்தில் பசுமுதலான பலன்கள் இந்த ஜன்மாவில்தான் கிடைக்கவேண்டும். அதற்கு தடை ஏதும் இருக்குமாஞல் அடுத்த ஜன்மாவிலும் கிடைக்கலாம் என்பதை சாஸ்திரமே தெரிவிக்கின்றது. அதேபோல் ச்ரவணுதிகளுக்கும் த்ருஷ்ட்டபலனும் ஏற்படலாம். ப்ரதிபந்தகம் இருக்குமானுல் ஜன்மாந்தரத்திலும் ஏற்படலாம் என்பதை சாஸ்திரமே தெரிவிக்கின்றது. காரீரிஇஷ்டி என்பது சாஸ்திர விஹிதமான கர்மா - ச்ரவணுதிகளும் சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கிறது. அதனுல் காரீரிஇஷ்டி என்பதற்கு ச்ரவணுதிகள் போல் ஜன்மாந்தரத்திலும் பலன் ஏற்படலாம் என்று சொல்லலாமே?

**சித்தா :** காரீரிஇஷ்டி என்பது, பயிர்கள் வாடுவதைக் கண்டு எவன் இந்த கர்மாவைச் செய்கிருனே அவனே அதில் அதிகாரி என்று த்ருஷ்ட்டபலத்தை வேண்டி கர்மாவைச் செய்கின்ற அதிகாரியை குறிப்பிட்டு சொல்லப்படுகிறது. உடனே பலத்தை விரும்பிச் செய்கின்ருன். பலன் இல்லையென்ருல் கர்மாவை அனுஷ்டிப்பதில் ஏற்பட்ட குறைபாடுகள் காரணமாகிறதேயன்றி ஜன்மாந்தர பலன் ஏற்படும் என்று சொல்ல முடியாது. ஆகையால் சிரவணுதிகளை அவ்விதம் நியதபலமாகச் சொல்லமுடியாது என்பதற்கு ச்ருதிஸம்ருதி வாக்யங்கள் ப்ரமாணமாகிறது.

**352.** அவதாரிகை : அந்தரங்கஸாதனம், பஹிரங்கஸாதனம் என்று இரண்டு ஸாதனங்களை அனுஷ்ட்டிக்கின்ற முறையில் (இதிகர்த்தவ்யதா விஷயத்தில்) ஏதாவது வித்யாஸம் (விசேஷம்) இருக்கிறதா இல்லையா என்பதை தெரிவிக்கவேண்டும் என்று கேட்கப்படுகிறது.

ச்லோகம் :

बहिरङ्गसाधनमशेषगुरोः परमेश्वरस्य चरणाम्बुजयोः ।
नियमात्समर्पितमशेषमघं विनिहन्ति बुद्धिनिलयं सुमहत्

ச்லோகார்த்தம் : ஜகத்குருவான பரமேச்வரனுடைய சரணும்புஜத்தில் நியமத்தோடு ஸமர்ப்பிக்கப்பட்ட யஞ்ஞாதி பஹிரங்க ஸாதனமானது சித்தத்திலுள்ள மஹத்தான எல்லா பாபங்களேயும் நாசம் செய்கின்றது.

வ்யாக்யானம் : இரண்டும் அனுஷ்ட்டிக்கப்படுகின்ற முறையில் வித்யாஸம் இருக்கின்றது. பஹிரங்க ஸாதனம் என்று சொல்லப்படும் கர்மாக்களே, பலத்தில் இச்சையின்றி நிஷ்காமமாக ஈச்வரார்ப்பணமாகச் செய்யப்படவேண்டும். அதுமட்டுமல்ல கர்மாவைச் செய்கின்றபோது நான்கர்த்தா என்ற எண்ணமே இருக்கக்கூடாது. கேவலம் யஞ்ஞஸ்வரூபமான பரமேச்வரனுடையத்ருப்திக்காக ஈச்வராராதனமாக இந்தகர்மாவைச் செய்கின்றேன் என்று ப்ரார்த்தித்து ஸங்கல்பித்து அந்த கர்மாவைச் செய்யவேண்டும். இந்தவித ஸங்கல்ப்பத்துடன் கர்மா செய்யப்படுமாஞல் ஞானம் ஏற்படுவதற்கு ப்ரதிபந்தமாக இருக்கின்ற பாபங்கள் அனேத்தும் நிவர்த்தித்து சித்தசுத்தி ஏற்படுகிறது. இதுவே பஹிரங்க ஸாதனத்தைச் செய்யவேண்டிய முறை என்று அறியவேண்டும்.

**353.** அவதாரிகை : இதுபோல் அந்தரங்க ஸாதனத்தையும் ஈச்வரார்ப்பணமாகச் செய்யவேண்டுமா ? என்ருல்,

ச்லோகம் :

न तथाऽन्तरङ्गमुपलब्धिजनेरुपकारकं शमदमप्रभृति ।
तदनुष्ठितं परमहंसजनैः परमात्मतत्त्वमुपलम्भयति

ச்லோகார்த்தம் : ஞானேற்பத்திக்கு காரணமாக இருக்கின்ற ஸமதமாதி அந்தரங்கஸாதனங்கள் அவ்விதமல்ல. பரமஹம்ஸர்களால் அனுஷ்ட்டிக்கப்பட்ட அந்த ஸாதனங்கள் பரமாத்ம தத்வத்தை தெரிவிக்கின்றது.

வ்யாக்யானம் : பஹிரங்கஸாதனம் ஈச்வரார்ப்பணமாகச் செய்தால் தான்பலன் உண்டு. அந்தரங்க ஸாதனம் அவ்விதமில்லே. கர்மா என்பது காரகமாக இருக்கின்றதால், அதை ஈச்வரார்ப்பணமாக செய்தாலும் அது ஞானத்திற்கு நேரிடையான ஸாதனமாக ஆகாது. சித்தசுத்தி த்வாராதான் ஞானம் ஏற்படகாரணமாகிறது. ஆனுல் ச்ரவணுதிகள் என்ற அந்தரங்க ஸாதனங்கள் நேரிடையாகவே ஞானத்திற்கு ஸாதனமாக ஆகியது. ஆகவே ஸன்யாஸிகள் அந்தரங்க ஸாதனங்களே அனுஷ்டிப்பார்களேயானுல் அதனுல் உத்கர்ஷமான பலன் ஏற்படும். இந்தவிதம் பஹிரங்க ஸாதனம் ஈச்வரார்ப்பணமாகச் செய்யவேண்டும் என்பதே அதில் விசேஷம்.

அதேபோல் அந்தரங்கஸாதனம் என்பதில், பரமஹம்ஸனுக இருந்து செய்யப்படவேண்டும் என்பதே இதில் விசேஷம். இந்தவிதம் அந்தரங்க ஸாதனத்தில் அதிகாரி விசேஷம் என்பதும், ஈச்வரார்ப்பணம் என்ற விசேஷமும் கிடையாது என்ற விசேஷம் இருக்கின்றதென்று அறிந்துகொள்ளவேண்டும்.

**354, 355.** அவதாரிகை : இந்த இரண்டுவிதமான ஸாதனங்களில் இவ்வித விபாகம் இருக்கின்றதென்பதில் என்ன ப்ரமாணம் ?

ச்லோகம் : भगवाननादिनिधनः कृपया हरिरेव तदाह जगदेकहितः ।
सकलं समर्प्य मयि युक्तमनाः कुरु कर्म शुद्धिकरमित्यसकृत्
न तथाऽन्तरङ्गफलसंन्यसनं क्वचिदूचिवानत इति विदितम् ।
अनपेक्ष्य तत्फलपरित्यजनं परमात्मनिश्चयफलं तदिति

ச்லோகார்த்தம் : ஏகாக்ரமனதுடன் பலத்தை என்னிடம் அர்ப்பித்து, சுத்தி செய்கின்ற ஸர்வகர்மங்களையும் அனுஷ்டிப்பாயாக என்று ஆதி அந்தங்கள் அற்றவனும் ப்ரபஞ்சத்தின் நன்மையையே விரும்புவனுமான க்ருஷ்ணபகவானால் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. அவ்விதம் அந்தரங்க ஸாதனங்களின் பலத்தை த்யாகம் செய்யவேண்டுமென்று பகவான் எந்த ஓரிடத்திலும் சொல்லப்படவில்லை. இதனால் அந்தரங்க ஸாதனமானது பலத்யாகத்தை அபேக்ஷிக்காமலேயே பரமாத்ம ஞானத்தைக் கொடுக்கின்றதென்று அறியப்படுகின்றது.

வ்யாக்யானம் : பஹிரங்க ஸாதனமான கர்மாவை பகவத் அர்ப்பணமாக செய்யவேண்டும் என்பதற்கு மயிஸர்வாணி கர்மாணி ஸன்யஸ்யஅத்யாத்ம சேதஸா! நிராஸீர் நிர்மமோபூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர : || (3.30) என்ற கீதாவசனமும், 'யத: ப்ரவ்ருத்தி பூதானும் யேனஸர்வம் இதம் ததம்! ஸகர்மணுதம் அப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ || (18.46) என்ற கீதாவசனமும், பகவத் அர்ப்பணமாகச் செய்யப்படும் கர்மாவினால் சித்தசுத்தி ஏற்பட்டு அதன்மூலம் மோக்ஷமென்றபலன் சித்திக்கின்றது என்று தெரிவிக்கின்றது. ஆகவே பகவத் வசனமே இதில் ப்ரமாணம்.

அந்தரங்க ஸாதனத்தினால் ஏற்படும் பலம் பரமாத்ம ஸ்வரூபநிச்சயஞானமாக இருக்கின்றதால், அதை ஈச்வரார்ப்பணமாக விடமுடியாது என்பது பெரியோர்களாலும் அறியப்பட்டவிஷயம்தான். ஆகவே, ஈச்வரார்ப்பணமாகச் செய்யப்படும் யஞ்ஞாதிகர்மாக்களின் பலனாக சித்தசுத்தி ஏற்படுகிறது என்பதால் அவைகளை ஈச்வரார்ப்பணமாகச் செய்யமுடியும். அதுபோல் அந்தரங்க ஸாதனத்திற்கு ஞானம் என்பதைத் தவிர வேறுபலன் ஏதுமில்லை என்பதாலும் ப்ரதிபந்தக நிவர்த்தித்வாரா தத்வஞானம் என்ற ஸ்வரூபஞானம் ஒன்றே பலமாக இருக்கின்றதால் - அதை ஈச்வரார்ப்பணமாகச் செய்யமுடியாது.

**356.** அவதாரிகை : பகவத்வசனம் ப்ரமாணம் என்று முன்னால் தெரிவிக்கப்பட்டது. ஆனால் யுக்தியைக் கொண்டும் இரண்டு விதம் விபாகம் செய்யலாம் என்று தெரிவிக்கப்படுகிறது.

ச்லோகம் :

अपि च बन्धनहेतुतया श्रुतं समसमीक्षणकौशलशालिनः ।
भवति शुद्धिकरं न च बन्धकृद्भवति कर्म तथा घटते हि तत्

ச்லோகார்த்தம் : பந்தஹேதுவாகச் சொல்லப்படுகின்ற கர்மமானது ஸமத்வபுத்தியுடைய குசலர்களுக்கு பந்த ஹேதுவாக இருப்பதில்லை. சுத்தி ஹேதுவாகவே இருக்கிறது.அவ்விதம் சொல்வது யுக்தி யுக்தமாகவும் இருக்கிறது.

வ்யாக்யானம் : தேஹம் இந்த்ரியம் மனஸ் முதலான ஸம்பந்தத்தினுல் அனுபவிக்கப்படும் பலன்களுக்கு அவரவர் செய்த கர்மாவே காரணம். அதனுல் அந்த கர்மாவே பந்தத்திற்கு காரணம் என்று சொல்லப்படும். ஏனெனில் கர்மாவின் ஸ்வபாவம் அனுத்ம ரூபபலமான சுகதுக்காதிகளை கொடுக்கின்றதால் அவ்விதம் செய்யப்படும் கர்மா பந்தத்திற்கு காரணமாகிறது. ஆனுல் நிஷ்காமமாக கர்மாவைச் செய்யப்படுமானுல் அது ஞானம் ஏற்படகாரணமாக ஆகிறது. ஒரே கர்மா எப்படி பந்தத்திற்கும் - சித்த சுத்திக்கும் காரணமாக ஆகமுடியும்? என்ருல், உதாரணமாக தயிர் என்பதை ஒன்றும் கலக்காமல் புஜிக்கின்றபோது அந்த தயிர்ஜ்வரத்திற்கு காரணமாகலாம். ஆனுல் அதே தயிரை தேனுடன் கலந்து புஜிக்கப்படுமானுல் புஷ்ட்டிக்கு காரணமாகிறது. அதேபோல் கர்மாவென்பது பலஇச்சையுடன் செய்யப்படுமானுல் பந்தத்திற்கு ஹேதுவாகிறது. அது ஆத்மஞானத்திற்கு விருத்தம். அதனுல் ஆத்மஞானத்திற்கு அனுகூலமான சித்தசுத்தி ஏற்படுவதற்காக கர்மபலத்திலுள்ள இச்சையை பரித்யாகம் செய்து பகவத் அர்ப்பணமாக செய்யப்படுமானுல், அதனுல் அசுத்திகரமானபலம் பகவத் அர்ப்பணத்தினுல் நிவர்த்திக்கின்றது. அதுவே ஞானத்திற்கு காரணமாகிறது.

**357.** அவதாரிகை : அந்தரங்க ஸாதனம் என்பதும் க்ரியாகாரக பலமுடையதாக இருக்கின்றதால் அதையும் பகவத் அர்ப்பணமாக ஏன் செய்யக்கூடாது? பஹிரங்கம் அந்தரங்கம் என்ற இரண்டிற்கும் உள்ள விசேஷம் என்ன?

ச்லோகம் :

यदिह साधनमात्मधियः श्रुतं न च फलान्तरहेतुतया श्रुतम् ।
शमदमादिकमत्र तु कौशलं किमपि काङ्क्षितमस्ति न सिद्धये

ச்லோகார்த்தம் : ஆத்மஞானத்திற்கு ஸாதனமாகச்ருதியில் சொல்லப்படுகின்ற ஸமதமாதிகள் வேறு எந்த பலத்திற்கும் ஸாதனமாகச் சொல்லபடவில்லை. ஆகையால் இங்கு (கௌசலம்) ஸாமார்த்யம் ஏதும் அபேக்ஷிக்கப்படுவதில்லை.

வ்யாக்யானம் : அந்தரங்கம், பஹிரங்கம் என்று சொல்லப்படும் ஸாதனைகளில் க்ரியா காரக பலரூபம் என்பது இரண்டிற்கும் ஒன்ருகவே இருந்தபோதிலும், பஹிரங்கம் என்று சொல்லப்படும் யஞ்ஞாதிகளை ஈச்வரார்ப்பணமாகச் செய்யாவிடில் அந்த கர்மா பந்தஹேதுவாகிறது. அதனுல் ஆத்மஞானத்திற்கு ஸாதனமாக ஆகாது. அந்தரங்க ஸாதனமாகச் சொல்லப்படும் ஸமதமாதிகள் ச்ரவணுதிகள் செய்வதால் பந்தம் ஏற்படும் என்று எந்த இடத்திலும் யாராலும் சொல்லப்படவில்லை. அதுமட்டுமல்ல ஸம்யக்ஞானத்திற்கு ஸாதனமாக பரமஸாத்விக பாவத்தை உண்டு பண்ணுகின்றதால் இப்பேர்ப்பட்ட மஹத்தான பலனை விடவேண்டுமென்பதற்கு காரணமும் இல்லை.

**358.** அவதாரிகை : இதுவரை ஞானத்திற்கு ஸாதனம் என்ன என்பதைப் பற்றி சொல்லப்பட்ட விஷயம் இப்போது முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

ச்லோகம் :

उक्तं साधनजातमत्र सकलं विद्यासमुत्पत्तये यस्मिन्कर्मणि वैदिकेन विधिना नुन्नः परिव्राजकः ।
कर्तुत्वाद्युपमर्दनेन भवता विद्यानुकूलात्मना कर्तव्यं तदशेषतस्तदनु ते विद्या विपाकं व्रजेत्

**ச்லோகார்த்தம் :** எந்த ஸாதனங்களை அனுஷ்டிப்பதற்காக பரிவ்ராஜகனுனவன் வேதவிதியினுல் ப்ரேரிக்கப்படுகின்ருனே அந்த ஸாதனங்கள் அனைத்தும் இங்கு வித்யோத்பத்திக்காக சொல்லப்பட்டது. ஞானத்திற்கு அனுகூலமாக இருக்கின்ற க்ர்த்ருத்வாதி நாசத்தின்மூலம் இந்த ஸாதனங்களானது பூர்ணமாக அனுஷ்ட்டிக்கப்படவேண்டும். அதனுல் வித்யையானது பக்குவமாகின்றது.

**வ்யாக்யானம் :** இதுவரை மூன்ருவது அத்யாயமான ஸாதன அத்யாயம் என்பது பஹிரங்கம், அந்தரங்கம் என்ற ஸாதனங்களை அனுஷ்டிக்க வேண்டும் என்ற விஷயத்தை தெரிவித்து முடிவு பெறுகிறது. இதனுல் என்ன அறியப்படுகிறது என்ருல், இரண்டு விதமான ஸாதனங்களும் ஞானத்திற்கு உபயோகமாகிறது என்ருலும், யஞ்ஞாதிகர்மாக்கள் சித்தசுத்தி த்வாராஞானத்திற்கு பரம்பரையாக ஸாதனமாகிறது என்றும் ஸமதமாதிகள் ஞானத்திற்கு நேரிடையாகவே ஸாதனமாகிறது என்றும் தெரிவிக்கப்பட்டது. கர்மாவை, கர்த்ருத்வ, போக்த்ருத்வமுள்ளவனுக இருந்து செய்யாமல் வேதத்தில் விதிக்கப்பட்டிருப்பதால் அவைகளைச் செய்யவேண்டுமென்று செய்யப்படுமானுல் அவிக்ரியமான ப்ரஹ்மாத்ம் ஞானத்திற்கு காரணமான பலபரிபக்குவம் ஏற்படுகிறது. அவ்விதம் செய்யப்பட்ட கர்மா அகர்த்தா அபோக்தா என்ற ஞானத்திற்குப்ரபந்தமாக ஆகிறது. இவ்விதம் நிஷ்காமமாக கர்மாவைச் செய்பவனே பரிவ்ராஜகனுக ஆகிருன். பரிவ்ராஜகன் ஸமதமாதிகளை சிரவணுதிகளைமட்டுமே அனுஷ்ட்டிக்க வேண்டும். கர்மாவில் அதிகாரமில்லை. ஆகவே க்ரமமாகபஹிரங்க, அந்தரங்க ஸாதனங்களை அனுஷ்ட்டிக்க வேண்டும். ஸம்யஞானம் என்ற பலன் ஏற்படும் பர்யந்தம் அனுஷ்டிக்கப்படவேண்டும். ஆகவே ஸன்யாஸி ஸமதமாதிகளுடன் ச்ரவணுதிகளை செய்யவேண்டுமென்பதே இதன் கருத்து.

**359. அவதாரிகை :** பரிவ்ராஜகன் ச்ரவணுதி அந்தரங்க ஸாதனங்களைச் செய்தால்தான் வித்தை பரிபாகத்தை அடைய முடியும் என்றுசொல்லப்படுமானுல், மற்றுமுள்ள வானப்ரஸ்தாச்ரமம், க்ரஹஸ்தாச்ரமம். ப்ரஹ்மசர்யம் முதலான ஆச்ரமிகளுக்கு பரிபக்வம் இல்லையென்று சொல்லப்பட்டதாக ஆகிறது. அதனுல் மற்றவர்களால் செய்யப்படும் ச்ரவணுதிகள் உபயோகமற்றது என்று அர்த்தம் செய்ய நேரிடுமே? என்ருல்,

**ச்லோகம் :**

वानप्रस्थगृहस्थनैष्ठिक जनैरन्यैश्च वर्णाश्रमैः कर्मव्यध्वनिषेवितं भवति वै जन्मान्तरे पाचकम् ।
विद्यायाः श्रवणादिलक्षणमिदं न ह्येतदेषां क्वचिच्छास्रेण प्रतिषिद्धममीक्षितमिदं शूद्रस्य दृष्टं यथा

**ச்லோகார்த்தம் :** ப்ரஹ்மசாரி, க்ருஹஸ்த்தன்வான ப்ரஸ்த்தன் இவர்களாலும் மற்றவர்ணுச்ரமங்களில் இருப்பவர்களாலும் கர்மங்களுக்கு இடையே அனுஷ்ட்டிக்கப்படுகின்ற இந்த சிரவணுதி ஸாதனங்களானது ஜன்மாந்தரத்தில் வித்யையை பக்குவமாகச் செய்கின்றது. எவ்வாறு சூத்ரனுக்கு நிஷேதம் செய்யப்படுவதாக அறியப்படுகிறதோ அதுபோல் இவர்களுக்கு இந்த ச்ரவணுதி ஸாதனங்கள் சாஸ்திரத்தில் நிஷேதம் செய்யப்படுவதாக அறியப்படவில்லை.

**வ்யாக்யானம் :** ப்ரஹ்மசாரி, வானப்ரஸ்த்தன், க்ருஹஸ்த்தன் என்பவர்கள் அவரவர் கர்மானுஷ்ட்டானங்களை முறைப்படி அனுஷ்டித்து வேதாந்த ச்ரவணுதிகளைச்

செய்தபோதிலும், பரமஹம்ஸமென்ற பரிவ்ராஜகனுக ஆவதற்கு உரிய பரிபக்குவம் ஏற்படவில்லையென்ருல், பலபர்யந்தமுள்ள ஞானம் சித்திப்பதற்கு முடியாது. ஞானத்திற்கு முக்யஸாதனம் ஸன்யாஸம் ஸன்யாஸமின்றி செய்யப்படும் ச்ரவணுதிகள், அடுத்துவரும் ஜன்மாக்களில் த்ருடமான வைராக்யம் ஏற்பட்டு ஸன்யாஸ ஆச்ரமத்தை ஸ்வீகரித்து, பலபர்யந்தம் ச்ரவணுதிகளைச் செய்வதற்கு காரணமாக ஆகலாம். ஆத்மஞானம் த்ருஷ்டபலமாக இருக்கின்றது என்பதால் ஸன்யாஸிக்கே அதிகாரம் என்று சொல்லப்படுகிறது. மற்றவர்களுக்கு ஆத்மஞானத்தில் அதிகாரம் இல்லையென்று சொல்லப்படாததால் எல்லோருக்கும் அதிகாரம் உண்டு. ஆனுல் ஸன்யாஸம் என்பது, ப்ராஹ்மண, க்ஷத்ரிய, வைச்யன் என்ற மூன்று வர்ணத்தார்களுக்கு மட்டுமே விதிக்கப்பட்டிருக்கின்றது. அதனுல் சூத்ரர்களுக்கு வேதாத்யயனம் ஸன்யாஸம் என்பதெல்லாம் நிஷேதம் செய்யப்பட்டிருக்கின்றது. ஆனுல் சூத்ரர்களுக்கு வேதாத்யயனம் முதலானவைகள் எப்படி ப்ரதிஷேதம் செய்யப்பட்டிருக்கிறதோ அதுபோல் ச்ரவணுதிகளைச் செய்யக்கூடாது என்று நிஷேதம் செய்யப்படவில்லை. அதனுல் ச்ரவணுதிகளில் எல்லோருக்கும் அதிகாரம் உண்டு.

**360.** அவதாரிகை : பரிவ்ராஜகன் என்பதே இல்லாததால் பரிவ்ராஜகனுக்கே அதிகாரம் என்று எப்படிச்சொல்லமுடியும் ?

ச்லோகம் :

सर्वश्रुतिस्मृतिवचोभिरयं परिव्राण्मुण्डः शुचिः परमहंस इति प्रसिद्धः ।
ज्ञानाय साधनधनेषु नियुज्यमानः प्रायेण बुद्धिपरिपाकमवाप्स्यतीह

ச்லோகார்த்தம் : அனைத்து ச்ருதி ஸ்ம்ருதி வாக்யங்களாலும் ஞானத்தை உத்தேசித்து, இந்த ஸாதனங்களில் ப்ரேரரிக்கப்பட்டவனும், பரிவ்ராஜகன், முண்டிதன் சுத்தன், பரமஹம்ஸன் என்று ப்ரசித்தி பெற்றவனுமான இந்த ஸன்யாஸியானவன் பெரும்பாலும் இந்த ஜன்மாவிலேயே ஞானபரிபாகத்தை அடைகிருன்.

வ்யாக்யானம் : சாஸ்திரங்களில் ஸன்யாஸமே விதிக்கப்படாததால் பரிவ்ராஜகன் என்பதே கிடையாது என்று சொல்லப்படுமானுல் அது சாஸ்திரப்ரமாணத்திற்கே விருத்தம். 'ஸன்யஸ்ய ச்ரவணம் குர்யாத்' என்ற வாக்யம் ஒன்றே இதற்கு போதுமான ப்ரமாணம். கர்மஸன்யாஸம் அவச்யம் என்பதை எத்தனையோவசனங்கள் தெரிவிக்கின்றது. ஆகவே ஸன்யாசியே இதற்கு அதிகாரி என்றும், வைராக்யம் முதலான ஸம்பத்துக்களை உடையவனுக்கே த்ருஷ்டபலமான ஞானம் சித்திக்கும் என்ற தாத்பர்யத்தினையே முக்யமாக சாஸ்திரம் தெரிவிக்கின்றது. வானப்ரஸ்த்தம் முதலான ஆச்ரமத்தினர்களால் ச்ரவணம் முதலானவைகள் செய்யப்படுமானுல் ஜனமாந்தரத்தில்தான் பலன் கிடைக்கும் என்று என்ன காரணத்தினுல் சொல்லப்படுகிறது என்ருல், 'ஸசிகம், வபனம் க்ருத்வாத்ரிவித் சூத்ரம் த்யஜேத் புத: யதக்ஷரம் பரம்ப்ரஹ்ம தத்சூத்ரம் இதிதாரயேத் என்று சொல்லப்படுகிறது. அதாவது புத்திமானுக சிகை, பூணுல் முதலானவைகளைவிட்டு, அக்ஷரப்ரஹ்மமென்று சொல்லப்படுவது எதுவோ, அதையே சூத்ரமாக தரித்து, அந்த ஸ்வரூபத்தை அறியமுயற்சிக்க வேண்டும் என்றும் "முண்டோSபரிக்ரஹ: சுசிரத்ரோஹ:" என்றும் ஜாபால உபநிஷத் முதலான சாஸ்த்ரங்களிலும் ஸ்ம்ருதிகளிலும்

சொல்லப்படுகின்றது. அதாவது சாஸ்திர விஹிதமான கர்மாக்களைச் செய்கின்றபோது சிகை, யஞ்ஞோபவீதம் என்பதெல்லாம் இருக்க வேண்டும் என்று தெரிவிக்கின்றது. ஆகையால் கர்மாக்களைவிட்ட ஸன்யாசிகள் சிகை முதலான எல்லாவற்றையும் த்யாகம் செய்யவேண்டும் என்று சாஸ்திரம் தெரிவிக்கின்றது.

இந்தவிதம் இந்த லோகவிஷயம், பரலோக விஷயம்முதலான ஸர்வ விஷயங்களிலும் இருக்கின்ற இச்சையையும், அதேபோல் தேஹாதிகளிலும், ஜாதிமுதலானவைகளிலும், புத்ராதிகள், தனம் முதலான எல்லாவற்றிலும் உள்ள அபிமானத்தை விட்டுவிடுவதே சுத்தி என்று ஏஷணாத்ரயபரித்யாகம் செய்யவேண்டுமென்று சாஸ்திரம் தெரிவிக்கின்றது. இவ்விதம் ஏற்படும் சித்த சுத்தியினால்தான் ஞானம் ஏற்படவேண்டும். அதனால் பரித்யாகம் என்பதே சாக்ஷாத்ஸாதனம். இப்பேர்ப்பட்ட த்யாகத்தினாலேயே மிகத்ருடமான பலமாக இருக்கின்ற ப்ரதிபந்தங்கள் நீங்கும் என்று சொல்லப்படுவதால் ஸாதன ஸம்பத்தியை அடைந்து பரமஹம்ஸ ஆச்ரமத்தை ஸ்வீகரித்து, ஞானஸாதனமான ச்ரவணாதிகளை அனுஷ்டிக்கப்படவேண்டும் என்று சாஸ்திரம் நேரிடையாகவே விதிக்கின்றது. ஆகவே, இவ்விதம் அனுஷ்டிக்கின்ற ஸன்யாஸிக்கே இந்த ஜன்மாவிலேயே சாக்ஷாத்கார ஞானம் ஏற்படுகிறது. இதுவே உத்கர்ஷம் என்பதை அறிந்து ஸத்குணஸம்பன்னனாக இருப்பவனே ஞானியாக இருக்கின்றான் என்பது த்ருஷ்டமாகவே (ப்ரத்யக்ஷமாகவே) அறியப்படுகிறது.

இந்தவிதம் ஞானபரிபாகத்திற்கு ஸன்யாஸ ஆச்ரமமே சிறந்தது என்பதால் மற்ற ஆச்ரமங்கள் அவ்விதம் உத்கர்ஷம் இல்லையென்பதும் இதனால் தெரிவிக்கப்பட்டது.

**361.** அவதாரிகை : அப்படியானால், க்ருஹஸ்தனான ஜனகருக்கு ச்ரவணாதிகளால் அபரோக்ஷசாக்ஷாத்காரம் ஏற்பட்டது என்று சாஸ்திரங்களில் சொல்லப்படுகிறதே? அதனால் பரிவ்ராஜகனுக்கே ஞானம் ஏற்படும் என்று சொல்லப்படுவதற்கு காரணம் என்ன?

ச்லோகம் :

जन्मान्तरेषु यदि साधनजातमासीत्संन्यासपूर्वकमिदं श्रवणादिरूपम् ।
विद्यामवाप्स्यति जनः सकलोऽपि यत्र तत्राऽऽश्रमादिषु वसन्न निवारयामः

ச்லோகார்த்தம் : பூர்வ ஜன்மங்களில் ஸன்யாஸ பூர்வகமாக இந்த ச்ரவணாதி ஸாதனங்கள் அனுஷ்டிக்கப்பட்டிருந்தால் இந்த ஜன்மத்தில் அவர்கள் எந்த ஆச்ரமத்தில் இருப்பவரானாலும் ஞானத்தை அடைகிறார்கள் அதை நாங்கள் நிஷேதிப்பதில்லை.

வ்யாக்யானம் : ஸன்யாஸ பூர்வகமான ச்ரவணாதிகளினால்தான் அபரோக்ஷசாக்ஷாத்காரம் என்ற ஞானம் (பலவத்தாக ஆகமுடியும்) ஏற்படமுடியும் என்பதாலேயே சாஸ்திரங்களில் ஸன்யாஸ ஆச்ரமத்தை அவஸ்யம் ஸ்வீகரிக்கவேண்டுமென்று விதிக்கப்படுகிறது. அதனால் ஸன்யாஸ ஆச்ரமத்திற்கே விசேஷம் இருப்பதாக வேதவாக்யம் தெரிவிக்கின்றது. ஆனால் ஜனகரைப்போன்று ஸன்யாஸ ஆச்ரமம் இல்லாமலேயே அபரோக்ஷசாக்ஷாத்காரம் ஏற்படுமானால் முன் ஜன்மாவிலேயே ஸன்யாஸ ஆச்ரமத்தை ஸ்வீகரித்து ச்ரவணாதிகளையும், ஸமதமாதிகளையும் அனுஷ்டித்திருக்க வேண்டும் என்று இப்போது ஏற்பட்டிருக்கும் ஞானத்தைக்

கொண்டு (கார்யத்தைக் கொண்டு) காரணத்தை அனுமானிக்கின்றோம். அவ்விதம் இல்லையென்றால் எவராலும் விரும்பப்படாத ஸன்ஸாஸ ஆச்ரமத்தை வேதம் ஏன் விதிக்க வேண்டும்? ஆகவே, அனுமானத்தினால், முன்ஜன்ம ஸாதனங்களினால் இந்த ஜன்மாவில் ஞானம் பரிபக்வமடைந்திருக்கிறது என்றே அறியவேண்டும்.

**362.** அவதாரிகை : ஞானத்திற்கு முக்யஸாதனமாக ஸன்யாஸம் என்பது நியமமாக சாஸ்திரத்தினால் விதிக்கப்பட்டிருக்கிறது என்பதற்கு ச்ருதிவாக்யங்களே ப்ரமாணம்.

ச்லோகம் :

वेदान्तविज्ञानसुनिश्चितार्थाः संन्यासयोगाद्यतयः शुद्धसत्त्वाः ।
ते ब्रह्मलोकेषु परान्तकाले परामृताः परिमुच्यन्ति सर्वे

**ச்லோகார்த்தம் :** சித்த, சுத்தியை அடைந்தயதிகள், ஸன்யாச யோகத்தினால் வேதாந்த ஜன்ய ஞானத்தின் விஷயமான ப்ரஹ்மஸ்வரூபத்தை நிச்சயம் செய்கின்றார்கள். அவர்கள் அனைவரும் ப்ரஹ்மலோகத்தில் பராம்ருத ப்ரஹ்மரூபமாகவேஇருந்துகொண்டு (மேலான அம்ருத வடிவமாக இருந்துகொண்டு) (ப்ரஹ்மாவின் விநாசகாலத்தில் பராந்த காலத்தில் ஸர்வத்திலிருந்தும் விடுபட்டு பரிபூரண முக்தியை அடைகின்றனர்.

வ்யாக்யானம் : எவர்கள் பூர்வம் சுத்த ஸத்வமாக இருந்து ஸன்யாஸபூர்வமாக ச்ரவணம் செய்து வேதாந்த விஞ்ஞானத்தில் த்ருட நிச்சயம் உடையவர்களாக இருக்கின்றார்களோ அவர்களுக்கு பூர்ணஞானம் கிடைத்தே ஆகவேண்டும். 'பரிமுச்யதீரா:' என்று முண்டகோபநிஷத்வாக்யம் தெரிவிக்கின்றது. முன்னால் ஈச்வரார்ப்பணமாகச் செய்யப்பட்ட கர்மாவினால் சித்த சுத்தி ஏற்பட்டு ஸன்யாஸ பூர்வமாக ச்ரவணாதிகளைச் செய்து மஹாவாக்யார்த்தபோதம் த்ருடமாக ஏற்பட்டவனே பரமானந்த நிலையை அடைகின்றான் என்பதில் எள்ளளவும் ஸந்தேஹத்திற்கிடமில்லை. ஒரு ஸமயம் இவ்வித ஸாதனங்களைச் செய்து வருகின்றபோது, ஏற்பட்ட ஞானம் த்ருடப்படாமல் இருக்கின்றபோது மரணம் ஏற்படுமனால், ப்ரஹ்மலோகம் சென்று, அங்கு ஹிரண்யகர்ப்பரால் உபதேசிக்கப்பட்டு ஸர்வதுக்கங்களிலிருந்தும் விடுபடுகிறான் என்று சரஸ்திரமே தெரிவிக்கின்றது.

**363.** அவதாரிகை : ச்ருதி, ஸ்ம்ருதி, வாக்யங்களைப்போல இதிகாஸம் என்பது ப்ரமாணம் என்று சொல்லப்படுவதால், இதிகாஸ வாக்யத்தையும் இந்த விஷயத்தில் ப்ரமாணமாக தெரிவிக்கப்படுகிறது.

ச்லோகம் :

नैतादृशं ब्राह्मणस्यास्ति वित्तं यथैकता समता सत्यता च ।
शीलं स्थितिर्दण्डनिधानमार्जवं ततस्ततश्चोपरमः क्रियाभ्यः

ச்லோகார்த்தம் : தனிமை, ஸத்யத்வம் ஸமத்வம், பண்பு ஒழுக்கம் அஹிம்ஸை, நேர்மை, ஸர்வகர்ம நிவர்த்தி என்ற இவைகளுக்கு ஸமானமாக வேறு செல்வம் என்பது எதுவும் ப்ராஹ்மணனுக்கு கிடையாது.

வ்யாக்யானம் : வித்தம், ஏகதா, ஸமதா, ஸத்யதா, சீலம், ஸ்திதி:, தண்டநிதானம், ஆர்ஜவம், இவைகளுடன் கூடினவனாக இருந்து தத்வத்தை அறியவேண்டுமென்று இதிகாஸ வாக்யங்கள் தெரிவிக்கின்றது. அதாவது, 'வித்தம்' என்பதால், தனம் முதலான ஸாதனங்கள் எல்லாவற்றிலும் வைராக்யத்தை அடையவேண்டுமென்றும், 'ஸமம்' என்பதால் ஸர்வப்ராணிகளிடத்திலும் அத்வயமான ஆத்ம ஸ்வரூபமே இருக்கின்றதென்று அறிந்து ஸர்வத்திலும் ஸமபாவமுடையவனாகவும், ஸத்யவசனங்களையே பேசுபவனாகவும் நல்லொழுக்கத்துடன் எல்லோரிடமும் மரியாதை உடையவனாக இருந்து அஹிம்ஸையை கடைபிடித்து வஞ்சனை அற்றவனாக இருப்பதுடன், தனித்து இருந்து ஏகமாக தத்வத்திலேயே மனதைச் செலுத்தி ஸர்வ பூதங்களுக்கும் அபயமளித்து ஆர்ஜவம் என்பதை (மனம் வாக்கு செயல் என்பவைகள் மூன்றும் ஒன்றாக இருக்கவேண்டும்) அனுஷ்டிக்கவேண்டும் என்றும், ஐஹிகம், ஆமுஷ்மிகம் என்ற இஹலோக பரலோக பலங்களில் உபரதம் அடைந்து ஸர்வ விவகாரங்களிலும் ஔதாசீன்யமாக இருக்கவேண்டும் என்று தெரிவிக்கின்றதனாலேயே ஸன்யாஸ ஆச்ரமத்தையே விதிக்கின்றது என்று மிகவும் ஸ்பஷ்ட்டமாக அறியப்படுகிறது.

**364.** அவதாரிகை : ஸர்வக்ரியைகளிலிருந்தும் உபரமத்தை அடைவதால் ஏற்படும் பலன் என்னவென்று உதாகரணத்தின்மூலம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

यतो यतो निवर्तते ततस्ततो विमुच्यते ।
निवर्तनाद्धि सर्वतो न वेत्ति दुःखमण्वपि

ச்லோகார்த்தம் : எந்த விஷயங்களிலிருந்து ஒருவன் நிவர்த்திக்கின்றானோ அந்த விஷயங்களிலிருந்து முக்தியை அடைகிறான். ஸர்வ விஷயங்களிலிருந்தும் நிவர்த்திப்பானாகில் அவன் துக்கலேசத்தையும் அனுபவிப்பதில்லை.

வ்யாக்யானம் : எந்தக்கார்யத்திலிருந்து உபரமத்தை அடைகின்றேனோ, அவனுக்கு அந்த கார்யத்தினால் ஏற்படும் துக்கம் நிவர்த்திக்கின்றது என்பது எல்லோரும் அனுபவத்தினால் அறிந்த உண்மை. ஆகவே, ஸர்வ வ்யவஹாரங்களில் இருந்தும் உபரமத்தை அடைவானாகில் அவனுக்கு எவ்வித துக்கமும் ஏற்படாது. ஆகவேநிவர்த்தி என்பதே துக்கத்திலிருந்து விடுபடுவதற்கு உபாயம் என்பது சித்தம்.

**365.** அவதாரிகை : இதே விஷயம் மேலும் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

किं ते धनेन किमु बन्धुभिरेव वा ते किं ते दारैर्ब्राह्मण यो मरिष्यसि ।
आत्मानमन्विच्छ गुहां प्रविष्टं पितामहास्ते क्व गताः पिता च

ச்லோகார்த்தம் : ஹே! ப்ராஹ்மண! மரணமடையப்போகின்ற உனக்கு தனத்தினாலோ, பந்துக்களாலோ, மனைவியாலோ என்ன ப்ரயோஜனம்? புத்தி குகையில் இருக்கின்ற ஆத்மாவை தேடுவாயாக. உன் பிதா, பிதாமஹர்கள் எல்லோரும் எங்கு சென்றார்கள் (அதேபோல் நீயும் போகவேண்டுமானதால்) ஸ்வஸ்வரூபத்தை தேடி அடைவாயாக.

வ்யாக்யானம் : அநித்யமானதனத்தினுலோ, புத்ரமித்ராதிகளினுலோ, எந்த பலனும் கிட்டாது. ஏனெனில் நம், முன்னோர்களான பிதா, பிதாமகன் என்ற எல்லோரும் எப்படி மரணம் அடைந்தார்களோ அதுபோல் மரணம் என்பது எந்த ஸமயத்திலும் ஏற்படும் என்பது நிச்சயமாக அறியப்படுகிறது. அதனுல், தனம் முதலான ஸர்வத்தையும் பரித்யாகம் செய்து ஹ்ருதயகுகையில் ப்ரவேசித்து புத்தியில் ப்ரகாசிக்கின்ற உன்னுடைய உண்மையான ஸ்வரூபத்தை அறிய முயற்சிக்கவேண்டும். அதுவே அக்ஷய்யமான சுகம் என்பதால் அந்த சுகத்தையே ப்ரயத்னம் செய்து அடையவேண்டும்.

**366.** அவதாரிகை : மேலும்,

ச்லோகம் :

अर्थस्य मूलं निकृतिः क्षमा च कामस्य रूपं च वयो वपुश्च ।
धर्मस्य यागादि दया दमश्च मोक्षस्य सर्वोपरमः क्रियाभ्यः

ச்லோகார்த்தம் : தனப்ராப்திக்குக் காரணம் வஞ்சனையும் பொறுமையும் ஆகும். காமத்திற்கு காரணம் அழகும், யௌவனமும் சரீரமும் ஆகும். தர்மத்திற்கு மூலம் யாகாதிகளும் தயையும், இந்த்ரியநிக்ரஹமும் ஆகும். மோக்ஷத்திற்குமூலம் ஸர்வக்ரியைகளிலிருந்தும் நிவர்த்தியே ஆகும்.

வ்யாக்யானம் : தனம் முதலான அர்த்தங்களை ஸம்பாதிக்க வேண்டுமானுல் மானுபிமானங்களைவிடவேண்டும். அதன் பொருட்டு யார் எதைச்சொன்னுலும் பொறுத்துக்கொள்ளவேண்டும். காமம் முதலானவைகளில் ஈடுபடுவதற்கு வயஸ் என்பதும் சரீரத்ருடமும் இருக்கவேண்டும். தர்மகார்யங்களைச் செய்வதால் புண்யலோகாதிகள் கிடைக்கும் என்ருலும் அவைகளும் அநித்யம் என்பதால் இவைகளினுல் எவ்வித சுகமும் ஏற்படாது என்று விவேகித்து அறியவேண்டும். இந்தவிதம் தர்மார்த்த காமம் என்ற மூன்றும் அடைவதற்கு எவ்வளவோ ஸாதனங்கள் இருந்தபோதிலும், மோக்ஷம் என்ற புருஷார்த்தத்திற்கு ஸர்வக்ரியா உபரதம் என்பதே ஸாதனம் என்றும் அதனுல் ஸர்வ உபரதம் இன்றி தத்வார்த்தம் அறியமுடியாது என்று அறியவேண்டும். இதே விஷயத்தையே, நகர்மணு, நப்ரஜயா . . . . என்றச்ருதிவாக்யம் ஆத்மஞானம் என்பதை அடைவதே மோக்ஷமென்ற புருஷார்த்தம் என்று தெரிவிக்கின்றது. இதைத் தவிர வேறு மார்க்கம் எதுவுமில்லையென்பதையே "தமேவம் விதித்வா அதிம்ருத்யுமேதி ந அன்ய: பந்தா வித்யதே அயனுய" என்ற ச்ருதிவாக்யம் தெரிவிக்கின்றது.

இந்தவிதம் ஸ்ரீதேவேச்வர பூஜ்யபாத சிஷ்யரான ஸர்வஞ்ஞாத்மபட்டரக மஹா முனிவரால் இயற்றப்பட்ட ஸாதனலக்ஷணம் என்ற மூன்ருவது அத்யாயம் முடிவுற்றது.

இந்த க்ரந்தத்திற்கு ஸ்ரீக்ருஷ்ண தீர்த்தரின் சிஷ்யரான ராமதீர்த்தரின் ஸம்க்ஷேபசாரீரகத்தின் டீகாவான அன்வயார்த்த ப்ரகாசிகை என்ற மூன்ருவது அத்யாயத்தின் வ்யாக்யானம் முடிவுற்றது.

## ஸம்க்ஷேபசாரீரகம் நான்காவது அத்யாயம்

**1.** அவதாரிகை : இந்தவிதம் ஸாதன விசார அத்யாயம் முடிவுபெற்றது. இப்போது பலவிசார அத்யாயம் ஆரம்பிக்கப்படுகிறது. இந்த அத்யாயத்திலும் சிஷ்யனுடைய ப்ரச்னத்தை முகாந்தரமாகக் கொண்டுகுருவினுல் பதில்சொல்லப்படுகிறது.

**ச்லோகம் :**

उक्तसाधनसमुद्भवा सती किं प्रयच्छति फलं मुमुक्षवे ।
प्रत्यगात्ममतिरत्र मे मनस्यर्थिता समुपजायतेऽधुना

**ச்லோகார்த்தம் :** முன்பு சொல்லப்பட்ட ஸாதனைகளிலிருந்து ஏற்பட்ட ப்ரத்யகாத்ம ஞானமானது, முமுக்ஷுவிற்கு என்ன பலத்தைக் கொடுக்கின்றது என்ற விஷயம் பற்றி அறியவேண்டுமென்ற இச்சை எனக்கு இப்போது ஏற்பட்டிருக்கிறது.

**வ்யாக்யானம் :** இதுவரை சொல்லப்பட்ட ஸமஸ்த்த ஸாதனங்களையும் அனுஷ்டித்து சித்த சுத்தியை அடைந்து அதனுல் ஒருவன் ப்ரத்யகாத்ம ஞானத்தை அடைவானுகில் லோகத்தில் எந்த ஒரு ஸாதனத்தினுல் எந்த பலன் ஏற்படுகிறதோ அதனுல் ஏற்படும் பலன் என்ன? அவையெல்லாமே அநித்யமாகத்தானே இருக்கிறது. இதேபோல் ப்ரஹ்மவித்யை என்ற ஸாதனத்தினுல் அடையப்படும் பலன் என்பதும் அநித்யமா, இல்லையா? என்று அறிய விரும்புகிறேன்.

**2.** அவதாரிகை : மற்றுமொருப்ரச்னம் :

**ச்லோகம் :**

किं निरस्तसहकारिकारणा केवलैव फलमर्पयेन्मतिः ।
बाह्यसाधनसहायसंपदा वाऽन्विता फलविधायिनी भवेत्

**ச்லோகார்த்தம் :** ப்ரத்யகாத்மஸ்வரூபஞானம், ஸஹகாரிகாரணம் எதுவும் இல்லாமலேயே பலத்தைக் கொடுக்கின்றதா அல்லது பாஹ்யஸாதன ஸஹாயங்களின் பலத்தினுல் பலத்தைக் கொடுக்கின்றதா என்பதை அறிய விரும்புகிறேன்.

**வ்யாக்யானம் :** வித்யை என்பது மோக்ஷபலனை கொடுக்கின்ற விஷயத்தில் கர்மா, உபாஸனம் என்பவைகளை ஸஹகாரி கார்யமாக அபேக்ஷிக்கின்றதா இல்லையா என்று தெரிவிக்கவேண்டுகிறேன்.

**3.** அவதாரிகை : மோக்ஷ ஸாதனமான ப்ரஹ்மஞானம் ஏற்படுவதற்கு என்ன ஸாதனம் என்பதை மேலும் அறிய விரும்புகிறேன் என்று உபஸம்ஹாரவ்யாஜமாகப்ரசனம் செய்யப்படுகிறது.

**ச்லோகம் :**

एतदप्यहमवैतुमुत्सहे निर्णयं कुरु कृपाविधेयधीः ।
एतदेव हि दयालुलक्षणं यद्विनेयजनबुद्धिवर्धनम्

ச்லோகார்த்தம் : இவ்விதம் இரண்டு விஷயங்களிலும் ஏற்படுகின்ற ஸந்தேஹங்களை நிவர்த்தித்து நிச்சயமான விஷயத்தை அறிய விரும்புகிறேன். ஆகவே சிஷ்யனுடைய புத்தியை வ்ருத்தி செய்வதே தயாளுவான குருவின் லக்ஷணம், க்ருபையினுல் வசீகரிக்கப்பட்ட புத்தியையுடைய தாங்கள் இதை நிர்ணயம் செய்து தெரிவிக்க வேண்டுகிறேன்.

வ்யாக்யானம் : மோக்ஷத்திற்கு ஆத்மஞானமே ஸாதனம் என்று சொல்லப்பட்டது. ஆனுலும் ஞானத்துடன் வேறு ஏதாவது ஸாதன அபேக்ஷை இருக்கின்றதா என்று அறிய விரும்புகிறேன். இவ்விதம் அடிக்கடி ப்ரச்னம் செய்வதால் குருவிற்கு ஏதாவது ஆயாஸம் ஏற்படுமோ என்ற பயத்தினுல், தன்னைக்ஷமித்து இந்த ப்ரச்னத்திற்கு பதில் தெரிவிக்க வேண்டுமென்று சிஷ்யன் மிக்க விநயத்துடன் வேண்டுகிருன் க்ருபை என்பதையே ஸ்வரூபமாகக் கொண்ட குருவானவர், தயையினுல் இந்த ப்ரச்னத்திற்கு பதில் தெரிவிக்க ஆரம்பிக்கின்ருர்.

**4.** அவதாரிகை : குருவின் உத்தரம்

ச்லோகம் :

उच्यते न तमसो निवृत्तितः किंचिदस्ति परमात्मधीफलम् ।
अन्यदल्पमपि साधनान्तरं न व्यपेक्ष्य फलदायिनी च धीः

ச்லோகார்த்தம் : இந்த ப்ரச்னத்திற்கு பதில் சொல்லப்படுகிறது. அஞ்ஞான நிவர்த்தி என்பது ஒன்றே பரமாத்மஞானத்திற்கு பலம். வேறு எதுவும் அதற்கு பலமில்லை. ஞானம் என்பது வேறு எந்த ஸாதனத்தையும் அபேக்ஷிக்காமலேயே பலனைக் கொடுக்கின்றது.

வ்யாக்யானம் : அஞ்ஞான நிவர்த்தி என்பதையன்றி வித்யைக்கு பலமாக வேறு எதுவுமில்லை என்பது லோகப்ரசித்தம். ஆகவே, ஆத்ம அஞ்ஞானம் என்பதை ஆத்மஞானம் நிவர்த்திக்கின்றது என்பதைத் தவிர அந்த வித்யையினுல் உற்பத்தி செய்யக் கூடிய வஸ்துவோ, போக்கக்கூடிய வஸ்துவோ எதுவுமில்லை. இவ்விதம் ஞானம் என்பது அஞ்ஞானநிவர்த்திக்காகவேறுஸஹகாரிகார்யம் எதையும் அபேக்ஷிக்கின்றதில்லை. ஆத்மஞானம் ஸ்வயமே அதன் பலனுன அஞ்ஞான நிவர்த்தியைச் செய்கின்றது வேறு ஸாதன அபேக்ஷை கிடையாது.

**5.** அவதாரிகை : இந்த விஷயம் உதாகரணத்தின்மூலம் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

शुक्तिकाविषयबुद्धिजन्मनः शुक्तिकागततमोनिवृत्तितः ।
नापरं किमपि दृश्यते फलं नापरं च सहकारि कारणम्

ச்லோகார்த்தம் : (கிளிஞ்சல் என்பது ப்ராந்தியினுல் வெள்ளியாக தோன்றுமிடத்தில்) கிளிஞ்சல் என்ற ஞானேற்பத்தியினுல், கிளிஞ்சல் விஷயகமான அஞ்ஞானம் நிவர்த்திப்பதைத்தவிர வேறுபலன் காணப்படுவதில்லை. அந்த ஞானத்திற்கு ஸஹகாரிகாரணம் எதுவும் இருப்பதாக அறியப்படவில்லை.

வ்யாக்யானம் : கிளிஞ்சலின் உண்மையான ஸ்வரூபம் அறியப்படாமல் மறைக்கின்ற அஞ்ஞானம், கிளிஞ்சல் என்ற ஞானம் ஏற்பட்டவுடன் எப்படி நிவர்த்திக்கின்றதோ அதுபோல, எந்த விஷயகமான அஞ்ஞானம் இருக்கின்றதோ, அந்த அஞ்ஞானம், அந்த விஷயகமான ஞானத்தினுல் நிவர்த்திக்கின்றது. அதேபோல் அந்த ஞானம் என்பதும் வேறு எதையும் அபேக்ஷிக்காமலேயே அதன் பலனுன அஞ்ஞான நிவர்த்தியைச் செய்கின்றது. ஆகவே சொல்லப்பட்ட உதாகரணத்தினுல் வேதாந்த வாக்யஜன்யஞானம் என்பது ஆத்மஸ்வரூப ஆவாரகமான அஞ்ஞானத்தை நிவர்த்திக்கின்ற விஷயத்தில் வேறு ஸாதனுந்தரத்தை அபேக்ஷிப்பதில்லை என்று வ்யாப்தியைக் கொண்டு இந்த விஷயம் விளக்கப்பட்டது.

6. அவதாரிகை : இந்த விஷயம் அனுமானம் என்ற ப்ரமாணத்தினுல் விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

एवमात्मनि तमोनिवृत्तितो नान्यदस्ति परमात्मधीफलम् ।
नाप्यपेक्ष्य सहकारि कारणं किंचिदात्ममतिरर्पयेत्फलम्

ச்லோகார்த்தம் : இவ்விதம் ஆத்மவிஷயகமான அஞ்ஞான நிவர்த்தி என்பதைத் தவிர வேறு எதுவும் பரமாத்மஞானத்திற்கு பலமாக இல்லை. இந்த ஆத்ம ஞானம், ஸஹகாரி காரணம் எதையும் அபேக்ஷிக்காமலேயே பலனை கொடுக்கின்றது.

வ்யாக்யானம் : இவ்விதம் "முன்னுல் வ்யாப்தியை தெரிவித்தபிறகு அனுமானத்தை தெரிவிக்கின்றுர்." ஆத்மஞானம், ஆத்மவிஷயகமான அஞ்ஞானத்தை நிவர்த்திப்பது என்ற ஒன்றையே பலமாக கொண்டது. அந்த ஞானம், தன் விஷயத்தில் (அஞ்ஞான நிவர்த்தி என்ற விஷயத்தில்) ஸஹகாரிகாரணமாக வேறு எதையும் அபேக்ஷிப்பதில்லை. ஏனெனில் அதிஷ்டானத்தைப் பற்றிய யதார்த்த ஞானமாக இருப்பதால், சுக்தி என்ற யதார்த்த ஞானம் போல" என்று அனுமானத்தினுலும் இந்த விஷயம் சித்திக்கின்றது.

எவ்விதம் சுக்தி என்ற யதார்த்தஞானம், சுக்தி அஞ்ஞான நிவர்த்தி என்ற ஒன்றையே பலமாகக் கொண்டும், சுத்தி என்ற யதார்த்த ஞானத்தையன்றி வேறு எதையும் அந்த அஞ்ஞான நிவர்த்திக்காக அபேக்ஷிக்கவில்லையோ அதுபோல் ஆத்மஞானமும் எதையும் அபேக்ஷிக்கவில்லை என்றே அறியப்படவேண்டும்.

7. அவதாரிகை : ப்ரஹ்மஞானம் என்பதும் மற்ற வித்யைகளைப் போன்ற ஒரு வித்யை என்றே சொல்லவேண்டும். உண்மையில், ப்ரஹ்மாத்மபாவமான ஐக்யம் என்று சொல்வது ஸம்பவிக்கமுடியாது. அதனுல் ப்ரஹ்மமே ஆத்மா என்று ஸம்பத் உபாஸனையையே வேதாந்த வாக்யம் போதிக்கின்றது. உபாஸனுவாக்யங்கள் அப்ரமாணமானதால் அஞ்ஞான நிவர்த்தகத்வம் ப்ரமாணம் என்று எப்படிச் சொல்வது ? அதேபோல் ஸாதிசய மோக்ஷஸாதனமாக இருப்பதால் ஸாதனுந்தர அபேக்ஷைஇல்லையென்று (அனபேக்ஷத்வம்) எவ்விதம் சொல்லமுடியும் ?

ச்லோகம் : ब्रह्मज्ञानं प्रमाणं भवति दृढमिदं नात्र कश्चिद्विवादो
ब्रह्मात्मा चैकरूपो न च बहुरसकस्तत्परत्वाच्छ्रुतीनाम् ।
एवं सत्यद्वयात्मप्रमितिफलमिह द्वैतमूलापनुत्तिर्न
ह्यज्ञानापनुत्तेरधिकमपि फलं किंचिदस्ति प्रमाणात्

ச்லோகார்த்தம் : ப்ரஹ்மஞானமானது த்ருடமான ப்ராமாண்யம் உடையதாகவே இருக்கின்றது. இந்த விஷயத்தில் விவாதத்திற்கு இடமே கிடையாது. ப்ரஹ்மாத்மா என்பது ஏகரூபமே, நானுரூபமில்லை. ஏனெனில் ஏகரூப ப்ரஹ்மாத்மாவில்தான் ச்ருதிவாக்யங்களுக்கு தாத்பர்யம் என்பதால், அத்வயாத்மஞானத்தின் பலமானது த்வைத மூலத்தை நாசம் செய்வதேயாகும். ப்ரமாணத்தினுல் அஞ்ஞான நிவர்த்தி என்பதைத் தவிர அதிகமான பலன் வேறு எதுவும் ஏற்படாது.

வ்யாக்யானம் : வேதாந்தவாக்யஜன்ய விஞ்ஞானம் ப்ரமாணமாஇல்லையா என்ற விஷயம் முன்பே ஸமன்வய அத்யாயத்தில் விசாரிக்கப்பட்டிருப்பட்டிருக்கின்றது. அதனுல் இவ்வித ஆக்ஷேபத்திற்கு இடமேஇல்லை.

பூர்வ : ப்ராணனே வாயு என்ற உபாஸனையினுல் ப்ராணுத்மபாவம் ஏற்படுகிறது என்று பாவரூபமான விசேஷங்கள், பலமாகச் சொல்லப்படுகிறது. இவ்விதம் சொல்லப்படும் ப்ராணன் முதலான வித்யைப் போல் ப்ரஹ்மவித்யை என்பதும் வித்யையாக இருப்பதால், அவித்யாநிவர்த்தி என்பதை (அபாவரூபமான) பலமாக எப்படிச் சொல்லமுடியும். ஆகையால் "ஆத்மவித்யை என்பது அவித்யாநிவர்த்தி என்பதை பலமாகக் கொண்டது அல்ல. ஏனெனில் வித்யாத்வாத் ப்ராணுதி வித்யாவத்" என்று அனுமானத்தினுல் சாதிக்கின்றேன் (அதாவது ஆத்மவித்யைக்கு அவித்யா நிவர்த்தி என்பது பலமல்ல. எப்படி ப்ராணுதி வித்யைகளுக்கு (அவித்யாநிவர்த்திபோன்ற) அபாவரூபமான பலன் கிடையாதோ அதேபோல் ஆத்ம வித்யை என்பதும் வேதத்தில் விதிக்கப்பட்டவித்யையாக இருப்பதால் அதற்கு அவித்யாநிவர்த்தி என்பது பலமாக இருக்கமுடியாது)

சித்தா : இந்த அனுமானத்தில் "ப்ரமாத்வம் என்பது உபாதி" என்பதால் இது தோஷமுள்ளதாக ஆகிறது. அதாவது ஆத்மவித்யை என்பது ப்ரமாணத்திலிருந்து ஏற்படுகின்றதால் ப்ரமாபூதம். ப்ராணுதிவித்யைகள் என்பது உபாஸனம். அதஸ்மின் தத்புத்தி என்பதால் அதை ப்ரமை என்று சொல்லமுடியாது. அதனுல் உபாஸனம் என்பது ப்ரமாணமில்லையென்பதால், ப்ரமாணஜன்ய ஞானம் பலம் என்று சொல்லமுடியாது. மேலும் ஞானம் என்ருலே அதற்கு அஞ்ஞான நிவர்த்தியென்பதே பலம் என்பது லோகப்ரசித்தம். அவித்யாநிவர்த்தி என்ற பலன் இல்லாவிடில் அந்த இடத்தில் ப்ரமாத்வம் இருப்பதாகச் சொல்லமுடியாது. ஆகவே, ஆத்மவித்யை என்பதும் ப்ராணுதி வித்யைகள் என்பதும், வித்யாத்வம் என்பதில் ஸமமாக இருக்கின்றதாக சொல்லப்பட்டபோதிலும், ஆத்மவித்யை என்பது ப்ரணுதி வித்யைகள் போல் அப்ரமாத்வம் உடையதுஅல்ல. ஆத்மவித்யைக்கு ப்ரமாத்வம் இருக்கின்றது. ஆகவே ஸாத்யவ்யாபகத்வம் இருந்தபோதிலும் ஸாதன அவ்யாபகத்வம் (ப்ரமாத்வம்) இருக்கின்றதால் ப்ரமாத்வம் என்பது இந்த அனுமானத்தில் உபாதி என்பதால் இந்த அனுமானம் தோஷமுள்ளதாகிறது. ப்ராணுதிவித்யைகளில் ப்ரமாத்வம் இருந்தால்

ஸாதன வ்யாபகத்வம் சொல்லலாம். அல்லது ஆத்மவித்யையில் அப்ரமாத்வம் இருந்தாலும் ஸாதன வ்யாபகத்வம் சொல்லலாம். இரண்டுமே இல்லாததால் ஸாதன அவ்யாபகத்வம் இருப்பதால் உபாதி ஸம்பவிக்கிறது.

பூர்வ : ஆத்மவித்யை என்பதும் சாஸ்திரமே போதிக்கின்றது. ப்ராணாதி உபாஸனைகளையும் சாஸ்திரமே போதிக்கின்றது. இவ்விதம் இரண்டுமே சாஸ்திரம் என்ற ப்ரமாணத்தினால்தான் போதிக்கப்படுகிறது என்பதால் இரண்டுமே ப்ரமாணம் என்று சொல்லலாமே ? இவ்விதம் சொல்லப்படுமானால் ஸாத்யவ்யாபகத்வம் என்பதும் இருக்கிறது ஸாதனஅவ்யாபகத்வம் என்பதும் ஸம்பவிக்காது. அதனால் உபாதி தோஷம் ஸம்பவிக்கமுடியாது.

சித்தா : ப்ராணாதி வித்யைகளை ப்ரமை என்று சொல்லமுடியாது. ப்ராணனில் அனேககுணங்கள் கல்பித்து உபாஸனம் செய்யவேண்டுமென்று தெரிவிக்கின்றது. ப்ராணன் என்பது விகாரி. ப்ராணாதி வித்யைகள் புருஷனுடைய அதீனமாகவும், மானஸக்ரியாரூபமாகவும் ஆரோபிதமான அனேக விசேஷணங்களை உடையதாகவும் இருக்கின்ற ப்ராணனை ஆலம்பனமாகக் கொண்டு உபாஸனம் செய்யவேண்டுமென்று விதிக்கின்றது. அதனால் புருஷதந்த்ரமாகவும், க்ரியாரூபமாகவும் இருக்கின்ற உபாஸனம் என்ற வித்யையை ப்ரமாணம் என்று சொல்வதற்கு முடியாது. பரமாத்மஸ்வரூப ஞானம் என்பது (ஆத்மவித்யை) புருஷபரதந்த்ரமல்ல, வஸ்து பரதந்த்ரமாக இருக்கின்றதால் ப்ரமாணமாக ஆகிறது. நிர்விசேஷமான ஏகரூபமான ப்ரஹ்மஸ்வரூபத்தை ஆலம்பனமாகக்கொண்டது ப்ரஹ்மவித்யை. அதனால் ப்ரஹ்மவித்யைக்கு ப்ராமாண்யம் உண்டு. ப்ராணாதிவித்யைகளுக்கு ப்ராமாண்யம் கிடையாது.

பூர்வ : ப்ரஹ்மவித்யை என்பது ஸ்வரூபத : ப்ரமை என்றும் மற்றவித்யைகள் ஸ்வரூபத:அப்ரமை என்றும், ப்ரஹ்மவித்யைக்கு அவித்யாநிவர்த்தி ஒன்றே பலம் என்றும் மற்ற வித்யைகளுக்கு அவித்யா நிவர்த்தி பலமல்ல வேறு பலம் உண்டு என்றும் சொல்வதை ஒப்புக்கொள்கிறேன். அதேபோல் அவித்யா நிவர்த்திக்காக ப்ரஹ்மவித்யை வேறு எதையும் அபேக்ஷிக்கவில்லை என்றாலும், த்வைதம் என்ற பந்த நிவர்த்திக்காக வேறு ஏதாவது அபேக்ஷிக்கப்படலாமே ?

சித்தா : ஸமஸ்த்த த்வைதங்களும் அதனால் ஏற்படும் பந்தங்களும் அஞ்ஞானத்தை மூலகாரணமாகக் கொண்டதாக இருக்கின்றதால் ஆத்ம வித்யை ஏற்படுகின்றபோது அஞ்ஞானம் அதன் கார்யமான த்வைதங்கள் எல்லாமே நிவர்த்திக்கின்றது. அதனால் அஞ்ஞான நிவர்த்திக்குப் பிறகு த்வைதநிவர்த்திக்காக வேறு எதனுடைய அபேக்ஷையும் கிடையாது. ஆகவே ப்ரமாண ஜன்யமான வித்யைக்கு அவித்யாநிவர்த்தி ஒன்றே பலம். அதையன்றி வேறு எந்த பலமும் இருப்பதாக எந்த ப்ரமாணத்தைக் கொண்டும் நிரூபணம் செய்யமுடியாது.

**8.** அவதாரிகை : ஞானம் என்பது, அதன் உற்பத்திக்காக கர்மாவை அபேக்ஷிக்கின்றதா அல்லது உற்பன்னமான ஞானம் அதன் பலனை கொடுப்பதற்கு கர்மாவை ஸஹகாரியாக அபேக்ஷிக்கின்றதா என்றால், இரண்டுவிதமாகவும் சொல்லமுடியாது. ஏனெனில்,

ச்லோகம் :

निरभिसंधि समर्पितमच्युते विहितमिष्टफलादपि निर्गतम् ।
यदपि कर्म तदप्यवधीरितं यदि धिया न तया परमर्थ्यते

ச்லோகார்த்தம் : நிஷ்காமமாக அனுஷ்டிக்கப்பட்டதும் ஈச்வரார்ப்பிதமானதும் இஷ்ட்டபலத்தை (ஸ்வர்க்காதி) கொடுக்காததுமான விஹித கர்மாவே ஞானத்தினுல் நிஷேதிக்கப்படுமானுல், அந்த ஞானத்தினுல், அதையன்றி வேருனகர்மா எவ்விதம் அபேக்ஷிக்கப்படும். ஆகே ஞானத்தினுல் வேறுஎதுவுமே அபேக்ஷிக்கப்படுவதில்லே.

வ்யாக்யானம் : வேதவிஹிதமான கர்மாவை பகவத் அர்ப்பணமாக செய்யப்படுமானுல் அதுவே அதிசுத்தம். அதனுல் சித்தசுத்தி என்ற பலன் ஏற்படுகிறது. அதன்மூலம் ஆத்மஞானத்திற்கு ஸாதனமாகிறது. ஆத்மஞானமே மோக்ஷம். இந்த ஞானத்தினுல்தான் அவித்யை நாசமாகின்றது. அதன்பிறகு எந்தவிதமான அபேக்ஷையும் கிடையாது. ஆகையால் வித்யாஉற்பத்திக்காகவோ அல்லது வித்யோற்பத்திக்குப் பின் முக்தி என்ற பலனுக்காகவோ கர்மாவின் அபேக்ஷைகிடையாது.

9. அவதாரிகை : ஞானேற்பத்திக்கு கர்மாபேக்ஷைஇல்லேயென்ருலும், ஞானபலன் ஏற்படுவதற்காக கர்மாபேக்ஷை இருக்கிறது என்று சொல்லலாமே? ஏனெனில் யாவத் ஜீவம் அக்னிஹோத்ரம் ஜுஹோதி என்று ச்ருதிவாக்யமே தெரிவிக்கின்றதே என்ற வேறு சிலருடைய வாதத்திற்கு பதில் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

समविषमसमुच्चयो न युक्तो न हि जगदस्ति धियः प्रसूतिकाले ।
क्व नु बत विहितक्रियासमूहः कथमिव तत्र समुच्चयोपपत्तिः

ச்லோகார்த்தம் : ஞானத்திற்கும் கர்மாவிற்கும் ஸமஸமுச்சயமோ அல்லது விஷமஸமுச்சயமோ பொருந்தாது. ஞானேற்பத்தி ஸமயத்தில் இந்த ப்ரபஞ்சமே கிடையாது என்ருல் ஜகத்திற்கு உட்பட்ட விஹிதகர்மங்கள் எப்படி இருக்கமுடியும்? ஆகவே அதனுடன் ஸமுச்சயம் என்பது எவ்விதம் பொருந்தும்?

வ்யாக்யானம் : அவித்யாகார்யம் கர்மா. ஞானம் ஏற்பட்டவுடனேயே அதன்பலனுக, அவித்யை அதன் கார்யம் என்பதெல்லாமே நிவர்த்திக்கின்றது என்ருல், ஞானேற்பத்திக்குப்பிறகு அதன் பலனே கொடுப்பதற்காக கர்மாவின் அபேக்ஷை என்று சொல்வது எப்படி பொருந்தும்? இந்தவிதம் சொல்லப்படும் காரணத்தினுலேயே ஞானகர்மஸமுச்சயம் என்பதும் ஸம்பவிக்க முடியாது. ஞானம் ஏற்படுவதற்கு முன்பே கர்மாவை விட்டுவிட்டு ச்ரவணுதிகளேச் செய்யவேண்டும் என்று சொல்லப்படுவதால், ஞானம் ஏற்பட்ட பிறகு கர்மாபேக்ஷை என்று சொல்வது பொருந்தாது. மேலும், யாவத்ஜீவம் அக்னிஹோத்ரம் ஜுஹோதி என்ற ச்ருதிவாக்யத்தைக் கொண்டு, ஆத்மஞானம் ஏற்பட்டபிறகும், கர்மாவைச்செய்யவேண்டும் என்ற ஆக்ஷேபம் பொருத்தமற்றது. ஞானத்திற்கும் கர்மாவிற்கும் ஸமப்ராதன்யம் என்பது ஸமஸமுச்சயம் ஞானம் ப்ரதானம், கர்மா அப்ரதானம் என்ரே அல்லது கர்மாப்ரதானம் ஞானம் அப்ரதானம் என்ரே சொல்லப்படுமானுல் அது விஷமஸமுச்சயம். அவித்யை அதன்

கார்யம் என்பதெல்லாம் நிவர்த்திக்கப்பட்டபிறகு ஞானம் கர்மா இரண்டிற்கும் ஸமப்ரதானமோ அல்லது குணப்ராதான்யேன விஷமஸமுச்சயமோ எப்படி ஏற்படமுடியும்? ஸர்வப்ரபஞ்சத்தையும் நிவர்த்தித்து ப்ரஹ்மசாக்ஷாத்காரம் ஏற்பட்டபிறகு அந்த நிலையில் கர்த்தா, கர்மா, க்ரியை என்ற பேதங்கள் எவ்விதம் இருக்கமுடியும்? ஞான பலமாக அஹம்அகர்த்தா, அபோக்தா என்ற நிர்விசேஷ ப்ரஹ்மாத்மசாக்ஷாத்காரத்திற்குப் பிறகு எதனுடைய அபேக்ஷையும் கிடையாது.

**10.** அவதாரிகை : ஞானம் ஏற்பட்டபிறகும் உடனேயே ஸம்ஸாரம் நிவர்த்திக்கிறது என்று நியதமாக சொல்லமுடியாது. ஞானியாக இருந்தாலும் கர்மானுஷ்டானங்கள் ஸம்பவிக்கின்றதென்றே சொல்லவேண்டும்.

**ச்லோகம் :**

अपि च परमहंसस्त्यक्तसर्वैषणः सन्ननुभवफलविद्यां साधनैर्यद्यवाप ।
कथमिव पुनरत्र प्राप्तिरस्ति क्रियाया भवतु तदपवर्गो विद्ययैवैकयाऽस्य

**ச்லோகார்த்தம் :** ஸர்வஏஷணைகளையும் விட்டு விட்டுபரமஹம்ஸனாக இருக்கின்றவன் அந்தரங்க ஸாதனங்கள் மூலம் அனுபவபர்யந்தம் உள்ள ஞானத்தை அடைகிறான். அவ்விதம் ஏற்பட்டபிறகு கர்மத்தினுடைய ப்ரஸக்தி எவ்விதம் இருக்கமுடியும்? ஆகையால் வித்யையால் மட்டுமே போதம் ஏற்படுகிறது. அதுவே மோக்ஷம்.

**வ்யாக்யானம் :** கர்மா என்பது ஸ்வர்க்காதி பலன்களை உத்தேசித்து செய்யவேண்டும், அல்லதுபலனை விரும்பாமல், சித்தசுத்திக்காக ஈச்வரார்ப்பணமான கர்மாவைச் செய்யவேண்டும். ஞானோற்பத்திக்கு முன்பே ச்ரவணாதிகளைச் செய்வதற்கும் ஞானம் ஏற்படுவதற்கும் ப்ரதிபந்தகமாக இருக்கின்றது என்ற காரணத்தினாலேயே முமுக்ஷுவானவன் கர்மாக்களை ஸர்வஸாதனஸாத்யங்களுடன் விட்டுவிட்டு பரமஹம்ஸனென்று சொல்லப்படும் உத்தம ஆச்ரமத்தை அடைகிறான். அதன்பின் நிவர்த்திலக்ஷணமான 'சாந்தோ தாந்தோ உபரத:ச்ரத்தோ பூத்வா ஆத்மன்யேவ ஆத்மானம் பச்யதி' என்று சொல்லப்படும் அந்தரங்கஸாதனங்களை அனுஷ்டித்து, சிரவணாதிகளைச் செய்து அதன்பலனாக ஆத்மசாக்ஷாத்காரம் ஏற்பட்டபிறகு, எதை அபேக்ஷித்து கர்மாவைச் செய்யவேண்டும்? 'யாவத் ஜீவம்' என்ற வாக்யம் ஸாமான்யவிதி, ஸன்யாஸம் என்பது விசேஷவிதி, வைராக்யம் ஏற்பட்டவனுக்கே ஞானம் சித்திக்கும். வைராக்யம் இல்லாதவனுக்குத்தான் விதிஸம்பவிகும். ஆகவே, ஸாமான்யவிதியைவிட விசேஷவிதி என்பதற்கே பலம். அதனால் விரக்தனான (ஸன்யாஸி) பரமஹம்ஸன் வித்யை ஒன்றினாலேயே மோக்ஷமென்ற புருஷார்த்தத்தை அடைகிறான். மேலும், நஹிம்ஸாஸர்வாபூதானி என்பது போன்ற விசேஷவிதிகள் இருப்பதால் ஸன்யாஸிகளுக்கு ஸாமான்யவிதிகள் எதுவும் பொருந்தாது. ஆகவே, விரக்தனான ஸன்யாஸிக்கு எந்த விதியுமே கட்டுப்படுத்தாது.

**11.** அவதாரிகை : ஆத்மஞானம் என்பது கர்மாவிற்கு அங்கமாக ஆத்மசுத்யர்த்தம் வேதங்களில் விதிக்கப்பட்டிருக்கிறது. அதனால் ஆத்மஞானத்திற்கு மோக்ஷம்பலம் என்றும் கர்மாபேக்ஷை இல்லை என்றும் சொல்லப்படுவது சரியல்ல என்று ஆக்ஷேபம் செய்யப்படுகிறது. இந்த ஆக்ஷேபம் சரியல்ல.

ச்லோகம் :

यस्य प्रयोगविधिरस्ति परिग्रहीता द्वारैदमर्थ्यविनिवेदकमस्य सर्वम् ।
श्रुत्यादिमानमिह नास्ति तदात्मबुद्धौ तस्मादियं भवतु नः पुरुषार्थभूता

**ச்லோகார்த்தம்** : எந்த பதார்த்தத்தை போதிப்பதற்காக ப்ரயோகவிதி (ப்ரதானவிதி) இருக்கின்றதோ அந்த பதார்த்தத்திற்கு "இந்த முறையில் இதை அனுஷ்டிக்கவேண்டும்" என்று தெரிவிக்கின்ற ச்ருதிலிங்கம் முதலான ப்ரமாணங்கள் அனைத்தும் இருக்கின்றது. இவை இரண்டும் ஆத்ம ஞானத்தில் இல்லை. ஆகையால் இந்த ஆத்மவித்யை என்பது (விநியோக ப்ரமாணமில்லாததால்) நமக்கு புருஷார்த்தமாகவே ஒத்துக்கொள்ளப்பட வேண்டும்.

வ்யாக்யானம் : கர்மா ஒன்றே புருஷார்த்தஸாதனம் என்றும், அதனால் எந்த ஞானமாக இருந்தாலும் கர்மாங்கமாகத்தான் இருக்கவேண்டும் என்று சொல்வது சரியல்ல. ப்ரஹ்மாத்மஞானம், கர்மாவிற்கு அங்கமாகவோ, அங்கியாகவோ இருக்க முடியாது. 'வித்வான்யஜதே', 'வித்வான் யாஜதே' என்ற இடங்களில் உபாஸனாதிகளையே ஞானம் என்று சொல்லப்படுகிறது.

ச்ருதி லிங்க வாக்ய ப்ரகாரணஸ்தான ஸமாக்யா என்ற ப்ரமாணத்தைக் கொண்டே அங்க அங்கீபாவம் அறியப்படவேண்டும். ஆத்மஞானம் என்பதில், அங்கம் என்று சொல்வதற்குரிய ப்ரயோக விதி எதுவும் கிடையாது. அதுமட்டுமல்ல பின்னப்ரகரணமாக இருப்பதாலும் உபநிஷத் ப்ரகரணத்தில் ஆத்மஞானம் சொல்லப்பட்டிருப்பதால் ப்ரகரணஸம்பந்தமில்லை. அதனால் ப்ரயோகவிதி என்பதும் ஸம்பவிக்காது. அதாவது 'பர்ணமயிஜுஹ்யாத்' என்பது போன்ற வாக்யம் எதுவுமில்லை. ஆத்மாவானவன் (ஜீவன்) வைதிக கர்மாவை மட்டும் செய்பவனாக இல்லை. லௌகிக கர்மாவையும் செய்கிறான். ப்ரதிஷித்தகர்மாவையும் செய்கின்றான். அதனால் 'பர்ணமயிஜுஹ்யாத்' என்பது போல் குறிப்பிட்ட இந்த கர்மாவில்தான் ப்ரயோஜகம் என்று சொல்வதற்கான வாக்யமும் கிடையாது. உதாரணமாக, கார்ஹபத்யம் என்ற அக்னியில் இந்த்ரனைதேவதையாகக் கொண்ட அக்னிஸ்தோத்ரத்தை ஸ்துதி செய்து அந்த கர்மாவை அனுஷ்ட்டிக்க வேண்டும் என்றுவாக்யம் இருக்கின்றது. இதேபோல் இந்த மந்தரத்தை உச்சரித்துக்கொண்டு தர்ப்பையை அறுக்கவேண்டும் என்று அங்கமாக தெரிவிக்கின்றது அதுபோல் ஆத்மஞானம் என்பதை கொண்டு இந்த கர்மாவைச் செய்யவேண்டும் என்று எந்த் வாக்யமும் ஆத்மஞானத்தை அங்கமாக தெரிவிக்கவில்லை.

பூர்வ : லௌகிக ப்ரவ்ருத்தியில் இருப்பவர்கள் தேஹமே ஆத்மா என்று விவகாரம் செய்கின்றார்கள். ஆனால் தேஹவ்யதிரிக்தன் ஆத்மா என்று அறிந்தவனே கர்மாவைச் செய்கிறான். அதனால் தேஹவ்யதிரித்த ஆத்மஞானம் என்பதே கர்மாங்கம் என்று சொல்லலாமே ?

சித்தா : வேதாந்தப்ரகரணத்தில் தேஹவ்யதிரிக்தன் ஆத்மா என்று அறிவதே ஆத்மஞானம் என்று சொல்லப்படவில்லை. ஆத்மா அகர்த்தா, அபோக்தா, என்று அறிவதே ஆத்மஞானம் என்று சொல்லப்படுகிறது. அதனால் அகர்த்தா அபோக்தா

என்ற ஞானம் எப்படி கர்மாவிற்கு அங்கமாக இருக்க முடியும்? அது மட்டுமல்ல இப்பேர்ப்பட்ட ஆத்மஞானம் கர்மாவிற்கு ப்ரதிகூலமாகவும் இருக்கின்றது.

தேஹவ்யதிரிக்த ஆத்மா என்ற ஞானம் மட்டும் இருந்தால்கூட அந்த ஞானத்திற்கும் கர்மாங்கத்வம் சொல்லமுடியாது என்ற விஷயம் முன்பே விளக்கப்பட்டிருக்கிறது. அதனுல் வேறு எந்தவிதமான அபேக்ஷையும் இல்லாமல் ஸ்வதந்த்ரமாகவே ஆத்மஞானம் மோக்ஷமென்ற புருஷார்த்தஸாதனம் என்றே சித்திக்கின்றது. அவித்யா நிவர்த்தியே புருஷார்த்தம்.

**12.** அவதாரிகை : இவ்விதம் ஆத்மஞானத்தினுல் ஸாதிக்கப்படும் அவித்யாநிவர்த்தி என்பது, ஆத்மஸ்வரூபத்தைக் காட்டிலும் பின்னமா, அபின்னமா, அல்லது பின்னுபின்னமா?

ச்லோகம் :

सदसत्सदसद्विकल्पितप्रतिपक्षैकवपुर्निवर्तनम् ।
तमसोऽभ्युपगम्यतेऽन्यथानुपपत्त्यापतनैकहेतुत:

ச்லோகார்த்தம் : ஸத், அஸத், ஸதஸத், மித்யா என்ற பக்ஷங்களிலிருந்து வேருனபக்ஷமே அஞ்ஞான நிவர்த்தியின் ஸ்வரூபமாக ஒத்துக்கொள்ளப்படுகிறது. வேறு எந்த பக்ஷமும் பொருந்தாது என்ற தோஷம் ஒன்றையே காரணமாகக் கொண்டு இவ்விதம் ஒத்துக்கொள்ளப்படுகிறது.

வ்யாக்யானம் : 1. அவித்யா நிவர்த்தி என்பது ஆத்ம ஸ்வரூபத்தைக் காட்டிலும் பின்னம் என்று சொல்லப்படுமானுல் அவித்யாநிவர்த்திஸத்யம் என்ருகும். அதனுல் த்வைதம் என்பதே சித்திக்கின்றது.

2. அவித்யாநிவர்த்தி என்பது ஸத்யமல்ல, அஸத் என்று சொல்லப்படுமானுல் ஞானம் என்பது வ்யர்த்தம். (இல்லாத ஒன்றுக்கு நிவர்த்தி சொல்வது பொருந்தாது)

3. அவித்யா நிவர்த்தி என்பது ஸதஸதாத்மகம் என்று சொல்லப்படுமானுல், ஒரே வஸ்து விருத்தமான இரண்டு ஸ்வபாவத்தில் இருப்பதாகச் சொல்வதற்கு முடியாது.

4. அவித்யாநிவர்த்தி என்பது ஸத்துமல்ல, அஸத்துமல்ல, ஆத்மாவைக் காட்டிலும் வேறு என்று சொல்லப்பட்ட போதிலும் அது மித்யை என்று சொல்லப்படுமானுல் அவித்யை என்பது ஸத்யமென்றே சொல்ல நேரிடும் அவித்யை ஸத்யம் என்ருல், அது வித்யையினுல் நிவர்த்திக்கிறது என்று சொல்வதற்கே முடியாது. அதனுல் ஞானஸாத்யமாக சொல்லப்படும் அவித்யா நிவர்த்தி என்பதின் ஸ்வரூபம் என்ன?

சித்தா : இதுவரை சொல்லப்பட்ட நான்கு விதமான பக்ஷங்களுக்கும் அப்பாற்பட்ட ஐந்தாவது ஸ்வரூபத்தையே அவித்யாநிவர்த்தி என்று சொல்கிருேம். அதாவது, அவித்யாநிவர்த்தி என்பது ஸத்தல்ல, அஸத்அல்ல, ஸதஸத் அல்ல, ஸதஸத் விலக்ஷணமான மித்யையுமல்ல. இந்த நான்கு விகல்பங்களுக்கும் வேறுபட்டதான பஞ்சம ப்ரகாரம் என்பதே அவித்யாநிவர்த்தி என்று சொல்லவேண்டும் என்று வேதாந்த சித்தாந்தத்தை நன்கு அறிந்த பெரியோர்களால் சொல்லப்படுகிறது. இவ்விதம்

சொல்லப்படுவதில் ப்ரமாணம் என்னவென்ருல் முன்ஞல் சொல்லப்பட்ட ஸதஸத்முதலான நான்கு பக்ஷங்களிலும் தோஷம் ஸம்பவிக்கின்றது. அதஞல் அவைகள் பொருந்தவில்லை என்பதே ப்ரமாணம். ஸதஸதாதிபக்ஷவிலக்ஷணத்வம் என்பதையன்றி வேறு ஏதுவும் பொருந்தாது என்பதால் அவ்விதம் ப்ராப்தமாகின்ற ஹேதுவைக் கொண்டே ஸதஸதாதி அனுப்பத்தி என்பதே ப்ரமாணம் என்று சொல்லப்படுகிறது. ஆகேவ அன்யதா அனுபத்தியைக்கொண்டே இவைகளுக்கு வேறுபட்டது என்றே சித்திக்கின்றது.

**13.** அவதாரிகை : பொருந்தாததன்மை (அனுபபத்தி என்பது) என்ற தோஷம் ஐந்தாவதுபக்ஷத்திலும் ஸம்பவிக்கின்றதே ? என்ருல்,

**ச்லோகம் :**

सदसत्सद्विकल्पितप्रतिबद्धा न भवन्ति वर्णिते ।
परमात्मतमोनिवर्तनेऽनुपपत्तिप्रतिभासवृत्तयः

**ச்லோகார்த்தம் :** ஸத், அஸத், ஸதஸத், மித்யா என்ற பக்ஷங்கள் ஸம்பந்தமாக தோன்றுகின்ற அனுபபத்திதோஷங்கள் முன்பு சொல்லப்பட்ட பஞ்சமப்ராகாரமான அவித்யாநிவர்த்தியில் ஏற்படுவதில்லை.

**வ்யாக்யானம் :** நான்கு பக்ஷங்களில் சொல்லப்பட்ட தோஷங்கள் எதுவும் பஞ்சம் ப்ராகாரத்தில் ஸம்பவிக்கமுடியாது. ஸத்தா, அஸத்தா, ஸதஸத்தா, மித்யையா என்ற நான்கு பக்ஷங்களும் தோஷம் என்று சொல்லப்பட்டதால் இவைகளுக்கெல்லாம் வேருனது பஞ்சமப்ராகாரம் என்று சொல்லப்பட்டதால், அவைகளில் சொல்லப்பட்டதுபோல் பஞ்சமப்ரகாரம் என்பதும் ஸத்தா அஸத்தா என்றதாதி ஆக்ஷேபங்களுக்கு இடமேகிடையாது. அதஞல் ஸதஸதாதிகள் போன்ற எந்தவிதமான தோஷமும் இதில் ஸம்பவிக்கமுடியாது.

**14.** அவதாரிகை : பஞ்சமப்ராகாரம் என்ற இந்த விஷயம் பெரியோர்களாலும் ஒப்புக்கொள்ளப்படுகிறது.

**ச்லோகம் :**

चितिभेदमभेदमेव वा द्वयरूपत्वमथो मृषात्मताम् ।
परिहृत्य तमोनिवर्तनं प्रथयन्ते खलु मुक्तिकोविदाः

**ச்லோகார்த்தம் :** அவித்யாநிவர்த்தி என்பது, ஆத்மாவிலிருந்து பின்னம் என்ருே, அபின்னம் என்ருே பின்ஞபின்னமென்ருே மித்யை என்ருே சொல்லப்படும் பக்ஷங்களையெல்லாம் நிராகரணம் செய்து பஞ்சமப்ராகாரம் என்றே முக்தி ஸ்வரூப நிர்ணயத்தில் குசலர்களானவர்களால் சொல்லப்படுகறிது.

**வ்யாக்யானம் :** இஷ்ட்டசித்தி முதலான க்ரந்தக்காரர்கள், அவித்யாநிவர்த்தி என்பது இந்த நான்கு விகல்பங்களுக்கும், வேறுபட்டது. சைதன்யத்தைக் காட்டிலும் வேரு, ஒன்ரு என்பது போன்ற நான்கு விகல்பங்களுக்கும் உட்பட்டதல்ல என்றும் அவித்யாநிவர்த்தி என்பது ஐந்தாவது ப்ராகாரம் என்றே தெரிவிக்கின்ருர்கள்.

**15.** அவதாரிகை : அவித்யா நிவர்த்தி என்பது இவ்வித நான்கு விகல்பங்களுக்கும் அப்பாற்பட்டது என்று வேறு வழிஇல்லாமல் சொல்லப்படவில்லை. ஏனெனில் அவித்யா நிவர்த்தி என்பது ஆத்மஅபின்னம் என்றே சொல்லலாம்.

**ச்லோகம் :**

अथ वा चितिरेव केवला वचनोत्पादितबुद्धिवर्त्मना ।
परमात्मतमोनिवृत्तिगीर्विषयत्वं समुपैत्युपाधिना

**ச்லோகார்த்தம் :** வாக்யஜன்யபுத்திவ்ருத்தி ரூபமான உபாதியினுல், கேவல சைதன்ய ஸ்வரூபமான பரமாத்மாவே அஞ்ஞான நிவர்த்தி என்ற சப்தத்திற்கு (பதத்திற்கு) விஷயமாகின்றது. (அர்த்தமாகின்றது)

**வ்யாக்யானம் :** விகல்பம் செய்யப்பட்ட நான்கு பக்ஷங்களிலும் தோஷம் ஸம்பவிக்கின்றதால், அவித்யாநிவர்த்தி என்பதை இவைகளுக்கு விலக்ஷணமான பஞ்சம ப்ராகாரம் என்று சொல்லப்பட்டது. இவ்விதம் சொல்லப்படும் 'நிவர்த்தி' என்ற சப்தம் அத்யந்த பாதம் என்பதையே குறிப்பிடுகின்றது. அதனுல் நாசம் என்பது பரமசித்தாந்தமல்ல. பாதம் என்பதே பரமசித்தாந்தம். அஞ்ஞாதமாக இருந்த ஆத்ம ஸ்வரூபம், அஹம்ப்ரஹ்மாஸ்மி என்ற மஹாவாக்யத்தினுல் ஞாதமாகிறது. அதனுல் தமோநிவர்த்தி என்று சொல்லப்படுகிறது. இவ்விதம் அவித்யாநிவர்த்தி என்ற உபாதியைக் காரணமாகக் கொண்டு ஆத்ம ஸ்வரூபத்தை அவித்யா நிவர்த்தி (ரூபம்) என்று சொல்லப்படுகிறது. எவ்விதம் விஷ்ணுவை, விஷ்ணு என்று சொல்லாமல், ஸ்ரீபதி என்று என்ன காரணத்தைக் கொண்டு சொல்லப்படுகிறதோ அதுபோல்சொல்லப்படுகிறது. கேவல நிர்விசேஷசைதன்யஸ்வரூபம் மஹாவாக்யஜன்யமான புத்தி வ்ருத்தி என்ற உபாதியுடன் கூடியதான புத்தி வ்ருத்தியில் ப்ரதிபலிக்கின்ற காரணத்தினுல் பரமாத்மதமோ நிவர்த்தி என்ற விஷயம் என்பது, பரமாத்ம ஞானத்திற்கு விஷயமாகின்றதால், அதையேதமோநிவர்த்தி என்று சொல்லப்படுகிறது.

**16.** அவதாரிகை : அஞ்ஞான நிவர்த்தி என்பது ஆத்மஸ்வரூபமே என்று சொல்லப்படுமானுல் அதேபோல் லோகத்தில் சுக்தி முதலான ப்ராந்தி ஸ்தலங்களிலும் யதார்த்த வஸ்து ஞானம் ஏற்படுகின்றபோது அதை சுக்தி ஞானம் என்றே சொல்லப்படுகிதேயன்றி அஞ்ஞான நிவர்த்திரூபம் என்று சொல்லப்படுவதில்லையே ? ஆகையால் சைதன்யத்தை மட்டும் அவித்யா நிவர்த்தி ரூபம் என்று எப்படிச் சொல்லமுடியும் ?

**ச்லோகம் :**

शुक्तिकाविषयबुद्धिजन्मना प्रत्यगात्मचितिरेव केवला ।
शुक्तिकागततमोनिवृत्तिरित्युच्यते दृतिहरिः पशुर्यथा

**ச்லோகார்த்தம் :** கிளிஞ்சல் விஷயகமான ஞானேற்பத்தியினுல் ஏற்படுகின்ற கிளிஞ்சல் விஷயகமான அஞ்ஞானநிவர்த்தி என்பதும் ப்ரத்யகாத்ம சைதன்யம் என்றே சொல்லப்படுகிறது. எப்படி த்ரிதிஹரிசப்தமானது பசுவை (பசுத்வம் என்பதை) தெரிவிக்கின்றதோ அதுபோல் என்று அறிந்துகொள்ளவேண்டும்.

வ்யாக்யானம் : லோகத்தில், சுக்தி அஞ்ஞானம் என்பது சுக்தி ஞானத்தினுல் நிவர்த்திக்கின்றது என்பது ப்ரஸித்தம். ஆனுல் இந்த இடத்திலும், அஞ்ஞான நிவர்த்திஎன்பது சைதன்ய ஸ்வரூபமேயன்றி அதைக் காட்டிலும் வேருனதல்ல. ஏனெனில், சுக்தி என்பது ஸ்வயமே ஜடம். அஞ்ஞானம் ஜடமான சுக்தியை மறைக்க வேண்டிய அவஸ்யம் ஏதுமில்லை. ஜடவஸ்துக்கள் ஸ்வதந்தரமாக அஞ்ஞானத்திற்கு விஷயமாகவோ ஆச்ரயமாகவோ அல்லது ஸம்பந்தமுடையதாகவோ ஆகாது. "ஆச்ரயத்வ, விஷயத்வ பாகினி நிர்விபாக சிதிரேவகேவலா" என்றே சாஸ்திரம் தெரிவிக்கின்றது. ஆகவே சுக்திஞானம் என்ருலும், சுக்தி அஞ்ஞானம் என்ருலும், இரண்டினுலும் சுக்தி அவச்சின்ன சைதன்யமே குறிப்பிடப்படுகிறது. அதாவது சுக்தி அவச்சின்ன அபிவ்யஞ்சக புத்தி வ்ருத்தியையே சுக்தி ஞானம் என்று சொல்லப்படுகிறது. அதனுல் புத்தி வ்ருத்தி என்ற உபாதியைக் காரணமாகக் கொண்டே சுக்தி அவச்சின்ன சைதன்யத்தையே (அவித்யாநிவர்த்தி) அஞ்ஞானநிவர்த்தி என்று சொல்லப்படுகிறது. ஆகையால் தமோ நிவர்த்தி என்று சொல்லப்படுவது எல்லாமே அதிஷ்ட்டானசைதன்ய ரூபம் என்றே அறியப்படவேண்டும்.

பாணினி சூத்ரத்தில் 'த்ரிதிஹரி' சப்தம் அறிவில்லாத பசுவையே குறிக்கின்றது. 'த்ரிதிஹரி' என்ற சப்தத்தில் பசுத்வம் அறியப்படவில்லையென்ருலும் அந்த சப்தம் 'பசுத்வம்' என்பதை தடஸ்த்த உபாதியாகக் கொண்டு அதன் மூலம் அறிவில்லாத மனுஷ்யனையும் த்ரிதிஹரிசப்தம் குறிப்பிடுகின்றது. அதுபோல் இந்த இடத்திலும் அர்த்தம் செய்யப்படவேண்டும்.

உதாரணமாக வ்யவஹாவதசையில் கிளிஞ்சல் என்பது அறியப்படாத காரணத்தினுல் வெள்ளி என்று தோன்றுகிறது. இந்த இடத்தில் சுக்தி அவச்சின்ன சைதன்யம் (ப்ரகாசிக்க வொட்டாமல்) ப்ரகாசிக்காதவாறு சுக்தி அவச்சின்னசைதன்ய அஞ்ஞானம் மறைக்கின்றது. அதன்பின் சுக்தி அவச்சின்னசைதன்ய சுக்தி ஞானத்தினுல் சுக்திப்ரகாசிக்கின்றபோது சுக்தி அவச்சின்ன அஞ்ஞானம் நிவர்த்திக்கின்றது. இந்த இடத்தில் சுக்தி ஞானம் என்ற உபாதியைக் கொண்டு சுக்தி அஞ்ஞான நிவர்த்தி சொல்லப்படுகிறது. (சுக்திகாஅவச்சின்ன ஆகாரப்ரத்யக் அஞ்ஞானமே நிவர்த்திக்கின்றது)

ஆகவே, சுக்திமுதலானவைகள் ப்ரத்யக்சைதன்யத்தில் விவர்த்தமாக தோன்றுவதால், அந்த விஷயஅவச்சின்னஆகாரப்ரத்யக்சைதன்யம் என்றே சொல்லவேண்டும். சுக்தி முதலான வஸ்துக்கள் ஜடமாக இருக்கின்றதால் அவைகள் ஸ்வதந்த்ரமாக அஞ்ஞானத்திற்கு ஆச்ரயமாகவோ விஷயமாகவோ இருக்கமுடியாது என்று முன்பே சொல்லப்பட்டது. ஆகையால் சுக்தி அஞ்ஞானமோ அல்லது சுக்தி ஞானமோ ஏதுவாக இருந்தாலும் சுக்தி அவச்சின்ன சைதன்யத்தையே அந்த சப்தங்களால் குறிப்பிடப்படுகிறது. அதனுல் தமோநிவர்த்திரூபம் என்று சொல்லப்படுவது எல்லாமே அதிஷ்ட்டான சைதன்ய ரூபம் என்றே அறிந்துகொள்ளப்படவேண்டும்.

**17.** அவதாரிகை : "ஹரதேர்த்ருதிநாதயோ:பசௌ" என்ற பாணினி சூத்ரம், பசு வாசகமாக இருக்கின்றதால் இன்ப்ரத்யய விஹிதத்தினுல் ஹரணமாத்ர கர்த்தாவை குறிப்பிடுவதற்காக புருஷனிடம் ப்ரயோகம் செய்யப்படவில்லை என்று எப்படிச் சொல்வது ? என்ருல்,

ச்லோகம் :

वाचको हरणकर्तुरिष्यते शब्द एष हि दृतेर्मनीषिभिः ।
केवलं तु पशुता निमित्ततां बाह्यतः स्थितवती व्रजेदियम्

ச்லோகார்த்தம் : த்ரிதிஹரிசப்தமானது தோல்பையை எடுத்துச் செல்கின்ற (ஒரு ப்ராணியை) ஒன்றை தெரிவிக்கின்றது என்று வித்வான்களால் ஒத்துக்கொள்ளப்படுகிறது. பசுத்வம் என்பது பாஹ்யமாக இருந்துகொண்டே த்ரிதிஹரிசப்த ப்ரயோகத்திற்கு கேவலம் நிமித்தமாக ஆகிறது.

வ்யாக்யானம் : 'த்ரிதிஹரி' என்ற சப்தம் அஞ்ஞன புருஷனை குறிக்கின்றது என்று சொல்லப்படுகின்றது. (த்ரிதிஹரி : பசு : என்ற இடத்தைப் போல்சொல்லப்படுகிறது) பசுத்வம் என்ற புத்தி வ்ருத்தி அஞ்ஞனை தெரிவிப்பதற்கு எப்படி உபாதியாக இருக்கின்றதோ அதுபோல் என்று த்ருஷ்ட்டாந்தம் சொல்லப்படுகிறது.

உபாதி என்ருல் என்ன என்பதை மேலே விளக்கப்படுகிறது. அதாவது உபாதி என்பது விசேஷணமுமல்ல, உபலக்ஷணமுமல்ல. இவை இரண்டிற்கும் வேறுபட்டது எதுவோஅதுவே உபாதி. 'த்ரிதிஹரி' என்ற சப்தம் புருஷனிடம் ப்ரயோகம் செய்யப்படுகிறது. "ஹரதேர்த்ருதிநாதயோ:பசௌ" என்ற பாணினியின் சூத்ரம், பசுத்வம்என்ற தன்மையுடைய (அஞ்ஞனை) புருஷனை த்ரிதிஹரி சப்தம் தடஸ்த்தமாக இருந்து தெரிவிக்கின்றதால் உபாதி என்று சொல்லப்படுவதாக வித்வான்களால் சொல்லப்படுகிறது. ஆகவே, த்ரிதிஹரிசப்தம், தோலையோ அல்லது நாதனையோ கொண்டுபோகின்ற மிருகத்திற்குத் தான் வாசகமாக ஆகும். ஆனுலும் புருஷனிடம் பசுத்வம் என்ற அறியாமையை மட்டும் தெரிவிக்க வேண்டுமென்ற விவக்ஷையினுல்தான் த்ருதிஹரி சப்தம் மனுஷ்யனிடம் ப்ரயோகம் செய்ய்ப்படுகிறதேயன்றி(த்ருதிஹரணம்) தோலை கொண்டுபோகிருன் என்ற விவக்ஷையைக் கொண்டு சொல்லப்படவில்லை. (த்ருதிபதமோ, நாதபதமோ இருந்து அதற்குமேல் ஹரி:என்ற உபபதம் ப்ரயோகம் செய்யப்பட்டிருக்குமானுல் பசுத்வம் என்பது சப்தவாச்யமாக இல்லாமலேயே தடஸ்த்தமாக இருந்து அறியாமை என்ற அர்த்தத்தில் புருஷனிடம் ப்ரயோகிக்க காரணமாகின்றது.)

'ஹரதேர்த்ருதிநாதயோ:பசௌ' என்ற சூத்ரத்தினுல் த்ரிதிஹரிசப்தம் அறியாமை என்ற அர்த்தத்தில் த்ரிதிஹரணம் செய்யாத புருஷனிடம் ப்ரயோகம் செய்யப்படுவதற்கு ஹரி: என்ற பதத்திலுள்ள இன் ப்ரத்யயமே காரணம். ஆகவே த்ரிதிஹரி சப்தம் இந்த முறையில் (அவித்யாநிவர்த்தி என்பதற்கு) உதாகரணமாகச் சொல்லப்பட்டது.

**18.** அவதாரிகை : இதேபோல் தார்ஷ்ட்டாந்தத்திலும் அவித்யாநிவர்த்தி சப்தம் ஆத்மஸ்வரூபத்தையே குறிப்பிடுகிறது என்பதை மேலே விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

एवमेव तु तमोनिवृत्तिगीः शुक्तिकाविषयबुद्धिजन्मना ।
बाह्यतः स्थितवतैव हेतुना प्रत्यगात्मचिति वर्ततेऽञ्जसा

ச்லோகார்த்தம் : இவ்விதமே பாஹ்யமாக இருக்கின்ற கிளிஞ்சல் (சுக்தி) விஷயகமான ஞானேற்பத்தி நிமித்தமாக அஞ்ஞானநிவர்த்தி என்ற சப்தம் ப்ரத்யகாத்ம

சைதன்யத்தில் முக்யமாகவே ப்ரவ்ருத்திக்கின்றது.

வ்யாக்யானம் : வாச்யார்த்தத்தில் இல்லாமல் தடஸ்த்தமாக இருக்கின்ற சுக்தி ஞானம் என்பதை நிமித்தமாகக்கொண்டு சுக்தி அவச்சின்னசைதன்யமான ஆத்மாவையே சுக்தி அஞ்ஞான நிவர்த்தி சப்தம் தெரிவிக்கின்றது. இதேபோல் மஹாவாக்யஜன்யமான அகண்டாகார வ்ருத்தி என்பதை நிமித்தமாகக்கொண்டு அகண்டாகாரவ்ருத்தி ஏற்படுகின்றபோதே (ஞானம் ஏற்பட்டால்தான்) அதை அஞ்ஞான நிவர்த்தி ரூபம் என்று ஆத்மாவை சொல்லப்படுகிறது. அகண்டாகார வ்ருத்தி என்ற உபாதி மூலமே அஞ்ஞான நிவர்த்தி ரூபம் என்று சொல்லப்படுகிறது. அதனுல் உபாதி என்பது விசேஷணமுமில்லே, உபலக்ஷணமுமில்லே. ஆகவே சுக்தி முதலானவைகளில் அனுகதமான சைதன்யமானது, இது சுக்தி என்று சுக்தி ஆகாரமான அந்த: கரணவ்ருத்தி ஏற்படுகின்றபோதுதான்அஞ்ஞானம் நாசமாகின்றது. இது சுக்தி என்ற போதம் ஏற்படுவதேநிமித்தம். அதனுல் சுக்தி அவச்சின்ன சைதன்யமே சுக்தி அஞ்ஞான நிவர்த்தி சப்தத்தால்சொல்லப்படுகிறது.

இவ்விதமே பாஹ்யமாக இருக்கின்ற சுக்தி விஷயகமான ஞானேற்பத்தி நிமித்தமாக அஞ்ஞான நிவர்த்தி என்ற சப்தம், சுக்தியாகார அந்த:கரண வ்ருத்தி ரூப நிமித்தத்தினுல் சுக்தி அவச்சின்ன ப்ரத்யகாத்ம சைதன்யத்தில்தான் முக்யமாக ப்ரவர்த்திக்கின்றது.

**19.** அவதாரிகை : சுக்தி, முதலான த்ருஷ்ட்டாந்தங்களைக் கொண்டு சொல்லப்பட்ட விஷயத்தை தார்ஷ்ட்டாந்தத்தில் பொருத்தி சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

उत्पन्नशुक्तिमतिरात्मचितिर्यथैव शुक्तेस्तमोहतिरिति प्रतिपन्नमेव ।
आत्माऽपि जातनिजबुद्धिरबोधहानिरित्युच्यतेऽमलचिदेकरसो न पूर्वम्

ச்லோகார்த்தம் : உற்பன்னமான சுக்தி ஞானத்தை நிமித்தமாகக் கொண்ட ஆத்ம சைதன்யம் என்பதே சுக்தியின் அஞ்ஞான நிவர்த்தி என்று அறியப்படுகிறது. அவ்வாறே உற்பன்னமான ஆத்மஞானம் (வாக்யஜன்ய தத்வஞானம்) என்பதை நிமித்தமாகக் கொண்ட சுத்த சின்மாத்ரமான ஆத்மா என்பது ஆத்ம அஞ்ஞான நிவர்த்தி சப்தத்தினுல் சொல்லப்படுகிறது.

வ்யாக்யானம் : 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' என்ற மஹாவாக்யத்திலிருந்து ஏற்படுகின்ற அகண்டாகார புத்திவ்ருத்தி என்பதை நிமித்தமாகக் கொண்டே அஞ்ஞான நிவர்த்தி சப்தம் (வாச்யார்த்தத்தில் சேராமல்) தடஸ்த்தமாக இருந்தே ஆத்மாவை குறிப்பிடுகின்றது.

த்ரிதிஹரிசப்தம் பசுத்வம் என்ற தன்மையையுடைய புருஷனிடமே ப்ரயோகிக்க முடியுமேயன்றி எப்போதும் எல்லோரிடத்திலும், ப்ரயோகிக்க முடியாது. அதேபோல் அகண்டாகாரவ்ருத்தி எப்போது ஏற்படுகிறதோ அப்போதுதான் அஞ்ஞான நிவர்த்தி சப்தம் ஆத்மாவை குறிப்பிடுவதாகச் சொல்லமுடியும். அதனுல் அஞ்ஞான நிவர்த்தி ரூபம் என்று சொல்வதற்கு அகண்டாகார வ்ருத்தி ஞானம் என்பதே உபாதி.

உதாகரணமாக சுக்தி விஷயகமான சுக்தியாகாரவ்ருத்தி ஏற்படுகின்றபோது தான் சுக்தி அவச்சின்ன சைதன்யத்தை அஞ்ஞான நிவர்த்தி ரூபம் என்று சொல்லலாம். ஆகவே ஆத்மாசிதேகரஸம் என்ற ஆகாரவ்ருத்தி ஏற்படுகின்றபோதே, அந்தஞானம் என்ற உபாதியைக்கொண்டு அஞ்ஞான நிவர்த்தி சப்தம் ப்ரயோகிக்கப்படுகிறது. இவ்வித ஞானம் ஏற்படுவதற்கு முன் எந்தக்காரணத்தைக் கொண்டும் அஞ்ஞான நிவர்த்தி சப்தம் ப்ரயோகம் செய்யமுடியாது.

**20.** அவதாரிகை : சிதாத்மாவையே அஞ்ஞானநிவர்த்தி சப்தத்தினுல் சொல்லப்படுகிறது என்ருல், ஆத்மாகாரபுத்தி வ்ருத்தி உற்பத்திக்கு முன்ஞல் ஏன் அவ்விதம் சொல்லப்படவில்லை என்ருல்,

**ச்லோகம் :**

दृतिहरणकरत्वं पुंसि चान्यत्र चेदं दृतिहरिरिति लोके नोच्यते वर्तमानम् ।
अनधिकविकलं सत्कथ्यते तत्पशुस्थं दृतिहरिरिति शिष्टैर्बाह्यहेतोः पशुत्वात्

**ச்லோகார்த்தம் :** லோகத்தில் தோற்பையை எடுத்துக்கொண்டு போகின்றதென்பது மனிதன், பசு, குதிரை, வண்டி முதலான எல்லாவற்றிலும் இருந்த போதிலும், அந்த இடங்களில் த்ரிதிஹரி சப்தம் ப்ரயோகம் செய்யப்படுவதில்லை. ஆஞலும் தோற்பையை எடுத்துக் கொண்டு போவதென்பது அதிகமாகவோ, குறைவாகவோ இல்லாமல் இருக்கின்ற போது பாஹ்யமாக இருக்கின்ற பசுத்வம் என்ற நிமித்தத்தினுல் த்ருதிஹரிசப்தம் சிஷ்டர்களால் ப்ரயோகம் செய்யப்படுகிறது.

வ்யாக்யானம் : 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' என்ற போதம் ஏற்படுத்துவதற்கு முன்பு, ஆத்மஸ்வரூபம், அஞ்ஞான நிவர்த்தி ரூபம் என்று சொல்லமுடியாது. ஏனெனில், எந்த சப்தமாக இருந்தாலும், எப்போதும், எந்த இடத்திலும் ப்ரயோகம் செய்வதற்கு முடியாது. அந்த சப்தம் ப்ரயோகிப்பதற்கு ஒரு நிமித்தம் வேண்டும். உதாரணமாக, ஒருபுருஷனிடம் எந்த ஸமயம் அறியாமை இருக்கின்றதோ அந்த ஸமயத்தில்தான் அந்த புருஷனை த்ருதிஹரி சப்தத்தினுல் குறிப்பிடலாம். த்ருதிஹரி சப்தம் தோலை திருடுகின்ற ப்ராணியைத்தான் குறிப்பிடுகிறது. தோலை திருடுகிருன் என்று ஒரு புருஷனைச் சொல்லவேண்டுமாஞல் 'த்ருதிஹார :' என்றே சொல்லவேண்டும். அதஞல் த்ருதிஹரி என்று சொல்லப்படுவதால் பசுத்வம் என்ற அறியாமை எல்லா ப்ராணிகளிடத்திலும் இருக்கின்றது. ஆஞல் எந்த இடத்தில் விவக்ஷிதமோ அந்த இடத்தில் மட்டுமே த்ருதிஹரி சப்தம் ப்ரயோகிக்கப்படவேண்டும். ஆகவே அறிவற்றவன் அஞ்ஞன் என்று தெரிவிக்கவேண்டுமாஞல்தான் த்ரிதிஹரிசப்தம் ப்ரயோகம் செய்யவேண்டும் என்று பாணினியிஞலும் சொல்லப்படுகிறது. லோகப்ரசித்தமாகவும் இருக்கின்றது. இதேபோல் எந்த சப்தமாக இருந்தாலும் அதை ப்ரயோகம் செய்ய ஒரு நிமித்தம் வேண்டும். அதஞல் அஞ்ஞான நிவர்த்தி ரூபம்என்று தெரிவிக்கின்ற சப்தமும் அகண்டாகாரவ்ருத்தி ஏற்பட்டபிறகே ஆத்மாவில் அந்த சப்தம் ப்ரயோகம் செய்யமுடியும்.

**21.** அவதாரிகை : 'ஹரதே:த்ருதிநாதயோ:' என்ற சூத்ரத்தின் மூலம் உதாகரணம் சொல்லப்பட்டது. அதுபோல் தார்ஷ்டாந்தத்தில் அஞ்ஞான நிவர்த்தி ரூபம் என்பது ஆத்மாவை குறிக்கின்றது என்பதில் ப்ரமாணம் என்ன ?

ச்லோகம் :

अयमपि परमात्मा प्रत्यगात्मस्वभावो वचनजनितबुद्धेः प्राक्स्वरूपे स्थितोऽपि ।
न खलु विषयभावं ध्वान्तविच्छेदवाचो व्रजति हि तदुपाधेर्बुद्धिवृत्तेरभावात्

ச்லோகார்த்தம் : ப்ரத்யகாத்மஸ்வரூபமான இந்த பரமாத்மாவானது வாக்யஜன்ய ஞானத்திற்கு முன்பு (தன்ஸ்வரூபத்தில்) அதே ஸ்வரூபத்தில் இருக்கின்றபோது அஞ்ஞான நிவர்த்தி என்ற பதத்திற்கு விஷயமாகிறதில்லை. ஏனெனில் (அவ்விதம் ஏற்படுவதற்குரிய) அதற்கு நிமித்தமான புத்தி வ்ருத்தி ஏற்படவில்லை.

வ்யாக்யானம் : உதாகரணத்தில் என்ன ந்யாயம் சொல்லப்பட்டதோ அதே ந்யாயத்தைக் கொண்டு தார்ஷ்ட்டாந்தத்திலும் பொருத்திக்கொள்ளவேண்டும். எவன் அதிகாரியோ அவனுக்கே அகண்டாகார வ்ருத்தி ஏற்படும். முதலில் இல்லாமல இருந்து ஏற்படுகிறது என்பதால் அந்தவ்ருத்தி ஆகந்துகம். அந்த வ்ருத்தி எப்போது ஏற்படுகிறது என்றே சொல்லமுடியாது. ஸர்வப்ரத்யக்ஸ்வரூபமான பரமாத்ம ஸ்வரூபஞானம் மஹாவாக்யத்திலிருந்தே ஏற்படவேண்டும். அவ்விதம் அகண்டாகார வ்ருத்திஞானம் ஏற்படுவதற்கு முன்பு ஸ்வரூபத்திலேயே இருந்தும்கூட அஞ்ஞான நிவர்த்தி சப்தத்திற்குரிய விஷயபாவத்தை அளடவதில்லை. 'அஹம் ப்ரஹ்மாஸ்மி' என்ற புத்தி வ்ருத்தி என்ற உபாதி அப்போது (முன்னால்) இல்லை. ஆகையால் பாணினி சூத்ரம் போல் தார்ஷ்ட்டாந்தத்தில் சூத்ரம் இல்லையென்றாலும் காரணகார்ய ந்யாயத்தைக் கொண்டு தீர்மானிக்கப்படுகிறது. (அகண்டாகாரவ்ருத்தி என்பது அதிகாரிக்கே ஏற்படுமானதால் ஆகந்துகம் என்று சொல்லப்படுகிறது.

22. அவதாரிகை : அஞ்ஞான நிவர்த்தி சப்தம் நஞ் அர்த்தமான அபாவத்தையே குறிப்பிடுகின்றது என்பது ப்ரசித்தம். ஆகையால் நிவர்த்தி (நாசம்) என்பது எவ்விதம் பாவரூபமான ஆத்ம சப்தார்த்தமாக இருக்க முடியும்? என்றால்

ச்லோகம் :

अज्ञानदाह इति नैकपदं समासात्पूर्वोत्तरे खलु पदे पदतामुपेतः ।
ज्ञानोदयं तटगतं समुपाददान स्तस्मात्तमोहतिरवोऽत्र चिति प्रवृत्तः

ச்லோகார்த்தம் : அஞ்ஞான நாசம் என்பது ஒரு அர்த்தத்தை தெரிவிக்கின்ற ஒரேபதமல்ல. ஏனெனில் அந்தபதமானது பூர்வோத்தரபதங்களான இரண்டு பதங்களின் ஸமாஸத்தினால் ஒரே பதமாக இருக்கின்றது. ஆகையால் ஞானோற்பத்தி என்ற பாஹ்யமானநிமித்தத்தினால் அஞ்ஞானநிவர்த்தி என்பது சைதன்யத்தில் ப்ரவ்ருத்திக்கின்றது.

வ்யாக்யானம் : அஞ்ஞானநிவர்த்தி என்பது அபாவமான நாசம் என்ற அர்த்தத்தை குறிப்பிடுகிறது என்பது லோகப்ரசித்தம். அதனால் ஸத்ரூபமான சைதன்யம் அஞ்ஞான நிவர்த்தி சப்தத்தினால் குறிப்பிடப்படுவது பொருந்தாது என்பது ஸத்யமே (அது சரியே) ஸ்வபாவத : நாசம் என்ற சப்தம் அபாவத்தையே குறிப்பிடுகிறது என்றாலும், இந்த இடத்தில் அஞ்ஞான நிவர்த்தி என்று அஞ்ஞானம் என்பதை சேர்த்தே

ப்ரயோகம் செய்யப்படுகிறது. அதனுல் நாசம் முதலான சப்தங்கள் போல் அன்யோன்ய அபாவம் என்ற அர்த்தத்தில் சொல்லப்படவில்லை. இந்த இடத்தில் நஞ்சப்தம் பேதம் - பின்னம் என்ற அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. அதாவது சைதன்ய ஸ்வரூபம் அஞ்ஞானமில்லை. அஞ்ஞான பின்னம் என்ற பாவரூபமான அர்த்தத்தையே போதிக்கின்றது. கடம் என்பது படமல்ல. ("கட:படோந") என்று சொல்வதைப் போல பாவரூபமான அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. அஞ்ஞானம் என்பதும் நிவர்த்தி என்பதும் ஏகபதமல்ல. அதனுல் இரண்டுபதங்களை சேர்த்து ப்ரயோகம் செய்கின்றபோது நிவர்த்தி என்றபதம் (அஞ்ஞான) பின்னம் என்ற அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. அஞ்ஞானம் என்ற பூர்வபதமும் நிவர்த்தி (நாசம்) என்ற உத்தரபதமும் சேர்ந்து ஸமஸ்த்தபதமாக ஆகின்றதால் ஸமாஸத்தினுல் அர்த்தம் வேறுபடுகிறது. (மாறுபடுகிறது) உதாரணமாக - பீதாம்பரம் என்றபதம் பீதம் அம்பரம் என்ற தனித்தனிபதத்தினுல் மஞ்சள் வஸ்திரம் என்ற அர்த்தம் கிடைக்கின்றது. ஆனுல் பீதாம்பர:என்று சேர்த்துச் சொல்கின்றபோது ஸமாஸத்தினுல் விஷ்ணுவென்று, அர்த்தம் சொல்லப்படுகிறது. இதேபோல் தார்ஷ்ட்டாந்தத்திலும், 'அஞ்ஞான நிவர்த்தி:' என்ற ஸமாஸத்தினுல் பாவரூபமான ஆத்மஸ்ரூபமே குறிப்பிடப்படுகிறது. தமோஹதி: எனற சப்தம், ஞானம் என்ற உபாதியைக்கொண்டு பாவரூபமான ஆத்மாவை தெரிவிக்கின்றது என்றே சொல்லவேண்டும். ஆகேவ அஞ்ஞான நிவர்த்தி சப்தம் (பதம்) அஞ்ஞான விலக்ஷணமான ஆத்மாவையே அஞ்ஞானத்திற்கு அன்யமான, ஞானேதயம் என்ற உபாதிவஸாத் அஞ்ஞானத்திற்கு விருத்தமான ஆகாரத்தையுடைய பாவஸ்துவான சைதன்யத்தையே குறிப்பிடுகிறது என்றே தீர்மானிக்கவேண்டும்.

**23.** அவதாரிகை : சொல்லப்பட்ட த்ருஷ்ட்டாந்தம் தார்ஷ்டாந்தத்திற்கு பொருந்தாமல் விஷமத் ருஷ்டாடந்தமாக இருக்கின்றதே ? என்ருல்,

ச்லோகம் :

अत्राप्यसौ दृतिहरिः पशुरित्यखण्डः शब्दो न खल्वभिमतोऽवयवार्थयोगात् ।
धातुश्च वाचकतया हरतिः प्रसिद्धो हीन्प्रत्ययश्च हरतेः परतः प्रसिद्धः

ச்லோகார்த்தம் : த்ருஷ்ட்டாந்தத்தில் த்ருதிஹரி என்ற சப்தமும் பசுஎன்ற அர்த்தத்தைபோதிக்கின்ற ஒரே பதமாக ஒத்துக்கொள்ளப்படவில்லை. ஏனெனில் இந்த பதத்தில் அவயவார்த்தங்களை பொருத்துகின்ற போது 'ஹ்ருஞ்' என்ற தாதுவானது எடுத்துச்செல்லுதல் என்ற அர்த்தத்தையே தெரிவிக்கின்றது என்பது ப்ரசித்தமாக இருக்கின்றது. 'ஹ்ருஞ்'தாதுவிற்கு பிறகு இருக்கின்ற 'இன்' ப்ரத்யயம் கர்த்தா என்ற அர்த்தத்தை தெரிவிக்கின்றது என்பதும் ப்ரசித்தமாக இருக்கிறது.

வ்யாக்யானம் : 'த்ரிதிஹரி' சப்தம் த்ருதியை எவன் ஹரணம் செய்கின்ருனே அவனைத்தான் குறிப்பிடுகின்றதேயன்றி பசுவை குறிப்பிடவில்லை. ஏனெனில் 'ஹர: என்பது' கொண்டு போவது' என்ற க்ரியைக்கு வாசகமாக இருக்கின்றது. 'இன்' ப்ரத்யயம் அந்த க்ரியைக்கு எவன் கர்த்தாவோ அவனைக்குறிப்பிடுகின்றது என்று இந்த இடத்தில் சொல்லமுடியாது.

சித்தா : த்ரிதிஹரிசப்தம் ஐகபத்யத்தினுல் விசிஷ்ட்டார்த்தத்தையே தெரிவிக்கின்றது. இதனுல் சாதாரணமாக த்ருதியை கொண்டு போகின்றவன் என்றுஅந்த பதங்களின் அர்த்தமாக கிடைத்த போதிலும் ஹரதி என்ற தாது ஹரணம் என்ற செய்கையைத்தான் குறிப்பிடுகிறது என்பது ப்ரசித்தம். (ஹ்ரண்ஹரணே என்ற தாதுவான்து ஹ்ரு ஹர என்பதால் கொண்டுபோகின்றது என்ற க்ரியையை அர்த்தமாக தெரிவிக்கின்றது) இன்ப்ரத்யயம் தாதுவிற்குப் பிறகு உபயோகிக்ப்பட்டிருப்பதால் இந்த இடத்தில் த்ரிதிஹரிசப்தம் ரூடார்த்தமாக அகண்டமான 'பசு' என்ற (அறிவற்றவன் என்ற) அர்த்தத்தையே தெரிவிக்கின்றது. அதனுல் கர்த்ரு வாசகம் என்பது ப்ரசித்தமாக இருக்கின்றது என்பதே உண்மை. அதனுல் த்ருஷ்டாந்தம், தார்ஷ்ட்டாந்தத்திற்கு அனுகூலமாகவே இருக்கிறது என்றே அறியவேண்டும்.

குறிப்பு : த்ரிதிஹரிசப்தம் பசுத்வம் என்பதை ரூடார்த்தமாகவே தெரிவிக்கின்றது. (இவ்விதம் தெரிவிப்பதற்கு காரணம் ஏதுமில்லை) பதம், பதார்த்தம், அதன்ஸம்பந்தம் என்ற எதையும் அபேக்ஷிக்காமல் ரூடமாக (பொதுவாக - அகண்டமாக) ஏதோ ஒரு அர்த்தத்தை போதிக்கின்றது. ஸமாஸ பதமாக இருந்தால்தான் பொதுவாக ஒரு அர்த்தை சொல்லமுடியும்.

**24.** அவதாரிகை : இவ்விதம் அஞ்ஞான நிவர்த்தி என்பதை ஒத்துக்கொள்ளப்பட்ட போதிலும், இதனுல் என்ன சாதிக்கப்பட்டது?

**ச்லோகம் :**

उद्यन्निरस्यति तमश्च तदुद्भवं च वेदावसानवचनादथ वोदितः सन् ।
ऐकात्म्यवस्तुविषयोऽनुभवोऽत एव कंचित्सहायमनपेक्ष्य निवर्तकोऽसौ

**ச்லோகார்த்தம் :** ஆத்ம ஏகத்வ விஷயகமான அபரோக்ஷஞானம் என்பது வேதாந்த வாக்யங்களிலிருந்து உண்டாகின்றபோதோ அல்லது உண்டானபிறகோ அஞ்ஞானம், அதன்கார்யம் எல்லாவற்றையும் நிவர்த்திக்கின்றது. ஆகையால் வேறு எவ்வித ஸஹாயத்தையும் அபேக்ஷிக்காமல் ஞானம் என்பது அஞ்ஞான நிவர்த்தமாக இருக்கின்றது.

**வ்யாக்யானம் :** மஹாவாக்யங்களிலிருந்து ஏற்படும் 'அஹம்ப்ரஹ்மாஸ்மி' என்ற ஐக்ய அனுபவம் உண்டாகின்றபோதோ அல்லது உண்டானபிறகோ அடுத்த க்ஷணத்திலேயே அஞ்ஞானம் அதன் கார்யம் என்றஸர்வமும் நிவர்த்திக்கின்றதால், வாக்யத்திலிருந்து ஏற்படும் ஞானத்திற்கு ஸஹாயமாக எதையும் அபேக்ஷிக்கவில்லை என்பதை இதன்மூலம் சாதிக்கப்பட்டது. அதனுல் ஞானம் ஏற்பட்டபிறகு எவ்வித அபேக்ஷையும் கிடையாது.

**25.** அவதாரிகை : த்ருஷ்ட்டாந்தமூலம் இதை விளக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

दीपस्तमस्तिरयतीह भवन्कुतश्चिद्भूत्वा क्षणव्यवधिमात्रमपेक्ष्य नात्र ।
कश्चिद्विवादपदवीमुपयाति वादी तद्वत्प्रतीच्यवगतौ तमसोऽपहन्त्र्याम्

ச்லோகார்த்தம் : தீபமானது (ப்ரகாசம் என்பது) உண்டாகின்ற போதோ அல்லது உண்டானபிறகோ ஒருக்ஷண இடைவெளியை அபேக்ஷித்து அந்தகாரத்தை நிவர்த்திக்கின்றது. இந்த விஷயத்தில் எந்த வாதியும் விவாதம் செய்யவருவதில்லை. அதேபோல் ப்ரத்யகாத்ம ஞானம் அஞ்ஞானத்தை நாசம் செய்கின்றதென்ற விஷயத்தில் வாதத்திற்கு இடமேஇல்லை.

வ்யாக்யானம் : தீபமானது ப்ரகாசிக்கின்றபோதே அந்த க்ஷணத்திலேயே இருளை எப்படிபோக்குகின்றதோ அதுபோல் விஞ்ஞானம் உண்டாகின்றபோதே உண்டானபிறகோ தத்க்ஷணமே அஞ்ஞானம் அதன் கார்யமான ஸர்வமும் நிவர்த்திக்கின்றது.

**26.** அவதாரிகை : வ்ருத்தி ஞானம் என்பது வஸ்துவை அபிவ்யஞ்ஜனம் செய்வதையே ஸ்வபாவமாகக் கொண்டிருக்கிறது. அதனுல் அதற்கு வேறு எதனுடைய அபேக்ஷையும் தேவைஇல்லை.

ச்லோகம் :

उत्पत्तिरेव हि धिया स्वफलं प्रदातुमाकाङ्क्षिता न च ततोऽपरमर्थनीयम् ।
यत्कारकं तदिह काङ्क्षति जन्ममात्रादन्यन्नधीः किमपि काङ्क्षति जन्म लब्ध्वा

ச்லோகார்த்தம் : வாக்யஜன்ய ஞானத்தினுல் தன்னுடைய பலத்தை கொடுப்பதற்கு தன் உற்பத்திக்காக மட்டுமே (வ்ருத்தியை) அபேக்ஷிக்கின்றதேயன்றி வேறுஎதையும் அபேக்ஷிப்பதில்லை. லோகத்தில் எது காரகமோ அது உற்பத்திக்கு வேருன ஒன்றை அபேக்ஷிக்கின்றது. ஞானம் என்பது தன் உற்பத்திக்குப் பிறகு வேறு எதையும் அபேக்ஷிப்பதில்லை.

வ்யாக்யானம் : காரகங்கள் தன்னுடைய உற்பத்திக்கும், அதன் பலனை கொடுப்பதற்கும் எப்படி வேறு ஒன்றை அபேக்ஷிக்கின்றதோ அதுபோல், ஞானம் என்பது தன் உற்பத்திக்காக வேருென்றை அபேக்ஷித்தபோதிலும் அதன் பலனை கொடுக்கின்ற விஷயத்தில் வேறு எதையும் அபேக்ஷிப்பதில்லை. ஞானம் என்பது அகாரகம் ப்ரமாணத்திலிருந்து ஏற்படும் ப்ரமை. (ஞானம்) அதனுல் உடனே அஞ்ஞானநிவர்த்தி ஏற்படுகின்றதால் வேறு எவ்வித ஸஹாயமும் அபேக்ஷிப்பதில்லை. அஞ்ஞான நிவர்த்திக்கு க்ஷணமாத்ரமும் அவகாசமில்லை. தண்டசக்ராதிகள் (காரகங்கள்) தான், அதன் உற்பத்திக்கும், உற்பத்திக்குப் பிறகு கடம் என்ற பலத்தைகக்கொடுப்பதற்கும் குலாலன் முதலான வேறு ஸஹாயத்தை அபேக்ஷிக்கின்றது. அதுபோல் ஞானத்திற்கு ப்ரமாணத்தையன்றி வேறு அபேக்ஷை ஏதும் கிடையாது.

**27.** அவதாரிகை : இந்தவிஷயத்தில் (பெரியோர்கள்) வித்வான்களின் ஸம்மதமும் இருக்கின்றதென்பதற்கு அவர்கள் வாக்யமே ப்ரமாணமாகின்றது.

ச்லோகம் :

प्रत्यक्षसूत्र इदमेव निवेदयिष्यन् न्यायेन जैमिनिरुवाच विदग्धबुद्धिः ।
सत्संप्रयोग इति तत्र च बुद्धिजन्म शब्दस्य नान्यदिह किं च न कृत्यमस्ति

ச்லோகார்த்தம் : இந்த விஷயம் பற்றி தெரிவிப்பதற்காகவே குசலபுத்தியுடைய ஜைமினியானவர் யுக்தி யுக்தமாக ப்ரத்யக்ஷலக்ஷணத்தை தெரிவிக்கின்ற சூத்ரத்தில் "ஸத்ஸம்ப்ரயோகே புருஷஸ்ய இந்திரியாணும் புத்தி ஜன்ம தத்ப்ரத்யக்ஷம் அநிமித்தம் வித்யமான உபலம்பாத்" என்று சொல்லியிருக்கின்ருர். அந்த சூத்ரத்தில் 'புத்திஜன்ம' என்ற சப்தத்திற்கு வேறு எந்த ப்ரயோஜனமும் கிடையாது.

வ்யாக்யானம் : ஞானம் தனக்கு ஸஹாயமாக எதையும் அபேக்ஷிப்பதில்லே என்ற விஷயத்தில் ஜைமியினியின் "ஸத்ஸம்ப்ரயோகே புருஷஸ்ய இந்த்ரியாணும் புத்தி ஜன்மதத் ப்ரத்யக்ஷம்" என்ற (ஜைமினி ந்யாய 1. 1. 4) சூத்ரத்திஞல் அறியப்படுகிறது. அதாவது இந்த்ரியங்களுக்கும் விஷயங்களுக்கும் ஸம்பந்தம் ஏற்படுமாஞல் அதுவே (ஞானம்) ப்ரத்யக்ஷம் என்று அர்த்தம். ஆஞல் விசேஷமாக 'புத்திஜன்மா' என்று சேர்க்கப்பட்டிருப்பதால், புத்தி என்பது (ஞானம்) உண்டாவதற்கே ஸஹாயத்தை அபேக்ஷிக்கின்றது என்றும் வேறு எதற்காகவும் அபேக்ஷிப்பதில்லேயென்றும் சூசகமாக தெரிவிக்கின்ருர். இந்தவிதமான அர்த்தம் எவ்விதம் கிடைக்கின்றது என்ருல், இந்த்ரியம் விஷயம் என்ற இரண்டிற்கும் ஸம்பந்தம்ஏற்பட்டாலே ப்ரத்யக்ஷஞானம் ஏற்படும் என்ற அர்த்தம் கிடைக்கின்றது. புத்தி என்ருலே புத்திக்கு ஜன்மா என்ற அர்த்தமும் கிடைக்கின்றது. ஆஞலும் புத்தி ஜன்மா என்று ஜன்மா என்றபதம் அதிகமாக சேர்க்கப்பட்டிருப்பதஞலேயே 'புத்தி உண்டாவதற்கு மட்டுமே அபேக்ஷிக்கின்றது' என்பதும் அதையன்றி வேறு எதையும் அபேக்ஷிப்பதில்லே என்பதும் இந்த சூத்ரத்திஞல் அறியப்படுகிறது என்றே சொல்லவேண்டும். இல்லேயாஞல் ஜன்மா என்றபதம் சேர்க்கவேண்டிய அவஸ்யமே இல்லே. மேலும் ப்ரத்யக்ஷத்திற்கு சொல்லப்படும் லக்ஷணம் வேறு எந்த ப்ரமாணத்திற்கும் ஸம்பவிக்காது என்பதால், ஜன்மா என்றபதம் அதிவ்யாப்தி தோஷ நிவர்த்திக்காக என்று சொல்வதற்கும் முடியாது. ஆகவே, ஞானம் ஏற்பட்டபிறகு வேறுஎதையும் அபேக்ஷிப்பதில்லே என்பது சித்தமாகிறது.

28. அவதாரிகை : அகண்டாகாரவ்ருத்தி ஏற்படுகின்றபோது அஞ்ஞானம் அதன்கார்யம் என்பதெல்லாம் நிவர்த்திக்கின்றது என்பதை ஒத்துக்கொள்கிறேம். ஆஞல் அந்த வ்ருத்தி என்பது நிவர்த்திக்காததால் த்வைதம் இருக்கின்றதென்றே சொல்லவேண்டும்.

ச்லோகம் :

वेदान्तवाक्यजनिता मतिवृत्तिरेवमुत्पत्तितः सकलमेव भवार्णवाम्बु ।
पीत्वा स्वयं च खलु शाम्यति दग्धलोहपीतं यथाम्बु चितिमेव तु शेषयित्वा

ச்லோகார்த்தம் : இந்தவிதமே, வேதாந்த வாக்ய ஜன்யமான புத்தி வ்ருத்தி உற்பத்தியிஞலேயே ஸம்ஸார ஸாகரஜலம் பூராவையும் பானம் செய்து சைதன்யத்தை மட்டும் ஸேஷமாக வைத்து ஸ்வயமே நிவர்த்தியாகின்றது. எப்படி காய்ச்சப்பட லோகத்தில் ஊற்றப்பட்ட ஜலம் (அந்த லோகத்திஞல்) உறிஞ்சப்படுகிறதோ அதேபோல் (வ்ருத்தியும்) ஆகிறது.

வ்யாக்யானம் : வித்யை ஏற்பட்ட க்ஷணத்திலேயே அவித்யை அதன் கார்யம் என்பதெல்லாம் நிவர்த்தித்த போதிலும், அந்த வித்யை என்பது எப்படி நிவர்த்திக்கின்றது என்பதற்கு ஏதாவது ப்ரமாணம் இருக்கின்றதா இல்லேயா? இல்லேயென்று

சொல்லப்படுமானுல் அனவஸ்த்தாதி தோஷங்கள் ஸம்பவிக்குமே என்றுமேன்மேலும் ஆக்ஷேபம் செய்வது சரியல்ல. தஹிக்கின்ற இரும்பில் விடப்பட்ட ஜலமானது, அந்த இரும்பில் இருக்கின்ற உஷ்ணத்தை நீக்கி தானும் உலர்ந்து விடுகிறது. அதன்பிறகு எப்படி அந்த இரும்பு தன்ஸ்வயரூபத்தில் எஞ்சி இருக்கின்றதோ அதுபோல் அகண்டாகார வ்ருத்தி ஸம்ஸாரமென்ற அந்த கடல்நீரை கொஞ்சமும் மிச்சமின்றி குடித்து தானும் நசித்தபிறகுசின்மாத்ரமான ஆத்மஸ்வரூபமே எஞ்சி இருக்கின்றதால் அத்வைத ஹானி ஏதுமில்லை.

**29.** அவதாரிகை : வித்யை என்ற ஸாதனத்தினுல் அவித்யாநிவர்த்தி ஏற்படுகிறது என்ருல், நித்யகூடஸ்தீவரூபமான ஆத்மா, ஸாதனஸாத்யரூபமான அவித்யா நிவர்த்தி என்று எப்படிச் சொல்லமுடியும்?

ச்லோகம் :

कूटस्थनित्यैव तु मुक्तिरेषा विद्याफलत्वादिह यद्यदेवम् ।
तत्तत्तथा दृष्टमशेषमेव यथा हि शुक्त्यादिपदार्थसंवित्

ச்லோகார்த்தம் : இந்தமுக்தியென்பது, வித்யாபலமாக இருக்கின்றதால் கூடஸ்த்த நித்யமேயாகும். எது வித்யாபலமோ அது சுக்தி முதலான பதார்த்தங்களின் ஞானம்போல், கூடஸ்த்த நித்யம் என்றே சொல்லவேண்டும்.

வ்யாக்யானம் : இதுவரை விசாரிக்கப்பட்ட முறையில் ஆரோபிதமான அவித்யா நிவர்த்தியென்பதே மோக்ஷம். (அவித்யா அஸ்தமயோமோக்ஷ:) என்பது சித்தம், அதுவே கூடஸ்த்தம்.. ஆகவே யஞ்ஞாதி, ஸாத்யமான ஸ்வர்க்காதிகளைப்போல் மோக்ஷம் என்பது ஸாத்யம் என்று சொல்லமுடியாது. ஏனெனில் எவை எல்லாம் வித்யாபலமாக இருக்கிறதோ (ஞான ஸாத்யமாக இருக்கிறதோ) அவையெல்லாம் கூடஸ்த்தமாக இருக்கிறது என்ற விஷயம் லோகவ்யவஹாரத்திலும் அறியப்படுகிறது. அதாவது சுக்தி முதலான பதார்த்தங்களின்அஞ்ஞானம் நிவர்த்திக்கின்றபோது சுக்தி முதலான பதார்த்தங்களின்ஞானம் (ஸ்புரணம்) எவ்விதம் கூடஸ்த்தமோ அதுபோல் ஆத்ம வஸ்துஎன்பதும் கூடஸ்த்தம் நித்யம் என்று அறியவேண்டும்.

**30.** அவதாரிகை : இவ்விதம் சொல்லப்படுமானுல் கூடஸ்த்தம் என்பது ஸாத்யம் என்று சொல்ல நேரிடுமே?

ச்லோகம் :

जन्मादिषड्भावविकारहीना शुक्त्यादिवस्तुप्रणिविष्टसंवित् ।
न प्रागभावाद्यनुभूतिरस्याः स्वतः प्रमाणादपि युज्यते हि

ச்லோகார்த்தம் : சுக்தி முதலான பதார்த்த அவச்சின்னமான சைதன்யம் என்பது ஜன்மம் முதலான ஆறு விகாரங்கள் அற்றதாகும். அந்த சைதன்யத்தின் ப்ராகபாவம் முதலானவைகள் ஸ்வயமாகவோ மற்ற ப்ரமாணங்கள் மூலமாகவோ சித்திக்காது.

வ்யாக்யானம் : ஸம்வித் என்பது ஸ்வரூபத : ஜன்மாதி விகாரங்கள் அற்றது. எப்படி அக்னி என்றவஸ்துவில் சீதளம் என்ற தர்மம் இருக்கமுடியாதோ அதுபோல்

ஸம்வித் என்பதில் எவ்வித விகாரங்களும் இருக்கமுடியாது. ஏனெனில் ஸம்வித் என்பதற்கு ப்ராக் அபாவம் என்பதே இருக்கமுடியாது. அதனுல் ஸம்வித் என்பதில் ப்ராகபாவம் அனுபவிக்கப்படுகிறது என்ருே அல்லது அந்த ப்ராக் அபாவத்தை ஸம்வித் என்பதே ப்ரகாசப்படுத்துகின்றது என்ருே சொல்லமுடியாது. அதேபோல் வேறுப்ரமாணுந்தரத்திஞல் அறிந்திருந்தால்தான் அதன் ப்ராகபாவம் இருப்பதாகச் சொல்லமுடியும். அதேபோல்ஸம்வித் என்பதை முன்ஞல் அறிந்திருந்தால்தான் அதன்ப்ராகபாவம் இருப்பதாகச்சொல்லமுடியும். இதுவரை ஸம்வித் என்பதே இல்லையென்றும், இனிமேல்தான் ஸம்வித் உண்டாக வேண்டும் என்றும் சொல்லப்படுமாஞல் அந்த ப்ராகபாவம் ஸம்வித்ப்ராகபாவம் என்று எப்படிச் சொல்லமுடியும்? ஸம்வித் உண்டான பிறகேஸம்வித் இருக்கமுடியும் என்பதால், ஸம்வித்என்பதின் ப்ராகபாவமோ, அதன் ஜன்மாவோ, ஸம்வித் என்பதால் ப்ரகாசப்படுத்தப்படுகிறது என்று சொல்வது விரோதமாகும், வேறு ப்ரமாணத்திஞல் அறியப்படுவதாகச் சொல்லப்படுமாஞல் அது ப்ரமேயம் என்ருகும். ப்ரமேயம் என்ருல் ஜடம் (அநித்யம்) என்ருகும். (எது மானவேத்யமோ அது ஜடம், அநித்யம்) ஸ்வவேத்யம் என்று சொன்ஞலும் சரி, அன்யவேத்யம் என்று சொல்லப்பட்டாலும் சரி அது ஜடம் என்றே சித்திக்கும். ஆகவே, ஸம்வித் என்பது ஜன்மாதி தர்மங்கள் அற்றது என்ற காரணத்திஞல், கூடஸ்த்தம் ஸாத்யம் என்று சொல்லமுடியாது.

**31.** அவதாரிகை : ஸம்வித் என்பதை அறியாமலேயே அதன் ப்ராகபாவம் இருப்பதாக சொல்லப்படுகிறதா அல்லது அறிந்தே அவ்விதம் சொல்லப்படுகிறதா? அறியாமலேயே ப்ராகபாவம் இருப்பதாக சொல்லமுடியாது.

**ச்லோகம் :**

अबुध्यमानो न हि संविदं तत् संबन्धि किंचित्प्रतिपत्तुमीशः ।
न बुध्यममानोऽपि तथा तदा हि न संविदेषा विषयत्वहेतोः

**ச்லோகார்த்தம் :** (தர்மியான) ஞானம் என்பதை அறியாமல், அது ஸம்பந்தப்பட்ட எதையும் ஜன்மாதி தர்மமமென்று அறிவதற்கு முடியாது. ஞானம் என்பதை அறிந்துகொண்டாலும் அது ஸம்பந்தமான (எதையும்) ஒன்றையும் அறிவதற்குமுடியாது. ஏனெனில் அதுவிஷயமாக ஆகின்றதால் அது ஞானமாக ஆகாது.

**வ்யாக்யானம் :** ஸம்வித் என்ற தர்மிஞானம் இல்லாமல் அதன் தர்மங்கள் அறியப்படுவதாகச்சொல்லமுடியாது. ஸம்வித் என்பது அறியப்படுவதாகச் சொல்லப்படுமாஞல் அதுவிஷயமாக ஆகின்றதால் அதை ஸம்வித் என்றே சொல்லமுடியாது. ஜடம் என்றே சொல்ல நேரிடும்.

**32.** அவதாரிகை : எது ஞானஸாத்யமாக இல்லையோ அது கூடஸ்த்தமாக இருக்கமுடியாது என்று வ்யதிரேகமுகமாக தெரிவிக்கப்படுகிறது. (முன்ஞல் எது ஞானஸாத்யமோ அதுகூடஸ்த்தமாகத்தான் இருக்கவேண்டும் என்று சாதிக்கப்பட்டது)

ச்லோகம் :

जन्या न मुक्तिर्घटते कुतश्चिद्विद्याफलत्वादिति पूर्वहेतोः ।
यद्यद्धि जन्यं जगति प्रसिद्धं तत्तन्न विद्याफलमध्वरादि

ச்லோகார்த்தம் : மோக்ஷம் என்பது ஜன்யமாக இருக்குமானுல் அது யுக்தி யுக்தமாக ஆகாது. ஏனெனில் அது வித்யாபலம் என்ற காரணம் (ஹேது) முன்பே சொல்லப்பட்டது. எது ஜன்யம் என்று லோகப்ரசித்தமாக இருக்கிறதோ அது ஆகாசத்தைப்போல வித்யாபலமாக இருக்கமுடியாது.

வ்யாக்யானம் : எவை எல்லாம் உண்டாகின்றதோ அவை எல்லாம் வித்யாபலமாக இருக்கமுடியாது. ஆகாசாதிகள் வித்யாபலமில்லை. யாகாதிக்ரியையினுல் ஏற்படும் ஸ்வர்க்காதிபலம் கூடஸ்த்தமல்ல. நித்யமல்ல.

**33.** அவதாரிகை : இதுவரை சொல்லப்பட்ட காரணங்களினுல் மோக்ஷம் என்ற பலத்திற்கு கர்மா என்பது உபயோகமில்லை என்று அறியவேண்டும்.

ச்லோகம் :

मोक्षस्वरूपे विफलक्रियोऽसौ विद्याफलत्वादिह यद्यदेवम् ।
तत्तत्तथा दृष्टमशेषमेव यथैव रज्ज्वादितमोनिवृत्तिः

ச்லோகார்த்தம் : மோக்ஷஸ்வரூபம் என்பது வித்யாபலமாக இருக்கின்றதால் ஒரு புருஷனின்க்ரியை என்பது நிஷ்பலமே யாகும், ரஜ்ஜு முதலானவைகளின் அஞ்ஞானநிவர்த்தியைப்போல் எது வித்யாபலமோ அவையெல்லாம் கர்மபலமாகாது என்று நம்மால் அறியப்படுகிறது.

வ்யாக்யானம் : மோக்ஷத்திற்கும் கர்மாவிற்கும் ஸாத்யஸாதன பாவம் கிடையாது என்பதால் மோக்ஷம் கர்மஸாத்யமில்லை என்று ப்ரதிஷேதமுகமாகவும் அறியப்படுகிறது. அதனுல் ஸம்வித் என்பது கூடஸ்த்தம் என்று சித்திக்கின்றது. இந்தவிதம் முக்தி என்பது கர்ம ஸாத்யமல்ல என்று ப்ரதிஞ்ஞை செய்து தெரிவிக்கப்பட்டது.

**34.** அவதாரிகை : ஸாயுஜ்யம் முதலான முக்தி என்று சொல்லப்படுவது கர்ம ஸாத்யமாக இருக்கின்றதால், முக்தி என்பது க்ரியாஸாத்யமில்லை என்று எப்படிச் சொல்வது ?

ச்லோகம் :

सायुज्यादि न मोक्षपक्षपतितं विद्याफलत्वाद्धतेर्मानस्याक्रिययोपजन्यत
इदं यस्मादुपास्त्याख्यया सायुज्यादिविवादगोचरपदं निःश्रेयसं नो
भवेत्कार्यत्वादिह यद्यदीदृशमदो निःश्रेयसं नेक्षितम् यद्वत्कुड्यघटादि तादृशमिदं
तस्मादिदं तादृशं युक्तं कल्पयितुं न तद्धिसदृशं तादृङ् न दृष्टं यतः

ச்லோகார்த்தம் : வித்யாபலமாக இல்லாததால் ஸாயுஜ்யம் முதலானவை மோக்ஷமென்று சொல்லமுடியாது. ஏனெனில் ஸாயுஜ்யம் முதலானவை உபாஸனம் என்று சொல்லப்படுகின்ற மானஸக்ரியையால் உண்டானதேயாகும். விவாதத்திற்கு விஷயமாக இருக்கின்ற ஸாயுஜ்யம் முதலானவை கார்யமாக இருப்பதால் மோக்ஷமாக ஆகாது. சுவர், கடம் முதலானவைகள் போல் எது க்ரியாபலமோ அது மோக்ஷமாகாது.

ஆகவே, க்ரியாஸாத்யமான ஸாயுஜ்யம் முதலானவைகள் மோக்ஷமென்றுசொல்லப்படுவது யுக்தியுக்தமாக ஆகாது. அவ்விதம் அறியப்படவுமில்லை.

வ்யாக்யானம் : ஸர்வ அனுத்மஸ்வரூப நிவர்த்தியே ஆத்மஸ்வரூபம் என்றும், அதுவே முக்தி என்றும் சொல்லப்படுமானால், ஆத்மா கூடஸ்த்ஸ்வரூபம் என்று சொல்வதற்கு எவ்வித விரோதமும் இல்லை. அதனால் இவ்விதம் ஒத்துக்கொள்ளப்படுவதில் ஆக்ஷேபம் ஏதுமில்லை. ஆகவே தமோமயமான ஜன்மாவையோ, நாசத்தையோ மோக்ஷமென்று சொல்லவேண்டிய அவஸ்யமில்லை. தாமோமயப்ரபஞ்சநாசமே மோக்ஷமென்று சொல்லப்படுமானால் தமோநாசம் என்பது ஆத்ம ஸ்வரூபமே என்பதால் ஆத்மா கூடஸ்த்தநித்யம் என்பது சித்திக்கின்றது. அதனால் இதில் தூஷணத்திற்கே இடமில்லை.

**35.** அவதாரிகை : உற்பத்தி விநாசம் உடையது என்றால், அதை முக்தி என்றே சொல்லமுடியாது என்பதை வேறு காரணங்களைக் கொண்டு விளக்கப்படுகிறது.

ச்லோகம் :

सदसदुद्भवनं न विमुक्तता सदसदुद्भुवनानुपपत्तितः ।
सदसतोर्नशनं न विमुक्तता सदसतोर्नशनानुपपत्तितः

ச்லோகார்த்தம் : மோக்ஷம் என்பது ஸத்தினுடைய உற்பத்தியென்றோ அல்லது அஸத்தின் உற்பத்தி என்றோ சொல்லமுடியாது. ஏனெனில் ஸத்திற்கோ அஸத்திற்கோ உற்பத்தி என்பது பொருந்தாது. அதேபோல் மோக்ஷம் என்பது ஸத்தினுடைய நாசமோ அஸத்தினுடைய நாசமோ ஆகாது. ஏனெனில் ஸத்திற்கும் அஸத்திற்கும் நாசம் என்பது பொருந்தாது.

வ்யாக்யானம் : முக்தி என்பது, உற்பத்தி உடையது என்றோ அல்லது நாசமுடையது என்றோ சொல்லப்படுமானால், அந்த முக்தி ஸத்தா அஸத்தா என்று விசாரிக்கப்படுமானால், ஸத் என்றாலும் உற்பத்தி விநாசம் சொல்லமுடியாது அஸத் என்றாலும் உற்பத்தி விநாசம் சொல்லமுடியாது. துர்நிரூபம். இவ்வித காரணங்களைக் கொண்டும் மோக்ஷம் என்பது கூடஸ்த்த நித்யம் என்பதை ஒப்புக்கொண்டேயாக வேண்டும்.

**36.** அவதாரிகை : உற்பத்தி விநாசம் உடையதாக இருந்தபோதிலும் சாலோக்யம் சாயுஜ்யம் முதலானவைகளை முக்தி என்று சொல்லலாமே?

ச்லோகம் :

न च तमोमयजन्म विमुक्तता न हि तदिष्टमनिष्टतरं हि तत् ।
न खलु कल्पितजन्मविमुक्ततां समुपगच्छति तद्वितथं यतः

ச்லோகார்த்தம் : மித்யாவஸ்துவின் ஜன்மமானது மோக்ஷமாகாது. அது இஷ்டமாகாது. மிகவும் அநிஷ்டமேயாகும். அநிர்வசனீயமானவஸ்துவின் (கல்பிதஜன்ம) உற்பத்தி விமுக்ததன்மையை அடைவதில்லை. மித்யை என்பதால் அத்யந்தம் அநிஷ்டமானதாலும் அது மோக்ஷமாக ஆகாது.

வ்யாக்யானம் : ஸத், அஸத் என்ற இரண்டிற்குள் ஏதோ ஒன்றுக்கு உற்பத்தியோ, விநாசமோ இருப்பதாக அறியப்படுமானால் அதை அஞ்ஞான கார்யம் என்று (மித்யை) சொல்லவேண்டும். அதனால் மோக்ஷம் என்பதும் விநாசமுடையது என்றால், மித்யை என்றே சொல்ல நேரிடும். எது அபீஷ்ட்டமோ - எது ஹிதகரமோ அதுவே மோக்ஷம். அதனால் ஸத்தாக இருந்தால்தான் நித்யமாக இருக்கும். தமோமயமான ஜன்மாவையோ, விநாசத்தையோ மோக்ஷம் என்று சொல்வது பொருந்தாது. அவை அனர்த்தகரம். அஞ்ஞானமயம் என்றால் அபீஷ்ட்டமாக இருக்கமுடியாது. அதனால் சாலோக்யாதிகளை முக்தி என்று சொல்லப்படுவதை அங்கீகரிக்கமுடியாது.

**37.** அவதாரிகை : அஞ்ஞானம் என்றும் அதன் கார்யம் என்றும் சொல்லப்படும் ஸர்வகார்யங்களின் நாசம் என்பதையே முக்தி என்று சொல்லலாமே?

**ச்லோகம் :**

अथ तमोमयविश्वविकल्पना विलयनात्मकमभ्युपगम्यते ।
सकलदूषणजातविवर्जितं तदिह मोक्षपदं न निवार्यते

**ச்லோகார்த்தம் :** மித்யா ப்ரபஞ்ச கல்பனையில் நாசமே மோக்ஷமென்று ஒத்துக்கொள்ளப்படுமானால் ஸகலதோஷங்களும் அற்ற இந்த மோக்ஷபதமானது எங்கள் மதத்தில் நிஷேதம் செய்யப்படுவதில்லை.

வ்யாக்யானம் : ஸர்வ அனாத்மஸ்வரூபநிவர்த்தியே ஆத்மஸ்வரூபம் என்றும் அதுவே முக்தி என்றும் சொல்லப்படுமானால், ஆத்மஸ்வரூபம் கூடஸ்த்தம் என்று சொல்வதற்கு எவ்வித விரோதமும் கிடையாது. ஆகையால் இதை ஒத்துக்கொள்வதில் ஆக்ஷேபம் ஏதுமில்லை. ஆகவே தாமோ மயமான ஜன்மாவையோ நாசத்தையோ மோக்ஷமென்று சொல்லவேண்டிய அவஸ்யம் ஏதுமில்லை. தமோமயப்ரபஞ்ச நாசமே மோக்ஷம் என்று சொல்லப்படுமானால் தமோநாசம் என்பது ஆத்மஸ்வரூபமே என்பதால் ஆத்மா கூடஸ்த்த நித்யம் என்று சித்திக்கின்றது. அதனால் இதில் தூஷணத்திற்கே இடம் ஏதுமில்லை.

**38.** அவதாரிகை : ஞானத்தினால் (அஞ்ஞானம்) அவித்யை என்பது முற்றிலும் நாசத்தை அடைகின்றதா அல்லது ப்ராரப்தவஸாத் சிறிதளவு மிச்சம் இருக்கிறதா?

**ச்லோகம் :**

सम्यग्ज्ञानविभावसुः सकलमेवाज्ञानतत्संभवं सद्यो वस्तुबलप्रवर्तनमरुद्व्यापारसंदीपितः ।
निर्लेपेन हि दंदहीति न मनागप्यस्य रूपान्तरं संसारस्य शिनष्टि तेन विदुषः सद्यो विमुक्तिर्ध्रुवा

**ச்லோகார்த்தம் :** வஸ்துவின் ஆவிர்பாவம் என்ற காற்றோட்டத்தினால் தூண்டிவிடப்பட்ட ஸம்யக்ஞானமென்ற அக்னியானது அஞ்ஞானம், அதன்கார்யம் என்ற எல்லாவற்றையும் சேஷமின்றி உடனடியாக தஹிக்கின்றது. ஸம்ஸாரத்தில் வேறுரூபம் எதுவும் சேஷிப்பதில்லை. (மிச்சமிருப்பதில்லை) ஆகையால் வித்வானுக்கு ஸத்யோமுக்தி என்பது நிச்சயம்.

வ்யாக்யானம் : மோக்ஷமென்பது கூடஸ்த்தம், நித்யம் என்பதை சித்தம் செய்யப்பட்டது. ஞானம் ஏற்பட்டவுடனேயே அவித்யை அதன் கார்யம் எல்லாவற்றிற்கும் நாசம் ஏற்படுகிறது என்று முன்பே விசாரித்து நிச்சயம் செய்யப்பட்டிருக்கிறது. ஆனாலும் அவித்யாநாசத்திற்கு பிறகும் தேஹபாதம் ஏற்படும் பர்யந்தம் மோக்ஷம் என்ற பலன் ஏற்படுவதில் காலதாமதம் இருக்கிறதா இல்லையா ? என்று அறியவேண்டுமென்ற இச்சையினால் இவ்வித ஆக்ஷேபம் செய்யப்படுகிறது.

வஸ்து ஞானம் ஏற்படுவதுதான் அஞ்ஞான நிவர்த்திக்கு காரணம். ஆகையால் ஸம்யக்ஞானமென்ற ப்ரஹ்மவிஷயகமான வஸ்துஞானமென்ற வாயுபலத்தினால் ஞானக்னி என்ற ஜ்வாலையுடன் கூடி அஞ்ஞானம் அதன் கார்யம் எல்லாவற்றையும் எரிக்கின்றது. ஸ்தூலதேஹம் சூக்ஷ்மதேஹம் இரண்டுமே அஞ்ஞான கார்யம் என்பதால் தத்வஞானம் ஏற்பட்டவுடன் அஞ்ஞானகார்யம் என்பதும் அஞ்ஞான ஆச்ரயமின்றி இருக்கமுடியாது. அதனால் ஞானம் ஏற்பட்ட உடனேயே ஸத்யோமுக்தி ஏற்படுகிறது என்பது நிச்சயம்.

**39.** அவதாரிகை : ஸம்யக்ஞானம் ஏற்பட்டவுடன் ஸத்யோ முக்திதான் ஏற்படுகிறது என்று சொல்லப்படுமானால், "தஸ்யதாவதேவசிரம்யாவன்னவிமோக்ஷயே" என்று (சாந்தோ. **6.14.** 2) ஜீவன் முக்தியைப் பற்றி சாஸ்திரங்களில் சொல்லப்படுகின்றதால் அந்த வாக்யங்களின் கதி என்ன ?

ச்லோகம் :

जीवन्मुक्तिप्रत्ययं शास्त्रजातं जीवन्मुक्ते कल्पिते योजनीयम् ।
तावन्मात्रेणार्थवत्त्वोपपत्तेः सद्योमुक्तिः सम्यगेतस्य हेतोः

ச்லோகார்த்தம் : ஜீவன் முக்தியைப் பற்றி தெரிவிக்கின்ற சாஸ்திரவாக்யங்கள் கல்பித ஜீவன் முக்தி விஷயத்தில் பொருத்தவேண்டும். அதனாலேயே அந்த வாக்யங்கள் அர்த்தவத் ஆகின்றது. இந்த காரணத்தினால் ஸத்யோமுக்தி என்பது யுக்தி யுக்தமாக ஆகிறது.

வ்யாக்யானம் : ஜீவன் முக்தி என்பதை தெரிவிக்கின்ற ச்ருதிவசனங்கள், அர்த்தவாதமாக கல்பிக்கப்படும் வாக்யங்கள், வித்யையை ஸ்துதிப்பதற்காக கல்பித ஜீவன் முக்தியை தெரிவித்தபோதிலும் (ஸ்வார்த்தபலவத்வம் இல்லாததால்) அவைகள் அப்ரமாணமென்று சொல்லமுடியாது.

**40.** அவதாரிகை : ஜீவன்முக்திநிலை என்பது வித்வான்களின் அனுபவசித்தமாக இருக்கின்றது என்று சொல்லப்படுமானால் அதை ஒத்துக்கொள்வதால் எந்தவிதமான பாதகமும் கிடையாது.

ச்லோகம் : यद्वा विद्वद्गोचरं योजनीयं तस्या विद्यालेशवत्त्वोपपत्तेः ।
तस्याभीष्टा निर्निमित्ता निवृत्तिर्यद्वा विद्यासंततिर्हेतुलेशः

ச்லோகார்த்தம் : அல்லது. ஜீவன் முக்தி சாஸ்திரம் ஞானி விஷயமாகவே பொருத்தப்படவேண்டும். ஏனெனில் அவித்யாலேசம் இருக்கின்றதென்பது பொருந்துகின்றது. அவித்யா லேசத்தின் நிவர்த்தி என்பது (ஞானம் என்பதைத் தவிர) வேறு எந்தக் காரணமுமில்லாமல் ஏற்படுவதாக ஒத்துக்கொள்ளப்படுகிறது. அல்லது வித்யையின் அனுவ்ருத்தியே அவித்யா நிவர்த்திக்கு ஹேதுவாக இருக்கிறது என்றே சொல்லலாம்.

வ்யாக்யானம் : வித்வான்களின் அனுபவசித்தமாக இருக்கின்ற ஜீவன் முக்தியைக் கொண்டு 'தஸ்யதாவதேவசிரம்' என்ற அனுபவசித்தமான ஒரு விஷயத்தையே தெரிவிக்கின்றது என்றே சொல்லவேண்டும். ஆனால் அவித்யாநிவர்த்திஏற்பட்டபிறகு சரீரத்துடன் இருக்கிறான் என்பது எப்படி பொருந்தும் என்றால், அவித்யா நிவர்த்திக்குப் பின் அவித்யாலேசம் இருக்கின்றதென்று சொல்லலாம். அவித்யாலேசத்தினால் அவித்யாகார்யமான ப்ராணாதி விவகாரங்கள் இருக்கின்றதென்றே சொல்லலாம். ஆனால் இந்த அவித்யாலேசம் நிவர்த்திப்பதற்காக வேறு ஸாதனம் ஏதும் தேவை இல்லை ஏற்பட்ட தத்வஞானம் என்பது (வித்யாஸந்ததி) தொடர்ந்து இருக்கின்றதால் அவித்யாலேசம் என்பது நாசத்தை அடைகின்றது என்பதால் அவித்யாலேசம் என்பதும் நிர்நிமித்தமாக நாசத்தை அடைகிறது என்று சொல்லப்படவில்லை. ஆகவே, மூலாவித்யை என்பது ஞானத்தினால்தான் நாசத்தை அடையவேண்டும். ஆகையால் ஞானம் தேவையில்லை என்று (வித்யாவையர்த்யம்) சொல்லப்படுவதை ஒப்புக்கொள்ளமுடியாது.

41. அவதாரிகை : வித்யை ஏற்பட்ட பிறகு அவித்யாலேசம் இருக்கின்றதென்று சொல்லப்படுவதை ஒத்துக்கொள்ள முடியாது. ஏனெனில் நிரவயவமான அவித்யை என்பதில் அம்ஸபேதம் இருப்பதாகச்சொல்வது சரியல்ல. வஸ்துபோதம் ஏற்பட்டவுடனேயே அவித்யை நாசமாகின்றது. அதன்பிறகு அவித்யாலேசம் இருப்பதாகச் சொல்வது பொருந்தாது. ஆனால் சாஸ்திரங்களில் அவித்யாகந்தம் என்றும், அவித்யாலேசம் என்றும், அவித்யாஸம்ஸ்க்காரம் என்றும் அவித்யாசாயை என்றும் ஜீவன் முக்த நிலையைப்பற்றி பலவிதமாக விளக்கம் சொல்லப்படுகிறது.

ச்லோகம் :

जीवन्मुक्तिव्यापृतेः प्रापको यस्तस्याविद्यालेशगन्धादिभाषा ।
नाविद्याया नापि भागस्य तस्यास्तस्मिन्पक्षे दुर्घटत्वाद्विमुक्तेः

ச்லோகார்த்தம் : ஜீவன்முக்தனைப் பற்றிய வ்யவஹாரத்தை ஏற்படுத்துவதும் அவித்யாலேசமென்றும் அவித்யாகந்தமென்றும் பலவிதமான பதங்களினால் சொல்லப்படுகின்றதுமான ஹேதுவானது (காரணம் என்பது) அவித்யையுமல்ல, அதன் அம்ஸமுமல்ல. ஏனெனில் இந்த பக்ஷத்தில் மோக்ஷம் ஸம்பவிக்காது.

வ்யாக்யானம் : தீபம் ப்ரகாசிக்க ஆரம்பித்த உடனேயே (உண்டாகின்ற போதே) இருள் என்பது முற்றிலும் நீங்கிவிடுகிறது என்பது ப்ரசித்தம். ஜீவன் முக்தர்களுக்கு பிக்ஷாடணம் முதலான கார்யங்கள் தொடர்ந்து இருப்பதைக் கொண்டு அதற்கு ஒரு காரணம் சொல்ல வேண்டியதாக இருக்கிறது. அந்த நிலையில் அவித்யை இருப்பதாகச் சொல்லமுடியாது என்பதால் லேசம், கந்தம் போன்ற பலவிதசப்தங்களால்

சொல்லப்படுகிறது. ஆனால் அந்த சப்தங்களுக்கு அர்த்தம் ஏதுமில்லை. அவித்யையோ, அதன் லேசமோ இருக்குமானால் அது முக்திக்கு விரோதம்.

**42.** அவதாரிகை : அப்படியானால் ஜீவன் முக்திநிலையில் உள்ள விவகாரங்களுக்கு காரணம் என்ன சொல்லமுடியும்?

ச்லோகம் :

गन्धच्छायालेशसंस्कारभाषा विज्ञातव्या भाष्यकारीयतन्त्रे ।
स्वाविद्याया बाधितायाः प्रतीतेः पौर्वापर्येणार्थमालोच्य बुध्या

ச்லோகார்த்தம் : பாஷ்யகாரரால் இயற்றப்பட்ட க்ரந்தங்களில் பாதித அவித்யையின் ப்ரதீதியே இவ்விதம் அவித்யாகந்தம் அவித்யா லேசம் அவித்யா சாயை அவித்யாஸம்ஸ்காரம் என்றெல்லாம் சொல்லப்படுகிறது என்பதை பூர்வாபர அர்த்தங்களை விவேகத்துடன் விசாரித்து அறியப்படவேண்டும்.

வ்யாக்யானம் : பாஷ்யம் முதலான க்ரந்தங்களில் முன்பின் சொல்லப்படும் விஷயங்களை விவேகித்து விசாரிக்கின்றபோது பாதிதமான அவித்யையின் அனுவ்ருத்தி என்றே சொல்லப்படுகின்றது. இதையே அவித்யாலேசம், அவித்யாகந்தம், அவித்யாஸம்ஸ்க்காரம் அவித்யாசாயை என்றும் நான்கு விதமான சப்தங்களால் பாஷ்யம் முதலான க்ரந்தங்களில் ஆங்காங்கு சொல்லப்பட்டிருக்கின்றது.

**43.** அவதாரிகை : ஜீவன் முக்தி அவஸ்தையில் கந்தம் முதலான சப்தங்களினால் சொல்லப்படும் விஷயம் அர்த்தவத்தாக இருக்கின்றதென்றே சொல்லவேண்டும். நேரிடையாக அர்த்தம் சொல்லமுடியவில்லை என்றாலும் அர்த்தம் கண்டுபிடிக்கப் படவேண்டியதாக இருக்கின்றது. ஆகையால் பாதித அவித்யையே ஜீவன் முக்தனின் விவகாரத்திற்கு காரணம் என்று சொல்லவேண்டும்.

இவ்விதம் அவித்யை என்பது பாதிதம் என்றால் அதன்பிறகு அதன் அனுவ்ருத்தி எப்படி இருக்கமுடியும்?

ச்லோகம் :

जीवन्मुक्तिस्तावदस्ति प्रतीतेर्द्वैतच्छाया तत्र चास्ति प्रतीतेः ।
द्वैतच्छाया चास्ति लेशप्रतीते स्तस्मिन्नर्थे स्वानुभूतिः प्रमाणम्

ச்லோகார்த்தம் : அனுபவ பலத்தினால் ஜீவன் முக்தி என்பது இருக்கின்றது என்றும் த்வைத அனுபவம் இருப்பதால் த்வைத ஆபாஸமும் இருக்கின்றது என்றும் சொல்லவேண்டும். அவித்யா லேசத்தினால் த்வைத ஆபாஸம் ஏற்படுகிறது. இந்த விஷயத்தில் ஸ்வஅனுபவமே ப்ரமாணமாகும்.

வ்யாக்யானம் : வித்வான்களின் அனுபவத்தைக்கொண்டு ஜீவன்முக்தி நிலையை ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். அதனால் அந்த நிலையில் த்வைத வ்யவஹாரமும் இருக்கின்றது. அதனால் பாதித அவித்யா அனுவ்ருத்தி இருக்கின்றதென்றே சொல்லவேண்டும். அவ்விதம் இல்லையென்றால் த்வைத வ்யவஹாரமே இருக்கமுடியாது. ஆகையால் பாதித அனுவ்ருத்தி என்பதையே லேசமென்றும் சாயை என்றும் பலவித

சப்தங்களால் சொல்லப்படுகிறது. அதனால் அவித்யை பாதிதமான பிறகு அதன் அனுவ்ருத்தி எப்படி இருக்கமுடியும் என்ற கேள்விக்கே இடமில்லை. ஏனெனில் வித்வான்கள் அனுபவமே இதில் ப்ரமாணமாகின்றது. ஜீவன் முக்த நிலையில் வ்யவஹாரம் இருக்கின்றது என்பதைக் கொண்டு பாதித அனுவ்ருத்தி இருக்கிறதென்றே ஒத்துக்கொள்ளத் தான் வேண்டும்.

**44.** அவதாரிகை : ஞானிக்கும் அவித்யா லேசம் இருப்பதாக சொல்லப்படுமானால் முன்னால் இருந்த அஞ்ஞான நிலைக்கும், இப்போது இருக்கின்ற முக்த நிலைக்கும் என்ன விசேஷம் ?

**ச்லோகம் :**

ब्रह्मात्मत्वं सान्तरायं पुरस्ताद्बोधोत्पत्तौ ध्वस्तमोहान्तरायम् ।
यद्यप्येवं द्वैतलेशानुवृत्तेः प्रत्यक्षत्वान्मोहलेशोऽभ्युपेयः

**ச்லோகார்த்தம் :** முன்பு ப்ரஹ்மபாவம் என்பது அஞ்ஞானத்தினால் ப்ரதி பத்தமாக இருந்தது. ஞானோற்பத்தி காலத்தில் அஞ்ஞானம் (மோஹம்) நாசத்தை அடைகிறது. இவ்விதம் அவித்யா நாசம் ஏற்பட்ட போதிலும் த்வைத தோற்றத்தின் அனுவ்ருத்தி இருக்கின்றதென்பது ப்ரத்யக்ஷமாக அறியப்படுகின்றதால் அவித்யா லேசம் இருக்கின்றதென்றே ஒத்துக்கொள்ளப் படவேண்டும்.

**வ்யாக்யானம் :** சாக்ஷாத்காரம் ஏற்படுவதற்கு முன்பும் த்வைத ப்ரதீதி இருந்தது. சாக்ஷாத்காரம் ஏற்பட்ட பிறகும் த்வைத ப்ரதீதி இருக்கின்றதென்று சொல்லப்படுமானால் இரண்டு நிலைக்கும் என்ன விசேஷம் ? என்றால், இரண்டிற்கும் மஹத்தான வித்யாஸம் இருக்கின்றது. அஞ்ஞானதசையில் இருந்த மோஹம் ஆத்மசாக்ஷாத்காரத்தினால் நாசமாகிவிடுகிறது. ஆனால் முன்னால் த்வைத ப்ரதீதி எப்படி அனர்த்த கரமாக இருந்ததோ அதுபோல் இப்போது அனர்த்தகரமாக இல்லை. ஏனெனில் ஸ்வப்னப்ர பஞ்சம் எவ்விதம் ப்ரதீதிமாத்ரமாக இருக்கிறதோ அதுபோல் பாதித அனுவருத்தி மாத்ரமாக (த்வைதப்ரதீதி) இருக்கின்றதால் அனர்த்தகரமாக இல்லை. இதுவே மஹத்தான விசேஷம். உதாரணமாக கண்ணாடி என்ற உபாதி இருக்கின்றபர்யந்தம் அதில் வேறுஒன்று தன்னைத்தவிர வேறாக இருப்பது போல் தோன்றுகிறது. இவ்விதம் உபாதியைக்கொண்டு பேதஞானம் ஏற்படுவதுபோல் தத்துவசாக்ஷாத்காரம் ஏற்பட்டபிறகும் அந்த:கரணம் என்ற உபாதி இருக்கின்றவரை பேதம் அறியப்படும். அவ்விதம் பேதத்தோற்றம் இருந்தபோதிலும், அதற்காக அந்தபேதம் என்பது ஸத்யம் என்ற எண்ணம் ஞானிக்கு ஏற்படாது. அதனால் வித்வானுக்கு ஜீவன் முக்தநிலையை ஒத்துக்கொள்ளத்தான் வேண்டும். அபரோக்ஷசாக்ஷாத்காரம் ஏற்படவில்லை என்று சொல்லுவதற்கு முடியாது. மேலும் ஈச்வரனுக்கும் ஆத்மஸ்வருபத்தை மறைக்கின்ற ஆவரணம் இல்லையென்று சொல்லப்பட்டபோதிலும் விக்ஷேபம் இருக்கிறதென்றே சொல்லப்படுகிறது. அதேபோல் ஜீவன் முக்தனுக்கும் ஆவரணமில்லை விக்ஷேபம் இருக்கிறதென்றே சொல்லவேண்டும். ஆகவே, அஹம்ப்ரஹ்மாஸ்மி என்றப்ரஹ்மசாக்ஷாகாரம் ஏற்பட்டபிறகு ப்ராரப்தம் என்ற ப்ரதி பந்தகம் இருக்கிற

தென்றே ச்ருதி, ஸ்ம்ருதி, வித்வத்அனுபவம் இவைகளைக்கொண்டு ஒத்துக்கொண்டேயாக வேண்டும்.

**45.** அவதாரிகை : அவித்யாலேச அனுவ்ருத்தியினுல் ப்ராரப்தவஸாத் இந்த சரீரம் அனுவ்ருத்திப்பதாகச் சொல்லப்படுமானால் இதேபோல் இந்தசரீரபாதத்திற்கு பிறகும் பாதித அனுபவத்தியினுல் மறுபடி சரீரம் ஏற்படலாமே?

**ச்லோகம் :**

तस्माज्जीवन्मुक्तरूपेण विद्वानारब्धानां कर्मणां भोगसिद्‌ध्यै ।
स्थित्वा भोगं ध्वान्तगन्धप्रसूतं भुक्त्वाऽत्यन्तं याति कैवल्यमन्ते

**ச்லோகார்த்தம் :** ப்ராரப்தகர்மங்களின் போகத்திற்காக வித்வான் ஜீவன்முக்தனுக இருந்துகொண்டு அவித்யாலேசத்தினுல் ஏற்ப்டும் போகங்களை அனுபவித்து கடைசியில் விதேஹமுக்தியை அடைகிருன்.

வ்யாக்யானம் : பலத்தை கொடுக்க ஆரம்பிக்கப்பட்டப்ராரப்தகர்மாக்கள் அதன்போகத்தை கொடுத்தபிறகு நாசமாகின்றது. ஆத்மசாக்ஷாத்காரம் ஏற்பட்டபிறகு ஸஞ்சிதம் ஆகாமி என்ற கர்மாக்களும் ஞாஞக்னியினுல் நாசத்தை அடைகின்றது. அதன் பிறகு ஸர்வத்திற்கும் மூலகாரணமான அவித்யைநாசம் அடைகின்றதாலும் வித்யாஸந்ததி தொடர்ந்து இருப்பதாலும் அவித்யை என்பது அதன் கார்யத்தை தொடர்ந்து செய்வதற்கு முடியாது. அதனுல் மறுபடி தேஹாந்தரப்ராப்தி என்பதும் இல்லாததால் கைவல்யநிலையை அடைகிருன் என்பது சித்தம்.

மேலும் அஞ்ஞானம் என்பதில் பலவிதசக்திகள் இருக்கின்றது அவித்யா நிலையில் ப்ரபஞ்சம் ஸத்யம் என்றும் ச்ரவணுதிகளைச் செய்கின்ற நிலையில் ப்ரபஞ்சம்வ்யாவஹாரிகம் என்றும், ஆத்மசாக்ஷத்காரம் ஏற்பட்டபிறகு ப்ரபஞ்சம் ப்ராதிபாஸிகம் என்றும் அறியப்படுகிறது. இந்தவிதம் ஸத்யம் துச்சா அநிர்வசீனீயா சத்ரிதாமாயா வ்யவஸ்திதா என்றுசொல்லப்படுகிறது. ஆகவேச்ரவணுதிகளினுல் வ்யாவஹாரிகமாக அறியப்பட்டப்ரபஞ்சமே சாக்ஷத்காரத்தை அடைந்துபிறகு ப்ராதிபாஸிகம் என்றே அறியப்படுகிறது. ஆகவே, ஆத்மசாக்ஷரத் காரத்திற்கு பிறகு வறுக்கப்பட்டபீஜம் எப்படி மறுபடி முளைப்பதற்குரிய சக்தியை இழந்து விடுகிறதோ அதுபோல் பாதிதமானப்ரபஞ்ச தோற்றமாத்ரமாக அந்த சக்தி எஞ்சி இருக்கின்றது. அதையே அவித்யாலேசம் என்பது போன்ற சப்தங்களால் சொல்லப்படுகின்றது. ப்ராபரப்த போகம் முடிந்த பிறகு அவித்யாசக்தியானது முற்றிலும் நிவர்த்திக்கின்றதால் அதுவேகைவல்யநிலை என்று சொல்லப்படுகிறது. அதனுல் மறுபடி ஜன்மா என்பதே ஏற்பட முடியாது.

**46.** அவதாரிகை : சொல்லப்பட்ட விஷயத்தில் என்னப்ரமாணம்?

**ச்லோகம் :**

क्षरं प्रधानममृताक्षरं हरः क्षरात्मानावीशते देव एकः ।
तस्याभिध्यानाद्योजनात्तत्त्वभावाद्भूयश्चान्ते विश्वमायानिवृत्तिः

**ச்லோகார்த்தம் :** மாயை என்பது க்ஷரம், ஈச்வரன் என்பதேநாசமற்ற அக்ஷரம் ஈச்வரன் ஒருவனே மாயை ஜீவன் இவை இரண்டையும் ஆளுகின்ருன். சிரவணமனன நிதித்யாஸனத்தின் மூலம் அந்த ஈச்வரன் அபரோக்ஷமாக அறியப்படுகின்றதால் மாயைநிவர்த்திக்கின்றது. மீண்டும் ப்ராரப்த அவஸான காலத்தில் மாயை என்பது முற்றிலும் நிவர்த்திக்கின்றது.

**வ்யாக்யானம் :** ஜீவன் முக்திநிலையில் ப்ராரப்தத்தினுல் ஏற்படும் போகங்கள் அனுபவித்து நாசத்தை அடைந்தபிறகு விதேஹகைவல் யத்தை அடைகிருன் என்று "அஜாஹ்யேகாபோக்த்ரு போக்யார்த்தயுக்தா" என்ற ச்வேதாச்வரதரமந்தரம் தெரிவிக்கின்றது. இதனுல் 'அஜாம் ஏகாம்' என்பதால் எந்தப்ரதானத்தைப்பற்றி தெரிவிக்கின்றதோ அதையே இந்தச்லோகத்தின் சைதன்யப்ரபதிபலனத்துடன் கூடிய மாயையேக்ஷரம் என்றசப்தத்தினுல் சொல்லப்படுகிறது. இவ்விதம் க்ஷரம் என்று சொல்லப்படும் ப்ரதானத்தையும் அம்ருதாக்ஷரம் என்று சொல்லப்படும் ஈச்வரனையும் ஸர்வவ்ருத்திகளிலிருந்துப்ரதிபலிக்கின்ற ப்ரஹ்மசைதன்யம் என்பது அஞ்ஞானம் அதன்கார்யம் எல்லாவற்றையும் நாசம் செய்து ஸர்வத்திற்கும் ப்ரகாசமாக இருக்கிறதால், க்ஷரமானப்ரதானம் அக்ஷரமான ஜீவன் இரண்டிற்கும் அதிஷ்ட்டானமாக இருந்து ரக்ஷிக்கின்றது. ச்ரவணமனனநிதித்யாஸங்களினுல் இப்பேர்ப்பட்டப்ரஹ்ம ஸ்வரூபசாக்ஷத்காரம் ஏற்படுவதால் ஸம்ஸாரகாரணமான விச்வமாயை என்பது நிவர்த்திக்கின்றது.

க்ஷரம் என்பதால் ப்ரதானத்தையும் அதற்கு அதிஷ்டடானமான ஈச்வரஸ்வ ரூபத்தை அம்ருதம் அக்ஷரம் என்று சுத்தப்ரஹ்மத்தை தெரிவிக்கிறது என்றும் சொல்லலாம். அதிஷ்ட்டானஸ்வரூபத்திற்கு ஒருபோதும் விநாசமில்லை. அதனுல் அவினுசி அக்ஷரம் என்று சொல்லலாம். அல்லது விநாசியான (க்ஷரம்) போக்யரூபமானப்ரதானத்தையும், அம்ருதாக்ஷரம் என்று சொல்லப்படும் எந்தசை தன்யம் வ்யாபிக்கின்றதோ அந்தசைதன்யம் போக்த்ரு ரூபமான ஜீவனை குறிக்கின்றதால் ஜீவனை அக்ஷரம் என்று தெரிவிப்பதாகவும் சொல்லலாம். அதாவது முதலில் அம்ருதாக்ஷரம் என்பதை ஹரன் என்பதுடன் சேர்த்து ஈச்வரன் என்று சொல்லப்பட்டது. ஆனுல் அப்படித்தான் சொல்லவேண்டும் என்ற நிர்பந்தம் ஏதுமில்லே. அக்ஷரசப்தம் ஜீவனே குறிக்கின்றது என்றே சொல்லலாம். இந்தவிதம் க்ஷரம் என்றமாயை அக்ஷரம் என்ற ஜீவன் இரண்டையும் ஹரன் என்ற ஈச்வரன் காப்பாற்றுகிருர். (ஈசனம்செய்கிருர்) என்றே சொல்லலாம். இவ்விதம் போக்தா, போக்யம் என்பவைகளுக்கெல்லாம் அதிஷ்ட்டானமாக ஸர்வத்திலும் அனுஸ்யூதமாக இருக்கின்ற ஸ்வரூபம் எதுவோ அதுவே ஸர்வத்தையும் நியமனம் செய்கின்றது. இதே விஷயம் கீதையிலும் "யஸ்மாத்க்ஷரமதிதோSஹம்க்ஷராதபி சோத்தம:1 அதோச்மிலோகே வேதேசப்ர தித: புருஷோத்தம: என்று பகவானுல் சொல்லப்பட்டிருக்கிறது. க்ஷரம் அக்ஷரம் என்ற இரண்டிற்கும் சிறந்தவரான புருஷோத்தமர் என்று எந்த சைதன்யம் க்ஷரம் அக்ஷரம் என்ற ஸர்வத்திற்கும் அதிஷ்ட்டானமாக இருக்கின்றதோ அதுவே ப்ரத்யக் சைதன்யம் என்று த்யானித்து ஸதாஸர்வதா அந்தஸ்வரூபத்திலேயே சித்தம் நிலேத்திருக்குமானுல் அபரோக்ஷசாக்ஷாத்காரம் ஏற்படும். இவ்விதம் தத்வபாவம் (ஸ்வஸ்வரூபபாவம்) ஏற்படுகின்றபோது விச்வமாயா = விச்வாகாரமாக தோற்றம் அளிக்கின்ற மாயையானது

நிவர்த்திக்கின்றது. அதன் பின் கைவல்யத்தை அடைகிறுன். இதே கருத்தை "யோமாமேவ ஸம்மூடா ஜாஞதி புருஷோத்தமம், ஸர்வவித்பஜதிமாம் ஸர்வபாவேனபாரத" புருஷோத்தமனுன என்னே அறிகின்றவன் எவனே அவனே ஸர்வவித்தாகவும், ஸர்வமாகவும், ஆகிருன்என்று தெரிவிக்கின்றது. இந்தவிதம் பல வாக்யங்கள் ப்ராரப்த கர்ம போகத்தினுல், மாயை என்பதும் அதன் லேசம் என்பதும் நிவர்த்திக்கின்றதால் கைவல்யத்தை அடைகிருன் என்று தெரிவிக்கிறது.

**47.** அவதாரிகை : நிர்க்குண வித்யையைப் பற்றி உபதேசிக்கின்ற இடத்தில் அர்ச்சிராதி மார்க்கங்களைப் பற்றியும் ச்ருதி தெரிவிக்கின்றது. அதனுல் அர்ச்சிராதி (உத்தரயண) மார்க்கத்தின்மூலமாகவே மோக்ஷம் ப்ராப்தம் என்று அறியப்படுகிறது. அதனுல் 'அத்ரப்ரஹ்ம ஸமச்னுதே' என்று ஞான ஸமகாலே மோக்ஷம் என்று எப்படி சொல்லமுடியும் ?

ச்லோகம் :

ब्रह्मादीनामस्ति मुक्तिः श्रुतिभ्यस्तेषामेषा नार्चिराद्या गतिर्वः ।
तस्मादस्या निर्गुणब्रह्मविद्या संबन्धित्वं नेषितव्यं भवद्भिः

ச்லோகார்த்தம் : ப்ரஹ்மதேவன் முதலானவர்களுக்கு முக்தி இருக்கின்றது என்று ச்ருதி வாக்யங்களிலிருந்தே அறியப்படுகிறது. அவர்களுக்கு அர்ச்சிராதிமார்க்கங்கள் இல்லையென்பது உங்களுக்கும் ஸம்மதமே. ஆகையால் இந்த இந்த அர்ச்சிராதி மார்க்கங்களுக்கு நிர்க்குணப்ரஹ்மவித்யையுடன் ஸம்பந்தம் என்பது உங்களால் அங்கீகரிக்கதக்கதாக ஆகாது.

வ்யாக்யானம் : அர்ச்சிராதி மார்க்கமாக ப்ரஹ்மலோக ப்ராப்தி ஏற்பட்டு அதன்பிறகு க்ரமமாக முக்தி அடையப்பெறுகிறது என்றும் ச்ருதி வாக்யம் தெரிவிக்கின்றது. ஆகையால் ஞானேதய ஸமகாலே முக்தி என்று எப்படிச் சொல்வதுஎன்ருல், "தத்யோ யோ தேவாஞம் ப்ரத்ய புத்யத ஸஏவததபவத்" என்று தேவர்களாக இருந்தாலும் ஞானம் ஏற்பட்டால்தான் மோக்ஷம் என்று தெரிவிக்கின்றது. அதேபோல் "ப்ரஹ்மணு ஸஹதேஸர்வே" என்ற ஸ்ம்ருதிவாக்யம் ஞானத்தை அடைந்தவர்கள் ப்ரஹ்மாவுடன் மோக்ஷத்தை அடைகிருர்கள் என்று சொல்லப்படுகிறது. இந்த ச்ருதி வாக்யங்களிலிருந்து, ப்ரஹ்மதேவன், ப்ரஹ்மலோகத்திலுள்ள மற்றுமுள்ள தேவர்கள் எல்லோருக்குமே ஞானத்தை அடைவதால் மோக்ஷம் உண்டு என்று அறியப்படுகிறது. ஆகையால் அர்ச்சிராதி மார்க்கமாகத்தான் மோக்ஷத்தை அடையவேண்டும் என்று சொல்வது ஒரு போதும் பொருந்தாது. நிர்க்குணவித்யைக்கும், அர்ச்சிராதி மார்க்கத்திற்கும் ஸம்பந்தம் இருப்பதாக வேதத்தில் சிரத்தையுடையவரான உங்களால் சொல்லமுடியாது. ஸகுணப்ரஹ்மலோகத்தை அடைவதற்கே உத்ராயணமார்க்கம். ஆகவே, ப்ரஹ்மலோகமோ அல்லது மனுஷ்யலோகமோ எந்தலோகமாஞலும், ஞானத்தினுல்தான் மோக்ஷம் என்று ச்ருதி வசனங்கள் தெரிவிக்கின்றது.

**48.** அவதாரிகை : மனுஷ்யர்கள் அர்ச்சிராதி மார்க்கமாகவே மோக்ஷத்தை அடைகிருர்கள் என்று சொல்லலாமே ?

ச்லோகம் :

प्राणोत्क्रान्तिर्नास्ति मूर्धन्ययैषां नाड्या तस्माद्यत्र यत्रैव विद्या ।
तत्रैव स्यान्मुक्तिरित्यभ्युपेयं गत्युत्क्रान्ती तेन विद्यान्तरेषु

**ச்லோகார்த்தம் :** சிரஸில் இருக்கின்ற சுஷும்னநாடி மூலம் ப்ராணோத் க்ராந்தி என்பது நிர்க்குண ப்ரஹ்ம ஞானிகளுக்கு கிடையாது. எந்த இடத்தில் எந்த காலத்தில் வித்யை ஏற்படுகிறதோ அந்த இடத்திலேயே அந்த காலத்திலேயே முக்தி என்று ச்ருதி வாக்யமே தெரிவிக்கின்றது.

**வ்யாக்யானம் :** 'ந தஸ்ய ப்ராண உத்க்ராமந்தி' அத்ரைவஸமவலீயந்தே' என்று (ப்ரஹ 4-4.6) வாக்யங்கள் தெரிவிக்கின்றது. இந்த வாக்யம் ஞானிகளுக்கு உத் க்ரமணம் என்று சொல்லப்படுவதை ப்ரதிஷேதம் செய்திருக்கிறது. கடோபநிஷத் வாக்யம் ஸகுண ப்ரஹ்ம உபாஸாணுதிகளால் என்ன பலன் கிடைக்கின்றதோ, அந்த பலன் நிர்க்குண வஸ்து ஞானத்தினுலேயே கிடைக்கின்றது என்று வித்யாஸ் துத்யர்த்தமாகவே அந்த வாக்யம்தெரிவிக்கின்றது. அதனுல் அர்ச்சிராதி மார்க்கத்திற்கும் ஞான பலமான மோக்ஷத்திற்கும் சிறிதளவும் ஸம்பந்தம் என்பதே கிடையாது.

**49. அவதாரிகை :** கர்மா, உபாஸனம் இவைகளின் ஸமுச்சயத்தினுல் அர்ச்சிராதி மார்க்கங்கள் அடையப்படுகிறது. கேவல ஆத்மஞானத்தினுல்தான் தேவர் முதலான எல்லோருமே முக்தியை அடைய வேண்டும் என்பதால் இந்த விஷயத்தில் அர்ச்சிராதி மார்க்கங்கள் ஸம்பவிக்கமுடியாது.

ச்லோகம் :

देवादीनां नास्ति कर्माधिकारो विद्या तेषां केवला मुक्तिहेतुः
पारम्पर्यात्कर्मणामस्य हेतो-र्विद्याङ्गत्वं सर्ववर्णाश्रमाणाम्

**ச்லோகார்த்தம் :** தேவாதிகளுக்கு கர்மாவில் அதிகாரம் கிடையாது. கேவல வித்யை ஒன்றே அவர்களுக்கு முக்திக்கு ஹேதுவாகும். ஆகையால் வர்ணுச்ரம ரஹிதமான கர்மங்கள் பரம்பரையாக வித்யைக்கு அங்கமேயாகும்.

**வ்யாக்யானம் :** கர்மாவில் அதிகாரம் இல்லாத தேவர்களுக்கும் முக்தி உண்டு என்று சாஸ்திரங்களிலிருந்து அறியப்படுகிறது. அதனுல் ஆத்ம ஞானம் ஏற்படுவதற்கு முன்பு தேவாதிகள் கர்மாவை ஸஹகாரியாகக் கொண்டு முக்தியை அடைகிருர்கள் என்று சொல்வதற்கே முடியாது. ஆகையால் வித்யை என்பது கர்மாவை அபேக்ஷிக்கின்றது என்று சொல்வது மிகவும் அபத்தம். "ஸர்வா பேக்ஷா சயஞ்ஞாதி ச்ருதேரஸ்வவத்" என்ற சூத்ரம் (ப்ரஹ்ம சூத்ரம் - 3-4.26) சித்த சுத்தி ஏற்படுகின்ற பர்யந்தம் யஞ்ஞாதி கர்ம அபேக்ஷை இருக்கின்றது என்றே தெரிவிக்கின்றது. நிலத்தை உழவு செய்கின்ற பர்யந்தமே குதிரைகள் தேவை. கர்மாவில் அதிகாரம் இல்லாதவர்களுக்கும் ஞானத்தினுல் முக்தி ஏற்படும் என்று தெரிவிக்கின்றதால் ஞானத்தினுல் அடைய வேண்டிய முக்திக்கு கர்மா பேக்ஷை என்பது கிடையாது என்பது ஸ்பஷ்ட்டமாகவே அறியப்படுகிறது. ஸர்வ வர்ணத்தார்களுக்கும், ஸர்வ ஆச்ரமிகளுக்கும் கர்மா என்பது பரம்பரையாக ஞானத்திற்கு அங்கமாக ஆகிறது என்றே சொல்லப்படுகிறது. ஆகவே, 'ஸர்வா பேக்ஷாச' என்ற

சூத்ரம் தெரிவிக்கின்ற விஷயத்திற்கும் இங்கு சொல்லப்படும் விஷயத்திற்கும் எந்தவிதமான விரோதமும் கிடையாது.

**50.** அவதாரிகை : கர்மாவானது எதன் மூலம் பாரம்பர்யமாக அபேக்ஷிக்கப்படுகிறது ? அதற்கு ப்ரமாணம் என்ன ?

**ச்லோகம் :**

पारम्पर्यं शुद्धिहेतुत्वहेतोर्यज्ञादीनां श्रूयते स्मर्यते च ।
साक्षादेषां मोक्षहेतुत्वमेवमन्विच्छन्तोऽप्यागमान्न प्रतीमः

**ச்லோகார்த்தம் :** யஞ்ஞம் முதலானவைகள் சித்த சுத்திக்கு ஹேதுவாக இருக்கின்றதால் ஞானத்திற்கு பரம்பரையாக காரணமாகின்றது என்று ச்ருதி, ஸ்ம்ருதி முதலானவைகளில் சொல்லப்பட்டிருக்கிறது. யஞ்ஞாதிகள் மோக்ஷத்திற்கு சாக்ஷாத் காரணமாகின்றதா என்று விசாரிக்கின்றபோதும், அவ்விதம் சாக்ஷாத் காரணமென்று சாஸ்திரம் தெரிவிப்பதாக அறியப்படவில்லை.

**வ்யாக்யானம் :** தர்மேணபாபம பனுததி என்றும் "புண்யோவை புண்யேன கர்மணுபவதி" என்றும், யஞ்ஞேனதானேன விவிதிஷந்தி என்றவாக்யங்களாலும், ஸத்கர்மாவினுல் பாபங்கள் நீங்குகிறது என்றும் புண்யகர்மாவினுல் புண்யபலனை அடைகிருன் என்றும், யஞ்ஞாதிகளால் (விவிதிஷந்தி) அறிய வேண்டுமென்ற இச்சை ஏற்படுகிறது என்றே தெரிவிக்கிறது. 'தபஸ்யகல்மஷம் ஹந்தி' என்றும், 'கர்ஷாயபக்தி: கர்மாணி' என்றும் பலவிதமான ச்ருதி ஸ்ம்ருதிவாக்யங்கள், கர்மாவினுல் பாபம் நிவர்த்திக்கின்றது என்றும், சித்த சுத்தி ஏற்படுகிறது என்றும் தெரிவிக்கின்றது. "கர்மணை வஸம்ஸித்திம் ஆஸ்த்திதா ஜனகாதய:" என்ற கீதாவசனமும், "ஏஷ வ: புண்ய: ஸுக்ருதோ ப்ரஹ்மலோக:" (முண்டகம் . 1.2.6) என்பது போன்ற சிலவாக்யங்கள், கர்மாவினுலேயே முக்திஎன்று சொல்வது போல் இருக்கிறது. மற்றும் சிலவாக்யம் கர்மாவினுல் புண்யலோகம் கிடைக்கின்றது என்று தெரிவிக்கின்றது. ஆகையால், 'ஞானம் ப்ரதானம் நதுகர்மஹீனம்' என்ற வாக்யத்தினுல், கர்மா என்பது சாக்ஷாத் முக்தி ஹேது அல்ல என்றுலும், ப்ரதானமான ஞானத்திற்கு கர்மாவில் அபேக்ஷையே கிடையாது என்று சொல்லப்படவில்லை. அதேபோல் கர்மா என்பது மோக்ஷத்திற்கு சாக்ஷாத் காரணம் என்றும் சாஸ்திரங்களில் ஒரிடத்திலும் சொல்லப்படவில்லை. ஆகவே, முன்பின் சொல்லப்படும் வாக்யங்களை விசாரிக்கின்ற போது கர்மா என்பது சித்த சுத்திக்கு காரணமாகிறது என்பதால் பரம்பரையாக மோக்ஷத்திற்கு காரணமாகிறது என்றே சொல்லவேண்டும். ஞானம் ஒன்றே மோக்ஷத்திற்கு சாக்ஷாத் காரணம் என்றே சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கிறது.

**51.** அவதாரிகை : இதுவரை சொல்லப்பட்ட இந்த க்ரந்தத்தின் விஷயங்களை மிகவும் சுருக்கமாக தெரிவிக்கப்படுகிறது.

**ச்லோகம் :**

इति बहुश्रुतभाषितमुच्चकैः श्रुतिशिरोवचनानुगतं महत् ।
समुपादिष्टमिदं कृपया मया प्रियमतीव हितं च मुमुक्षवे

ச்லோகார்த்தம் : இவ்விதம் ச்ருதிவாக்யங்களை அனுசரித்தும், தாத்பர்யத்துடன் வித்வான்களால் நிரூபிக்கப்பட்டதும், மஹத்தானதும், மிகவும் ப்ரியமானதும், மிக்க ஹிதமானதுமான (இந்த ஆத்மதத்வமானது) இந்த சாஸ்திரமானது முமுக்ஷுவான உனக்கு, கருணையினால் என்னால் உபதேசிக்கப்பட்டது.

வ்யாக்யானம் : இந்த சாஸ்திரம், மஹத்தான ப்ரஹ்மதத்வத்தை தெரிவிக்கின்றதாலும் ப்ரஹ்மவித்யையை அடைவதற்கு உபாயமாக இருப்பதாலும், மிகவும் மஹத்தானது, உத்க்ருஷ்டமானது. முமுக்ஷுக்களிடத்தில் உள்ள கருணையினாலும் என் ஆசார்யன்மூலம் அறியப்பட்டதை தெரிவிக்கிறேன். இந்த க்ரந்தத்தில் உள்ள விஷயங்களை ச்ரவணம் செய்கின்ற காலத்திலேயே மிகவும் ப்ரீதிகரமாக (ஆனந்தமாக) இருக்கும். அதன் பலத்தை அடைகின்றபோது அந்த ஆனந்தத்தை அளவிட்டு கூறமுடியாது. ஸர்வ உபநிஷத்துக்களின் சாரமாக வேதங்களை நன்கு அறிந்து விசாரித்த ஆசார்யனால் உபதேசிக்கப்பட்ட இந்த விஷயங்களை நான் உங்களுக்கு எடுத்து உபதேசிக்கின்றதால் அச்ரத்தையாக இதை தள்ளாமல் ச்ரத்தையுடன் கேட்டு அறிந்து கொள்ளவேண்டும். ச்ருதி சிரஸ் என்ற வேதாந்தார்த்தங்களை அனுசரித்து சொல்லப்பட்டிருப்பதால் ப்ரமாண தார்ட்யமுடையது. ஆத்ம ஞானத்திற்கு தேவையான அனைத்து விஷயங்களும் பூர்ணமாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

**52.** அவதாரிகை : இந்த சாரீரக மீமாம்ஸா க்ரந்தத்தின் நான்காவது அத்யாயம் முதல் பாதத்தில் நிர்க்குண வித்யாபலமான ஜீவன் முக்தியைப் பற்றி சுருக்கமாக தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது பாதத்தில் ஸகுண, நிர்க்குண வித்யா பலமாக, உபாஸகன் உத்தராயணம் முதலான மார்க்கங்களினால் ப்ரஹ்மலோகப்ராப்தியும், ஞானியாக இருப்பானாகில் அவனுக்கு உத்க்ரமணம் கிடையாது என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. மூன்றாவது பாதத்தில் ஸகுண வித்யாபலம் என்ன வென்பதையும், அதன் மார்க்கத்தையும், அதற்குரிய அதிகாரிபற்றியும், அதன் பலனான லோக ப்ராப்தியும் சொல்லப்பட்டது. கடைசீயாக நான்காவது பாதத்தில் நிர்க்குணவித்யா பலபூர்த்தி ரூபமான ஸ்வரூப ப்ரகாசமே முக்தி என்பதையும் தெரிவிக்கின்றது. அத்துடன் ஸகுணவித்யா பலமான ப்ரஹ்மலோக ப்ராப்தியினால் ஐச்வர்யாதிகள் பலமாக கிடைக்கின்றது என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்தில் எந்த பாதத்தில் என்ன விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது என்று தெரிவிக்கப்படுகிறது.

ச்லோகம் :

एवं समन्वयविरोधनिरासविद्यानिष्पत्तिसाधनफलानि गुरोः क्रमेण ।
विज्ञाय वेदफलमात्मनि सर्वमेव पश्यन्नुवाच कृतकृत्यमतिः स शिष्यः

ச்லோகார்த்தம் : இந்தவிதம் குருவினிடமிருந்து க்ரமமாக, ஸமன்வயம் அவிரோதம், வித்யோற்பத்தி ஸாதனம், பலம் இவைகளை அறிந்து, அந்த ஞானபலனை அனைத்தையும், தான் அனுபவித்து அதனால் ஏற்பட்ட த்ருப்தி அடைந்த மனதையுடையவனான சிஷ்யன் (க்ருதக்ருத்யனான சீடன்)தெரிவிக்கின்றான்.

வ்யாக்யானம் : (இதற்கு மேல்வரும் ஆறு ச்லோகங்களில் சிஷ்யன் தன்னுடைய அனுபவத்தையும் தன்னால் க்ரஹிக்கப்பட்ட விஷயத்தையும் தெரிவிக்கின்றான்.)

இந்தவிதம் ஸர்வ சாஸ்த்ரார்த்தங்களையும் மிச்சமின்றி உபதேசித்தருளிய ஆசார்யனிடம், சிஷ்யனானவன், இந்த சாரீரகமீமாம்ஸாசாஸ்திரம் தங்களால் உபதேசிக்கப்பட்டு அதன் பலனாக த்வைத பாதமும் பரமானந்த ப்ராப்தியும் அடைந்திருக்கிறேன் என்ற விஷயத்தை ஆசார்யனுக்கு தெரிவிப்பதன் மூலம் தன் க்ருதக்ருத்யதையை தெரிவிக்கின்றான்.

53. அவதாரிகை : சிஷ்யனால் தெரிவிக்கப்பட்டது என்னவென்றால்,

ச்லோகம் : विद्याविग्रहमग्रहेण पिहितं प्रत्यञ्चमुच्चैस्तरा-
मुत्कृष्योत्तमपूरुषं मुनिधिया मुञ्जादिषीकामिव कोशात्कारण-
कार्यरूपविकृतात्पश्यामि निःसंशयं क्वासीदस्ति भविष्यति
क्व नु गतः संसारदुःखोदधिः

ச்லோகார்த்தம் : அஞ்ஞானத்தினால் நன்றாக மறைக்கப்பட்டதும், சைதன்ய ஸ்வரூபமானதும், புருஷோத்தமனுமான ப்ரத்யகாத்மாவை முஞ்சம் புல்லிலிருந்து ஈஷிகா என்பதைஎடுப்பதைப்போல் விவேக புத்தியினால், கார்யகரணரூபமாக விகாரத்தை அடைந்திருக்கின்ற கோசங்களிலிருந்து வேறுபடுத்தி ஸம்சயமின்றி அறிகின்றேன். ஸம்ஸாரதுக்கம் என்ற ஸமுத்ரமானது எங்கு இருந்தது? எங்கு இருக்கிறது? இனி எங்கு இருக்கப்போகிறது? எங்கே போயிற்று?

வ்யாக்யானம் : கார்யம் காரணம் என்று இரண்டு விதமான மாறுபாடுகளை அடைந்திருக்கின்ற அன்னமயாதி கோசங்களிலிருந்து ஸர்வ அனாத்மாக்களையும், முஞ்சம் பில்லில் இருந்து எடுக்கப்பட்ட தண்டு போல் கூர்மையான புத்தியைக் கொண்டு மனனம் செய்து அதனால் அறியப்பட்ட பூர்ணமான ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தினை அபரோக்ஷமாக அனுபவிக்கின்றேன். உண்மையில் ப்ரத்யக் ஸ்வரூபம் ஞான ஸ்வரூபம் என்பதை அறியாமல் இதுவரை அநிர்வசனீயமான அஞ்ஞானத்தினால் மறைக்கப்பட்டிருந்தேன். இப்போது அபரோக்ஷமாக என் உண்மையான ஸ்வரூபம் அறியப்படுவதால், இதுவரை அறியப்பட்ட ஸம்ஸாரம் காலத்ரயத்திலும் என்னிடம் இல்லாததுஎன்பதை அறிந்தேன். ஆசார்யனை தங்களுடைய ப்ரசாதத்தினால் நான்ஸம்ஸாரி அல்ல, ப்ரஹ்மமே என்ற நிச்சயம் ஏற்பட்டது.

54. அவதாரிகை : ஜீவன் முக்தன் என்றால் என்ன என்பதை நான் அனுபவ பூர்வமாக அறிகிறேன்.

ச்லோகம் : पश्यामि चित्रमिव सर्वमिदं द्वितीयं तिष्ठामि पुष्कलचिदेकवपुष्यनन्ते ।
आत्मानमद्वयमनन्तसुखैकरूपं पश्यामि दग्धरशनामिव च प्रपञ्चम्

ச்லோகார்த்தம் : த்வைத ப்ரபஞ்சம் அனைத்தையும் சித்ரம் போல் காண்கிறேன். அனந்த நிஷ்கள சைதன்ய ஸ்வரூபமாக நிலைத்திருக்கின்றேன். அனந்த சுகஸ்வரூபம் ஆத்மா என்று அறிகிறேன். தஹிக்கப்பட்ட கயிற்றைப் போல் ப்ரபஞ்சத்தை காண்கிறேன்.

வ்யாக்யானம் : ஜீவன் முக்த நிலேயில் ஜீவனம் என்பது ஆபாஸரூபம் வாஸனு வஸாத் விவகாரத்தில் ப்ரவ்ருத்தி தொடர்ந்து இருந்த போதிலும் அதனுல் எவ்வித அனர்த்தமும் கிடையாது. சித்ரத்தில் எழுதப்பட்ட யானே, புலி முதலானவைகளே பார்க்கின்ற போர்து இவைகள் சித்ரம் தான் என்று அறிவதால் எவ்விதம் பயம் நடுக்கம் முதலானவை ஏற்படுவதில்லேயோ அதுபோல் இந்த ப்ரபஞ்சத்தோற்றம் இருந்தும் அதனுல் எவ்விதவ்யா மோஹமும் ஏற்படவில்லே, ஸம்ஸாரமென்ற துக்கமும் ஏற்படவில்லே. ஏனெனில் அவைகளில் அபிமானம் ஏற்படாத காரணத்தினுலும், புஷ்கள அகண்ட சித்ஸ்வரூபமாத்ரமாக, மூன்று வித பரிச்சேதமும் அற்றதான பூர்ண ஆத்ம ஸ்வரூபமாத்ரமாக நிலேத்திருக்கின்றதால் எவ்வித வ்யாமோஹமும் கிடையாது. ஸ்வரூபத்தில்நிலேத்திருப்பது என்ருல் பாத்ரத்திற்குள் உள்ள இலந்தை பழத்தை போலவோ அல்லது சுவற்றில் எழுதப்பட்ட சித்ரம் போலவோ இருப்பதாக சொல்லப்படவில்லே. இதுவரை அனுத்மாவான தேஹாதிகளில் ஆத்மா என்ற எண்ணம் இருந்தது. இப்போது ஆத்மாவிலேயே ஆத்மா என்ற புத்தி ஏற்பட்டிருக்கிறது. அகண்டமான ஆத்ம வஸ்து அமூர்த்தம் (உருவமாற்றது) அனந்தம் (பரிச்சின்னமற்றது அபரிச்சின்னம் என்பதால் ஒருவஸ்துவில் மற்ருெரு வஸ்து இருப்பது போல் சொல்லமுடியாது. அத்வயாத்மஸ்வரூப அனுபவத்தினுல், த்வைதம் ஸத்யம் என்ற எண்ணம் பாதிக்கப்படுகின்றதால் ஆத்ம ஞானத்திற்கு எவ்வித ஹானியும் கிடையாது. எப்படி எரிக்கப்பட்ட கயிருனது தோற்றமிருந்தாலும் அதனுல் எவ்வித ப்ரயோஜனமும் இருப்பதில்லேயோ அதுபோல் பாதிதமான ப்ரபஞ்சதோற்றத்தினுல் அத்வைத ஆத்ம ஞானத்திற்கு எவ்வித ஹானியும் கிடையாது.

**55.** அவதாரிகை : அவ்விதமே இருந்த போதிலும், த்வைத அனுபவம் இருக்கின்றபோது அத்வைதானுபவத்திற்கு பாதமில்லே என்று எப்படி சொல்லமுடியும் ?

ச்லோகம் :

अद्वैतमप्यनुभवामि करस्थबिल्वतुल्यं शरीरमहिनिर्ल्वयनीवदीक्षे ।
एवं च जीवनमिव प्रतिभासनं च निःश्रेयसो निगमनं च मम प्रसिद्धम्

ச்லோகார்த்தம் :அத்வைதம் தத்வம் என்பது உள்ளங்கை பில்வம் போல் அபரோக்ஷமாக அறிகின்றேன். ஸர்ப்பம் தன் சட்டையை காண்பது போல் இந்த சரீரத்தை அறிகிறேன். இதேபோல், தோற்றமளிக்கின்ற என் ஜீவத்வமும் (ஜீவனமும்) மோக்ஷப்ராப்தியும் எனக்கு ப்ரசித்தமாக இருக்கிறது.

வ்யாக்யானம் : அத்வைத ஆத்மானுபவம் அபரோக்ஷமாக ஏற்பட்டகாரணத்தினுல், முன் எப்படி ப்ரபஞ்சம் ஸத்யம் என்று அறியப்பட்டதோ அதுபோல் இப்போது ஸத்யம் என்று அறியப்படவில்லே. த்வைத தோற்றம் இருக்கின்றது என்ருலும் அதனுல் எவ்வித ஹானியுமில்லே. ஏனெனில் ஸர்ப்பமானது முன்னுல் சட்டையுடன் சேர்ந்துதான் என்று எவ்விதம், அபிமானித்ததோ அது போல், சட்டையை உரித்தபிறகு அதை, தான் என்ருே தன்னுடையது என்ருே அபிமானத்துடன் அதை பார்ப்பதில்லே. அதில் அபிமான மின்றியே காண்கிறது. அதுபோல் இந்த சரீரத்தை நான் காண்கிறேன். ஸம்ஸ்காரவஸாத் பிக்ஷாடனுதிகளின் ஈடுபட்டும் மற்ற எந்த விவகாரங்களில் ஈடுபட்டிருந்த போதிலும்

அதில் ஆத்மத்வ அபிமானம் கிடையாது. இப்பேர்ப்பட்ட ஜீவன் முக்த நிலையை நான் அனுபவிக்கின்றேன். ஞானம் ஏற்பட்ட பிறகும் இந்த சரீரத்தில் அபிமானத்துடன் விவகாரம் செய்யப்படுவதாக அன்யர்களால் அறியப்பட்டபோதிலும் எனக்கு எந்தவிதமான அபிமானமும் பரமார்த்தமாக கிடையாது. பாதித அனு வ்ருத்தியினுல் தான் வ்யவஹாரம் செய்யப்படுகிறதேயன்றி அபிமானத்துடன் எவ்வித வ்யவஹாரமும் கிடையாது.

**56.** அவதாரிகை : இதுவரை எனக்கு எது அபகாரமாக இருந்ததோ அதற்கு இப்போது பரிகாரம் ஏற்பட்டிருக்கிறது.

ச்லோகம் :

अद्वैतबाधकमभून्मम यद्द्वितीयमद्वैतमस्य बत बाधकमद्य जातम् ।
मोहाद्वितीयमपबाधकमस्य विद्यासामर्थ्यतो द्वयनिबर्हणमद्वितीयम्

ச்லோகார்த்தம் : முன்பு எனக்கு எந்த த்வைதமானது அத்வைத பாதகமாக இருந்ததோ, அந்த த்வைத்திற்கு அத்வைதம் என்பது இப்போது பாதகமாக ஆகிவிட்டது. அஞ்ஞானத்தினுல் த்வைதமானது அத்வைதத்திற்கு பாதகமாகிறது. வித்யா பலத்தினுல் அத்வைதம் என்பது த்வைதத்திற்கு பாதகமாகிறது.

வ்யாக்யானம் : இதுவரை எனக்கு அபகாரகமாக இருந்த த்வைதத்திற்கு இப்போது நிவர்த்தி ஏற்பட்டிருக்கின்றது. அதனுல் மிக்க மகிழ்ச்சியாக இருக்கிறது. மறுபடி அத்வைத்தை பாதித்து த்வைதம் ஏற்படுமோ என்ற ஸந்தேஹத்திற்கு இடமே கிடையாது. பரமார்த்தமான அத்வைத தத்வத்திற்கு ஒரு போதும் பாதம் என்பதே கிடையாது. மோஹத்தினுல் ஏற்பட்ட த்வைத தோற்றம் அத்வைத ஞானத்தினுல் பாதிக்கப்பட்டதால் அஞ்ஞானம் அதன் கார்யமான மோஹம் என்பதெல்லாமே வித்யா ஸாமர்த்யத்தினுல் மூலத்துடன் வேர் அறுக்கப்பட்டது. அதனுல் த்வைதம் என்பது மறுபடி உண்டாவதற்கு காரணமே இல்லையென்றுல், அத்வைதம் என்பது எப்படி பாதிக்கப்படமுடியும்? அத்வைத ஞானம் என்பது ப்ரமாண மூலம் ஏற்பட்டதால் அஞ்ஞானத்தினுல் ஏற்பட்ட த்வைதம் பாதிக்கப்பட்டது.

**57.** அவதாரிகை : ஏற்கனவே த்வைதானுபவம் எப்படி எனக்கு இருந்தது என்று நினைக்கின்றபோது மிகவும் ஆச்சர்யமாக இருக்கிறது.

ச்லோகம் :

आश्चर्यमद्य मम भाति कथं द्वितीयं नित्ये निरस्तनिखिलाशिवचित्प्रकाशे ।
आसीत्पुरेति किमिमाः श्रुतयो न पूर्वं येन द्वितीयमभवत्तिमिरप्रसूतम्

ச்லோகார்த்தம் : நித்யமானதும் ஸர்வ அஸுபங்களற்றதான (ஸர்வதுக்க ரஹிதமான) சைதன்ய ப்ரகாசத்தில் த்வைதம் என்பது முன்பு எவ்வாறு இருந்தது என்று இப்போது எனக்கு ஆச்சர்யமாக இருக்கிறது. அஞ்ஞான ஜன்யமான த்வைதம் இருந்தது என்றுல், அதை நாசம் செய்கின்ற இந்த ச்ருதிவாக்யங்கள் முன்பு இல்லையா என்ன ?

வ்யாக்யானம் : இதற்கு முன் த்வைதானுபவம் எனக்கு எப்படி இருந்தது என்று நினைக்கின்ற போது மிக்க ஆச்சர்யமாக இருக்கிறது. அதாவது ஆத்மா என்பதும் அனுத்மா என்பதும் இரண்டும் ஒன்றுக்கொன்று வெவ்வேருன விருத்த ஸ்வபவத்தில் இருந்தும் அவை இரண்டிற்கும் எவ்விதம் தாதாத்ம்யம் ஏற்பட்டது? இருட்டும் வெளிச்சமும் போன்று ஒன்றுக்கொன்று மாருனஸ்வபாவத்தில் இருக்கின்ற இரண்டு வஸ்துக்கள் எப்படி ஒன்ருக கலந்து தோன்றிற்று என்பதை நினைக்கவே ஆச்சர்யமாக இருக்கிறது.

பூர்வ : ச்ருதி வாக்யத்தினுல் வஸ்துவை விசாரித்து அறியாததால் இரண்டும் ஒன்ருகவே தோன்றிற்று. இப்போது அறிந்ததால் மோஹம் நீங்கிவிட்டது. இதில் ஆச்சர்யப் படுவதற்கு என்ன இருக்கிறது?

சித்தா : ச்ருதியில் இந்த விஷயம் பற்றி சொல்லப்பட்டிருந்தும் கூட இதுவரை என்னுல் எப்படி அறியப்படாமல் இருந்தது என்பதே ஆச்சர்யமாக இருக்கிறது.

**58.** அவதாரிகை : இப்பேர்ப்பட்ட மஹத்தான அனுபவம் எனக்கு ஏற்படுவதற்கு தங்கள் அனுக்ரஹமே காரணம் என்று சிஷ்யன் தெரிவிக்கின்ருன்.

ச்லோகம் :

त्वत्पादपङ्कजसाश्रयणं विना मे सन्नप्यसन्निव परः पुरुषः पुराऽऽसीत् ।
त्वत्पादपद्मयुगलाश्रयणादिदानीं नासीन्न चास्ति न भविष्यति भेदबुद्धिः

ச்லோகார்த்தம் : தங்களுடைய பாதபங்கஜங்களை ஆச்ரயிப்பதற்கு முன்பு பரமாத்ம ஸ்வரூபமானது இருந்தும் இல்லாதது போலவே இருந்தது. இப்போது தங்கள் பாத பத்மங்களை ஆச்ரயித்ததனுல் பேத புத்தியானது இதுவரை இருந்தது மில்லை, இருப்பது மில்லை இனி இருக்கப் போவதுமில்லை.

வ்யாக்யானம் : ஸர்வத்வைதமும் நிவர்த்திக்கப்பட்ட நிலையில் எனக்கு இப்போது மிகுந்த ஆச்சர்யகரமாக இருக்கிறது. தங்களுடைய அனுக்ரஹம் இல்லாமல் இருக்குமானுல் என்னுடைய ஸம்ஸார அனுபவம் நிவர்த்தியாகி இருக்கமுடியாது. இப்போது தங்கள் அனுக்ரஹத்தினுலேயே ஸம்ஸார நிவர்த்தி ஏற்பட்டதுடன், ஆத்மஸ்வரூபம் அகண்ட ஆனந்த ப்ரஹ்மஸ்வரூபமே என்று என் உண்மையான ஸ்வரூபத்தை அறிந்தேன். இதுவரை மோஹத்தினுல் உண்மையான ஸ்வரூபத்தை எவ்விதம் அறியாமல் இருந்தேன் என்பதே ஆச்சர்யமாக இருக்கிறது.

**59.** அவதாரிகை : இவ்விதம் தாங்கள் எனக்கு செய்திருக்கின்ற மஹத்தான பேருபகாரத்திற்கு ஈடுஇணைகிடையாது. இதற்கு ப்ரதி உபகாரமாக இதற்கு ஈடாக கொடுப்பதற்கு இந்த லோகத்தில் எதுவும் கிடையாது. அதுமட்டுமல்ல, தாங்களோ ஸர்வகாமங்களையும் அடைந்தவர் ஆப்தகாமர், அகாமகர் என்பதால் தங்களுக்கு எதைக் கொடுப்பது? எவ்வித அபேக்ஷையும் மின்றி க்ருபாமாத்ரமாக இருந்து எனக்கு உபதேசித்தருளியதற்கு என்ஜீவனுள்ள பர்யந்தம் தங்களுக்கு ஸேவை செய்வதொன்றே என்னுல் செய்யக்கூடியது என்று தெரிவிக்கின்ருன்.

ச்லோகம் :

यस्मात्कृपापरवशो मम दुश्चिकित्सं संसाररोगमपनेतुमसि प्रवृत्तः ।
त्वत्पादपङ्कजरजः शिरसा दधानस्त्वामाशरीरपतनादहमभ्युपासे

ச்லோகார்த்தம் : க்ருபையினுல் பரவசராகியதாங்கள், எளிதில் மாருத என்னுடைய ஸம்ஸார ரோகத்தை நீக்குவதற்காகவே யத்னம் செய்தீர்கள். ஆகையால் மரணபர்யந்தம் தங்கள் பாதபங்கஜ தூளியை சிரஸில், தரித்துக்கொண்டு பூஜிக்கின்றேன்.

வ்யாக்யானம் : தாங்கள் எனக்கு செய்திருக்கின்ற பேருபகாரத்திற்கு ஈடாகவோ, அதற்கு மேலாகவோ எந்த உபகாரமும் செய்வதற்கு லோகத்தில் எதுவுமில்லை. தாங்களும் எதையும் அபேக்ஷிக்கின்ற நிலையில் இல்லை. தங்கள் கருணையினுலேயே எவராலும் சிகித்ஸை அளிக்கமுடியாத ஸம்ஸாரம் என்ற பவரோகத்தை, தங்கள்உபதேசம் என்ற ஔஷதத்தின் மூலம் நிவர்த்தி செய்து அனுக்ரஹத்திருக்கின்றீர்கள். ஆகவே தங்களுக்கு என்ஜீவன் உள்ள பர்யந்தம் ஸேவை செய்வதே என்கடமையாகும்.

**60.** அவதாரிகை : இந்த க்ரந்தம் இயற்றப்பட்டதால் ஏற்பட்ட ப்ரயோஜனம் என்ன என்பதை தெரிவித்து இதை முடிவிற்கு கொண்டுவரப்படுகிறது.

ச்லோகம் :

संक्षेपशारीरकमेवमेतत्कृतं परिव्राजकमुक्तिहेतुः ।
गुरुप्रसादात्परिलभ्य तत्त्वं त्रयीशिरस्तत्त्वनिवेदनाय

ச்லோகார்த்தம் : குரு ப்ரஸாதத்தினுல் தத்வத்தை அறிந்து, அவ்விதம் அறியப்பட்ட அந்த வேதாந்த தத்வம் என்பதை (உபநிஷத்துக்களின் ரஹஸ்யத்தினை) வெளிப்படுத்துவதற்காக, பரிவ்ராஜகர்களுக்கு மோக்ஷத்தை கொடுக்கின்ற இந்த ஸம்க்ஷேப சாரீரகமென்ற இந்தக்ரந்தம் இவ்விதம் இயற்றப்பட்டது.

வ்யாக்யானம் : எனது குரு ப்ரஸாதத்தினுல் அவருடைய உபதேசங்களின் மூலம் என்னுல் க்ரஹிக்கப்பட்ட முறையில் வேதாந்த தத்வம் என்ன என்பதை முமுக்ஷுக்களான ஸன்யாஸிகள் அறிந்துகொள்ள வேண்டுமென்பதற்காகவே சாரீரக மீமாம்ஸாசாஸ்திரத்தை மிகவும் சுருக்கமாக தத்வஞானத்தை அடைவதற்கு ஹேதுவாக ஸம்க்ஷேபசாரீரகம் என்ற இந்த க்ரந்தம் இயற்றப்பட்டது என்று (சிஷ்யன் தன்னுடைய நன்றியை தெரிவித்தபிறகு) இந்த க்ரந்தக் காரரான ஸர்வஞ்ஞாத்ம முனிவரால் தெரிவிக்கப்படுகிறது.

**61.** அவதாரிகை : ச்ரோதாக்கள் இந்தக்ரந்தத்தை அறியப்ரவர்த்திக்க வேண்டுமென்பதற்காக, கங்கைக்குஸமானமாக இதைஒப்பிட்டு கூறப்படுகிறது.

ச்லோகம் :

अविरलपदपङ्क्तिः पद्मनाभस्य पुण्याचरणकमलधूलिग्राहिणी भारतीयम् ।
घनतरमुपघातं श्रेयसः श्रोतृसंघात्सुरसरिदिव सद्यो मार्ष्टु माङ्गल्यहेतुः

ச்லோகார்த்தம் : மங்களஹேதுவாக இருக்கின்றதும், ஆழ்ந்த கருத்துக்களை யுடையதும், விஷ்ணுவின் பாதாரவிந்த தூளியைதரிக்கின்றதுமான இந்த

புண்யக்ரந்தமானது, புனித கங்கையைப் போன்று ச்ரோதாக்களின் தீவ்ரமான மோக்ஷப்ரதிபந்தங்களை உடனே நிவர்த்திசெய்யப்படும்.

வ்யாக்யானம் : அழகான பதங்களைச் சேர்ந்து கோர்த்து செய்யப்பட்ட அனேக ச்லோகங்களால் அலங்கரிக்கப்பட்ட இந்தக்ரந்தமானது, கங்கை எப்படி தொடர்ந்து ஓடிக்கொண்டிருக்கிறதோ அதுபோல் தொடர்ந்து வேதாந்தார்த்தங்களை போதிக்கின்ற பதங்களால் – அமைக்கப்பட்டிருக்கிறது. இந்தக்ரந்தத்தை திருவனந்தபுரத்திலுள்ள ஸேஷஸயனரான அனந்தபத்மனுபஸ்வாமிகளின் பாதபத்மங்களில் ஸமர்ப்பணம் செய்கின்றேன். அந்த ஸேஸஷயனரான நாராயணனின் பாததூளிகள் இந்தக்ரந்தத்தில் படிந்திருப்பதால் (ஒட்டிக்கொண்டருப்பதால், எவ்விதம் விஷ்ணுவின் பாதகமலத்திலிருச்து வெளிப்பட்ட கங்கையானது விஷ்ணுவின் பாததூளிகளை எடுத்துக் கொண்டதால், தன்னிடம் ஸ்னனம் செய்பவர்களின் பாபத்தைப் போக்கிஸத்கதியை அடையச் செய்கிறதோ அதுபோல் பகவானின் பாதூளிகளைப்பெற்ற இந்தக்ரந்தமானது, இதைச்ரவணம் செய்கின்றவர்களுக்கு ச்ரேயஸ்ஸுக்கு இடையூருக ஏற்படுகின்றப்ரதிபந்தங்கள் அனைத்தும் நிவர்த்திக்கப்படவேண்டும் என்று ப்ரார்த்திக்கின்றேன்.

ஆகவே, பகவானின் பாத தூளியுடன் கூடிய இந்தக்ரந்தமானது ஸாதுக்களால் ச்ரவணம் செய்யப்பட்டு அனுசந்தானம் செய்யப்படுவதன் மூலம் மங்களங்களில் சிறந்ததான மங்களம் என்று சொல்லப்படும் மோக்ஷ மென்ற புருஷார்த்தத்தை கொடுக்கின்றது.

**62.** அவதாரிகை : இந்தக்ரந்தம் (ஸாம்ப்ரதாயகம்) ஸம்ப்ரதாயமாக குருசிஷ்ய பரம்பரையில் போதிக்கப்பட்ட விஷயத்தையே தெரிவிக்கின்றது என்பதை தெரிவிப்பதற்காக தன்னுடைய குருவின் யெரையும், தன் பெயரையும், இந்தக்கரந்தம் இயற்றப்பட்ட காலத்தையும் ஒரு குறிப்புடன் தெரிவிக்கின்ருர்.

ச்லோகம் :

श्रीदेवेश्वरपादपङ्कजरजः संपर्कपूताशयः सर्वज्ञात्मगिराऽङ्कितो मुनिवरः संक्षेपशारीरकम् ।

चक्रे सज्जनबुद्धिमण्डनमिदं राजन्यवंश्ये नृपे श्रीमत्यक्षतशासने मनुकुलादित्ये भुवं शासति

ச்லோகார்த்தம் : க்ஷத்ரியவம்ஸத்தைச் சேர்ந்தவனும் தடையற்ற ஆஞ்ஞையை உடையவனும் மனுகுலத்தில் சூர்யனைப்போல்ப்ரகாசிக்கின்ற வனும் ஸ்ரீதேவச்வரரின் பாததூளியின் ஸம்ஸ்பர்சத்தினுல் சுத்தமான மனதையுடையவரும் ஸர்வஞ்ஞாத்மா என்ற பெயரையுடையவருமான முனிவரால் ஸஜ்ஜனபுத்திக்கு அலங்காரமாக இருக்கின்ற ஸம்க்ஷேபசாரீரகம் என்ற இந்தக்ரந்தம் இயற்றப்பட்டது.

வ்யாக்யானம் : இந்தக்ரந்தம், குருசிஷ்யபரம்பரையில் போதிக்கப்பட்ட விஷயத்தையே தெரிவிக்கின்றது என்பதை தெரிவிக்கவேண்டும் என்பதற்காக, குருவின் பெயரையும், க்ரந்தகர்த்தாவான தன் பெயரையும் க்ரந்தம் இயற்றப்பட்ட காலத்தையும் இதில் குறிப்பிடுகிருர். ஸ்ரீதேவேச்வரர் (ஸ்ரீசுரேச்வரர்) என்பவரின் சிஷ்யரான ஸர்வஞ்ஞாத்ம முனி என்ற இந்தக்ரந்த கர்த்தா ஸன்யாஸிகளில் மிகச்சிறந்தவர். இந்த ஸம்பேக்ஷப

சாரீரகம் என்ற க்ரந்தம் வித்வான்களான ஸாதுக்களின்புத்திக்கு மிகவும் ஸோபனமாக அலங்காரமாக இருக்கிறது. இந்த க்ரந்தம் க்ஷத்ரியவம் ஸத்திற்கு கூடஸ்த்தனுக இருந்த மனுவம்ஸத்தில், சூர்யனைப்போல் ப்ரகாசிக்கின்ற ஸ்ரீமான் என்ற அரசன், தன்னுடைய ஆஞ்ஞையை எவரும் மீருதி வண்ணம் ராஜ்யபரிபாலனம் செய்து கொண்டிருந்த காலத்தில் இயற்றப்பட்டது.

**63.** அவதாரிகை : ஸம்ப்ரதாயத்தை அனுசரித்து இந்தக்ரந்தத்தின் முடிவிலும் பகவத்ஸ்மரணரூபமான நமஸ்கார ரூபமங்களம் செய்யப்படுகிறது.

**ச்லோகம் :**

भुजङ्गमाङ्गशायिने विहङ्गमाङ्गगामिने ।
तुरङ्गमाङ्गभेदिने नमो रथाङ्गधारिणे

**ச்லோகார்த்தம் :** ஆதிஸேஷன் என்ற ஸர்ப்பத்தில் ஸயனிக்கின்றவனும், கருடன் என்ற பக்ஷியில் கமனம் செய்கின்றவனும் கேஸி என்ற அஸ்வரூபத்தினைக் கொண்ட அசுரனைவதம் செய்தவனும், தேர்சக்கரத்தை ஆயுதமாக தரித்திருக்கின்றவனுமான ஸ்ரீமந் நாராயணனுக்கு நமஸ்கரிக்கின்றேன்.

**வ்யாக்யானம் :** இந்தவிதம் ஸ்ரீதேவச்வரருடைய (ஸ்ரீசுரேச்வார்) பரதபத்மங்களை பூஜிக்கின்ற சிஷ்யரான ஸர்வஞ்ஞாத்மமுனிவரால் இயற்றப்பட்ட ஸம்க்ஷேபசாரீரகமென்ற க்ரந்தத்தில் பல லக்ஷணத்தை தெரிவிக்கின்ற (பலத்தின் லக்ஷணம்) நான்காவது அத்யாயம் பூர்த்தி அடைகிறது.

இந்த ஸம்க்ஷேபசாரீரகம் என்ற க்ரந்தத்திற்கு வ்யாக்யானம் செய்த அக்னிசித்புருஷோத்தம மிச்ரர் என்பவர், மேல் வரும்ச்லோகங்களைச் செய்திருக்கின்றார்.

**1. ச்லோகம் :**

शुभसंप्रदायभणितीरनुसृत्य मते च रामतीर्थगुरोः ।
एतत्प्रबन्धरत्नं व्याकारि मया प्रयत्नेन

**2. ச்லோகம் :**

इयं संक्षेपशारीरसुखबोधनदीपिका ।
अन्तस्तमःप्रशमनी सद्भिः स्नेहेन पूर्यताम्

ஆசார்யர்ள் போன்ற மஹான்களின் வாக்யங்களான ஸுபமான ஸம்பரதாயத்தை அனுசரித்து, ஸ்ரீராமதீர்த்தர் என்ற எனது குருவின் அபிப்ருயத்தை தழுவி இந்தக்ரந்தத்திற்கு வ்யாக்யானம் செய்வதற்கான முயற்சியை எடுத்திருக்கின்றேன். இந்த வ்யாக்யானத்திற்கு ஸம்க்ஷேபசாரீரக ஸுக போதன தீபிகா என்று பெயர். ஸத்புருஷர்களான எல்லோரும் இந்த தீபத்திற்கு அன்பென்னும் எண்ணையை ஊற்றி பூர்ணமாக ப்ரகாசிக்கும்படிச் செய்து வ்ருத்தி பெறச்செய்யவேண்டும் என்று ப்ராத்திக்கின்றேன். க்ரந்த ஆரம்பத்திலும், அதன் முடிவிலும் மங்களம் செய்யப்பட்ட க்ரந்தங்கள் எல்லாம் லோகத்தில் மிக ப்ரசித்தி அடையும் என்று சிஷ்டர்களான

பெரியோர்களால் சொல்லப்பட்டிருக்கிறது. அதை அனுசரித்தே இந்த க்ரந்தத்திற்கும் பகவத் நமஸ்கார ரூபமங்களம் ஆரம்பத்திலும் முடிவிலும் செய்யப்படிருக்கிறது. இந்த மங்களத்தில் "புஜங்கமாயிஸயனே" என்றும், "விஹங்கமாங்ககாமினே" என்றும் "துரங்கமாங்கபேதினே" என்றும் "ரதாங்கதாரிணே" என்றும் ஸ்ரீமந்நாராயணனுக்கு விசேஷணங்கள் சொல்லப்படுகிறது.அதாவது பக்தர்களின் அபீஷ்ட்டத்தை நிறைவேற்ற சுகமாக ஆதிஸேஷன் மீது ஸயனித்திருப்பவரும், எவ்விதவிக்னங்களையும் உடனே தீர்க்கக் கூடிய கருடவாஹனர் என்றும் துஷ்ட்டர்களை வதம் செய்து சிஷ்ட்டர்களை காப்பாற்றி நன்மையைச் செய்கின்றவர் என்பதை கேஸி என்ற அசுரனை வதம் செய்தவர் என்ற விசேஷணத்திலும், சக்ராயுதத்தை தரித்தவர் என்று 'ரதாங்கதாரிணே என்ற விசேஷணத்திலும் தெரிவித்து இப்பேர்ப்பட்ட ஸ்ரீநாரயணனின் பாதபத்மங்களில் நமஸ்கரிக்கின்றேன் என்று இந்த மங்கள ச்லோகத்தில் சொல்லப்படுகிறது. இந்தவிதம் பரஹம்ஸர்களுக்குள் மிகச்சிறந்தவரான ராமதீர்த்த முனி என்பவரின் சிஷ்யரான அக்னிசித்புருஷோத்மமிச்ரர் என்பவரால் செய்யப்பட்ட ஸுபோதினி என்ற ஸம்க்ஷேபசாரீரக வ்யாக்யானத்தின் நான்காவது அத்யாயம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ ராமதீர்த்தர் என்பவரின் அன்வயார்த்த ப்ரகாஸிகா என்ற வ்யாக்யானத்தின் முடிவுரை நான்கு ச்லோகங்களில் சொல்லப்படுகிறது.

1. ச்லோகம் :

सिद्धान्तदीपं पुरतो निधाय वेदान्तमन्तर्गृहसंनिविष्टम् ।
संक्षेपशारीरकरत्नपुञ्जं प्रकाशमादाय मया विविक्तम्

2. ச்லோகம் :

सर्वज्ञात्ममुनिप्रणीतममलं संक्षेपशारीरकं
दृष्टान्तर्विभवं पुरस्कृतमहासिद्धान्तदीपार्चिषा ।
उन्नीयार्थविभागतः प्रतिपदं संबन्धविद्योतिनी
व्याख्या तस्य सतां मनःप्रियकरी व्याख्यातृचित्तौकसः

3. ச்லோகம் :

नमोऽस्तु तस्मै रामाय हृद्यन्तर्ज्योतिषे सते ।
वायुनेव तृणं येन विचेष्टन्ते प्रजाधियः

4. ச்லோகம் :

नमस्तेभ्यो गुरुभ्योऽस्तु येषां संनिधिमात्रतः ।
ममान्तस्तिगिरं ध्वस्तं ब्राह्यं ध्वान्तं रवेरिव

**1. வ்யாக்யானம் :** இந்த ஸம்க்ஷேபசாரீரகம் என்ற க்ரந்தத்திலுள்ள ச்லோகங்கள் ஒவ்வொன்றும் மிகச்சிறந்த ரெத்னம் இந்த ரெத்னங்கள் சேர்ந்த புஞ்சத்தை (கூட்டத்தை) வேதாந்த சித்தாந்தமென்ற தீபப்ரகாசத்தைக்கொண்டு அதன் மஹத்வத்தை தாத்பர்யத்தை அறிந்தேன் வேதாந்த சித்தாந்தமென்ற க்ரஹத்திலுள்ள ரெத்னங்கள் என்னால் தேடிக்கண்டுபிடிக்கப்பட்டது.

2. ஸர்வஞ்ஞாத்ம முனிவரால் இயற்றப்பட்ட இந்த க்ரந்தம் மிகவும் பரிசுத்தமானது. இந்த ஸம்க்ஷேபசாரீரகமென்ற க்ரந்தத்தை நன்கு விசாரித்து அறிகின்றபோது அதில் பொதிந்திருக்கின்ற கருத்துக்கள் மிகவும் ஸ்வாரஸ்யமாக இருக்கின்றது. வேதாந்த சித்தாந்தம் என்ற தீபத்தைக் கொண்டு மிகவும் கூர்ந்து கவனித்து ஒவ்வொரு பதத்திற்கும் என்ன அர்த்தம் என்பதை முன்பின் அறிந்து மிகத்தெளிவாக இந்த வ்யாக்யானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இதை ஸாதுக்கள் படித்து அறிவார்களேயானுல் இதன் சிறப்பினைக் கண்டு மிகவும் ஸந்தோஷத்தை அடைவார்கள். இதில் உள்ள விசேஷணங்களெல்லாம் என் சித்தத்தில் ப்ரகாசித்ததால், அவ்விதமே அதை தெரிவித்திருக்கிறேன்.

3. எல்லோருடைய ஹ்ருதயங்களிலும் ஜ்யோதிஸ்ஸ்வரூபமாக ப்ரகாசிக்கின்ற எந்த பகவானுடைய அனுக்ரஹத்தினுல் ஸர்வஜீவர்களின் புத்தியானது, எப்படி வாயுவினுடைய பலத்தினுல் புல் முதலானவைகள் அசைக்கப்படுகிறதோ அதுபோல், அந்தந்த வ்யவஹாரங்களில் ப்ரவ்ருதிக்கின்ற ஸாமர்த்தயமுடையதாக ஆகின்றதோ அப்பேர்ப்பட்ட பகவான் ஸ்ரீராமபிரானை நமஸ்கரிக்கின்றேன். (ஸர்வப்ரஜைகளின் புத்திக்கும்ப்ரோகனுக இருப்பவர் என்பதே இதன் கருத்து.) இந்தவிதம் தேவதாநமஸ்காரம் செய்தபிறகு தன்னுடைய குருவிற்கு நமஸ்காரம் செய்கின்ருர்.

4. சூர்யனுடைய ஸன்னிதானத்தினுல் பாஹ்யமான இருள் எப்படி நீங்கி ப்ரகாசம் ஏற்படுகிறதோ அதுபோல் என் குருநாதரின் ஸன்னிதி மஹிமையினுல், என்னுடைய உள்ளிருட்டான அஞ்ஞானம் நீங்கி அதனுல் என் உண்மையானஸ்வரூபப்ரகாசம் ஏற்பட்டது. அப்பேர்ப்பட்ட என்குருநாதரின் பாதபத்மங்களில் நமஸ்கரிக்கின்றேன்.

ஸ்ரீமத் பரமஹம்ஸபரிவ்ராஜகாசார்யரான ஸ்ரீக்ருஷ்ணதீர்த்தர் என்பவரின் சிஷ்யரான ஸ்ரீராமதீர்த்தர் என்பவரால் இயற்றப்பட்ட அன்வயார்த்த காசிகா என்ற வ்யாக்யானத்துடன் ஸம்க்ஷேபசாரீரகம் என்ற இந்த க்ரந்தத்தின் நான்காவது அத்யாயம் இத்துடன் பூர்த்தி அடைகின்றது.

சுபம் சுபம் சுபம்

